# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

பதினோராம் மடலம்

## தமிழ் அகரமுதலி வரலாறு

**Vol. XI**


கோ. சந்தானம், இ.ஆ.ப.
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி அறநிலையங்கள் மற்றும் செய்தித்துறை
மற்றும்
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு
2007

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## பதினோராம் மடலம்

## தமிழ் அகரமுதலி வரலாறு

## Vol. XI


கோ. சந்தானம், இ.ஆ.ப.

அரசு செயலாளர்,

தமிழ் வளர்ச்சி, அறநிலையங்கள் மற்றும் செய்தித் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு

2007

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 25

முதற் பதிப்பு : 2007

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. XI.

பதிப்புரிமை : தமிழ்நாட்டரசு
Government of Tamilnadu

விலை : உருபா 300/–

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை 600 113.

நூல் கிடைக்குமிடம் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை – 600 113.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

VOL. XI

## பதினோராம் மடலம்
## தமிழ் அகரமுதலி வரலாறு

### பதிப்புக் குழு

திரு. கோ. சந்தானம், இ.ஆ.ப.
*அரசு செயலாளர்,*
*தமிழ் வளர்ச்சி அறநிலையங்கள் மற்றும் செய்தித் துறை*
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

கூர்ந்தாய்வாளர்கள்
புலவர் இறைக்குருவனார்
திரு.மா.பூங்குன்றன்
திரு.க.கணேசன்

தொகுப்பாளர்கள்
திரு.முத்து.பிச்சை
முனைவர் மு.கண்ணன்
முனைவர் பா.வெற்றிச்செல்வன்
முனைவர் ச.செந்திலாண்டவன்
முனைவர் இரா.கு.ஆல்துரை
திரு.கா.இளமுருகு

உதவிப் பதிப்பாசிரியர்கள்
திரு. சு. வீரவேலு
திருமதி. வே. உமாராணி

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

மு. கருணாநிதி
முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

நாள் 20.9.2007

## அணிந்துரை

தமிழ்நாட்டில் கழக ஆட்சி அமையும் ஒவ்வொரு முறையும் தமிழ்மொழி வளர்ச்சிக்கும், தமிழ் ஆட்சிமொழி செயலாக்கத்திற்குமான பல திட்டங்களைத் தீட்டி, அவற்றைச் செயற்படுத்தி, அந்தச் செயற்பாடுகளைத் தமிழுக்கும், தமிழ்நாட்டிற்கும் பயன்படுமாறு செய்துள்ளோம்; தமிழ் வளர்ச்சிக்காகத் தனி அமைச்சகத்தை உருவாக்கினோம்; துறைகள் பல கண்டோம்; தம் வாழ்நாள் முழுதும் பாடுபட்ட, தமிழ்ச் சான்றோர்களைப் பெருமைப்படுத்தும் வகையில் விருதுகள் அளித்தும், விழாக்கள் எடுத்தும், மணிமண்டபங்கள் அமைத்தும், அவர்களின் நூல்களை நாட்டுடைமையாக்கி, அவர்தம் மரபுரிமையருக்குப் பரிவுத் தொகைகள் வழங்கியும் வந்துள்ளோம்.

தமிழ்மொழி வளர்ச்சிக்காக உருவாக்கப்பட்டுள்ள துறைகளுள் "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்" குறிப்பிடத்தக்க ஒன்றாகும். மொழி வளர்ச்சியில் வேர்ச்சொல் அகராதி வெளியிடும் பணி மகத்தானது. உலகில் வெகுசில மொழிகளே வேர்ச்சொல் அகராதிகளைக் கொண்டுள்ளன. அந்த வரிசையில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியை வெளியிட்டுத் தமிழன்னைக்கு அணி செய்யும் நோக்கில் கடந்த 1974ஆம் ஆண்டில் 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்' என்னும் இத்துறையைத் தோற்றுவித்ததுடன், மறைந்த மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்களை அத்துறையின் முதல் இயக்குநராக நியமனம் செய்ததையும் இவ்வேளையில் நான் மகிழ்வுடன் நினைவுகூர்கிறேன். அன்னாரது வழிகாட்டுதல்படி இவ்வியக்ககம் இதுவரையிலும் 24 பகுதிகளை நூல்களாக வெளியிட்டுள்ளது.

செம்மொழி எனும் சீர்பெற்றுள்ள தமிழில் வழங்கும் அனைத்துச் சொற்களின் மூலங்களும், வேர்களும் சொந்தத் தமிழிலேயே எவ்வாறு தோன்றி வளர்ந்துள்ளன என்பதை ஆராய்ந்து, சொற்பிறப்பியலை நிறுவுவது என்பது ஒரு நுட்பமான பணியாகும். அப்பெரும்பணியை மேற்கொண்டு, தம் வாழ்நாள் முழுவதும் அதிலேயே ஊன்றிச்

செயல்பட்டவர் நம் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள். அவர், தமிழே திராவிட மொழிகளுக்கெல்லாம் தாய்; வடமொழிக்கும் அதுதான் மூலம் என்று தெளிந்து கூறியவர்; உரிய சான்றுகளுடன் அதனை நிறுவியவர்.

புதியபுதிய துறைகள் தோன்றுந்தொறும், ஏராளமான புதிய சொற்கள் தோன்றுதற்கும், வழங்கும் சொற்களில் புதியபல பொருள்கள் இணைந்து விரிவடைவதற்குமான சூழ்நிலையில் அகரமுதலி மிகவும் இன்றியமையாத நூலாகிறது. அதன்பொருட்டு, 19ஆம் நூற்றாண்டிலிருந்து தமிழில் புதிய புதிய அகரமுதலிகள் தோன்றியவண்ணம் உள்ளன. அவற்றிலிருந்து முற்றிலும் வேறுபட்டதாக, ஆனால், அவற்றுக்கெல்லாம் அடிப்படையாக அமைந்து, வழங்கும் தமிழ்ச் சொற்களுக்கெல்லாம் வேரையும், மூலத்தையும் கண்டறிந்து, அவற்றின் பிறப்பியலைக் கூறும் நூல், "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி".

இதுவரை தோன்றிய அகரமுதலிகளையெல்லாம் பட்டியலிட்டு, அவற்றின் வளர்ச்சி வரலாற்றை - அவை தமிழுக்கு நல்கிய பெருமையை எடுத்துரைக்கும் வகையில், "தமிழ் அகரமுதலி வரலாறு" என்ற தலைப்பில், சொற்பிறப்பியல் பேரகரமுதலி வெளியீடுகள் வரிசையில், 'ம', 'ய', 'வ' மடலங்களின் 6 பகுதிகளைத் தொடர்ந்து தற்போது மேலும் ஒரு பகுதி வெளிவருவதைக் கண்டு பெருமிதம் அடைகிறேன்.

இந்நூலினை உருவாக்கிய அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் அனைத்துப் பணியாளர்களையும் பாராட்டுகிறேன்; எஞ்சிய பகுதிகளையும் விரைவில் வெளிக்கொணர்ந்து தமிழ் வளர்க்கும் திருப்பணியில் அவர்கள் மேலும்மேலும் ஈடுபட்டுப் புகழும் பெருமையும், எய்திட உளமார வாழ்த்துகிறேன்.

(மு. கருணாநிதி)



மாண்புமிகு தமிழக முதலமைச்சர்
"முத்தமிழறிஞர்"
**கலைஞர் மு. கருணாநிதி**

**கோ. சந்தானம், இ.ஆ.ப.,**
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி, அறநிலையம் (ம) செய்தித் துறை
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்,

## பதிப்புரை

மொழி வளர்ச்சியில் அகரமுதலியின் பங்கு மிகப் பெரியது என்றால் அது உண்மையே. பல்வேறு துறைகளில் அறிவை வளர்த்துக் கொள்ள விழைவோருக்கு, அவ்வத்துறை தொடர்பான கலைச்சொற்கள் பெரிதும் பயன் தருவதாயிருக்கும்.

தாய்மொழியில் சொல்வளம் நிறைந்த களஞ்சியமாக அகரமுதலிகள் திகழ்கின்றன. நல்ல அகரமுதலி மக்களைச் செவ்விய மொழிப்பாங்குடையவராக மாற்றும். "Dictionary might bring people closer to the perfect language" (Encyclopaedia Britannica) என்ற செய்தி நினைத்தற்குரியது !

ஒரு மொழியில் வெளிவந்துள்ள அகரமுதலிகள், அம்மொழி எந்தெந்தத் துறைகளில் சொல்வளம் பெற்றிருக்கிறது; இன்னும் எந்தெந்தத் துறைகளில் சொல்வளம் பெறவில்லை என்பதைக் காட்டிவிடும்.

சொல்லிற்குப் பொருள் கூறும் முயற்சியே முதன்முதல் அகரமுதலி தோன்றுவதற்குக் காரணம். கி.மு.700 அளவில் மெசபடோமியாவில் சில அக்கேடிய சொற்களுக்குப் பொருள் கூறும் எழுத்துச் சான்று கிடைத்திருப்பதாகவும் அதுவே உலக முதல் அகராதிக்கு வித்து எனவும் கூறுகின்றனர் (Encyclopaedia Britannica). அதற்குச் சமகாலத்திய தொல்காப்பியத்தில் உரிச்சொல் பகுதி அப்பொருள் சுட்டியதே என்பர் தமிழறிஞர். இலத்தீன் சொல் மூலத்திலிருந்து தோன்றிய 'Dictionary' என்ற சொல்லும், கிரேக்கச் சொல் மூலத்திலிருந்து பிறந்த 'Lexicon' என்ற சொல்லும் காலப்போக்கில் அகரமுதலியையே குறிக்கத் தொடங்கியது என்பர் அறிஞர் பெருமக்கள்.

நமது தமிழ்மொழி அகரமுதலி வரலாற்றில், கி.பி.1594 ஆம் ஆண்டில், சிதம்பர இரேவண சித்தர் என்னும் புலவர் 'அகராதி நிகண்டு' என்னும் பெயரில் ஒரு நூல் இயற்றியதே முதல் அகராதியாகக் கருதப்படுகின்றது.

மேலை நாட்டில் முதன் முதலாக அகரவரிசையில் அகராதி நூல் தோன்றியது பதினேழாம் நூற்றாண்டில்தான். அஃதாவது கி.பி.1612–ஆம் ஆண்டில் இத்தாலி மொழியில் முதல் முதலாக அகரவரிசையில் அகராதி தோன்றியது எனக் கூறுவர். இவ்வகராதிக்கு முன்பே தமிழில் அகராதி நிகண்டு தோன்றிவிட்டது என்பர் மொழி ஆய்வாளர்கள்.

பின்னர், அவ்வகை அகரமுதலி வரலாற்றில் தமிழ்ச் சொல்லுக்குத் தமிழ்ச் சொல்லாலேயே பொருள் கூறும் தனித்தமிழ் அகராதிகள் பல தோன்றுதற்கு முன்னோடி முதல் நூலாகத் திகழ்ந்தது வீரமாமுனிவரின் சதுரகராதியேயாகும். இது பெயர், பொருள், தொகை, தொடை என்னும் நான்கு பிரிவுகளைக் கொண்டிருந்ததின் காரணமாக 'சதுர் அகராதி' எனப்பட்டது. நாளடைவில் தமிழ்ப் பெரும் புலவர்கள் பலரால் தொகுக்கப்பட்ட மிகப்பெரிய தமிழகராதிகள் பலவும் இச்சதுர் அகராதியைப் பின்பற்றி எழுந்தனவே என்றால் மிகையில்லை.

-----2-----

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி வெளியீடுகள் வரிசையில் தற்போது '**தமிழ் அகரமுதலி வரலாறு**' என்ற நூல் இத்துறையால் அணியமாக்கப்பட்டுள்ளது.

இந்நூல், தமிழில் அகரமுதலி பெயர்விளக்கம், தோற்றம், வளர்ச்சி வரலாறு முதலாக, அகரமுதலிக் கோட்பாடுகளையும், தமிழ் அகரமுதலி வகைகளையும், அகரமுதலி உள்ளமைப்புகளையும் சிறப்பியல்புகளையும், இதுவரையில் வெளிவந்துள்ள அகரமுதலிகளின் முழுப்பட்டியலையும், சொற்பிறப்பியல் அகரமுதலியின் செயற்பாடுகள், நோக்கம், தேவைகள், பிறமொழிகளில் வந்த சொற்பிறப்பியல் அகரமுதலிகளையும் சொற்பிறப்பியல் நெறிமுறை வகைகளையும், இவற்றிற்கெல்லாம் மணிமுடியாகச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி வரலாற்றைப் பாவாணர் வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கத்துடனும், பாவாணரின் மொழியியல் கொள்கைகள் மற்றும் பாவாணர் சொற்பிறப்பியல் நோக்கில் எழுதிய நூல்கள் வழி அவர் வகுத்த நெறிமுறைகள் கோட்பாடுகள் ஆகியவற்றையும், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி பணித்தொடக்க வரலாற்றையும் பாங்குடன் எடுத்தியம்புகிறது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்கு இத்திட்டம் தோன்றிய நாள்முதற் கொண்டு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வரும் **மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர்** அவர்களுக்கு என் நெஞ்சங் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இத்தமிழ் அகரமுதலி வரலாறு பகுதியைத் தொகுத்தளித்துள்ள அகரமுதலிப் பணியாளர்கள் அனைவரையும் பாராட்டுகிறேன். இந்த வரலாற்றுச் சிறப்புமிக்க பணியில் ஈடுபட்டுள்ள அனைவரும் எஞ்சிய பகுதிகளையும் விரைந்து தொகுத்து முடித்திட, மேலும் முனைப்புடன் செயலாற்றிட வேண்டுகிறேன்.

கோ. சந்தானம்

**கோ. சந்தானம்**

# பொருளடக்கம்

# முன்னுரை

ஒரு மொழியின் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் சிறப்புச் சேர்க்கும் முதன்மையான பணி அகரமுதலி உருவாக்கம் எனில் அது மிகையன்று. நனிமிகு தொன்மை வாய்ந்ததும், இலக்கணச் செம்மையுடையதும், பல்துறை இலக்கிய வளம் மிக்கதும், பரந்துபட்ட மக்கள் வழக்குக் கொண்டதும் பன்னாட்டு மொழியாக விளங்குவதுமான தமிழில் சொல்லின் பொருளைத் தெளிவாக அறிய வழிகாட்டுதல் ஓர் அரிய செயலாகும். தமிழ்ச் சொல்லமைப்பை எளிதாக அறிந்து சிறப்பாக வெளிப்படுத்தும் ஆற்றலை மக்கள் பெறவேண்டுமெனில், தமிழ்ச் சொற்களின் பொருளை நுட்பமாக அறிந்து கொள்ளுமாறு செய்ய வல்லவை அகரமுதலிகளே எனலாம்.

அகரமுதலி, சொற்களை அகரம் முதலாக வரிசைப்படுத்தி, அச்சொற்களுக்குரிய பொருளைச் சுருக்கமாக விளக்கும் நூலாகும். 'அகரவரிசை', அகரமுதலி என்பன போன்ற சொற்கள் அகராதியைக் குறிக்கும். பழங்காலத்தில் 'நிகண்டு', 'உரிச்சொல்', 'உரிச்சொற் பனுவல்', 'அரும்பதவுரை', அருஞ்சொற் பொருள் விளக்கம் போன்றவை சொற்பொருள் கூறுபவையாக இருந்துள்ளன. காலப்போக்கில் நிகண்டு என்ற சொல்லாட்சியே நிலைபெற்றது. உலகில் அகராதிக் கலை மெதுவாக வளர்ந்ததுபோலத் தமிழ் அகராதிக் கலையும் மெல்ல வளரத் தொடங்கியது. தமிழ்மொழியின் தொல்பழங்கால இலக்கண நூலாம் தொல்காப்பியத்தில் "அகரமுதல் னகர இறுவாய்" என்ற தொடரால் அகரவரிசையின் தொடக்கமும் முடிவும் அமையும் நிரல் வரிசை நெறிமுறைக் கோட்பாடு அகராதிகளின் களமாக உருவாக்கம் பெற்றது. தொல்காப்பியத்திற்கு உரைகண்ட இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்களின் அருஞ்சொற்களுக்குப் பொருள் விளக்கம் அளிக்கும் முன்முயற்சியும் பிற்காலத்தில் தோன்றிய நிகண்டுகளுக்கும், தமிழ் அகரமுதலி வளர்ச்சிக்கும் உரமாயிற்று.

## நிகண்டுகளின் தோற்றம்

தொல்காப்பியத்திற்குப்பின் பல நூற்றாண்டுகள் கழித்துச் சமய இலக்கியங்களின் வளர்ச்சியோடு, தமிழில் வடசொற்களின் கலப்பும் புகுந்து நிலைபெறத் தொடங்கியது. இக் காலக் கட்டத்தில் சமயச் செய்திகளை மக்கள் அறிந்து கொள்ளவும், வடசொற்களின் பொருளைத் தெரிந்து கொள்ளவும் ஒப்புநோக்கு நூல்கள் தேவைப்பட்டன. இத் தேவையை நிறைவேற்றும் நோக்கில் நிகண்டுகளின் வளர்ச்சி தொடங்கியது.

ஒன்பதாம் நூற்றாண்டில் எழுந்த திவாகரம் ஏறத்தாழ 9500 சொற்களைக் கொண்டு பன்னிரு பகுதிகளாக திவாகரர் என்பவரால் தொகுக்கப் பெற்றது. திவாகரத்தை அடுத்து, பத்தாம் நூற்றாண்டில் 14,700 சொற்களுடன் பிங்கல நிகண்டு பத்துத் தொகுதிகளாகப் பிங்கலர் என்பவரால் தொகுக்கப் பெற்றுள்ளது. தமிழ் இலக்கண நூலாம் நன்னூல் (நூ.460) இதன் சிறப்பைச் சுட்டிக்காட்டுகிறது. பிங்கலத்திற்குப் பின் 16 ஆம் நூற்றாண்டில் மண்டல புருடர் என்பவரால் 11,000 சொற்களுடன் பன்னிரு தொகுதிகளாக வெளிவந்த சூடாமணி நிகண்டு மக்களிடம் மிகுந்த சாய்கால் பெற்று விளங்கியது.

அகரம் முதலாகச் சொல்நிரல் அமைவதை முதன்முதலாக நிகண்டுகளில் கையாண்டவர் புலியூர்ச் சிதம்பர இரேவண சித்தர் ஆவர். அவரால் தொகுத்தளிக்கப்பட்ட 'அகராதி நிகண்டு' சிறப்புக் குரியது. அகரவரிசையில் எழுந்த முதல் ஒப்புநோக்கு நிகண்டு நூல் இதுவே ஆகும். தமிழ் அகராதி வரலாற்றில் இந்த நிகண்டிற்குத் தனிச் சிறப்பு உண்டெனில் அது மிகையன்று. அகரநிரல் அமைப்பைச் சுட்ட இவர் பயன்படுத்திய அகராதி என்ற பெயர், இன்று அகராதிக்குரிய பொதுப்பெயராகவே அமைந்து விட்டது.

கி.பி.13, 14 ஆம் நூற்றாண்டுகளில் பல்வேறு சிறிய நிகண்டுகள் தோன்றினாலும், 'இலக்கணத் திறவுகோல்' என்னும் தொகைப்பெயர் தொகுப்புநூல் அகரவரிசை என்னும் அகராதிக் கூறுகளுடன் அகராதிகளுக்கு அகரநிரல் வரிசைக் கோட்பாட்டினை ஆற்றுப்படுத்தும் தோற்றுவாயாக அமைந்தது என்றாலும் நிகண்டுகளெல்லாம், சொற்பொருளை நூற்பா அமைப்பில் கூறிச் செல்வதால், நல்ல கல்வியறிவுடையவரே பயன்கொள்ளும் வகையில் அமைந்துள்ளமையாலும்,

மனப்பாடம் செய்வதே நோக்கமாக இருந்தமையாலும், எளிய முறையில் அனைவரும் ஒப்பு நோக்கும் அகராதி நூல்களின் தேவை காலப்போக்கில் எழுந்தது. அதன் தொடர்ச்சியே அகராதிகளின் வளர்ச்சிக்குக் கால்கோளாக அமைந்தது.

## சதுரகராதியின் தோற்றம்

தமிழ் அகராதி வரலாற்றில் அகரநிரற் கோட்பாட்டினை முழுமையாகக் கடைப்பிடித்தும், செய்யுள் நடையை முற்றிலும் நீக்கியும், கடினமான மிகப் பழஞ்சொற்களைக் கைவிட்டும், எளிய சொற்களைக் கையாண்டும் 1732 இல் வெளிவந்த வீரமாமுனிவரின் சதுரகராதி முதன்மையானதாகும். மனனம் செய்யும் நிகண்டுகளின் வளர்ச்சிக்கு முற்றுப்புள்ளி வைத்து அகரநிரற்படி அகராதிக்கலை வளர்ச்சியடைவதற்கு வித்திட்ட முதல் அகராதியாளர் என்ற பெருமையும் இந்நூலாசிரியருக்கு உண்டு.

## தமிழ் - ஆங்கில அகராதி

தென்னகத்துக் கிறித்தவத் திருச்சபையினருக்கும், வணிகர்களுக்கும் உதவும் நோக்கில் கி.பி.1739 இல் முதல் தமிழ்-ஆங்கில அகராதி வெளிவந்தது. சாம் பிலிப்பெப்ரீசியசும் (Joham philip), சான் கிருத்தியன் பெரதாப்டும் (John christian Breithaupt) இணைந்து உருவாக்கிய இவ்வகராதியே பல அறிஞர்களை அகராதித் துறையில் ஈடுபடச் செய்தது; கி.பி.1830 இல் இராட்லெர் (Rottler) தமிழ் ஆங்கில அகராதியைத் தொகுத்தளித்தார். இவ்வகராதிக்குப் பின்னர் வின்சுலோவின் அமெரிக்கத் திருச்சபைப் பேரகராதி கி.பி 1842 இல் வெளியிடப்பட்டது.

## வின்சுலோ தமிழ் - ஆங்கில அகராதி

இலக்கியச் சொற்கள், பொதுமக்கள் வழக்குச் சொற்கள், அறிவியல் துறை சார்ந்த சொற்கள், கணியம், தொன்மம் எனப் பல்துறைச் சொற்களையும் உள்ளடக்கமாகக் கொண்டு தொகுக்கப்பட்ட பேரகராதியாக வின்சுலோவின் தமிழ் ஆங்கில அகராதி கி.பி 1862 இல் ஏறத்தாழ 67,000 சொற்களுடன் வெளிவந்தது. வினைச் சொற்களின் வேர்ச்சொல் வடிவை முதன் முதலில் தந்துள்ள பெருமைக்கும், தமிழ்ச் சொற்களில் இருந்து வடசொற்களை உடுக்குறி தந்து பிரித்துக்காட்டும் அகராதி நெறிமுறையைக் கையாண்ட சிறப்புக்கும் உரியது இவ்வகராதியே எனலாம்.

## தமிழ் - ஆங்கிலச் சுருக்க அகராதி

கையடக்க அகராதிகளின் மீது மக்கள் காட்டிய ஈடுபாட்டினை நிறைவேற்றும் நோக்கத்தோடு அறிஞர் போப்பு (Pope) அவர்களால் தமிழ்-ஆங்கிலம், ஆங்கிலம்-தமிழ்ச் சொல்லடைவுகள் வெளிவந்தன. இச்சொல்லடைவுகளைப் புதுக்கியும், விரித்தும் தமிழ் - ஆங்கிலச் சுருக்க அகராதி கி.பி.1870 இல் வெளியிடப்பட்டது. இது வடமொழி - அரபிச் சொற்கள், வினையின் வேர்ச்சொல்லமைப்பு ஆகியவற்றைத் தனித்துக் காட்டுவதாகவும், மாணவர்களின் பயன்பாட்டிற் குரியதாகவும் இருந்தது. இவ்வாறு வெளியிடப்பட்ட இருமொழி அகராதிகளால் ஒருமொழி அகராதிகளின் வளர்ச்சி குறைந்தது.

## நா. கதிர்வேற்பிள்ளை அகராதி

மருத்துவம், நிலைத்திணை இயல், இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள சொல்லாட்சிகள் என்றெல்லாம் பெருமுயற்சி மேற்கொண்டு சொற்களைத் தொகுத்தளித்த நா. கதிர்வேற்பிள்ளை, அகராதியில் சொற்களின் எண்ணிக்கையை அதிகமாக்கவேண்டும் என்னும் வேட்கையில் வடமொழிச் சொற்களை வரையறையின்றிச் சேர்த்திருந்தாலும், பொருள் விளக்கத்திற்குச் சிறந்த நூல்களில் இருந்து மேற்கோள்களை நன்கு எடுத்தாண்டுள்ளார். வடமொழிப் பொருள் மூலத்தையும், பொருள் கூறுவதில் அகரநிரல் அமைப்பு, சொற்பிறப்பு நெறிமுறை ஆகியவற்றை ஆங்காங்கே எடுத்தாண்டுள்ள சிறப்புக்குரிய இவ்வகரமுதலி மதுரைத் தமிழ் சங்கத்தால் மூன்றுத் தொகுதிகளாக, ஏறத்தாழ 63,900 சொற்களைக் கொண்டதாக 1910 இல் வெளியிடப்பட்டது.

## அகராதிகளின் வளர்ச்சி

சென்னைப் பல்கலைக் கழகமும், சென்னை மாநில அரசும் ஒரு முதல் தர அகராதியை வெளிக்கொணரவும், தெளிந்த நல்லகராதிகளை உருவாக்கவும் திட்டமிட்டுக் குறிப்பிட்ட நெறிமுறைகளில் பொருள் கூறி, இதுவரை வெளிவந்த அகராதிகள் புறக்கணித்த சொற்பிறப்புக்கு உரிய இடம் நல்கித், தமிழ்ச் சொற்களின் சொற்பிறப்பைக் கண்டறிந்து, தக்க மேற்கோள்கள் விளங்க ஒரு பேரகராதியை உருவாக்க எடுத்துக்கொண்ட முனைப்பால் சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதி தொகுக்கும் பணி தொடங்கப்பட்டது.

சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதி இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் பிரடரிக் நிக்கல்சனால்

(Frederik Nicholson) உருப்பெற்றது. வின்சுலோ, போப், உ.வே.சா. ஆகியோர் திரட்டிய சொற்கள் மற்றும் பல்துறை அறிஞர் பெருமக்கள் திரட்டிய சொற்றொகுப்புகளைக் கொண்டு நல்லதொரு பேரகராதியைப் புதுக்கியும், விரிவான முறையிலும் வெளியிடத் திட்டமிடப்பட்டுப் பணி தொடங்கப்பட்டது. பொருள் விளக்கம், மேற்கோள்கள், வேர்ச்சொல் குறித்தல் போன்ற அகராதி நெறிமுறையுடன் கூடிய பேரகராதி பேரா. வையாபுரிப்பிள்ளை அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு, 1926 இல் உருவாக்கப்பட்டது. இவ்வகராதி சில குறைபாடுகளைக் கொண்டிருந்த போதிலும் இன்றுள்ள தமிழ் அகராதிகளில் விளக்கமான பேரகராதியாகத் தொகுத்தளிக்கப்பட்டுள்ளது.

## ஒரு மொழி அகராதிகளின் தோற்றம்

தமிழ்க்கல்வி ஆர்வம் மக்களிடம் பெருகவும், தமிழ்ச் சொற்களுக்குத் தமிழில் பொருள் கூறும் தேவையை விளக்கிடவும் ஒருமொழி அகராதிகள் உருவாக்கம் பெறத் தொடங்கின. அவ்வகையில் 'தமிழ்மொழி அகராதி' பேரா. கா.நமச்சிவாயரால் 1918 இல் தொகுத்து வெளியிடப்பட்டது. திரு. பவானந்தம் தொகுத்தளித்த 'தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி' 1925 இல் 33,000 சொற்களுடன் வெளிவந்தது. இதனைத் தொடர்ந்து திரு.அனவரத விநாயகரின் 'மாணவர் தமிழ் அகராதி' 1921 இல் 26,000 சொற்களோடும், திரு.மே.வீ.வேணுகோபாலர் தொகுத்தளித்த 'இளைஞர் தமிழ்க் கையகராதி', விக்டோரியா தமிழ் அகராதி (1934), ஆனந்த விகடன் அகராதி (1935), கிருட்டிணசாமியின் 'நவீன தமிழ் அகராதி' ஆகியவை தமிழ்க் கல்வி ஆர்வத்தைத் தூண்டும் வகையிலும் தொகுத்து வெளியிடப்பட்டன.

## கையகராதிகளின் வளர்ச்சி

சுருக்கமாகவும், விரைந்தும் பொருள் காணும் நோக்கத்தில் 'கழகத் தமிழ் கையகராதி' 1940 இல் வெளிவந்தது. இது மாணவரிடையே பெரிதும் ஆளுமை பெற்ற அகராதியாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் 'சுருக்கத் தமிழ் அகராதி', 'கோனார் தமிழ்க் கையகராதி' ஆகியவை 1955 இல் வெளிவந்தன. அவற்றில் கோனார் தமிழ்க் கையகராதி மாணவரிடையே மிகுந்த வரவேற்புப் பெற்றது. தனியொருவர் திரட்டித் தந்த அகராதிகளைக் காட்டிலும், குழு அகராதிகள் பின்னர்ச் சாய்கால் பெறத் தொடங்கின. அவற்றில் கழகப் புலவர் குழு திரட்டிய 'கழகத் தமிழகராதி' (1964), லிப்கோ நிறுவனத்தினர் வெளியிட்ட அகராதிகள், 'மணிமேகலைத் தமிழகராதி' (1979), தமிழக அரசின் வெளியீடான தமிழ்–தமிழ் அகராதி (1985) ஆகியவை சிறப்புக்குரிய குழு அகராதிகளாகும்.

## அருங்கலைச் சொல் அகரமுதலி

இன்றைய அறிவியல் சார்ந்த பல்துறைக் கலைச் சொற்களுக்கு ஏற்ற தூயதமிழ்ச் சொற்களைத் தமிழ் இலக்கண இலக்கியங்களிலிருந்தும் மக்கள் வழக்காற்றிலிருந்தும் தெரிந்தெடுத்தும், ஆங்கிலக் கலைச் சொற்களுக்கு இணையான தூயதமிழ்ச் சொற்களை வேர்ச்சொல் அடிப்படையில் புனைந் தமைத்தும் உருவாக்கப்பட்டுள்ளது அருங்கலைச் சொல் பேரகரமுதலி. ஆய்வறிஞர் ப.அருளி அவர்களை முதன்மைப் பதிப்பாசிரியராகக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ள இவ்வகரமுதலியில் நூற்று முப்பத்தைந்து துறைகளைச் சார்ந்த கலைச்சொற்கள் இடம்பெற்றுள்ளன.

கழகக் காலம் முதல் இன்று வரையுள்ள இலக்கிய வழக்குகளையும், வட்டார வழக்குகளையும், பல்வேறு துறை அறிஞர் பெருமக்களின் ஒத்துழைப்போடு இலங்கை, மலேயா, தென்னாப்பிரிக்கா ஆகிய நாடுகளில் வாழும் தமிழ் மக்களின் சொல்லாட்சிகளையும் கொண்டு தமிழ்ப் பல்கலைக் கழகத்தால் பெருஞ்சொல் அகராதி ஒன்றும் வெளியிடப்பட்டுள்ளது.

## இருமொழி அகராதிகளின் தோற்றம்

ஐரோப்பியர்களின் இந்திய வருகையால் ஐரோப்பிய மொழிகள், கிழக்காசிய மேற்காசிய மொழிகள், இந்திய மொழிகள் ஆகியவற்றில் பொருள்விளக்கம் காணும் தேவையைக் கருத்திற் கொண்டு, அம்மொழிகளின் துணையுடன் தமிழகராதிகள் பல வெளிவந்தன. குறிப்பாக, ஆங்கில ஆட்சி தமிழகத்தில் நிலைத்திருந்ததால் தமிழ்–ஆங்கிலம், ஆங்கிலம்–தமிழ் அகராதிகள் மிகுதியாக வெளிவந்தன.

## தமிழ் – ஆங்கில அகராதிகள்

ஐரோப்பிய அறிஞர்களின் பெருமுயற்சியால் தமிழ்–ஆங்கில அகராதிகள் தொகுக்கப்பட்டன. இராட்லெரின் 'தமிழ்–ஆங்கில அகராதி' 1834–1841 இல் வெளியிடப்பட்டது. இதன் பின்னர் வின்சுலோவின் தமிழ்–ஆங்கில அகராதி மக்கள் வழக்குச் சொற்களையும் சேர்த்து வெளியிட்டுப் பெருவழக்குப் பெற்றது. பெப்ரிசியசின் இருமொழி அகராதி 1897–இலும், தமிழ்

ஆங்கிலக் கையகராதி 1900 இலும், லிப்கோவின் தமிழ் – தமிழ் – ஆங்கில அகராதி 1966 இலும் வெளிவந்தது குறிப்பிடத்தக்கது.

## ஆங்கிலம் – தமிழ் அகராதிகள்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஐரோப்பியர் மற்றும் தமிழறிஞர்களின் முயற்சியால் பல்வேறு அகரமுதலிகள் வெளிவந்தன. கி.பி.1786 இல் பெட்ரீசியஸின் ஆங்கிலம்–தமிழ் அகராதி இரு தொகுதிகளாக வெளிவந்தது. வீராசாமியின் ஆங்கிலம்–தமிழ் அகராதி 1847 இல் வெளியிடப்பட்டது. அறிஞர் போப்புத் தொகுத்த இருமொழி அகராதி பேச்சு வழக்குச் சொற்களை உள்ளடக்கியதாகவும், வெளிநாட்டினரும் புரிந்து கொள்ளும் வகையிலும் சிறப்பான முறையில் வெளிவந்தது.

## தமிழ் – பிரெஞ்சு அகராதிகள்

பிரஞ்சு ஆட்சி மேலோங்கி இருந்த காலக்கட்டத்தில் பல்வேறு பிரெஞ்சு–தமிழ் அகராதிகள் வெளிவந்தன. கி.பி.1750 இல் உருவான பிரெஞ்சு–தமிழ் அகராதி பாரிசில் சுவடி வடிவில் உள்ளது. பெசுகியின் பிரெஞ்சு–தமிழ் அகராதி 1845 இலும்; ஊபூய் (Duipuis), மூசே (mousset) உருவாக்கிய பிரெஞ்சு–தமிழ் அகராதி கி.பி.1850 இலும் புதுச்சேரியில் வெளிவந்தன.

## தமிழ் – உருசிய அகராதி

1960 இல் பியாதி. கோர்சுகி, உரூதின் ஆகியோர் ஏறக்குறைய 38,000 சொற்களைக் கொண்ட தமிழ் – உருசிய அகராதியைப் பதிப்பித்து வெளியிட்டனர். இத்துடன் அந்திரோனல் எழுதிய தமிழ் இலக்கணச் சுருக்கமும் இடம்பெற்றுள்ளது. 1960 இல் வெளிவந்த தமிழ்–உருசிய அகராதி பல்துறைச் சொற்களிற் காணப்படும் கடினமான சொற்களையும், இக்கால இலக்கியச் சொற்களையும்கொண்டு ஏறக்குறைய 24,000 சொற்களுடன் வெளிவந்தது.

## தமிழ் – இலத்தீன் அகராதி

தமிழ் – இலத்தீன் அகராதிகள் இரண்டு, வீரமாமுனிவரால் தொகுக்கப்பட்டு வெளிவந்தன. 1867 இல் குரி (Gury) அகராதியும், சுந்தரசண்முகனாரின் தமிழ்–இலத்தீன் அகராதியும் (1970) வெளிவந்தன. இவை தமிழ் – இலத்தீன் அகராதிகளிற் குறிப்பிடத்தக்கவை.

## தமிழ் – போர்ச்சுகீசிய அகராதி

மலேசியப் பல்கலைக்கழகம் 1966–இல் ஆண்டெம்டே புரோயென்கா (Antamde Proenca) என்பவரைத் தொகுப்பாசிரியராகக் கொண்டு வெளியிட்ட தமிழ்–போர்ச்சுகீசிய அகராதி, இதன் பின்னர் 1968 இல் வெளிவந்த இராபர்ட்டி நொபிலியன் (Robert d Nobile) தமிழ்–போர்ச்சுகீசிய அகராதி, செர்குராவின் (Verquera) தமிழ்–போர்ச்சுகீசிய அகராதி ஆகியவற்றை வெளியிட்டது.

## அரபு – தமிழ் அகராதிகள்

மேற்காசியாவில் அரபு நாடுகளுடன் கொண்ட வணிகத் தொடர்பும், தமிழகத்தில் இசுலாம் பரவியதும் தமிழகத்தில் அரபு – தமிழ் அகராதிகள் உருவாக வாய்ப்பளித்தன. குலாம்காதிர் நாவலர் (1902), முகம்மது அப்புல்லா (1905) ஆகியோர் இத்துறையில் அகராதிகளை வெளியிட்டனர். தமிழ் இலக்கிய அரபுச் சொல் அகராதியைப் பதிப்பாசிரியர் உவைசு 1983 இல் மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தில் வெளியிட்டுள்ளார்.

கிழக்காசியாவில் தமிழர்களின் போக்குவரத்து வாய்ப்புக் கரணியமாக வெளிவந்த புன்னப்பரின் தமிழ்–பர்மா அகராதி (1905), சதாசிவம் எழுதிய தமிழ்–மலாய் அகராதி (1938) ஆகியவை குறிப்பிடத்தக்கன. 1) தமிழ் – சிங்கள அகராதியைக் கதுகோலிகே 1960 இல் தொகுத்து வெளியிட்டது. சப்பான்–தமிழ் அகராதி 1942 இலும், மலாய்–தமிழ் அகராதியைச் 1962–இலும் சாமி என்பவர் தொகுத்தார். 3) மாணவர் மலாய்–தமிழ்–ஆங்கிலம் ஆகிய மும்மொழி அகராதியை வேலுச்சாமி 1964 இல் அளித்தார்.

## இந்திய மொழி அகராதிகள்

இந்திய மொழிகளுள் தமிழ்–வடமொழி அகராதிகள் பல வெளிவந்துள்ளன. தமிழ்–வடமொழி அகராதி, வடமொழி–தமிழ் அகராதி 1857 இலும்; வடமொழி–திரவிட நிகண்டு, வெங்கடேச சர்மா (1930) மற்றும் பாபநாசசிவம் (1962) ஆகியோர் தொகுத்து வெளியிட்டனர். தமிழ் – இந்தி கோசம் அரிகரசர்மாவால் 1926 இல் தொகுக்கப்பட்டது. அந்தோணிப்பிள்ளையின் இந்தி–தமிழ் அகராதி (1878), கா.அப்பாத்துரையின் இந்தி–தமிழ் அகராதி போன்றவை 1957 இல் வெளிவந்தன. தெலுங்கு–தமிழ் அகராதி கிருட்டிணசாமி என்பவரால் 1925 இல் வெளியிடப்பட்டது. தமிழ்–தெலுங்கு அகராதியொன்றைச் சேசாசார்லு 1939–இல் வெளியிட்டார்.

## பன்மொழி அகராதிகள்

ஒரு மொழியினர் மற்றைப் பகுதி மக்களை அவர்களின் மொழி வாயிலாக அறியவும் அதனால் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளவும் ஏதுவாகத் தமிழில் பன்மொழி அகராதிகள் வெளிவந்துள்ளன. தமிழ் – ஆங்கிலம்–செர்மன் (1869), ஆங்கிலம் – மலாய் – சீனம் – தமிழ் (1824), தமிழ் – இந்துத்தானி – பர்மீயம் – ஆங்கிலம் (1886), இந்தி – மராத்தி – தெலுங்கு – தமிழ் (1964) கன்னடம் – தெலுங்கு – தமிழ் – ஆங்கிலம் – இந்துத்தானி (1891) ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

பொதுவாக, பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் அகராதிகளாகத் தொகுக்கப்பட்டு அச்சில் வெளிவராத நூல்கள் சென்னை உ.வே.சா. நூலகத்தில் உள்ளன. அவற்றுள், அகநானூறு அகராதி, தலக் குறிப்புகள், திருக்குறள் பரிமேலழகர் அரும்பத அகராதி, தேவார அருந் தொடகராதி, வாகட அகராதி போன்றவை குறிப்பிடத்தக்கன.

## தொல்பழங்கால அகராதி வளர்ச்சி

கிரேக்கர்களிடையே அகராதி மரபு பண்டைய காலத்திலேயே உருவாகியிருந்தது. கி.மு.முதல் நூற்றாண்டில் எழுந்த வாரோ (Varro) எழுதிய புத்தகத்தில் சொற்பிறப்புக்கு மேற்கோள் காட்டியதும், மெசபடோமியாவில் கி.மு.ஏழாம் நூற்றாண்டில் அக்காடியன் (Akkadian) சொற்களின் சிறுபட்டியல் கிடைத்ததும் கிரேக்கர்களின் மரபு வழி அகராதி நிலையை மெய்ப்பிக்கின்றன.

கி.பி. முதல் நூற்றாண்டில் அலெக்சாண்டிரியா பாம்பிலசு (Pamphilus) கிரேக்க அகராதியை உருவாக்கினார். இரண்டாம் நூற்றாண்டில் அட்டிசிகட்டு களின் (Atticists) அகராதிகள் சிறப்பாக உருவாயின. அகராதியைக் குறிக்க 'காலெபின்' (Calepin) என்ற சொல் வழங்கியது. மக்கள் தங்கள் உடைமைப் பொருளில் மதிப்புடையதாக, அகராதியைக் கருதித் தம் தலைமுறையினர்க்குச் செல்வமாக விட்டுச் சென்றனர். பள்ளிகளில் மாணவர் அறிவைப் பெருக்க அகராதிகள் இருக்க வேண்டும் என்றனர். காலப்போக்கில் இலத்தீன் மொழியைப் பலரும் மதிப்புள்ள மொழியாகப் பயன்படுத்தினர். அம்மொழி அகராதிகள் ஆங்கில அகராதிகளிடையே தம் ஆளுமையை நிலைநாட்டின.

## ஆங்கில அகராதியின் தோற்றம்

ஆங்கிலேய மேலாண்மை மற்றும் வணிகத் தொடர்பு கரணியமாக இருமொழிச் சொற்றொகையாக 1840 இல் காச்சுடன் (Caxton) என்பவரால் வெளிவந்தது. பால்சுகிரேவின் (Palsgrave) இன ஆங்கிலம் – பிரெஞ்சு சொற்றொகை 1830–இல் வெளிவந்து சிறப்பு வாய்ந்ததாக விளங்கியது. 1573 இல் ஆங்கிலம் – இலத்தீன் – பிரெஞ்சு ஆகிய மும்மொழி அகராதியை சான்பேரெடு (John Baret) தொகுத்தளித்தார். 1746 இல் சாமுவேல் சான்சன் (Samuel Johnson) தொகுத்து வெளியிட்ட ஆங்கில அகராதியே சிறந்த வழிகாட்டி அகராதியாக சிறப்புற்று விளங்குகிறது. இந்த அகராதி 1,18,000 மேற்கோள்கள்களையும், பரந்த பொருளையும் தொகுத்துள்ளது. இதன் பின்னர் கொலம்பியா அகராதி 1800 இல் வந்தது. நோவாவெபுசடர் 1823 இல் மிகப்பெரிய அமெரிக்க அகராதியை அளித்தார். சொற்றொகுப்பும், பொருள் விளக்கமும் இதன் சிறப்பை நிலைநாட்டின. ஆக்கசுபோர்டு ஆங்கிலச் சொற்பிறப்பு அகராதி ஆனியன்சாதல் என்பவரால் 1966 இல் வெளிவந்தது. ஆங்கில மொழிச் சொற்பிறப்பு விளக்க அகராதி 1967 இல் வெளிவந்து ஆங்கில மொழிக்கு ஆக்கம் தந்தது.

மேலைநாட்டு மொழிகளில் எழுதப்பட்ட சொற்பிறப்பியல் அகராதிகளின் தோற்றம், தமிழில் ஆங்கிலம், வடமொழி இன்னும் பல மொழிச் சொற்கலப்பு ஆகியவற்றால் தமிழ்மொழி மறைந்தொழிந்து வளமை குன்றிவிடும் என்று மனம் வெதும்பிய தமிழ்ச்சான்றோர் பலருள் மொழிஞாயிறு பாவாணரின் உள்ளத்தில் பண்டைய தமிழ் இலக்கண நூலாம் தொல்காப்பியமும், சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதி தோற்றமும் புலப்படுத்திய சொற்பிறப்பியல் நெறிமுறையால் அன்னைத் தமிழுக்குச் சொற்பிறப்பியல் அகரமுதலி உருவாக்க வேண்டுமென்ற வேணவா உருப்பெற்றது.

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி தோற்றம்

உலக அரங்கில் தொன்மையும் வளமையும் மிக்க தொல்காப்பியம், கழக இலக்கியங்கள், திருக்குறள் முதலிய மரபுச் செல்வங்களைப் பெற்ற செவ்வியல் மொழி அன்னைத் தமிழாகும்.

இந்திய விடுதலை அண்ணல் காந்தியடிகளை முன்நிறுத்துவது போல் செந்தமிழ் விடுதலை செம்மொழிக்

காவலர் பாவாணரை முன்நிறுத்தும். முன்னவர் இந்திய நாட்டை மீட்டார், பின்னவர் செந்தமிழ் மொழியை மீட்டார். நாட்டை மீட்க ஒரு போராட்டம் தேவைப்பட்டது போல், மொழி மீட்புக்கென்று போர்க்களம் அமைத்து மொழிநலம் காக்க வேண்டியது தேவையாய் இருந்துள்ளது.

தொல்காப்பியம் தொட்டுக் கழக இலக்கியங்கள் வரை தமிழ்வளர்ச்சி என்று தேடலைத் தொடங்க முற்பட்டால், தமிழ் இனம் பெருமை பட்டுக் கொள்ளும் அளவில் குறையேதும் காண இயலாது. இருப்பினும் தமிழ் நலக்காப்பு – தமிழ் இன எழுச்சி ஏன் தொய்வடைந்தது என்பதைக் காண முயலும் போது பின்வரும் கரணியம் புலப்படுகிறது.

1) ஆங்கில மொழியின் தாக்கம்
2) இந்தி மொழியின் சாய்கால்
3) வடமொழியின் வல்லாண்மை
4) அயன்மொழிச் சொற்கலப்பு
5) மாந்த இனத்தின் பகுத்தறிவு மழுக்கம்

ஆகிய மொழி. குமுகாயச் சீர்கேடுகளால் நோய் போய் வியாதி வந்தது; வியாதி போய்ச் சீக்கு வந்தது. இனி சீக்கு போய்ப் 'பீமாரி' வரும் என்பது நகையாட்டுப் போல் இருப்பினும் அயன்மொழிச் சொற்கலப்பால் தமிழின் தூய்மையும், வளமையும் குறைந்து மறைந்தொழியும் நிலை கண்டு மனம் வெதும்பிய சான்றோர் அனலிடைப் புழுவெனத் துடித்தனர். வடமொழி ஆர்வலர்களின் கொடுந்தீங்கு, கட்டாய இந்தித் திணிப்பு, முதலியவை பாவாணரை வீறுகொளச் செய்தன.

பாவாணர் சொல்லாராய்ச்சியில் முனைந்து ஈடுபட்டு, தமது வாணாள் பணியாகச் சொல்லாய்வில் மூழ்கித் துருவிப் பார்த்ததன் தெள்ளிய வெளிப்பாடாக 1948 இல் சேலத்தில் 'சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள்' என்ற நூலை வெளியிட்டு, தமிழ் கூறும் நல்லுலகைத் தலைப்படுத்தி வியக்கச் செய்தார். 1938 இல் வெளிவந்த பாவாணரின் 'ஒப்பியன் மொழி நூல்' ஒரு புரட்சி நூலாகும்.

பாவாணரின் புலமைத் திறத்தினையும், சொல்லாய்வுச் சிறப்பையும் உணர்ந்த முத்தமிழ் அறிஞர் கலைஞர் அவர்கள் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தைத் தோற்றுவித்து தமிழுலகிற்குச் சிறப்புச் செய்தார். செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் 8–5–1974 அன்று தமிழ்நாடு அரசால் மொழிஞாயிறு பாவாணர் அவர்களை இயக்குநராகப் பணியமர்த்தம் செய்து தோற்றுவிக்கப்பட்டது.

## செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட வரையறை

இந்திய மொழிகளில் சமற்கிருதம், மராத்தி, குசராத்தி, நேபாலி, தெலுங்கு ஆகிய மொழிகளில் சொற்பிறப்பு அகரமுதலிகள் வெளிவந்துள்ளன. தமிழ்மொழியில் முழுமையான சொற்பிறப்பு அகரமுதலி வெளிவராத குறையை இந்த அகரமுதலித் திட்டம் நிறைவேற்றும் நோக்கோடு உருவாக்கப் பெற்றது. உலக மொழிகளில் சொற்பிறப்பு அகரமுதலி ஒரே மடலமாகத்தான் வெளியிடப்பட்டுள்ளது. ஆனால், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம் 12 மடலங்களாகவும், அவற்றுள் அடங்கிய 31 தொகுதிகளாகவும் வெளியிடும் தொலைநோக்குத் திட்டமாகத் தோற்றுவிக்கப்பட்டது, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் சிறப்புக்கு மணிமகுடமாகும்.

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் நோக்கம் – வரலாறு

ஞாலத் தொன்மொழிகளுள் தாய்மையும், தலைமையும் கொண்டது தமிழ்மொழி. நாட்டு வரலாறு, மொழி வரலாறு எழுதப்படுவது போல் சொற்களுக்கு வேர்மூலம் கண்டு சொல் வரலாறு விளக்கும் அகரமுதலியை சொற்பிறப்பு அகரமுதலி (Etymological Dictionary) என்பர். உலகின் பல்வேறு மொழிகளில் வெளிவந்துள்ள சொற்பிறப்பு அகரமுதலி போல் தமிழிலும் சிறந்த சொற்பிறப்பியல் அகரமுதலியைப் பன்மடலங் களாக வெளியிடும் மொழிநூலறிஞர் பாவாணரின் தொலைநோக்கு ஞால முதன்மொழி தமிழ்மொழியே என்பதை நிறுவிக் காட்டுகிறது. ஒரு மொழியின் பெருமையையும், வளமையையும் அம்மொழியின் சொல்வளத்தால் நன்கு அறியலாம். அச்சொல் வளத்தைக் காட்டுவன அகரமுதலிகளே. பண்டுதொட்டு இன்றுவரை ஒரு மொழியின் பண்பாடு, நாகரிகம், வரலாறு ஆகியவற்றை அறியப் பெரிதும் துணையாயிருப்பது ஒரு மொழியில் அமைந்துள்ள செஞ்சொற்களே எனலாம்.

இலக்கியச் சொல்லாட்சிகள் முதல் பேச்சு வழக்கிலுள்ள சொற்கள் வரை அனைத்தையும் உள்ளடக்கி, சொற்களின் வடிவம், வரலாறு, பொருட்சிறப்பு, வேர்மூலம், இனச் சொல் வடிவம், கலைச் சொல்லாக்கம், வட்டார வழக்குச் சொற்கள் என அனைத்தையும் சிறப்புற விளக்குவது சொற்பிறப்பியல் அகரமுதலியின் தனிச் சிறப்பாகும்.

முதல் மாந்தன் தோன்றிய இடம் குமரிக் கண்டம்; உலக முதன்மொழி தமிழ் என்ற வரலாற்று உண்மையின் அடிப்படையில் தம் ஆராய்ச்சியை அமைத்து முதன் மொழியாகிய தமிழின் சொற்களைத் துருவி ஆராய்ந்து வேர் விளக்கம் கண்டு உலக அறிஞர்களை வியப்பில் ஆழ்த்தியவர் பாவாணர் எனில் அது மிகையன்று. தொல்காப்பியர் காலத்திற்குப் பின் தமிழன்னை தன்னை நிலைப்படுத்திக் கொள்ளும் முயற்சிக்கு வித்திட்டு அடித்தளம் அமைத்துத் தந்தவர் பாவாணர்.

மேலைநாட்டு அகராதிகளெல்லாம் சொற்பிறப்பை இனச்சொற்கள் மூலத்தோடு சுட்டிக் காட்டும். அதற்குமேல் சொல் வரலாற்றை விரிவாகத் தருவதில்லை. காரணம் அம்மொழிகளில் அதற்கு இடமில்லை. பாவாணரின் சொற்பிறப்பு அகரமுதலியில் சொற்பொருளை ஏரணமுறையில் எடுத்துக்காட்டிச் சொல்வரலாற்றைப் பொருட் பொருத்தத்துடன் புகல்வதே தனிச்சிறப்பு.

இனச்சொல் காட்டுதல், ஒரு பொருள் குறித்த பலசொல் காட்டுதல், ஒரு பொருளின் இனவகைகள் காட்டுதல், சொற்களின் வேர்மூலத்தைப் பாவாணரின் வேர்ச்சொல் கட்டுரையில் சுட்டியுள்ள நெறிமுறைப்படி மரபிலக்கணம், மொழியியல் கூறுகள், இலக்கியம், வரலாறு, கல்வெட்டு, உலக வழக்கு ஆகியவற்றின் அணுகு முறைகளால் கண்டறிந்து கூறும் நெறிமுறையால் எம்மொழிச் சொல்லையும் நம்மொழிச் சொல்லாக்கும் நனிசிறந்த வேர்ச்சொல் வளமிக்கது தமிழே என்று நிறுவிய பெருமை செந்தமிழ்க் காவலர் பாவாணரையே சேரும்.

வடமொழி, ஆங்கிலம் முதலிய பிறமொழிச் சொற்கள் தமிழில் கலந்து பெருங்கேடு விளைக்கின்றன. அயன்மொழிச் சொற்களை வேண்டாது வழங்குவதால் தமிழ்ச்சொற்கள் வழக்கிழந்து நாளடைவில் இறந்துபடுவதுடன், புதுச்சொல் புனையும் ஆற்றலும் அவாவும் தமிழ் அறிஞர் பெருமக்களுக்கு அற்றுப் போகின்றன. இத்தகு சீர்கேடுகளைக் களைந்து சொற்பிறப்பு அகரமுதலி மூலம் தமிழுக்குப் புத்தாக்கம் கொடுத்தவர் பாவாணர் ஆவார்.

## சொற்பிறப்பியல் அகரமுதலியின் நெறிமுறையும் பயன்பாடும்

ஆங்கிலம் போன்ற மேனாட்டு மொழிகளில் வெளிவந்துள்ள சொற்பிறப்பியல் அகரமுதலிகளிற் காணப்படும் சொற்களுக்கு எளிதாக சொன்மூலம் காட்டுவதையே சொற்பிறப்பியல் அகரமுதலி என்று மேனாட்டார் கருதுகின்றனர். ஆனால், பாவாணரின் சொற்பிறப்பியல் அகரமுதலி சொன்மூலம் காட்டுவதோடு, சொற்களின் வேர்மூலம் காட்டுதலால், வேர்ச்சொல்லுக்கும் வேர்ச்சொல் கண்டு ஆணிவேர், பக்கவேர் சல்லிவேர் எனப் பகுத்தாய்ந்து மொழி வளர்ச்சிக்கு உரமூட்டுவதோடு, உலக மொழிகளுக்கு வழிகாட்டும் தமிழ்ச் சொற்களஞ்சியமாகத் திகழ்கிறது.

கொச்சைச் சொற்களும், கொடுந்தமிழ்ச் சொற்களும் உலக வழக்கில் தனிச்சொல்லாகவும், கூட்டுச் சொல்லாகவும் காட்டப்படுகின்றன. ஆனால் சொற்பிறப்பியல் அகரமுதலியில் அச்சொற்களின் செந்தமிழ் வடிவம், சொற்பிறப்பு, சொற்றிரிபு கண்டறிந்து கூறுவதால் ஒரு நாட்டின் வரலாற்றைப் போலச் சொல்லின் வரலாறு காலத்தையும், மொழிக் கலப்பையும் விஞ்சி வரலாறு படைக்கிறது.

தமிழ் ஞால முதன்மொழி, திரவிடத்திற்கு தாய், ஆரியத்திற்கு மூலம் என்னும் பாவாணர் கொள்கை நெறிப்படி கூட்டுச் சொற்கள், மரபு வினைகள் ஆகிய அனைத்துச் சொற்களுக்கும் சொற்பிறப்பு கண்டறியும் முனைப்பால், உலக மொழிகளில் தமிழ்ச் சொற்கள் கலந்திருப்பதை எளிதாகக் கண்டறியச் சொற்பிறப்பியல் அகரமுதலி வழிகாட்டுகிறது.

கூட்டுச்சொல், தனிச்சொல் ஆகியவற்றின் செவ்விய வடிவம் சொற்பிறப்பியல் அகரமுதலியில் காட்டப்படுவதால், அச்சொற்களின் முந்து தமிழ்வடிவம், அச்சொற்களுக்கும் உலக மொழிகளுக்கும் உள்ள தொடர்பு, சொல் தோன்றி வளர்ந்த நெறிமுறை ஆகியவற்றைக் கண்டறிய உதவுகிறது. மொழிகளின் பிறப்பையும், நெறிமுறைகளையும் வரையறுத்துக் கூறுவதால், உலகின் பலமொழிக் குடும்பங்களிலும்

உருத்திரிந்தும் திரியாமலும் உள்ள செந்தமிழ் சொற்களின் முந்து தமிழ் வடிவங்களை மீட்டமைக்கச் சொற்பிறப்பியல் அகரமுதலி வித்திடுகிறது.

சொற்பிறப்பைச் சொற்றிரிபு, பொருள் திரிபுகளின் வாயிலாக ஏரண நெறி தழுவி வரலாற்று வழி நெடுநோக்குடன், தக்க சான்றுகளுடன் கணித்து வரையறுக்கவும், சான்று கிட்டாதவற்றுக்கு மரபு நோக்கி வடிவ மீட்டமைப்புச் செய்வதற்கும் பாவாணரின் சொற்பிறப்பியல் அகரமுதலி வழிகோலுகிறது.

உலக மொழிகளில் பல்வேறு சொற்பிறப்பியல் அகராதிகள் தொகுக்கப்பட்டு மேலைநாட்டு மொழிகளுக்குச் சிறப்புச் சேர்த்த நிலையில், தமிழில் சொற்பிறப்பியல் அகரமுதலி தோன்றவில்லையே என்னும் தமிழ்கூறு நல்லுலக மக்களின் குறையை நிறைவாக்கித் தமிழன்னைக்கு மணிமகுடம் சூட்டிய பெருமை மொழிஞாயிறு பாவாணர் அவர்களின் சொற்பிறப்பியல் அகரமுதலிக்கு உண்டு. சொற்பிறப்பியல் அகரமுதலி திராவிட மொழிகளின் ஆய்வுப் புலங்களுக்கும், தமிழாராய்ச்சி வல்லுநர்களுக்கும் ஆற்றுப்படுத்தும் பெருங்கொடையாக அமைவது திண்ணம் என்று இங்கிலாந்து நாட்டு அகராதி வல்லுநர் பரோ பாராட்டியிருப்பது சொற்பிறப்பியல் அகரமுதலியின் சீர்மையை விளக்குகிறது.

மேனாட்டு அகராதி வல்லுநர்கள் அகரமுதலியின் பயன்பாட்டைக் களஞ்சியப் பயன்பாடு (Store house function of a Dictionary), முறை மன்றப் பயன்பாடு (Court - function of a Dictionary) என்று இருவகை நோக்கம் கருதிப் பாகுபடுத்துவர். ஆனால், சொற்பிறப்பியல் அகரமுதலி இவ்விரு நோக்கங்களையும் உள்ளடக்கிய சிறப்புக் கொண்டது.

தமிழ் வேர்ப்பொருள் காட்டும் மொழி எனத் தொல்காப்பியச் சான்று காட்டித் தமிழின் தனித்தன்மை சொற்பிறப்பியல் அகரமுதலியில் நிறுவப்பட்டுள்ளது.

தமிழ்ச்சொல்லின் வளம் அறிதற்குத் தமிழ்ச் சொற்களும், அயற்சொற்களும் முதன்முதலாகப் பிரித்துக் காட்டப்பட்டுள்ள நெறிமுறை பாராட்டுக்குரியதாக உள்ளது.

பிற அகராதிகளில் இடம்பெறாத உலக வழக்குச் சொற்களைப் பாவாணரின் சொற்பிறப்பியல் அகரமுதலி ஏற்றுக் கொண்டுள்ள பாங்கு போற்றற்குரியது.

கூட்டுச் சொற்களை எண்வகையாகப் பகுத்துக் காட்டியுள்ள நெறிமுறை நற்பயன் அளிக்கும் முயற்சியாகும். வினைச்சொற்களை ஏவலொருமை வடிவில் குறித்திருப்பது சொல்லாக்கத்திற்குத் துணை செய்யும் மரபு நெறியாகும். அயன்மொழிச் சொற்கள் இயன்ற அளவு நெருங்கிய தமிழ் எழுத்துக்களால் குறிக்கப்பெற்றுள்ளமை, பழமரபு காக்கும் நெறிமுறையாகும்.

மரபுவழக்கைத் தனிச்சொல், இணைச்சொல், கூட்டுச்சொல், தொடர்ச்சொல் என நான்காகப் பிரித்துக் காட்டியிருப்பது சொற்பொருள் காண்பதற்குப் பெரிதும் துணை புரிகிறது.

உலக மொழிகளில் வெளிவந்துள்ள சொற்பிறப்பு அகராதிகளைக் காணும் போது, உலகில் முதன் முறையாக வரலாற்று அடிப்படையிலும், மொழிநூலடிப் படையிலும் வெளிவந்துள்ள மொழிஞாயிறு பாவாணரின் சொற்பிறப்பியல் அகரமுதலியே தனித்தன்மையும், சிறப்பும் ஒருங்கே பெற்ற பெருமைக்குரியது.

திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணக் கல்வி ஓரளவே வளர்ந்துள்ளதால் இத்தகைய அகராதிகளின் தோற்றம் மேலை நாட்டு மொழி ஆய்வாளர்களுக்கும், வருங்காலத் தமிழாய்வறிஞர்களுக்கும் துணைபுரியும் என்பது வெள்ளிடைமலை. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் தோற்றத்தால், மற்ற திராவிட மொழிகளில் சொற்பிறப்பகராதிகள் தோன்றவும், வழியுண்டாகும் என்பது திண்ணம்.

தொல்காப்பியம் தமிழின் இலக்கண வளமைக்கு அடையாளம். திருக்குறள் தமிழினத்தின் வாழ்வியல் சிறப்பிற்கு அடையாளம். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி உலக மொழிகளுக்குத் தாய்மொழி தமிழே எனப் புலப்படுத்தும் அடையாளம்.



# அகரமுதலிக் கோட்பாடு

"அகரமுதலியைப் பயன்படுத்துவோர் தம் பல்வேறு தேவைகளை நிறைவேற்றும் பாங்கில் அகரமுதலிகள் அமைகின்றன. அவற்றுள் செய்திகள் அடங்கிய சரக்கறை (store house function) ஆகவும் நெறிகள் நல்கும் முறை மன்றம் (court house function) ஆகவும் செயற்படும் தன்மைகளை முதன்மையாகக் குறிப்பிடுவர். பலுக்கும் முறை, சொற்பிறப்பு, வழக்குப் போன்ற செய்திகளைத் தரும் பார்வைப் பொத்தகமாக விளங்குவது சரக்கறையாகச் செயற்படும் தன்மையாகும். நல்ல அல்லது சரியான வழக்கைத் தீய அல்லது தவற்று வழக்கிலிருந்து வேறுபடுத்திக் காட்டும் பார்வைப் பொத்தகமாக விளங்குவது நெறிநல்கும் முறைமன்றச் செயற்பாடாகும். இவ்விரண்டு நிலைகளிலும் செய்திகளைத் தெளிவுபடுத்தும் தன்மையனவாக அகரமுதலிகள் விளங்க வேண்டும். இத்தன்மை போதிய அளவு அகரமுதலியில் இடம்பெற வேண்டும் என்றால் அகரமுதலித் தொகுப்புப் பல நிலைகளிலிருந்து தொகுக்கப்பட வேண்டும். அவை உரியனவாகவும் எளிமையாகச் சரிபார்க்கத் தக்கனவாகவும் இருக்க வேண்டும்" (Ram Adhar Singh 1982 4)

இன்றைய மொழியியலாளர்கள் மொழிப் பயன்பாட்டில் உள்ளன உள்ளபடியே அகரமுதலியில் இடம்பெற வேண்டும் எனக் கருதுகின்றனர். ஆனால் அகரமுதலியைப் பயன்படுத்துவோர் பலர் மொழிப் பயன்பாட்டிலுள்ள கூறுகளின் விளக்கமாக அகர முதலியைக் கருதுவது இல்லை. மொழித் தூய்மையைக் காக்கும் வகையில் அகரமுதலி அமைய வேண்டும் என்று விரும்புகின்றனர். இவ்வகையில் அகரமுதலிப் பதிப்பாசிரியர் சொற்களை ஏற்க அல்லது தவிர்க்க உரியவராவார் என்றும் அகரமுதலியில் இடம் பெறுவத னாலேயே சொல் உரிய நிலையைப் பெறுகிறது என்றும் கருதுகின்றனர் (Encyclopeadia Americana Vol IX. 85).

## பயன்பாடு :

ஒரு மொழியைக் கற்பதற்கு அகரமுதலி மிகப்பெரும் துணை புரிகிறது. அதனால்தான் முன்னர் அகரமுதலியை (நிகண்டு போன்றவற்றை) மனப்பாடம் செய்வதற்கு ஊக்கம் அளிக்கப்பட்டிருந்தது. அவ்வாறு செய்வதால் ஒருவரது மொழியறிவு அதிகஅளவில் பெருகும் என்று நம்பப்பட்டு வந்தது. எவ்வாறாயினும் அறிவுப் புலத்தில் அகரமுதலி தனக்கென்று தனியான இடத்தினைக் கொண்டுள்ளது.

சிறப்புடன் விளங்கும் மொழி தரமான அகரமுதலியைக் கொண்டிருக்க வேண்டும் என்று சொல்லலாம். தமிழ்மொழியைப் பொறுத்த வரையில் அது பல்வகையான சிறப்புகளுடன் விளங்கி வருகிறது. நீண்ட வரலாற்றினைக் கொண்ட இம்மொழிக்குத் தரமான அகரமுதலிகள் உருவாக்குவது அதன் சிறப்புகளை எடுத்துக்காட்டுவதாக அமையும். இக்கால மொழியியல் அறிவியல் அடிப்படையில் உருவாக்கப்படும் அகரமுதலி சிறப்பானது. ஆகையால், உருவாக்கப்படும் அகரமுதலிகள் இக்கால அகராதி நெறிமுறைகளின் படி அமையவேண்டும். அகரமுதலியில் சொற்கள் இடம் பெறுவது அவை கால ஓட்டத்தில் வழக்கிழந்து போவதைப் பெரிதும் தடுக்கும். வழக்கிழந்த சொற்களும் அகரமுதலியில் இடம் பெறச் செய்ய வேண்டும். அவ்வாறு செய்தால் பிற்காலத்தில் தேவை ஏற்படும் போது அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

வெவ்வேறு மொழி பேசுவோர்களுக்கிடையே தொடர்பு ஏற்படுத்துவதற்குப் பன்மொழி பேசுகின்ற நாட்டில் இருமொழி அகரமுதலி அல்லது பன்மொழி அகரமுதலி துணைபுரியும். நாட்டு ஒருமைப் பாட்டினையும் வலுப்படுத்தும். பிறமொழியாளர் பண்பாட்டை அறிந்து கொள்வதற்கும் அகரமுதலி பெரிதும் துணைபுரியும்.

ஒரு மொழிக்கு அமையும் தரமான அகரமுதலி அம்மொழியின் சிறப்புகளை வெளிப்படுத்துவதாக இருக்கும். காலந்தோறும் மொழிக்கு அகரமுதலிகள் உருவாக்கப்பட வேண்டும். அது அவ்வக்காலத்தில் மொழிபெற்ற வளர்ச்சிப் பதிவுகளைக் காட்டுவதாக இருக்கும். அது ஒப்பாய்வுக்குப் பெரிதும் துணை புரியும். தமிழுக்குத் தரமான அகரமுதலி உருவாக்கும் நோக்கில் திட்டமிடப்பட்டதே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பொதுமக்களுக்குப் பயன்படும் வகையில் பொது வகை அகரமுதலிக் கூறுகள்,

புலமக்களுக்குப் பயன்படும் வகையில் அமையும் சிறப்புக் கூறுகள் ஆகிய இரண்டினையும் உள்ளடக்கியது.

சொற்பிறப்பு (etymology) சொல்லின் வரலாறு வளர்ச்சி ஆகியவற்றைப் பற்றியது. அது சொல்லின் தோற்றம் அச்சொல்லைப் போன்றுள்ள பிற (இன) மொழிச் சொல்லுடன் காணப்படும் தொடர்பு, காலப்போக்கில் அச்சொல்லில் ஏற்பட்டுள்ள பொருள் மாற்றம் ஆகியவற்றைக் காட்டும் வகையில் அமையும்.

ஒரு சொல் ஒரு குறிப்பிட்ட வடிவத்துடனும் ஒரு குறிப்பிட்ட பொருளுடனும் தோன்றுகிறது. ஆனால் மக்கள் அதற்கு மற்றொரு பொருள் ஏற்ற விழையும்போது அது மாறுகிறது.

சொற்பிறப்பு, சொல் தரும் பொருளை நிறைவாகவும் தெளிவாகவும் அறிவதற்கு உதவுகிறது. பெரியதாகவும் கடினமானதாகவும் விளங்கும் சொற்களின் பொருள்களை அறிந்துகொள்வதற்கு அது பெரிதும் துணைபுரிகிறது.

### தேவை

பன்மொழி பேசும் நாடுகளில் அகரமுதலி மிக உயிர்த்துடிப்புள்ள பங்கினை ஆற்றி வருகிறது. ஒரு மொழியைத் தரப்படுத்துதலுக்கும் (standardisation), புத்தூக்கப் படுத்துதலுக்கும் (modernisation) அகரமுதலி பெரும் பங்காற்றி வருகிறது.

தமிழ் மொழியில் பல்வேறு வகையான அகரமுதலிகள் வெளிவந்திருக்கின்றன. இதுவரை இருநூறுக்கும் மேற்பட்ட அகரமுதலிகள் சிறியதும் பெரியதுமாக வந்துள்ளன. இருந்தாலும் தமிழில் வெளிவந்த அகரமுதலிகள் அளவிலும் தரத்திலும் போதிய அளவினவாக இல்லை என்று கருதுகின்றனர். அளவு என்பது தேவைக்கு ஏற்றாற்போல் சிறியதும் பெரியதுமாக அமைய வேண்டும். அகரமுதலிக் கலையின் வளர்ச்சி அடிப்படையிலும் அறிவியல் அடிப்படையிலும் உருவாக்கப்பட்டதாக அதன் தரம் இருக்கவேண்டும். அகரமுதலி பயன்படுத்துவோர் தேவையை அறிந்து அத்தேவை நிறைவு பெறும் வகையில் தொகுக்கப்பட வேண்டும். அவ்வகையில் இன்று அகரமுதலியின் பயனை நாடுவோர் பலவகைப்பட்டவராக இருக்கின்றனர். ஆகையால் பல்வேறு வகையான அகரமுதலிகளை உருவாக்கவேண்டிய தேவை ஏற்பட்டுள்ளது.

அகரமுதலி தொகுப்போர் பயன்படுத்துவோர் தேவையை அறிந்து அதற்கு ஏற்றவாறு அகரமுதலியை உருவாக்க வேண்டும். எல்லார்க்கும் பயன்படும் வகையிலானது என அகரமுதலியை உருவாக்கல் சிறப்பானதாகக் கருதப்படுவதில்லை.

தமிழ் – ஆங்கிலம் அகரமுதலி தொகுப்போர் தம் அகரமுதலியால் தமிழ் அறிவு பெருகும் வகையில் உருவாக்கப்படவேண்டும் என்னும் அடிப்படையை முன்னிறுத்திப் பணிசெய்ய வேண்டும். அதிலும் குறிப்பாகப் பிறமொழியாளர்களுக்கு அல்லது குறைந்த அளவு தமிழறிவு பெற்றவர்களுக்குப் பயன்படும் வகையில் அமைய வேண்டும்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி தமிழ் – தமிழ் – ஆங்கிலம் என்னும் அமைப்புடையது. இது தரமான தமிழறிவு பெறுவதற்கு ஏற்றவகையிலும், அத்தரமான தமிழறிவைப் பிறமொழியாளர்கள் ஆங்கில வாயிலாக அறியும் வகையிலும் உருவாக்கப்பட்டுள்ளது.

## சொற்பிறப்பு அகரமுதலி வகைகள்

சொற்பிறப்பு அகரமுதலிகளை அவை காட்டும் பரப்பு, அவற்றில் இடம்பெறும் மொழிகளின் எண்ணிக்கை ஆகியவற்றின் அடிப்படையில் பல வகைகளாகப் பிரிக்கின்றனர். இதில் மிகவும் இன்றியமையாதது சொற்பிறப்பு அகரமுதலி ஒரு மொழி பற்றியதா அல்லது பல மொழிகள் பற்றியதா என்பதாகும். சொற்பிறப்பைப் பொறுத்தவரையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி ஒரு மொழியைப் பற்றியது. இனமொழிகளிலிருந்து இனச்சொல் காட்டப்படுகின்றன. தமிழ் மூலத்திலிருந்து பிறந்த சொற்கள் பிற மொழிக் குடும்பங்களிலிருந்து காட்டப்படுகின்றன. என்றாலும், இவையாவும் தமிழில் சொல் வளர்ந்துவந்த நிலைகளைக் காட்டுவதற்காகத் தரப்படவில்லை.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல், சொன்மூலங்களைக் கருத்து அடிப்படையில் சுட்டடிகளிலிருந்து காட்டுகிறது. தமிழியக் குடும்ப இனச் சொற்கள் இந்தச் சுட்டடித் தன்மையைக் காட்டும் வகையில் இங்குக் குறிப்பிடவில்லை. தமிழியக் குடும்ப மொழிகளில் தமிழ் மிகப் பழமையான மொழி. "திரவிட மொழிகளுள் தொல் திரவிடத்துடன் மிகவும் நெருக்கமாக உள்ள மொழி தமிழ். அது பழமையான திரவிட வேர்களைத் தக்கவைத்துக் கொண்டிருக்கிறது. தென் நாட்டு மொழிகளை

ஆராய்வதற்குத் தமிழ்அறிவு தேவை[1]'' தமிழியக் குடும்பச் சொற்களுக்குரிய வேர்கள் பழந்தமிழில் உள்ளன. ஆகையால் பெரும்பாலான இடங்களில் இனச் சொற்களைக் கொண்டு வேர்களைக் கண்டறியும் தேவை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியைப் பொறுத்தவரையில் எழவில்லை. எவ்வாறாயினும் ஒப்பீட்டு ஆய்வுக்கு உதவும் வகையில் இனச்சொற்கள் தரப்பட்டுள்ளன.

பொதுவாகச் சொற்பிறப்பு அகரமுதலி, உடன்பிறப்பு மொழிகளை (cognate languages) ஒப்பு நோக்கிச் செயற்படுவது. அவ்வகையில் சொற்பிறப்பு அகரமுதலியில் ஒப்பியல் பண்பும் அடங்கி இருக்கும். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் ஒப்பியல் தன்மை மிகுதியும் இடம் பெற்றுள்ளது. இனச் சொற்கள் குடும்ப மொழிகளிலிருந்து காட்டப் பெற்றுள்ளன. இதனுடன் பலவிடங்களில் உலக மொழிகள் பலவற்றிலிருந்தும் இனச் சொற்கள் காட்டப்பட்டுள்ளன.

சொற்பொருள் நிலையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி தமிழ் ஆங்கிலம் ஆகிய இருமொழிகளைப் பற்றியது. ஆனால் வேர்விளக்கம் பெரும்பாலும் தமிழ்மொழியைப் பற்றியதாகவே இருக்கிறது. அதாவது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் வேர்விளக்கம் ஒருமொழி பற்றியது.

கால்டுவெல் (Caldwell) கண்காணியார், கிற்றல் (Kittel) கண்காணியார் போன்றோரின் ஆய்வுக் குறிப்புகள் ஆங்கில மொழியில் கொடுக்கப்பட்டுள்ளன. இவை பெரும்பாலும் வேர்விளக்கப் பகுதியில் இடம் பெற்றுள்ளன. இவை பெரும்பாலும் இனச்சொல் தரும் தன்மையிலேயே அமைந்துள்ளன. ஆகையால் இவற்றை வேர்விளக்கத்துடன் வருவதாகக் கொண்டு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் வேர்விளக்கம் இருமொழி பற்றியது என்று கொள்ள வேண்டியது இல்லை. ஒரு சில இடங்களில் இவர்கள் குறிப்பிடும் வேர்களையே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி ஏற்றுக் கொள்கிறது. என்றாலும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் வேர்காட்டும் நெறி இவர்கள் காட்டும் வேர்களுக்கும் முந்தைய நிலையைக் காட்டுவதாக இருக்கிறது. ஆகையால் விளக்கத்திற்காக இவை இங்குத் தரப்பட்டுள்ளன எனக் கொள்ளவேண்டும்.

ஒரு மொழிக்கு ஒன்றுக்கும் மேற்பட்ட சொற்பிறப்பு அகரமுதலிகள் உருவாவதும் உண்டு. ஆங்கில மொழிக்கு இதுவரை ஐந்து சொற்பிறப்பு அகரமுதலிகள் உருவாகியுள்ளன. சி.தி.ஆனியன் (C.T Onions), சேம்பர்சு (Chambers), வீக்கிலி (Weekley), கீற்று (W.W.Skeat), கிளெயின் (Klein) ஆகியோர் தலைமையில் சொற்பிறப்பு அகரமுதலிகள் ஆங்கில மொழியில் உருவாக்கப்பட்டுள்ளன.

## பேச்சுமொழி:

தமிழில் வெளிவந்த அகரமுதலிகள் பெரும்பான்மை இலக்கியச் சொற்களை அடிப்படையாகக் கொண்டவை. தொல்காப்பியர் காலத்திலேயே கிளை வழக்குகளின் இன்றியமையாமை காட்டப்பட்டுள்ளது. திசைச் சொற்கள் என்ற வட்டார வழக்குச் சொற்களைத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. இருந்தாலும் தமிழ்மொழியின் கிளைவழக்குகள் முழுமையாக அகரமுதலியில் இடம் பெறவில்லை என்ற குறைபாடு இருக்கிறது. கிளை வழக்குகள் உட்பட மொழி வழக்குகள் அனைத்தையும் உள்ளடக்கியதாக இருக்கும் அகரமுதலியே முழுநிறைவான அகரமுதலியாகும்.

அகரமுதலி, எந்த அளவுக்கு இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு சொற்களைத் தொகுத்துப் பொருள் தருகிறதோ, அந்த அளவிற்குத் தரம் வாய்ந்தது எனக் கருதும் நிலை இருந்தது. இப்பின்னணியிலேயே மக்கள் பேச்சுவழக்கிற்குப் போதிய இடம் அகரமுதலியில் அளிக்கப் பெறவில்லை. ஆனால் அண்மைக் காலத்தில் அகரமுதலியில் கிளைவழக்குகளும் இடம் பெற வேண்டியதன் தேவையை வலியுறுத்தி வருகின்றனர். இலக்கியச் சொற்கள் ஒரு மொழியின் இன்றியமையாத கூறுகளாக அமைகின்றன. அதே நேரத்தில் இலக்கிய ஆட்சிகள் மட்டும் ஒரு மொழியின் முழுத் தன்மையைக் காட்டுவனவாக இரா. சற்றொப்ப மொழியின் மூன்றில் ஒருபங்குத் தன்மையை இலக்கிய ஆட்சிகள் கொண்டிருக்கும் என்று கணக்கிடுகின்றனர்.

1 Telugu is closely allied to Tamil, Kanarese and Malayalam, words of Dravidian origin occurring in all these languages without any great difference of form. The original Dravidian speech seems to have split up into these languages about the time when the modern Teutonic languages such as English, Dutch and German were formed out of their parent tongue. Tamil is probably nearer to the original tongue than any other member of the group, and as it has preserved the older forms of the Dravidian roots a knowledge of it is essential to the proper study of the South Indian Languages.

- Brown, C P, Dictionary Telugu - English 1980 . Int. IV.

அவ்வாறெனில் மொழியின் பெரும்பங்கு, அதாவது மூன்றில் இரண்டு பங்கு பேச்சுமொழி கொண்டிருக்கும் என்பது வெளிப்படை.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி கிளைவழக்குகள் அனைத்தையும் உள்ளடக்க முயல்கிறது. பொதுவாக மொழியைக் கற்போருக்கு இலக்கிய ஆட்சிகளை மட்டும் அறிவது அவ்வளவு பயன் உள்ளதாக இருக்காது. வெவ்வேறு சூழலில் இயங்கும் மொழியின் இயக்கத்தை அறிதல் தேவை. பெரும்பான்மையான அகரமுதலிகள் இத்தன்மைக்கு உரிய இடம் அளிப்பதில்லை. இந்நிலையில், இவ்வகை அகரமுதலிகள் மொழி கற்போருக்குப் பயன் உள்ளனவாக இரா. பேச்சு மொழியில் ஆகுபெயர், உருவகம் போன்ற வகையில் பலவாறாகப் பொருள் விரிவு ஏற்படும்.

எ-டு : மாந்த உடலின் உச்சியில் அமைந்துள்ள உறுப்பு அல்லது விலங்கு உடலில் முன்னதாக அமைந்துள்ள உறுப்பு தலை. இச்சொல் முடி (தலைவாருதல்), ஆள் (தலைக்கட்டு), ஒரு குழுவை வழி நடத்துபவன் (தலைவன்), முதன்மை (தலை மாணாக்கன்), அறிவு (தலைகெட்டு விட்டது) என்பன போன்ற பொருள் வளர்ச்சி கொண்டிருக்கும். இதுபோன்ற பொருள் வளர்ச்சிகள் முழுமையையும் காட்டுவதற்குப் பேச்சுமொழியை நாடவேண்டியிருக்கும்.

மொழியில் வழங்கும் புதிய சொற்களும் பொருள்களும் அகரமுதலியில் இடம்பெற வேண்டும். மொழியின் தூய்மைக்கு ஊறுவிளையும் எனக் கருதி வழக்குகளைப் பதிவு செய்யாமல் விடுப்பது அகரமுதலி நெறிக்குப் புறம்பானது. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி புதிய சொற்களையும் பொருள்களையும் ஏற்றுக் கொள்கிறது.

வரலாற்று முறை :

அகரமுதலியில் உருப்படிகளாகத் தெரிவு செய்யப்படுவன பெரும்பாலும் மொழியில் அடிக்கடி பயன்படுவனவாக இருக்கும். மொழியில் அடிக்கடி பயன்படுத்துபவை, மொழியமைப்புக் கட்டளைப் படி அமைந்தவை ஆகியன தனி உருப்படிகளாகக் கொள்ளத் தகும் தகுதியினைப் பெறுகின்றன. தமிழ்மொழியைப் பொறுத்தவரையில், அது நீண்ட வரலாறு கொண்டிருப்பதால் அதன் இலக்கண வரம்புகள் தெளிவாக்கப்பட்டுள்ளன. தனி உருப்படியாகக் கொள்ள வேண்டிய தன்மைகள் ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளன.

பல பொருள்கள் கொண்ட சொல்லின் நடுவப்பொருளைக் கண்டறிவதற்கு வரலாற்று மொழியியலே துணை புரியும். சொற்பிறப்பு, சொல்லின் அடிப்படைப் பொருளை அறிவதற்குத் துணை புரியும். ஒரு சொல் கொண்ட பொருள்களுக்கிடையே நிலவும் இயைபைக் காட்டுவதற்கும், சொல்லின் பொருள்கள் இவ்வளவுதான் என்று வரையறை செய்வதற்கும் இணைவமைதி (collactions), இணைதிறம் (valency), தேர்ந்தெடுப்புக் கட்டுப்பாடு (selective restrictions) போன்ற மொழியியல் முறைகள் துணைபுரிகின்றன.

வரலாற்று முறை, குறிப்பாகச் சொற்பிறப்பியல் முறை ஒரே வடிவத்தில் இருக்கும் வெவ்வேறு மூலத்திலிருந்து பிறந்த சொற்களை (homonymy) வகைப்படுத்த உதவுகிறது. சொற்பிறப்பியல் முறையைக் கடைப்பிடிக்காத அகரமுதலிகளில் அகரமுதலி தொகுப்போரின் திறனுக்கேற்ப இவ்வாறான சொற்கள் பிரித்துக் காட்டப்பெறும். பெரும்பாலும் அகரமுதலிகளில் வெவ்வேறு மூலங்களின்று பிறந்த ஒரே வடிவம் கொண்ட சொற்கள் ஒரே உருப்படியின் கீழ்க் காட்டப்பெறும். ஆனால் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி சொற்பிறப்பியல் அடிப்படையில் தொகுக்கப்படும் அகரமுதலியாக இருப்பதால் இவ்வாறான சொற்கள் நீக்கப்பட்டு தனித்தனியான உருப்படிகளாகக் காட்டப்பெறும். இன்னும் சில இடங்களில் ஒரே மூலத்திலிருந்து தோன்றிய பொருள்கள் அதிகமாக இருக்கும் சமயத்தில் பொருள் தெளிவு ஏற்படும் வண்ணம் அவை பிரித்துக் காட்டப்பெறும்.

கொச்சை, பேச்சுவழக்கு போன்ற அடையாளம் (labels) கொடுப்பதற்குக் குமுகாய மொழியியல் உதவுகிறது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் நோக்கம் தமிழ் நலன்கள் அனைத்தையும் விளக்க வேண்டும் என்பதாகும். ஆகையால் தமிழ்மொழியைப் பற்றிய வரலாறு, கலை, பண்பாடு, நாகரிகம் போன்றன தொடர்பாக வரும் அனைத்துச் செய்திகளும் இவ்வகர முதலியில் இடம் பெற வேண்டும். அகரமுதலியின் அலகாகக் கொள்ளப்படும் சொற்களின் வாயிலாக இச்செய்திகள் அனைத்தும் விளக்கப்பட வேண்டும். ஆகையால், ஒரு சில சொற்களின் கீழ் நெடிய விளக்கம் கொடுக்கவேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. என்றாலும் இவ்வாறான விளக்கங்கள் ஒரு சில இடங்களில்தான் இடம் பெற்றுள்ளன. மற்ற இடங்களில் வேர்காட்டும் அளவிலோ வேருடன் சிறு விளக்கம் மட்டும் கூறும் அளவிலோ இடம்பெறும்.

அடிப்படையில் அகரமுதலி சொல்லைப் பற்றியது. ஒரு மொழியில் உள்ள சொற்களனைத்தையும் உள்ளடக்கியது அம்மொழிச் சொற்களஞ்சியம். ஒவ்வொரு சொல்லும் தனித்தனியான உருப்படி. இருந்தாலும் ஒவ்வொரு சொல்லும் பிற சொற்களோடு சேர்ந்து இயங்கும் தன்மை கொண்டது. ஒரு சொல் மற்ற சொற்களோடு சேராமல் தனியான இயக்கத்தைக் கொண்டிருக்காது. ஒரு சொல் குறிப்பிட்ட பொருள், குறிப்பிட்ட ஒலிவடிவம், குறிப்பிட்ட இலக்கண இயக்கம் ஆகியனவற்றைக் கொண்டிருக்கும்.

அகரமுதலியில் மொழி அலகு அதன் பொருள், அதைப் பயன்படுத்துவோர் பெறும் நடைமுறைப் பயன்பாடு ஆகியன தொடர்பாகத் தனியாக விளக்கப்படுகிறது. மொழியைக் கற்போர் அல்லது மொழிப்பரப்பை முழுவதுமாக அறிந்துகொள்வோர் ஆகியோர்க்குப் பயன்படும் வகையில் அகரமுதலி வடிவமைக்கப்படுகிறது.

ஒரு சொல் பல்வேறு வகையான பண்புகளைக் கொண்டதாக இருக்கலாம். இவை அனைத்தும் அகரமுதலியில் இடம்பெற வேண்டும் என்று வலியுறுத்தத் தேவையில்லை. அகரமுதலியைப் பயன்படுத்துவோர் தேவையை அறிந்து அதற்கேற்றாற்போல் அதை வடிவமைக்க வேண்டும்.

அகரமுதலி நடைமுறையில் (பேச்சில்) பயன்படுத்தும் வகையில், சொற்களை விளக்குகிறது. அகரமுதலி மொழிஅலகுகள் முழுமையும் கொண்டதாக இருப்பது நல்லது.

வரலாற்று அடிப்படையில் காலந்தோறும் சொற்கள் பொருள் நிலையில் மாற்றம் பெற்று வந்திருக்கின்றன. இதற்கு அவ்வக்கால வரலாற்றுச் சூழல் பெரும் உந்தாற்றலாக விளங்கி வந்திருக்கிறது. இவ்வாறு பொருள் மாறி வந்திருக்கும் தன்மையைக் கணக்கிற்கொண்டு அவ்வக்காலப் பண்பாட்டு, வரலாற்றுக் கூறுகளை அறிந்து கொள்ளலாம். இவ்வாறு கணக்கிட்டு அறிவதற்கு இலக்கியச் சொற்களே பெரும் துணை புரிகின்றன.

பொருள் மாற்றத்திற்கு அடிப்படையான காரணம் மாந்தமனம்தான். ஒரு குறிப்பிட்ட சூழலில் பொருள் எவ்வகையில் மாற்றம் பெறும் என்பதை முன்கூட்டிச் சொல்ல இயலாது. அதாவது பொருள் மாற்றத்தைப் பற்றிய உறுதியான நெறிகள் எதையும் குறிப்பிட இயலாது. அதே நேரத்தில் பொருள் மாற்றம் ஏற்பட்ட பின்னர் நம்மால் விளக்க இயலும். பொருள் மாற்றத்தினைப் பலவகையாகப் பகுத்துக் கூற இயலும். அனைத்துப் பொருள் மாற்றங்களையும் 1. பொருள் விரிவு, 2. பொருள் சுருக்கம், 3. மாறி வழங்குவது என்னும் முப்பிரிவுகளுக்குள் அடக்கலாம்.

## பொருள் :

ஒரு மொழியைப் பேசுவோர் தங்கள் மொழிச் செயற்பாட்டில் சொற்பொருளை நடுவக் கூறாகவும் முதன்மையான கூறாகவும் கொள்கின்றனர். எவ்வகையிலும் இந்த உயிர்ப்பான பகுதியை விட்டால் மொழிச் செயற்பாடு நிறைவுத் தன்மை கொண்டதாக இருக்காது.

பொருள், அகரமுதலியின் நடுவப் பொருளாகவும் இன்றியமையாததாகவும் விளங்குகிறது. அடிப்படையில் சொற்களுக்குரிய பொருளைப் பார்க்கவே அகரமுதலியை நாடுகின்றனர். அகரமுதலியில் இடம் பெற்ற சொற்கள் அனைத்திற்கும் ஐயுறவிற்கு இடம் தராமல் தெளிவான பொருள்கள் தரவேண்டும். ஒரு சொல்லின் வடிவத்திற்கும் அது உணர்த்தும் பொருளுக்கும் உள்ள தொடர்பைப் பலவாறாக விளக்குகின்றனர்.

ஒரு சொல்லில் பொதிந்துள்ள பண்புகள் அனைத்தையும் கூர்ந்து நோக்கி அவற்றிற்கு ஏற்றாற்போலப் பொருள் தருவது சிறப்பு. பொருள் வரையறையைப் பார்த்தமட்டில் அது குறிக்கும் சொல்லின் முழுப் பயன்பாடு தெரிய வேண்டும். எ-டு: அம்பு என்ற சொல்லின் பொருள் வரையறை "வில்லிலிருந்து விடக்கூடிய கூரிய முனையுள்ள நேரான படைக்கலம்" என்றமையும் போது அச்சொல்லைப் பற்றிய முழுமை படிப்பவர்க்கு ஏற்படுகிறது.

ஒரு சொல்லின் பொருள் விளக்கம் முழுதையும் கவனித்து அவற்றுள் பொருத்தமான பண்புகள் பொருள் வரையறையாகத் தரப்படுகின்றன. சொற்பொருள் வரையறையில் அகரமுதலி தொகுப்போர் இயல்பிற்கேற்பப் பொருத்தமான வரையறையிலிருந்து மாறிச் செல்வதற்கும் இடமுண்டு.

எ-டு : மரத்தாலான இருக்கை, நான்கு கால்களுடையது, உட்காருவதற்குப் பயன்படுவது, முதுகு சாய்வதற்கு ஏற்றாற்போல் பின்புறம் பலகை உள்ளது, பெரும்பாலும் முழங்கை வைப்பதற்கு இருபக்கமும் சட்டங்களைக் கொண்டது என்றாற்போலப் பல தன்மைகளைக் கொண்டது நாற்காலி. இருந்தாலும் நான்கு கால்கள் அடிப்படையில் அது நாற்காலி எனப் பெயர் கொண்டுள்ளது.

நான்கு கால்களை உடையது என்பது சொல்லடிப்படையில் தெரியும் முதன்மைக் கூறாக இருக்கலாம். இதை மட்டும் பொருள் வரையறை கொண்டிருக்கும் போது அது சொல்லின் முழுத் தன்மையைக் காட்டுவதாக இருக்காது. ஆகையால் அதை உரிய வரையறையன்று என்று குறிப்பிடலாம்.

இதுபோன்று ஒவ்வொரு சொல்லும் பலவகையான தன்மைகளைக் கொண்டிருக்கும். இவை அனைத்தும் பொருள் வரையறை தரும் போது கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்.

சொற்பிறப்பு, சொல்லின் அடிப்படை (வேர்)ப் பொருளை உறுதிசெய்யும் குறிப்பைக் காட்டும்.

எ–டு : அகவை என்னும் சொல்லிற்கு உள்ளிடம், உட்பட்ட பருவம், ஆண்டுப் பருவம் ஆகிய மூன்று பொருள்கள் உள்ளன. இச்சொல் உள்ளிடம், உள்ளடங்குகை போன்ற பொருள்களுள்ள அகம் என்பதிலிருந்து தோன்றியது என்று சொற்பிறப்பு காட்டும் போது அதன் உள்ளிடம் என்னும் அடிப்பொருள் முதன்மை பெறுகிறது.

சொல் கொண்டிருக்கும் பொருள்களுள் நடுவப் பொருளை உறுதி செய்ய அச்சொல்லின் வரலாற்றுப் பயன்பாட்டைப் பார்க்க வேண்டும்.

செடிகொடிகள், கலைப் பொருள்கள், பண்பாட்டுக் குறிப்புகள் போன்றவற்றின் பொருள் வரையறைகளுக்குக் கலைக்களஞ்சியச் செய்திகள் பெரிதும் பயன்படுகின்றன.

ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களைக் கொண்ட சொல்லை (polysemy), ஒரே வடிவத்தில் இருக்கும் ஒன்றுக்கும் மேற்பட்ட சொல்லினின்று (homonymy) வேறுபடுத்திக் காட்டுவது இன்றியமையாதது. பல அகரமுதலிகளில் இவ்வேறுபாடு காட்டப்படுவது இல்லை. ஒரே உருப்படியில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட சொற்களின் பொருள்கள் கொடுக்கப்படுகின்றன. இவ்வாறு செய்வதற்கு அடிப்படையான காரணம் சொற்கள் வெவ்வேறு மூலங்களினின்று பிறந்தனவாக இருந்தாலும் அவை ஒரே வடிவம் கொண்டிருப்பதாகும். ஒரு சொல்லின் பொருள்கள் தொடர்புடையனவாக இருந்தால் அவை பொருள் வளர்ச்சியால் ஏற்பட்டன எனக் கொள்ளலாம். அவ்வாறு இல்லை என்றால் அங்கு வெவ்வேறு சொற்களின் பொருள்கள் உள்ளன என்று துணியலாம். சொற்களின் பொருள் தொடர்பு வரலாற்று நோக்கில் காணத்தக்கது. இதைக் காண்பதற்குச் சொற்பிறப்பு பெரிதும் துணைபுரியும். தொடக்கக் காலந்தொட்டு ஒரு சொல்லின் பொருள்வளர்ச்சியைக் காட்டுவதாக இது இருக்கும். பொருள்களில் தொடர்பு காணப்படவில்லை என்றால் அங்கு வெவ்வேறு சொற்களின் பொருள்கள் இருக்கின்றன எனக் கொண்டு அவற்றைத் தனித்தனியாகப் பிரிக்க வேண்டும்.

எ–டு : "உள்ளம் என்பதைப் பரிமேலழகர் ஆகுபெயராய்க் கொண்டது பொருந்தாது. மனத்தைக் குறிக்கும் உள்ளம் என்னும் சொல்லும், ஊக்கத்தைக் குறிக்கும் உள்ளம் என்னும் சொல்லும் வெவ்வேறாகும். மனத்தைக் குறிப்பது உள்ளிருப்பது என்றும் ஊக்கத்தைக் குறிப்பது முற்செலுத்து என்றும் பொருள்படும்" (பாவாணர் 1953 : 61).

சொற்பிறப்பு அடிப்படையில் உள்ளம்[1] மனம் என்ற பொருளையும் உள்ளம்[2] ஊக்கம் என்ற பொருளையும் கொண்டுள்ளன என்று காட்ட வேண்டும்.

மனம் என்ற பொருளுள்ள உள்ளம்[1] என்ற சொல்லும், ஊக்கம் என்ற பொருளுள்ள உள்ளம்[2] என்ற சொல்லும் இலக்கண அமைப்பில் ஒரே வகை (பெயர்)யைச் சார்ந்தனவாக இருக்கின்றன. இவ்வாறு இருக்கும் நிலையில் இவ்விரு சொற்களையும் ஒன்றாகக் கொள்ளும் நிலை பெரும்பாலும் ஏற்பட்டு விடுகிறது.

ஒரே வேரின்று பிறந்த சொற்கள் இலக்கணவகைமையில் வெவ்வேறாக இயங்கும் போது தனித்தனி உருப்படிகளாகக் கொள்ளும் முறையையே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி பின்பற்றுகிறது. எ–டு : அஞ்சு (அச்சம்), பெயர் : அஞ்சு–தல் (வெருவுதல்), வினை. சில அகரமுதலிகள் இவ்வகைச் சொற்களை ஒரே உருப்படியின் கீழ்க் காட்டுகின்றன. ஒரு இலக்கண வகைமையின் பொருள்கள் முடிந்து அடுத்தது தொடங்கும் போது அந்த இடத்தில் அச்சொல்லின் இலக்கண வகைமையைக் குறிக்கின்றனர். எவ்வாறாயினும் சொல்லின் இலக்கண வகைமையைப் பிரித்துக் காட்டுவது பொருள் தெளிவு பெறுவதற்கு ஏதுவாக இருக்கும்.

"சொல் உணர்த்தும் பொருளை நிறைவாகவும் தெளிவாகவும் தெரிந்து கொள்ளச் சொற்பிறப்பு உதவுகிறது. மேலும் அது கடினமாகவும் நீண்டதாகவும் உள்ள சொற்களின் பொருள்களைத் தெரிந்து கொள்வதற்கும்

உதவுகிறது[1]". ஆகையால் சொற்பிறப்பு அகரமுதலியில் பொருள் தெளிவு சிறப்பாக இருக்கும் என்று நம்பலாம்.

## ஆகுபெயர்

"கருத்துகள் பல்கப் பல்கச் சொற்களும் பல்கவேண்டியிருப்பதால், ஒரு மொழி முழு வளர்ச்சி யடைவதற்குப் பல்லாயிரக்கணக்கான திரிசொற்கள் தேவையாயுள்ளன. பழஞ்சொல்லினின்று புதுச்சொல் திரிக்க வசதியில்லாவிடத்து ஒரு சொல்லே தொடர்புள்ள பல பொருள்களைக் குறிக்க நேர்கின்றது. இங்ஙனம் பொருள் திரியினும் சொல்திரியாத பெயரே ஆகுபெயர் எனப்படும்" (பாவாணர் 1992 : 86.)

எ–டு : கார் என்பது கரு நிறத்தையும், அந்நிறமுடைய மேகத்தையும், மேகத்திலுள்ள நீரையும் மேகம் பெய்யும் காலத்தையும், அக்காலத்தில் விளையும் நெல்லையும் உணர்த்தி நிற்கும்.

சொற்கள் காரணம் பற்றியும் ஆட்சி பற்றியும் பொருளுணர்த்தும். காரணம் பற்றிப் பொருளுணர்த்து வதே சொல்லுக்குச் சிறப்பாயினும், பொருளுணர்த்துங் குறியே சொல்லாதலின், சிறுபான்மை ஆட்சி பற்றியும் சொல் பொருளுணர்த்துமாறு பயன்படுத்தப் பெறும். அவ்வாட்சியும் காலத்திற்கும் இடத்திற்கும் ஏற்றவாறு வேறுபடும். ஆட்சிப்பொருள் ஆள்வான் கருத்திற்கேற்ற படியும், ஆளும் சொல் குறிக்கும் பொருளின் நிலைமைக் கேற்றபடியும் 1. உயர்வு, 2. இழிவு, 3. பொது, 4. வரையறுப்பு, 5. விரிப்பு என ஐந்நிலைப்படும். (பாவாணர் 1992 : 86).

## கட்டுருபன்

பெரும்பாலும் அகரமுதலியில் தனியாக இயங்கும் சொற்களே இடம்பெறும். சொற்கள் தனியாக இயங்கும் தன்மையன. ஆனால் கட்டுருபன்கள் தனியான இயங்கும் தன்மை இல்லாதன. அவை பிற உருபன் (சொல்) உடன் சேர்ந்தே மொழியில் ஆளப்படுகின்றன. அவை தனியாக இயங்கும் தன்மை இல்லாதவனவாக இருப்பதால் பல அகரமுதலிகளில் இடம் பெறுவதில்லை. சிறப்பான அகரமுதலிகள் உருபன்கள் அல்லது பொருளுணர்த்தும் வடிவங்கள் அனைத்துக்கும் பொருள் கொடுக்க வேண்டும். ஆகையால் கட்டுருபன்களும் அகரமுதலியில் இடம்பெற வேண்டும். ஆக்க ஈறுகள், பின்னொட்டுகள், முன்னொட்டுகள், இடையொட்டுகள் போன்று கட்டுருபன்களும் அகரமுதலியில் இடம் பெறவேண்டும்.

பழமையான இலக்கியங்களைக் கொண்டும் இன்றளவில் வழக்கில் இருக்கும் மொழியின் சொற்களை உரிய ஒலிப்பு முறையில் பதிவு செய்ய வேண்டியது தேவை. அம்மொழியின் ஏற்றுக் கொள்ளப்பட்ட தரமான ஒலிப்பு வகை பதிவுபெற வேண்டும். சொல்லின் ஒலிப்பு முறை மாறியிருக்கக்கூடும். ஆகையால் இன்று வழக்கில் இருக்கும் ஒலிப்பு முறையை வைத்துப் பழம் இலக்கியச் சொற்களைப் பதிவு செய்வது அவ்வளவு பொருத்தமாக இருக்காது. அதாவது பதிவுமுறை பல நேரங்களில் உரிய ஒலிப்பு முறையைக் காட்டுவதாக இருக்காது. குறிப்பாகப் பிறமொழியாளர்களுக்கு உரிய வகையில் ஒலிப்பு முறைக்கான பதிவு இல்லாமல் போனால் தவறான ஒலிப்புக்கு இட்டுச் செல்லும்.

இலக்கியங்களில் இடம்பெற்ற சொற்கள் அனைத்தும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிக்கு எடுத்துக் கொள்ளப்பெறும். ஒரு சொல் ஒரு குறிப்பிட்ட பொருளில் ஒன்றுக்கும் மேற்பட்ட இடங்களில் இடம் பெற்றிருந்தால் அவற்றுள் ஏதாவது ஒன்றினை மட்டும் கொள்ளும் முறையைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி பின்பற்றுகிறது. சொல் குறிக்கும் பொருள் தொடர்பாக உரையாசிரியர்கள் கருத்துகள் மாறியிருக்குமானால் அவை பதிவுக்குக் கொள்ளப்பெறும்.

இலக்கியத்தில் இடம்பெற்ற அருஞ்சொற்கள் அல்லது விளக்கம் தரவேண்டிய சொற்கள் ஆகியன பற்றி நூல்களிலும் இதழ்களிலும் மலர்களிலும், வந்துள்ள அறிஞர்கள் கட்டுரைகளைப் பொருள் வரையறைக்கும் வேர்விளக்கத்திற்கும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி பயன்படுத்தியுள்ளது.

பொருளியைபுச் சொற்களஞ்சிய (Thesaurus) முறையில் ஒரு சொல் ஒரு பொருளில் ஒன்றுக்கு மேற்பட்ட இடங்களில் இலக்கியங்களில் இடம்பெற்றிருந்தால் அவை அனைத்தையும் தொகுக்க வேண்டும். இம்முறையைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி மேற்கொள்ள வில்லை. எனினும், பொருள் தெளிவுக்காகச் சில இடங்களில் ஒன்றுக்கும் மேற்பட்ட மேற்கோள்கள் ஒரே பொருளுக்குக் கொடுக்கப்பட்டுள்ளன.

## கோட்பாடு

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிக் கோட்பாடு என்பது அகரமுதலிக் கோட்பாடு, சொற்பிறப்பியல் கோட்பாடு ஆகிய இரண்டு

1. Etymology helps give a fuller and clearer understanding of what a word means. It also helps us understand what long and difficult words mean. (The World Book Encyclopaedia, 1980 : Vol VI)

தன்மைகளை உள்ளடக்கியது. இவ்விரு கோட்பாடுகளும் தனித்தனியாகப் பார்க்கும் தகுதிப்பாடுடையன. இவற்றுள் சொற்பிறப்பியல் கோட்பாடு சற்றே மாறிய நிலையில் அகரமுதலிக்கு ஏற்ற வகையில் கொடுக்கவேண்டிய தேவை சொற்பிறப்பு அகரமுதலியில் ஏற்படுகிறது. அடிப்படையில் அகரமுதலிக்கென்று சொற்பிறப்பு மாற்றத்துடன் அமையாது. உருப்படியில் கொடுக்கும் இடம் நோக்கி விளக்கமாகவும் சுருக்கமாகவும் சில இடங்களில் மாட்டேற்றுடனும் சொற்பிறப்பு அகரமுதலியில் இடம்பெறும்.

தமிழில் முதன்முதலில் இரேவண சித்தர் தொகுத்த (1594) அகராதி நிகண்டுதான் அகராதி என்னும் சொல்லை அறிமுகப்படுத்தியது. அகராதி என்னும் சொல்லுக்கு அகரத்தில் தொடங்குவது என்பது பொருள். அங்குச் சொல்லின் முதலெழுத்து மட்டும் அகரவரிசைப் படுத்தப்பட்டுள்ளது. அதன் பின்னர் அகராதி என்னும் சொல் தமிழ்வழக்கில் பெரிதும் பயன்பாட்டுக்கு வந்துள்ளது. அகரவரிசைப் படுத்தப்பட்டவை அனைத்தும் அகராதி என்னும் பெயரால் ஆளப்பட்டு வந்துள்ளன. அகராதி என்பதில் 'ஆதி' தூயதென் சொல் என்று கருதாததால் பாவாணர் அகரமுதலி என்று புதிய சொல் படைத்தார். திரவிட மொழிகளுள் அகரமுதலி (அல்லது அகராதி) என்று தனக்கென்று தனியான இயற்சொல் அமைப்பில் சொல் படைத்துள்ள மொழி தமிழ் ஒன்றுதான். மற்ற இலக்கிய மொழிகளாக மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகள் நிகண்டு, கோசம் என்பன போன்ற வடசொற்களையே இன்றளவும் பயன்படுத்தி வருகின்றன.

அகரவரிசைப் படுத்தும் முறை வேண்டிய செய்திகளை மிகச் சிறு அளவு முயற்சியில் அறிந்து கொள்ள உதவுகிறது. அவ்வகையில் அகரவரிசைப் படுத்துதலை அகரமுதலி உருவாக்கத்தின் அடிப்படைக் கூறுகளுள் ஒன்று என்று குறிப்பிடலாம். இந்த அடிப்படையில் பார்த்தால் தமிழில் அகரமுதலி (அல்லது அகராதி) என்று பெயர் வைத்துள்ளது பொருத்தமாகவே இருக்கிறது.

அகரமுதலியைப் பல்வேறு அடிப்படைகளில் பலவகைகளாகப் பிரிக்கின்றனர். தமிழில் அகரமுதலி (அகராதி) பலவகை அகரமுதலிகளைக் குறிக்கும் பொதுச் சொல்லாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. தமிழில் இருநூற்றுக்கும் மேற்பட்ட அகரமுதலிகள் வெளிவந்துள்ளன. அவ்வகரமுதலிகள் அளவு, நோக்கம், பரப்பு போன்ற தன்மைகளில் வேறுபாடுகள் காணப் படுகின்றன. சொற்பொருள் அகரமுதலி, வரலாற்று அகரமுதலி, சொற்பிறப்பு அகரமுதலி, தொழில் வாரிய அகரமுதலி, சிறப்பு அகரமுதலி, பேச்சுமொழி அகரமுதலி, கிளைவழக்கு அகரமுதலி, பொதுப் பயன்பாட்டு அகர முதலி, வணிக நோக்கு அகரமுதலி என்பன போன்று பல வகைகளில் அகரமுதலிகள் உருவாக்கப்படுகின்றன.

அகரமுதலியில் இடம்பெறும் மொழிகள் அடிப்படையில் ஒருமொழி அகரமுதலி, இருமொழி அகரமுதலி, பலமொழி அகரமுதலி என்று பாகுபாடு பெறுகின்றன.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி தமிழ்–தமிழ்–ஆங்கிலம் என்னும் வகையில் அமைந்த இருமொழி அகரமுதலி. இதில் தமிழ்ச் சொற்களுக்குத் தமிழ்ப் பொருள் என்னும் வகையில் ஒருமொழி அகரமுதலிக் கூறு, தமிழ்ச் சொற்களுக்கு ஆங்கிலப் பொருள் என்னும் வகையில் இருமொழி அகரமுதலிக் கூறு ஆகிய இரண்டும் இடம் பெற்றுள்ளன. எழுதுவது போல் பலுக்கப்படுவதால் தமிழுக்குப் பலுக்கல் அகரமுதலி தேவையற்றது என்று கருதுகின்றனர். ஆனால் தமிழ் சொற்களில் அமைந்துள்ள பலுக்கல் முறையொழுங்கு பிறமொழியாளர்களால் சில இடங்களில் உரியவாறு பலுக்க இயலுவதில்லை. குறிப்பாக, ஒலிப்பில்லா ஒலி எழுத்துகள் ஒலிப்பு ஒலியாகப் பலுக்கவேண்டிய இடங்களில் பிறமொழியாளர்களுக்குத் தடுமாற்றம் ஏற்படு கிறது. இந்தத் தடுமாற்றத்தினை மனத்திற்கொண்டு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல், அகரமுதலி பலுக்கல் முறையை உரோமன் எழுத்துகளைக் கொண்டு குறிக்கிறது.

## கலைக்களஞ்சியம்

பொதுவாக, மொழிப்பயிற்சிக்கு அகரமுதலியும் அறிவு வளர்ச்சிக்குக் கலைக்களஞ்சியமும் உதவுகின்றன என்று கணக்கிடுகின்றனர். அகரமுதலி, கலைக் களஞ்சியம் ஆகியவற்றிற்கிடையே நிலவும் வேறுபாடு சொற்களைக் கொள்ளும் தன்மையில் தான் அமைகிறது. இவற்றிற்கிடையேயான வேறுபாட்டை உணர்த்தும் கோடு மெல்லியதாக இருக்கிறது. ஓர் அகரமுதலியின் தன்மையை அதே அளவுடைய வேறு ஒன்றுடன் ஒப்பிட்டுப் பார்ப்பதன் மூலமே அந்த வேறுபாட்டைக் கணக்கிட முடியும்.

அகரமுதலியைக் கலைக்களஞ்சியம் எனச் சொல்லுமாறு ஆக்காமல் அகரமுதலியில் எவ்வளவு அதிகப்படியான செய்திகளைச் சேர்க்க வேண்டுமோ அந்த அளவிற்குச் சேர்க்க வேண்டும். இவ்வடிப்படையில் உருவாக்கப்பட்டது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி.

பொதுவாக, அகரமுதலி உருவாக்குவோர் எந்தவகையான பின்னணியுடையோர்க்கு உருவாக்கப் போகிறோம் என்னும் நோக்கத்தை அடிப்படையாக வைத்தே பணி செய்கின்றனர்.

அகரமுதலித் தொகுப்பு குறிப்பிட்ட நோக்கத்தின் பேரில் அமைகின்றது. ஆகையால் மொழிச்சொற்கள் அனைத்தும் ஒரு மொழியில் தொகுக்கப்படும் அகரமுதலிகள் அனைத்திலும் இடம்பெறும் என்று சொல்லவியலாது. வரலாற்று நோக்கமல்லாமல் வேறு நோக்கத்திற்காகக் தொகுக்கப்படும் அகரமுதலிகளிலிருந்து வரலாற்றுக் குறிப்புகள் கிடைக்கும் என்று எதிர்பார்க்கவியலாது. ஒரு சொல்லைப் பற்றிய செய்திகள் அனைத்தையும் கொடுப்பது சிறப்பானது. இக்கால மொழியியல் அடிப்படையில் வரலாற்றுக் கோட்பாடுகளைக் கொண்ட அகரமுதலிகள் சிறப்பானவை என்று கருதப்படுகின்றன. இதில் சொல் பற்றிய செய்திகள் அனைத்தும் இடம் பெற்றிருக்கும்.

சொற்கள் வடிவம் (expression), பொருள் (content) என்னும் இரண்டு தன்மைகளுடன் மொழியில் இயங்குகின்றன. வடிவம் ஒழுங்கு முறையில் அமைந்த அமைப்பினைக் கொண்டது. ஒரு குறிப்பிட்ட வகையான ஒலிச்சேர்க்கையுடன் இருக்கும். அந்தச் சொல்வடிவம் பொருளை உணர்த்தும் திறத்துடன் மொழியில் செயல்படுகிறது.

1. அகரமுதலி, சொல் பற்றிய இன்றைய நாள்வரை கிடைக்கும் செய்திகளைக் கொண்டிருக்க வேண்டும்.

2. அச்செய்திகள் தெளிவாகவும், இயைபுடனும் விளக்கப்படவேண்டும்.

3. சிறிய அளவு முயற்சியில் அகரமுதலியைப் பார்ப்பவர்கள்கூட இந்தச் செய்திகளைப் பெறவேண்டும்.

அகரமுதலி இம்மூன்று தன்மைகளில் எவ்வளவு கவனம் செலுத்துகிறதோ அந்த அளவுக்கு அது சிறப்பானதாகக் கருதப்படுகிறது.

அகரமுதலி பொதுவகை அகரமுதலி என்றும், கலைக்களஞ்சிய அகரமுதலி (Encyclopaedia Dictionary) என்றும் இருவகைப்படும். கலைக்களஞ்சிய அகரமுதலி 1. இயற்பெயர், இடப்பெயர், இலக்கியம் ஆகியவற்றை உள்ளடக்கியதாகவும், 2. அறிவுத் துறையின் அனைத்துப் பிரிவுச் செய்திகளையும் உள்ளடக்கியதாகவும், 3. செய்திகளுக்கு விரிவான விளக்கங்கள் கொடுக்கப்படுவதாகவும் இருக்கும். கலைக்களஞ்சிய அகரமுதலி என்பது பொதுவகை அகரமுதலி, கலைக்களஞ்சியம் ஆகிய இரண்டும் இணைந்ததாகும். கலைக்களஞ்சியத்தில் இடம் பெறும் செய்திகள் இதில் இடம்பெறும். கொடுக்கப்படும் செய்திகள், செய்திகளைக் கொடுக்கும் வகை ஆகியனவும் அவ்விரண்டின் தன்மைகளைக் கொண்டதாக இருக்கும். உண்மையில் பொருள்வகை அகரமுதலி என்றும் கலைக்களஞ்சிய அகரமுதலி என்றும் பிரிப்பது இயலாது. ஒன்றன் தன்மை மற்றொன்றில் இருந்தே தீரும் என்கின்றனர் (Ram Adhar Singh 1982:13).

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி சொற்பொருள் தருவதும் மொழிச் சார்புடையதுமான மொழியகரமுதலி, மொழியுலகிற்கு அப்பால் உள்ளதும் சொல்லால் சுட்டப்படுவதுமான பொருள் (thing) குறித்துவருவதுமான கலைக்களஞ்சிய அமைப்பு ஆகிய இரண்டு தன்மைகளையும் ஒருங்கே கொண்டது. மொழியகரமுதலி நிலையில் வரலாற்று அகரமுதலி (diachronic), விளக்க அகரமுதலி (synchronic) ஆகிய இரண்டு பண்புகளையும் கொண்டது. சொற்பிறப்பு என்னும் அடிப்படையில் இது சொற்களின் வடிவம், பொருள் ஆகியவற்றின் வளர்ச்சி வரலாறு ஆகியவற்றிற்கு முதன்மை தரும் நிலையது.

இயற்பெயர், இடப்பெயர், இலக்கியங்கள், மாந்த அறிவுப்புலத்தின் அனைத்துப் பிரிவுச் செய்திகள், விளக்கமாகச் செய்திகளைத் தருதல் போன்றன கலைக்களஞ்சியச் செய்திகள் எனக் கொள்ளப்படு கின்றன. பொதுப்படையான அகரமுதலித் தன்மையுடன் கலைக்களஞ்சியச் செய்திகளை உள்ளடக்கி வருவது கலைக்களஞ்சிய அகரமுதலி. கலைக்களஞ்சியம் மொழியுலகிற்கு அப்பால் உள்ள கருத்துகளுக்கும் பொருள்களுக்கும் முன்னுரிமை தருகிறது. கலைக்களஞ்சியத்தின் மாந்த அறிவுப் புலத்தில் அனைத்துச் செய்திகளும் இடம்பெறும். இதில் வரலாற்றுக் குறிப்புகள், திணைப்படக் கூறுகள், சிறப்பு வாய்ந்தவர்களைப் பற்றிய வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள் போன்றனவும் இடம்பெறும். மொழி அகரமுதலி அல்லது பொதுப்படையான அகரமுதலியில் இடம்பெறும் பல உருப்படிகள் கலைக் களஞ்சியத்தில் இடம்பெறா. வரலாற்றுத் தொடர்பான செய்திகள் உருப்படிகளின் விளக்கம் ஆகியன கலைக்களஞ்சியத்தில் இடம்பெறும்.

கலைக்களஞ்சிய அகரமுதலி கலைக்களஞ்சியம், மொழியியல் அகரமுதலி ஆகிய இரண்டும் சேர்ந்தது. கலைக்களஞ்சியத்திற்குரிய உருப்படிகள் கலைக்களஞ்சிய அகரமுதலியில் இடம்பெறும். கலைக்களஞ்சிய அகரமுதலியில் இடம்பெறும் செய்திகள். செய்திகளை அளிக்கும் வகை ஆகியன அகரமுதலி, கலைக்களஞ்சியம் ஆகிய இரண்டின் அடிப்படையில் அமைந்திருக்கும்.

சிறிய அளவில் உருவாக்கப்படும் அகரமுதலி களிலும் இயற்பெயர், பண்பாட்டு உருப்படி பற்றிய விளக்கம் போன்ற கலைக்களஞ்சியச் செய்திகள் இடம் பெறுகின்றன.

மொழி அகரமுதலி முற்றிலும் சொற்களைப் பற்றியது. ஆகையால் அதைச் 'சொற்பொத்தகம்' என்றும் அழைக்கலாம். செடிகொடிகள், கலைப்பொருள்கள், பண்பாட்டுக் கூறுகள் ஆகியவற்றிற்குப் பொருள் வரையறை தரும்போது அகரமுதலி பெரும்பாலும் கலைக்களஞ்சியச் செய்திகளைத் தருகிறது.

கலைக் களஞ்சியத்தில் இடம்பெறும் செய்திகள் அனைத்தும் அகரமுதலியில் இடம்பெறுவதற்கு இடமில்லை. என்றாலும், பல அகரமுதலிகளில் இடம்பெற வேண்டிய செய்திகள் பல விடுபட்டுள்ளன என்று குறிப்பிடுகின்றனர். சான்றுக்கு 'ஞாயிறு' என்னும் கிழமையைக் குறிக்கும் சொல்லுக்குக் காரிக்கிழமைக்கும் திங்கள் கிழமைக்கும் இடைப்பட்ட நாள் என்று பொருள் கூறுவதுடன், இது ஒரு கோள் (சூரியன்) அடிப்படையில் பெயர் பெற்றது என்று கூறுவது மேலும் பொருள் தெளிவு ஏற்படுத்தும். அவ்வகையில் ஒரு கிழமையின் ஏழு நாள்களுக்கும் அடிப்படைகளாக இருக்கும் கோள்களை ஆங்காங்கே குறிப்பிட்டால் பொருள் தெளிவு பெறுவதாக இருக்கும்.

பேரகரமுதலி, சுருக்க அகரமுதலி, மாணவர் அகரமுதலி, கையடக்க அகரமுதலி ஆகிய பொதுப்படையான அகரமுதலிகளுள் பேரகரமுதலித் தொகுப்பிற்கு இன்றியமையாத இடம் தர வேண்டும். ஏனென்றால், சுருக்க அகரமுதலி, மாணவர் அகரமுதலி, கையடக்க அகரமுதலி போன்றவை பேரகரமுதலியை அடிப்படையாகக் கொண்டவை. பேரகரமுதலி மற்ற அகரமுதலிகளை அடிப்படையாகக் கொள்வதற்கு வாய்ப்பு இல்லை.

## சொற்பிறப்பு :

ஒரு சொல்லின் மூலம், வடிவாக்கம், வளர்ச்சி (the origin, formation and development of a word) என்று சொற்பிறப்பிற்குச் சுருக்கமாக வரையறை தருகிறது எருதந்துறை ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலி (C.T. Onions). தமிழில் இன்று வழக்கில் உள்ள சொல் எந்த மூல வடிவத்திலிருந்து வளர்ந்து வந்துள்ளது என்பதைக் காட்டுவதற்கு இவ்வகரமுதலி முயல்கிறது. திரவிட இனச்சொல் காட்டப்படுகிறது. பெரும்பாலான இடங்களில் தமிழ் வடிவமே திரவிடச் சொல்லுக்கு மூலமாக இருக்கிறது. இருந்தாலும் சில இடங்களில் தமிழ் வழக்கில் இல்லாத திரவிடக் குடும்பச் சொற்கள் இனமொழிகளில் காணக் கிடக்கின்றன. அவ்வாறான சொற்களை இனங்கண்டு அகரமுதலியில் இடம்பெறச் செய்வதற்கு இவ்வகரமுதலி முயல்கிறது.

பெரும்பாலும் சொற்பிறப்பியலாளர்கள் சொல் காலத்தால் முன்னர் வழக்குப் பெற்ற வடிவத்தையே மூல வடிவம் என்று கொள்கின்றனர். இது பெரும்பாலான இடங்களுக்குப் பொருந்துவதாக இருக்கலாம். ஆனால் இலக்கியத்தில் இடம்பெறாத பல சொற்கள் வழக்கில் இருக்கக்கூடும். இவ்வழக்குச் சொற்கள் காலத்தால் பழைய நிலையிலுள்ள இலக்கியத்தில் இடம்பெற்ற சொற்களுக்கு மூலமாகவும் அமையக் கூடும். ஆகையால் சொல்லின், முன்னர் வழக்குப்பெற்ற நிலை அதாவது இலக்கியத்தில் இடம்பெற்ற வடிவம் எல்லா இடங்களிலும் மூலமாக அமைவதற்கு வாய்ப்பு இல்லை. எவ்வாறாயினும் வேர் அடிப்படையில் சொல் வளர்ச்சியைக் காணும் முறையில் இவை எளிமையாக விளக்கப் பெறுகின்றன.

"அகரமுதலியில் இடம்பெறும் சொற்கள், பொருள்கள் ஆகியன அவற்றிற்கே உரியனவாக மிக அருகியே அகரமுதலித் தொகுப்பாளர்களால் விளக்கப்படுகின்றன. சொற்களையும் பொருள்களையும் ஒன்று திரட்டுவது மட்டும் மூலத்தன்மை பொருந்திய அகரமுதலியாகாது. அவற்றைக் கையாளும் முறை, வரிசைப்படுத்தும் ஒழுங்கு ஆகியனவே மூலத்தன்மை பொருந்திய அகரமுதலி என அழைப்பதற்கு ஏதுக்களாக அமைகின்றன" (Monier Williams 1981 : preface V). செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இவ்வறை யரையைக் கருத்திற்கொண்டு இயன்ற வரை மூலத்தன்மை பொருந்திய அகரமுதலியாக்க முனைந்துள்ளது. அதற்கு அகரமுதலி இயல் குறிப்பிடும் தன்மைகளைக் கையாண்டுள்ளது.

அடிப்படையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி அகரமுதலி அமைப்பைக் கொண்டது. கலைக்களஞ்சிய அமைப்பில் வடிவமைக்கத் திட்டமிடப்படவில்லை. இங்கு அதிக அளவில் தனிச் சொற்களும் கூட்டுச் சொற்களும் தனி உருப்படிகளாக இடம்பெற்றுள்ளன. அதே போல் மரபிணை மொழிகள்,

ஒலிக்குறிப்புச் சொற்கள் போன்றன இங்கு இடம் அளிக்கப்பெற்றுள்ளன. இவ்வாறான சொற்களின் பொருள்களைத் தருவதே அகரமுதலியின் அடிப்படைப் பொருண்மையாகும்.

இதில் கழகக் காலம் முதல் இன்று வரை தமிழில் வழங்கி வரும் சொற்கள் இடம் பெற்றுள்ளன. பழஞ்சொற்கள், புத்தாக்கச் சொற்கள், அரியதாகப் பயன்படுத்தும் சொற்கள் பெரும்பான்மையாகப் பயன்படுத்தும் சொற்கள், இலக்கியத்தில் மட்டும் இடம் பெற்றுள்ள சொற்கள், பேச்சு வழக்கில் மட்டும் பயன்படுத்தப்படும் சொற்கள் என்று அனைத்து வகைச் சொற்களும் இடம்பெற்றுள்ளன. அறிவியல், விளையாட்டு, தொழில்நுட்பம், அரசியல், மருத்துவம், பொருளியல் என்றாற் போன்ற பலதுறைப்பட்ட சொற்களும் இடம் பெற்றுள்ளன.

பிற மொழியிலிருந்து கடன்பெற்ற சொல் தன் வடிவத்தில் மாறிய தன்மையுடன் வழங்கி வரலாம். அவ்வாறான இடங்களில் மூல மொழியின் வடிவத்தையே கொடுக்க வேண்டும் என்று வலியுறுத்தலாகாது. அது மாறி வழங்கும் வடிவத்தைத்தான் கொடுக்கவேண்டும். பின்னர் வேர் விளக்கம் சொல்லும் போது மூலமொழியின் வடிவத்தைக் காட்டி அதினின்று திரிந்த வடிவம் வழக்குப் பெற்றுள்ளது என்று காட்ட வேண்டும்.

பிறமொழிச் சொற்களை அகரமுதலி உருப்படிக்குத் தெரிவு செய்யும் போது நுணுகி ஆராய்ந்து தெரிவு செய்ய வேண்டும். வழக்குச் சொற்கள் என்னும் பெயரில் பல அயன்மொழிச் சொற்கள் இடம் பெற்று விடுகின்றன. வழக்கு என்று சொல்வது சரியான வரையறை இல்லாமல் ஆளப்படுகிறது. முறைமன்றம், அலுவலகம் போன்ற இடங்களில் வழக்குச் சொற்களாக இருப்பவை பொதுமக்களிடையே வழக்குச் சொற்களாக இரா. அதேபோல் ஒரு காலத்தில் வழக்குச் சொற்களாக இருப்பவை பிறிதொரு காலத்தில் வழக்குச் சொற்களாக இரா. தமிழ்மொழியைப் பொறுத்த வரையில் இடைக்காலத்தில் வரம்பிறந்து வடமொழிச் சொற்களைக் கடன் கொண்டது. ஆனால் சென்ற நூற்றாண்டு முதல் அந்தப்போக்கு முற்றிலும் மாறிவருகிறது. வடமொழிச் சொற்களுக்கு இணையான இயன்மொழிச் சொற்களைப் பயன்படுத்துவதே ஊக்கம் பெற்று வருகிறது.

ஒரு மொழி பேசும் பொதுமக்களுக்குப் பெரும்பாலும் அம்மொழித் தொடர்பாகச் சிக்கல்கள் மிகுதியாக எழுவதற்கு வாய்ப்பு இல்லை. ஆகையால் அம் மொழிபற்றிய புத்தகங்கள் குறிப்பாக அகரமுதலிகள் அவ்வளவாகத் தேவைப்பட மாட்டா. ஆனால் பிற மொழியைக் கற்கும் போது அம்மொழித் தொடர்பாக எழும் சிக்கல்களை அவ்வப்போது அறிந்து கொள்ள அகரமுதலிகள் பெரிதும் துணைபுரிகின்றன.

அதே நேரத்தில் இலக்கியம் அமைந்த மொழிகளில் இலக்கியங்களால் ஆளப்பட்ட சொற்களுக்கு உரிய பொருள் பொது மக்களுக்குத் தெரிந்திருக்காது. அவ்வாறான இடங்களில் அகரமுதலிகள் பெரிதும் துணைபுரிகின்றன. இந்த வகையில் அருஞ்சொற் பட்டி என்று புத்தகத்தின் இறுதியில் இடம்பெறுமாறு செய்வது மேலை நாடுகளில் பன்னெடுங்காலமாக இருந்து வருகிறது.

"அகரமுதலிகள் சொற்களின் இரண்டு அடிப்படைத் தன்மைகளைக் கொண்டனவாக இருக்கின்றன. பயன்பாட்டுச் சொற்கள் (function words) மொழியில் பெயர், மாற்றுப் பெயர் என்பன போன்ற இலக்கண அமைப்புடன் இயங்குவது; இரண்டாவது பொருள் சுட்டும் சொற்கள் (referential words) மொழிக்குப் புறம்பாக உள்ள பொருள்களை விளக்குவது". இவ்விரு வகைகளும் உரியவாறு கையாளப்படவேண்டும். போதிய அளவு இலக்கணக் குறிப்புகள் தாங்கி இராத அகரமுதலிகள் பெரிதும் குறையுடையனவாகக் கருதப்படுகின்றன.

## மொழி மதிப்பீடு :

ஒரு மொழியைப் பேசுவோர் அனைவரும் மொழியின் செயற்பாட்டை முழுமையாக அறிந்திருப் பார்கள் எனக் கொள்ள இயலாது. பெரும்பான்மை மக்கள் எவ்வாறு மொழி இயங்குகிறது என்பதை அறியாதவர் களாக இருக்கின்றனர். அதே நேரத்தில் மொழிப் பயன்பாட்டில் இது சரி, இது தவறு என்பதை மக்கள் தெரிந்து வைத்திருக்கின்றனர். இது மொழி மதிப்பீடு சொற்களில் மட்டும் அடங்கி இராமல் பயன்பாட்டுச் சூழலைப் பொறுத்தும் அமைந்துள்ளது என்பதைக் காட்டுகிறது. சூழல், காலம், இடம், பண்பாடு போன்ற பண்புகளின் தன்மைக்கேற்ப அமையும். ஆகப்பொருள் தெளிவுக்கு மேற்கோள்கள் தந்து விளக்க வேண்டும். மேற்கோள் உரிய சூழலைக் காட்டி நிற்கும். அதனாலேயே பொருள் தெளிவுக்காக மேற்கோள்களுக்கு முன்னுரிமை தந்து விளக்குகின்றனர்.

பண்பாட்டு நிலை, செயற்பாட்டு வகை ஆகிய இரண்டில் முதலாவது கல்வித் தன்மைக்கேற்பவும் தனியொருவரின் பண்பட்ட தன்மைக்கேற்பவும் அமையும்.

செயற்பாட்டு வகை ஒரு குறிப்பிட்ட சூழலுக்கு ஏற்றவகையில் செயற்படும் தன்மையைப் பொறுத்து அமையும். பெரும்பாலும், செயற்பாட்டு வகையை மக்கள் நன்கு தெரிந்து வைத்திருக்கின்றனர். அதனாலேயே சூழலுக்கு ஏற்ப மொழியைப் பயன்படுத்தும் திறனை மக்கள் கொண்டிருக்கின்றனர். பண்பாட்டு நிலையில் ஒவ்வொருவருக்கும் வேறுபாடு உண்டு. ஆகையால் குறிப்பிட்ட சூழலில் கையாளும் சொல் அவரவர் பண்பாட்டு நிலைக்கேற்பப் பொருள் மாற்றம் கொண்டிருக்கவும் இடமுண்டு. எவ்வாறாயினும் இவ்விரு வகையில் பயன்படுத்தப்படும் சொற்களின் உரிய பொருள்களை அறிவதற்கு மேற்கோள்களே அடிப்படைகளாய் அமைகின்றன.

அகரமுதலியாளர்களுக்கு எவ்வகைச் சொல்லைத் தேர்ந்தெடுப்பது என்பதில் சிக்கல் ஏற்படுவது இயல்பு. நடைமுறையில் பழஞ்சொற்கள், வழக்கிழந்த சொற்கள், இப்போது வழக்கில் இல்லாத தொன்மையான சொற்கள், பழமைவாய்ப்பட்ட சொற்கள் என்றாற் போன்று பலவகைப்பட்ட சொற்கள் இருக்கின்றன. சிலர் தம் மொழித்திறமையால் பழமையான சொற்களை நினைவிற் கொண்டவர்களாகவும் இயல்பாகப் பயன்படுத்தும் திறன் உடையவர்களாகவும் இருப்பார்கள். சொல், மொழியின் ஒரு துறையினின்று இன்னொரு துறைக்கு எளிமையாகப் பயன்பாட்டுக்குச் செல்லும்.

கொச்சை வழக்கு பெரும்பாலும் சரியாகப் புரிந்து கொள்ளாததாக அமையும். ஒரு கட்டத்தில் நல்ல பொருளைக் கொண்டிருக்கும் சொல் பிறிதொரு கட்டத்தில் இழி பொருளைத் தரும். எ-டு: நாற்றம் நறுமணம்; இப்பொழுது முடைநாற்றம்.

சொல்லின் பொருள்கள் சிக்கலான வகைகளில் வளர்ந்து வந்திருக்கும் என்று குறிப்பிடுகின்றனர். அதுவும் நீண்ட கால வரலாறு உள்ள மொழிகளின் சொற்பொருள்களை உரியவாறு அறிவதற்கு அம்மொழியின் வரலாற்றினை அறிய வேண்டியிருக்கும். அதிலும், பழங்கால வரலாறுகளை அறிவதற்குப் பதிவுகள் கிடைக்கும் என்று சொல்ல இயலாது. இவ்வாறான நிலையில் சொல்லின் பொருளை வரையறுப்பதற்கு அகரமுதலியாளர் பெருமுயற்சி எடுக்க வேண்டியிருக்கும். பொருள் வரையறை மூலம் கொடுக்கப்படவேண்டும் என்பது ஏற்றுக்கொள்ளப்பட்ட நிலை. பொருள் வளர்ச்சி பயன்பாட்டுச் சூழலுக்கேற்ப இருக்கும். இந்நிலையில் அகரமுதலியாளருக்கு மக்கள் பயன்படுத்திய சூழலைக் கண்டறிந்து அதற்கு ஏற்றாற்போல் வரையறை தரவேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. இல்லையேல் பொருள் உரியதாக இராது. சில சொற்கள் உருவகமாகப் பயன்படுத்தப்படுவதால் பொருள்விரிவு ஏற்பட்டு விடுகிறது. எ-டு : மக்கள் உடலில் உண்பதற்கும் பேசுவதற்கும் பயன்படும் உறுப்பு வாய். இந்த வாய் ஆற்றின் வாய், குடத்தின் வாய் என்றாற்போன்று பிற இடங்களில் பயன்படுத்தப்படுகிறது. இதற்கு அடிப்படையாக அமைவது வாயின் பிளந்தது போல் திறந்திருக்கும் தன்மை. வாயின் செயற்பாடு, பண்பு ஆகியன பலவாறு அமையும். என்றாலும் இங்கு உருவகமாகப் பயன்படுத்தப்பட்டதற்கு அடிப்படைப் பண்பாகத் திறந்திருப்பது அமைகிறது. ஆகையால் பொருள் வரையறைக்கு இதுபோன்ற தன்மைகள் அனைத்தையும் கணக்கிற் கொள்ள வேண்டியது தேவையாகிறது.

வரலாற்று அகரமுதலி சொல்லின் வடிவம், பொருள் ஆகியவற்றின் வளர்நிலைகளைக் கொண்டதாக இருக்கும். இதில் வரும் பொருள் முறையொழுங்கு அதாவது பொருள் வளர்ந்த நிலை, பொருள்களுக்குள் காணப்படும் இயைபை வரலாற்று நோக்கில் காட்டி நிற்கும். இருந்தாலும், இது பொருள் வரையறைக்கு ஏதுவாக இருக்கும் என்று சொல்லவியலாது. நிலம் போன்ற பழைய சொற்களுக்கு அகரமுதலிகளில் தந்துள்ள பொருள் வரையறைகள் போதுமான அளவு இல்லை என்று குறிப்பிடுகின்றனர். வடிவம், நிலை ஆகியவை தொடர்பாக மக்களின் எண்ணம் பெரிதும் மாறி வந்திருக்கிறது. ஆகையால் ஏரண அடிப்படையில் தரும் முறையொழுங்கை ஏற்றுக் கொள்கின்றனர். எல்லா இடங்களிலும் இல்லை என்றாலும் பல இடங்களில், சொல் ஒரு நடுப்பொருளிலிருந்து வளர்ந்து வந்ததாக இருக்கும். வரலாற்று முறையொழுங்கு கடைப்பிடிக்கப்பட்டால் வழக்கிழந்த அல்லது தொல்சொல்லின் பொருள் முதலில் இடம்பெற நேரிடுகிறது. சில பரவலாகப் பரவிய அகரமுதலிகள் மிகவும் இன்றியமையாத பொருள்களை முதலாவதாகக் கொடுக்கின்றன. படிப்படியாக மிக அருகி வழங்கும் பொருள்கள் இடம் பெறுகின்றன.

அனைத்துச் சொற்களையும் நல்லமுறையில் வரையறுத்துக் கூறும் வகையில் எவ்வகை நெறிமுறையும் இதுவரை உருவாகவில்லை. ஆகையால் அகரமுதலித் தொகுப்பாளர் பல்வேறு முறையைக் கையாண்டு சொற்களின் பொருள்களைத் துல்லியமாகத் தரவேண்டி இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட பொருள் புலப்பாட்டு – வரையறைக்கு அகரமுதலித் தொகுப்பாளர் கட்டளை நெறியைக் காணவேண்டியிருக்கிறது. ஆனால் அவரால்

மேலும் அது தொடர்பான செய்திகளைத் தரமுடியும்; அது கலைக்களஞ்சியம் என்னும் நிலையை எட்டும் நிலை வராத வரை.

தமிழ் வளர்ச்சியில் அதன் தொடக்க நிலையிலிருந்து இன்றைய வழக்குவரை அது கொண்டுள்ள பொருள் மாற்றப் படிநிலைகளை முறையாகச் சொல்வதற்கு முயல்கிறது இந்த அகரமுதலி. பொருள் மாற்றம் அல்லது சார்புப் பொருள் வளர்ச்சி கொள்ளல் ஆகியன சில முறையொழுங்கைத் தழுவி வந்துள்ளன.

ஒரு சொல் புதியதாக ஒரு பொருளை ஏற்கும் போது சில நேரங்களில் பழைய பொருளை இழந்து விடுகிறது. சொல்லின் பழைய பொருளுக்கும் புதுப்பொருளுக்கும் பெரிய முரண்பாடு ஒன்றும் இராது. இவ்விருபொருள்களும் வெவ்வேறு சூழல்களில் பயன்படுத்தப் படுவனவாக இருக்கும். இரு பொருள்களின்று மேலும் பல பொருள்கள் வளர்வதுண்டு.

பொருள் மாற்றம் அல்லது வளர்ச்சி ஏரண அடிப்படையில் அமைந்திருப்பதைச் சற்றுக் கூர்ந்து நோக்கினால் அறிந்து கொள்ளலாம்.

எ–டு : புல்லுதல் = துளைத்தல். இவ் வினைச்சொல் வழக்கிறந்தது. புல் = உட்டுளையுள்ள நிலைத்திணை வகை, ஊனுண்ணா விலங்குணவான தாளுள்ள நிலத்திணை வகை, உட்டுளையுள்ள பனை, பனை வடிவான நாள் (அனுடம்), உட்டுளையுள்ள தென்னை, உட்டுளையுள்ள மூங்கில், புற்போன்ற கம்பம் பயிர், புல்லரிசி. (பாவாணர் 1973 : 101.)

## பொருள் வரையறை :

சொல்லுக்குச் சொல் (word to word) என்னும் அமைப்பில் பொருள் தருவது சிறப்பானதாகக் கருதப்படுவது இல்லை இவ்வகையில் அகரமுதலியைப் பயன்படுத்துவோர்க்குப் பயன்பாடும் மிகக் குறைந்த அளவே இருக்கும் என்கின்றனர். சொல்லுக்குப் பொருள் வரையறை தருவதே சிறப்பானது. வரையறை மூலம் பொருள் தருவது சொல்லைப் பற்றிய முழுச் செய்தியை அறிவதற்கு ஏதுவாக இருக்கும். பொருள் சூழலுக்கேற்ப வளர்ந்த நிலையை அறிய உதவும். மேலும், இதை விளக்கும் வகையில் சொற்றொடரில் பயன்படுத்திக் காட்டுவது சொல்லின் பொருளை முழுமையாக அறிய உதவும்.

ஒருமொழி அகரமுதலியில் சரியான பொருள் வரையறை தருவதற்குச் சற்று கூடுதல் கவனம் செலுத்த வேண்டிய தேவை இருக்கிறது. ஒருபொருள் பன்மொழிகள் பல இடங்களில் ஒரு சொல்லுக்குரிய பொருள்களாகக் கொடுக்கப்படுகின்றன. ஒரு சொல்லின் பொருள் முழுமையும் அச்சொற்கு ஒரு பொருள் பன்மொழியாக வரும் சொல்லால் காட்ட இயலாது. ஆகையால் சொல்லுக்கான பொருளை வரையறை மூலம் தருவதே சிறந்தது. பொருள் வரையறை சொல்லின் முழுப்பொருள் தன்மையைத் தருவதாக இருக்க வேண்டும். குன்றக் கூறுதல், மிகையாகக் கூறுதல் ஆகிய இரண்டு குற்றங்களும் பொருள் வரையறையில் இடம் பெறக் கூடாது. பொருள் வரையறை, சொல் சொற்றொடரில் இடம்பெறும் போது தரும் பொருளுக்கு ஒத்து வரவேண்டும். அகரமுதலியில் மேற்கோள் கொடுத்தாலும் கொடுக்காவிட்டாலும் அகரமுதலித் தொகுப்பாளர் சொல்லைச் சொற்றொடரில் பொருத்திப்பார்த்துப் பொருள் வரையறை தர வேண்டும். சொற்றொடரில் சொல்லைப் பொருத்திப் பார்ப்பது உரிய பொருள் வரையறை செய்வதற்குத் துணைபுரியும். பொருள் வரையறை எளிய சொற்களால் அமைய வேண்டும். பொதுவாகவும் நன்கு ஆட்சி பெற்றதாகவும் உள்ள சொற்களைக் கொண்டு பொருள் வரையறை தருவதே சிறந்தது.

இருமொழி அகரமுதலியில், சொல்லின் ஒருபொருட் பன்மொழி, வரையறை ஆகியவற்றின் மொழி பெயர்ப்பாக இரண்டாம் மொழியில் பொருள் தருகிறோம். ஒருமொழி அகரமுதலியில் ஒருபொருட் பன்மொழிகளைப் பொருள்களாகத் தருவதால் ஏற்படும் குறைபாடு இருமொழி அகரமுதலியில் இரண்டாம் மொழியின் பொருள் தருவதில் இராது. பொருளை உரிய மொழிபெயர்ப்பாகத் தருவது இரு மொழிகளிலும் மொழித்திறனை வளர்ப்பதாக இருக்கும்.

எளிய சொற்களுக்குக்கூடப் பொருள் தருவதற்கு பெருமுயற்சி எடுக்க வேண்டியதாக இருக்கும். பேச்சு மொழியில் பயன்படுத்தும் சில எளிய சொற்கள் அதிக அளவில் பொருள் விரிவினைக் கொண்டிருக்கும். அச்சொற் பொருள்கள் அனைத்தையும் பதிவு செய்ய வேண்டும் என்றால் பேச்சு மொழியைக் கவனிக்க வேண்டியது கட்டாயம் ஆகிறது. பேச்சு மொழியில் பல இடங்களில் சொல் உருவகமாக அல்லது புதியனவாகப் பொருள் விரிவினைக் கொண்டனவாக இருக்கும்.

## இலக்கணச் செய்திகள் :

மொழியின் இரண்டு வகையான சொற்களை அகரமுதலிகள் கொண்டியங்குகின்றன. 1. செயற்பாட்டுச்

சொற்கள் (function words). [சுட்டுகள் (articles), மாற்றுப் பெயர்கள், முன்னசைச்சொல் (prepositions), இணையடைச்சொல் (conjunctions) போன்று மொழியில் இலக்கணச் செயற்பாட்டைக் காட்டும் சொற்கள்]. 2. குறிப்பீட்டுச் சொற்கள் (referential words). இவ்வகைச் சொற்கள் மொழியமைப்புக்கு வெளியே உள்ளவற்றைக் குறித்துக் காட்டுவன. இந்த இருவகைச் சொற்களையும் உரிய முறையில் கொள்ள வேண்டும். பல அகராமுதலிகள் போதிய அளவு இலக்கணச் செய்திகளைக் கொண் டிருக்கவில்லை என்பதற்காகக் குறையுடையன எனக் கருதப்படுகின்றன. அகராமுதலிகளில் சொல்வகை (parts of speech) குறிக்கப்படுகிறது. ஆனால் சொல்லின் இலக்கணப் பண்புகள் எல்லாம் அகராமுதலியில் இடம்பெறும் என்று சொல்லவியலாது. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகராமுதலியைப் பொறுத்த வரையில் பெயர், வினை, இடை, பெயரெச்சம், வினையெச்சம் போன்ற இலக்கணத் தன்மைகள் குறிக்கப்படுகின்றன. வினைச்சொல்லின் செயப்படுபொருள் குன்றியவினை, செயப்படுபொருள் குன்றாவினை ஆகியனவும் காட்டப்படுகின்றன. வினைச்சொல் புடைபெயரும் வகை காட்டப்படுகிறது. எண்ணப்படாப் பெயர், நீர், காற்று போன்றவை பன்மைப்படுத்திக் காட்ட இயலாதவை. எண்ணப்படும் பெயர்கள் பன்மைப் படுத்திக் காட்டத்தக்கவை. இது போன்ற செய்திகளையும் சில அகராமுதலிகள் கொடுக்கின்றன. அதேபோல் ஒழுங்கற்ற முறையில் புடைபெயரும் வினை வகைகளையும் சில அகராமுதலிகள் கொடுக்கின்றன. சொல்வகைகள் அனைத்தையும் தனித் தனி உருப்படிகளாகக் கொடுப்பதே சிறந்தது என்று குறிப்பிடுகின்றனர்.

மொழியியலாளர்களிடையே சொற்களோடு தொடர்பு கொண்டிருக்கும் இலக்கணம் பற்றிக் கருத்து வேறுபாடு நிலவுகிறது. மொழிப் பாகுபாட்டில், மொழியை ஓர் ஒருங்கிணைந்த வடிவம் எனக் கொண்டால், இலக்கணம் நடுவமாக (மய்யமாக) இருக்கும். சொற்கள் (சொல் அலகுகள் lexical points) அந்தப் பகுப்பில் அங்கங்கே இணைக்கப்படுவனவாக இருக்கும். மற்றொரு வகைப் பகுப்பு, ஒலியனியல், தொடரனியல், சொற்களஞ்சியம் என்று ஒருங்கிணைந்த வகையில் கொள்ளப்படுகிறது. இயல்பாக அகராமுதலியாளர்கள், இலக்கணிகள் கண்டறிந்தவற்றைப் பயன்படுத்துவதற்கு முயற்சி மேற்கொள்ளவேண்டும் என்று குறிப்பிடு கின்றனர். அகராமுதலி (Dictionary) என்னும் சொல் பலவகையான குறிப்புதவி நூல்களைக் குறிக்கப் பயன்படுகின்றது. ஓர் அகராமுதலி சொற்களின் தொகுதியாகவும் அவற்றைப் பற்றிய செய்திகளைக் கொண்டதாகவும் விளங்குகிறது. அந்தச் சொற்களின் தொகுதி ஒரு மொழியில் தோன்றியுள்ள சொற்கள் அனைத்தையும் உள்ளடக்கியதாக இருக்கும். அல்லது அம்மொழிச் சொற்களின் ஒரு பகுதியைக் கொண்டதாக இருக்கும். அதில் மிகவும் குறைந்த எண்ணிக்கையுடைய சொற்கள் புத்தகங்களின் இறுதியில் கொடுக்கப்படும். இது அருஞ்சொற்பட்டி என்றழைக்கப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட எழுத்துப் பகுதிக்குச் சொற்கள் தொகுதி (index) ஆக விளங்கும் போது, ஒவ்வொரு பகுதிக்கும் பார்வைக் குறிப்பு (reference) கொண்டு விளங்கும் போது அது இயைபு (concordance) என்று அழைக்கப்படுகிறது. தெரிவியல் அடிப்படையில், ஒரு நல்ல அகராமுதலி, அதிக எண்ணிக்கையிலான இயைபுகளை ஒரு சேரக் கொண்டு தொகுக்கப்படுவதாகும். ஒரு சொற்றொகுதி இடப்பெயர்களைக் கொண்டிருக்கும் போது அது பதிவிதழ் (gazetteer) என அழைக்கப்படுகிறது. அகராமுதலி (lexicon) சொற்பட்டிப் பொத்தகத்தைக் குறிப்பிடுகிறது. மொழியின் அமைப்பலகுகளைக் குறிப்பனவாக அது விளங்குகிறது. இவ்வலகுகள் தனியாக இயங்க வல்லனவாக இருக்கலாம். தனியாக இயங்காமல் பிறவற்றோடு சேர்ந்தும் இயங்கவல்லனவாக இருக்கலாம்.

## கீற்று – ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரா முதலியில் குறிப்பிட்டுள்ள நெறிமுறைகள் (canons for etymology).

1. ஒரு சொல்லின் சொற்பிறப்பை ஆராய்வதற்குமுன் அதன் பழமையான வடிவத்தையும் பயன்பாட்டையும் உறுதி செய்ய வேண்டும். காலநிரல் (chronology) அடிப்படையில் அச்சொல்லைப் பார்க்க வேண்டும்.

2. வரலாறு, நிலவியல் ஆகியவற்றைப் பார்க்க வேண்டும். நேரடித் தொடர்பின் மூலமே கடன் வாங்கல் நடைபெறுகின்றது.

3. ஒலியியல் நெறிகளைப் பொருத்திப் பார்க்க வேண்டும்.

4. ஒரு மொழியில் அமைந்துள்ள இரு சொற்களில் சுருக்கம் அல்லது பிறமாற்றங்கள் இல்லை என்றால் குறைந்த அசையுடைய சொல் மூலமாக இருக்கும்.

5. ஒரு மொழியிலுள்ள ஒரே அளவுள்ள அசைகள் உள்ள இரு சொற்களுள் பழமையான சொல்லைக் காண்பதற்கு அம்மொழியின் முதன்மையாக அமையும் உயிரொலியைக் கணக்கிற் கொள்ள வேண்டும்.

6. ஒரு சொல்லின் ஒரு பகுதியைக் கொள்ளாமல் அதன் முழுமையான வடிவத்தைக் கொண்டே அச்சொல்லின் சொற்பிறப்பைக் காண வேண்டும். சொல் வடிவ மாற்றங்களைக் காண ஒலியியல் நெறிகள் மீறப்பட்டிருக்குமோ என்பதைக் கூர்ந்து பார்க்க வேண்டும்.

7. வெவ்வேறு ஒலியியல் நெறிகள் கொண்ட தொடர்பில்லாத மொழிச் சொற்களுக்கிடையே காணப்படும் மேற்போக்கான பொருள், வடிவம் ஆகியவற்றின் ஒற்றுமையைக் கொண்டு ஆராயலாகாது.

8. இருவேறு மொழிகளின் சொற்கள் ஒலியியல் நெறிக்கு அப்பாற்பட்டு ஒத்திருக்குமேயானால் அங்கு ஒன்று மற்றொன்றிலிருந்து கடன் வாங்கியிருக்க வேண்டும். உண்மையான இனச்சொற்கள் அனைத்திலும் ஒத்திருக்க வேண்டியது இல்லை.

9. ஒரு மொழிச்சொல் (ஆங்கிலச்சொல்) லின் இனச்சொல் அனைத்தையும் கொண்டு ஆராயாமல் அச்சொல்லுக்கு மட்டும் விளக்கம் அளிப்பது பயனற்ற முயற்சியாகும்.

சொல்லின் பழைய வடிவம், அச்சொல் வழங்கும் மொழியின் ஒலியியல் நெறி, குறுகிய அசை, முதன்மையான உயிரொலி, சொல்வடிவம் முழுமையையும் ஆய்வுக்குக் கொள்ளல், மேற்போக்காகக் காணும் ஒலி ஒப்புமையைக் கொள்ளாமை, இனச் சொற்களையும் ஆராய்தல் ஆகியவை ஒரு சொல்லின் சொற்பிறப்பை ஆராய்வதற்குத் தேவையானவை.

தமிழ்ச் சொற்களுக்கான வேர் விளக்கத்தை அறிவியல் அடிப்படையில் காட்டுவதற்குப் பெருமுயற்சி எடுக்க வேண்டும். அவ்வகையில் இதன் வெற்றி எந்த அளவிற்குச் சென்றுள்ளது என்பதை இனிவரும் அகரமுதலி வல்லுநர்கள்தான் அறிய வேண்டும். எவ்வாறாயினும் இது வருங்கால அகரமுதலி வல்லுநர்களுக்கு, குறிப்பாகச் சொற்பிறப்பியல் அகரமுதலி வல்லுநர்களுக்கு ஒரு வழிகாட்டியாக அமையும். இதில் காட்டப்பட்டுள்ள வேர்களுள் சில பொருத்தப்பாடு இல்லாதன என்று சிலர் கருதலாம். பொருத்தப்பாடு இல்லாத வேர்கள் எனக் கருதுவனவற்றிற்குச் சரியான வேர்கள் காண்பது நம் கடமைகளுள் தலையாயது.

தமிழில் இதுவரை வந்த அகரமுதலிகள் அனைத்தும் இந்தச் சொற்பிறப்பு அகரமுதலியின் வெற்றியில் பங்கு பெற்றுள்ளன. எவ்வளவு சிறிய அளவினவாக இருந்தாலும், சுருக்கமான செய்திகளைக் கொண்டிருந்தாலும் ஏதோ ஒருவகையில் அந்த அகரமுதலிகள் எல்லாம் சொற்பிறப்பியல் அகரமுதலிக்குத் துணை நின்றுள்ளன. சொற்றொகுப்புக்கு, பொருள் வரையறைக்கு இவற்றின் பங்கு குறிப்பிடத் தக்கது. வேர் காட்டும் அகரமுதலிகள் வேறு வகையில் வேர்காட்டியிருந்தாலும் அந்த வேர்கள் நமக்கு ஏதோ ஒரு வகையில் குறிப்புத் தர இருப்பதால் அவற்றின் பங்கும் ஏற்கத்தக்கதே.

திராவிடச் சொற்கள் அனைத்தும் ஓரசை வேர்களிலிருந்து வளர்ந்து வந்துள்ளன. அந்த வேர்களுடன் பின்னொட்டுகள் இணைந்து சொற்கள் உருவாகின்றன. ஆகையால் அதிக அளவில் பின்னொட்டுகள் இணைந்து சொற்பெருக்கத்திற்குத் துணை நிற்கின்றன. இந்த நெறிக்கு மாறாக இருப்பனவற்றைக் கூர்ந்து பார்க்க வேண்டும். இந்த நெறிகள் பின்பற்றப்படும் பொழுது இயல்பான சொல்வளர்ச்சியைக் காட்டுகின்றன [இரண்டு அல்லது இரண்டிற்கும் மேற்பட்ட கூட்டுச் சொற்கள் இணைந்து சுருங்கிவிடுகின்றன. அவ்வாறான இடங்களில் அந்தச் சொற்சுருக்கம் ஒரு சொல் போலவே காட்சியளிக்கும். எ–டு : அருகாமை. அருகு + அண்மை – அருகண்மை – அருகாமை]

ஒரு சொல்லுக்கு வேர் காண்பதற்கு முன் அச்சொல்லின் பழமையான வடிவத்தையும் அதன் பயன்பாட்டையும் காலந்தோறும் மாறிவந்துள்ள நிலையையும் காணவேண்டும். அச்சொல் மொழிக்குரிய சொந்தச் சொல்லாக இருந்தால் இன மொழிகளில் அச்சொல்லின் வரலாற்றைக் காண வேண்டும். கடன்பெற்ற சொல்லாக இருந்தால் நிலவியல் தன்மை, வரலாற்று நிகழ்வு ஆகியவற்றைக் கவனிக்க வேண்டும். கடன்பேறு இருமொழித் தொடர்பினால் ஏற்படுகிறது என்பதை மனத்திற்கொள்ள வேண்டும் (Skeat 1892 9).

செந்தமிழ்ச் சொற்பிறப்பியலின் அணுகுமுறை இந்த வரையறைக்கு ஒவ்வொரு படி நிலையிலும் பொருந்தி வருகிறது. சுட்டடியிலிருந்து சொற்கள் வளரும் நிலையைக் காணும் பாவாணர் வழியில் சொல்லின் பழைமையான வடிவம் ஆய்வுக்கு உள்ளடங்காமல் விடுபடுவதற்கு வாய்ப்பு இல்லை. கழகக் கால இலக்கியங்களிலிருந்து இக்கால வழக்குகள் வரை சொல்லின் படிநிலைகளைக் காட்ட முயல்வதால் சொல் காலந்தோறும் மாறி வந்துள்ள நிலை இங்குக் குறிக்கப்பெறும். தமிழியக் குடும்ப மொழிகளினின்று இனச்சொல் உரிய இடங்களில் காட்டப்படுவதால்

இம்மொழிக்குரிய இயற்சொல் தெளிவாகக் காட்டப்பெறும்.

ஒரு வேரினின்று வளர்ந்த சொற்களையெல்லாம் ஓரிடத்தில் காட்டும் தன்மையிலும் அகரமுதலி தொகுக்கலாம். இவ்வாறான அகரமுதலியில் ஒரு வேரிலிருந்து வளர்ந்த சொற்கள் ஒன்றன்பின் ஒன்றாகக் கொடுக்கப்படும். சொல்லின் வேரை முதன்மையாக அமையுமாறு செய்து அகரமுதலி தொகுப்பதால் ஒரு வேரிலிருந்து வளர்ந்த சொற்களை ஒரு குழுவாகக் காட்ட இயலும். இதனால் இயல்வரையறை சுருக்கமாக அமையும். மேலும், புரிந்து கொள்ளும் தன்மையும் எளிமையாக இருக்கும்.

வேருக்கு முதன்மையிடம் கொடுத்து உருப்படி ஒழுங்கு அமையுமாறு செய்வதில் சிக்கலுக்கும் இடமுண்டு. மாணவர்களும் புதிதாக அகரமுதலியைப் பயன்படுத்துவோரும் தாம் பார்க்க வேண்டிய சொல்லைக் காண்பதற்குப் பெருமுயற்சி எடுக்க வேண்டி இருக்கும். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி எல்லோருக்கும் பயன்படும் வகையில் தொகுக்கப்பட்டிருப்பதால் இங்கு அகரமுதலியொழுங்கு பின்பற்றப்பட்டுள்ளது. வேர் அடிப்படையில் சொல் ஒழுங்குகள் உருப்படிகளாக அமைக்கப்படவில்லை. சொற்பிறப்பு அகரமுதலியில் சொற்பிறப்புக்கு முதன்மையிடம் அளிக்க வேண்டும் என்று குறிப்பிட இடமுண்டு. என்றாலும், சொற்பிறப்பு அகரமுதலி என்பது பொதுப்படை அகரமுதலியுடன் சொற்பிறப்புக் கொடுக்கப்படும் என்னும் அமைப்பிலேயே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் வடிவமைக்கப்பட்டுள்ளது. அகரமுதலித் தன்மை இல்லாமல் வெறும் சொற்பிறப்புத் தரும்போது அவ்வாறு ஒரு வேரினின்று வளர்ந்த சொற்களை ஒரு குழுவாக ஒன்றன் பின் ஒன்றாகக் காட்ட இயலும். இவ்வமைப்பையே திரவிடச் சொற்பிறப்பு அகரமுதலி கொண்டுள்ளது.

கூட்டுச் சொற்களும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் தனித்தனி உருப்படிகளாகக் கொடுக்கப்பட்டுள்ளன. கூட்டுச் சொல்லின் முதல் சொல் அல்லது அடிப்படையானது எனக் கருதும் சொல்லின் கீழ் அதனோடு சேர்ந்து வரும் கூட்டுச் சொற்கள் அனைத்தும் கொடுக்கப்படும் முறையொழுங்கைச் சில அகரமுதலிகள் பின்பற்றி யுள்ளன. கிற்றல் கன்னட-ஆங்கில அகரமுதலி, பிரௌன் தெலுங்கு-ஆங்கில அகரமுதலி போன்றன இவ்வகை ஒழுங்கைப் பின்பற்றியுள்ளன. இவ்வாறு கொடுப்பதில் ஒரு சொல்லோடு வேறு சொற்கள் இணைந்து வருவது காட்டப் பெறுவதால் பொருள் தெளிவுக்கு இடமுண்டு. என்றாலும், புதியதாக அகரமுதலியைப் பயன்படுத்துவோர் தாம் பார்க்க வேண்டிய கூட்டுச் சொல்லை எந்தச் சொல்லின்கீழ்ப் பார்க்கவேண்டும் என்பதில் குழப்பம் எய்தும் நிலை உண்டு. மேலும், இவ்வாறானோர்க்குக் கூட்டுச் சொல்லைத் தனிச் சொற்களாகப் பிரித்துப் பார்க்கும் நிலையிலும் குழப்பம் எழ இடமுண்டு. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இவ்வாறான முறை யொழுங்கைப் பின்பற்றவில்லை. கூட்டுச் சொற்கள் உட்பட அனைத்துச் சொற்களையும் அகரவரிசையில் கொண்டுள்ளது. சில சொற்கள் நூற்றுக்கும் மேற்பட்ட கூட்டுச் சொற்களில் இடம் பெற்றுள்ளன. சான்றுக்கு 'அடி', என்னும் சொல்லோடு பிறசொற்கள் சேர்ந்து உருவாகும் கூட்டுச் சொற்கள் முந்நூறுக்கும் மேற்பட்டன. இவ்வளவு அதிகமான கூட்டுச் சொற்கள் ஒரு சொல்லோடு சேர்ந்து உருவானாலும் அவையனைத் தையும் அகரவரிசைப்படுத்தித் தரும் ஒழுங்கையே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி பின்பற்றியுள்ளது.

ஒரு சொல்லுக்கு அடுத்தடுத்து அதனோடு சேர்ந்து பிறந்த கூட்டுச் சொற்கள் வரும் பொழுது அச்சொற்களின் பொருள்களை முதலாவது இடம்பெற்ற சொல்லுடன் பொருத்திப் பார்த்துத் தெளிவு பெறலாம். ஆனால் சில இடங்களில் கூட்டுச் சொற்கள் அகரவரிசையில் முதலாவதாக இடம்பெறும். முதற்சொல் அதனோடு சேர்ந்து உருவான கூட்டுச் சொற்கள் வரிசைக்குப் பின்னர் வருவது உண்டு. எ-டு : அஞ்சறைப் பெட்டி, அஞ்சாங்குலத்தான் போன்ற சொற்கள் வந்த பிறகே அஞ்சு (ஐந்து) வருகிறது.

## சொற்கள் தேர்ந்தெடுத்தல் :

தமிழ் மொழியில் பயன்படும் சொற்கள் அனைத்தும் இங்கு இடம்பெற வேண்டும் என்னும் அடிப்படையில் சொற்றொகுப்பு மேற்கொள்ளப்படுகிறது. அதே நேரத்தில் கொச்சை, கடுந்திரிபு ஆகியன நீக்கப்படுகின்றன. சொற்களின் ஆக்கத்திரிபுகள் (derivatives) உட்படுத்தப்படுகின்றன. தமிழில் இதுவரை வெளிவந்த அகரமுதலிகள் சொற்றொகுப்புக்குப் பெரிதும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. குறிப்பாகச் சென்னைப் பல்கலைகழக தமிழ்-தமிழ்-ஆங்கில அகரமுதலி, சாம்பசிவம் மருத்துவ அகரமுதலி ஆகியவை சொற்றொகுப்புக்குப் பெரிதும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. வழக்கில் இல்லாத இறந்துபட்ட மொழியின் அகரமுதலி

அம்மொழிச் சொற்கள் அனைத்தையும் கொண்டிருக்கும். இறந்துபட்ட மொழியில் புதுச்சொல் ஆக்கத்திற்கு இடமிருக்காது. இறந்துபட்ட மொழிகளின் அகரமுதலி அல்லாத பிற மொழி அகரமுதலியில் அம்மொழிச் சொற்கள் அனைத்தும் இடம் பெற்றிருக்கும் என்று சொல்லவியலாது.

## வரையறை :

சொல் என்பதைக் குறிப்பிட்ட பொருளுடனும் குறிப்பிட்ட ஒலித் தொகுதியுடனும் குறிப்பிட்ட இலக்கணத் தன்மையில் ஆளப்படுவது என்று வரையறுக்கலாம். சொல்லின் இந்த மூன்று தன்மைகளையும் அகரமுதலி தெளிவாகக் காட்டுவதாக இருக்க வேண்டும்.

இயன்ற மட்டும் வரையறை சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளது. சொல்லை அடையாளம் கண்டு கொள்ளும் வகையிலும் அதன் இலக்கண வகைமையை (part of speech) அறிந்து கொள்ளும் வகையிலும் பொருள் வரையறை கொடுக்கப்பட்டுள்ளது.

## மொழி :

அடிப்படையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் பிறமொழிச் சொற்களுக்கு இடம் இல்லை. என்றாலும், முதல் சொல் தமிழ்ச் சொல்லாக இருந்து அடுத்து வருவன பிறமொழிச் சொல்லாக அமையும் கூட்டுச்சொல் இவ்வகரமுதலியில் இடம் பெறுவதால், கூட்டுச் சொல்லின் இரண்டாவதாக அல்லது அடுத்தடுத்ததாக அமையும் பிறமொழிச் சொற்கள் அவ்வம் மொழிக் குறியிட்டுக் காட்டப்பெறும்.

## வரலாறு :

சொற்களின் வரலாறு சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளது. இதைக் கொண்டு சொல்லின் காலத்தை அறிந்து கொள்ளலாம். சொல்லின் காலப் பழமை அறிந்து கொள்வது இதன் நோக்கத்துள் ஒன்று. முடிந்தவரையில், பழைமையான இலக்கியங்களிலிருந்து மேற்கோள்கள் தரப்பட்டுள்ளன. இது இவ்வகரமுதலியின் ஒரு குறிப்பிடத்தக்க இன்றியமையாத பணி என்று குறிப்பிடலாம். இவ்வமைப்பைக் கொண்டு ஒரு சொல்லின் ஆக்கக் காலத்தை உறுதி செய்து கொள்ளலாம். ஒரு சொல் எந்தக் காலத்திலிருந்து வழக்கத்திற்கு வந்துள்ளது என்பதைக் குறிப்பது அகரமுதலியின் நோக்கம் அன்று. என்றாலும் ஒரு குறிப்பிட்ட சொல்லின் ஆக்கக் காலத்தை அறிவது அச்சொல்லாட்சியின் தேவை, அது உணர்த்தும் பண்பாட்டுக் கூறு, வரலாறு முதலியனவற்றைக் காட்டுவதாக இருக்கும். இது ஆராய்ச்சியாளர்களுக்குப் பயன்படத் தக்கது. குறைந்தது சொல் மொழியில் வழக்குப் பெற்ற நூற்றாண்டுக் காலத்தைக் குறிக்க வேண்டும். பல சொற்களில், போதிய குறிப்புகள் கிடைக்காததால் இவ்வாறு குறிக்க இயலாமல் போகிறது. எவ்வாறு இருந்தாலும் மொழியில் ஒரு சொல் வழக்குப் பெற்ற–பழமையான காலத்தைக் குறிப்பிடுவது– அச்சொல்லைப் பற்றிய செய்திகளை அறிவதற்கு ஏதுவாக இருக்கும்.

## குறிப்புதவி : (reference)

சென்னைப் பல்கலைக் கழக அகரமுதலியும், சாம்பசிவம் மருத்துவ அகரமுதலியும் அதிக அளவில் குறிப்புதவிகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. முன்னர் வந்த அகரமுதலிகளின் சொற்கள் எல்லாம் பெரும்பாலும் சென்னைப் பல்கலைக் கழக அகரமுதலியில் இடம் பெற்றுள்ளன. ஆகையால் சென்னைப் பல்கலைகழக அகரமுதலிக்கு முன் வந்த அகரமுதலிகளைக் குறிப்பிடுவது மிகை. அதே நேரத்தில் சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலி வெளிவந்ததற்குப் பின்னர் வந்த அகரமுதலிகள் பல புதிய உருப்படிகளைக் கொண்டுள்ளன. அவ்வகையில், கிரியா தமிழ் ஆங்கில அகரமுதலி பல புதிய சொற்களையும், நல்ல பொருள் வரையறைகளையும் கொண்டுள்ளது.

பெரும்பான்மையான மேற்கோள்கள் சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலியிலிருந்து எடுக்கப் பட்டுள்ளன. அத்துடன் பல இடங்களில் கூடுதல் மேற்கோள்கள் கொடுக்கப்பட்டுள்ளன. உலக வழக்கிலிருந்தும் பல இடங்களில் மேற்கோள்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

## வேர் :

கருத்தடிப்படையில் சொல்லுக்கு வேர் காண்பது பாவாணர் நெறி. அவ்வகையில் அனைத்துச் சொற்களுக்கும் வேர் கொடுக்கப்பட்டிருத்தலே சிறப்பு. ஆனால் பல அடிப்படைச் சொற்களுக்கு வேர் காட்டப் பெறவில்லை. அச்சொற்கள் இயன்மொழிச் சொற்கள் என்பதில் ஐயம் இல்லை. அவற்றுள்ளும் பல சொற்கள் பெயராகவும் வினையாகவும் செயற்படும் பண்பினைக் கொண்டு இயல்புத் தன்மைகளைக் கொண்டவை. இருந்தாலும் அவற்றின் கருத்து வழி ஆக்கத்தைக் காண

வாய்ப்பு குறைவாக இருந்ததால் – அவை தாப்படவில்லை. ஆனால் இக்குறைகள் யாவும் இனிவரும் பதிப்புகளில் நீக்கப்படவேண்டும். செந்தமிழ்ச் சொற்பிறப்பியலில் இடம் பெறும் சொற்கள் அனைத்திற்கும் கட்டாயம் வேர் இடம்பெற்றிருக்க வேண்டும். இப்பொழுது பெரும்பாலான சொற்களுக்கு வேர் காட்டப் பெற்றுவிட்டதால் விடுபட்ட அந்தச் சொற்களுக்கு வேர் காட்டுவது இனி அவ்வளவு இடரார்ந்ததாக இருக்காது என்று கொள்ளலாம்.

மொழிப் பயன்பாட்டில் இருக்கும் பெரும் பான்மையான சொற்கள் வேர் – கருத்து (root - concept) அடிப்படையில் உருவான மூலத்தன்மையோடு மட்டும் வழக்கில் இல்லை. பல்லாயிரக்கணக்கான வழக்குச் சொற்கள் வேர் – கருத்துடன்ஆக்கவுறுப்புகள் சேர்ந்து உருவானவையாக இருக்கின்றன. அவ்வகையில் மொழியில் உள்ள சொற்கள் 1. வேர் – கருத்து அடிப்படையில் வழக்கில் இருக்கும் வடிவங்கள், 2. வேர் – கருத்துடன் ஆக்கவுறுப்புகள் சேர்ந்து வழக்கில் இருக்கும் வடிவங்கள் என இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். இரண்டாம் வகைச் சொற்கள் எண்ணிக்கையில் மிகப் பலவாக இருக்கின்றன. தமிழ் ஒரு ஒட்டு நிலை மொழியாதலால் அதில் ஆக்க உருபுகள் எல்லாம் பின்னொட்டுகளாக வேருடன் இணைகின்றன. ஆகையால் எளிதில் ஆக்கவுருப்புகளைப் பிரித்து சொல்லின் வேர் வடிவத்தைக் காணலாம்.

### இனச்சொல்

குடும்ப மொழிகளினின்று காட்டப்பெறும் இனச்சொற்கள் மேற்கொண்டு தெளிவுபடுத்துவதற்கு உதவுகின்றன. சொல்லின் வேர் காண்பதற்கு இனச்சொல் அவ்வளவாக உதவாது. என்றாலும், தமிழ் திரவிடக் குடும்ப மொழிகளுள் பழமையான மொழியாக இருப்பதாலும் திராவிடக் குடும்பச் சொற்களின் வேர்கள் பலவற்றைத் தமிழ் காட்டுவதாக இருப்பதாலும் இனச் சொற்களின் உதவி இல்லாமலேயே வேர்காட்ட முடியும். சில இடங்களில் இனச் சொற்களின் ஆட்சி தமிழில் வழக்கிழந்த பொருள், வடிவம் ஆகியவற்றைக் காட்டுவனவாக இருக்கின்றன. அவ்வகையில் இனச்சொற்களின் பங்கு சில இடங்களில் குறிப்பிடத் தக்கதாக இருக்கிறது. எவ்வாறாயினும் இனச் சொற்கள் கொடுக்கப்பட்டுள்ளதால் சொல்லைப் பற்றிய விளக்கங்கள் மேலும் தெளிவுபடுவனவாக இருக்கின்றன.

### கலைச்சொல்

துறை சார்ந்த கலைச்சொற்கள் ஒரு மொழியின் சொற்களஞ்சியத்தில் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றன. கலைச்சொற்கள் மொழி வளர்ச்சிக்குப் பெரிதும் உதவுகின்றன. கலைச்சொற்கள் பெரிதும் துறை சார்ந்தனவாக அமையும் அகரமுதலிகளில் இடம் பெறுகின்றன. பொதுப்படையான அகரமுதலிகளில் கலைச்சொற்கள் மிக அருகியே இடம் பெறுகின்றன. சொற்பிறப்பு அகரமுதலியில் கலைச் சொற்களுக்குப் பெரும்பங்கு கிடையாது. என்றாலும் சில இன்றியமையாத கலைச்சொற்கள் சொற்பிறப்பு அகரமுதலியில் இடம் பெறுவதைத் தவிர்க்க இயலாது. நுண்ணிய பொருள்களைக் குறிக்கும் ஒரு துறையைச் சார்ந்த கலைச்சொற்கள் சொற்பிறப்பு அகரமுதலிக்குத் தேவையற்றனவாக இருக்கலாம். ஆனால் பொதுவான பயன்பாட்டில் உள்ள கலைச்சொற்கள் சொற்பிறப்பு அகரமுதலியில் இடம்பெறுகின்றன. அவ்வகையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி ஒரு சில கலைச்சொற்களைக் கொண்டுள்ளது. அகராதியைக் குறிக்கும் அகரமுதலி என்னும் கலைச்சொல் சென்ற நூற்றாண்டில் உருவாக்கப்பட்டது. அது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் தலைப்பிலேயே இடம் பெற்றுவிட்டது இங்கு நினைவுகூரத்தக்கது. மீன்பிடி தொழில், தச்சுத் தொழில் போன்ற துறைகளைச் சார்ந்த கலைச்சொற்களும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் இடம் பெற்றுள்ளன.

அகரமுதலிகள் பொதுமக்களுக்குப் பயன்படும் பொதுவகை அகரமுதலி (General Purpose Dictionary), புல மக்களுக்குப் பயன்படும் அறிஞர்கள் அகரமுதலி (Scholarly Dictionary), அறிவுப் புலத்தின் சிறப்பான ஒரு பிரிவினைக் காட்டும் வகையில் அமையும் சிறப்பு அகரமுதலி (Specialised Dictionary) என்று பலவகைகளில் உருவாக்கப்படுகின்றன.

பொதுவாக அகரமுதலி, சொற்பிறப்பு அகரமுதலி ஆகிய இரண்டினையும் ஒருங்கே கொண்டது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி. இதனுடன் கலைக் களஞ்சியத் தன்மைகளும் இதில் இடம் பெற்றுள்ளன.

இன்றுள்ள தமிழ்ச் சொற்களுள் பெரும்பாலான வற்றின் காலத்தை தொல்காப்பியர் காலம் வரை கொண்டு சென்று ஏறக்குறைய மூவாயிரம் ஆண்டுக்கு முந்தியனவாக அவை இருப்பதைக் காட்டலாம். ஆனால் அவற்றின் உண்மையான மூலமும் வளர்ச்சியும் வரலாற்றுக்கு முந்தைய காலத்தன; மிகவும் பழமை வாய்ந்தன.

[இந்தோ ஐரோப்பிய இனச் சொற்களிடையே காணப்படுவது போல்] திரவிட இனச்சொற்களுக் கிடையே அதிகப்படியான வேற்றுமை காணப்படுவது இல்லை.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய காலத்தினவான சொற்கள் பழந்தமிழ்ச் சொற்கள் எனக் குறிக்கத்தக்கன. கழகக் கால இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள சொற்களை இவ்வகையினவாகக் கொள்ளுதல் சரியானதாக அமையும். இந்த இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள சொற்களுள் பெரும்பாலானவை இன்றளவும் புழக்கத்தில் உள்ளன. இவ்வாறான சொற்கள் அல்லாமல், இன்றைய புழக்கத்தில் இல்லாமல், பழந்தமிழ் இலக்கியத்தில் மட்டும் இடம்பெற்றுள்ள சொற்கள்பால் கவனம் செலுத்தவேண்டியது தேவை. அவற்றை உரியவாறு பதிந்து வைக்கவில்லை என்றால் அவை வழக்கிழந்து போவதற்கும் இடமுண்டு.

பழந்தமிழ்ச் சொற்கள் எவ்வகை மாற்றமும் இல்லாமல் இன்றுவரை அப்படியே பயன்படுத்தப்படும் சொற்கள் ஒருவகை. பழந்தமிழ்ச் சொற்கள் திரிந்து வழங்கும் சொற்கள் மற்றொருவகை.

கருத்தடிப்படையில் பாவாணர் காட்டும் வேர்கள், அவர் நெறியைக் கடைப்பிடித்துக் காட்டப்பட்டுள்ள வேர்கள் இருக்கின்ற சொற்கள் (இனச் சொற்கள் உள்பட) அனைத்தையும் வைத்து மீட்டுருவாக்கம் செய்யப்பட்டவை எனக் கொள்ளவேண்டும். மேலும் இவ்வகை வேர்கள் வரலாற்றுக் காலத்திற்கு முந்தியவை.

## சொற்கள் காட்டும் பொருள்மாற்றம்

ஒரு மொழி வளர்ச்சியில் அதன் தொடக்கக் கால நிலையிலிருந்து இன்றைய வழக்குவரை ஏற்பட்டுள்ள பொருள் மாற்றத்தின் படிநிலைகளை வரிசைப்படுத்திச் சொல்வது மிகவும் கடினம். பொருள் மாற்றத்தைப் பற்றிச் சொல்வது தேவையற்றது என்றும் சிலர் கருதுகின்றனர். பொருள் மாற்றத்தை, மொழியின் பிறவிடங்களில் காணப்படும் ஒலியன் இலக்கணம் போன்றவற்றின் தன்மையைப் போல் தனியாக ஆராயத் தேவை இல்லை எனக் கருதுகின்றனர். இருந்தாலும் பொருள் மாற்றத்தால் சில முறையொழுங்கைக் காணமுடியும். மாற்றத்தில் பல வகைகளைக் காணமுடியும்.

மக்கள் மனமே பொருள் மாற்றத்திற்கு அடிப்படையான காரணம். ஆகையால் ஒரு குறிப்பிட்ட சூழலில் பொருள் மாற்றம் எவ்வகையில் மாற்றம் பெறும் என்பதை முன்கூட்டி சொல்ல இயலாது. அதாவது பொருள் மாற்றத்தைப் பற்றி உறுதியான நெறிகள் எதையும் குறிப்பிட இயலாது. ஆனால் பொருள் மாற்றம் ஏற்பட்ட பின்னர் விளக்க இயலும். பொருள் மாற்றத்தினைப் பலவகையாகப் பகுத்துப் பட்டியல் இடமுடியும். அனைத்துப் பொருள் மாற்றங்களையும் 1. பொருள் விரிவு, 2. பொருள் சுருக்கம், 3. மாறி வழங்குவது என்ற மூன்று பிரிவுக்குள் அடக்கலாம்.

ஒரு சொல்லுக்கு ஒரு பொருள் என்னும் வகையில் இருக்கும் சொற்கள் மிகச்சில. இவ்வாறு அமைவது, பொதுவாக அறிவியல், தொழில் நுட்பக் கலைச் சொற்களாக இருக்கும். ஒரு சொல் புதியதாக ஒரு பொருளை ஏற்கும் போது சில நேரங்களில் பழைய பொருளை இழந்துவிடுகிறது. அவ்வகையில் இன்று வழக்கில் உள்ள சொற்களுள் பல தம் பழங்காலப் பொருள்களை இழந்துள்ளன. சில சொற்களின் பழைய பொருள்கள் இலக்கியம் போன்றவற்றில் பதியப் பெற்றனவாக இருக்கின்றன. அழிந்து போன பதிவுபெறாத சொற்களின் பழைய பொருள்களை அறிய இயலாது. இருந்தாலும் ஏரண அடிப்படையில் சில சொற்களை மீட்டுருவாக்கம் செய்வது போல் சொற்கள் உணர்த்தும் பொருள்களையும் மீட்டுருவாக்கம் செய்கின்றனர்.

ஒரு சொல்லின் பழைய பொருளுக்கும் புதுப் பொருளுக்கும் பெரிய முரண் இருக்காது. பழைய பொருளும் புதுப்பொருளும் ஒவ்வொரு சூழலுக்குப் பொருந்துவனவாக இருப்பதால் குழப்பத்திற்கு அங்கு இடம் இல்லை. இவ்வாறான சூழலில் ஒரு சொல்லின் இரண்டு அல்லது இரண்டிற்கும் மேற்பட்ட பொருள்களும் வழக்கில் இருக்கும். இப்பொருள்களும் மேலும் பலவாகப் பிரிந்து பல பொருள்களைத் தருவதற்கும் இடமளிக்கும்.

கொம்பு என்னும் சொல்லுக்கு எருது, ஆடு, எருமை போன்றவற்றின் தலையில் இருக்கும் கூரியதும் நீண்டிருப்பதுமான உறுப்பு என்னும் பொருள் உண்டு. பழம் இலக்கியக் காலத்திலேயே இச்சொல் ஒருவகை இசைக் கருவி என்னும் பொருளையும் ஏற்றுக் கொண்டுள்ளது. பிறகு மாழைகளால் செய்த இசைக் கருவி என்னும் பொருளையும் இச்சொல் ஏற்றுள்ளது. பிறகு இச்சொல் இக்காலத்தே கன்னெய்யில் ஓடும் வண்டி போன்றவற்றில் பொருந்தியிருக்கும் ஒலியெழுப்பும் கருவியையும் குறிக்கிறது. உண்மையில் இவ்வாறான வெவ்வேறு பொருள்களை அச்சொல் கொண்டிருப்பதால் குழப்பம்

ஏற்படவில்லை இப்பொருள்கள் அனைத்தும் தமக்கெனத் தனியான சூழல்களைக் (characteristic) கொண்டுள்ளன.

இச்சொல் மேலும் பல பொருள்களைக் கொண்டுள்ளது. பூச்சி, நத்தை போன்றவற்றில் வளர்ந்திருக்கும் உறுப்பு, பறவை வகைகளில் வளர்ந்திருக்கும் இறகுக் கற்றை (tufts of feathers) ஆகியனவும் கொம்பு என்று குறிக்கப்படுகின்றன.

ஒரு சொல் பல பொருள்களைத் தாங்கி நிற்பது பொதுவான தன்மைதான். பெரும்பாலான சொற்கள் ஒன்றுக்கும் மேற்பட்ட பொருள்களைக் கொண்டிருக்கும். ஒரு சொல்லின் பொருள்கள் ஏதோ ஒரு வகையில் தொடர்பு கொண்டனவாக இருக்கும். இதனை ஒரு சொல் பல பொருள்கள் (polysemy) என்பர். சில சொற்கள் புதுப் பொருள்கள் குடும்பத்தை (family of meaning)த் தோற்றுவிக்கின்றன. ஒவ்வொரு புதுப்பொருள்களும் மேலும் மேலும் புதுப்பொருள்கள் உருவாக்கத்திற்குத் தொடக்கமாக அமைந்து விடுகின்றன. வரலாற்று அடிப்படையில் தொகுக்கப்படும் அகரமுதலிகளில் முதலில் உருவான பொருள்கள் முன்னர் இடம்பெறும்.

விலங்குக் கொம்பினில் துளையிட்டுப் பழங்காலத்தில் ஒலியெழுப்பியிருப்பர். அல்லது ஒலியெழுப்பப் பயன்படுத்திய கருவி விலங்குக் கொம்பு வடிவத்தில் இருந்திருக்கும். அதனால்தான் பின்னர் மாழைகளால் செய்த கருவியும் கொம்பு என அழைக்கப்பட்டது. முன்னர்க் குறிக்கப்பட்ட பொருள் வளர்ச்சி வழக்கில் நிலைபெறவில்லை என்றால் இரண்டாவதாக உருவான பொருள் தோன்ற வாய்ப்பில்லை. ஆகையால் பொருளின் வளர்ச்சி ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொண்டிருக்கும். இவ்வாறு வளர்ச்சியடைந்த பொருள்களை ஆய்ந்தால், அவற்றிற்கிடையே ஒருவகைக் கருத்தோட்டம் இணைந்து செல்வதைக் காணலாம்.

சொல் உருவானது பொருளைத் தெரிவிக்கவே. எவ்வகையானும் பொருளை உணர்த்தாத நிலையில் சொல் தோன்றாது. அதனால்தான் எல்லாச் சொல்லும் பொருள் குறித்தன என்று சொல்லுக்கு இலக்கணம் தருகின்றனர்.

ஒரு சொல்லுக்கு ஒரு பொருள் என்னும் நிலையை மொழிவழக்கில் மிகக் குறைந்த சொற்களில்தான் காண முடியும். பெரும்பாலும், இவ்வாறான சொற்கள் அரிதிற் பயன்படுத்துவனவாக இருக்கின்றன. அடிக்கடி பயன்படுத்தப்படும் சொற்கள் பல பொருள்களை ஏற்றுக் கொள்கின்றன. அவற்றுள்ளும் சில சொற்கள் நூற்றுக்கணக்கான பொருள்களைக் கொண்டுவிடுகின்றன. ஒரு சொல் கொண்டுள்ள பொருள்கள் யாவும் ஒரே நேரத்தில் ஏற்பட்டன அல்ல. காலவோட்டத்தில் ஒவ்வொரு பொருளாகச் சேர்ந்துதான் பல பொருள்கள் ஒரு சொல்லுக்குச் சேர்கின்றன. ஒரு சொல் பல பொருள்கள் பெற்றிருப்பதற்கு நாகரிக வளர்ச்சி. பல கருத்துகளைத் தெரிவிக்க வேண்டிய பண்பாட்டுத் தேவை, புதுப்பொருள்களையும் கருத்துகளையும் குறிக்க வேண்டிய தேவை ஆகியன காரணங்களாக அமைகின்றன.

ஒரு சொல் கொண்டிருக்கும் பல பொருள்களைக் கண்டறிவதில் அகரமுதலித் தொகுப்பாளர்க்குப் பெரும் பங்கு உண்டு. இலக்கியங்களில் இடம் பெற்ற குறிப்பிட்ட ஒரு சொல்லின் பல பொருள்களை அச்சொல் இடம்பெற்ற ஆட்சிகளைக் கொண்டு அறிந்து கொள்ள இயலும். ஆனால் பேச்சு மொழியில் பயன்படுத்தப்படும் ஒரு குறிப்பிட்ட சொல்லின் பல பொருள்களைக் கூர்ந்து நோக்கித்தான் அறியவேண்டும். இயல்பாக அன்றாட வாழ்வில் பயன்படுத்திவரும் சொற்கள் பல அதிக எண்ணிக்கையிலான பொருள்களைக் கொண்டுள்ளன என்பது பலருக்குப் புலப்படுவது இல்லை. பேசும்போது பயன்படுத்தும் சொற்களில் பொதிந்துள்ள பொருள்களின் எண்ணிக்கையை அறியாமலேயே அவற்றைப் பயன்படுத்துகின்றனர். சூழல் நோக்கியே சொல்லின் வெவ்வேறு பொருளை அறிந்து கொள்ள வேண்டும்.

சொற்பொருள் வரலாறு பொருளனியலில் இன்றியமையாத இடத்தைப் பெறுகிறது. பொருள் மாற்றத்திற்குரிய காரணம் மொழியியல் தொடர்பானதாகவோ, மொழியியல் அல்லாததாகவோ இருக்கலாம். உளவியல், குமுகாயவியல் போன்றவற்றின் காரணமாகவும் பொருள் மாற்றங்கள் ஏற்படுகின்றன.

மொழியியல் அடிப்படையில் சொற்பொருள் மாற்றங்களை ஆராய்பவர்கள் மொழியியல் அல்லாத தன்மைகளின் இன்றியமையாமையைக் குறிப்பிடுவ தில்லை என்கின்றனர். மக்கள் வாழ்வின் மாற்றம் மொழியில் மாற்றத்தினை ஏற்படுத்துகிறது. மறைதல், புதியன உருவாதல் போன்ற தன்மைகளாலும் சொற்களுக்குப் புதுப்பொருள்கள் அல்லது பொருள் மாற்றங்கள் ஏற்படுகின்றன.

ஒரு சொல்லுக்கு இனச்சொற்களாக அமையும் சொற்கள் அனைத்தும் பெரும்பாலும் ஒரே வகையான பொருளைக் கொண்டிருக்கும். ஆனால், இவ்வாறு ஒரே பொருளைக் குறிக்கும் நிலையில் ஒரு சொல்லுக்கு இனச் சொற்களாக அமைபவை இருக்க வேண்டும் என்னும் கட்டாயம் இல்லை. இனச் சொற்களுக்கிடையே நுண்ணிய பொருள் வேறுபாடு இருக்கலாம். ஆகையால், அவ்வாறு பொருள் மாற்றம் இருக்கும் இனச் சொற்களின் பொருள்களைக் குறித்தல் சிறப்பானது. செந்தமிழ்ச் சொற்பிறப்பியலில் இனச் சொற்களுக்கு அடுத்து அடைப்புக் குறிக்குள் அவை காட்டும் பொருள்கள் குறிக்கப்படுகின்றன.

தலைப்புச் சொல் எவ்வகை இலக்கணப் பகுப்பைச் சார்ந்ததோ அதே இலக்கணப் பகுப்பைச் சார்ந்ததாக இனச்சொல் கொடுக்கப்படும். சான்றாகப் பெயராக அமையும் சொற்கு, இனச்சொல் பெயர் வடிவிலேயே காட்டப்பெறும். சில இடங்களில் இனச்சொற்கள் ஒரே இலக்கணப் பகுப்பில் அடங்காதவையாக இருக்கலாம். அவ்வாறான இடங்களில் அதன் இலக்கணப்பகுப்பு மாற்றம் குறிக்கப்பெறும். சான்றாகப் பெயராய் இருக்கும் ஒரு சொற்குப் பெயர் வடிவத்தில் இனச்சொல் இல்லாமல் அதே பொருளடிப்படையில் வினைவடிவத்தில் இனச்சொல் இருந்தால் அவ்வடிவத்தைக் கொடுத்து அது வினை வடிவத்தைச் சார்ந்தது என்னும் குறிப்புத் தரப்படுகிறது.

சொற்கள் சுட்டும் பொருள்களைப் பற்றிய செய்திகளைத் தருவதே அகரமுதலியின் முதன்மைப் பணி. பொருளைப் பற்றி அறிந்திருக்கும் அளவிற்குச் சொல்லின் பயன்பாடு சரியாக அமையும். பொருள் வரையறை வாயிலாகச் சொல் உணர்த்தும் பொருளை உணர வேண்டியுள்ளது. ஆகவே பொருள் வரையறை அச்சொல் உணர்த்தும் முழு பொருளைக் காட்டுவதாக அமைவது சிறப்பு.

அன்றாட வாழ்வில் வழக்கில் இருக்கும் எளிய சொற்களும் அகரமுதலியில் இடம் பெற்றுள்ளன. இவை வெளிப்படையாகவும் எளிமையாகவும் பார்த்தமட்டில் பொருள் உணரத்தக்கனவாகவும் பெரும்பாலோர்க்கு அமையும். என்றாலும் இவ்வெளிய சொற்களைப் பொருள்வரையறை மூலம் தரவேண்டிய தேவை ஏற்படுகிறது. பல இடங்களில் அனைவருக்கும் எளிமையாக விளங்கும் எளிய சொற்களுக்குப் பொருள் வரையறை தருவதற்கு மிகவும் தொல்லைப்பட வேண்டியிருக்கும்.

ஒரு மொழி அகரமுதலியானாலும் இருமொழி அகரமுதலியானாலும் அகரமுதலியில் 1. தனி உருப்படியாகக் கொள்ள வேண்டிய சொற்கள். 2. அவற்றிற்கான வரையறை அல்லது விளக்கம் என்னும் இரண்டு படிநிலைகள் மிகவும் இன்றியமையா இடத்தைப் பெறுகின்றன. அகரமுதலி உருவாக்கப் பணியில் எதிர்நோக்கவிருக்கும் சிக்கல்களைப் பற்றிக் குறிப்பிடும்போது இவ்விரு படிநிலைகளில் அவற்றை விளக்குவர். இவ்விரு படிநிலைகளும் ஒத்த தன்மையின அல்ல. இவை இரண்டின் சிக்கல்கள் வெவ்வேறானவை.

தனியுருப்படியாகக் கொள்ள வேண்டியவை அகரமுதலியைப் பயன்படுத்துவோர் தன்மையை நோக்கி அமைகின்றன. அகரமுதலித் தொகுப்பாளர்கள் பெரும் பாலும் தலைப்பு உருப்படியாகக் கொள்ள வேண்டியதற்கு ஏதாவது ஓர் அடிப்படையை வைக்கின்றனர் அந்த அடிப்படையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் சொற்களின் செம்மையான வடிவம் கொள்ளப்படவேண்டிய கட்டாயம் இருக்கிறது.

தனிச் சொல்லாயின் அதன் செம்மையான வடிவம் இடம் பெறும். அச்சொற்குத் திரிபு வடிவம் ஏதாவது இருந்தால் அவ்வடிவமும் இடம்பெறும். இருந்தாலும் அதன் பொருள், விளக்கம் ஆகியனவற்றிற்கு அதன் செம்மையான வடிவத்தைப் பார்க்க என்ற அமைப்பில் அதன் செம்மை வடிவம் காட்டப்பெறும்.

கூட்டுச் சொற்களும் தனி உருப்படிகளாகச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் இடம்பெறும். கூட்டுச்சொல்லின் முதற்பகுதி தமிழ்ச்சொல்லாயிருந்து அடுத்த பகுதி பிறமொழியாய் இருந்தால் அம்முதற் பகுதியின் தமிழ்த் தன்மை நோக்கி அது அகரமுதலியில் தனி உருப்படியாக இடம்பெறும். அச்சொல்லின் இரண்டாம் பகுதியில் இடம் பெற்ற சொல் எம்மொழியிலிருந்து வந்தது என்ற குறிப்பு வேர் விளக்கப்பகுதியில் இடம்பெறும்.

பிறமொழிகளினின்று கடன்பெற்ற சொற்கள் வடிவத்தில் மூலமொழித் தன்மையிலிருந்து மாறியிருக்கலாம். அதுபோல் பொருளிலும் மாற்றம் இருக்கலாம். மூலமொழியில் ஒரு சொல்லுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்கள் இருக்கலாம். கடன் பெற்ற மொழியில் அச்சொல்லின் பொருள்கள் அனைத்தும் இருக்கும் என்று எதிர்பார்க்க இயலாது. ஏதாவது ஓரிரண்டு பொருள்களை மட்டும் கொண்டிருக்கலாம்.

வரலாற்று நோக்கில் தொகுக்கப்படும் அகரமுதலிகளில் சொற்களின் பொருள்கள் வரலாற்று நோக்கில் மிக அருகியே தரப்பட்டுள்ளன என்று குறிப்பிடுகின்றனர். (Katre 1965 . 19). இவ்வகை அகரமுதலிகளில் பொருள் வரிசை வரலாற்று நோக்கில் தரப்படுவதே சிறப்பு. ஆனால் பெரும்பான்மைப் பொருள் வரிசை ஏரண அடிப்படையில் அமைந்திருக்கின்றன. முதலாவதாகப் பொருள்களின் விரிவைக் கால வரிசைப்படி அடுக்குவது கடினம். இலக்கியங்களில் இடம்பெற்ற சொற்களின் பொருள்களை அவ்விலக்கியங்களின் காலங்களோடு பொருத்திக் குறிப்பிடலாம். உண்மையில் இலக்கியங்களைக் கொண்டு அவற்றில் இடம்பெற்ற சொல், பொருள் ஆகியவற்றின் காலத்தைக் கணக்கிட இயலாது. முன்னர் தோன்றிய சொற்களின் பொருள்கள் இலக்கியங்களில் இடம்பெறாமல் இருந்திருக்கலாம். ஒரு சொல்லின் பல பொருள்களுள் விஞ்சி நிற்கும் ஆட்சி முன்னர்த் தோன்றியதாக இருக்கும் என்றும் கூற இயலாது. மிகப் பழமையான பொருள் அடிப்படைப் பொருளாக அல்லது அடிக்கடி ஆளும் பொருளாக இருக்க வேண்டும் என்னும் கட்டாயமும் இல்லை. பல இடங்களில் பொருள் வரிசையைக் கால அடிப்படையில் நிரல்படுத்தப் போதிய குறிப்புகள் கிடைப்பதில்லை.

சொல்லுக்குப் பொருள் அம்மொழி பேசும் இனத்தாரின் மரபில் அமைகிறது. சொல்லுக்குப் பொருள் நிலைபெற்றுவிட்ட பின் அப்பொருள் மாறாமல் அப்படியே இருக்கும் என்று சொல்ல இயலாது. பயன்பாட்டில் சொல்லுக்கான பொருள் மாறிவரக்கூடும். காலந்தோறும் பொருள் மாறிவரும் தன்மையைத்தான் வரலாற்று நோக்கில் கொடுக்கப்படும் அகரமுதலிகள் கொண்டிருக்க வேண்டும்.

சொல் சிறு எண்ணிக்கையிலான பொருள்களுடன் இருந்தால் சிறு முயற்சியில் அவற்றைக் கால நிரல்படி வரிசைப் படுத்திவிடலாம். ஆனால் அதிக எண்ணிக்கையிலான பொருள்களைக் கொண்டிருப்பன வற்றைக் காலநிரல்படி வரிசைப்படுத்துவதற்குக் கடின உழைப்புத் தேவை.

ஐயத்திற்கு இடமில்லாமல் அகரமுதலி மொழியின் தன்மையைக் காக்கும் ஆற்றல் பொருந்தியது. இத்தன்மையைப் பலநூறு ஆண்டுகளாகக் குமுகாயம் ஏற்றுக் கொண்டுள்ளது. பெரும்பான்மையாக, இம் மனநிலை எல்லா நாட்டு மக்களிடையேயும் நிலவுகிறது. பல நேரங்களில் செம்மொழியிலிருந்து திரிந்த வடிவங்களையே மக்கள் பயன்படுத்தி வருகின்றனர் என்னும் மனநிலை எல்லா இடங்களிலும் உண்டு. அந்நிலையில், அகரமுதலி அந்தச் செம்மொழி அமைப்பைக் கொண்டிருக்கும் என்று மக்கள் நம்பு கின்றனர். மொழித் தொடர்பான ஐயங்களை நீக்கும் வழிகாட்டியாக அகரமுதலியைக் கொள்கின்றனர். குறிப்பிட்ட சொல்லுக்கு வழக்கில் நிலவும் ஒன்றுக்கும் மேற்பட்ட வடிவங்களில் எது சரியானது என்பதைக் காட்டும் வழிகாட்டியாக அகரமுதலியைக் கொள்கின்றனர். ஆகையால், சரி, தவறு என்றாற் போல் காட்டவல்ல அகரமுதலிகளை மக்கள் வரவேற்கின்றனர்.

ஒரு மொழி பேசும் மக்கள் தாயகத்திலிருந்து வேறு இடத்திற்கு இடம் பெயர்ந்து போனபின் தாயகத்தில் இருக்கும் நாகரிகம் – பண்பாட்டுக் கூறுகள் பலவற்றிலிருந்து தாம் மாறிப் போய் இருக்கிறோம் என்னும் மனநிலையுடன் இருப்பார்கள். அந்நிலையில் தாயகத்தின் நாகரிகம் – பண்பாட்டுக் கூறுகளைக் காட்டவல்ல அகரமுதலிகளே தமக்கு ஏற்புடையவை எனக் கொண்டிருப்பார்கள்.

குமுகாயத்தின் மனப்பான்மை சில இடங்களில் அகரமுதலி உருவாக்கத்தில் சில தடைகளை ஏற்படுத்துகிறது. சொலத்தகாத (இழிவழக்கு அல்லது கொச்சை) சொற்கள் எனக் கொள்ளப்படுபவை அகரமுதலியில் இடம்பெறாமல் போகின்றன. பகுத்தறிவுக்கு ஒவ்வாத சில தடைகளைக் குமுகாய மனப்பான்மை உருவாக்குகிறது. பாலியல் சொற்கள் அகரமுதலியில் உரிய தன்மையுடன் இடம்பெற்றால் அது பற்றி நிலவும் தவறான மனப்பான்மை நீங்கும். குல அடிப்படையில் பயன்படுத்தும் வசைச் சொற்களை நீக்கவேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. ஒரு சமயத்தில் உயர்வாக அல்லது தாழ்வாகக் கருதி வந்த குல அடிப்படையில் உருவான சொற்கள் அகரமுதலியில் இடம்பெறுவதைத் தவிர்க்க வேண்டிய கட்டாயத்தைக் குமுகாயச் சூழல் ஏற்படுத்துகிறது. இவ்வகைச் சொற்கள் அனைத்தும் குமுகாயச் சூழலில் உருவானவையாக இருப்பதால் அவற்றை நீக்கிவிடுதல் மொழியின் குறிப்பிட்ட கூறுகளை விளக்குவதில் குறைபாட்டினையே குறிக்கும்.

ஒரு மொழியின் முழுத் தன்மையை விளக்குவதாக அமைவது அகரமுதலியின் மிகப்பெரும் தகுதிப்பாடு ஆகும். செய்திகளை அறிவதற்கு அடிப்படையாக அகரமுதலி இருப்பதால் தாய்மொழிப் பயன்பாட்டில் மிகப்பெரும் பங்கு கொண்டதாக அது விளங்குகிறது.

எங்கு அகரமுதலியின் பணி முடிகிறதோ அங்கு இலக்கணப் புத்தகத்தின் பணி தொடங்குகிறது என்னும் கூற்றுப் பலரை வியப்பில் ஆழ்த்துகிறது. அகரமுதலி அடிப்படையில் தனியான சொற்களைப் பட்டியல் இடுகிறது. அவற்றின் பொருள்களை விளக்குகிறது. அவ்வாறிருக்க அகரமுதலி எவ்வகையில் இலக்கணத்தைக் குறிப்பிடுகிறது என்ற வினா எழுவது இயற்கை. பெரும்பாலும் சொற்கள் ஒன்றுக்கும் மேற்பட்ட பொருள்களைத் தாங்கி நிற்கின்றன. சொல்லின் சரியான பொருளை அது பயன்படுத்தப்படும் சூழலைக் கொண்டுதான் உறுதிப்படுத்த வேண்டும். சொல் உணர்த்தும் பொருள் பற்றி அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு நிலவி வருவது வாடிக்கை. மொழியியலாளர்கள், மெய்யியலாளர்கள், பாவலர்கள் ஆகியோர் சொல் உணர்த்தும் பொருள்பற்றிப் பல நூற்றாண்டுக் காலமாகக் கருத்து வேறுபாடு கொண்டிருப்பதை அறிகிறோம்.

சொல் தனியாக நின்று செயற்படுவது ஒரு நிலை. ஆனால் சொற்கள் சொற்றொடராக இணைந்து பொருள்தரும் வழிவகை குறிப்பிடத்தக்கது. சொற்கள் ஒன்றுடன் ஒன்று இலக்கண அமைப்பினைத் தழுவியே இணைகின்றன. ஆகையால், சொற்களைப் பற்றியதாக அகரமுதலி இருந்தாலும் இலக்கண அமைப்பினை விளக்கும் தன்மையினதாக இருக்க வேண்டும் எனக் குறிப்பிடுகின்றனர்.

ஒரு வேரிலிருந்து வளர்ந்த சொற்கள் அனைத்தையும் ஒரு குழுவாக வைத்துப் பார்க்க வேண்டும். இதில் குடும்பமொழி இனச்சொற்களும் இடம்பெறுமாறு செய்யவேண்டும். அவ்வாறு பார்க்கும் பொழுது ஒரு குழுச் சொற்கள் அனைத்திற்கும் பொதுவாக இருக்கும் வேர், வேருடன் இணைந்திருக்கும் சொல்லாக்க ஈறுகள், சொற்கள் பெற்றிருக்கும் திரிபுகள் ஆகியவற்றைக் கண்டுகொள்ளலாம். எமனோ, பரோ ஆகியோர் தொகுத்த திரவிடச் சொற்பிறப்பு அகரமுதலியில் திரவிடச்சொற்கள் அனைத்தும் வேர் அடிப்படையில் 4572 பிரிவுகளாகப் பகுக்கப்பட்டுள்ளன.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் இவ்வாறு வேர் அடிப்படையில் சொற்களைக் குழுக்களாகப் பிரித்துக் காட்டுவதற்கு வாய்ப்பில்லை. சொற்கள் அகரவரிசையில் இடம்பெறுகின்றன. ஆக அந்தந்தச் சொற்களின் வேர் அந்தந்தச் சொற்களின் கீழ்க் கொடுக்கப்பட வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. அது போல் கூட்டுச் சொல்லில் அமைந்துள்ள இரண்டு சொற்களுக்கும் அங்கு வேர் கொடுக்கவேண்டிய தேவை ஏற்படுகிறது. எவ்வாறாக இருந்தாலும் ஒரு வேரிலிருந்து வளர்ந்த ஒன்றுக்கு மேற்பட்ட சொற்கள் அகர வரிசையில் அருகருகில் இடம்பெற்றால் முதலில் வருவதற்கு அல்லது இன்றியமையாததாகக் கருதப்படும் சொல்லுக்கு வேர் விளக்கமாகக் கொடுக்கப்பெறும். மற்ற சொற்களுக்குக் குறிப்பளவில் வேர் விளக்கம் கொடுக்கப்பெறும்.

சொற்பிறப்பியல் அகரமுதலி ஒரு தனி மொழிக்கு அமைப்பது ஒருவகை. இன மொழிகள் அனைத்தையும் உள்ளடக்கிய சொற்பிறப்பியல் அகரமுதலி அமைப்பது மற்றொரு வகை. இவ்வகையில் உருவானதுதான் எமனோ. பரோ ஆகியோர் தொகுத்த திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலி.

தனி மொழிக்குச் சொற்பிறப்பியல் அமைவதிலும் இனச் சொற்கள் இடம்பெறுகின்றன. இன மொழிகளுக்குச் சொற்பிறப்பியல் அமைவதில் இனச்சொற்களுக்குப் பெரும்பங்கு உண்டு. இவ்வகை அகரமுதலியில் இனச்சொற்களே அடிப்படைகளாக அமைகின்றன.

இவ்விருவகை அகரமுதலிகளிலும் இனச் சொற்களின் வளர்ச்சிப் படிநிலைகளைப் படிப்படியாக அமைத்து இறுதியில் மீட்டுருவாக்க நிலைக்குக் கொண்டு செல்ல வேண்டும். இவ்வாறு கொள்வது மிகவும் பழைய வடிவமாக இருக்கும்.

ஒருமொழிச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் இந்தப் படிநிலைகள் அந்த மொழிச் சொற்களைக் கொண்டு அமைக்கப்படுகின்றன. இங்கு இனச்சொற்கள் இந்தப் படி நிலைகளுக்குப் பக்கச் சான்றுகளாக அமைகின்றன.

இன மொழிகளின் சொற்பிறப்பியலில் இனச்சொற்கள் பல மொழிகளிலிருந்து பயன்படுத்தப் படுவதால் இம்மொழிக் குடும்பத்து முழுப்பரப்பும் உட்படுத்தப்படுகிறது. ஆகையால் இவ்வகையில் கொள்ளும் மீட்டுருவாக்கங்கள் மிகவும் துல்லியமாகவும் ஆழமுடையனவாகவும் இருக்கும்.

ஓர் அகரமுதலியின் அடிப்படை அலகு சொல். சொல்லைப் பற்றிய செய்திகளை உறுதியான (concrete) வடிவத்தில் தருவது அகரமுதலி. ஒரு மொழியின் அடிப்படை அலகாகச் செயற்படுவதும் சொல். ஒரு மொழியில் அடங்கியுள்ள அனைத்துச் சொற்களையும் கொண்டது சொற்களஞ்சியம் (vocabulary). ஒரு மொழியின் சொற்கள் அனைத்தும் வானத்தில் இடம்

பெற்றிருக்கும் மீன்களைப் போன்றன. ஒவ்வொரு சொல்லும் தனியாக இயங்கும் தன்மையின. இருந்தாலும் சொற்களில் சொற்றொடரில் அமையும் மற்ற சொற்களுடனும் கூறுகளுடனும் தொடர்புடையன. ஒரு சொல் குறிப்பிட்ட இலக்கண வாய்பாட்டிற்கு உட்பட்டுச் சொற்றொடரிலுள்ள மற்ற சொற்களுடன் தொடர்பு கொண்டிருக்கும். ஆகச் சொற்கள் ஒன்றை ஒன்று சார்ந்து பொருள் தருவனவாக இருக்கின்றன.

ஒரு சொல்லுக்குத் தனியான பொருள் உண்டு. அது ஒரு குறிப்பிட்ட ஒரு வடிவத்தாலானது; ஒரு குறிப்பிட்ட இலக்கணச் செயற்பாட்டினைக் கொண்டது.

ஒரே வடிவத்தில் இருந்தாலும் வெவ்வேறு வேர் அடிப்படையில் பிறந்த சொற்களை வெவ்வேறு உருப்படிகளாக அகரமுதலியில் கொள்ள வேண்டும்.

## வரலாற்று அகரமுதலி, சொற்பிறப்பு அகரமுதலி

அகரமுதலி ஒரு காலக்கட்டத்துச் சொற்களையும் பொருள்களையும் குறிக்கும் விளக்கவியல் அகரமுதலியாக அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட காலக்கட்டங்களின் சொற்களையும் பொருள்களையும் குறிக்கும் வரலாற்று அகரமுதலியாக இருக்கும். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியைப் பொறுத்தவரையில் தமிழின் நீண்டகால வளர்ச்சியினைக் காட்டும் வகையில் வடிவமைக்கப்பட்டுள்ளது. ஆகையால் வரலாற்று அகரமுதலிப் பாங்கு உடையதாக விளங்குகிறது. பொதுவாக அகரமுதலியை வரலாற்றுப் பாங்கு அகரமுதலி, விளக்கவியல் பாங்கு அகரமுதலி என்று பிரித்துச் சொல்வது கடினம் என்று குறிப்பிடுகின்றனர். ஒன்றன் கூறு மற்றதில் இருக்கும். அதுவும் சொற்களுக்கு வேர்விளக்கம் சொல்லும் போது வரலாற்றுப் பாங்கு கட்டாயம் இடம் பெறும். பெரிய அளவில் உருவாக்கப்பெறும் அகரமுதலிகள் இலக்கியச் சொற்களை உள்ளடக்கியனவாக இருக்கும். அதுவும் பழங்காலச் சொற்கள் அங்கு இடம்பெறும். அவ்வாறு இருக்கும்போது வரலாற்று நோக்கு அங்குக் காட்டாயம் இடம்பெறும் என்று குறிப்பிடலாம்.

சொற்பிறப்பு அகரமுதலியில் சொற்களின் வரலாறு இடம் பெற்றாலும் அதன் நோக்கமும் செயல்பாடும் வரலாற்று அகரமுதலியிலிருந்து முற்றிலும் வேறானவையாக அமையும். சொற்பிறப்பு அகரமுதலியைப் பயன்படுத்துவோர் வரலாற்று அகரமுதலியைப் பயன்படுத்துவோரைக் காட்டிலும் எண்ணிக்கையில் குறைவானவராக இருப்பர் என்று குறிப்பிடுகின்றனர். வரலாற்று அகரமுதலி சொற்பிறப்பு அகரமுதலி ஆகிய இரண்டும் சொற்களின் வரலாற்றைக் குறிக்கின்றன. அவற்றுக்கிடையேயான வேறுபாடு அவற்றின் நோக்கங்களில்தான் அமைகிறது. குறிப்பிட்ட சொல்லின் வடிவம் பொருள் ஆகியவற்றை வரலாற்று அகரமுதலி, சொற்பிறப்பு அகரமுதலி ஆகிய இரண்டும் காட்டுகின்றன. ஆனால் சொற்பிறப்பு அகரமுதலி இன்று வழக்கில் இருக்கும் சொற்களை ஆராய்ந்து அதன் மூலம் அச்சொல்லின் தோற்றத்தைத் தருகிறது.

வாலாற்று அகரமுதலி காலந்தோறும் சொல் மாறிவந்துள்ள தன்மையைத் தருகிறது. இந்த மாற்றங்களைத் தரும் முகத்தால் அகரமுதலிக் கலைஞர் குறிப்பிட்ட சொல்லின் பழங்கால ஆட்சியைத் தருவார். இவ்வாறு சொல் காலந்தோறும் பெற்று வந்த மாற்றத்தினைத் தருவதற்கு மொழியில் உள்ள இலக்கிய ஆட்சி அத்தனையும் கொடுக்கப்படும்.

சொற்பிறப்பியல் அகரமுதலியின் அடிப்படை நோக்கம் சொல்லின் வரலாற்றுக்கு முந்தைய வடிவத்தைத் தருவது. சொல்லின் தாய் வடிவத்தைக் கண்டறிவதற்கு வரலாற்று ஒப்பாய்வு (historical comparative) முறை பயன்படுத்தப்படும். இன மொழிகளில் காணப்படும் வடிவங்களையும் ஆய்ந்து சொல்லின் தாய் வடிவத்தினைத் தருகின்றனர். வரலாற்றுக்கு முந்தைய வடிவத்தினை மீட்டுருவாக்கம் செய்கின்றனர். சில இடங்களில் சொல்லின் முந்தைய வடிவம் மீட்டுருவாக்கம் செய்யப்படவில்லை என்றாலும் சொற்பிறப்பு அகரமுதலியாகக் கொள்ளப்பெறும். இந்த இடத்தில் ஒரு குறிப்பிட்ட கால எல்லையை வரம்பாக வைத்துவிட்டு அந்த எல்லைவரை சொல்லின் தன்மையைக் கொண்டு செல்வதாக அமையும். இந்தோ ஐரோப்பிய மொழிகளுக்குச் சமற்கிருதம் எல்லையாகக் கருதப்படுகிறது. இங்குச் சமற்கிருத மூலத்துடன் வளர்ச்சி வகையைக் காட்டவியலாத சொற்கள் பல இடம் பெற்றுவிடுகின்றன. சில நேரங்களில் குறிப்பிட்ட சொல்லுக்கு முழுமையாகத் தொடர்பு காட்ட முடியவில்லை என்றாலும் அதற்கு அருகில் வைத்து எண்ணப்படும் சொல் மூலமாகக் காட்டப்படுகிறது. திராவிடச் சொற்பிறப்பு அகரமுதலி போன்று வெறும் இனச்சொற்களை மட்டும் காட்டும் அகரமுதலிகளும் உள.

வரலாற்று அகரமுதலியும் சொற்பிறப்பு அகரமுதலியும் வெவ்வேறு நோக்கம் கொண்டிருந்தாலும் அவை இரண்டும் ஒன்றனுக்கு ஒன்று எதிரானவை அல்ல.

அவை இரண்டும் ஒன்றனுக்கு ஒன்று துணை புரிவன. நம்பகமான முடிவுக்கு வருவதற்கு இவை இரண்டும் ஒன்றனுக்கு ஒன்று துணைபுரிகின்றன. சொற்பிறப்பு அகரமுதலியில் சொற்களின் முந்தைய வடிவங்களை மீட்டுருவாக்கம் செய்யும் போது அவ்வக்கால வளர்ச்சியைக் காட்டிச் சொல்லின் நிலைகள் தெளிவு படுத்தப்பெறும். இந்தக் குறிப்புகளை வரலாற்று முறையில் தொகுக்கப்படும் அகரமுதலி காட்டுகிறது. எந்த எந்தக் காலக்கட்டத்தில் சொல் எவ்வாறு திரிபுற்று வந்திருக் கிறது என்னும் செய்தியை வரலாற்று அகரமுதலி காட்டும்.

விளக்கவியல் அடிப்படையில் தொகுக்கப்படும் பெரும்பாலான அகரமுதலிகளில் சொற்பிறப்பு இடம் பெறுகிறது. இவ்வகை அகரமுதலிகளின் சில அடிப்படைச் சிக்கல்களைத் தெளிவுபடுத்துவதற்குச் சொற்பிறப்பு பெரிதும் துணை புரிகிறது. சொற்பிறப்பு ஒரே வடிவத்திலுள்ள இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மூலங்களிலிருந்து பிறந்த சொற்களைத் தனித்தனியாகப் பிரித்தறிவதற்குச் சொற்பிறப்பு அகரமுதலி துணைபுரியும். பல பொருள்கள் கொண்ட சொல்லின் அடிப்படைப் பொருளைக் காண்பதற்கும் பொருள் வரிசை ஒழுங்கிற்கும் சொற்பிறப்பு அகரமுதலி துணை புரியும். தெளிவில்லாத பொருள் தொடர்பாக எழும் சிக்கலைத் தவிர்ப்பதற்கும் சொற்பிறப்புத் துணைபுரியும்.

## ஒரு பொருட் பன்மொழி

ஒருபொருட் பன்மொழிகள் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் இடம் பெறுகின்றன. இது சொல்லின் பொருளைத் தெளிவாக உணர்வதற்கும் அச்சொல்லோடு தொடர்புடைய ஒரு பொருட் பன்மொழிகளின் ஆட்சிகளை அறிவதற்கும் துணை புரிகிறது. ஒரு பொருட் பன்மொழிகளை அவற்றின் ஆட்சிகளோடு (தொடரில் அமைத்துக்) கொடுக்கும் முறையைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி பின்பற்றவில்லை. ஒரு பொருட் பன்மொழிகள் ஒரு மொழியின் சொல்வளத்தைக் காட்டும் தன்மையினவாக இருக்கும். ஆகையால் தமிழ்மொழியின் நலத்தைக் காட்டும் வகையில் அமைந்த செந்தமிழ்ச் சொற்பிறப்பியலில் ஒரு பொருட் பன்மொழிகள் காட்டப்பெறுகின்றன.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி புலமக்களுக்காக வடிவமைக்கப்பட்டது என்றாலும் இதில் ஓரளவு தமிழ் படித்தோரும் தம் தமிழறிவைப் பெருக்கிக் கொள்ளும் வகையில் அமையும் பொதுக் கூறுகளும் அடங்கியுள்ளன. சொல், அது உணர்த்தும் பொருள், மேற்கோள், இனச்சொல், மறுவடிவம் என்று காட்டப்படுவன எல்லாம் தமிழ்மொழி கற்போருக்கு ஏற்ப அமைந்துள்ளன. அதே நேரத்தில் ஆங்கிலம் வழியாகத் தமிழை அறியவும் இங்கு வழிவகை காட்டப்பட்டுள்ளது. இதற்கு உதவும் வகையில் எழுத்துப் பெயர்ப்பு ஆங்கிலப் பொருள் ஆகியன அமைந்துள்ளன. என்றாலும் ஆங்கிலத்தின் வழிச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி காட்டும் தமிழ்நலங்கள் அனைத்தையும் அறிந்து கொள்வதற்கு இங்கு இடமில்லை. திராவிட இனச் சொற்கள் ஒருபொருட் பன்மொழிகள், வேர்விளக்கங்கள் ஆகியன தமிழில் எழுதப்படுவதால் இக்கூறுகளை ஆங்கிலத்தின் வழியாக அறிந்து கொள்வதற்கு இங்கு இடமில்லை.

## முழுநிறைவான பேரகரமுதலிக் கூறுகள்

"இலேபின்சு அவர்களுக்குச் சொற்பிறப்பு என்பது சொல்லின் வரலாறும் பிறப்பும் பற்றிய ஆய்வாக இருந்தது என்பது உண்மை. அவற்றுடன் மொழியின் இயல்பைப் பற்றி அறியவும் அடிப்படையாகவும் இருந்தது". சொற்பிறப்பு மொழியின் இயல்பை விளக்குவதால் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி தமிழ் நலங்களைக் காட்டும் வகையில் அமைவது இயல்பே.

இலக்கியம், கல்வெட்டு, நாட்டுப்புற இலக்கியம், பேச்சுவழக்குப் போன்ற மொழியின் அனைத்துப் பகுதிகளிலிருந்தும் சொற்றொகுப்பு நடைபெற வேண்டும். செய்தி வெளிப்பாட்டிற்குத் துணையாகச் செயற்படும் அனைத்து நிலைகளுக்கும் உரிய இடம் அளிக்கும் வகையில் மேற்கோள்கள் இலக்கியம், கல்வெட்டு, பேச்சுவழக்கு போன்றவற்றினின்று கொடுக்கப்பட வேண்டும்.

பொருளியல், குமுகாயநிலை போன்றன காரணமாக அமையும் வேறுபாடு கொண்ட வட்டார வழக்குகளைக் காட்டுவதாக அகரமுதலி அமையவேண்டும்.

பின்னொட்டுகள், கிளைமொழி மாற்றங்கள், உருபேற்கும் போது மாறும் வடிவங்கள், ஒழுங்குக்குப் புறம்பாக அமையும் மாற்றங்கள், புடைபெயர்ச்சி வடிவங்கள்

1. "It is true that etymology to Leibniz meant the study of the history and origin of words, but it also included the more fundamental question of the nature of language itself" (Hans Aarsleff, 1982 : 84).

போன்றனவற்றைத் தருவதாக அகரமுதலி இருக்கவேண்டும்.

மரபிணை மொழி, பழமொழி, புதிர் ஆகியவற்றைப் மிகுதியான அளவில் கொண்டிருக்க வேண்டும்.

ஒரு பொருட் பன்மொழிகள். மாட்டேறாகக் காட்டும் இயைபுகள் ஆகியவற்றைக் கொண்டிருக்க வேண்டும்.

சொற்பொருள் விரிவுகள், பொதுப்படையாக அமைவது, உருவகத்தால் அமைவது. பொருள் இழிபு போன்றவற்றைச் சுட்டிக் காட்டுவதாக அகரமுதலி இருக்கவேண்டும்.

பண்பாடு, தொழில், கைவினைப்பாடு, சடங்குகள், நம்பிக்கைகள், கலை, நாட்டுப்புற மருத்துவம் போன்றனவற்றைப் பற்றி உரிய இடங்களில் சுருக்கமான விளக்கங்களைக் கொண்டிருக்க வேண்டும்.

இயற் சொற்களுக்கு இனமொழிகளிலிருந்து இனச்சொற்கள் கொடுக்க வேண்டும். கடன் சொற்களுக்குக் கடன் வழங்கிய மொழி, சொல் நிலையில் கடன்பேற்றில் பெற்ற வடிவ மாற்றம், பொருள் மாற்றம் போன்றன குறிக்கப்பட வேண்டும்.

ஆக்கச் சொல் (derived word), கூட்டுச்சொல், மரபிணை மொழி ஆகியவற்றிற்குத் தகுந்த விளக்கம் தர வேண்டும்.

அகரமுதலி அறிவியல் அடிப்படையில் உருவாக்கப்பட வேண்டிய இன்றியமையாமையை இக்கால மொழியியல் அறிஞர்கள் வலியுறுத்தி வருகின்றனர்.

அகரமுதலியின் தகுதிப்பாட்டைத் தொகுப்பு என்றும் படைப்பு என்றும் இருவகையாக வகைப்படுத்தி விளக்குவர். நல்ல அகரமுதலி தொகுப்பு என்னும் தன்மையுடையதாக விளங்குவதைக் காட்டிலும் படைப்பு என்னும் தகுதிப்பாடு உடையதாக விளங்க வேண்டும் என்பர். அகரமுதலிக் கலைப் பயிற்சி அகரமுதலியைப் படைப்பு என்னும் தன்மையுடையதாக்கும் என்றும் குறிப்பிடுவர்.



# தமிழில் அகரமுதலி

## முகவுரை :

தன்னேரிலாத் தமிழ்மொழியில், பேரகரமுதலியின் கருத்துத் தோற்றம், வளர்ச்சி, வகைமை, சிறப்பு போன்றவற்றை வரலாற்று நோக்கில் வரைவதே இக்கட்டுரையின் நோக்கம். தமிழில் முதற்கண் அகரமுதலி. அகராதி யென்றே வழங்கப்பட்டது. ஒரு மொழியிலுள்ள அனைத்துச் சொற்களையும் திருந்தியவடிவில் தெரிந்தெடுத்துத் தொகுத்து திறம்படச் செவ்வையாய்ப் இயல்வரையறை செய்து, அகரவரிசைப் படுத்தியமைப்பதே அகரமுதலி ஆகும். அகராதி என்னும் சொல்லின் தூயதென்சொல் வடிவமே அகரமுதலி. தமிழ்க் குமுகாயத்தில் அகரமுதலி என்ற நல்லதமிழ்ச் சொற்படைத்து, அகரமுதலி வல்லுநர்களிடையே வழக்கூன்றச் செய்த பெருமை. மொழிஞாயிறு அவர்களையே சாரும்.

அகரம் + ஆதி → அகராதி. 'ஆதி' வடதமிழ்ச் சொல்லாதலின், தூயதென் சொல்லான 'முதலி' என்பதைப் பாவாணர் எடுத்தாண்டார் தொல்காப்பியத்தில், 'முதல்' எனப்பொருள்படும் 26 இடங்களுள், 25 இடங்களில், 'முதல்' என்னும் சொல்லையும் ஓரிடத்தில், 'ஆதி' என்னும் சொல்லையும் ஆண்டிருக்கிறார். பண்டைத் தமிழ்ச் சான்றோரனைவரும், 'ஆதி' என்னும் சொல்லைப் பெருவழக்காகப் பயன்படுத்தாமையால், அகராதிக்குப் பகரமாக, மொழிமீட்பர் பாவாணர், அகரமுதலி என்னும் செந்தமிழ்ச் சொல்லைப் படைத்து, தமது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, முதன்மடல முதற்பாகத்தில், திறம்பட இயல் வரையறை செய்துள்ளமை மொழிநூல் வல்லுநர்கள் தம் கருத்தைக் கவரும்வண்ணம் அமைந்துள்ளது.

இனி, அகரமுதலி குறித்து, மொழிஞாயிறு உள்ளிட்ட மொழிநூல் அறிஞர்கள் தம் திறனாய்வுக் கருதுகோள் குறித்து, வரலாற்றினடிப்படையில், ஒன்றன்பின் ஒன்றாகக் காண்போம்.

## மொழிவல்லுநர்தம் பார்வையில் தமிழில் அகரமுதலி

### 1. பாவாணர் மொழிவது :-

ஒரு மொழியிலுள்ள சொற்களையெல்லாம் அல்லது அவற்றின் பெரும்பகுதியை வண்ணமாலை வரிசைப்படியமைத்துப் பொருள் கூறும் சொற்பொத்தகம். அகரமுதற்சொல்லை அல்லது சொற்களை முதலிற் கொண்டுள்ளமையால் சொற்பொத்தகம் அகராதி எனப்பட்டது.

தொடக்கத்தில், தமிழிலக்கியத்திலுள்ள அருஞ்சொற்களின் பட்டிகளே, செய்யுள் நடையிற் பொருள்கூறி, "உரிச்சொல்" என்றும், "உரிச்சொற் றொகுதி" என்றும், பெயர்பெற்று வழங்கி வந்தன. பின்னர் அவை "நிகண்டு" என்னும் வடசொற்பெயரால் வழங்கத் தலைப்பட்டன.

1594-இல் முதன்முதலாக, சிதம்பர ரேவண சித்தர் என்பவர் தம் நிகண்டை வண்ணமாலை வரிசைப்படுத்தி, அதற்கு "அகராதி நிகண்டு" எனப் பெயரிட்டார்.

18-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வீரமா முனிவர் (Father Beschi) முதன்முதலாகச் செய்யுள் நடையை விட்டொழித்து மேலை நாட்டு முறையைக் கையாண்டு, பெயர், பொருள், தொகை, தொடை என்னும் நால்வகைத் தலைப்பிற் சொற்களைத் தொகுத்து சதுரகராதி என்று பெயரிட்டார்.

அதன்பின், 1779-இல் பெப்பிரசியசு (Fabricius), பிரேய்த்தாப்து (Berithaupt) என்னும் இரு செருமானிய உலுத்தரன் விடையூழியர் (Missionaries), தமிழும் இங்கிலீசுமாயிருக்கிற அகராதி என்னும் பெயரில், ஒரு தமிழாங்கில அகரமுதலி வெளியிட்டனர். பின்னர், 'அகராதி' என்னும் பெயர் பெருவழக்காயிற்று.

பதினெண்கீழ்க்கணக்கில், ஒரு நூல் ஏலாதியெனப் பெயர் பெற்றிருப்பினும், ஆதி என்னும் சொல். தூய தென்சொல்லாகத் தோன்றாமையால் இன்று அகராதி, அகரமுதலி யெனப்படுகிறது.

2. புலவர் சுந்தரசண்முகனார் புகல்வது :-

ஒரு மொழியிலுள்ள சொற்கள் அகரவரிசையில் அடுக்கிப் பொருள் கூறப்பட்டிருக்கும் சுவடி "அகராதி" யென அழைக்கப்படுகிறது. முதலில் சொற்கட்குப் பொருள் கூறுதல் மட்டும் செய்து வந்த அகராதி நாளடைவில், பலவகை உருவங்கள் என்றைக்கு எடுக்கத் தொடங்கியதோ, அன்றைக்கே அகராதியும் ஒரு கலையாகிவிட்டது. அகராதி தொகுக்கும் கலை 'அகராதிக் கலை' எனப் பொருள்படும். இக்கலை மேனாட்டில் திறம்பட வளர்ந்துள்ளது. தமிழகத்தைப் பொறுத்தமட்டில் மிக மெதுவாகவே வளர்ந்து வந்துள்ளது என்பார் வையாபுரியார்.

## "அகராதி" என்னும் பெயர்விளக்கம்

சொற்கட்குப் பொருள்புகலும் நூலினுக்கு, அகராதி என்னும் பெயர் அமைந்ததற்குரிய அடிப்படைக் கரணியம், ஆய்விற்குரியது. அகரம், ஆதி என்னும் இரு சொற்களின் இணைப்பு வடிவமே, அகராதி ஆயிற்று.

அ + கரம் + ஆதி → அகராதி.

"அ" = உயிர்

"கரம்" = ஓர் எழுத்துச் சாரியை

"ஆதி" = தொடக்கம் என்னும் பொருண்மைபயப்பது.

அகரத்தைத் தொடக்கமாகக் கொண்டு, சொற்களை அகரவரிசைப்படுத்திப் பொருள் கூறுவதே அகராதியாகும். அகராதி என்னுஞ் சொல் அ, ஆ, இ, ஈ என்னும் முறையில், சொற்கட்குப் பொருள் புகல்வது. ஏலம் முதலான பொருட்களைக் குறிக்க [ஏலம் + ஆதி → ஏலாதி] ஏலாதி என்னும் சொல் ஆளப்பெறுவது போல், ஆகுபெயராய், அகரமுதலான சொற்களை வரிசைப்படுத்திப் பொருளுரைப்பதே அகராதி ஆகும்.

இச்சொல், அகரத்தை அடிப்படையாகக் கொண்ட வரிசை எனப் பொருள் தரும். "Alphabetical order" என்னும் ஆங்கிலச் சொல்லையொத்தது. "இவ்வாங்கிலச் சொல், "கிரீக்" மொழியினின்று வந்ததென்பர் "(சுந்தர சண்முகனார். 1971, பக்.2). கிரீக் மொழியில், "Alpha", "beta" என்னும் சொற்கள், "A","B" எழுத்துகளைச் சுட்டும், இருவேறு சொற்களாகும். எனவே A,B,C,D என்னும் அகரவரிசை முறையினை அவ்வெழுத்தமை சொற்களான் னிணைத்து 'Alphabetical order' என்பர். "அணிலாடுவரிசை" எனப் புதுப்பெயர் படைக்கலாம் என்று புகல்வாரும் உண்டு" (சுந்தர சண்முகனார். 1971, பக்.3). கூர்ந்து நோக்கின் அகராதி என்னும் சொல்லும் அவ்வடிப்படையில் உருவாகியதெனலாம். அகரம், ஆதி எனுமிவ்விரு சொற்களின் முதல் எழுத்துகள் "அ", "ஆ" வரிசை முறையை இவ்வுலகிற்கு உணர்த்துமுகத்தான், அகராதி யெனப் பெயரமைந்தது முற்றிலும் ஏற்புடைத்தே. இப்பெயரைப் படைத்த முன்னோருக்கு,

"அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு" (குறள், 1)

என்னும் தெய்வப் புலவர் யாத்த திருக்குறளிலுள்ள அகரம், ஆதி என்னும் ஒரே வரியில் அமைந்த இவ்விரு சொற்கள் வழிகாட்டியதெனலாம். எழுத்தின் தோற்றமாய் அகரம் அமைந்துள்ளதைப் போன்று, உலகின் தொடக்கத்தைச் சுட்டும் ஆதியும், ஒன்றாகத் திருக்குறளின் தொடக்கமாய்க் கடவுள்வாழ்த்து முதற் குறளில் அமைந்து, மொழியறிவையும், இறையுணர்வையும் ஒருசேர உணர்த்துகின்றது. இவ்வுயரிய எண்ணத்தினடிப்படையில் "நூல்களை எழுதத் தொடங்கிய முன்னோருக்கு, அக்குறட்டொடர்களின் அடிப்படையில் பெயர் சூட்டும் வேட்கை தோன்றியிருப்பின் வியப்பன்று" (சுந்தர சண்முகனார். 1971, பக்.35).

## அகராதியின் செந்தமிழ் வடிவமே அகரமுதலி

அகரமுதல் → அகரமுதல → அகரமுதலி. அகராதி என்னும் பெயரை அறிமுகப்படுத்தியோர், 'அகரமுதல' எனத் திருக்குறளிலும், "அகரமுதல் னகர இறுவாய்" (தொல்காப்பிய. 1) என வரும் தொடர்களின் அடிப்படையிலும், "அகரமுதல்" என்னும் அழகிய, தூய தமிழ்ப்பெயரைத் தம் நூலிற்கு வைத்திருந்தால், இன்னும் நன்றாக இருக்கும் எனக் கருதுவர்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.23). கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் திருஞான சம்பந்தர் இறைவனைப்பற்றிக் குறிப்பிட்ட "அகரமுதலானை" என்ற சொற்றொடரும் அகராதியியல் வரலாற்றில், "அகரமுதலி" என்ற சொல்லாட்சியுடன் அமைந்துள்ளது. சொற்பொருள் கூறும் அகரமுதலித் துறையில் 20-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பாம்பன் அடிகள் இயற்றிய, 'சேந்தன் செந்தமிழ்' என்ற நூலில் - "அகரமுதல்" என்ற சொல்லினை எடுத்தாண்டுள்ளார்.

ஆதி என்னும் சொல், வேரளவில் தமிழுக்குத் தன் சொல்லாயினும், தூய தென்சொல்லன்று என்பதைப் பாவாணர், உறுதிப்படுத்தினார். அகு → அகுதி → ஆதி. அகு → அகை = முன்வரல், முதலாதல். அதனாற்றான்,

தற்காலத்தில் அகராதி என்பதனை விடுத்து அகரமுதலி என வழங்கத் தலைப்படுவாராயினர்.

அகரநிரலில், சொற்கட்குப் பொருள் வரைதல், அகரமுதலியின் அடிப்படைப் பண்பாக இருந்த ஞான்றும், தொடக்கக் காலத்தில் தோன்றிய அகராதிகள், முழுமையான அகரமுதலிக் கூறுகளுடன் அமைய வில்லை என்பர். காலந்தோறும் மாறிவந்த பிற அறிவியற்றுறைகளைப் போன்றே, அகரமுதலித் துறையும், பற்பல மாற்றங்களுடன், படிப்படியான வளர்ச்சியைப் பெற்று, பல்வேறு உட்பிரிவுகளுடன், தனியொரு கலையாக உருவெடுத்ததெனலாம்.

## மொழியியல் அறிஞர் தா.வே. வீராசாமி கூறும் விளக்கம் வருமாறு :-

"அகராதி என்பது பலவகையாகப் பரந்துபட்ட பார்வை நூல்களைக் குறிக்கும். அடிப்படை நிலையில், அகராதி சொற்றொகுதிகளை நிரல்பட அளிக்கும். பின்னர் அவற்றிற்குரிய பொருள்களை விளக்கிக் கூறும். இத்தொகுதி மொழியிலுள்ள எல்லாச் சொற்களையும் கொண்டிருக்கும், அன்றிச் சொற்களின் ஒரு கூறாகவும் அமையும். புத்தகப் பின்னிணைப்பிற் காணும் சிறு பட்டியலைச் 'சொற்றொகை' (Glossary) என்பர். ஒரு குறிப்பிட்ட நூலுக்குச் சொல்லடைவு திரட்டும்போது, சொல்லொப்பீடு காணலாம். சிறந்த பேரகராதி, ஒப்பீட்டிற்குரிய சொற்பட்டியலைத் திரட்டித் தரும். ஆங்கிலத்தில் 'லெக்சிகன்' (Lexicon) என்பது. சொற்றொகுதியைக் குறிக்கும். மொழியியலில், இது ஒரு மொழியமைப்பிற்குரிய பதிப்புக் கூறுகளைக் குறிக்கும். இதனால், இலக்கியம் எழுத்து வடிவில் தோன்றுவதற்கு முன்னரே, சொற்றொகுதிகள் இருந்தனவென்பர். அவற்றின் பின்னரே அகராதிகள் உருவாயின", என்று உரைப்பாருமுளர். (த.வே.வீராசாமி. வாழ்வியற் களஞ்சியம். தஞ்சைப் பல்கலைக் கழக வெளியீடு பக். 69)

"மொழியியலின் ஒரு கிளையே அகராதியியல். இது, அகராதிக் கலையில் எழும் சிக்கல்களைத் தீர்க்க, அறிவியல் நெறியில் கொள்கைகளைக் கூறும்" (தா.வே.வீராசாமி. 1991, பக்.69).

அகராதியியல் வளர்ச்சி – தோற்றம் குறித்த வரலாற்றினைத் திரு. வ. செயதேவன் தமது ஆய்வியலில் கூறுங்கால், நிகண்டுகளை நெட்டுருச் செய்து, சொல்லின் பொருளறிதலே, இடைக்காலக் கல்விமுறை. ஐரோப்பியர் வருகைக்குப் பின், இக் கல்விமுறையில் பெரும் மாறுதல்கள் ஏற்பட்டன என்னும் பொருள் பொதிந்த கூற்று மொழியியல் அறிஞர்தம் உளங்கொளத் தக்க முறையில் அமைந்துள்ளது. இது குறித்து, வ.செயதேவனார் மேலுங் கூறுகையில், "கல்விப் பயிற்சிக்குக் கருவி நூல்களாக அமைந்த நிகண்டுகளை எல்லோரும் மனப்பாடம் செய்தே வந்தார்கள். பெரும்பாலோர் அடிப்படைக் கல்வியோடு நின்றுவிட, மேற்படிப்பில் ஆர்வமும், அதற்கேற்ற வாய்ப்பும் கொண்ட சிலரே, இலக்கியப் படிப்பில் மேற்சென்ற ஒரு காலகட்டத்தில், இம்மனன முறை போதுமானதாகவே இருந்தது" (வ.செயதேவன். 1985, பக்.89). இந்தக் கல்விமுறை ஐரோப்பியர் வருகைக்குப் பின் பெரும் மாறுதல்களுக்கு உட்பட்டது. ஏற்கனவே அறியப்பட்டுள்ள கருத்துகளை விரைவிலேயே தெரிந்து கொண்டு, அதன்மீது புதிய அறிவை வளர்க்கும் நோக்குடன் அமைந்த புதிய கல்விமுறையில், அறிய வேண்டியதை வேண்டிய போது, எளிதில் தெரிந்து கொள்ளக்கூடிய பல்துறைக் கருவி நூல்கள் தேவைப்படலாயின. இத் தேவையை நிறைவு செய்யும் நோக்கில் தோன்றியவையே அகராதிகள்" (வ.செயதேவன். 1985, பக்.83).

"அகராதிகளை இருபெரும் பிரிவுகளாகப் பகுக்கலாம்" (வ.செயதேவன். 1985, பக்.84). 1. மொழியகராதிகள் (Linguistics Dictionaries), 2. கலைக் களஞ்சியங்கள் (Encyclopedias). மொழியகராதிகள் சொற்களின் இயல்வரையறையைத் தருவன; சொற்களின் தன்மையை விளக்குவன. கலைக்களஞ்சியங்கள் மொழியால் குறிக்கப்படும் பொருளின் தன்மையை விளக்குவன. மொழியுலகிற்கு வெளியே உள்ள உருவ / அருவப் பொருள் பற்றி யார், எப்பொழுது, எங்கே, எப்படி, ஏன் போன்றவற்றிற்குரிய விளக்கம் தரும் இயல்பினது கலைக்களஞ்சியம் (வ.செயதேவன். 1985, பக்.84).

இத்தகைய பொருண்மை பொதிந்த அகராதி அல்லது அகரமுதலி மொழியாய்வில் ஈடுபடுவோர்க்கு உற்றுழியுதவும் ஊன்றுகோலாகித் திறனாய்வில் திளைக்கும் அகரமுதலி வல்லுநர்க்கு, உரஞ்சான்ற திறவுகோல்களாகவும் திகழ்கின்றன, என்பதில் யாதொரு ஐயமுமில்லை.

இவ்வகரமுதலியின் பண்டையப் பெயர் பற்றியும், தொல்காப்பியர் காலந்தொட்டு, அகராதியியலின் அடிப்படைக் கூறுகள் எங்ஙனம் வளர்ந்து, முழுமையடைந்தன என்பது பற்றியும் காண்போம்.

உரிச்சொல் → உரிச்சொற்பனுவல் → நிகண்டு → அகராதி → அகரமுதலி. நிகண்டு அல்லது

அகராதியின் முந்தைய வடிவம், "உரிச்சொல்" அல்லது "உரிச்சொற் பனுவல்" என்பதாகும். சொற்கட்குரிய பொருளை உரிய தன்மையில் இயல்பாக விளக்கும் உரிச்சொல் என்னும் பெயர், தொல்காப்பியரின் "உரியியல்" பயந்த சொற்கொடையாகும்.

சொல்லுக்குப் பொருள் கூறும் துறை தொடர்பிலான நூலின் முந்தைய வழக்கு, "உரிச்சொல்" அல்லது "உரிச்சொற்பனுவல்" என்பதைப் புலவர் சுந்தர சண்முகனார் பலவகையான அகச் சான்றுகளுடன் நிறுவுந் திறன் வருமாறு :–

"திவாகர நிகண்டு, பிங்கல நிகண்டு, சூடாமணி நிகண்டு, கயாதர நிகண்டு முதலிய நூல்கள், "நிகண்டு" என்னும் பொதுப்பெயரால் அழைக்கப்பட்டது பிற்காலத்தில்தான்; முதற்காலத்தில், இந்நூல்கள் "உரிச்சொல்" என்னும் பெயராலேயே அழைக்கப்பட்டன. "உரிச்சொல்" என்னும் பெயர் வழக்கொழிந்ததனால், நிகண்டு என்னும் சொல் காலப்போக்கில் மக்களிடையே வழக்கூன்றி விட்டது.

## அகரமுதலி (அகராதி)க்கு "உரிச்சொல்" என்னும் பெயர் ஏற்பட்ட வரலாறு :–

மூவாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தொல்காப்பிய உரியியலில், "உரிச்சொற்கள்" பொருள் விளக்கஞ் செய்யப் பெற்றிருத்தலைக் கண்ட, பிற்கால அகரமுதலி அறிஞர்கள் தாமியற்றிய, சொற்பொருள்களை விளக்கும் துறைசார் நூல்களையும், "உரிச்சொல்" என்னும் பெயராலேயே வழங்கத் தலைப்பட்டனர். எனவே, இந்த உரிச்சொல் என்னும் பெயர், தொல்காப்பியர்தம் உரியியல் தந்த கடன் வழக்காகும். தொல்காப்பியர்தம் உரியியல், உரிச்சொற்கட்குப் பொருளுரைப்பதால், உரியியல் எனப் பெயர் பெற்றது; ஆனால், அஃதன்றிக் காலப்போக்கில், உரிச்சொல்லொழிந்த ஏனைய சொற்கட்குப் பொருள் வரையறை செய்யும் நூல்களும், "உரிச்சொல்" என்னும் பொதுப்பெயராலேயே, வழங்கப் பெற்றன. இஃது எவ்வாறெனின், எள்ளிலிருந்து எடுக்கப்பட்ட நெய்க்கு மட்டும், முதலில் பெயராயமைந்த 'எண்ணெய்' என்னும் பெயர், நாளடைவில் ஏனைய எண்ணெய் வித்துகளினின்றும், பிழியப்பட்ட நெய்வகைகட்கு உரித்தானது போன்றதாம். உரிச்சொல் என்பதின் உண்மையான பெயர்க்கரணியம் இதுவேயாகும். இவ்வுண்மை வுணராத ஒரு சிலர் "ஒரு சொல்லுக்குரிய பல பொருள்களும், ஒரு பொருளுக்குரிய பல பெயர்களும் கொடுக்கப்படுவதால் "உரிச்சொல்" எனப்பட்டது என ஏறுமாறான காரணங் கூறி இடர்ப்படுகின்றனர்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.15).

திவாகரம், பிங்கல முதலான நூல்கள், முற்காலத்தே "உரிச்சொல்" என்னும் பொதுப்பெயர் பெற்றிருந்தமையை உறுதிப்படுத்தும் அகச்சான்றுகள் வருமாறு :–

1. திவாகரம், பிங்கல முதலான நூல்கள் தோன்றிச் சில நூற்றாண்டுகட்குப் பின்னரே, பவணந்தியார் நன்னூலை இயற்றியனார். இதன் காலம் கி.பி.13–ஆம் நூற்றாண்டு. தொல்காப்பியர், சொல்லதிகாரத்தில் உரியியற் பகுதியை அமைத்தது போன்றே, பவணந்தியாரும் தமது இலக்கண நூலாம் நன்னூலின் சொல்லதிகாரத்திலும், உரியியல் என ஒரு பகுதியை உருவாக்கிச் சொற்பொருள் விளக்கஞ் செய்துள்ளமையை மொழிநூல் அறிஞர்கள், தத்தமது நூல்களிற் குறித்துள்ளனர். நன்னூலார் தமது உரியியலின் இறுதியில், எல்லாச் சொற்கட்கும் இங்கே பொருள் விளக்கஞ் செய்ய முடியாது. ஏனைய பிற சொற்கட்குரிய பொருள்களை எல்லாம், பிங்கல முதலான "உரிச்சொல்" நூல்களுட் கண்டுகொள்க என்னும் கருத்திற் செய்தளித்த நூற்பா வருமாறு :–

"இன்ன தின்னுழி யின்னண மியலும்
என்றிசை நூலுட் குணகுணிப் பெயர்கள்
சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா
நல்லோ ருரிச்சொலி னயந்தனர் கொளலே"
(நன். 460)

இந்நூற்பாவின்கண்ணே பிங்கல முதலிய நூல்கள் "உரிச்சொல்" என்னும் பெயரால் அழைக்கப்பட்டிருத்தல் காண்க.

திவாகரமும், பிங்கலமும் இயற்றப்பட்ட காலம் கி.பி.8. ஆம் நூற்றாண்டு பவணந்தியார், நன்னூல் இயற்றிய காலமோ கி.பி.13–ஆம் நூற்றாண்டு. சற்றொப்ப ஐந் நூற்றாண்டுகட்குப் பின்னரும், பிங்கல முதலான நூல்களை, "நிகண்டு" என்னும் சொல்லாற் குறிப்பிடாமல், "உரிச்சொல்" என்னும் சொல்லால் அழைக்கப்பட்ட பாங்கு, "உரிச்சொல்" என்பது நிகண்டு (அகராதி), அகரமுதலி போன்றவற்றைக் குறிக்கும் சொல் வடிவம் என்பது நன்கு போதரும்.

2. இதே நன்னூல் நூற்பாவினுக்குப் பிற்காலத்தே உரை வரைந்த மயிலைநாதர் நிகண்டு, அகராதி (அகரமுதலி) போன்றவற்றை, "உரிச்சொற்

பனுவல்'' என்றேயுரைத்துள்ளார். நிகண்டு என்ற சொல்லாற்சுட்ட வில்லை இதற்கான சான்று வருமாறு :-

''.................... அவை பிங்கல முதலான புலவர்களாற் செய்யப்பட்ட 'உரிச்சொற்பனுவல்'களுள் விரும்பி அறிந்து கொள்க'' என்று உரைத்துள்ளமையால், ''பனுவல், நூல், உரிச்சொல் பனுவல், உரிச்சொல் நூல்'' முதலானவை அகரமுதலிப் பொருண்மை குறித்து வழங்கிய ஒருபொருள் குறித்த பலசொற்றொகுதி எனலாம்.

மற்றும் நன்னூல் பொதுவியலிற் காணப்படும்,

''எப்பொருளெச்சொலி னெவ்வாறுயர்ந்தோர்
செப்பின ரப்படிச் செப்புதன் மரபே'' என்னும் நூற்பாவின் உரையிலும், மயிலைநாதர்,

''.................... விரிந்த உரிச்சொற் பனுவல்களுள்ளும், உரைத்தவாறு அறிந்து வழங்குக'' என்ற உரையில், ''உரிச்சொற் பனுவல்'' என்றே குறிப்பிட்டுள்ளார்.

பனுவல் = நூல்
உரிச்சொல் பனுவல் = உரிச்சொல் நூல்.

இனி, பிங்கல முதலிய சில நூல்களின் பாயிரப் பகுதியிலும், ''உரிச்சொல்'' என்றே உரைத்துள்ளதற்கான சான்றுகள் வருமாறு :-

3. பிங்கல நூலின் சிறப்புப் பாயிரத்தில்,

''பிங்கல முனிவன் எனத்தன் பெயர்நிறீஇ
உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை''
என்றவிடத்தில் நிகண்டு அல்லது நூல் என்னும் பொருட் பொருத்தப்பாட்டில் ''உரிச்சொல்'' என்னும் சொல் இடம் பெற்றுள்ளது காண்க.

4. கயாதரர் இயற்றிய ''கயாதரம்'' என்னும் நூலின் பாயிரப் பாடல்களில், நூலுக்குப் பகரமாக, 'உரிச்சொல்', 'உரிச்சொற்பனுவல்' என்ற சொற்கள் இடம் பெற்றுள்ளன. எடுத்துக்காட்டுகள் வருமாறு :-

i) ''............... தேவைக் கெயாதரன் தொல்
வேதியன் சொற்ற உரிச்சொற் பனுவலு மேம்படுமே''

''.......... உரிச்சொல் கிளர் பனுவல் .......................
நடக்கும் படியாக் கெயாதரம் என்றுபேர் நாட்டினனே''

எனவும், கயாதர நூலின் இறுதிச் செய்யுளில் ''உரிச்சொற் பனுவல்'' என்றே, இடம் பெற்றதற்கான சான்று வருமாறு :-

''விரும்பிய கோவை உரிச்சொற் பனுவல் விரித்துரைத்தான்
பெரும்பொருள் கண்ட கெயாதரன் தேவைப் பெருந்தகையே''

5. திவாகரர், பிங்கலர், கயாதரர் முதலான அகரமுதலி ஆசிரியர்களைப் போன்றே, காங்கேயன் என்னும் புலவரும், சொற்பொருள் கூறும் நூலொன்றை இயற்றியுள்ளார். இந்நூலின் தலைப்பே ''உரிச்சொல் என்பதாகும். இதனைக் கீழ்க்காணும் பாடற் பகுதியால் அறியலாம்.

''உத்தம சீலத்துக் காங்கேயன் சொன்ன உரிச்சொல் தன்னை ................'' மற்றும், இந்த .......... உரிச்சொல் நிகண்டின் ஓலைச்சுவடி யொன்றின் இறுதியில், ஏடு பெயர்த்து எழுதியவரால், பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது :-

''950-ம் வருட புரட்டாசி மீ 142 ஆழ்வார் திருநகரி மாசித்தெரு தேவர்பிரான் கவிராயர் உரிச்சொல் நீடூழி வாழ்க..........''.

இவற்றிலும், நூல் அல்லது நிகண்டு என்னும் பொருளில் ''உரிச்சொல்'' என்னும் பெயர் ஆளப் பெற்றுள்ளது.

பவணந்தியார் இயற்றிய நன்னூலுக்கும் சில நூற்றாண்டுகட்குப் பின்பு தோன்றிய கயாதரம் உரிச்சொல் நிகண்டு போன்றவற்றிலும் வழக்கூன்றியதைக் கருத்திற் கொண்டால், இப்பெயர் 17, 18-ஆம் நூற்றாண்டு வரையிலும் வழங்கி வந்திருப்பது தெற்றெனப் புலனாகின்றது.

சொற்பொருள் கூறும் துறையில், உரிச்சொல், ''உரிச்சொற்பனுவல்'' என்னுமிரண்டு சொற்களும் மறையாமல் செய்யுள் வழக்கில் உள்ள போதே இவற்றிற்குப் பதிலாக கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் மண்டல புருடர், தமது சூடாமணி நிகண்டின் பாயிரப் பாடலில் முதன்முதலாக நிகண்டென்னும் சொல்லைக் கையாளுகின்றார்.

எடுத்துக்காட்டு வருமாறு :-

''மன்னிய நிகண்டு சூடாமணியென ஒன்று சொல்வன்

இந்நிலந் தன்னின் மிக்கோர் யாவரும் இனிது கேண்மின்'' அகரமுதலித் துறையில் சூடாமணிக்குப் பின்னெழுந்த நூல்களனைத்தும், நிகண்டென்றே குறிக்கப்படலாயின. கி.பி. 16-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர்த் தோன்றிய நிகண்டு என்னும் பெயர், கி.பி. 8-ஆம் நூற்றாண்டு முதல் ஆட்சியிலிருந்த, ''உரிச்சொல்'',

"உரிச்சொற் பனுவல்" ஆகியவற்றின் பெயர்களை வழக்கொழித்து, அவ்விடத்தில் தான் நிலைத்து விட்டது. இறையனார் களவியலுரை, திவாகரம், பிங்கல முதலானவற்றில் இச்சொல், வழக்கிலிருந்த ஞான்றும், சொல்லுக்குப் பொருள்கூறும் துறை என்னும் பொருளில், சூடாமணி நிகண்டில்தான் ஆளப்பட்டது.

## தமிழகரமுதலி வரலாற்றில் தொல்காப்பியம்

தமிழகரமுதலி வரலாற்றில், தொல்காப்பியர்தம் பங்களிப்பை வியந்து போற்றாத மொழியியல் வல்லுநர்களே இல்லை. அகரமுதலியின் கருத்துத் தோற்றத்திற்கு, முதற்கண் அடிகோலியதற்கான அகச்சான்றுகள் இற்றைக்குச் சற்றொப்ப மூவாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தொல்காப்பியத்தில் பரவலாகக் காணப்படுகின்றன. தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில், தமிழ்ச் சொல்லின் பொருள் மிகத் திட்பமாகவும், நுட்பமாகவும் வரையறுக்கப்பட்டுள்ளது.

தொல்காப்பியர் "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" (தொல். சொல். 640) என்ற நூற்பாவின் வாயிலாகச் சொல்லுக்குப் பொருள் புகலும் அகரமுதலித்துறையை, உலக அகரமுதலி வரலாற்றில், முதற்கண் அறிமுகப்படுத்தியவராகிறார்.

தொல்காப்பியர் அருஞ்சொற்கள் எனக் கருதும் சொற்களுள், இன்றைக்கு எளிய சொற்களாகத் தோன்றும், 'தீர்தல்', 'தீர்த்தல்', 'பழுது', 'முழுது', 'செழுமை' ஆகியவையும் இடம் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. இவை அவர்தம் காலத்தில் அருஞ்சொற்களாக வழங்கியிருக்கக்கூடும். அவர் அருஞ்சொற்களுக்குப் பொருள் கூறுவதோடு, சொற்களுக்கு அரும்பொருளும் கூறியுள்ளார் எனலாம்.

## அகரமுதலி அறிஞர்கள் நோக்கில் தொல்காப்பியர் காலம்

தொல்காப்பிர்தம் காலமும் தமிழில் அகரமுதலியின் கருத்துத் தோற்றமும் சற்றொப்ப சமகாலமென்று சுந்தரசண்முகனார் முதலான அகரமுதலி வல்லுநர்கள் கருதுவர். ஏனென்றால் சொல்லுக்குப் பொருள் புகலும் அகரமுதலியின் கருத்துத் தோற்றம், தொல்காப்பியத்திலேயே உருவாகிவிட்டதென்பது அனைத்து அகரமுதலி அறிஞர்களும் ஏற்றுக்கொண்ட கொண்முடிபாகும். தொல்காப்பியத்திலுள்ள அகரமுதலித் தரவுகட்கு ஒருமுகமாக ஒப்புதலளித்த மொழியியலார், அவர்தம் காலத்தைக் கணித்தறிவதில் பன்முக நோக்குடன் கருத்து மாறுபடுகின்றனர்.

### தேவநேயர் கூறுவது :-

"மொழிகட்குப் பெயர், முதற்கண் நாடு பற்றியும், பின்பு மக்கள் பற்றியும், அதன்பின் மொழியின் தன்மை பற்றியும் தோன்றியுள்ளன". (தமிழ் வரலாறு. பக். 37.). இக்காலத்தில் (கி.மு. 7 ஆம் நூற்றாண்டில்) வேங்கடத்திற்குத் தெற்கில், தமிழ் தவிர வேறெம் மொழியும் வழங்கவில்லை. இக்கருத்தினை விளக்கும் தொல்காப்பிய நூற்பா வருமாறு :-

"வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து ...."

கிறித்துவிற்கு முன்பே இலக்கியம் பெற்ற மொழி தமிழாம். கிறித்துவிற்கு முந்தைய இலக்கியம் திரவிட மொழிகளில் ஏதுமில்லை. வடவர் தமிழையே, திரவிடம் என்னும் பெயரால் தலைமையாகக் குறித்தனர். அதனற்றான் அகரமுதலி வல்லுநர், வ. செயதேவனார், "தொல்காப்பியத்தின் காலம் குறித்துப் பல்வேறு கருத்து வேறுபாடுகள் இருப்பினும், கிறித்துவிற்கு முற்பட்ட நூலாக இதனைக் கொள்வது பிழையாகாது. நிலைத்த முந்து நூல்களுள் மூத்ததாகக் கருதப்படும் இந்நூலுள், அகராதியிபற் கூறுகள் சில காணக் கிடக்கின்றன".

புலவர் சுந்தர சண்முகனார் தமது "அகராதிக் கலை" என்னும் நூலுள் (பக்.32), "இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் தோன்றிய கடைச்சங்கப் புலவர்களும், தொல்காப்பியத்தைப் பயன்கொள்வாராயினர். தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்ட பேரவைக்குத் தலைமையேற்ற நிலந்தரு திருவிற் பாண்டியனும், தலைச்சங்க காலத்தைச் சேர்ந்தவனாக ஆராய்ச்சியாளர் சிலரால் அறிவிக்கப்பட்டுள்ளான். எனவே, எது எது எப்படியிருந்த போதிலும், இற்றைக்கு இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகட்கு முந்தியது தொல்காப்பியம் என உறுதியாகக் கூறலாம். ஒரு தோற்றமாகச் சற்றொப்ப மூவாயிரம் ஆண்டுகட்கு முந்தியதென்று மொழியலாம். எனவே தொல்காப்பியத்தின் காலம் ஏறத்தாழ கி.மு.1000 ஆகும். ஐயாயிரம் ஆண்டுக்கு முந்தியதென்று மொழிவாருமுளர்".

தா.வே.வீராசாமி தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடான வாழ்வியல் களஞ்சியத்தில், தாம் வரைந்துள்ள அகராதி (பக்.69) என்னும் கட்டுரையில்,

"அகராதிக் கலையின் தொடக்க நிலையைத் தெளிவுறுத்தும் தொல்காப்பியம், கி.மு.3–ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது" என்று மொழிந்துள்ளார்.

## தொல்காப்பியத்தின் சிறப்புகள்

தமிழகரமுதலி வரலாற்றில் தொல்காப்பியத்தின் பங்கு மிகப் பழமையானது. யாப்பு நடையில் சொற்பொருள் விளக்கும் நிகண்டுகட்குத் தொல்காப்பியம் மூலமாகும். தொல்காப்பியம் "மொழி அறிவியலும்" குமுகாய வாழ்வியலும் அடங்கிய ஒரு தலைநூலாகும்" இக்கால அகர முதலிபோல், அகரவரிசையில், தொல்காப்பியர் சொற்பொருள் விளக்கம் கூறாது போயினும், சொல்லதிகாரத்திலுள்ள உரியியற் பகுதியில், 120 அருஞ்சொற்களுக்குப் பொருள் கூறியுள்ளார். இதே அதிகாரத்திலுள்ள "இடையியல்" பகுதியிலும், அரிய சொற்கட்கு உரிய பொருள்கள் தரப்பட்டுள்ளன. பொருளதிகாரத்திலுள்ள மரபியல் பகுதியிலும், சொற்பொருள் அறிவிக்கும் கூறுகள் அமைந்துள்ளன. உரியியற் பகுதியில் தான் முழு அளவில் அகரமுதலிக் கூறுகள் காணப்படுகின்றன. இதனை "முதல் தமிழ் அகராதி" என்று புலவர் சுந்தர சண்முகனார் (பக்.6. அகராதிக் கலை) கூறுகிறார்.

"இடையியல்", "உரியியல்" பகுதிகளிற் காணப்படும் அரிய சொற்களுக்கு மட்டுமே, பொருள் கூறியுள்ளார். இதனைத் தொல்காப்பியர் உரியியலிலுள்ள,

"வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா உரிச்சொல் மேன" (தொல். 783)

என்னும் நூற்பாவால் அறியலாம். அரிய சொற்களாக அமைந்த ஞான்றும், அனைத்துச் சொற்களையும், அவ்வச்சொற்கட்குரிய எல்லாப் பொருள்களையும் இவ்விடத்தே விளக்கவியலா. விடுபட்ட சொற்களையும், பொருள்களையும் வந்தவிடத்துக் கண்டுகொள்க" என்றும் முடிவில் அறிவித்துள்ளார். இச்செய்திகளை,

"கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான், உணர்ந்தனர் கொளலே"

(தொல். 781) – என்ற இடையியலின் புறனடை நூற்பா தெளிவுறுத்தும்.

"கூறிய கிளவிப் பொருணிலை அல்ல
வேறுபிற தோன்றினும் அவற்றொடு கொளலே"

"அன்ன பிறவும் கிளந்த அல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉம்
உரிச்சொல் லெல்லாம் பொருட்குறை கூட்ட
இயன்ற மருங்கின் இனைத்தென அறியும்
வரம்புதமக் கின்மையின், வழிநனி கடைப்பிடித்
தோம்படை ஆணையிற் கிளந்தவற் றியலாற்
பாங்குற உணர்தல் என்மனார் புலவர்".

'அன்ன பிறவும்' என்னும் நூற்பாவிலுள்ள, 'பன்முறையானும் பரந்தன வரூஉம் உரிச்சொல்' முதலான சொல்லாட்சிகள் புலப்படுத்தும் மாட்சிமை யாதெனின், "அளவிடற்கரிய அரும்பெருஞ் சொற்களைத் தொல்காப்பியர் கூறாதொழிந்தார்" என்பதேயாகும். மற்றும் தொல்காப்பியத்தில் வரும், "என்ப", "என்மனார் புலவர்", "அறிந்திசினோரே", "நூலறி புலவர்" முதலான சொற்குறிப்புகள் தொன்முது பழங்காலத்தே சொற்கட்குப் பொருள் புகலும் அகரமுதலிக் கருத்துரு, தமிழ்மொழியில் முகிழ்த்து விட்டதென்னும் பேருண்மையினைப் பறைசாற்றுகின்றன. "சொற்பொருள் கூறும் அகரமுதலிக் குறிப்புகளாகத் தொல்காப்பியர் விளக்கும் சொற்பொருள் விளக்க அகராதியில், சற்றொப்ப 415 சொற்பொருள் விளக்கக் குறிப்புகள் இடம் பெற்றுள்ளன" (வ.செயதேவன். 1985, பக்.161).

### தொல்காப்பியத்திலுள்ள அகரமுதலிக் கூறுகள் குறித்து தா.வே. வீராசாமி விளக்குவது:–

தொல்காப்பிய உரியியல், சொற்பொருள் பற்றிக் கூறும் தமிழிலக்கணப்பகுதியாகும். மேலும் இந்நூலின் இடையியல், மரபியல் ஆகிய இவ்வீரியலும் சொற்பொருள் வழக்குப் பற்றிக் கூறும். எளிய சொற்களுக்குப் பொருள் கூறாமல், அரிய சொற்களுக்குரிய பொருளைத் தொல்காப்பியர் கூறியுள்ளார்.

இக்காலத்தே எளிதில் பொருள் விளங்கும் சொற்கள், அக்காலத்தில் அரும் பொருள் சொற்களாக அமைந்திருந்ததைத் தொல்காப்பிய நூற்பாக்கள் தெளிவுறுத்துகின்றன.

நூற்பா வடிவிற் சொற்பொருள் கூறும்போது, எதுகை நோக்கிச் சொற்கள் அமைந்துள்ள இவற்றில் அகரநிரலோ, வேறு அளவை நெறியோ குறிக்கப்பெறவில்லை.

"பொதுவாகத் தொல்காப்பியம், சொற்களை இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என நான்கு வகையாகப் பகுத்துள்ளது. இதனால் தமிழ்ச்

சொற்றொகையின் களங்கள் பற்றி அறியலாம். சொற்பிறப்பியல் அகராதியியலின் கூறு எனினும், அதனை அறிதல் கடினம் என்பது தொல்காப்பியக் கருத்தாகும். தொல்காப்பியத்தில் அகராதியியற்கூறுகள் சில உள்ளன.

பிற்காலத்தில் தோன்றிய நிகண்டுகளுக்குத் தொல்காப்பிய உரியியல் களம் அமைத்துத் தந்தது. தொல்காப்பியத்தின் பின்தோன்றிப் பெயரளவில் தெரிகின்ற சில நிகண்டுக் குறிப்புகள், இறையனார் களவியல் உரை போன்றவை கூறும் செய்திகள் துணைக்கொண்டு அகராதிக் கூறுகள் பற்றி ஓரளவு அறியலாம். எனினும் அகராதி பற்றிய கருத்து வடிவில் அவை அமைந்துள்ளன வெனக்கூற வியலாது". – (வாழ்வியல் களஞ்சியம். பக். 69).

எது எவ்வாறாயினும், சொல்லுக்குப் பொருள் கூறும் அகரமுதலித் துறைக்குத் தொல்காப்பியர், முதன்முதலில் அடித்தளம் அமைத்துத் தந்த வரலாற்றுண்மையை எந்த அகரமுதலி அறிஞரும் இதுகாறும் மறுத்தாரில்லை.

## தொல்காப்பியத்தில் மொழிப்பொருளியற் (semantics) கூறுகள்

அகரமுதலியின் அடித்தளமாகத் திகழும் மொழிப் பொருளியற் கூறுகள் தொல்காப்பியத்தில் அமைந்துள்ள பாங்கு வருமாறு :–

தொல்காப்பியச் சொல்லதிகாரம், சொல்லிலக் கணத்தை (Etymology) வரையறை செய்யும் பகுதியாகும். சொற்களின் பல்வேறு நிலைகளையும், இயல்புகளையும் (definition of word) தொல்காப்பியர் ஆழ்ந்து தேர்ந்து தெளிவுறுத்தியுள்ளார். சொற்கட்குரிய இன்றியமையாத இயல்புகள் இருவகை. அவை,

1. பொருள் குறித்தல் (semantic or lexical aspect).
2. இலக்கணம் சுட்டுதல் (grammatical or formal)

இதனைத் தொல்காப்பியர்,

> "பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
> சொல்லின் ஆகும் என்மனார் புலவர்" (தொல். 641)

இந்நூற்பாவின் மூலம் அகரமுதலியியலுக்கு அடித்தளம் அமைக்கும் மொழிப் பொருளியலை, மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தொல்காப்பியனார் திறம்படத் தெளிவுறுத்தியுள்ளார்.




பொருண்மையென்பது, சொல்லின் அடிப்படைத் தன்மையான பொருளீடு பற்றியது. சொன்மை யென்பது, சொல்லின் இலக்கண வடிவைச் சுட்டுவது. இவ்விடத்தே தெய்வச் சிலையாரின் பொருட் பொருத்தப்பாடுள்ள உரை நினைவுகூரத் தக்கது. "சொல்லினாற் குறிக்கப்பட்ட பொருளின் தன்மை ஆராய்தலும், சொல்லின் தன்மை ஆராய்தலும், சொல் தன்னானே ஆகும். நிலம் என்பது பொருளின் தன்மை ஆராய்வார்க்கு, மண்டிணிந்தி யன்றதோர் பூதம் என்றாயிற்று. சொல்லின் தன்மை ஆராய்வார்க்குப் பெயர்ச்சொல் என்றாயிற்று". சொல்லையோ, மொழியையோ, ஐயந்திரிபற உணர்தல் வேண்டின் பொருண்மை தெரிதலும், சொன்மை தெரிதலுமான, சொல்லின் இருவேறியல்புகளையும் முதற்கண் தேர்ந்து தெளிதல் வேண்டும். இவையே தொல்காப்பியம் வரையறுக்கும் அடிப்படை அகரமுதலிக் கூறுகளாம். மொழியியலார் தொல்காப்பியத்தில் "பெரும்பான்மை சொன்மை விளக்கமும், சிறுபான்மை பொருண்மை விளக்கமும் இடம் பெற்றுள்ளன" (வ.செயதேவன். 1985, பக்.36) என்பர். எனவேதான், "பொருண்மை அறிவு கருதி முதலில் நிகண்டுகளையும், சொன்மை அறிவு கருதிப் பின்னர் இலக்கணங்களையும் பயில்வது, பண்டு தமிழகத்தில் மரபாக இருந்து வந்தது" (வ.செயதேவன். 1985, பக்.36).

## தொல்காப்பியத்தின் சொற்பொருட் சிறப்புக் குறித்து மொழிஞாயிறு கூறுவது :–

சமற்கிருதத்திற்போல் தமிழில் இடுகுறிச்சொல் என்பதில்லை. திரவிட மொழிச் சொற்கட்கெல்லாம் வேர்ச் சொல்வளமிகு தமிழ்த் துணைகொண்டே வேர்காணல் இயலும். ஆயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட ஆங்கிலம், இன்று ஆங்கிலர்க்கும் விளங்குவதில்லை. ஈராயிரத்தறுநூறு ஆண்டுகட்கு முற்பட்ட தொல்காப்பியம் இலக்கணப் பயிற்சியில்லாருட்பட எல்லார்க்கும் பொருள் விளங்க நிற்கின்றதெனலாம்.

(எ.டு.) "எல்லாச் சொல்லும் பொருள்குறி த்தனவே"
( தொல். சொல். பெயர். 1)

"மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா"
(தொல். சொல். உரி. 96).

"பொருட்குத் திரிபிலை உணர்த்த வல்லின்"
(தொல். சொல். உரி. 94).

தமிழில் ஏதேனுமொரு பொருள் பற்றி ஒரு புதுச்சொல் புதுக்கினும், அது தமிழ் மரபிற்கொத்ததாகவே இருத்தல் வேண்டும்.

"மரபுநிலை திரியின் பிறிதுபிறி தாகும்"
(தொல். சொல். மர. 92)

"நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலகமாதலின்
இருதிணை ஐம்பால் இயனெறி வழாஅமைத்
திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும்"
(செ.சொ.முதன்மடல முதற்பகுதி. முன்னுரை. பக்.7).

## சொல்லும் – பொருளும், தொல்காப்பியரும் – மேனாட்டு மொழியியலாரும்

இக்கால மொழியியலார் கூற்றிற்கேற்றவாறு கொப்ப சொல்லும் பொருளும் தொல்காப்பியத்தில், செப்பமுடன் வரையறை செய்யப்பட்டுள்ளன.

(எ.கா.) "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" ( தொல். 640).

இந்நூற்பாவில் தொல்காப்பியர் நுவலும் பொருள் எத்தன்மைத்து! "இச் சொற்கள் சுட்டுவது மொழியுலகிற்கு வெளியிலுள்ள பொருளையா? அல்லது மொழியுலகிற்குள்ளே யமைந்த பொருளோடு தொடர்புள்ள கருத்தையா? ஆக்டென், ரிச்சர்ட்சு போன்ற மொழியியலார்தம் வினாக்களுக்குப் பொருந்தும் வண்ணம், சேனாவரையர், நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்கள் வரைந்துள்ள விளத்தம் (வ.செயதேவன். 1985, பக்.38) வருமாறு :–

i) சேனாவரையர் செப்புவது :– சொல்லினைக் கூறுவோன் நிலையில் இவர்தம் கூற்று அமைந்துள்ளது. "சொன்னிகழ்ச்சிக்குப் பொருள் இடம்".

ii) நச்சினார்க்கினியர் நவில்வது :– "கேட்போர் உள்ளத்தில் ஒலிகள் கருத்தை ஆக்குகின்றன. கேட்போருக்குக் கருத்தை அறிந்து கொள்ள உதவும் கருவியாகச் சொல் பயன்படுகிறது. இவ்வாறு, இலக்கணப் புலவர்கள் இயம்பும் பொருளும், மொழியியலார் கருதும் பொருளும், மனத்துக்கண் தோன்றும் கருத்தினையே உணர்த்துவதென்பது நன்கு தெளிவாகிறது.

மேற்குறித்த நூற்பாவினுரையில் (தொல். 640) உரைகாரர்கள் முயற்கொம்பு, யாமை மயிர்க்கம்பளம் போன்ற தொடர்களின் பொருளையும் கருத்திற்கொண்டு, இவற்றைப் பொய்ப்பொருள் அல்லது இல்பொருளெனக் குறிக்கின்றனர். உலகில் முயற்கொம்பு போன்ற பொருள் இல்லையெனினும், இத் தொடருணர்த்தும் கருத்து, எஞ்ஞான்றும் நின்று நிலவுவதறிக.

## தொல்காப்பியம் காட்டும் பலசொல் ஒரு பொருள் (Synonymy)

ஒன்றுக்கும் மேற்பட்ட வெவ்வேறு சொற்கள், ஒரே பொருளைக் குறிப்பின், அது பலசொல் ஒரு பொருள் எனப்படும். தமிழகரமுதலி வரலாற்றில், இவ்வகரமுதலிக் கூறு மிகச் சிறந்த தோரிடத்தைப் பெறுகின்றதெனலாம். இதனைத் தொல்காப்பியம்.

"பலசொல் ஒருபொருட் குரிமை தோன்றினும்" (தொல். 782).

பலசொல் ஒரு பொருள் என்பதனைக் குறிக்க, ஒரு பொருட் பன்மொழி, இணைப் பொருட் சொல், ஒரு பொருட் பல்பெயர், ஒரு பொருட் கிளவி, பொருள் ஒருமை என்னும் தொடர்கள் வழங்குகின்றன. தொல்காப்பியத்தில் பலசொல் ஒரு பொருளுக்குக் காட்டாக பலநூற்பாக்கள் உள்ளன. அவற்றுள் ஒன்று வருமாறு:– "தடவும் கயவும் நளியும் பெருமை" (தொல். 803). ஒரு பொருட் பல்பெயர்கள் ஓரிடத்தில் அடுக்கி வரலாம். "நிவந்தோங்கு பெருமலை" 'கழிபேருவகை' முதலியவற்றை அடுக்கி வரும் ஒரு பொருள் பல பெயர்களைச் சுட்டும் காட்டாகக் கொள்ளலாம். தமிழகரமுதலி வரலாற்றில் அகரமுதலிக் கூறாகக் காணப்படும் தொல்காப்பிய நூற்பா வருமாறு :–

"ஒருபொருளிருசொல் பிரிவில வரையார்" (தொல். 943). இந்நூற்பா இணைப் பொருட் சொற்கள், ஓரிடத்தில் அடுக்கி வரலாம் என்பதைக் காட்டுகிறது.

## இடையியல் – உரியியல் – மரபியல் காட்டும் அகரமுதலிக் கூறுகள் :–

தொல்காப்பியச் சொல்லதிகாரத்திலுள்ள இடையியல், உரியியல் பகுதிகளும் பொருளதிகாரத்திலுள்ள மரபியல் பகுதியும், தமிழ் அகரமுதலி வரலாற்றில் காணப்படும் பழமையான அகரமுதலி அடிப்படைக் கூறுகளாகும். சொல்லுக்குப் பொருள் புகலும் அகரமுதலித் துறைக்கு, மேற்குறித்த மூன்றியலிலும் தொல்காப்பியர் களம் அமைத்துத்

தந்துள்ளார் என்பது அகரமுதலி அறிஞர்கள்தம் கருத்தாகும். முதற்கண், இடையியலில் காணப்படும் அகரமுதலிக் கூறுகள் வருமாறு :-

இடையியல் : ஒவ்வோரிடைச் சொற்கும் தொல்காப்பியர், இடையியலில் பொருள் வரையறை செய்துள்ளார். பெரும்பாலான இடைச் சொற்கட்குரிய பொருள்கள் எளிமையாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. எடுத்துக் காட்டாக, "மன், தில், கொன், உம், ஓ, ஏ, என, என்று, மற்று, எற்று, மற்றையது, மன்ற, தஞ்சம், அந்தில், கொல், எல், ஆர்குரை, மா, மியா, இக, மோ, மதி, இகும், சின், அம்ம, ஆங்க, யா, கா, பிற, பிறக்கு, அரோ, போ, மாது, ஆக, ஆகல், என்பது, ஔ, எனா, என்றா, ஒடு" – முதலான நாற்பது இடைச்சொற்கட்குரிய பொருள்கள் விளக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாகச் சில இடைச் சொற்களின் பொருள் வரையறை வருமாறு :–

"கொன்" என்னும் இடைச்சொல் 1. அச்சம், 2. பயன் இல்லாதது, 3. காலம், 4. பெருமை என்னும் பொருண்மைகளைத் தன்னகத்தே கொண்டது.

(எ.கா.) "அச்சம், பயமிலி, காலம், பெருமையென்
றப்பால் நான்கே 'கொன்'னைச் சொல்லே"

என்னும் நூற்பாவானறியலாம்.

| இடைச்சொல் | சுட்டும் பொருள் |
|---|---|
| மன்ற | தேற்றம் (தெளிவு) |
| தஞ்சம் | எண்மை (எளிமை) |
| கொல் | ஐயம் |

இவை குறித்த தொல்காப்பிய நூற்பாக்கள் வருமாறு :–

"மன்றவென் கிளவி தேற்றம் செய்யும்"

"தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே"

"கொல்லே ஐயம்"

இவை போன்றே ஏனைய இடைச்சொற்களின் பொருண்மைகளையும் தொல்காப்பியர் தமக்கேயுரிய அகரமுதலிக் கூறுகளாக இடையியலில் வெளிப்படுத்தி யுள்ளார். அவைபற்றை விரிக்கின் பெருகுமாதலான் விரிவஞ்சி மேற்செல்வாம்.

எல்லா இடைச்சொற்களையும் அவைகட்குரிய அனைத்துப் பொருட்பாகுபாடுகளையும், ஈண்டுக் கூறவியலாதென்று தொல்காப்பியரே இடையியலில் இயம்பியுள்ளதால், அவையிற்றை யாவராலும் வரையறுக்கவியலாமை இனிது பெறப்படும்.

## உரியியலில் அகரமுதலிக் கூறுகள்

தமிழகரமுதலி வரலாற்றில் தொல்காப்பியரின் "உரியியல்", மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னரே செம்பாதியிடத்தைப் பெற்றுள்ளது. "உறு" வென்னும் சொல் முதலாக, "எறுழ்" என்னும் சொல் ஈறாக நூற்றிருபது சொற்கட்கான பொருள்களை வரையறை செய்துள்ளதால், அகரமுதலி அறிஞர்கள் உரியியலை அகரமுதலியின் அடிப்படைக் களம் என்று பலவாறாக வண்ணித்துரைக்கின்றனர். எடுத்துக்காட்டாகத் தொல்காப்பியர் காட்டும் ஒரு சில உரிச் சொற்களின் பொருள்கள் வருமாறு :–

(எ.டு.) உறு, தவ, நனி என்னும் மூவேறுரிச் சொற்களும், மிகுதி (அதிகம்) என்னும் பொருண்மை பயக்கும் பான்மையினை

"உறுதவ நனியென் வரூஉ மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப" (தொல்.784)

என்னும் நூற்பாவால் அறியலாம். "உரிச்சொல் என்பது செய்யுட்கேயுரிய செய்யுள் வழக்குச் சொல்லாம். இவைபோலும் ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதியினைச் சுட்டும் உரிச்சொற்களே நிகண்டுகளின் ஒரு பொருள்பல்பெயர்த் தொகுதிக்குத் தோற்றுவாய் எனக் கொள்ளலாம்" (வ.செயதேவன். 1985, பக்.47).

நிறம் என்னும் பொருளைப் புலப்படுத்துதற் பொருட்டுக் குரு, கெழு என்னும் இருவேறு அருகிய சொற்களை வழக்காதற்பொருட்டு எடுத்தாண்டுள்ளார்.

"குருவும் கெழுவும் நிறனா கும்மே" என்பது தொல்காப்பியம். குருதி, குருதிக் காந்தள் (செங்காந்தள்), குருதிவாரம் (செவ்வாய்க் கிழமை) முதலிய சொல் வழக்குகளை நோக்குமிடத்து குரு என்பது (செந்) நிறம் பற்றியதென அறியப்படும்.

இன்னாமை (துன்பம்) என்னும் பொருண்மையைப் புலப்படுத்துதற் பொருட்டு, செல்லல், இன்னல் என்னும் சொற்களைக் கூறியுள்ளார்.

(எ.டு.) "செல்லல் இன்னல் இன்னா மையே"

மல்லல் என்னும் சொல் வளமைப் பொருளைக் குறிக்கும் என்பதை "மல்லன் வளனே" என்றும், மழ, குழ போன்ற சொற்கள் இளமைப் பொருள் பயக்குமென்பதை "மழவுங் குழவும், இளமைப் பொருள" என்று தொல்காப்பியர் செய்தளித்த நூற்பாக்கள் குறிப்பிடத்தக்கவாம்.

சொல்லுக்குப் பொருள் புகலும் தொல்காப்பிய உரியியல் நூற்பாக்கள் வருமாறு :-

"சீர்த்தி மிகுபுகழ் மாலை இயல்பே" (இயல்பு = தன்மை)
"கூர்ப்புங் கழிவும் உள்ளது சிறக்கும்" (உள்ளது சிறத்தல் = evolution)
"கதழ்வும் துனைவும் விரைவின் பொருள"
"தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட் டாகும்"
"தடவுங் கயவும் நளியும் பெருமை"
"பழுது பயமின்றே" (பயம் = நன்மை)
"முழுதென் கிளவி எஞ்சாப் பொருட்டே"
"வம்பு நிலையின்மை"
"மாதர் காதல்"
"புலம்பே தனிமை"
"வெம்மை வேண்டல்" (விருப்பப் பொருள் பயப்பது)
"வறிது சிறிதாகும்"
"ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும்"
"பையுளும் சிறுமையும் நோயின் பொருள"
"எய்யாமையே அறியாமையே"
"தெவ்வுப் பகையாகும்"
"செழுமை வளனும் கொழுப்பும் ஆகும்"
"விழுமம் சீர்மையும் சிறப்பும் இடும்பையும்"
"கருவி தொகுதி" (கூட்டப் பொருண்மை பயப்பது)
"இலம்பா டொற்கம் ஆயிரண்டும் வறுமை"
"பே நாம் உருமென வரூஉங் கிளவி
ஆமுறை மூன்றும் அச்சப் பொருள"
"வாள் ஒளியாகும்"
"உசாவே சூழ்ச்சி" (சூழ்வு (ஆலோசனை)ப் பொருள் தருவது)
"வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்"
"கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள"
"புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி"

பத்துப்பாட்டிலொன்றான சிறுபாணாற்றுப் படையில் "அறாயாணர் அகன்றலைப் பேரூர்" என்ற தொடரில் 'யாணர்' என்னுமிச்சொல், 'வருவாய்' என்னும் பொருளில் வந்துள்ளமை காண்க.

"யாணுக் கவினாம்" (யாணு = அழகுப் பொருள் பயப்பது)
"ஐவியப் பாகும்"
"வையே கூர்மை"
"எறுழ்வலி யாகும்"

சொற்பொருள் கூறும் அகராதியியல் வரலாற்றில், சற்றொப்ப மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னரே, தமிழர் தலைசிறந்து திகழ்ந்தனர் என்பதற்கு நற்சான்று படைப்பனவாகும். தமிழர்தம் வாழ்வியலில் இரண்டறக் கலந்த பல வளமான அரிய அழகிய புதிய சொற்களும், பொருள்களும் மேற்காண் நூற்பாக்களில் இடம் பெற்றுள்ளன.

பலவரிய சொற்களஞ்சியங்களுக்கிடையே, அன்றைய மக்கள் பயன்படுத்திய தீர்தல், தீர்த்தல், பழுது, முழுது, செழுமை, கறுப்பு, சிவப்பு, நினைவு, துணிவு, வறிது, சிறிது முதலான எளிமையான வழக்குகளையும் தொல்காப்பியர் குறித்துள்ளார். இற்றை நாளில் எளிமையவாகத் தோன்றும் இச் சொற்கள், தொல்காப்பியர் காலத்தே அருகியவாகக் கருதப் பட்டன போலும் ! மற்றும், 'கடி' என்னும் ஓர் உரிச்சொல், தமிழகரமுதலி வரலாற்றில் அகராதிக் கூறாகப் பன்னிரு பொருள் பகரும் தமிழில் சொல்வளங் கூட்டும் நூற்பா வருமாறு :-

"கடியென் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே
அச்சம் முன்தேற்று ஆயீ ரைந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே"
(தொல். 866)

"ஐயமும் கரிப்பும் ஆகலும் உரித்தே"
(தொல். 867).

மேற்காண் உரியியல் நூற்பாக்களில், "கடி" என்னும் சொற்குக் கடித்தல் என்னும் வினைப்பொருள் செய்தாரில்லையென்றும், "மாலை இயல்பே" என்னும் நூற்பாவில், மாலைப்பொழுது என்று பொருள் பயக்கும் "மாலை நேரம்" என்னும் காலப் பொருண்மை காட்டினாரில்லையெனவுங் கருதலாம்.

இஃது உரியியல் பகுதி : இங்கு உரிச்சொற்கட்குரிய உரிப்பொருட் பண்புகளை அடிப்படையாகக் கொண்டே இலக்கண வரம்பிகவாமல் பொருள்கள் விளக்கப்பட்டுள்ளன. இங்கு வினைப் பொருளும், பெயர்ப் பொருளும் பகர்வது தொல்காப்பியர்தம் கருத்தன்றாம். உரிச்சொல்லின் கருத்துத் தோற்றத்தை விளக்க வந்த தொல்காப்பியர்,

"உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி"

(தொல். 782) என்று பண்புச் சொற்களாக, உரிச்சொற்களை விளக்கியுள்ளார். கறுப்பு, சிவப்பு, முழுமை போன்ற பண்புகளே உரிச்சொற்களின் இயல்புகளாம். ஒரு பொருளின் பல்வகைப் பண்புகளை விளக்கும் சொற்களே, உரிச்சொற்கள். உள்ளத்தாலும், ஐம்பொறிகளாலும் உய்த்துணரப்பெறும் உலகியற் பொருள்களின் இயல்பாயமைந்த முழுமைப்பண்புகளே உரிச்சொற்களின் இயல்வரையறையாம். எனவே, உரிச்சொற்கள், பொருட்களின் பெயர்களைக் குறிக்கும் பெயர்ச் சொற்களுமல்ல; செயற்பாடுகளைக் குறிக்கும் வினைச்சொற்களுமல்ல. உரியியலில் பொருளின் வினைப் பொருளையும் பெயர்ப் பொருண்மையையும் பகர்வது தொல்காப்பியர்தம் நோக்கமன்று. இசை ஒலி, நிறம், அளவு, தன்மை, உணர்வு முதலான பல்வேறு பண்புகளைக் குறிக்கும் சொற்களே உரிச்சொற்களென்றுணர்க.

உரியியல் முழுமையும் பொருள் விளக்கப்பகுதியெனலாம். எளிதில் பொருள் தெரியும் சொற்களை விட்டுவிட்டு அரிதுணர் 120 அருஞ்சொற்களைத் தேர்ந்து தெரிந்தெடுத்து, அச்சொற்கட்கு மட்டுமே தொல்காப்பியர் பொருள் விளக்கியுள்ள பான்மையினை,

"வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா உரிச்சொல் மேன"

(தொல். 783) என்னும் நூற்பாவால் அறியலாம்.

## அகராதிக் கலையின் அடிப்படை விளக்கமே உரியியல்

சொற்பொருள் விளக்கும் அகரமுதலித் துறையில், அகரநிரலாக, சொற்களைத் தொல்காப்பியர் அமைக்காது போயினும், மரபு காத்து சொல்லுக்குரிய வெளிப்படைப் பொருளையும், குறிப்புப் பொருளையும் இயல் வரையறை செய்துள்ளார். உரியியலில், ஓராசிரியர் மாணவருக்குச் சொற்பொருளைத் தெரிவு செய்து செப்புதல் போல, அவ்வச்சொற்களுக்குரிய இயல்வரையறைசெய்பான்மை அனைத்து மொழியியல் வல்லுநர்களாலும் வியந்து போற்றும் வண்ணம் அமைக்கப்பட்டதற்கான சான்று வருமாறு :-

"பொருட்குப் பொருள்தெரியின் அதுவரம் பின்றே" (தொல். 874)

மேற்குறித்த நூற்பாவில், பொதிந்துள்ள, *அகரமுதலிக் கலை குறித்த கருத்து வருமாறு:-*

ஆசிரியர் மாணாக்கர்க்குச் சொற்கட்குரிய வெளிப்படைப் பொருளையோ அல்லது குறிப்புப் பொருளையோ விளக்குங்கால், நடப்பு வழக்குச் சொற்களை எடுத்துக்காட்டாகக் கூறிப் பொருட் பொருத்தப்பாட்டினை விளக்குவர். அவ்வாறு காட்டாகக் காட்டப்பெற்ற சொற்கட்கும் பொருள் புலப்படவில்லையெனின், அவற்றையும் ஆசிரியர் விளக்கமுற்படுவாராயின், வரம்பின்றி விரிந்து பெருக நேரும்.

ஆயினும், ஆசிரியர் சிறந்தெடுத்து மாணாக்கர்கட்குப் பொருளுணர்த்த வல்லாராயின், நன்குத் தெரிந்த பிறிதோர் வெல்லும் சொல்லின் துணைக்கொண்டோ அல்லது கட்புலனாம் பொருளொன்றைக் காட்டியோ விளக்கலாம். செவி வாயாக நெஞ்சு களனாக விரும்பிக் கேட்கும் மாணவர்க்கும் சொல்லும் பொருட்கண் மயக்கம் தோன்றாது. ஆசிரியர் எத்துணைச் சிறந்தெடுத்து பொருளுணர்த்த முற்படுவாராயினும் கற்பாரின் அறிவுணர்திறன் பொறுத்தே பொருட் புலப்பாட்டில் தெளிவுண்டாம். இவ்வரிய கருத்தினைத் தொல்காப்பியர்,

"பொருட்குத் திரிபில்லை உணர்த்த வல்லின்"

(தொல். 875).

"உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே"

(தொல்.876) என்றும், உரைத்துள்ள பாங்கு, சொற்பொருள் சுட்டும் அகரமுதலிக் கலையில் இலக்கணப்புலவர்க்குள்ள ஈடுபாட்டினை எடுத்தியம்பப் போதரும்.

மேலும், "இக் காலக் கல்வித்துறையில், சொல்லுக்குப் பொருள் கூறும் முறைபற்றிப் பயிற்றுமுறை நூல்களுள், பல வழிகள் நவிலப்பட்டுள்ளன. அவற்றுடன், மேற்காண் தொல்காப்பிய நூற்பாக்களையும், கல்வித் துறையினர் கருத்திற் கொள்ளலாம்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.37).

## மரபியயலில் அகரமுதலிக் கூறுகள் :-

தொல்காப்பிய நிறைவுப் பகுதியான மரபியலில், மரபுப் பொருளறிவிக்கும் அகரமுதலிக் கூறுகள், சற்றொப்ப 100 நூற்பாக்களின் மூலம் நிறைவுறுத்தக் காணலாம். மரபு (usage) என்னும் சொல், முறைமை அல்லது வழக்கமுறை என்னும் பொருளில், மரபியலில் ஆளப் பெற்றுள்ளது. அஃதாவது, ஒன்றற்கு

தொன்றுதொட்டு வழங்கும் முறை–, இதையிதை, இவ்வாறுதான், சொல்லவேண்டுமென்று உயர்ந்தோர் எவ்வெச் சொற்களை உலக வழக்கில் வழங்கினரோ, அதனைப் பின்பற்றுவதே மரபு என்பார் தொல்காப்பியனார். எடுத்துக்காட்டாக, மிகச்சிறிய இளம்பருவக் கோழியைக் கோழிக்குஞ்சு என்பதே மரபு. கோழிக்குட்டி என்று சொல்வதில்லை. மிகச் சிறிய யானையை யானைக்குட்டி என்று சொல்வதே மரபு. யானைக்குஞ்சு என்று கூறுவது மரபன்று என்பது தொல்காப்பியர்தம் மரபியற் கருத்தாம்.

மரபு போற்றுவதென்பது அகராதிக் கூறுகளுளொன்றாம். "அகராதியியலின் ஒரு கூறாகிய மரபைச் சுட்டுவதற்கென்றே தொல்காப்பியர் மரபியலைப் படைத்துள்ளதாக மொழியியலார் மொழிகின்றனர்" (வ.செயதேவன். 1985, பக்.44). மரபுப்பொருள் 63 நூற்பாக்களிலும், மரபுச் செய்திகள், மரபியல் முழுமையும் இடம் பெற்றுள்ளன. "சொற்பொருள் விளக்க அகராதி" யில், ஏறத்தாழ 40 சொற்கள் மரபுசார் பொருள் விளக்கம் பெற்றுள்ளன. தொல்காப்பிய மரபியல் முழுமையும் ஆண்மை, பெண்மை இளமைப் பெயர்களின் மரபுகள் சுட்டப்படுவதோடு அஃறிணை யுயிரிகளின் பாகுபாடும், சிறப்புடை மரபும் தெரித்த சொற்களான் சிறந்தெடுத்துரைக்கக் காணலாம்.

மேலும், தொல்காப்பியர், நால்வகையினத்தார் தம் இயல்புகள் குறித்த சொற்களையும், மரவகையின் உறுப்புகள் பற்றிய சொற்களையும், நூன்மரபு பற்றிய சொற்களையும் மரபியலிற் குறித்துள்ளார்.

சுருங்கக்கூறின், தொல்காப்பிய மரபியல், i) பொதுவாக மரபிற்குரியவை; ii) இளமைப் பெயர்கள்; iii) உயிர்களின் பாகுபாடும், சிறப்புடை மரபும்; iv) ஆண்பாற் பெயர்கள்; v) பெண்பாற் பெயர்கள்; vi) நூலின் மரபு குறித்த செய்திகள் இன்னபிறவற்றை எடுத்தியம்புவதாம். மேற்குறித்த பொருண்மைகட்கு எடுத்துக்காட்டாகத் தொல்காப்பியர் காட்டும் நூற்பாக்கள் வருமாறு :–

அ) பறவை – விலங்குகளின் இளமைப் பருவங் குறிக்கும் நூற்பா :–

"மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பிற்
பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும்
கன்றும் பிள்ளையும் மகவும் மறியுமென்
றொன்பதும் குழவியோ டிளமைப் பெயரே"
(தொல். 1500).

ஆ) பறவை மற்றும் ஊருயிரிகளின் இளம்மையைக் குறிக்கும் பார்ப்பு, பிள்ளை முதலான பெயர்களைக் குறிக்கும் நூற்பாக்கள் :–

i) அவற்றுள்,
"பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை"
(தொல். 1503)

ii) "தவழ்பவை தாமும் அவற்றோ றன்ன"
(தொல். 1504).

இ) மூங்கா (கீரி); வெருகு (பூனை); எலி, அணில் என்னும் இந்நான்கிற்கும் குட்டி, பறழ் என்னும் இளமைப் பெயர்களைக் குறிக்கும் நூற்பாக்கள் :–

i) "மூங்கா வெருகெலி மூவரி அணிலொடு
ஆங்கவை நான்கும் குட்டிக் குரிய" (தொல். 1505).

ii) "பறழெனப் படினும் உறழாண் டில்லை"
(தொல். 1506).

ஈ) குருளை, குட்டி, பறழ் என்னும் இளமைப் பெயர்கள், நாய், பன்றி, புலி, முயல், நரி ஆகியவற்றிற்குரியன. இவற்றுள் நாயொழிந்த ஏனைய நான்கும் விலங்கின் பிள்ளைமைப் பெயராகத் தொல்காப்பியர் குறித்துள்ள நூற்பாக்கள் :

i) "நாயே பன்றி புலிமுயல் நான்கும்
ஆயுங் காலைக் குருளை என்ப" (தொல். 1507).

ii) "நரியும் அற்றே நாடினர் கொளினே" (தொல். 1508).

iii) "குட்டியும் பறழும் கூற்றவண் வரையார்"
(தொல். 1509).

iv) "பிள்ளைப் பெயரம் பிழைப்பாண் டில்லை
கொள்ளுங் காலை நாயலங் கடையே"
(தொல். 1510). இவை போன்றே மற்ற விலங்குகட்குரிய இளமை பெயர்களும் தொல்காப்பியத்துள் விரிவாக எடுத்தியம்பப்பட்டுள்ளன.

உ) பறவை – விலங்குகளின் ஆண்பாற் பெயர்கள் பற்றிய பட்டியலைப் பின்வரும் மரபியல் நூற்பாவில் தொல்காப்பியர் குறிப்பது வருமாறு :–

"ஏறும் ஏற்றையும் ஒருத்தலும் களிறும்
சேவுஞ் சேவலும் இரலையும் கலையும்
மோத்தையும் தகரும் உதளும் அப்பரும்
போத்தும் கண்டியும் கடுவனும் பிறவும்
யாத்த ஆண்பாற் பெயரென மொழிப"
(தொல். 1501).

ஊ) பறவை - விலங்குகளின் பெண்பாற் பெயர்களைக் கீழ்கண்டவாறு வகைமை செய்யும் தொல்காப்பிய நூற்பா வருமாறு :-

"பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்
மூடும் நாகும் கடமையும் அளகும்
மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவும்
அந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே"
(தொல். 1502)

## தொகையகராதிக்கு அடிக்கோலியவர் தொல்காப்பியர்

சொற்பொருள் கூறும் அகராதியியலில், தொல்காப்பியரின் ஆறுயிர்ப் பாகுபாடு, மிகச் சிறந்த அகரமுதலிக் கூறாகத் திகழ்கிறது. இது பற்றி மொழிஞாயிறு, "உயிரிகளையும், ஐம்புலனும் பகுத்தறிவுமாகிய ஆறறிவு பற்றி, ஓரறிவுயிர் முதலாக ஆறறிவுயிரீறாக உலகத்துயிர்களை அறுவகையாகப் பகுத்திருந்தார்கள்" (ஞா. தேவநேயப் பாவாணர், பக்.23) மற்றும் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு என்னும் எண்களாற் சுட்டப்படும் தொகைப் பெயர்கள் மரபியலில் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

அவையாவன :-

ஓரறிவென்பது உடம்பினால் தொட்டறியும் (தொட்டுணரும்) அறிவு.

ஈரறிவென்பன அதனோடிணைந்த சுவையறிவைக் குறிக்கும்.

மூவறிவென்பன இரண்டறிவோடு மூக்கினா லுணரும் அறிவினையும் குறிக்கும்.

நாலறிவென்பன மூன்றறிவோடு கண்ணினாற் காணலாகுங் பார்வைக்காட்சி யறிவைக் குறிக்கும்.

ஐயறிவென்பன முற்கூறிய நான்கறிவோடு கேட்கும் திறன் பெற்ற செவியறிவைக் குறிக்கும்.

ஆறறிவென்பன மேற்காட்டிய ஐந்தறிவோடு மன அறிவும் - மனவுணர்ச்சியும் சேர்ந்ததாம். மக்கள் இவ் வகையின்பாற்படுவர். இதனை தொல்காப்பியர் செய்தளித்த தொகைநூற்பாவா னறிக :

"ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே
நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத் தினரே"
(தொல். 572).

i) ஓரறிவின புல், மரம் போன்றன. இதுகுறித்துத் தொல்காப்பியர்

"புல்லும் மரனும் ஓரறி வினவே
பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே" (தொல். 1527).

ஓரறிவுயிரையும், மனிதரையும் இவ்விரு வகையாகப் பகுத்தது, மிக வியக்கத்தக்கது. இது தொல்காப்பியர்தம் நுண்மாண் நுழைபுலத்திற்கு மிகச்சிறந்த எடுத்துக்காட்டு எனலாம். இது குறித்து மொழிஞாயிறு மொழிவது, "புல்லும் மரனும் ஓரறிவினவே" என்னும் போதே, புல்லுக்கும், மரத்துக்கும் இடையில் உள்ள பூண்டு, புதர், செடி, கொடி முதலியவும் புல்லின் வகையாயடங்கும் என்பது புலனாகும்" (ஞா. தேவநேயப் பாவாணர், பக்.24) .

ii) ஈரறிவுடையன நந்து - (நத்தை); முரள் = (இப்பி) (சங்கு); முதலியன இவ்வுயிரிகள் குறித்த தொல்காப்பிய நூற்பா :-

"நந்தும் முரளும் ஈரறி வினவே
பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே" (தொல். 1528).

iii) சிதல் (கறையான்); எறும்பு முதலியன மூவறிவின என்பதை,

"சிதலும் எறும்பும் மூவறி வினனவே
பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே" (தொல். 1529)
என்று குறித்துள்ளமை காண்க.

iv) நாலறிவின, நண்டு, தும்பி முதலியன என்பதை,

"நண்டும் தும்பியும் நான்கறி வினவே
பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே" (தொல். 1530)
என்னும் நூற்பாவிற் குறித்துள்ளார்.

v) விலங்கு, பறவை முதலியன ஐயறிவின என்பதை,

"மாவும் புள்ளும் ஐயறி வினவே
பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே" (தொல். 1531)
என்னும் நூற்பாவில் விலங்கு, பறவை போன்றவற்றிற்கு மாவும் புள்ளும் என்னும் சொற்களைக் கூறுகின்றார்.

vi) ஒருவன் மனித வடிவு கொண்ட மாத்திரத்திலேயே மனிதனாகி விட மாட்டான். அறிவு, நல்லொழுக்கம் முதலான நற்குணங்களைக் கொண்டதனாலேயே, அஃதாவது, நல்லதன் நலனும், தீயதன் தீமையுமுள்ளவாறு பகுத்தறிபவனே, மக்களுள் ஒருவனாக மதிக்கப்படுகிறான். இதனைத் தொல்காப்பியர்,

"மக்கள் தாமே ஆறறி வுயிரே
பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே" (தொல். 1532)

எனும் நூற்பாவில் தெளிவுறுத்தியுள்ளார்.

இவ்வாறு தொகையகராதிக் கூறுகளை விளக்கும் வண்ணம் அகராதியியலின் பண்புகளாகத் திகழும் மரபியற் செய்திகள் அனைத்தும் தமிழகரமுதலி வரலாற்றில், சொற்பொருள் குறிப்பிடும் நற்சான்றுகளெனலாம்.

## மரபியல் நூற்பாக்கள் பற்றி மொழிஞாயிறு :-

"இவை தொல்காப்பிய நூற்பாக்கள். தொல்காப்பியத்தின் காலம் கி.மு. இரண்டாயிரமாதலாலும், அஃதொரு வழிநூலாதலாலும், "நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே" என்று கூறியிருப்பதாலும், மேற்கூறிய செய்திகள் உயர்ந்தோர் தொன்று தொட்டு வழங்க, நெடுங்காலமாக வழங்கிய வழக்குகளைக் கூறும் பகுதி, மரபியலிற் கூறப்பட்டிருப்பதாலும், தமிழரின் ஆறுயிர்ப் பாகுபாடு எண்ணுக்கு மெட்டாத தொன்மைத் தென்றறியலாம்" (ஞா. தேவநேயப் பாவாணர், பக்.24).

## புறக்காழ் – அகக்காழ்

புறக்காழ் வெளிவயிரமுடைய. அகக்காழ் உள்வயிரமுடைய புல்லும் மரமும் ஓரறிவுடையன. தோடு, மடல், ஓலை, ஏடு, இதழ், பாளை, ஈர்க்கு, குலை முதலியன அகக்காழ் வகையைச் சார்ந்த மரத்தின் உறுப்புகளாகும். மூங்கிலானது உறுப்பால் புல்லாயும், உயரத்தால் மரமாயும் இருப்பதால், புறக்காழ் அமைப்பினை அடிப்படையாக் கொண்டு,

"புறக்கா ழனவே புல்லென மொழிப" (தொல். 626)

"அகக்கா ழனவே மரமென மொழிப" (தொல்.627)

என்னும் நூற்பாக்களைத் தொல்காப்பியர் யாத்துள்ளார். இவற்றுள், "மொழிப" வென மொழிந்திருப்பதனால், இவை முந்தைய நூலாசிரியர்கள் கூற்றென்றறிதல் வேண்டும்.

## பொருட் பன்மை (Polyvalency or multiplicity of meaning)

அகரமுதலி வரலாற்றில், ஒரு சொல் ஒன்றுக்கும் மேற்பட்ட பொருள் கொண்டிருப்பின் அது பொருட்பன்மை எனப்படும். இப்பொருட் பன்மை இருவகைப்படும் (வ.செயதேவன். 1985, பக்.39).

i) பல்பொருட் கிளவி (Polysemy)
ii) ஒப்புருச்சொல் (Homonymy)

"ஒன்றோடொன்று தொடர்புடைய பல பொருள்களைக் கொண்டது பல்பொருட் கிளவியாகும். பொருள் தொடர்பற்ற வெவ்வேறு சொற்கள் உருவொப்புமை கொண்டிருப்பின் ஒப்புருச்சொல் எனப்படும்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.73). தொல்காப்பியம், இவ்விரு அகரமுதலிக் கூறுகளையும் வேறுபடுத்தாது, பலபொருளொருசொல் என்றே பகராநிற்கும்.

(எ.கா.) "கடியென் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே
அச்சம் முன்தேற்று ஆயீ ரைந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே"
(தொல். 866)

பொருட்பன்மை வளர்ச்சிக்கு வழக்கு, மாற்றம் ஒரு காரணியம் எனலாம். வழங்கும் சூழலுக்கேற்பச் சொற்கள் பல்வேறுபட்ட பொருட்கூறுகளைப் பெறுகின்றன. தமிழகரமுதலி வரலாற்றில் குறிக்கத்தக்க மிகச் சிறந்த அகராதியியற் கூறுகளுள், இஃதொன்றாகும்.

இக் கூறுகளுள் சில மாறுந் தன்மையன; வேறுசில நிலைத்த பொருளுடையன. இந்நிலைத்த பொருட்கூறுகளுக்கு அடிக்கோலும் வழக்கு மாற்றத்தைத் தொல்காப்பியர்,

"வாரா மரபின வரக்கூ றுதலும்
என்னா மரபின எனக்கூ றுதலும்
அன்னவை யெல்லாம் அவற்றவற் றியல்பான்
இன்ன வென்னும் குறிப்புரை யாகும்" (தொல். 905)

எனக் குறிப்பிடுகின்றார்.

## எதிர்ப்பொருள் :-

எதிர்ப்பொருள் சுட்டலும், அகரமுதலிக் கூறுகளுள் ஒன்று. ஒரு சொல்லின் பொருட் கூறுகளுள் ஏதேனும் ஒன்று, மற்றொரு சொல்லின் பொருட் கூறுகளுள் ஏதேனும் ஒன்றோடு மாறுபட்ட நிலையில்,

இருவேறு சொற்களுக்குமிடையே தோன்றும் மாறுபாடே எதிர்ப்பொருள் ஆகும். தொல்காப்பியத்தில், உயர்திணை – அஃறிணை; ஆண்மை – பெண்மை; இயற்கை – செயற்கை; ஒருமை – பன்மை போன்ற எதிர்ச்சொல் இணைகள் – அகராதியியற் கூறுகளாய் அமைந்துள்ளன. எதிர்மறையும் ஒருவகையான எதிர்ப்பொருள் ஆகும்.

தொல்காப்பியர்தம் உயர்திணை – அஃறிணைப் பொருட்பாகுபாடு, "தமிழரின் சிறந்த அறிவாற்றலையும், நாகரிகத்தையும் காட்டுவதாகும். திணை = குலம்.

பகுத்தறிவுள்ள அல்லது ஒழுக்கமுள்ள மேன்மக்கள் உயர்திணையெனவும், அவரல்லாத கீழ் மக்களும் உயிருள்ளனவும், உயிரல்லனவும் அஃறிணையெனவும் அறைகுவர். ஒருவனுக்குப் பகுத்தறிவிருந்தும், ஒழுக்கமில்லாவிடின் அவன் உயர்திணையாகான். ஆகையால், பகுத்தறிவென்பது எப்போதும் ஒழுக்கத்தையும் தன்னுடன் உளப்படுத்தும்.

அல் + திணை → உயர்வல்லாத திணை, அஃறிணையெனப்பட்டது.

இக் கருத்தினைத் தொல்காப்பியர்,

உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை யென்மனார் அவரல பிறவே"
(தொல்.சொல்.1)

ஒரு சொற்றொடரை, எதிர்மறுத்துரைக்குங்கால், பெயர், வினைகட்கிடையே அமைந்துள்ள வேற்றுமையுறவு எஞ்ஞான்றும் பொருட்டன்மையில் மாறுவதில்லை என்னும் பொருண்மையை விளக்கும் தொல்காப்பியர்தம் நூற்பா வருமாறு:–

"எதிர்மறுத்து மொழியினும் தத்தம் மரபின்
பொருணிலை திரிபா வேற்றுமைச் சொல்லே"
(தொல். 591).

மேலும், எதிர்மறுத்து மொழியுங்கால், பெயர்கள், பயனிலைகளோடு ஏற்பட்டுள்ள உறவில் பொருள்மாற்றம் எஞ்ஞான்றும் நேராது என்பதனைத் தொல்காப்பியர்,

"பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்
எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா"
(தொல். 721).

என்று மொழிந்துள்ளமை எதிர்பொருள் சுட்டும் அகராமுதலிக் கூறாகலாம். மேலும், எவ்வாறெல்லாம் எதிர்மறைப் பொருண்மை தோன்றும் என்பதை விளக்க வந்த தொல்காப்பியர்,

"வினாவழி எதிர்மறை" (தொல். 729)
மற்றும்
"எதிர்மறை எச்சவழி எதிர்மறை" (தொல். 918)

முதலான நூற்பாக்களின் வாயிலாக விளக்குகின்றார். எதிர்ப்பொருள் சுட்டும் தொல்காப்பியர்தம் இவ்வகர முதலிக் கருத்துகளை அடியொற்றியே இக்கால அகராதி யியலார், "எதிர்மறை உருபன்களால் மட்டுமன்றி, வினா, எதிர்மறை எச்சம் ஆகியவற்றின் வாயிலாகவும், எதிர்ப் பொருள் தோன்றும்" (வ.செயதேவன். 1985) என்று குறித்துள்ளனர்.

## சொல்வழக்கு வரையறை (range of application of the word)

அகரமுதலி வரலாற்றில், சொல்வழக்கு வரையறையென்பது, பொருட்சூழலுக்கு ஏற்றவண்ணம் (context) சொற்களை வழங்குதலாகும். ஈ, தா, கொடு ஆகிய சொற்கள் வழங்கும் சூழலுக்கு ஏற்றவாறு ஒருமைப் பொருள் பயக்கும். எனினும், இவற்றை வழங்குவதற்கெனச் சில வரையறையுள. ஈ, தா, கொடு என்னும் மூவேறு சொற்களுள் "தா" என்னும் சொல் வழக்கினைப் பாவாணர் பொருள் வரையறை செய்யுங்கால், தொல்காப்பியர் நவின்றவண்ணம், அச்சொல்லினது பொருண்மை புலப்படுத்திய பாங்கு, தமிழகரமுதலி வரலாற்றில் குறிக்கத்தக்கது.

"பழந்தமிழ் வடிவமான "தா" என்னும் சொல் திராவிடத்திற்குத் தாய் என்னும் முன்மையையும்" ஆரியத்திற்கு மூலமென்னும் உண்மையையும் உணர்த்தும் முந்துதமிழ்ச் சொல்லாக விளங்குகிறது" (செ.சொ.பி. அகரமுதலி நான்காம் மடலம், முதற்பகுதி, பக்.337) என்று குறிப்பிட்டுள்ளார். இச்சொல் வழக்கு வரையறை பாவாணர்தம் கொள்கைக்கு அரண் செய்யும் பான்மையினை,

"தாவென் கிளவி ஒப்போன் கூற்றே" (தொல். சொல் 929) – என்ற தொல்காப்பிய நூற்பாவால் அறிவோம்.

இச்சொல் வழக்கு "இலவயமாகக் கொடுத்தல்" என்னும் பொதுப்பொருளில், வடமொழியில் தா (da) என்றும், இலத்தீன், துடவம் முதலான மொழிகளில் 'தோ' (do) என்றும் வழங்குகின்றது.

தருதல், ஈதல், கொடுத்தல் எனும் வினை பற்றித் தொல்காப்பியம் கூறுங்கால்,

"ஈ தா கொடுவெனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகிட னுடைய" (தொல். 927)

அவற்றுள்,

"ஈயென் கிளவி இழிந்தோன் கூற்றே" (தொல். 928)

"தாவென் கிளவி ஒப்போன் கூற்றே" (தொல். 929)

"கொடுவென் கிளவி உயர்ந்தோன் கூற்றே" (தொல். 930) என்று மொழிகின்றார்.

## சொல்வழக்கின் பொது - சிறப்புப்பொருட் பாகுபாடு

"புதுப்பெருக்கு நீரைக் குறித்து வழங்கும் "வெள்ளம்" என்னும் சொல், தன் சிறப்புப் பொருளையிழந்து, "நீர்" என்னும் பொதுப்பொருளில் மலையாளத்திலும், விடை சொல்லுதலைக் குறிக்கும் "செப்பு" என்னும் சொல் தன் சிறப்புப்பொருளையிழந்து, "சொல்லுதல்" என்னும் பொதுப்பொருளில் தெலுங்கிலும் வழங்குவது போன்றே, ஒத்தோனுக்குக் கொடுத்தலைக் குறிக்கும் "தா" என்னுஞ் சொல்லும், தன் சிறப்புப் பொருளையிழந்து, கொடுத்தலென்னும் பொதுப் பொருளில் வழங்குகின்றதென்னும் (செ.சொ.பி. அகரமுதலி நான்காம் மடலம், முதற்பகுதி, பக்.337) சொற் பொருண்மையினை அகரமுதலி வரலாற்றில், பாவாணர் சுட்டிக் காட்டுவார்.

"தா" என்னும் வழக்கு, தமிழின் தலைமைத் தன்மையை நிலை நாட்டும் செந்தமிழ் வழக்காகும். தா என்பதைச் சிலர் வடசொல் வழக்கென ஐயுறுவர். இக் கூற்றினை மறுத்துத் தமிழ்ச்சொல் என்று, பாவாணர் நிறுவுந்திறன் வருமாறு:-

தன்னேரிலாத் தமிழின், "தலைமைத் தன்மையை நிலைநிறுத்தும் சொற்களுள், 'தா' என்பதும் ஒன்றாகும். தொன்றுதொட்டு இருவகை வழக்கிலும் வழங்கி வருதலும், அடிப்படையைச் சேர்ந்த எளிய சொல்லாய் இருத்தலும், சிறப்புப்பொருள் கொண்டு, ஏனையிரு தூய தென்சொற்களுடன் தொடர்புடைமையும், 'தா' என்பது, தமிழ்ச்சொல்லே என்பதற்குத் தக்க சான்றுகளாகும். தரவு, தருகை, தரகு, தத்தம், தானம் ஆகிய சொற்களெல்லாம் 'தா' என்னும் முதனிலையினின்று திரிந்தவையே. இறுதியிரண்டும் வடமொழியில் வழங்குவதனாலேயே வடசொற்போல் தோன்றுகின்றன.

இனி, 'தா' என்னும் வினைச்சொல் படர்க்கை யிடத்தில் வாராதென்று விலக்கப்பட்டிருப்பதும், அது தமிழ்ச்சொல்லே யென்பதை உணர்த்தும்.

அவற்றுள்,

"தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை ஆயீ ரிடத்தே" (தொல். 512)

தமிழ்மொழியிற் சுட்டப்படும் சிறப்புமிக்க இப்பொருள் வரம்பு, ஏனை மொழிகளில் இல்லை.

மேற்குறித்த கரணியங்களினால், "தா" என்னும் சொல், தூய தென்சொல் லென்று துணியலாம். "தா" என்னும் வழக்கும், ஒத்தோனுக்குக் கொடுத்தல் என்னும் சிறப்பு வழக்கினைக் குறிக்கும் செந்தமிழ் வழக்கெனலாம்.

ஈ, தா, கொடு முதலான சொற்களின் வழக்கினை வரையறுத்ததுபோல் செலவு, தரவு, கொடை ஆகிய சொற்களின் வழக்கினையும், தொல்காப்பியர் வரையறைப் படுத்திய நூற்பாக்கள் வருமாறு:-

"செலவினும் வரவினுந் தரவினுங் கொடையினும்
நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்
தன்மை முன்னிலை படர்க்கை யென்னும்
அம்மூ விடத்தும் உரிய என்ப" (தொல். 511).

"அவற்றுள்
தருசொல், வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை ஆயீரிடத்த" (தொல். 512)

"ஏனை யிரண்டும் ஏனை யிடத்த" (தொல்.513)

மேற்குறித்த தொல்காப்பிய நூற்பாக்கள் அனைத்தும், அகரமுதலிக் கூறான, சொல்வழங்கு வரையறையை, வரையறுப்பனவாம்.

**அகரவரிசை:** சொற்களை அகரவரிசையில் அமைத்து இயல்வரையறை செய்வது, அகரமுதலியின் அடிப்படைப் பண்பாம். அகராதியியல் வல்லுநர்கள் அகரவரிசையை, அகரநிரல் என்றும் குறிப்பர். இவ்விரு வேறு சொற்களும் ஒரே பொருண்மைய. இவ்வகர வரிசை பற்றி அகராதியியல் வல்லுநர் குறிப்பிடுவது: "சொற்களை அகரநிரலில் அமைத்துப் பொருள் விளக்கம் கூறும் முறையே உலக அகரமுதலியிற் பெரும்பாலும் காணப்படுகிறது" (வ.செயதேவன். 1985, பக்.40).

தமிழகரமுதலி வரலாற்றில் அகரநிரற் கருத்திற்குத் தொல்காப்பியர் களமமைத்துத் தந்துள்ளமையை அனைத்து அகரமுதலி வல்லுநர்களும் ஏற்றுக் கொண்டுள்ளனர். தொல்காப்பியர் எழுத்துகளின் அகரவரிசையை இயம்பும் பாங்கு வருமாறு:-

"எழுத்தெனப் ப்டுப
அகரமுதல் னகர இறுவாய்

முப்பஃ தென்ப
சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே''
(தொல். 1).

இந்நூற்பாவில், 'அ'கர முதல் 'னகர' யீறாயுள்ள, தமிழ் நெடுங்கணக்கின் அகரவரிசையைச் சுட்டியுள்ளார். உயிர் மயங்கியலிலும், அகர ஈறு தொடங்கி ஔகார ஈறு ஈறாக, அகரவரிசையில் அமைத்துக் காட்டும் அகரமுதலிப் பாங்கு தமிழகரமுதலி வரலாற்றில், காணலாகும் கல்லெழுத்தன்ன அழிக்கலாகா அகராதிக் கூறாம்.

''தொல்காப்பியம் தமிழ் எழுத்துகளின் அகரவரிசை பற்றிப் பேசுகிறது. ஆயின் சொற்களை வரிசைப்படுத்திக் கூறவில்லை. அகரமுதற்கருத்து தொல்காப்பியருக்கு இருந்த போழ்தும், அகரநிரல் குறித்து அவர் குறிப்பிட்டாரில்லை'' (தா.வே.வீராசாமி. 1991) யென்று குறிப்பிட்டுள்ளார்.

சொற்களை அகரவரிசைப்படி அடுக்குவது, அகரமுதலிப் பணியில் அடிப்படையானதும் தலையாயதுமாகும். ''தொல்காப்பியம் எழுத்தெனப் படுவனவற்றை அகரவரிசைப் படுத்துமாபோல, சொற்களை வரிசைப் படுத்துதல் பற்றிக் கூறவில்லை. அகரநிரற் கருத்து (concept) தொல்காப்பியருக்கு இருந்தபோதிலும், பொருள்களாற் சுட்டப்பட்ட சொற்கள் அகரநிரலில் அமையவில்லை'' (வ.செயதேவன். 1985, பக்.43) என்றும் அகராதி வல்லுநர் கருதுவர். மனனம் செய்வதற்கேதுவாக நூற்பா நடையில் சொற்பொருளைத் தொல்காப்பியர் விளக்கியுள்ளார். நூற்பா வடிவிற் சொற்பொருள் கூறும் நிகண்டுகட்குத் தொல்காப்பியம் தோற்றுவாய் செய்துள்ளது. அவர்தம் காலத்திற்கு ஏற்றவண்ணம் தமிழ் எழுத்துகளின் அகரநிரலைத் தோன்றுமிடத்தை அடிப்படையாகக் கொண்டு வரிசைப்படுத்தியுள்ளார். அகரமுதலிப் பாங்கினில் சொற்களை வரிசைப்படுத்தும் தேவை, தொல்காப்பியர் காலத்தே எழவில்லை எனலாம்.

## தொல்காப்பியமும் – அகரமுதலிப் பொருண்மையும்

தமிழகரமுதலி வரலாற்றில், சொற்களுக்கான பொருட்பாகுபாட்டினை அல்லது பொருண்மையினை இயல்வரையறை செய்யும் பாங்கு, தொல்காப்பியத்தில், நுண்மையாகவும், தெளிவாகவும் அமைந்துள்ளது. அகரமுதலி வரலாற்றில் பொருள் சுட்டும் பாங்கு, பற்பலவடிவில், சிற்சில மாற்றங்களை உள்ளடக்கிக் காலந்தோறும் வளர்ந்து வந்துள்ளதென்று, அகராதிக் கலைஞர்கள் கருதுகின்றனர்.

இவ்வகரமுதலிப் பொருண்மை பற்றி மொழி ஞாயிறு மொழிவது, ''பொருள்களைச் சினை, குணம், தொழில் முதலியன பற்றிப் பலவகையாக வகுத்துக் கூறல், பொருட்பாகுபாடாகும். இதுவே, எந்தக் கலையறிவிற்கும், ஆராய்ச்சிக்கும் தொடக்கமாம். ஒரு பொருளைப் பற்றிச் சிறப்பாயாராயுமுன், குறிப்பிட்ட அப்பொருள், எவ்வினத்தைச் சேர்ந்ததென்ற அறிந்து கொள்வது இன்றியமையாததாகும். தற்காலத்தில் பொருள்களைப் பற்றிய ஆராய்ச்சியில் மேனாட்டார் சிறந்து விளங்குகின்றனர். ஆனால் முற்காலத்திலோ, இந்நிலையைக் கீழ்நாட்டார், சிறப்பாகத் தமிழர் அடைந்திருந்தனர்'' (ஞா. தேவநேயப் பாவாணர், பக்.23.

பண்டைத் தமிழர், பொருள்களெல்லாவற்றையும், மிக நுட்பமாக ஆராய்ந்து, தேர்ந்து, தெரிந்து பொருள்வரையறைப் படுத்திய பாங்கு, அஃதாவது சொற்பொருள் சுட்டும் பொதுவான அகரமுதலிக் கூறு அனைவரும் எளிதிற் பொருளுணர்ந்து கொள்ளும் நிலையில், தொல்காப்பியம் முழுமையும் பரவலாகக் காணப்படுகிறது.

சிறப்பாகத் தொல்காப்பியர் உரியியல், இடையியல், மரபியல் பகுதிகளில் நேரடியாகப் பொருளும், மரபும் குறித்த பாங்கினைப் பல்வகை அகச்சான்றுகளுடன் தெளிவுறுத்தியதைக் கண்டோம். தொல்காப்பியம் முழுமையும் சொற்பொருள் தரும் அகரமுதலிக் கூறுகளை அனைவரும் அறியும் வண்ணம் தொல்காப்பியர் விளக்கிச் செல்கிறார்.

தொல்காப்பியர், புள்ளிமயங்கியலில், சற்றொப்ப 25 நூற்பாக்களில், சொற் பொருள் விளக்கம் செய்துள்ளார். இவ்வியலில், ஆண் அஃறிணைப் பெயருக்கு இலக்கணம் இயம்ப வந்த தொல்காப்பியர்,

''ஆண்மரக் கிளவி யரைமர வியற்றே'' (தொல். 304) என்ற நூற்பாவில், ஆணும், அரையும் மரங்களைக் குறிக்கும் பொருண்மை நிலையினையும் வரையறைப் படுத்துகிறார். ஆண் அஃறிணைப் பெயர் 'அம்' எனும் சாரியைப் பெறும் நிலையை வரையறுக்க வந்த தொல்காப்பியர், ''ஆண்'' என்ற சொல்லும், ''அரை'' என்னும் சொல்லும், மரங்களைக் குறிக்கும் பொருட் பாகுபாட்டினைப் புலப்படுத்தும், சொற் பொருண்மை தமிழகரமுதலி வரலாற்றில் சிறப்பிடம் பெறுகின்ற தெனலாம். உரியியலில் மிக எளிய சொற்களைத்

தவிர்த்து, அரிதுணரவேண்டிய 120 அருஞ் சொற்களுக்குப் பொருள் விளக்கம் செய்துள்ளார். இடையியல், மரபியற் பகுதிகளில் இடைச் சொற்களுக்கும், மரபார்ந்த சொற்கட்கும் எளிதுணரும் பாங்கினில், பொருட்பாகுபாடு செய்துள்ளார். பிறவியல்களில், இலக்கணக் குறியீடுகளையும், மரபுக் குறியீடுகளையும் உரிய முறையில் உணர்த்திப் பொருள்விளக்கம் செய்துள்ளார்.

சொற்கள் கூறும் பொருண்மையைத் தொல்காப்பியர் இருவகையாகப் பகுப்பார். அவையாவன:-

1. வெளிப்படுநிலை (சொல்லுக்கு வெளிப் படையாகப் பொருள் தோன்றும் நிலை).

2. குறிப்பு நிலை (குறிப்பாகப் பொருள் தோன்றும் நிலை)




மேற்குறித்த அகராதியியல் பொருட்பாகுபாட்டைக் கூறும் தொல்காப்பிய நூற்பா:-

"தெரிபுவேறு நிலையலுங் குறிப்பிற் தோன்றலும்
இருபாற் றென்ப பொருண்மை நிலையே"
(தொல். 642).

இந்நூற்பாவிற்குத் தெய்வச்சிலையார் வகுத்த உரை வருமாறு:- "தெரிபுவேறு நின்றன" - நிலம், நீர், தீ, வளியெனப் பொருள் உணர்த்துவனவும்,

"குறிப்பிற்றோன்றின்" – இவன் நெருப்பு. இவன் பசு எனக் குணம் பற்றியும், தீமை செய்தாரை வாழ்வீராக எனவும், அப்பொருள் பயவாது, பிற பொருள் பயப்ப வருவன என விளக்குவார்,

இன்றும் மக்கள் தம் பேச்சுவழக்கில், அழிம்பு செய்யும் தம்மினும் வலியவரை, "ஒழிந்துபோ" என்று வெளிப்படு சொல்லாற் பழித்துரைக்காமல், குறிப்புப் பொருண்மையில் உள்ளொன்று வைத்து 'நல்லாயிரு' 'நல்லாயிரு' என்று உளம் வேகா நிற்பர்.

இவ்வாறு தொல்காப்பியத்துள் சொற்பொருட் பாகுபாடு என்னும் அகரமுதலிக் கூறு, பொதுவாகவும், சிறப்பாகவும், பரந்துபட்ட நிலையில் அமைந்துள்ளது.

## ஒலிப்பு முறை (pronunciation)

மக்கள் ஒருவருக்கொருவர் உரையாடுங்கால் முறையான ஒலிப்புமுறை இன்றியமையாதது. முறையான ஒலிப்புமுறை இல்லாவிடின், சொற்களின் பொருள்கள் மாறுபட்டு, பொருள் வேறுபட்டுவிடும். ஒருவர் பேசுவதைப் பிறர் பிழையறவும், தெளிவுறவும் புரிந்து கொள்ள முறையான ஒலிப்புமுறை இன்றியமையாதது. இதனால் தான் ஒலிப்புமுறையைக் குறித்தல் அகரமுதலிக்கு இன்றியமையாத அகராதிக் கூறாக, தமிழ்ப் பேரகராதி களிலும் மேனாட்டு அகரமுதலிகளிலும் அமைந்துள்ளது.

## தொல்காப்பியத்தில் – ஒலியியல் அகராதிக் கூறுகள்

ஒலியியல் அகராதிக் கூறுகளாக மொழியியலார் வகுத்துள்ள ஆய்வுக் கருத்துகள் தொல்காப்பியத்துள் பொருந்தியுள்ள திறன் வருமாறு:-

i) செவிப்புலன் ஒலியியல் – acoustic phonetics.
ii) கேட்பு ஒலியியல் – auditory phonetics
iii) ஒலிப்பு ஒலியியல் – articulatory phonetics

தொல்காப்பியர் கூறும் பிறப்பியல் நூற்பா தற்கால மொழியியலார் பகுத்துள்ள மூவகை ஒலியியல் அகராதியியற் கூறுகளையும் தன்னகத்தே கொண்டது. இது பற்றிக் குறிப்பிட வந்த அகராதி வல்லுநர்,

"தொல்காப்பியப் பிறப்பியல், அக்காலத் தமிழ்மொழியின் ஒலிப்பு ஒலியியல் எனலாம். மேனாட்டுப் பேரகராதிகளிற் காட்டப்படும், ஒலிப்பு முறைக் குறிப்புப் போன்று தமிழ்ப் பேரகராதிகளிலும் காட்டுதற்குத் தொல்காப்பியப் பிறப்பியல் துணைபுரியக் கூடும்" (வ.செயதேவன். 1985, பக்.45) என்று கூறியுள்ளார்.

தொல்காப்பியப் பிறப்பியல் நூற்பாக்கள் (தொல். 84 முதல் 101 வரை) பதினெட்டுடன் நூன்மரபு நூற்பாக்கள் (தொல்.3,4,10–12) ஐந்தும் ஒன்றுகூட்டவரும் இருபானிரண்டு நூற்பாக்களும் தமிழகரமுதலி வரலாற்றில், தமிழ் எழுத்தின் ஒலிப்பு முறையினை

வெளிப்படுத்தும் ஒலியியல் அகராதிக் கூறுகளைத் தெரிந்தெடுத் தியம்பல்ல சான்றடிப்படை நூற்பாக்களாகத் திகழ்கின்றன. அவற்றுள் அரிமா நோக்காக அமைந்து, ஒலியியல் அகராதிக் கூறினை வெளிப்படுத்தும் நூற்பா வருமாறு:-

"தத்தம் திரிபே சிறிய என்ப" (தொல்.88)

இந்நூற்பா ஒலியியல் அகராதிக் கூறு நிறைந்து, தொல்காப்பியரின், நுண்ணிய தமிழ் ஒலிப்புமுறைக்குத் தக்க சான்றாக அமைந்துள்ளது.

இப்பிறப்பியல் நூற்பாவின் வாயிலாகத் தொல்காப்பியர், "உயிர் மெய்களும் பிறவும் அவ்வவற்றிற்குரிய பிறப்பு இடங்களுட் பிறந்து ஒலிப்பதைத் தாம் கூறியிருப்பினும், மிக நுண்ணிதில் ஆராயுமிடத்துத் தத்தம் வேறுபாடுகள் சிறியனவாய் உள்ளன" என்று குறித்துள்ளமை, ஒலியியல் அகராதியின், உட்கிடக்கையை உணர்த்துகிறது.

தமிழ் ஒலிப்புமுறையில் தொல்காப்பியர் குறிப்பிடும் இத்திட்ப நுட்ப ஒலியியல் அகராதிக் கூறுகளை, இன்றைய மொழியியலார், ஆழ்ந்து ஆய்ந்து கண்டுள்ளனர். "தொல்காப்பியர் பிறப்பியலில் சில இடங்களில் மாறுபட்டும் உள்ளார். தொல்காப்பியர் இன்றைய மொழியியலார் போலும், மிகத் துல்லியமாக ஒலிப்பு ஒலியியலை விளக்கவில்லை" (வ.செயதேவன். 1985, பக்.45). எனினும், அவர்தம் பிறப்பியல் மற்றும் நூன்மரபிற் காணப்படும் இருபத்திரண்டு நூற்பாக்களும், தமிழெழுத்து ஒலிப்புமுறை மற்றும் கால அளவு வேறுபாட்டினை பிறப்பிடத்தை அடிப்படையாகக் கொண்டு நுண்ணிதின் வெளிப்படுத்து கின்றன என்பதில், எள்ளளவும் ஐயமில்லை.

தொல்காப்பியர் மேனாட்டார்க்குப் பயன்படும் பான்மையில், ஒலியியல் அகராதிக் கூறுகளுடன் அயன்மொழி பேசுவோரும் அமிழ்தினுமினிய தமிழெழுத்து மற்றும் சொற்களை எளிதில் ஒலிப்பதற் கேதுவாகவும், அனைத்துத் தமிழ்ப் பேரகராதிகளும், கடைப்பிடித்தற்கு எளிதாகவும், தமது பிறப்பியல் நூற்பாக்களை அமைத்துள்ளார்.

அனைத்து மொழியினரும் அறியும் பான்மையில் ஒலிப்புமுறை சுட்டப்படுவது, அகரமுதலிகளின் பொதுப்பண்பாக இருந்த ஞான்றும். பொதுவாகத் "தமிழ் அகராதிகள் ஒலிப்பு முறை சுட்டுவதில், கருத்தூன்றவில்லை" என்பதே, அகராதி வல்லுநர்தம் கருத்தாகும்.

## சொற்களின் அடிப்படை வரலாறும் தொல்காப்பியமும்

தொல்காப்பியர் சொற்களின் மூல வரலாற்றைச் சிறப்பாகக் குறிக்காது போயினும், எச்சவியலிற் சொற்களின் மூலத்தைப் பொதுவாகக் குறித்துள்ளார். சொற்களின் மூல வரலாற்றைச் சுட்டுவது அகரமுதலிக் கூறுகளுளொன்றாம். பிற்காலத்தில், கால்டுவெல் கண்காணியார், ஞானப் பிரகாசர், எமனோ, பரோ, மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் முதலானோர் சொற்களின் மூலவரலாற்றை ஆராயும் துறையில் ஈடுபட்டமை, ஈண்டு குறிக்கத்தக்கது.

தமிழகரமுதலி வரலாற்றில், சொற்கட்கான வேரும் வரலாறுங் காணும் முயற்சியில் வாணாள் முழுதும் ஈடுபட்டு வெற்றியடைந்தவர் மொழிஞாயிறு. வேர்ச்சொற்கட்டுரைகள் முதலான பனுவல் பலவற்றிலும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் இயக்குநராகப் பணியாற்றி நேரடியாக ஆக்கித் தந்த முதன்மடல முதற்பகுதி மற்றும் அதனடிப்படையில் உருவாக்கிய அனைத்து மடலப் பகுதிகளிலும், பாவாணர்தம் நுண்மாண் நுழைபுலமும், பன்மாண் மொழியாய்வுத் திறமும் குன்றின்மேலிட்ட விளக்குப் போல், குவலயத்தில் மிளிர்கின்றதெனின், மிகையன்று. சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதி அகரமுதலி வழியில் நெறி பிறழ்ந்த பாகுபாட்டினைப் பாவாணர் "சென்னைப் பல்கலைக் கழக அகராதியின் சீர்கேடுகள்" என்ற தம் நூலுட் குறித்துள்ளார்.

சொற்களின் நாற்பெரும் பிரிவினைத் தொல்காப்பியர் எச்சவியலிற் செய்தளித்துள்ள நூற்பா :-

(எ.டு.)

"இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொலென்
றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே" (தொல். 880)

"தொல்காப்பியர் சொற்களைத் தனித்தனியாக யெடுத்து அவற்றிற்கான வேரும்–வரலாற்றை விளக்கினா ரில்லையெனினும், இயற்சொல் (common native words); திரிசொல் (literary words); திசைச்சொல் (words of foreign origin); அயற்சொல்லாம் வடசொல் (words of sanskrit origin) என அக்காலத்தில் வழக்கிலிருந்த சொற்களை வகைப்படுத்திப் பொதுவாக மூலத்தைக் குறிக்கிறார் எனலாம்" (வ.செயதேவன். 1985, பக்.46).

## புதிய சொற்கள் – பொருள்கள் ஏற்பு :-

தொல்காப்பியர் தம் நூலுள் எவ்வெந் நெறிமுறைகளுக்குட்பட்டு மொழி வழங்குகிறது என்பதையும், எவ்வெச்சொற்கள் எவ்வெப் பொருளில் வழங்குகின்றன வென்பதனையும், அவற்றின் நுட்பமான வேறுபாட்டினையும் விளக்கியுள்ளார். புதிய சொற்களையும், அவை குறிக்கும் புதிய பொருள்களையும், ஏற்றுக்கொண்டு, மக்கள்தம் புதிய வழக்காறுகளையும் ஏற்றுக்கொண்டு வளர்வதே அகரமுதலி என்பதைத் தொல்காப்பியர்,

(எ.கா.)

1. "உணரக் கூறிய புணரியல் மருங்கில்
கண்டுசெயற் குரியவை கண்ணினர் கொளலே"
(தொல்.405)

2. "கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே"
(தொல். 602)

3. "அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென
மெய்பெறக் கிளந்த இயல வாயினும்
வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்
திரிந்துவேறு படினுந் தெரிந்தனர் கொளலே"
(தொல்.780)

4. "கூறிய கிளவிப் பொருணிலை அல்ல
வேறுபிற தோன்றினும் அவற்றொடு கொளலே"
(தொல்.873)

என்னும் நூற்பாக்களின் வாயிலாகத் தெளிவுறுத்துகின்றார்.

மொழியில் வழங்கும் புதிய சொற்கள், பொருள்கள் முதலியவற்றை, அகரமுதலியில் பதிவு செய்வது, அகரமுதலிப் பணியாளர்தம் கடமையாகும். "மொழியின் தூய்மைக்கு ஊறேற்படுமென நினைந்து, வழக்குகளைப் பதிவு செய்யாமல் விடுப்பது, அகராதியியல் நெறிக்குப் புறம்பானது" (வ.செயதேவன். 1985, பக்.46) என்பர்.

மேற்குறித்த தொல்காப்பிய நூற்பாக்கள், தமிழகரமுதலி வரலாற்றில், தற்காலத்தே மொழியின்கண்ணே வழங்கும், சொற்கள் – பொருள்கள்– புதிய வழக்குகள் முதலானவற்றைப் புறக்கணிக்காமல் ஏற்றுக் கொள்ளவேண்டும் என்ற அவர்தம் கருத்திற்கு, அரண் செய்வதாகலாம்.

"அன்ன பிறவும் கிளந்த அல்ல
பன்முறையானும் பரந்தன வரூஉம்
உரிச்சொல் லெல்லாம் பொருட்குறை கூட்ட
இயன்ற மருங்கின் இனைத்தென அறியும்"
(தொல்.879)

"கடிசொல் இல்லைக் காலத்துப் படினே"
(தொல். 935)

"செய்யுள் மருங்கின் மெய்பெற நாடி
இழைத்த இலக்கணம் பிழைத்தன போல
வருவவெனினும் வந்தவற் றியலான்
திரிபின்றி முடித்தல் தெள்ளியோர் கடனே"
(தொல். 1499)

காலந்தோறும் மக்கள் வழக்கில் வழங்கும் அனைத்துச் சொற்களையும், அகரமுதலி தொகுப்போர், அகராதியில் இடம்பெறச்செய்ய வேண்டும். காலத்தால் தோன்றும் எச்சொல்லையும் விலக்காது அகரமுதலியிற் பதிவு செய்யவேண்டும். (தொல்.935).

"சம்பு, சள்ளை, சமழ்ப்பு முதலியன அவ்வகையில் பதிவு பெற காட்டாக வரும் புதிய சொற்கள் என்பர், சேனாவரையர்.

## நிகண்டுகட்குத் தோற்றுவாய் செய்தளித்த தொல்காப்பியம்

தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்களிற் கூறப்பட்ட உரியியலே, செய்யுளகராதிகளான நிகண்டுகட்குத் தோற்றுவாயாம். செய்யுளிற் சிறப்பாக வழங்கிப் பொருள் விளங்காத அருஞ் சொற்களையெல்லாம் தனித்தனியெடுத்துப் பொருள் கூறினர், முன்னையாசிரியர். பல்கிப் பெருகிய செய்யுட் சொற்கட்குப் பொருள்கூற நூல் இடந்தராச் சூழலிலெழுந்தவையே இந்நிகண்டுகள்.

முதன்முதலெழுந்த நிகண்டு திவாகரம். பின்பு பிங்கலந்தை, சூடாமணி முதலிய நிகண்டுகள் தோன்றின. செய்யுட் சொற்களுக்குப் பொருள் தரும் இந்நிகண்டுகளின் தோற்றத்திற்குத் தொன்முது தொல்காப்பியமே தோற்றுவாயென்பது, அகரமுதலி வல்லுநர்கள்தம் ஒருமித்த கருத்தாகும்.

தொல்காப்பியத்திற்குப் பின்னர்த் தோன்றிய நிகண்டுகள், முப்பெரும் பிரிவுகளின் அடிப்படையில் முகிழ்த்தவையாகும். அவையாவன :-

(1) ஒருபொருட் பல்பெயர்த் தொகுதி :

இத் தொகுதியுள் மிகுதிப்பொருளைக் குறிக்க உறு, தவ, நனி என்னும் மூன்று சொற்கள் தொல்காப்பியரால் காட்டப்பட்டுள்ளன.

(எ.கா.) "உறுதவ நனியென வரூஉ மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப"
(தொல்.784)

பெருமை என்னும் பொருளைக் குறிக்க, "தட, கய, நனி என்னும் மூவேறு சொற்கள் தொல்காப்பியரால் சுட்டப்பட்டுள்ளன.

(எ.கா.) "தடவும், கயவும், நனியும். பெருமை"

அச்சம் என்ற பொருளைச் சுட்ட, "பேம், நாம், உரும்" என்னும் மூவேறு சொற்கள் தொல்காப்பியரால், குறிக்கப்பட்டுள்ளன.

(எ கா.) "பேம், நாம், உரும் என வரூஉங் கிளவி
ஆமுறை மூன்றும் அச்சப் பொருள"

இவைபோலும் (தொல்காப்பிய) நூற்பாக்கள், நிகண்டுகளின் ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதிக்குத் தோற்றுவாயாகலாம்.

(2) ஒரு சொல் பல்பொருட்டொகுதி :-

சிலவிடங்களில் ஒரு சொல்லுக்குப் பல பொருள்களைத் தொல்காப்பியர் கொடுத்துள்ளார்.

(எ கா.) சொல் — பொருள்

ஏற்றம் – இச்சொல்லிற்கு நினைவு, துணிவு என்னும் இரு பொருள்கள் தரப்பட்டுள்ளன.

விழுமம் – இச்சொல்லிற்குச் சீர்மை, சிறப்பு, இடும்பை என்னும் மூன்று பொருள்கள்.

'கடி' யென்னும் சொல்லுக்கு வழங்கும் பன்னிரண்டு பொருள்களைத் தொல்காப்பியர் கொடுத்துள்ளமை, சொற்பொருள் விளக்கும் அகரமுதலித்துறைக்கு ஏற்றதோர் எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது.

"கடியென் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே
அச்சம் முன்தேற்று ஆயி ரைந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே"
(தொல். 866)

"ஐயமும் கரிப்பும் ஆகலும் உரித்தே" (தொல்.867)

இவை போன்ற தொல்காப்பிய நூற்பாக்கள், நிகண்டுகளின் ஒரு சொல் பல்பொருட் பெயர்த் தொகுதிக்கு ஊற்றுக்கண்ணாக விளங்குகின்றன எனலாம். "ஒரு சொல்லுக்கு, ஒரு பொருள் உரைக்கும் பகுதியையும், இப்பகுதியிலேயே அகராதி வல்லுநர் அடக்குவர்" (சுந்தர சண்முகனார். 1971. பக்.43).

3. பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதி :-

பல பொருட்களின் கூட்டமாகிய தொகைப் பெயர்கள் – அஃதாவது எண்ணிக்கையால் குறிக்கப்படும் பெயர்கள், சில இடங்களில், தொல்காப்பியரால் விளக்கப்பட்டுள்ளன.

(எ.கா.)

| தொகைப்பெயர் – | விளக்கப்படும் பொருட்கள் |
|---|---|
| மூன்று என்னும் எண்ணால் சுட்டப்பெறும் "மூவறிவு" என்னும் தொகைப்பெயர் : | தொட்டறிவு (உற்றறிவு), நாக்கறிவு, மூக்கறிவு என்னும் பல பொருட் கூட்டத்தைக் குறிக்கிறது. |
| "ஐயறிவு" என்னும் தொகைப்பெயர் : | தொட்டறிவு, நாக்கறிவு, மூக்கறிவு, கண்ணறிவு, செவியறிவென்னும் பல பொருட் கூட்டத்தைக் குறிக்கத் தொல்காப்பியரால் பயன்படுத்தப்பட்டுள்ளது. |

மூவறிவு, ஐயறிவு போன்ற தொகைப் பெயர்க்கான, பல பொருட்களின் கூட்டத்தைச் பகர்வனவாக இருத்தலால், இவற்றிற்குப் "பல்பொருட் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதி" என்னும் வகைப்பாட்டிற் பெயரிட்டழைத்தனர். இப் பொருண்மை செய்து விளக்கும் தொல்காப்பியத் தொகை நூற்பா வருமாறு :-

"ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
யைந்தறி வதுவே அவற்றொடு செவியே
யாறறி வதுவே அவற்றொடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே"
(தொல். 1526)

இவை போன்ற தொல்காப்பிய நூற்பாக்கள், நிகண்டுகளின் பல்பொருட் கூட்டத்து, ஒரு பெயர்த் தொகுதிக்குரிய தோற்றுவாய் எனலாம்.

## தொல்காப்பியமும் திவாகரமும் :

தொல்காப்பியத்துள் காணப்படும் பற்பல நூற்பாக்கள் திவாகர நிகண்டிற்கு அடிகோலின என்பதைக் கருப்பொருள் விளக்கம் கூறும்.

"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப" –
(தொல்.964).

தொல்காப்பிய நூற்பாவின் அடிப்படையில், திவாகர நிகண்டுத் தொகுதிகளும், திவாகரத்தைப் பின்பற்றிப் பிற நிகண்டுகளின் தொகுதிகளும் தோன்றியிருக்கலாம் எனத் தெரிகிறது.

தொல்காப்பியம் குறிப்பிடும் தெய்வம் உணவு, மா, மரம், புள், பறை, யாழ் முதலான ஏழுவகைக் கருப்பொருள்களும் திவாகர நிகண்டின், பெயர்த் தொகுதிகட்கு மூலமாய் அமைந்துள்ளமை கண்கூடு. தொல்காப்பியம் கூறும் ஏழுவகைக் கருப்பொருள்களுள், ஒன்றான தெய்வம், திவாகர நிகண்டின் தெய்வப் பெயர்த்தொகுதியிலும், இரண்டாவது கருப்பொருளான உணவு, திவாகரத்தின் பல்பொருட் பெயர்த்தொகுதியிலும், மூன்றாம், நான்காம் கருப்பொருளான மாவும், புள்ளும், விலங்கினப் பெயர்த் தொகுதியிலும், மரம், மரப்பெயர்த் தொகுதியிலும், பறையும், யாழும், செயற்கைவடிவப் பெயர்த்தொகுதியிலும், திவாகரத்தில் இடம் பெற்றுள்ளமை காணலாம்.

தொல்காப்பியர், அகத்திணையியலில் விளக்கும் நிலப்பாகுபாடும், அவ்வந் நிலத்துவாழ் மக்கள் குறித்த செய்திகளும், முறையே திவாகரத்தில், இடப்பெயர்த் தொகுதி, மக்கட் பெயர்த் தொகுதிகளுள், இடம் பெற்றுள்ளன.

"உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
இசையினுங் குறிப்பினும் பண்பினும் தோன்றி"
(தொல்.782)

என்னும் தொல்காப்பிய நூற்பாவில் குறிக்கப்படும் பண்பு பற்றிய செய்தி, திவாகரத்தில் பண்பு குறித்த பெயர்த்தொகுதியிலும், இசை, ஒலி பற்றிய பெயர்த்தொகுதியிலும் இடம் பெற்றுள்ளன.

திவாகர நிகண்டின் செயல் பற்றிய பெயர்த்தொகுதிக்கு அடிப்படையாகத் தொல்காப்பிய வினையியல் பகுதி அமைந்துள்ளது. தொல்காப்பிய உரியியற் பகுதி, திவாகர நிகண்டின், ஒரு சொற் பல்பொருட் பெயர்த்தொகுதிக்கு அடிக்கோலியதெனலாம்.

"அஇஉ அம் மூன்றும் சுட்டு" (தொல்.31) என்னும் தொகை நூற்பா, திவாகரத்தின், பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதிக்கு தோற்றுவாயாகலாம்.

தொல்காப்பியம் போலவே நூற்பா நடையில், அஃதாவது செய்யுள் வடிவில், திவாகர நிகண்டில் பொருட்கள் விளக்கப்பட்டுள்ளன. தொல்காப்பிய நூற்பாக்கள், திவாகரத்தில் மிகுதியாக இடம் பெற்றுள்ளதற்கான எடுத்துக்காட்டுகள் வருமாறு:–

| வரிசை எண் | தொல்காப்பியம் | இயல் | சேந்தன்திவாகரம் | பக்க எண் | தொகுதி |
|---|---|---|---|---|---|
| 1. | "அஇஉ அம் மூன்றும் சுட்டு" (தொல்.31) | நூன் மரபு | "அஇஉ இம்மூன்றுஞ் சுட்டே" | 229 | ஒலி பற்றிய பெயர்த் தொகுதி |
| 2. | "ஆஏஓ அம் மூன்றும் வினா" (தொல்.32) | " | "ஆஏஓ இம்மூன்றும் வினா" | " | " |
| 3. | "ஐஒடு குஇன் அதுகண் என்னும் அவ்வா றென்ப வேற்றுமையுருபே" (தொல்.113) | புணரியல் | "ஐஒடு குஇன் அதுகண் என்னும் அவ்வா றென்ப வேற்றுமை யுருபே" | " | " |
| 4. | "அவைதாம் இன்னே வற்றே அத்தே அம்மே ஒன்னே ஆனே அக்கே இக்கே அன்ன என்ப சாரியை மொழியே" (தொல்.119) | | "இன்னே வற்றே அற்றே அம்மே ஒன்னே ஆனே அக்கே இக்கே அன் என்கிளவி உளப்படப் பிறவும் அன்ன என்ப சாரியை மொழியே" | " | " |

இதுகாறும் கூறியவற்றால், தமிழகரமுதலி வரலாற்றில் தொல்காப்பியத்தின் பங்கு, இன்றியமையாததென்றும், தமிழில் அகராதிக்கலை முகிழ்த்தற்கு முதற்கண் அடிக்கோலிய முதன்மையாளர் தொல்காப்பியரே என்றும், தொல்காப்பியம் சுட்டும் அகராதியியற் கூறுகள், பல்வேறு நிகண்டுகளின் தோற்றத்திற்கும், பல்வகைப்பட்ட தமிழ்ப் பேரகராதிகளின் தோற்றத்திற்கும், களம் அமைத்துத் தந்ததென்றும் கண்டோம். இனித் தமிழகரமுதலி வரலாற்றில் நிகண்டுகளின் பங்கு யாது என்பதை, வரலாற்று நோக்கில் காணலாம்.

**நிகண்டுகளின் தோற்றம்:** சங்க இலக்கியத்திற்குப் பின்னர் சமயத்தைப் பரப்புதற்கெனச் சமய இலக்கியங்கள் தோன்றின. சமணம், புத்தம், சிவனியம், மாலியம் போன்ற சமயங்கள், தம் செல்வாக்கை நிலை நாட்ட முயன்றன. இவற்றுள் சிவனியமும், மாலியமும், மக்கள்தம் வாழ்வியற் கொள்கைகளுடன் இணைத்தே, தத்தம் சமயக் கொள்கைகளைப் பரப்பின. இச் சூழலில் தமிழில் வடசொற்கள் வலிந்து, புகுத்தப்பட்டன. தென்சொற்கள் பலவிருந்தும், வடசொற்களை ஏராளமாயும் தாராளமாயும் எழுதுவதும், பேசுவதுமே கல்வியுடைமை என்று மாறுபடக் கருதிய கல்வியாளர் வளர்ந்தனர். பல்வேறு சமயச் செய்திகளை அறியவும், வடசொற்பொருளைப் புரியவும் ஒப்புநோக்கீட்டு நூல்கள் தேவைப்பட்டன. இத் தேவையை நிறைவேற்றும் பொருட்டு, தொல்காப்பியர் களமமைத்துத் தந்த அகராதியியற் கூறுகளையும், அவர் இயல்வரையறை செய்த சொற்பொருள் விளக்க நெறிமுறைகளையும், தோற்றுவாயாகக் கொண்டு முகிழ்த்தவையே நிகண்டுகள்.

''உரிச்சொல், உரிச்சொற்பனுவல்'' என்ற பெயரில் சொற்கூட்டம் என்னும் பொருண்மையினைப் புலப்படுத்தும் தன்மையினையே, முதற்கண் நிகண்டுகள் சுட்டின. காலப்போக்கில், பெருக வழங்குவது வழக்காதலின், நிகண்டு என்னும் சொல்வழக்கே வழக்கூன்றியது – பெருவழக்குமாயிற்று.

## நிகண்டுகளின் தோற்றம் பற்றி – அகரமுதலி வல்லுநர் – கூற்றுகள்

1. அகராதியியல் வல்லுநர் வ. ஜெயதேவன் கருத்து:–

''தொல்காப்பியர் காலத்திற்குப் பின், தமிழ் இலக்கியப் பரப்பும், படைப்பும் பரந்து விரிந்தன. சமயத்தைப் பரப்பும் நோக்கில் நூல்கள் மிகுந்தன. தமிழ் மக்களின் பண்பாடு, மொழி இவற்றில், மாற்றங்கள் ஏற்பட்டன. தமிழ் மொழியின் சொற்றொகை பெருகியது. இந்தச் சூழலில் நிகண்டுகள் போன்ற கருவிநூல்கள் தேவையானவையாயின'' (வ.செயதேவன். 1985, பக்.59). சொற்களுக்குப் பொருள் கொள்வதிலும், அவற்றிற்கு இலக்கணத்தைத் தழுவி வடிவங்களை அமைத்துக் கொள்வதிலும், சில இலக்கிய மரபுகளை மேற்கொள்வதிலும், சங்ககாலப் புலவர்கள், ஏறத்தாழ ஒரே தன்மையான, இலக்கிய நடையையும் செயல் முறையையும் கையாண்டனர். கி.பி.ஆறாம் நூற்றாண்டிற்குப் பின் வந்த அருளாளர்கள்தம் சமயப் பாடல்கள், ஆன்மாவை – ஆதனை பக்குவப்படுத்தும், இசைத்தமிழாக ஏற்றம்பெற்றன. பன்னிரு திருமுறை, நாலாயிரத் தெய்வப் பனுவற் பாடல்களிற் பொதுந்துள்ள சொற்களின் தன்மை, வடிவம், இலக்கியப் பண்பு, சொற்றொடர் அமைப்பு போன்றன கழகத் தமிழ்ப் பாடல்களின்றும், பெரிதும் வேறுபட்டிருந்தன. இச் சூழலில், பண்டைத் தமிழ்ப் பாக்களில் பயின்று வந்த பற்பல சொற்கட்கும் வழக்குகட்கும் பொருள் தெரிந்து கொள்வது கூடப் பிற்காலப் புலவர்களுக்கு அரிதாக இருந்திருக்கும்.

### நிகண்டுகளின் பயன்பாடு :

நிகண்டு என்னும் ''உரிச்சொற் பனுவல்கள்'' சொற்பொருள் விளக்கும் நூல்களாகும். தமிழிலக்கிய, இலக்கணப் பயிற்சியை எளிமைப் படுத்துவதற்கு நிகண்டுக் கல்வியே உறுதுணை புரியலாம். தமிழ்ச் சொற்களஞ்சியத்தில் நிகண்டுகள் கூட்டம் அல்லது தொகுதி என்னும் பொருட் பொருத்தப்பாட்டில் பயின்றுள்ள சிறந்த கருவி நூல்களெனலாம். உயர்திணை, அஃறிணை பற்றிய பல்வேறு பெயர்களையும், வினை பற்றிய பெயர்களையும், பாகுபாடு செய்து, தொகுத்துப் பொருள் வரையறை செய்வதும் இன்ன பிறவும் நிகண்டுகளின் தலையாய பணியெனலாம்.

''புலவர்களும், இலக்கியப் பயிற்சியில் ஈடுபட்டவர்களும், பண்டைக்கால நூல்களைப் படித்துச் சுவைப்பதற்குரிய கருவி நூல்களாக நிகண்டுகள் திகழ்ந்தன'' (சூ. இன்னாசி. பக்.45) எனலாம்.

### அறிஞர் சூ. இன்னாசி நிகண்டுகளின் தோற்றம் குறித்துக் கூறுவது :

''ஆலின் விழுது நிலத்தில் ஊன்றியபின், அஃதே அடிமரமாய் விடல் போல், முருங்கையின் கிளையாம் போத்துத் துண்டிக்கப்பட்டுப் பின்னர்

நட்டபொழுது தனிமரமாகி விடல்போல், தொல்காப்பியத்தின் ஓர் இயலான உரியியல் பிற்காலத்துத் தனியே வளர்ந்து, சொற்பொருள் கூறும் முழுநூல் ஆகி, உரிச்சொல், உரிச்சொற்பனுவல், கூட்டம், நிகண்டு என்னும் பெயரால் வளர்ந்தன. பிற்காலத்தோர், இவ்வகைத்தாய நூல்களனைத்தையும் நிகண்டு எனப் பொதுப்படக் குறிப்பினும், முற்காலத்தோர் அவ்வாறு வழங்கவில்லை. நன்னூல் உரையாசிரியர் சங்கரநமச்சிவாயர் தம் உரையில் சொற்பொருள் கூறும் நூல்களைக் குறிக்கக் கூட்டம், நிகண்டு ஆகிய சொற்களைப் பயன்படுத்துகிறார்.

பாயிரப்பகுதியில், சூடாமணியின் ஆசிரியர், "மன்னிய நிகண்டு சூடாமணியென ஒன்று சொல்வன்" எனச் சொல்வதால், "நிகண்டு என்னும் பெயர் தாங்கிய முதனூல் அதுவேயெனினும், வடமொழியின் செல்வாக்கால் புராணம், பிரபந்தம் (பனுவல்), ஆகியவற்றைப் போல், தொகுதி என்னும் பொருள் படைத்த நிகண்டு அவ்வகைப்பட்ட அனைத்து நூல் கட்கும் பின்னோர் வழங்கும் பொதுப்பெயராயிற்று" (பக்.46).

நிகண்டு நூல், கலைக்கோட்டுத்தண்டு போன்றன வழங்கி வந்ததாக, உரைக்குறிப்புகளில் மட்டுமே காணப்படுகின்றன. அந்நூல்கள், இதுகாறும் கிடைத்தில.

### நிகண்டுகளின் தோற்றம் பற்றி மு. சண்முகம் பிள்ளை :

தமிழிலக்கிய, இலக்கணங்களிற் பயின்று வரும் சொற்பொருள் விளக்கக் கருவி நூல்களாகத் திகழும் இந்நிகண்டுகள், "வடமொழியில் வேதத்திற்கு அங்கமாய், வைதிகச் சொற்களின் பொருள்களை உணர்த்தும் கருவி நூலுக்கு மட்டும், சிறப்பாக வழங்கப்பட்டது. பின்னர், நாளடைவில், சொற்பொருள் உணர்த்தும் நூல்கட் கெல்லாம், இப்பெயர் வழங்கத் தலைப்படலாயிற்று" (மு. சண்முகம் பிள்ளை, பக்.1).

## நிகண்டு – பெயர்க்காரணம் – வழக்கு – ஆட்சி

நிகண்டுகள் அனைத்தும், சொற்களுக்குப் பொருள் கூறும் அகரமுதலித் துறையைச் சார்ந்தனவே யாகும். உரிச்சொல், உரிச்சொற்பனுவல் என்னும் நிகண்டு குறித்த பண்டைய வழக்கு வீழ்ந்த பின்பு, "யாப்பில் சொற்பொருள் கூறும் நூலை, "நிகண்டு" என்னும் பொதுப்பெயரால் வழங்கும் வழக்கே. இப்போதுள்ளது" (வ.செயதேவன். 1985, பக்.64).

தமிழிலக்கியப் பரப்பில், "நிகண்டு" என்னும் சொல்லாட்சி, முதற்கண் இறையனார் அகப்பொருள் உரையில் இடுகுறியாற் பெயர்பெற்ற நூலுக்குரிய எடுத்துக்காட்டாகச் சுட்டுமிடத்துக் குறிக்கப்படுகிறது. சரியான பொருட்பொருத்தப்பாட்டில் காட்டப்படவில்லை. இறையனார் களவியல் கருத்தையே, நன்னூல் விருத்தியுரை யாசிரியர்களும், ஏற்றுக் கொண்டுள்ளனர்.

"திவாகரம், பிங்கலம் இரண்டிலும், ஆறங்க வகைப்பெயர் கூறுங்கால், "நிகண்டு"என்னும் சொல் ஆளப்பெற்றுள்ளது" (சுந்தர சண்முகனார். 1971, பக்.442). ஆறங்க வகையுள், "நிகண்டு" அடங்காதாகையால், இது பிழை வழக்கென்பர் (மு. அருணாசலம். பக்.158).

தமிழகராதியியல் வரலாற்றில், தொல்காப்பியமே நிகண்டு நூல்களின் தோற்றத்திற்கு மூலமாக அமைந்துள்ளது கண்கூடு. நிகண்டு நூல்கள் முதற்கண் தொல்காப்பியச் சொற்பொருளுரைக்கும் அகரமுதலிக்குரிய எடுத்துக்காட்டாக உரிச்சொல், உரிச்சொற்பனுவல் என்னும் பெயரிலேயே அழைக்கப்பட்டன. மண்டலபுருடர் இயற்றிய, சூடாமணி நிகண்டில்தான், முதன்முதல் சொற்பொருள் கூறும் நூலுக்கு, "நிகண்டு" என்னும் வழக்கு இடம்பெற்றுள்ளது. சூடாமணி நிகண்டின் காலம் கி.பி.16 – ஆம் நூற்றாண்டு ஆகும்.

"மன்னிய நிகண்டு சூடாமணியென ஒன்று சொல்வன்"

எனவரும் பாயிரப் பகுதியில், "நிகண்டு" என்னும் சொல்லாட்சி இடம்பெற்றுள்ளது.

தமிழகரமுதலி வரலாற்றில் காங்கேயரது உரிச்சொல்லை அச்சேற்றுங்கால், "உரிச்சொல்" "நிகண்டு" என்னும் இருவேறு வழக்குகளையும் ஒன்றிணைத்து, மகுடம் சூட்டினாற் போன்று, "உரிச்சொல் நிகண்டு" என்று பதிப்பித்துள்ளது, குறிப்பிடத்தக்கதொன்றாம்.

தமிழ் அகராதியியல் வரலாற்றில், கி.பி.1594 – ஆம் ஆண்டில், சிதம்பர இரேவண சித்தர் என்னும் புலவர், சொற்களை முதலெழுத்து வாரியாக, அகரநிரலில் அமைத்து, "அகராதி நிகண்டு" என்னும் நூலின் பாயிரப் பகுதியில்,

"............. அகராதி நிகண்டென
ஓதினன்..........................................

என்றும், "தெரிதரு பிங்கலம் திவாகரம் முதலாம்
பரவிய நிகண்டு பலஎடுத் தாராய்ந்து"

என்றும், குறிப்பிடுவதன் வாயிலாக செய்யுள்வழக்கில், "நிகண்டு" என்னும் வடிவம், வழக்கூன்றிய திறன் நன்கு புலப்படுகின்றது.

மேலும், சூடாமணி நிகண்டுக்குப் பின்னர், நிகண்டு என்னும் சொல்லாட்சி, தமிழுலகில் வழங்க வழங்கி, பெருவழக்கானதற்கான சான்றுகள் வருமாறு :–

i) சங்கர நமச்சிவாயர் தமது நன்னூல் 460–ஆவது நூற்பாவுரையில், "நிகண்டு" என்பதனைச் சுட்டியுள்ளார்.

ii) தொண்டைமண்டல சதகத்தில், "................ நிகண்டு சூடாமணி தானுரைத்த மண்டலவன்" என்று, நிகண்டு பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

iii) ஆசிரியநிகண்டு,

"முந்துள திவாகரம் பிங்கல நிகண்டுசீர்
முந்து காங்கேயன் உரிச்சொல்
முறைபெறு கயாதரம் பகரும் அகராதி யிவை
முற்றும் ஒன்றாய்த் திரட்டி"

என்று நிகண்டு பற்றிக் குறிப்பிட்டுள்ளது.

iv) நாமதீப நிகண்டுடையார்,

"பல்லாயிர நிகண்டிற் பண்டிதர்கள் சொன்ன பொருள்" எனப் பேசுகிறார். ஆசிரிய நிகண்டு, நாமதீப நிகண்டெனும் நூற்பெயரிலும், "நிகண்டு" என்னும் சொல்லாட்சி பரவியது.

இவ்வாறு நிகண்டெனும் சொல்வழக்கு, தமிழ்கூறுநல்லுலகில் பெருக வழங்கி நிலைபெற்றது.

## நீட்சி அல்லது நெடுமைப்பொருள் குறித்த நிகண்டெனும் சொல்

### தமிழ்ச்சொல்லா அல்லது வடசொல்லா?

அகரமுதலி வரலாற்றில் செய்யுட் சொல்லுக்குப் பொருள் கூறும் நூல்கட்கு, "நிகண்டு" என்னும் பொதுப்பெயர் எந்த அடிப்படையில் ஏற்பட்டது என்பதை ஒருவாறு காணலாம்.

### தமிழ்ச்சொல்லே என்பதற்கான காரணியங்கள்:–

1. 'நிகண்டு' என்னும் சொல்லுக்கு உண்மை என்ற பெயர்ப்பொருளும், "நிகழ்ந்தது" என்ற வினைப் பொருளும் உண்டு. "நிகழ்ந்தது" என்னும் சொல்தான், நிகண்டு என ஆயிற்றென்பர் (சுந்தர சண்முகனார். 1971, பக்.13).

"நீளம்" என்னும் சொல்லை, "நிகளம்" என்றும், "நீண்டது" என்பதை, "நிகண்டது" என்றும், பேச்சு வழக்கில் மக்கள் பேசுவதை, தமிழகத்தின் தொண்டை மண்டலத்திலும், வட மாவட்டங்களிலும் இன்றும் காணலாம்.

"நிகளம்" என ஒருசார் செய்யுள் வழக்கும் உண்டு" (சுந்தர சண்முகனார். 1971, பக்.13).

[எ.டு] 1. களிற்றினைப் பிணைக்கும் நீண்ட சங்கிலி (யானைக் காற் சங்கிலி) என்னும் பொருளில், "அயிராவதத்தி னிகளங்கால் விட்ட நினைவு" (தமிழ்நா. 123).

2. பிணைக்கப் பயன்படும் விலங்கு என்னும் பொருளில், "மறலினர் நிகளம்" (தணிகைப்பு. அகத்தி. 170).

3. "யார்க்கு நிகளமாம்" (திருவிளை. தீர்த். 3).

மேற்காண் வழக்காற்றுச் சொற்களை முறையாகப் பதிவு செய்வதன் மூலம், அந்தந்த வட்டார மக்களின் நாகரிகம், பண்பாடு, நம்பிக்கை முதலியன தெளிவாகும். மட்டுமல்லாமல், மொழிவளம் சிறந்தோங்கும்.

### நெகுண்டு என்னும் பேச்சுவழக்கே "நிகண்டு" ஆயிற்று :

i) "எனக்கு இந்த வேலை ஒரு நெகுண்டு இல்லை"

ii) "அவன் அந்த வேலையை ஒரே நெகுண்டாய் முடித்துவிட்டான்"

iii) நான் வழியில் எங்கும் நிற்காமல் ஒரே நெகுண்டாய்ப் போய்ச் சேர்ந்தேன். முதலான வழக்காறுகள், பொதுவாகத் தமிழகத்திலும் சிறப்பாகத் தென்னாற்க்காடு மாவட்ட மக்களிடையில் இன்றும் வழங்கக் காணலாம்.

நெகுண்டு → நிகண்டு. மேற்குறித்த வழக்காறுகளில், 'நிகண்டு' என்னும் சொல்தான்,

நீண்டுகொண்டு செல்லும் நீட்சிப்பொருண்மையில், நிகண்டு என்று திரிந்தது.

"எனக்கு இந்த வேலை ஒரு நெகுண்டு இல்லை" என்னும் இடவழக்கில், "தொடர்ந்து செய்ய முடியாத அளவுக்கு நீண்டுகொண்டு செல்லும் பெரிய வேலையன்று என்னும் பொருளில், வேலையின் நீட்சிப்பொருண்மை அல்லது நீண்டு கொண்டே போகுந்தன்மை அல்லது நெடுமை, பொதிந்துள்ளது எனலாம்.

வேலையை 'ஒரே நெகுண்டாய் முடித்து விட்டான்' என்றால், இடையீடின்றி, அஃதாவது தொய்வின்றி நீண்ட நேரம் தொடர்ந்து செய்து, வேலையை முடித்துவிட்டான் என்னும் நீட்சிக்கருத்து நிலைத்துள்ளது. "ஒரே நெகுண்டாய்ப் போய்ச் சேர்ந்தேன்" என்ற வழக்கில், நீணெடுந்தொலை கடந்து சென்றான், என்னும் நீட்சிப்பொருண்மை செறிந்துள்ளது.

"ஒரே நெட்டாய்ப் போய்ச் சேர்ந்தான்" என்னும் சொல்வழக்கு, தென்னாற்க்காடு மற்றும் தமிழகத்தின் வடமாவட்டங்களில் இன்றும் வழங்கக் காணலாம். நெட்டாய் மற்றும் நெகுண்டாய் என்னும் இருவேறு சொல்லும் செய்யும் பொருள் ஒன்றே; இவ்விரண்டிற்கும் அடிப்படைப் பொருண்மையும் ஒன்றேயாகும்; நெடுமை (நெட்டாய்) நிகளம் (நெகுண்டாய்) என்னும் இவ்விரண்டு சொற்களும், அடிப்படைக் கருத்தாகிய, நீட்சிப் பொருண்மையொன்றையே விளக்குவனவாம்.

எனவே, இலக்கியவழக்கிலும், மக்கள்தம் பேச்சுவழக்கிலும் சொற்கள் நீள (நெகுண்டாய்)த் தொடர்ந்து கொடுக்கப்பட்டிருக்கும் நூல், நிகண்டு எனப்பட்டது. இவ்வாறு பொருள் கொண்டால், நிகண்டு என்பது தமிழ்ச்சொல்லே எனத் தோன்றுகிறது.

**"வடசொல்லே" என்பார் கூற்று :-** அகரமுதலி வல்லுநர்களுள் வையாபுரியார், வ. ஜெயதேவன், மு.சண்முகம் போன்றோர், நிகண்டு என்பதை வடசொல்லென்றே கருதுகின்றனர்.

### நிகண்டு பற்றி வ. செயதேவன் கருதுவது :

"நிகண்டாவது இச்சொற்கு இதுவே பொருளென்று, சொற்கும் பொருட்கும் உள்ள ஆற்றலாகிய நியமம் அறிவிக்கும் நூல். இஃது இலக்கணம் போன்றதொரு கருவிநூல். நிகண்டு என்னும் சொல்லுக்குக் கூட்டம் அல்லது தொகுதி என்பது பொருள். சொற்கள் தொகுதியாக – கூட்டமாக – அமைக்கப்பட்டு, சொற்பொருள் விளக்கப்பட்டிருத்தலால், நிகண்டு என்னும் பெயர் ஏற்பட்டதென்று வடநூலார் கருதுவர் (பக்.61).

வடமொழியில், மந்திரங்களாகவும், பிரமாணங்களாகவும் (Prayers and explanations) விளங்கும் நால்வகை வேதங்களும், சுருதிகளாக – வாய்மொழி மரபு வழியாக வழங்கி வந்தன. இந்த வேதங்களை முறையாக ஒலிக்கவும், அறிந்து கொள்ளவும், வழிபாடுகளில் பின்பற்றவும், துணையாக ஆறு கருவிநூல்கள் எழுந்தன. இந்த ஆறு கருவிநூல்களும் வேதத்தின் ஆறு அங்கங்களாகும். இக் கருவிநூல்கள், நால்வகை வேதங்களுக்கும் உதவுவதால், வேதாங்கம் என்று கொள்ளப்படுகின்றன. இந்த ஆறு வேதாங்கங்களுள், நிருத்தம் என்பதும் ஒன்று. இந்த நிருத்தத்தின் ஒரு பகுதியே நிகண்டு. வேத அருஞ்சொற்களுக்குப் பொருள் விளக்கும், இந்த நிருத்தநூலை யாத்தவர், யாசுகர் என்னும் முனிவர் ஆவார். இந்நிருத்த நூலே இப்போது நிலைத்துள்ளது. இது கி.மு.700–க்கு முன் இயற்றப்பட்டது. யாசுகரது நிருத்த நூலே, வடமொழி அகராதி இயலின் தோற்றுவாய் எனலாம். இம் முனிவருக்குப் பின் சொற்பொருள் கூறும் நிகண்டுத் துறையில் பலர் நூல்கள் இயற்றியுள்ளனர். இத்தனி நூல்கள் அனைத்தும், "நைகண்டுகம்" என்பதன் மூலச்சொல்லாகிய, 'நிகண்டு' என்னும் பொதுப்பெயராலேயே பெயர்பெற்றன. வடமொழியாளர் நைகண்டுகம் என்பதையே, நிகண்டு என்னும் [நைகண்டுகம் → நிகண்டு] சொல்லிற்கு, அடிப்படையாகக் கொள்வர். "தொன்மம் (புராணம்), சிற்றிலக்கியம் (பிரபந்தம்) முதலிய பெயர்களைப் போல, 'நிகண்டு' என்னும் வடமொழிப் பெயர், தமிழுலகில் பெருக வழங்கி நிலைபெற்றுவிட்டது. தமிழில் பெருக வழங்கி நிலைத்த இச்சொல் எனக் கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகிறது. (பக்.61).

### "நிகண்டு தமிழ்ச்சொல்லே" புலவர் சுந்தர சண்முகனார்

தமிழக அரசின் மொழியியல் ஆராய்ச்சித் துறையின் பரிசு பெற்ற, "தமிழ் அகராதிக் கலை" நூலின் ஆசிரியர் புலவர் சுந்தர சண்முகனார் மட்டுமே, நிகண்டு என்பது தூய தென்சொல்லென்று நிறுவியுள்ளது வருமாறு :-

"சொற்கள் நீளத் தொடர்ந்து கொடுக்கப்பட்டிருக்கும் நூல் நிகண்டு எனப்பட்டது. இப்படிப் பொருள் கொள்ளின், 'நிகண்டு' என்னும் சொல்

தமிழ்ச்சொல்லே என்பது பெறப்படும். நிகண்டு என்பதை வடசொல்லெனக் கொண்டு பார்த்தால் தொகுதி–கூட்டம் என்பது, அதன் பொருளாகும்; எனவே சொற்கள் தொகுதியாக–கூட்டமாகக் கொடுக்கப்பட்டிருக்கும் நூல் நிகண்டு என்னும் வடமொழியார் கூறும் பெயர்க்காரணம் பொருந்துமென்றால் – நிகண்டு என்பதைத் தமிழ்ச்சொல்லாகக் கொண்டு சொற்கள் ஒரு பட்டியல் போல நீளத் தொடர்ந்து கொடுக்கப்பட்டிருக்கும் நூல் நிகண்டு எனக் கூறும் பெயர்க்காரணம் மட்டும், ஏன் பொருந்த முடியாது ? எனவே, நிகளுவது நிகண்டு என்னும் முடிவுக்கு வரலாம்.

## நிகண்டு – கலைக்கோட்டுத்தண்டு – நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார் [கி.மு.300 – கி.பி.300]

தமிழகரமுதலி வரலாற்றில், இந்நிகண்டு தொல்காப்பியருக்குப் பிந்தியது. ஆதி திவாகரத்திற்கு முந்தியது. அழிந்துபட்ட நிகண்டுகளுள் இஃதும் ஒன்று. இந்நிகண்டை இயற்றியவர் கடைக்கழகக் காலத்தைச் சேர்ந்த நற்றிணை 382 – ஆம் பாடலை இயற்றிய நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார் ஆவார். இந்நிகண்டு பற்றிய குறிப்பு, நன்னூல் மயிலைநாதர் உரையிலும், சங்கர நமச்சிவாயர் உரையிலும், இறையனார் அகப்பொருள் என்னும் களவியல் இலக்கண உரையிலும் காணப்படுகிறது.

மேற்குறித்த மூன்று உரைகளிலும், இடுகுறியால் பெயர்பெற்ற நூலுக்கு எடுத்துக்காட்டாக, இந்நிகண்டு சுட்டப்படுகிறது.

நன்னூல் என்னும் இலக்கண நூலின் பாயிரப்பகுதியில் நூல்கட்குப் பெயர் வைப்பதற்கான கரணியங்கள் குறித்து விளக்கும் நூற்பா வருமாறு :–

''முதனூல் கருத்தன் அளவு மிகுதி
பொருள் செய்வித்தோன் தன்மை முதல் நிமித்தினும்
இடுகுறி யானும் நூற்கெய்தும் பெயரே''

இந்நூற்பாவிற்கு உரையெழுதிய மயிலைநாதர் முதல்நூல், கருத்தன், அளவு, மிகுதி, பொருள், செய்வித்தோன் தன்மை ஆகிய நிமித்தங்களால் (கரணியங்களால்) பெயர் பெற்றமைக்கு எடுத்துக்காட்டாகச் சிற்சில நூல்களின் பெயர்களைக் குறிப்பிட்டு விட்டு இடுகுறியாற் பெயர் பெற்ற நூலுக்கு எடுத்துக்காட்டாகப் பின்வருமாறு உரை வரைந்துள்ளார்.

i) ''இடுகுறியாற் பெயர் பெற்றன நிகண்டு நூல், கலைக்கோட்டுத் தண்டு முதலாயின''

மேற்குறித்த நூற்பாவிற்கு, சங்கர நமச்சிவாயர் எழுதிய உரை வருமாறு :–

ii) ''இடுகுறியாற் பெற்றன நிகண்டு கலைக்கோட்டுத்தண்டு முதலாயின''

iii) இந்நிகண்டு பற்றிக் குறிக்க வந்த இறையனார் களவியலுரைகாரர்

''இடுகுறியாற் பெயர் பெற்றன, நிகண்டு நூல், கலைக்கோட்டுத்தண்டு என இவை'' என்று குறித்துள்ளார்.

மேற்குறித்த எடுத்துக்காட்டு உரைகளுக்குத் தக்க சான்று பகர்வது போல், ''கானல் மாலைக் கழிநீர் மல்க'' என்னும் நற்றிணை – 382 – ஆம் பாடலைப் பாடிய, நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார் பற்றிய, ''பாடினோர் வரலாறு'' என்னும் பதிப்புரைக் குறிப்பு, பின்னத்தூர், அ. நாராயணசாமி அவர்களால் வரையப்பட்டுள்ளது. இவர் எழுதிய நற்றிணை உரைநூற் பதிப்பின் முற்பகுதியில், பாடினோர் வரலாறு என்னும் தலைப்பில், காணப்படும் அகச்சான்று வருமாறு :–

i) ''மான் கொம்பை நிமிர்த்திக் கைக்கோலாகக் கொண்டமையால், இவர் கலைக்கோட்டுத் தண்டன் எனப்பட்டார். இவரது இயற்பெயர் புலப்படவில்லை. நிகண்டன் என்ற அடைமொழியால், இவர் தமிழில் நிகண்டொன்று செய்தாரென்று தெரிகிறது. அதுவே கலைக்கோட்டுத் தண்டு எனப்படுவது. இதனை இடுகுறிப் பெயரென்று கொண்டார் களவியலுரைகாரரும், நன்னூல் விருத்தியுரைகாரரும் (சூத். 49). அஃது இதுகாறும் வெளிவந்திலது. நெய்தலைச் சிறப்பித்துப் பாடியுள்ள இப்பாடல் நற்றிணை 382 அபிதான சிந்தாமணியில், மேற்கண்டவாறே காணப்படுகிறது. கலைக்களஞ்சியத்தில் பின்வருமாறு இப்பாடற் குறிப்பு காணப்படுகிறது.

ii) ''நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார் : சங்ககாலப் புலவர். நிகண்டு, கலைக்கோட்டுத் தண்டு என்பவை இடுகுறியாற் பெயர்பெற்ற நூல்களென, நன்னூல் விருத்தியுரை (நன். பாயிரம் : 49) கூறும். இந்த நூல்களுக்கும், இவருக்கும் ஏதாவது தொடர்புண்டோ என்பது ஆராயத்தக்கது (நற். 382).''

மேலே குறிப்பிட்ட அகச்சான்றுகளுள், ''நன்னூல் உரையும், களவியலுரையும், நிகண்டு நூல்

என்பது ஒரு தனி நூலென்றும், கலைக்கோட்டுத் தண்டு பிறிதொரு நூலென்றும், குறிப்பிட்டுள்ளன. அபிதான சிந்தாமணியும், பின்னத்தூர் அ. நாராயணசாமி அவர்கள்தம் "பாடினோர் வரலாறு" நற்றிணையுரையும், ஒரே நூல் என்னும் பொருண்மையில், "கலைக்கோட்டுத் தண்டு என்பது, ஒரு நிகண்டு நூல் என்னும் கருத்துப் படக் கூறியுள்ளன" (சுந்தர சண்முகனார். 1971, பக்.48).

நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார் என்பது புலவரொருவரையே சுட்டுவதால், அவர் நிகண்டு நூல், என ஒரு நிகண்டு நூலும், 'கலைக்கோட்டுத் தண்டு' என ஒரு நிகண்டு நூலுமாக, இரு நிகண்டுகள் எழுதியிருக்கமாட்டார்; அல்லது, இரண்டும், ஒரே நிகண்டு நூலாகவும் இருக்கவியலாது. நிகண்டன், கலைக்கோட்டுத் தண்டன் என்னும் இரண்டு ஆண்பாற் பெயரின் முடிபைக் கொண்டு, இரண்டும் தனிவேறு நூல்களெனத் துணியலாம்.

"நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார்" என்னும் பெயருக்கு முன்னால் உள்ள, "நிகண்டன்" அடைமொழியைக் கருத்திற்கொண்டு, அவர் ஒரு நிகண்டு நூல் இயற்றியுள்ளார் என்பது முடிந்த முடிபாகும். "இந்நிகண்டு ஏனைய நிகண்டுகட்கெல்லாம் முற்பட்ட முதல் நிகண்டாகவும் இருக்கலாம்; அதனால், அந்த நிகண்டு, இந்த நிகண்டு என ஆசிரியர் எந்தப் பெயரும் வைக்காமல், வெறும் 'நிகண்டு' என்றே, வழங்கியிருக்கலாம். திவாகரநிகண்டு, பிங்கலநிகண்டு, சூடாமணி நிகண்டு முதலியன போலன்றி, வெற்றுப்படியாக, "நிகண்டு என்னும் பெயர் மட்டும் உள்ளதால், "ஆசிரியர் ஒரு நிமித்தமும் கருதி, ஒரு பெயரும் வைக்கவில்லை; ஏதேனும் ஒரு பெயர் இருக்க வேண்டுமே என்பதற்காக, நிகண்டு என இடுகுறியாக வாளா அழைத்துக் கொண்டார்" - என்று நன்னூல் உரைகாரரும், களவியல் உரைகாரரும் எண்ணி, இடுகுறியாற் பெயர்பெற்ற நூலுக்கு எடுத்துக்காட்டாக, இந்நிகண்டு நூலைக் காட்டியிருக்கவேண்டும்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.52).

பின்னத்தூர் அ. நாராயணசாமி முதன் முதல் பதிப்பித்த நற்றிணைப் பதிப்புரையிலும், சுந்தர சண்முகனார் தம் "தமிழகராதிக்கலை" வாயிலாகவும், நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார் குறித்தும், அவரியற்றிய பழமையான நிகண்டு பற்றிய ஆய்வுக் கருத்துகளாக, வ. ஜெயதேவனார் கூறுவது வருமாறு :-

i) நிகண்டு நூல் செய்தமையால், "நிகண்டன்" என்னும் பெயர் அமைந்தது.

ii) இவர் செய்த நிகண்டின் பெயர் "கலைக்கோட்டுத் தண்டு".

iii) இவர் செய்த நூலின் பெயர் "நிகண்டு".

iv) மான் கொம்பைக் கைக்கோலாகக் கொண்டமையால் "கலைக் கோட்டுத் தண்டனார்" எனப்பட்டார்.

v) "கலைக்கோட்டுத் தண்டு" நிகண்டு நூலன்று; பிறிதொரு துறைநூல். கலைக்கோட்டுத் தண்டு என்னும் தொடரால், அந்நூல் அப்பெயர் பெற்றிருக்கலாம். அத்தொடர் காரணமாகப் புலவர், "கலைக்கோட்டுத் தண்டனார்" எனவும், அவரே நிகண்டொன்றும் இயற்றியமையால், "நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார்" எனவும் பெயரேற்றிருக்கலாம்.

## நிகண்டம் → நிகண்டன் - சைனசமயப்பெயர் - வையாபுரியார்

வையாபுரியார் தமது சங்க இலக்கியப் பதிப்பில், சங்கப் புலவர்களின் பெயர்களைப் பாகுபாடு செய்யுங்கால், நிகண்டன் கலைக் கோட்டுத் தண்டனார், "சமயத்தாற் பெயர் பெற்றவர்" (வ.செயதேவன். 1985, பக்.50) என்று குறித்துள்ளார்.

"இளம் போதியார், உலோச்சனார், நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார் ஆகிய சமயத்தாற் பெயர் பெற்ற இம்மூன்று புலவர்பெருமக்களுள் முன்னவர் புத்தமதத்தையும், ஏனைய இருவரும் சைனத்தையும் சார்ந்தவர்கள். எனவே, நிகண்டு நூல் செய்தமையால், நிகண்டன் என்று பெயர் அமைந்ததென்னும் கருத்து ஏற்புடைத்தன்றென்றும், அருகசமயத்துள், நிகண்டவாதப் பிரிவினைச் சார்ந்தமையால், நிகண்டன் என்னும் பெயர் அமைந்தது" (வ.செயதேவன். 1985, பக்.50).

நற்றிணை 382 - ஆம் பாடலைப் பாடிய "நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார்" என்னும் புலவர் நிகண்டவாதப் பிரிவினைச் சார்ந்த சமணர். நிகண்டு நூல் யாத்தவரல்லர். இது குறித்து வ. செயதேவனார் கூறுங்கால், "நிகண்டன் என்பது நிகண்டு நூல் செய்தமையால் ஏற்பட்ட பெயர் அன்று. 'நிர்க்கந்தன்' என்னும் வடசொல்லின் தமிழ் வடிவமே நிகண்டன்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.52) ஆகும் என்று குறிப்பிட்டுள்ளமையும் கருதத்தக்கது.

### தமிழகராதிக் கலையாசிரியர் சுந்தர சண்முகனார் கூற்று :-

தமிழகரமுதலி வரலாற்றில், "நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார், நற்றிணையின் 382 – ஆம் பாடலைப் பாடியவர். நற்றிணை கடைச்சங்க நூலாகும். நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனாரும் கடைச்சங்கப் புலவரே. அவரியற்றிய நிகண்டு நூலும் கடைச்சங்க காலத்ததாகும்" (திவாகரர். பக்.274).

## பெயரறியா நிகண்டுக் குறிப்புகள்

அழிந்துபட்ட நிகண்டாகிய, நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனாரின் நூல் தவிர, வேறு சில நிகண்டுகளும் இருந்திருக்கலாம் எனக் கருதுவதற்கு ஏதுவாக சில நிகண்டுக் குறிப்புகள் கிடைத்துள்ளன. இந்நிகண்டுகளின் மூலம் தெரியவில்லை. இக் குறிப்புகளை ஒவ்வொன்றாகக் காணலாம்.

### 1. யாப்பருங்கல விருத்திக் குறிப்புகள் :-

யாப்பருங்கல விருத்தியுரையில், இடம் பெற்றுள்ள சில மேற்கோள்கள் நிகண்டுபோல், தோன்றுகின்றன.

[எ.டு]

காரணக்குறியால் பெயர்பெறும் வெண்பாப் பெயர்களை

"நேர் என்பது மாறாதற் கண்ணும், ஒத்தற் கண்ணும்
தனிமைக் கண்ணும், மிகுதிக் கண்ணும், நுட்பத்தின்
கண்ணும், சமனாதற் கண்ணும், உடம்படுதற் கண்ணும்
பாதிக்கண்ணும், தலைப்பாட்டின் கண்ணும், நிலைப்
பாட்டின் கண்ணும், கொடைக்கண்ணும் நிகழும்"

என்று அமிர்தசாகரர் குறித்துள்ளார். திவாகர நிகண்டு நேர் என்னும் சொல்லுக்கு ஒன்பது பொருள்கள் மட்டும் சுட்டுகிறது.

தமிழகரமுதலி வரலாற்றில் சொற்பொருள் விளக்கும் நிகண்டு போன்று, நேர் என்னும் தனியொரு சொற்கு அமிர்தசாகரர், யாப்பருங்கல விருத்தியுரைக் குறிப்பிற் குறித்துள்ள பதினொரு பொருள் வருமாறு :-

| | |
|---|---|
| 1. மாறாதல்; | 7. உடம்படுதல்; |
| 2. ஒத்தல்; | 8. பாதி; |
| 3 தனிமை; | 9. தலைப்பாடு; |
| 4. மிகுதி; | 10. நிலைப்பாடு; |
| 5. நுட்பம்; | 11. கொடை. |
| 6. சமன்; | |

இப்பதினொரு பொருட்குரிய பண்டை இலக்கிய மேற்கோள்களும், இவ்வுரையில் குறிக்கப்பட்டுள்ளன. இதுவரை கிடைத்துள்ள எந்தவொரு நிகண்டிலும், "நேர்" என்னும் தனியொரு சொல்லுக்குப் பதினொரு பொருள்கள் சுட்டப்படவில்லை. இப் பதினொரு பொருள்களும் ஏதேனுமொரு நிகண்டு நூலினின்று பெறப்பட்டவையே. ஆனால் அந்நிகண்டின் பெயர்; ஆசிரியர் பெயர் கிடைக்காமலுள்ளது. திவாகர நிகண்டில் "நேர்" என்னும் சொல்லுக்குக் குறித்துள்ள ஒன்பது பொருள்கள் பற்றிய நூற்பா வருமாறு :-

"உடன்படல், உவமை, ஒத்தல், நுட்பம்,
சமன்பாதி, மிகுதி, தலைப்பாடு, தனிமை யென
நிகழ்ந்த ஒன்பானும் நேரென் கிளவி"
– திவாகரர். 274.

சூடாமணி நிகண்டில், மண்டல புருடர், "நேர்" என்னும் சொல்லுக்கு 1. சமம், 2. ஈதல், 3. பாதி, 4. நெடில், 5. உடன்பாடு, 6. நுட்பம் என அறுவகைப் பொருட்களைக் குறிப்பிடும் நூற்பா வருமாறு :-

நேர், சமம், ஈதல், பாதி
நெடில், உடன்பாடு, நுட்பம்
– மண்டல புருடர் – 11 : 15.

பிங்கல நிகண்டில் "நேர்" இடம்பெறவில்லை. அமிர்தசாகரர், யாப்பருங்கல விருத்தியுரையில், பதினொரு வகைப் பொருள்களைச் சுட்டும், நிகண்டு ஒன்று இருந்தது என்பதில், யாதொரு ஐயமுமில்லையென்று மொழிந்துள்ளமையும் கருதத்தக்கது.

2. யாப்பருங்கல விருத்தி உரைகாரர், திரிசொற்களுக்கு எடுத்துக்காட்டுகளைக் கூறுங்கால், நிகண்டுகள் போன்று பதினேழு வகைத் திரிசொற்களைக் கூறியுள்ளார். அது குறித்த நூற்பா வருமாறு :-

"பைஞ்ஞீலம், பைதிரம், விரற்றலை, யோர் பித்தை,
பூழிலவம், பீளை, துருவையனல், தொடுப்பகை, பிறடி
கருவுள நவிரல், வசி, தலையல், நிவப்பு
செப்பிய பிறவுந் திரிசொல் லாகும்
– அமிர்தசாகரர். 441.

பதினேழு திரிசொற்களைக் கூறும் நிகண்டு நூற்பா போன்று தோற்றந்தரும், இந்நிகண்டின் மூலமும், இதுகாறும் தெரியவில்லை. இஃது ஓர் இலக்கண நூல் போன்று தோன்றுகிறது. பதினேழு திரிசொற்களைக் கூறும், பெயர் தெரியா இந்நூல், "ஒரு நிகண்டு நூலாகவும் இருக்கலாம்" (வ.செயதேவன். 1985, பக்.52).

3. அமிர்தசாகரர் – 441 – ஆவது யாப்பருங்கல விருத்தியுரையில், மேற்கோள் காட்டும் நூற்பாவும், பெயர் தெரியா நிகண்டினின்று எடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. விலங்குகளின் ஆண், பெண் இளமைப் பெயர்களைக் கூறுங்கால், யாப்பருங்கல விருத்தியுரைகாரர்,

(ஒ.நோ.) "பெயரிவை மும்மையும் பிறவுமிப் பொருட்கண்
இயைபெதி ரியலுமென்றுணர்ந் தியயக்
குறியொடு காரணங் கொளவகுத் தொழிந்த
தறிய வுரைப்போன் ஆசிரி யன்னே"
(அமிர்தசாகரர். 441)

என்னும் நூற்பாவை எடுத்துக்காட்டாகச் சுட்டுகிறது. இதன் மூலமும் தெரியவில்லை. மேலே குறிக்கப்பெறும் விலங்குகளின் ஆண், பெண் இளமைப் பெயர்கள், ஒரு நிகண்டிலிருந்து எடுத்தவை போலத் தோன்றுகின்றன.

4. கலிப்பாவின் பொருளைக் கூறுமிடத்து, யாப்பருங்கல விருத்தியுரைகாரர், பின்வரும் நூற்பாக்களை மேற்கோள் காட்டுகிறார்.

"கலித்தல் கன்றல் கஞுறல் பம்மல்
எழுச்சியும் பொலிவும் எய்தும் பெயரே"

"கம்பலை, கம்மை, யழுங்கல், கலிமுழக்
கென்றிவை யெல்லாம் அரவப் பெயரே"
(அமிர்தசாகரர். 441)

"இந்த இரு நூற்பாக்களும், அமைப்பாலும், பொருளாலும், ஒரு நிகண்டுக்கு உரியனவாக இருக்கலாம் எனத் தெரிகிறது" (வ.செயதேவன். 1985, பக்.53).

5. பாரத வெண்பாவிற் காணப்படும் நிகண்டுக் குறிப்பு :–

பெருந்தேவனார் தமது பாரதவெண்பாவில், படைத்திரட்சியும், படைவகுப்பும் கூறுமிடத்துத் தாமே செய்த உரைநடைப் பகுதியில், அக்குரோணி சேனையை உரைக்கும் நூற்பாக்களைக் காட்டுகிறார்.

ஒருபெருந் தேரும் இருபெருங் களிறும்
துரகம் நான்கும் படைஞர் ஐவரும்
கொண்டது பதாதி யென்ப தாகும்
பதாதி முறைவழு வாமல்மும் மடங்கு
கொண்டது சேனை என்ப தாமே
ஆங்கது மும்முறை கொண்டது குன்மம்
குன்மம் மும்முறை கொண்டது அனீகினி
அனீகினி ஐம்பதிற் றிரட்டியொ டாயிரம்
கொண்டது அக்குரோணி யென்ன மொழிந்தான்
மூவகை உலகமும் முறைப்பட வேத
பாரதம் பகர்ந்த பராசரன் மகனே"

என்றிவ்வகை சொல்லப்பட்ட அக்குரோணியால் வந்த சங்கையினை யிவ் வாசிரியரிடத்துக் கண்டு கொள்வது" (பெருந்தேவனார். 399. உரை)

மேற்குறித்த நூற்பாக்களில், முதல் மூன்றடிகள் திவாகரத்தில் (314–315) இடம் பெற்றுள்ளன. ஏனையவற்றைத் திவாகரர் வேறு வகையாகக் குறிப்பிட் டுள்ளார். மேலே காட்டிய மேற்கோள் நூற்பாக்கள், ஒரு நிகண்டிற்குரியனவாகத் தோன்றுகின்றன.

6. இளம்பூரணர் உரையில் காணப்படும் நிகண்டுக் குறிப்பு :–

இளம்பூரணர் உரையிற் காணப்படும், கீழ்க்காணும் எடுத்துக்காட்டு நூற்பாக்கள் குறித்த நிகண்டும் கிடைக்கப்பெறவில்லை.

(எ.கா.) "அன்ன பிறவும் கிளந்த அல்ல

..........................................................

ஓம்படை ஆணையிற் கிளந்தவற் றியலாற்
பாங்குற உணர்தல் என்மனார் புலவர்"
(தொல். 879)

என்னும் தொல்காப்பிய உரியியல் நூற்பாவினுக்கு, எடுத்துக்காட்டாகக் குறித்துள்ள, சில நூற்பாக்களுக்கு மூலம் தெரியவில்லை. அவை வருமாறு :–

(எ.கா.) "அருமை, இருமை, கருமை, சேண்மை என்னுந் தொடக்கத்தனவற்றைப் பிற நூலார்,

"இருமையும் பெருமையும் கருமையுஞ் செய்யும்"

என்றும்,

"தொன்றென் கிளவி தொழிற்பயில் வாகும்"

என்றும், எடுத்தோதுப என்பதும் அது.

மேற்குறித்த இளம்பூரணர் உரையிற் காட்டப்பெறும் இந்நூற்பாக்கள், ஒரு சொல், பல்பொருட்டொகுதியினைச் சுட்டுப.

"இந்நூற்பாக்கள் நிகண்டு போல் தெரிகின்றன" (வ.செயதேவன். 1985, பக்.54)

"இளம்பூரணருக்கு முற்பட்ட திவாகரம், பிங்கல நிகண்டுகளில் இவை காணப்படவில்லையாதலால், வேறு நிகண்டு(கள்) இருந்திருக்கலாம் எனக் கொள்ளலாம்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.180).

## திவாகர வெண்பா காட்டும் நிகண்டுக் குறிப்பு :-

புறத்திணைப் பிரிவுகளைக் கூறும் கீழ்க்காணும் பஃறொடை வெண்பா, திவாகரம் (301) பிங்கல (217) - நிகண்டுகளிலும், வீரசோழிய உரை மற்றும் நச்சினார்க்கினியர் உரையிலும் காணப்படுகிறது. அந் நூற்பா வருமாறு :-

"வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம் !
வட்கார்மேற் செல்வது வஞ்சியாம் :- உட்காது
எதிரூன்றல் காஞ்சி : எயில் காத்தல் நொச்சி :
அதுவளைத்தல் ஆகும் உழிஞை :- அதிரப்
பொருவது தும்பையாம் ; போர்க்களத்து மிக்கார்
செருவென் றதுவாகை யாம்"

திவாகரம், முழுமையும் நூற்பாவால் இயன்ற நிகண்டு ஆகும். எனவே, இவ்வெண்பாவுக்கு முறையான இடம், திவாகரத்தில் இருக்க வாய்ப்பில்லை. மேலும் திவாகரத்தில், இவ்வெண்பா தவிர, வேறு யாப்புடைய பாடல் இல்லையென்பதும், கருதத்தக்கவொன்றாகும். இத்தகைய கரணியங்களால், "இவ்வெண்பா முன்னரே இருந்த ஒரு தனிப்பாடல் அல்லது வேறு ஒரு நிகண்டின் பகுதி" (வ.செயதேவன். 1985, பக்.154) என்றே எண்ணத் தோன்றுகிறது.

## இறையனார் அகப்பொருளுரை - தொல்காப்பியம் - இளம்பூரணம் காட்டும் நிகண்டுக்குறிப்பு

இறையனார் அகப்பொருளுரையும், தொல்காப்பிய இளம்பூரணமும், எண்வகை மணத்தைச் சுட்டும் பெயரறியா மேற்கோள் நூற்பா நுவலும், நிகண்டுக் குறிப்பு வருமாறு :- "அறநிலை ஒப்பு பொருள்கோள் தெய்வம்

யாழோர் கூட்டம் அரும்பொருள் வினையே
இராக்கதம் பேய்நிலை என்றிக் கூறிய
மறையோர் மன்றல் எட்டவை : அவற்றுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் புணர்ப்பிதன்
பொருண்மை என்மனார் புலமை யோரே"

பெயரறியப்படாத இந்நூற்பா சுட்டும், எண்வகை மணத்துள், 'இராக்கதம்' தவிர ஏனையவை தமிழ்ப் பெயர்களாகும். இறையனார் களவியலுரை இந்நூற் பாவை மேற்கோளாகக் காட்டி, விளக்கம் வரையுங்கால், "பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் முதலான வடமொழிப் பெயர்களை முதற்கண் மொழிந்து, அடுத்த நிலையில் தமிழ்ப் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளது. இளம்பூரணமும் வடமொழிப் பெயர்களைச் சுட்டி விளக்கம் அளித்துப் பின்னர் மேற்குறித்த நூற்பாவைச் சுட்டி, "என்பதனாலும் கொள்க" எனக் குறிக்கிறது. மேலும், திவாகரம் தமிழ்ப்பெயர்களை ஆளாமல், வடமொழிப் பெயர்களையே குறிக்கிறது. திவாகரத்திற்குச் சற்று முற்பட்ட காலத்ததாகக் கருதப்படும் தமிழ்நெறி விளக்கத்தில், இந்நூற்பா இடம்பெறவில்லை. எனினும், அறநிலை, ஒப்பு, பொருள்கோள், தெய்வம், அரும்பொருள்நிலை, வலிநிலை, பேய்நிலை, கந்திருவம் எனும் மறையோர் மன்றல் சுட்டும் எண்வகை மணத்துள், தெய்வம், கந்திருவம் நீங்கலாக, ஏனைய மணங்கள், தமிழால் குறிக்கப்பட்டுள்ளன. "மேற்காட்டிய நூற்பாவைக் கருத்திற்கொண்டு இவ்வாறு தமிழ்நெறி விளக்கம் குறித்திருக்கலாம் எனக் கருதத் தோன்றுகிறது. இந்நூற்பா திவாகரத்திற்கும் முற்பட்ட, ஒரு பழைய நிகண்டினதாக இருக்கலாம் எனத் தோன்றுகிறது" (வ.செயதேவன். 1985, பக்.55).

இடுகுறியாற் பெயர்பெற்ற நூலுக்கு எடுத்துக்காட்டாக, "நிகண்டை"ச்சுட்டும் களவியலுரை காரர், மேற்சுட்டிய எண்வகை மணம் குறித்த, நூற்பாவையும் கூறியுள்ளதால், இந்நூற்பா அவர் காலத்திற்கு முற்பட்ட, ஒரு நிகண்டு நூலுக்குரிய தெனலாம். அந்நிகண்டு, களவியல் உரைகாரர் உரைக்கும் இடுகுறியாற் பெயர் பெற்ற நூலாகவும் இருக்கலாம். "இதுகாறும் கூறிய நிகண்டுக் குறிப்புகளைத் தொகுத்து நோக்குகையில், களவியலுரைகாரர் சுட்டும் நிகண்டொன்று இருந்திருக்கலாம்" (வ.செயதேவன். 1985, பக்.55) எனக் கருதத் தோன்றுகிறது. ஆனால், அது எது வென்று உறுதியாகத் தெரியவில்லை.

## நாலாயிரத் தெய்வப் பனுவலிற் காணப்படும் நிகண்டுக் குறிப்பு :-

நாலாயிரத் தெய்வப் பனுவலின், பெரிய விரிவுரையில் சிலவிடங்களில் மேற்கோளாகக் குறிக்கப்பெறும் சில நூற்பாக்களின் தோற்றம், நிகண்டுக்குரியனவாகத் தெரிகின்றன. இந் நூற்பாக்களின் அமைப்பு, நிகண்டு நூற்பாக்களை ஒத்துள்ளன. ஆனால் இவற்றின் மூலத்தை அறிய இயலவில்லை.

## நிகண்டுச் சுவடி

சென்னை அரசினர் சுவடி நூலகத்திற் காணப்படும் நிகண்டுச் சுவடியொன்று. ஆறு தொகுதி களைக் கொண்டது; நூற்பாவினால் ஆனது. "ஆசிரியர், நூற் பெயர்கள் தெரியாத, இந்நிகண்டின் முதற் தொகுதியும், இறுதித் தொகுதிகளும் இல்லை" (வ.செயதேவன். 1985, பக்.56) என்பார்.

இதுகாறும் கூறியவற்றால், முறையான வரலாறும், பெயரும் அறியப்படாத நிகண்டுச் சான்றுகள், i) யாப்பருங்கல விருத்தியுரை, ii) பாரதவெண்பாவிற் காணப்படும் மேற்கோள் நூற்பாக்கள், iii) இளம்பூரணர் உரைக் குறிப்பு, iv) திவாகர வெண்பாக் குறிப்பு, v) இறையனார் காவியலுரைக் குறிப்பு, vi) நாலாயிரத் தெய்வப் பனுவல் உரைக் குறிப்புகள் போன்றவற்றுள் பொதிந்துள்ளன எனலாம். இனி, தமிழகரமுதலி வரலாற்றில் தெளிவான வரலாற்றுடனும், முறையான பெயருடனும் அமைந்த நிகண்டுகளைப் பற்றிக் காண்போம்.

## ஆதி திவாகரம்

சங்கக்காலத்திற்குப் பின்னர்த் தோன்றிய நிகண்டுகட்குள் காலத்தால் முற்பட்டது ஆதி திவாகரம். கி.பி.8 – ஆம் நூற்றாண்டிற்கு முன்பு வாழ்ந்த திவாகரரால் இயற்றப்பட்டது, ஆதி திவாகரம். இயற்றுவித்தோன் பெயரையும், இயற்றியோன் பெயரையும் இணைத்துத் தமிழகரமுதலி வரலாற்றில் நிலைத்த புகழுடன் நின்றிலங்கும் இது சேந்தன் திவாகரத்திற் முற்பட்டது. இந்நிகண்டு பற்றிச் சுந்தர சண்முகனார் கூறுவது வருமாறு :–

"இரண்டு திவாகரங்கள் தோன்றிவிடவே, இரண்டிற்கும் வேறுபாடு தெரிவதற்காக, முதலில் தோன்றிய திவாகரம், "ஆதி திவாகரம்" எனவும், சேந்தனது தூண்டுதலால் இரண்டாவதாகத் தோன்றிய திவாகரம், "சேந்தன் திவாகரம்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.53) எனவும் அழைக்கப்பட்டன. சிலர், இந்த இரு திவாகரங்களையும், தனித்தனி நூலாகக் கொள்ளாமல், ஒரே நிகண்டெனக் கூறுகின்றனர்.

பிற்கால மக்களால் பெருவாரியாகப் படித்துப் போற்றப்பட்ட சூடாமணி நிகண்டின் ஆசிரியர் மண்டலபுருடர், தமக்கு முன் இருந்த திவாகரம், பிங்கலம் என்னும் இரு நிகண்டுகளை அடிப்படையாகக் கொண்டு எளிய முறையில், சூடாமணி நிகண்டைத் தாம் எழுதியிருப்பதாகக் குறிக்குமிடத்து, "இங்கிவை இரண்டும் கற்க" என்று மொழிந்துள்ளார். இவ்விடத்து மண்டலபுருடர், தமக்குமுன் தோன்றிய, திவாகரம், பிங்கலம் என்னும் இரண்டு நிகண்டுகளையே, "இரண்டும் கற்க" என்று எண்ணிக்கையிட்டு, முடிவாக மொழிந்துள்ளார் எனச் சில அகராதியியல் வல்லுநர் கருதுவர். ஆதி திவாகரம் ஒன்று இருந்திருந்தால், "மூன்றும் கற்க" என மொழிந்திருப்பார்; மண்டல புருடர் இரண்டெனக் கூறியுள்ளதால், நிகண்டுகட்குள் முந்திய சேந்தன் திவாகரமே, அதன் பழைமையை நோக்கி, ஆதி திவாகரம் என அழைக்கப்பட்டது. என்பது ஒருசாரார்தம் கருத்தாகும்.

இக்கூற்றினை "ஆதி திவாகரம் என ஒன்றைத் திட்டவட்டமாக, அறிவித்திருப்பதனாலே, அஃது இருந்திருக்கக் கூடும். எனவே, சேந்தன் திவாகரமே, பழைமை பற்றி ஆதி திவாகரம் என அழைக்கப்பட்டது என்னும் கூற்றுப் பொருந்தாது. அப்படியே, சேந்தன் திவாகரத்தின் பழைமையைப் பாராட்ட விரும்பி யிருந்தாலும், அதனை ஆதி நிகண்டு என அழைத்திருக்க வேண்டுமே தவிர, ஆதி திவாகரம் என அழைத்திருக்க முடியவே முடியாது. எனவே, ஆதி திவாகரம் வேறு. அப்படியாயின், அஃது எங்கே எனின், தமிழில் மறைந்து போன நூல்களின் எண்ணிக்கை மிக நீளமானது. அந்த நீளமான பட்டியலில், ஆதி திவாகரமும் சேர்ந்திருக்க வேண்டும்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.57) என மறுத்துரைப்பாருமுளர்.

## சேந்தன் திவாகரம்

தமிழகரமுதலி வரலாற்றில் தொல்காப்பியத்தை அடித்தளமாகக் கொண்டு முகிழ்த்த, முழுமையான நிகண்டு சேந்தன் திவாகரம் ஆகும். தமிழிலுள்ள அனைத்து நிகண்டுகட்கும் மூலமானதும், முழுமையாக அமைந்ததுமான முதல் நிகண்டு, சேந்தன் திவாகரம் எனலாம். "பிற்காலத்தில் தோன்றிய அனைத்து நிகண்டுகட்கும் முதல் வழிகாட்டி சேந்தன் திவாகரம்" (மு. சண்முகம் பிள்ளை, பக்.41).

"இந்நிகண்டின் அமைப்பு முறையே, பிற்கால நிகண்டுகட்கெல்லாம் மூல அளவையாய் அமைந்து நிற்கிறது தொல்காப்பிய உரியியலைவிடச் சொல் எண்ணிக்கையில் பலமடங்கு பெருகியுள்ளது". தமிழகரமுதலி வரலாற்றில் நிகண்டுக் கூறுகளைத் தன்னகத்தே கொண்டு மிளிரும், முழுமையான முதன்மையான நிகண்டு "சேந்தன் திவாகரம்" என்பது அனைத்து அகரமுதலி வல்லுநர்தம் ஒப்ப முடிந்த கொண்முடிபாகும். 'பன்னிரு தொகுதிகளிலும்,

சேந்தனது புலமைச் சிறப்பு, கொடைவளம், அறிவுத் திறன் முதலான மிகுபுகழ்க் கூறுகளைப் பலபடப் பாராட்டிப் பேசும் திவாகரம், சேந்தன் திவாகரம் எனப்பெயர் பெற்றது'.

## சேந்தன் திவாகரம் – பெயர்க்காரணம்

திவாகரரின் ஊர்ப்பெயர் முதலிய செய்திகள் அறியக் கூடவில்லை. இவர் சோழநாட்டில் அம்பர் என்னும் ஊரில் வாழ்ந்த சேந்தன் என்ற வள்ளலைத் தம் நூலுள், பல இடங்களில் புகழ்ந்து போற்றியுள்ளார். சேந்தன், திவாகரருக்கு உற்றுழி உதவி, உறுபொருள் கொடுத்த தம் வள்ளல் பெயருடன் ஒன்றிணைத்துச் "சேந்தன் திவாகரம்" என நூற்பெயரை வழங்குவர். அறத்தின் வழிநின்று, பகைவர்களை அடக்கி, ஐம்புலன்களை வென்ற சேந்தனது மாண்பினைப் பாடும் திவாகரம், "சேந்தன் திவாகரம்" எனப் பெயர்பெற்றது. எடுத்துக்காட்டுப் பாடல் வருமாறு :-

(எ.கா.) "ஐம்புல னாளும் அம்பற் கோமான்
திண்பெருஞ் சேந்தன் திவாகரம்"

இப்பெயரால் அமைந்த ஏட்டுச் சுவடிகள், சில கிடைத்துள்ளன. பெரும்பாலான ஏடுகள், திவாகரம் என்றே நூற்பெயரைச் சுட்டியுள்ளன.

## சேந்தன் திவாகரம் – காலம்

1. கி.பி. ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், சாளுக்கிய மன்னன் இரண்டாம் புலிகேசியை வென்று, வாதாபி நகரைக் கைப்பற்றிய பின்புதான், அங்கிருந்த பிள்ளையார் திருவுரு, "வாதாபி கணபதி" என்னும் பெயரில், நரசிம்மவரும பல்லவர் படைத்தலைவர் சிறுத்தொண்டரால் (பரஞ்சோதியாரால்), தமிழகத்திற்குக் கொண்டுவரப்பட்டது வரலாற்றுண்மையாகும். சங்க நூல்களிற் காணப்படாத பிள்ளையார் வழிபாட்டுப் பாடல், திவாகரர் இயற்றிய திவாகரநிகண்டில் இடம்பெற்றுள்ளது. திவாகரர் தமது நூலின் முதல் தொகுதியாகிய தெய்வப்பெயர்த் தொகுதியில்,

"ஒற்றைக் கொம்பன், விநாயகன், ஐங்கரன்
வெற்றி, யானை முகவன், கணபதி,
பாசாங்கு தரன், ஆகுவா கனனே" என்று

ஆனைமுகத்தோனின் பல்வகைப் பெயர்களை வரிசைப்படுத்தி, குறித்துள்ளமையால் பல்லவர் காலமாகிய கி.பி.7–ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் திவாகரம் இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்று துணியலாம்.

ii) சேந்தன் அம்மையின் மேல் அந்தாதி பாடியிருப்பதாகத் திவாகரர் தமது நிகண்டிற் கூறியுள்ளார்.

(எ.கா.) "அண்ணல் செம்பாதிக் காணி யாட்டியைப்
பெண்ணணங்கை மூவுலகும் பெற்ற அம்மையைச்
செந்தமிழ் மாலை அந்தாதி புனைந்த
நாவலன் அம்பற் காவலன் சேந்தன்"

சிற்றிலக்கிய வகைகள் தொண்ணூற்றாறனுள் அந்தாதியும் ஒன்று. அந்தாதி போன்ற நூல்வகைகள் கழகக் காலத்தில் இல்லையாதலால், சங்கக் காலத்திற்குப் பிற்பட்ட இடைக்காலத்தில், திவாகரம் தோன்றிற்றெனலாம்.

iii) கி.பி.8 ஆம் நூற்றாண்டு :

திவாகர நிகண்டின் இரண்டாம் தொகுதியாகிய, மக்கட்பெயர்த் தொகுதியில், சாளுக்கிய மன்னர்களைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

(எ.கா.) "வேள்புல வரசர் சளுக்கு வேந்தர்"

கி.பி. 6,7–ஆம் நூற்றாண்டுகளில் சாளுக்கிய மன்னர்கள் தமிழ்நாட்டோடு தொடர்பு கொண்டனர். புலிகேசி, விக்கிரமாதித்தியன் முதலான சாளுக்கிய குல மன்னர்கள், காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு, தொண்டை மண்டலத்தை ஆட்சி செய்த, பல்லவ குல மன்னர்களோடு, போரிட்டதாக வரலாறு கூறுகிறது. எனவே, சாளுக்கிய மன்னர்களைப் பற்றிக் கூறும் திவாகரம், கி.பி.7–ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி, அல்லது கி.பி.8–ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றியதெனலாம். திவாகரத்தின் 12 தொகுதிகளிலும் சேந்தனது கொடை மற்றும், கல்வித்திறன் விதந்தோதப்பட்டுள்ளது.

சேந்தன் செந்தமிழ்ப்புலவன் மட்டுமல்லாமல், வடமொழி வல்லுநனாகவும், சிறந்த கல்வியாளனாகவும் திகழ்ந்துள்ளான். சேந்தனின் பல்வேறு சிறப்பியல்புகள் திவாகரத்தின் – 12 தொகுதிகளிலும், பரவலாகக் காணப்படுகின்றன. அவற்றிற் சில பாடல்கள் வருமாறு :-

1. வடநூற் கரசன் தென்தமிழ்க் கவிஞன்
கவியரங் கேற்றும் உபயகவிப் புலவன்
செறிகுணத் தம்பற் கிழவோன் சேந்தன்

2. கற்ற நாவினன் கேட்ட செவியினன்
முற்ற வுணர்ந்த மூதறி வாளன்
நாகரிக நாட்டத் தாரியன் அருவந்தை
தேறுங் காட்சிச் சேந்தன்

3. காதலி கையிற் போதிப் பெருந்தவன்
தெவ்வடு கால வைவேல் எழிலி
அவ்வை பாடிய அம்பற் கிழவன்
தேன்தார்ச் சேந்தன்''

திவாகரர் கி.பி.8 – ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவராகையால், உற்றுழியுதவிய சேந்தனும் அவர்தம் காலத்தினனே என்பதில், யாதொரு ஐயமுமில்லை.

## திவாகர நிகண்டின் காலம் குறித்து வையாபுரிப்பிள்ளை கூறுவது :-

திவாகர நிகண்டின் காலம் குறித்துப் பேராசிரியர் வையாபுரியார், நாமதீப நிகண்டின் முன்னுரையில் தக்க ஏதுக்கள் காட்டி, நிகண்டின் காலம் கி.பி.8 – ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்று நிறுவியுள்ளார்.

"வேள்புல வரசர் சளுக்கு வேந்தர்'' என்று திவாகரம் குறிப்பிடுங்கால், வேள்புலவரசர் பெயரும், பின்னர்க்குறுநில வேந்தர்கள் பெயரும், முறையே கூறப்படுகின்றன. தமிழ் வேந்தர்தம் கொடிகட்கீடாக சளுக்கியவரசர்களின் கேழற்கொடியும் விதந்து ஓதப்படுகின்றது. சளுக்கிய வேந்தர்க்கு வேறு பெயர்கள் இல்லாதிருந்த நிலையில், அவர்கள் ஆட்சி புரிந்த நிலத்தை அடிப்படையாகக் கொண்டு, வலிந்து உணர்த்தப்படுகின்றார்கள். இக் கரணியங்களால், சளுக்கிய வேந்தர் புகழுடன் திகழ்ந்த காலத்தே, அஃதாவது, கி.பி.7–ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அல்லது 8–ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில், திவாகரம் இயற்றப்பட்டதெனலாம்.

அகராதிக் கலைஞர் தா.வே. வீராசாமி அவர்களின் அகராதிக் கட்டுரையிலும், மு.அருணாசலத்தின் 9–ஆம் நூற்றாண்டு வரலாற்றிலும், திவாகர நிகண்டின் காலம் கி.பி. 9–ம் நூற்றாண்டு எனக் குறிக்கப்பட்டுள்ளது. இக்கருத்துக் குறித்து "மு. அருணாசலம் தாம் எழுதிய ஒன்பதாம் நூற்றாண்டு வரலாற்றில், "பிள்ளையவர்கள் கொள்ளுகின்ற நெறி, கொள்ளத்தக்க தாயினும், முடிவு கொள்ளத்தக்க தன்று'' என்று வேறு பல ஒத்த சான்றுகளை எடுத்துக்காட்டித் திவாகரர் காலம் கி.பி.9–ஆம் நூற்றாண்டாதல் வேண்டும் என்பாருமுளர்'' (மு. சண்முகம் பிள்ளை, பக்.45) என்று நவின்றுள்ளார்.

## திவாகரர் – திவாகரம் – அமைப்பும் – சிறப்பியல்புகளும்

திவாகரர் முதற்கண் இல்லறம் நடாத்திப் பின்னர்த் துறவு பூண்டவர்; "திவாகர முனிவர் அருளிச்செய்த சேந்தன் திவாகரம்'' என நூன்முகப்பில், குறிக்கப்பட்டிருப்பதைக் கொண்டு, இஃது புலனாகும். இவர், தஞ்சை மாவட்டத்துச் சேந்தனால், ஆதரிக்கப்பெற்றமையால் இவரும், தஞ்சைப்பகுதியைச் சார்ந்தவரெனலாம். திவாகரர் தமது நன்றி பாராட்டும் இயல்பினை, நூன்முழுதும் சேந்தனை புகழ்ந்து பாடியதன் வாயிலாக அறியலாம்.

திவாகரர் பல்வேறு துறைகளிலும், பெரும்புலமை பெற்றிருந்தார் என்பதற்கு, இவர்தம் நிகண்டு நூலே, முதற்சான்றாகும். திவாகரர், தமது நூலின் ஒவ்வொரு தொகுதியின் இறுதியிலும், வரலாற்றுக் குறிப்புகளடங்கிய நூற்பாவினைப் பாடியுள்ள பாங்கு, இவர்தம் கூர்த்த வரலாற்றறிவினை வெளிக்காட்டும் பான்மையில் அமைந்துள்ளது. இவ்வரலாற்றுக் குறிப்புகளடங்கிய நூற்பாக்கள், இவரைப் பற்றிய வரலாற்றுண்மைகளை உரைப்பதோடு மட்டும் அமையாது, பிற்காலத்தில் தோன்றிய கயாதரம், பாரதி தீபம், அகராதி நிகண்டு நூல் ஆசிரியர்கள், வரலாறு குறிக்கும் நூற்பாக்களை யாத்தற்கும் அடிப்படையாக அமைந்தனவெனலாம்.

"திவாகரர் சமண சமயத்தவரென்று ச.வையாபுரியார் மு. இராகவ(ய்யங்கா)ர் முதலானோர் கருதுகின்றனர். தமிழகராதிக் கலை ஆசிரியர் சுந்தர சண்முகனார், இலக்கிய வரலாற்றை நூற்றாண்டு வரிசையில் எழுதி வெளியிட்ட அறிஞர். மு. அருணாசலம் முதலானோர், சைவ சமயத்தவரென்று சான்றுகளைக் காட்டி நிறுவியுள்ளனர். சைவ சமயத்தானாகிய சேந்தனால் ஆதரிக்கப் பெற்று, அவன் பெயரையும் தம் நூலுக்கு இட்ட திவாகரர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதற்கான சான்றுகள் :–

1. பொதுவாக நூலாசிரியர்கள், நூலுக்குக் காப்புச் செய்யுள் இயற்றுங்கால், தமது வழிபடு தெய்வத்தை முதற்கண் குறித்தல் மரபாகும். எடுத்துக்காட்டாக மண்டலபுருடர் தமது சூடாமணி நிகண்டின் தொடக்கத்தில், சமணக் கடவுளாகிய அருகதேவன் பெயர்களைக் குறித்துள்ளது, ஈண்டு குறிப்பிடத்தக்கது. அது போல், சைவசமயத்தவரான திவாகரர், பிள்ளையாரை முதற்கண் வேண்டித் தம்மையும் நூலையும் காக்குமாறு, காப்புச்செய்யுள் பாடியுள்ளார்.

(எ.டு.) தந்திமுகத் தெந்தை சதங்கைப் பதம் போற்றிச்
சிந்தை விளக்காம் திவாகரத்துள் – வந்த
தொகுதியொரு பன்னிரண்டும் சோராமல் நேரே
பகுதியுற மனமே பற்று.

"தந்திமுகத்து எந்தை" யென்று யானைமுகக் கடவுளைச் சிறப்பித்ததோடு மட்டுமின்றி, தமது நிகண்டின் முதல் தொகுதியாகிய, தெய்வப்பெயர்த் தொகுதியில், சிவனின் பெயர்களையே முன்னெடுத்துப்பாடியுள்ளமையாலும், திவாகரர் சைவர் என்பது, இனிது பெறப்படும்.

2. திவாகரர் சைவரென்று அவர் பாடிய தெய்வப்பெயர்த் தொகுதியில் கடவுள் வைப்பு முறையை அடிப்படையாகக் கொண்டு துணியலாம். சிவனை முதற்கண் மொழிந்தும், திருமால், முருகனுக்கு அடுத்து நான்காவது இடத்தில் அருகனைக் குறித்துள்ளமையும், திவாகரர் சிவனியம் சார்ந்தவரென்பதைத் தெளிவுறுத்துகின்றது.

திவாகரர், தெய்வப்பெயர்த் தொகுதியில், சிவபெருமானின் சிறப்புப் பெயர்களாக அறுபத்து மூன்றினையும், சமணக் கடவுள் அருகனின் பெயர்களாக நாற்பத்து மூன்றினையும் குறிப்பிட்டுள்ளார். இவ்வெண்ணிக்கை வேறுபாடே – ஏற்றக்குறைவே, இவர் சைவரென்பதை உறுதிப்படுத்துகிறது. சிவனது அறுபத்து மூன்று பெயர்களைக் குறிக்கும், திவாகர நிகண்டின் தெய்வப் பெயர்த் தொகுதி தமிழ் மொழியின் சொல்வளத்திற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. அப்பாடல் வருமாறு :-

"சங்கரன், இறையோன், காம தகனன்
கங்கா தரனே, கறைமிடற் றண்ணல்,
கூற்றை யுதைத்தோன், குன்ற வில்லி,
ஏற்று வாகனன் திரியம்பகன், சோதி,
நக்கன், சடையோன், நாரி பாகன்,
முக்கண் பகவன், பசுபதி, பரமன்,
கொன்றை சூடி, கொலைமழு வாளி,
ஈமத் தாடி, பிஞ்ஞகன், பித்தன்,
ஆனை யுரித்தோன், அரன்சிவ னுருத்திரன்,
கால காலன், கபால மூர்த்தி,
நீல கண்டன், நீறணி கடவுள்,
அரவா பரணன், ஆரழ லாடி,
பிறையது சூடி, பெருமான், உமாபதி
அழலது வேந்தி, அமலன், ஆனர்தன்,
பரசு பாணி, சுடலை யாடி,
மானிடம் ஏந்தி, மறைமுதல் யோகி,
புலித்தோ லுடையான், புரமூன் றெரித்தோன்,
பினாக பாணி, பேயோ டாடி
பூத நாதன், புணர்கங் காளன்,
ஞான மூர்த்தி, ஈச னனாதி,
ஐம்முகன், பகவன், ஆதிபாண் டரங்கன்,
அந்தி வண்ணன், ஆலமர் கடவுள்,
நந்தி, நம்பன், நாதன், தற்பரன்,
கண்ணுதல் மூர்த்தி, கைலை யாளியென்
றெண்ணிய நாமம், இன்னமும் பலவே"

இப்பாடலிற் காணப்படும் தொன்ம (புராண)ப் பெயர்கள், திவாகரர் காலத்திலேயே தமிழ்நாட்டில் அவை தொடர்பான கதைகள் மலிந்துள்ளமைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றன.

திவாகரத்தில் இடம்பெறும் சமணக்கடவுள் பெயர்கள், திருக்குறள் கடவுள் வாழ்த்தில் குறிக்கப்பெறும். "ஆதி பகவன், அறவாழி யந்தணன், எண்குணத்தான், மலர்மிசை ஏகினான்" என்னும் பெயர்களோடு, ஒத்துள்ள பாங்கு ஆய்வுக்குரியது.

## திவாகரத்தின் அமைப்பு :

திவாகர நிகண்டு தன்னேரிலாத் தமிழ் வழங்கு ஞாலமுழுமையும், உள்ளடக்கிய, ஒரு மாபெரும் அருஞ்சொற்களஞ்சியமாக அமைந்துள்ளது. அனைத்துக் கலைகளையும், தெய்வங்களையும், பருவங்களையும், காலத்தையும் மற்றும் மாந்தர்தம் வாழ்வியற் பொருட்கள் அனைத்தையும் தன்னகத்தே கொண்டு விளங்கும், மாபெருஞ் சொற்றொகுதியாக திவாகர நிகண்டு அமைந்துள்ளது. சொற்களஞ்சியத்தின் இருப்பிடமாகவும், அனைத்துத் துறைகளிலும், தொகுதிகளிலும், அமைப்பிலும், ஏனைய நிகண்டுகட்கு வழிகாட்டியாகவும், அடிப்படையாகவும் அமைந்துள்ள, திவாகர நிகண்டின் பன்னிரு தொகுதிகளின் அமைப்புமுறை வருமாறு :-

| | | |
|---|---|---|
| 1. தெய்வப்பெயர்த் தொகுதி<br>2. மக்கட்பெயர்த் தொகுதி<br>3. விலங்கின்பெயர்த் தொகுதி<br>4. மரப்பெயர்த் தொகுதி<br>5. இடப்பெயர்த்தொகுதி<br>6. பல்பொருட்பெயர்த்தொகுதி<br>7. செயற்கை வடிவப் பெயர்த்தொகுதி<br>8. பண்பு பற்றிய "<br>9. செயல் பற்றிய "<br>10. ஒலி பற்றிய " | ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதியில் அடக்கலாம். எ.கா. சிவபெருமான் சிறப்புப் பெயர்கள் **63.** | Class Vocab-ularies |

11. ஒருசொல் பல்பொருட் பெயர்த்தொகுதி.

எ.கா. அணி = அழகு, அணிகலன் (ஆபரணம்),

அணிதல், வரிசை - Homonyms.

12. பல்பொருட் கூட்டத்து ஒருபெயர்த்தொகுதி – இறந்த காலம், நிகழ் காலம், எதிர்காலம் – Group names.

இத்தொகுதி தொகைப்பெயர்களை அடிப்படையாகக் கொண்டது – நானிலம் – குறிஞ்சி, முல்லை, மருதல், நெய்தல். – Group names.

இருவினை; முப்பால்; எண்குணம்.

திவாகரத்தின் பன்னிரண்டு தொகுதிகளிலும் ஏறக்குறைய 9500 சொற்கள் இடம் பெற்றுள்ளன. இச்சொற் செல்வங்களை 2180 பாடல்களில், திவாகரர் செய்யுணடையில் அமைத்துள்ள பாங்கு குறிப்பிடத்தக்க வொன்றாகும்.

முன்னோர் மொழியைப் பொன்னேபோற் போற்றும் மரபினை மேற்கொண்ட திவாகரர், தொல்காப்பிய நூற்பாக்களைத் தமது நிகண்டில் எடுத்தாண்டுள்ளமைக்கான சான்றுகள் வருமாறு :-

1) "நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை ஒருவழி வைப்பது
ஒத்தென மொழிப உயர்மொழிப் புலவர்"

2) ஒருநெறி யின்றி விரவிய பொருளான்
பொதுமொழி தொடரி னதுபடல மாகும்.

இத்தொல்காப்பிய நூற்பாக்கள் இரண்டும் திவாகரத்தின் பத்தாம் தொகுதியாகிய "ஒலி பற்றிய பெயர்த் தொகுதியில்" காணப்படுகின்றன.

சொற்களின் பெயர்களைத் தெளிவாகவும் விளக்கமாகவும் முதற்கண் அமைத்த பெருமை, ஆதிநிகண்டு என்றழைக்கப்பெறும் திவாகர நிகண்டினை யாத்த, திவாகரரையே சாரும்.

## தமிழகரமுதலி வரலாற்றில் திவாகர நிகண்டு அச்சேறிய வரலாறு

அனைத்து நிகண்டுகட்கும் தாயாகத் திகழும் திவாகரநிகண்டினை முதன்முதலில், ஓலைச் சுவடியினின்று அச்சேற்றி நூல்வடிவில் ஆக்கிய பெருமை தாண்டவராயர் அவர்களையே சாரும். கி.பி.8–ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் தோன்றிய, அனைத்து அகரமுதலிகட்கும் மூலமாய்த் திகழ்ந்த இத்திவாகர நிகண்டு, சென்னைக் கல்விக் கழகத்தாரால் வெளியிடப்பெற்றது. சென்னைக் கல்விச்சங்கத் தமிழ்த்துறையில் தலைமைப் புலவராய் விளங்கியவர் தாண்டவராயர். எண்கவனகம் (அட்டாவதானம்) வீராசாமி, திருவேங்கடாசலர், விசாகப் பெருமாள், கோமளபுரம் இராசகோபாலர், பு.நயநப்பர் போன்ற தலைசிறந்த தமிழ்ப் புலவர்க்கெல்லாம் தலைமைப் புலவராய்த் திகழ்ந்தவரே, தாண்டவராயர். "பன்னிரண்டு தொகுதி (முழுமை) யும், தாண்டவராயரால் பதிப்பிக்கப் பெறவில்லை; இவர் அச்சிட்டது முதல் எட்டுத் தொகுதிகளே" என்பர். புலவர் சுந்தரசண்முகனார் தமது "தமிழகராதிக் கலை"யில் பத்துத் தொகுதிகளையே தாண்டவராயர் 1835 இல், வெளியிட்டதாகக் குறித்துள்ளார்.

## திவாகர நிகண்டின் பதிப்பு வரலாறு பற்றி மு. சண்முகம் அவர்கள் மொழிவது :-

முழுமையான சொற்பொருள் விளக்க நூலாய் விளங்கிய திவாகரத்தைத் "தாண்டவராயர் அச்சிட்டது முதல் எட்டுத் தொகுதிகளே" இச்செய்தி அவர் கொற்றமங்கலம் இராமசாமிக்கு 1839 – ஆம் ஆண்டு ஆகத்துத் திங்கள் 7–ஆம் நாள் வரைந்த மடலின் வாயிலாக வெளிப்படுகின்றது. அக்கடிதத்தின் முதன்மூன்று வரிகள் வருமாறு:–

"நாம் அச்சிற் பதிப்பிக்கத் தொடங்கிய சேந்தன்
றிவாகரத்தி லொன்பான் தொகுதி தொடங்குவதற்கு
முன்னெனக்கு வாய்த்த வேறுதேயத் திருக்கையாலும்
............................................................................
.............................................................. நான் கருதியவாறு
முற்றுவித்தற்கியலாத மற்றைத் தொகுதிகளையு
மொருவாறு
புதுக்குவித்துச் சேர்த்துப் புத்தகத்தை நிறைத்து
வெளிப்படுத்துவீராக".

எட்டுத் தொகுதியைத் தொடர்ந்து, ஒன்பது, பத்தாம் தொகுதிகளைக் கல்விச் சங்கத்து வித்துவானாயிருந்த பு.நயநப்பர் ஆய்வு செய்து, 1839–ஆம் ஆண்டு, "முதல் பத்துத் தொகுதிகளை உள்ளடக்கிய ஒரு தொகுதியாக வெளியிட்டார். இவ்வெளியீட்டில், "மற்றை யிரண்டு தொகுதிகளும் பின்னர் வெளிப்படுத்தப்படும்" (மு.சண்முகம் பிள்ளை, பக்.45) என்னும் குறிப்பும் காணப்படுகிறது. இதன் படி, எஞ்சிய இரு தொகுதிகளும், இரண்டாம் தொகுதியாக, அடுத்து அச்சிட்டு வெளிப்படுத்தியிருத்தல் கூடும்.

1839 இல் வெளிவந்த, "சேந்தன் திவாகர" முதற் பதிப்பு 245 பக்கங்களையுடையது. முதற் பத்துத்

தொகுதிகளை உள்ளடக்கியது. 2286 நூற்பாக்களை யுடையது. 1840 ஆம் ஆண்டு வெளிவந்த திவாகரப் பதிப்பே 12 தொகுதிகளைக் கொண்ட முழுமையான பதிப்பாம். 242 பக்கங்களைக் கொண்டது. தாண்டவராயர் பதிப்பில், புதிய நூற்பாக்கள் உடுக்குறியிட்டுக் காட்டியவாறு, இப்பதிப்பு அமைந்துள்ளது. 1840 இல் வெளியிட்ட இப்பதிப்பு, தாண்டவராயர் பதிப்பின்படியே பத்துத் தொகுதிகளின் மூலபாடத்துடன், எஞ்சிய இரு தொகுதிகளின் மூல பாடத்தையும் சேர்த்துப் பன்னிரு தொகுதிகளாகச் சென்னைக் கல்விக் கழகத்தினரால், முழுமையாக்கப்பட்டது. மர்டாக்கின் நூல் விளத்த அட்டவணையில், சேந்தன் திவாகரத்தின் பன்னிரு தொகுதிகளை உள்ளடக்கிய குறிப்புக் காணப்படுகிறது. இரு தொகுதிகளாக இந்நிகண்டு வெளிவந்துள்ளமையும், முதல் தொகுதி 242 பக்கமும், இரண்டாம் தொகுதி 24 பக்கமும் கொண்டது என்னும் குறிப்பும் காணப்படுகிறது. அடுத்துத் திவாகரம், 1859 ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்ட செய்தி, ஆங்கிலேய அருங்காட்சியகத்திலுள்ள, தொகுப்பின் வாயிலாகத் தெரியவருகின்றது. 1859 இல் தஞ்சாவூர் சின்ன கன்னையர் என்பவரால், சென்னையில் வெளியிட்ட பதிப்பு ஒன்றுள்ளது. தமிழகரமுதலி வரலாற்றில், சேந்தன் திவாகரத்தின் பதிப்பு வரலாற்றினை, அனைவருக்கும் அறிவிக்குமுகத்தான், முதற் பக்கத்திலுள்ள மூலபாடம் கொடுக்கப்பட்டுள்ளது :-

கடவுள் துணை

சேந்தன் திவாகரம் மூலபாடம்

இஃது

சென்னைக் கல்விச் சங்கத்துத் தமிழ்த் தலைமைப்

புலமை நடாத்திய தாண்டவராய முதலியார்

அவர்களால் பதிப்பித்த

பத்துத் தொகுதிகளின் மூலத்தோடு

மேற்படி சங்க வித்துவான்களால் பதிப்பித்த

மற்றவிரண்டு தொகுதிகளின் மூலத்தையும்

ஒன்றாகச் சேர்த்துச்

சிவாத்துவித சித்தாந்தியாகிய

திருமழிசை

முத்துசாமி முதலியார் அவர்களால்

அவைகட் கிணங்கப் பரிசோதித்து

தஞ்சாவூர்

சின்ன கன்னைய செட்டியாரால்

தமது

சகலகலா நிலைய அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

இதற்குப் பின்வந்த 1886 ஆம் ஆண்டுப் பதிப்புகளின் முதற்பக்கத்திலும், பதிப்பாசிரியர் அச்சுக் கூடப்பெயர்கள் வேறுபட்ட போதிலும், "இஃது சென்னைக் கல்விச் சங்கத்து என்பது தொடங்கி", "மற்ற இரண்டு தொகுதிகளின் மூலத்தையும் ஒன்றாகச் சேர்த்து, "என்பது வரையுள்ள குறிப்பு அப்படியே காணப்படுகிறது" (மு. சண்முகம் பிள்ளை, பக்.48).

மேற்குறித்த குறிப்புரையானது, சேந்தன் திவாகரத்தின் முந்திய பதிப்பை, உள்ளது உள்ளவாறே பின்வந்த பதிப்பாசிரியர் பின்பற்றி வந்த செய்தியைத் தெரிவிக்கின்றது எனலாம். முதற்பதிப்பில், தாண்டவராயரால் உடுக்குறியிட்டுச் சேர்த்த நூற்பாக்கள், அடுத்து வந்த திவாகரப் பதிப்புகளில் கைவிடப்பட்டன. "இதனால் எவையெவை திவாகரரின் சூத்திரம் எவையெவை தாண்டவர் உள்ளிட்ட கல்விச் சங்கத்து வித்துவான்கள்' சேர்த்த சூத்திரம் என்பது தெரியாமல் ஆகிவிட்டது" என்பார் மு. சண்முகம். 1886 - க்குப் பின்பு 1897 இல் சென்னைக் குருநாத சுவாமிகளின் பதிப்பு வெளிவந்துள்ளது. பின்னர் 1904 இல் கோ. உலகநாதர் தமது மனோன்மணிவிலாச அச்சுக் கூடத்தின் வாயிலாக ஒரு பதிப்பினை வெளியிட்டுள்ளார். அதன் பின்னர் 1917 ஆம் ஆண்டிலும், 1924 ஆம் ஆண்டிலும் இவ்வச்சகத்தில் திவாகர நிகண்டு தொடர்ந்து பதிப்பிக்கப்பெற்றுள்ளது. அடுத்து, 1923 இல் சென்னைக் கோல்டன் அச்சகத்தின் உரிமையாளர், கோபால் அவர்கள், ஒரு பதிப்பினை வெளியிட்டார். 1958 இல் திருநெல்வேலி தென்னிந்திய சைவசிந்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் பதிப்பு வெளிவந்துள்ளது. 1868 இல் திவாகரத்தின் முதல் தொகுதியாகிய தெய்வப்பெயர் தொகுதி மட்டும் பல பதிப்புகள் வெளிவந்தது. பதிப்பித்தவர் திரு. ஊ. புட்பரதர் ஆவார். திவாகர நிகண்டின் தெய்வப்பெயர்த் தொகுதியைப் பள்ளிப் பாடமாக வைத்த செய்தியை 1927 இல் வெளியிட்ட மணி. திருநாவுக்கரசு பதிப்பின் நூன்முகம் வாயிலாக அறியலாம். இந்நூன்முகத்தில், "இந்நூலின் முதற்பகுதி எல்லாப் பள்ளிகளிலும் வழிவழி படிக்கப்பட்டு வருதலின் இதனை அச்சிட்டோம்" என்று குறிப்பிட்டுள்ளார்கள். சென்ற நூற்றாண்டில் மட்டும் இத் தொகுதிக்கு 11 பதிப்புகள் வந்தமை தெரிய வருகிறது. பள்ளிப் பாடமாய் வழங்கினமையால், இத்தொகுதிக்கு மேலும் பல பதிப்புகள் அவ்வப்போது வெளிவந்திருத்தல் வேண்டும்" (மு. சண்முகம் பிள்ளை, பக்.48).

## முப்பெரும் பிரிவுகளின் அடிப்படையில் திவாகர நிகண்டின் சிறப்பியல்புகள் :

ஒருபொருட் பல்பெயர்த் தொகுதியில், தெய்வப்பெயர்த் தொகுதிமுதல், ஒலி பற்றிய பெயர்த்தொகுதி வரையுள்ள பத்துத் தொகுதிகளும் அடங்கும். "இந்தப் பத்துத் தொகுதிகளும், ஒருதொகுதி நீர்மையதாய் (Synonyms) ஒருபொருட் பல்பெயர்த் தொகுதி எனப்படும்" (வ.செயதேவன். 1985, பக்.66) இன்றைய மொழியியலார், இணைமொழிப் பொருண்மையில், இத்தொகுதியினை அடக்குவர்.

**தெய்வப் பெயர் தொகுதி :** இத்தொகுதிப் பெயரான தெய்வம் என்னும் சொல்லுக்குத் "தீ" என்னும் சொல்லே மூலமாகும் என்பார் மொழிஞாயிறு.

தீ → தீய் → தீய்தல் = தீதல், தீத்தல் = தீய்த்தல்.

தீய் → தேய் → தேய்வு → தேவு = 1. தெய்வம் (பிங்.)
2. தெய்வத் தன்மை.

தேவு → தேவன் = கடவுள், அரசன், கணவன், தலைவன்.

தேவி = தெய்வ மகள்; அரசி = தலைவி.

தேய்வு → தெய்வு → தெய்வம் என்று விளக்குவார். குறிஞ்சி மக்கள் முருகனைச் 'சேயோன்' (சிவந்தவன்) என்றது நெருப்பு வடிவம் பற்றியே. தீமைகளைத் தீய்த்தல்; மாசுகளைப் பொசுக்குதலுமாகிய தெய்வக்குணம், தீயின் எரித்தல், கருக்குதல், தீத்தல் என்னும் பொருண்மை பற்றியது. பொதுவாகத் தெய்வம் என்னும் பெயர் வழக்கு, கடவுளர்தம் பொதுப்பெயராகக் கழகக் காலத்திற்கு முன்பிருந்தே வழங்கி வருகிறது. தொல்காப்பியனார் கருப்பொருள் குறித்து விளக்குங்கால், "தெய்வம் உணாவே" (தொல்.பொருள். 1 : 20) என்று தொடங்கி நிலத்திற்குரிய தெய்வத்தையே முதற்கண் வைத்துள்ளதால், தமிழகரமுதலி வரலாற்றில், அனைத்து நிகண்டுகட்கு ஆதி நிகண்டெனப் போற்றப்பெறும் திவாகரநிகண்டு உள்ளிட்ட அனைத்து நூல்களிலும் கடவுள் வாழ்த்தையும் தெய்வப்பெயர்த் தொகுதியையும் முதற்கண் அமைத்துப் பாடுதல் மரபாயிற்றெனலாம்.

தமிழ் நிகண்டுகளில் ஒருபொருட் பல்பெயர் உரைக்கும் பகுதியில், முதன்மைத் தந்துள்ளது, தெய்வப்பெயர் பற்றிய தொகுதிக்கேயாம். திவாகரர் சிவனது 63 பெயர்களைத் தந்துள்ளதால், சிவனுக்கே முதன்மை தந்துள்ளாரென்பது சுந்தர சண்முகனார் கருத்தாகும். நிகண்டு நூல்கட்கெல்லாம் வழிகாட்டியாய் விளங்கும் திவாகரத்தில், ஆண் தெய்வங்கள் முதற்கண் அடைவு படுத்தப்பட்டுள்ளன. அதன் பின்னர்ப் பெண் தெய்வங்கள் பற்றிய பெயர் விளக்கங்கள் அமைந்துள்ளன. தெய்வங்களின் ஊர்தி, கொடி பற்றிய விளத்தங்களும், இத்தெய்வப்பெயர்த் தொகுதியில் விளக்கப்படுகின்றன.

## சிவன், திருமால் பற்றிய செய்திகள் :-

திவாகரத்துள் – தெய்வப் பெயர்களுள் – சிவனைக் குறித்த பெயர்களே, மிக விரிவாக விளக்கப்படுகின்றன. சிவன், திருமால் முதலிய தெய்வங்களின் ஆடல் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. தெய்வப் பெயர்களுள் முதற்கண் மிக விரிவாக விளக்கப்படுவது, சிவபெருமான் குறித்த திருப்பெயர்களும், அப்பெருமான் தொடர்பான பற்பல செய்திகளுமேயாகும்.

கழக இலக்கியம் குறிக்கும் "முக்கண்ணான்" என்னும் பெயர் சிறிது மாறுதலுடன், "முக்கண் பகவன்" என்று திவாகர நிகண்டிற் குறிக்கப்படுகிறது.

### திருமால்

திருமாலின் பதின் தோற்றரவுகளும் 38 சிறப்புப் பெயர்களும், திவாகரத்துள் குறிக்கப்படுகின்றன. பதின் பிறப்பு குறித்த, திவாகரப் பாடல் :-

"மீனே ஆமை வராகம் நரசிங்கம்
வாமன னன்பரிசிராமன் இராமன்
பலதேவன் வசுதேவன் வருகற்கியென்
றாகும் ஈரைந்தும் அரியவதாரம்"

திருமாலின் புகழ்பெற்ற ஆடலான குடமாடல், மல் மரக்கால் என்பவை, திவாகரத்தில் குறிக்கப்படுகின்றன.

தெய்வப்பெயர்த் தொகுதியில், சிவன், திருமால், முருகன் முதலான தெய்வப் பெயர்கள் மட்டுமன்றி, பலவகைத் தேவ இனங்கள், அரக்கரினம், நாள், கோள், விண், காற்று, நீர், தீ, பல்வகைக் காலங்கள், மழை, மேகம், இடி முதலியவற்றின் பல்வகைப் பெயர்களும், பாங்குற இடம்பெற்றுள்ளன. தமிழில் எனைத்தையும் குறிப்பதற்கு எல்லையில்லாச் சொல் வளமுண்டு என்னும் கருத்தினை மெய்ப்பிக்குமுகத்தான், காற்று என்னும் பொருண்மையினை, 20 சொற்களில் திவாகரர் குறிப்பிட்டுள்ளது வருமாறு :-

"வாதம், கூதிர், வங்கூழ், கால், வளி,
ஊதை, அனிலம், கோதை, நீழல்

உலவை, மாருதம், மருத்து, புவனம்
வாடை, ஒலியே, கூதை, உயிர்ப்பே,
வேற்றலம், கொண்டல், கோடையென் றிருபதும்
காற்றின் பெயரெனக் கருதல் வேண்டும்''

இவையன்றிப் பின்னுள்ள பாடல்களில் வடந்தை, மலயக்கால், தென்கால், தென்றல், சூறை, சாரிகை, சுழற்காற்று முதலான பெயர்களும் காற்றினைக் குறிக்கத் திவாகரரால் பயன்படுத்தப்பட்டுள்ளன. தமிழின் சொற் பெருஞ்சுரங்கத்தை சொல்லமுதைத் திவாகரம் முதலான நிகண்டுகள் போற்றிப் பதிவு செய்து வைத்த போழ்தும், மாந்தர்தம் வழக்காற்றுச் சொற்களை பதிவு செய்யத் தவறிவிட்டதென்று குறைகூறுவாருமுளர்.

''நென்னலும் நெருநலும் முன்னை நாள் ஆகும்'' இஃது, முதற் தொகுதியிலுள்ள ஒரு பாடலாகும். நென்னல் என்ற சொல்லும், நெருநல் என்ற சொல்லும் முன்நாள் என்னும் பொருண்மையுடையது. மேற்குறித்த நூற்பாவில், முன்னைநாள் என்னும் பொருண்மையைக் குறிப்பதும், மாந்தர் பேச்சு வழக்கில், வழக்கூன்றியதுமான ''நேற்று'' என்னும் சொல் விடுபட்டதெனலாம். ''இவ்வாறு விடுபட்ட சொற்கள் மிகப் பலவாம். ஆதலின், நிகண்டுகளைக் கொண்டு, தமிழ் மொழியின் சொற் கருவூலத்தை அளந்து எண்ணிக்கையிட்டு முற்றுப்புள்ளி வைத்து விடக்கூடாது'' (சுந்தர சண்முகனார். 1971, பக்.80).

ஆண்டின் தொடக்கத்தைக் கார்ப் பருவத்தி னின்று, அஃதாவது ஆவணி மாதத்திலிருந்து தொடங்கினர். கொடிய கோடை நீங்கிக் குளிர்ந்த கார்காலம் தொடங்கும் காலமாக ஆவணி, தொல்காப்பியம் அகப்பொருள் விளக்கம், திவாகரம் போன்றவற்றுள் இடம் பெற்றுள்ளது. ஒவ்வொரு பருவத்திற்கும் இரண்டிரண்டு திங்களாகப் பகுத்த பாங்கினை

''ஆவணி முதலா இரண்டிரண் டாக
மேவின திங்கள் எண்ணினர் கொளலே''

என்னும் திவாகரப் பாடல் குறிப்பிடுகிறது.

### ''மழை'' என்னும் சொல்லாட்சி

மழை பற்றிய சொல்வளங்களைத் திவாகரர் கூறியுள்ளதைப் படிக்குங்கால், அனைவர்தம் மனமும் மகிழ்ச்சியாலும், குளிர்ச்சியாலும் திளைக்கும். மழையின் பல்வகை நிலைகளைச் சுட்டும் அப்பாடல்கள் வருமாறு :-

மழை தூவுதல் குறித்த பாடல் :-

''சீகரம், பிதிரே, சிதர், அரி, சிகரம்
தூவல் என்றிவை துவலையாகும்''

மழைத்துளி குறித்த பாடல் :-

''துளி, பெயல், ஆலி, உறைதுளி யாகும்''

கட்டி, கட்டியாய் மழை பெய்தல் குறித்த பாடல் :-

''ஆலி, ஆலங் கட்டி யாகும்''

பெருமழை பெய்தல் பற்றிய பாடல் :-

''ஆசாரம் என்பது பெருமழையாகும்''

தொடர்மழை பற்றிய பாடல் :-

''சோனையும், பனித்தலும், விடாது சொரிதல்''

### மழை பெய்து நின்று விடுதல் பற்றிய பாடல் :-

''தலையல் என்பது மழைபெய்து விடுதல்''

தமிழ் மொழிக்கு ஈடிணையில்லாச் சிறப்பினை நல்கும் இச்சொல் வளம், அகராதியியல் வரலாற்றில், கி.பி.8 ஆம் நூற்றாண்டில், கழகக்கால இலக்கியங்களி லிருந்து புதுப்பொலிவுடன் மீட்டுருவாக்கம் செய்து பதிவு பெற்றுள்ளதெனலாம்.

தெய்வப்பெயர்த் தொகுதியில், நாள், கோள், விண், காற்று, தீ, நீர், காலங்கள், மழை, மின்னல், இடி முதலானவற்றைத் தெய்வச் சார்புடையவென பழங்கால மக்கள் நம்பி வழிபட்டதினால், திவாகரர் தமது நிகண்டில் நிரல்பட எடுத்தியம்பியுள்ளார்.

## 2. மக்கட் பெயர்த்தொகுதி

குமுகாய மாந்தர்தம் குலம், சமயம், அரசியல், தொழில், அவர்கள் வாழும் இடம், ஆற்றும் பணி முதலான பிரிவுகளின் பெயர்களைக் கூறுவது மக்கட் பெயர்த் தொகுதியாகும். ஆண்பாற் பெயர்களோடு பெண்பாற் பெயர்களும் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன. இவற்றோடு மட்டுமின்றி, மாந்தர்தம் உடலுறுப்புகள் பற்றிய பல்வேறு பெயர்களும் உரைக்கப்பட்டுள்ளன. நிகண்டுகளின் பொது அமைப்பு என்னும் பகுதியில், மக்கட் பெயர்த்தொகுதியின் பொருண்மை பற்றி குறிக்க வந்த வ.செயதேவன், ''மக்கட் பெயரில் அருந்தவர், அறிஞர், அரசர், பரிவாரங்கள், தொழிலாளர், கீழ்மக்கள், பெண்டிர், நானில மக்கள், உறவினர், படைகள் முதலியன விளக்கம் பெறுகின்றன'' (தமிழகராதியியல் வளர்ச்சி வரலாறு) என்று கூறியுள்ளார்.

## கல்வி கற்பிக்கும் ஆசிரியர் – கணக்காயர் என்று பெயர் பெற்ற வரலாறு:–

எழுத்தறிவித்தவ னிறைவன் என்று போற்றி மதிக்கப்பட்ட அக்காலத்தே, பயிற்றுவிக்கும் ஆசிரியரை கணக்காயர் என்று வழங்க நேர்ந்த மக்கள் வழக்கினைத் திவாகரர்,

"கணக்காயர் நூல் உரைப்போர்" என்று குறித்துள்ளார். கணக்காயர் என்னும் பெயர் கருத்தாழமிக்கது. கணக்கு என்பது நூல் என்னும் பொருண்மையில், கழகக் காலந்தொட்டு, மக்களிடையே வழக்கூன்றியிருந்தது. நூலறிவைக் கற்பிக்கும் ஆசிரியர் கணக்காயர் எனப்பெயர் பெற்றார். கழகக் கால இலக்கியங்களும் நூல் என்னும் பொருள்பட, கீழ்க்கணக்கு நூல்கள், மேற்கணக்கு நுல்கள் என்று குறிக்கப்படுகின்றன. கணக்காயர் என்ற சொல் பற்றி செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி குறிப்பது வருமாறு :– தமிழ் நெடுங்கணக்கு கற்பிக்கும் ஆசிரியர் கணக்கு + ஐயர். ஐயர் → ஆயர். கணக்காயர் = 247 தமிழ் நெடுங்கணக்கு எழுத்துகளைக் கற்பிப்பவர். ஆசிரியன்மார் பழங்காலத்தில் புலவராக இருந்தமையால், இச்சொல் புலவரையும் குறித்தது.

எழுத்தறிவற்ற பண்டைக்கால மக்கள், கொடுக்கல்–வாங்கல்–கணக்கு பற்றிக் குறிக்க, முதற்கண் சுவற்றினில் கோடு கிழிக்கத் தொடங்கினர். கல்லாதார், வரைந்த இம்முதல் வரிவடிவே, எழுத்துருவில் நாளடைவில் வளர்ச்சியடைந்த தென்பார், சுந்தர சண்முகனார். இக்கணக்கு நூலாக வளர்ந்த முறை பற்றி மேலுங் கூறுங்கால், "இப்போதுங்கூட எழுதப்படிக்கத் தெரியாத நாட்டுப்புறத்துப் பெண்டிர், கொடுக்கல், வாங்கலைக் குறிப்பதற்காகக் கோடுகள் போட்டு வைக்கின்றனரல்லவா? எனவே, எழுதி வைக்க வேண்டிய இன்றியமையாமை, இந்தக் கணக்கிலிருந்துதான் தொடங்கியது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. இவ்வாறு தொடங்கிய கணக்குச் சுவடி, பிறகு கணக்கு நூலாயிற்று. கல்வி கற்பதே, கணக்கிட்டுக் கொள்வதற் காகத்தான் என்றநிலை, அன்று இருந்தது. இக் காலத்திலும், நாட்டுப்புற மக்கள் தம் பிள்ளைகளைப் பள்ளிக்கூடம் அனுப்புவதற்கு உரிய காரணமாக, "நாலு கணக்குத் தெரிந்து கொண்டால் தானே, உலகத்தில் பிழைக்க முடியும்" என்று கூறுவதைக் கேட்கலாம். இதற்கேற்பவே அக்காலத்தில் தமிழ்க்கணக்கு நூல்கள், மிகப் பலவாறாகப் பரந்துபட்டிருந்தன. "எள் நெய்யைக் குறிக்கும் எண்ணெய் என்னும் பெயர், பிறகு எல்லா வகையான எண்ணெய்க்கும் உரித்தானாற் போல, இக் கணக்கு என்னும் பெயரும் நாளடைவில். எல்லா வகையான நூல்களுக்கும் உரித்தாயிற்று" என்று வ.செயதேவன் கூறுகிறார்.

இவ் விளக்கத்தினின்று "கணக்கு" என்னும் சொல் முதற்கண் பொதுப் பொருண்மையான பொத்தகம் என்பதனைக் குறித்தது. பின்பு கணக்கை ஆய்ந்து கற்பிக்கும் ஆசிரியர், (கணக்கு + ஆயர் = கணக்காயர்) கணக்காயர் என்னும் பொருண்மையில் திவாகரரால் குறிக்கப்பட்டது.

## உலகம் – உயர்ந்தோர் பற்றித் திவாகரர்

மாந்தர்தம் பேச்சுவழக்கில், "உலகம்" என்னும் சொல்லைப் பரவலாகப் பயன்படுத்துகின்றனர். இப்படி நடந்தால் உலகம் என்ன நினைக்கும்? இப்படிச் செய்தால் உலகம் என்ன பேசும்? உலகொப்ப வாழ்க்கை நடத்த வேண்டும் முதலான பேச்சு வழக்குத் தொடர்களில், 'உலகம்' என்னும் சொல், ஒழுக்கத்திற் சிறந்த உயர்ந்த பண்பாளர்களையே குறித்து ஆளப்பட்டது. வள்ளுவப் பெருந்தகையும், உயர்ந்த பண்பாளர்களைக் குறிக்குங்கால், "உலகந் தழீஇய தொட்பம்" (குறள், 425) என்றுரைத்துள்ளார். இக் குறளுக்கு உரை நவில வந்த பரிமேலழகர், "உலகம்" என்பது ஈண்டு உயர்ந்தோரை என்று, உரை வரைந்துள்ளமை காண்க. மாந்தர் தம் பேச்சுவழக்கில் வழங்கும் "உலகம்" என்னும் சொல்லைத் திவாகரர், "உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" என்னும் நூற்பாவால் குறித்துள்ளார். பெருமையிற் சிறந்த பண்பாளர்களைக் குறிக்க வந்த திவாகரர்

"அண்ணனும் குரிசிலும் ஏந்தலும் தோன்றலும்
செம்மலும் பெருமையிற் சிறந்தோன் பெயரே"

என்னும் நூற்பாவால் குறித்துள்ளார். அண்ணல், குரிசில், ஏந்தல், தோன்றல், செம்மல் முதலான பெருமையிற் சிறந்த பெரியோர் பெயர்கள் இன்றளவும் மக்களிடையே வழக்கூன்றியுள்ளன.

## அரசனைக் குறிக்கும் பெயர்கள் :

"மன்ன னுயிர்தே மலர்தலை யுலகம்" – என்பது, மன்னனின் பெருமையைப் பாடும் பாடல் வரியாகும். மன்பதை வாழ் உயிர்களைத்தம் இன்னுயிராக எண்ணிப் பாதுகாக்கும் மன்னனின் பல்வகைப் பெயர்களைத் திவாகரர் பொதுவாக வரிசைப்படுத்திய வகைமை வருமாறு:–

"புரவலன், கொற்றவன், பெருமான், காவலன்
அரையன், ஏந்தல் கோ(வே), குரிசில்
தலைவன், மன்னவன், வேந்தன், முதல்வன்,
நிருபன், பூபாலன், நரபதி, பார்த்திவன்,
இறைவன், அண்ணல் எனப் பதி னெட்டும்
அரசன், தொல்பெயர் ஆகும் என்ப"

## சிறப்பாகச் சேரனின் பல்வகைப் பெயர்கள் பற்றித் திவாகரர் :-

"பூழியன், உதியன், கொங்கன், பொறையன்,
வானவன், குட்டுவன், வான வரம்பன்,
வில்லவன், குடநாடன், வஞ்சி வேந்தன்
கொல்லிச் சிலம்பன், கோதை, கேரளன்,
போந்தின் கண்ணிக்கோன், பொருனைத் துறைவன்
சேரலன், மலயமான், கோச்சேரன் பெயரே"

இந் நூற்பாவிற் குறிக்கப்படும் கேரளன் என்னும் பெயர் சேரலன் என்பதன் வளர்ச்சியே யாகும். சேரலநாடே, கேரளநாடு ஆயிற்று என்பார் மொழிஞாயிறு. தமிழ்மொழியும், மலையாளமொழியும் ஒன்றே என்பதைக் கீழ்க்காணும் சொற்றொடர்கள் விளக்குகின்றன.

1) "இது ஒரு பருத்திச் செடியுட படம், இதனுட பூவும் காயும் நோக்குக" (பருத்திச் செடி என்னும் பாடத்திலிருந்து எடுக்கப்பட்டது)

2) "செந்நாயி ஆட்டின் குட்டியெ சாடி கொன்னு தின்னு" (இஃது, ஓநாயும், ஆட்டுக்குட்டியும் என்னும் பாடத்தின் இறுதியிலமைந்த சொற்றொடராகும்.)

வரிவடிவம், வேறாக இருந்தாலும், மேலே குறித்துள்ள மலையாள மொழிப்பாடத்தினின்று எடுக்கப்பட்ட சொற்றொடர்கள், தமிழ் மக்களின் வழக்கில், வழங்கக்காண்பது கண்கூடு.

| தமிழ் | | தமிழ்ப்பேச்சு வழக்கு (மலையாளம்) |
|---|---|---|
| செந்நாய் | – | செந்நாயி |
| குட்டியை | – | குட்டியெ |
| கொன்று தின்றது | – | கொன்னு தின்னு |

"பேச்சு இலத்தீன் மொழிதான், பிரெஞ்சு மொழி என்று ஒரு கருத்து நிலவுவது போன்று, பேச்சுத் தமிழ்தான் மலையாளம் என்று கூறலாம்" என்பார் சுந்தர சண்முகனார்.

## பாண்டியனின் சிறப்புப் பெயர்கள் :-

பாண்டியனைக் குறிக்கும் சிறப்புப் பெயர்ப் பட்டியல்.

செழியன், தமிழ்நாடன், கூடற்கோ, தென்னவன்
வழுதி, மீனவன், பஞ்சவன், மாறன்
கௌரியன், வேம்பின் கண்ணிக்கோ, கைதவன்,
பொதியப் பொருப்பன், புனல்வையைத் துறைவன்,
குமரிச் சேர்ப்பன், கோப்பாண் டியனே"

இப்பட்டியலில் காணப்படும் "தமிழ்நாடன்" என்னும் பெயர், கழகம் வைத்துத் தமிழ் வளர்த்த காரணத்தால் பாண்டியனுக்குக் கிடைத்த சிறப்புப் பெயர் போலும் என்பார் சுந்தர சண்முகனார்.

## சோழனைக் குறிக்கும் சிறப்புப் பெயர்கள்:-

காவிரி பாயும் சோழவள நாட்டை ஆட்சிபுரிந்த சோழமன்னர்தம் பெயர்களுள், காவிரிநாடன் என்னும் பொருண்மையில் பொன்னித்துறைவன் என்று, நிரல்பட அமைத்துள்ள திவாகரப் பாடல் வருமாறு :-

"சென்னி, வளவன், கிள்ளி, செம்பியன்,
பொன்னித் துறைவன், புலிக்கொடிப் புரவலன்
நேரியன், ஆர்த்தார்க்கோன், நேரிறை, அபயன்
நேரி வெற்பன், கோழி வேந்தன்,
சூரியன், புனனாடன், கோச்சோழன் பெயரே"

**வள்ளுவன்** :- வள்ளுவன் என்னும் பெயர் கூர்த்த மதியன், நுண்ணறிவாளன், வல்லவன், வள்ளியோன் என்னும் பொருண்மைம் பயப்பதென்பார், மொழிஞாயிறு. திவாகரர், "அரசரின் முழுநம்பிக்கைக்குள்ளான - உண்மையான உள்படு கருமத்தலைவனே வள்ளுவன்", என்னும் பொருண்மையில் உரைத்த நூற்பா வருமாறு :-

"வள்ளுவன் சாக்கை எனும் பெயர் மன்னர்க்கு
உள்படு கருமத் தலைவர்க்கு ஒன்றும்"

என்று உரைத்துள்ள பாங்கு, திவாகரர்தம் மதிக்கூர்மையை மன்பதைக்கு தெளிவுறுத்தும் பாங்கினில் அமைந்துள்ளது.

**ஆரியர்** : ஆரியர் என்றால் உயர்ந்தோர், மேலானவர் என்று கற்றறிந்தார் கருதுவர். இப்பொருண்மைகட்கு மாறுபட்ட நிலையில் திவாகரர், விலங்குகள் போல் நாகரிகமற்றவர், தாழ்ந்தவர் என்னும் பொருண்மையில், "மிலேச்சர்" என்னும் பொருளிற் குறித்துள்ளார் (சுந்தர சண்முகனார்).

"மிலேச்சர் ஆரியர்"

**ஆண், பெண் பெயர்கள் :-** குமுகாயம் நிலைபெற்றுத் திகழவும், மன்பதை மகிழ்வுற்று ஓங்கவும் இன்றியமையாது வேண்டப்படுபவர், ஆண்களும், பெண்களுமேயாவர். ஒன்பது ஆண்மக்கள் பொதுப் பெயர்களையும், இருபத்திரண்டு பெண்பாற் பொதுப் பெயர்களையும் திவாகரர் வகைமைப் படுத்தியுள்ளார்.

**ஆண்பாற் பொதுப் பெயர்களாவன :**

"ஆடவர், மைந்தர், காளை, குமாரர்
ஆடுஉ, மாந்தர், மகன், புமான், மணாளன்,
கூடிய ஆண்பெயராகக் கூறுவர்"

**பெண்பாற் பொதுப் பெயர்கள் :**

"பேதை, அங்கனை, வனிதை, இளம்பிடி
மாது, மடவாள், மகடூஉ, மங்கை,
மடந்தை, காரிகை, மானினி, மஞ்சனி
மாயோள், ஆட்டி, பாவை, தெரிவை
தையல், அரிவை, பெதும்பை, பிணா, மகள்,
நையு, நுண்ணிடை, நாரி என்றாங்கு
இருபதும் இரண்டும் பெண்பாற்கு எய்தும்"

இவ்வாறு ஆணுக்கும், பெண்ணுக்குமுரிய பற்பல பொதுப் பெயர்களைப் பதிவு செய்த திவாகரர், இருபாலர்தம் மயிர்க்குரிய பெயர்களை, மிக நுண்ணிய வேறுபாட்டுடன், மிகத் திட்ப, நுட்பமாகக் கூறியிருப்பது வியக்கத்தக்க வகையில் அமைந்துள்ளது.

**ஆண்பாலர்தம் மயிரின் ஒன்பது வகைப் பெயர்கள் வருமாறு :-**

"குஞ்சி, நவிர், உளை, குடுமி, தொங்கல்
பங்கி, பித்தை, ஓரி, சிகையென்
றிங்கிவை யெல்லாம் ஆண்மயி ரென்ப".

**பெண்பால் மயிர் பெயர்கள் வருமாறு :-**

"கோதை, நெடுமை, கூந்தல், ஐம்பால்,
ஓதி, கூழை, பரிசாரம், கதுப்பு,
கேசம், அளகம், குழல், குரல், சுரியல்,
பேசின், மராட்டம், பெண்மயிர் என்ப"

மேற்காண் நூற்பா இருபாலர்தம் மயிர்க்குரிய மிக நுண்ணிய வேறுபாடுகளைப் பதிவு செய்திருப்பது இன்றளவும் நின்று நிலவுகின்றது. மேலும், குமுகாயத்தில் அனைத்து நிலையில் உள்ள பெண்களின் அன்றைய வாழ்வியல் நிலையைக் கருத்திற்கொண்டு, திருமணமாகாத கன்னி பெற்ற பிள்ளைக்குக் "கானீனன்" எனக் கழறுதல்

"கன்னியிற்பெறும் புதல்வன் கானீனன் ஆகும்"

எனும் திவாகரத்தான் அறிவாம். கணவனை வஞ்சித்து, அவனறியாமல் பிறனொருவனோடு கூடிப் பெற்ற பிள்ளையைக் "குண்டகன்" என்று குறித்துள்ள நூற்பா வருமாறு :-

"கொண்டோன் பிழைத்துப் பெறும்புதல்வன் குண்டகன்"

"இக்காலத்தில் குண்டர்கள் என்று சொல்லப் படுபவர்கள், இத் தகுதியினர் தாமோ?" (சுந்தர சண்முகனார். 1971, பக்.91).

கைம்பெண் வயிற்றில் பிறந்த பிள்ளையைக் "கோளகன்" என்று திவாகரர் குறித்துள்ளது வருமாறு :-

"கோளில் கைம்மையில் பெறும் புதல்வன் கோளகன்" இவ்வாறு, மக்கட் பெயர்த்தொகுதி பல்வகைத் திட்ப நுட்பமான பொதுப் பெயர்களைக் குறிப்பிடும் பாங்கினில் சிறப்பிடம் பெறுகிறது.

## 3. விலங்கின் பெயர்த்தொகுதி :

திவாகர நிகண்டின் மூன்றாம் தொகுதியாகிய, "விலங்கின் பெயர்த்தொகுதி" என்னும் பகுதியோ, சென்னை உயிர்க்காட்சி நிலையத்தை விடப் பற்பல மடங்கு பெரி" தென்பார் சுந்தர சண்முகனார். இத் தொகுதியில் விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன என்னும் நால்வகை உயிரிகளும், இவற்றின் உறுப்புப்பெயர் முதலியனவும், குறிக்கப்பெறுகின்றன. பல்வகை விலங்குகள், பல்வகைப் பறவைகள், பறப்பன என்ற முறையில் ஈ, கொசு, வண்டு, வௌவால் முதலானவைகளும், பாம்பு, பல்லி, தேள், எறும்பு. கறையான், சிலந்தி, புழு முதலான ஊர்ந்து செல்லும் உயிரிகளும், மீன் வகைகள், சிப்பி, சங்கு, நண்டு, தவளை, அட்டை, ஆமை, முதலை, திமிங்கிலம் முதலான நீர்வாழ்வனவும் விலங்கு-பறவை முதலியவற்றின் அனைத்து உறுப்புகளுக்குரிய பெயர்களும், விரிவாக விளக்கப்பட்டுள்ளன. இவற்றுள் விலங்கு பற்றிய பெயர்களைக் குறிக்கும் எடுத்துக்காட்டுகள் வருமாறு :-

அரிமா (சிங்கம்), புலி, யானை, குதிரை, மாடு, ஆடு, மான் முதலான விலங்குகளின் பெயர்களும், விரிவாக இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு விலங்கிற்கும் அதன் தன்மை மற்றும் பருவநிலை பற்றிய பெயர்கள் பல குறிக்கப்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக யானைக்கு 38 பெயர்களும், குதிரைக்கு 30 பெயர்களும்

கூறப்பட்டுள்ளன. இப்பொதுப் பெயர்களோடு அமையாது யானையென்றால், ஆண்யானைக்குரிய வெவ்வேறு பெயர்களும், பெண்யானைக்குரிய வெவ்வேறு பெயர்களும், குட்டியானைக்குரிய பெயர்களும், இடம் பெற்றுள்ள பாங்கு வருமாறு :-

1) ஆண்யானை :- "மதகரி, தந்தி, வன்களிறு யானை".

2) பெண்யானை :- "கரேணு, பிடி, பெண்யானைப் பெயரே"

3) கன்று :- "போதகம், துடியடி, கயம், முனி, கன்றாம்"

விலங்கின் பெயர்த்தொகுதியில் யானைக்கு அடுத்த நிலையில், குதிரையின் சிறப்புப்பெயர்களாக, தமிழகத்தை ஆட்சி புரிந்த மூவேந்தர்கட்கும் மூன்று வகையாகக் குறிப்பிட்டுள்ள குதிரையின் வகைமை வருமாறு .-

பாண்டியர் குதிரைக்குக் "கனவட்டம்" என்பதை,

"கனவட்டம் என்பது வழுதி ஊர்மா" என்றும்,

சேரர் குதிரைக்குப் "பாடலம்" என்பதை,

"பாடலம் என்பது சேரன் ஊர்மா" என்றும்,

சோழர் குதிரைக்குக் "கோரம்" என்பதை,

"கோரம் என்பது சோழன் ஊர்மா" என்றும்,

மூவேந்தரல்லாத, குறுநில மன்னர்கள் தம் குதிரைக்குக் 'கந்துகம்' என்பதை,

"கந்துகம் குறுநில மன்னர் ஊர்மா" என்றும் வேறுபிறித்துரைத்துள்ளமை திவாகரர்தம் தேர்ந்து தெளிந்துரைக்கும் அறிவுக் கூர்மையையும், முந்தைநாள் மன்னராட்சியில், குதிரையின் இன்றியமையாமையையும் சிறப்பையும் இன்றைய குமுகாயத்திற்குத் தெளிவுறுத்தும் பான்மையில் அமைந்துள்ளது. யானை, குதிரைக்கு மட்டுமல்லாது மாடு, ஆடு, மான், பன்றி முதலான விலங்குகளின் பல்வகைப் பிரிவுகளும், பாங்குடன் இடம்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக மாடு பற்றிய பொது, சிறப்புப்பெயர்களைத் திவாகரர் குறித்துள்ளது வருமாறு:-

பசு என்பது சிலர் எண்ணுவது போல் பெண்மாட்டுக்கு மட்டும் உரியதன்று; ஆண் மாட்டுக்கும் உரியதாகும். எனவே, ஆண் எருமை, பெண் எருமை என்று சொல்வது போல, ஆன்மா (ஆண்பசு - பெண்பசு) பெண்மா என்றும், சொல்லலாம். ஆனால், ஆன்மா (ஆண்பசு) என்று சொல்லும் வழக்கம், இக்காலத்தில் அருகிவிட்டது. இருப்பினும், அங்ஙனம் கூறுவதில் தவறொன்றும் இல்லை. திவாகரர் மாட்டின் பொதுப்பெயராகப் "பசு" என்பதைக் குறித்துள்ளார்.

### ஆ (பசு)வின் பொதுப்பெயர் :

"ஆவும், பெற்றமும், பசுவும், ஆனும்
கோவும், குரால்தேனும் பசுச்சாதிப் பொதுப்பெயர்"

### பெண்பசுவின் பெயர் :

"சுரபி, தேனு, சுரை, கபிலை, சேதா,
குரமே, கோமளம், பெண்பால் மேன"

### ஆண்பசுவின் பெயர் :

"பாறல், புல்லம், பாண்டில், பசு, மூரி
ஏறு, பூணி, இறாலே, பெற்றம்,
எருது, சே, விடை, இடபம் என்றிவை
கருதின், போத்தின் பெயரெனக் கருதுவர்"

மேற்குறித்த எடுத்துக்காட்டுகளுள், முதற் பாடலின் இறுதியில் உள்ள, "பசுச்சாதிப் பொதுப் பெயர்" என்னும் சொற்றொடர். "பசு" என்பது, ஆண்மாட்டிற்கும், பெண்மாட்டிற்கும், பொதுவாக வழங்கிய நிலையை விளக்கும் வண்ணம் அமைந்துள்ளது.

மற்றும் இப் பகுதியில், விலங்குகளின் ஆண், பெண் பொது, சிறப்புப்பெயர்களும், விலங்குக் குட்டிகளின் பொதுப்பெயர்களும், விரிவாக இடம் பெற்றுள்ளன.

## மீன்களின் பெயர்கள் - வாழ்வியல் விளக்கம்

"மெலியவரை வலியவர் வாட்டினால், வலியவரைத் தெய்வம் வாட்டும்" என்னும் வழக்கு மாந்தர்தம் வாழ்வியலில், அன்றும், இன்றும், என்றும் நின்று நிலைபெற்றுள்ள கருத்தாகும். இக்கருத்தினை விளக்கும் வகையில், இன்றும் மக்களிடையே "சிறுமீனைப் பெருமீன் விழுங்கினால், பெருமீனைத் திமிங்கிலம் விழுங்கும்" என்னும் வழக்கு, கடற்கரை மாவட்டங்களில் சிறப்பாக மீனவரிடையேயும், மற்றும் பொதுவாக மக்களிடத்தும் வழங்கக் காணும் பெருவழக்கெனலாம்.

சிறுமீனை விழுங்கி உயிர்வாழும் பெரிய மீனை "யானை மீன்" என்று திவாகரர் குறித்துள்ளது வருமாறு :-

"யானைமீன், திமி, பெருமீன் ஆகும்"

சிறிய முதலாளிகளின் உழைப்பை உறிஞ்சும், பெரிய முதலாளிகள் திமிங்கிலத்திற்கொப்பாவர். மற்றவர் உழைப்பை உறிஞ்சி வாழும் பெருந்தனக்காரர்களைச் சிற்றூர்களில் "திமிங்கிலம்" என்னும் மறைபெயரில், வழங்கும் வழக்கம், தமிழகத்தின் பெரும்பாலான பகுதிகளில் இன்றும் காணப்படுகிறது. திவாகரர், யானை போன்ற பெரியமீனை விழுங்கும், திமிங்கிலம் பற்றி,

"யானையை விழுங்கு மீன் திமிங்கிலம் என்ப"

என்று குறித்துள்ளார். இந்நூற்பா, "பிறரை ஏய்த்துப் பிழைப்பவனைத் 'திமிங்கிலம்' என்று சுட்டித் திட்டுவது உலக வழக்கம்" என்னும் வாழ்வியலுண்மையினைத் தெளிவுறுத்துகிறது.

## திமிங்கிலத்தை விழுங்கும் பெரியமீன்

"அம்மீனை விழுங்கு மீன் திமிங்கிலகிலமே" என்ற திவாகரரின் நூற்பா, இன்னும் பெரிய அளவில் ஊரை அடித்து உலையில் போடுபவரைத் திமிங்கிலகிலம் என்று சொல்லவேண்டும் எனத் திவாகரம் நமக்குக் கற்றுத் தருவதுபோல் இல்லையா! ஆனால் மக்கள் இந்தத் திமிங்கிலகிலத்தைக் கூடப் பேச்சுவழக்கில் குறிப்பிடுவது போல தெரிகிறது. "ஐயோ அவனா – அவன் பெரிய திமிங்கில மாயிற்றே!' " என்று கூறும் மக்கள்வழக்கு, திமிங்கிலகிலம் என்னும் பெயரின் மூலம் மிகப்பெரிய திமிங்கிலத்தைத் திவாகரர், குறிப்பிடுகின்றார் எனலாம்.

திமிங்கிலம் = யானையை விழுங்கும் மீன்

திமிங்கிலகிலம் = திமிங்கிலத்தை விழுங்கும் மிகப் பெரிய திமிங்கிலத்தின் பெயர்.

## 4. மரப்பெயர்த் தொகுதி

நகரில் பிறந்து, நாகரிகம் மிக்குள்ள மாநகர்களில் வசிக்கும் மாந்தர் சிலர் மரம், செடி, கொடிகள் பற்றிய அடிப்படை அறிவு ஏதுமற்றவராய், இன்றும் வாழ்ந்து வருகின்றனர். மரஞ்செடி கொடி முதலான நிலைத்திணைப் பெயர்கள் – அவற்றின் கிழங்கு, வேர், பட்டை, தோல், பிசின், தளிர், இலை, காம்பு, ஈர்க்கு, மொட்டு, பூ, காய், கனி, கொட்டை, பயறு முதலானவற்றின் மருத்துவக் குணங்களை, நம் மூதாதையர் தமது வாழ்வில் நன்கு பயன்படுத்தி, நோயற்ற வாழ்க்கை நடாத்தினர், என்பதற்கு திவாகர நிகண்டு நற்சான்றாய்த் திகழ்கிறது.

இம் மரப்பெயர்த் தொகுதி, பெரிய பெரிய அரசாங்கத் தோட்டங்களைக் (Botonical gardens) காட்டிலும் மிகமிகப் பெரியது. இம் மாபெருந் தொகுதியில் பற்பல வகையான மரஞ்செடி கொடிகளைக் குறிக்கும் பெயர்கள் சுட்டப்படுவதோடு மட்டுமின்றி, அவ்வவற்றின் இளமைப் பெயர்களும், அவற்றின் உறுப்புகளாகிய கிழங்கு, வேர், தோல், கிளை, முள், வயிரம், தளிர், இலை, மொட்டு, பூ, பூங்கொத்து, தாதுப்பொடி, காய், கனி, கொட்டை, பயறு, தவசம் (தானியம்) முதலானவற்றின் பெயர்களும், பலவாறு சுட்டப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாகச் சிலவற்றைக் காண்போம். மரஞ்செடி கொடிகளின் சிறிய குழுமத்தைக் குறிக்கும் பூங்காவிற்குப் பதினொரு பெயர்கள் இடம் பெற்றுள்ளன.

"தேம்பொழில், மரக்கா, தோட்டம், துடவை,
உய்யானம், சோலை, வனம், உத்தியானம்,
தண்டலை, கானம், அடவி, பதினொன்றும்
ஈண்டிய நந்தன வனமென இசைப்பர்"

அடர்ந்த காட்டைக் குறிக்க, இருபத்து மூன்று பெயர்கள் இடம் பெற்றுள்ளன.

"கடம், வியல், பழுவம், கட்சி, குறும்பொறை,
கடறு, காந்தாரம், அடவி, கான், வனம்,
ககனம், காண்டம், கட்டம், முளரி,
சுரம், அத்தம், ஆரணியம், கானம், களரி,
சீரணி, பொச்சை, விடர், தில்லம், காடே"

மேற்குறித்த இருநூற்பாக்களிலும் கானம், அடவி, வனம் என்னும் மூன்று பெயர்களும், சிறியமரக் குழுமமாகிய பூங்காவிற்கும், மரங்களடர்ந்த காட்டிற்கும் பொதுப்பெயர்களாய் மக்கள்வழக்கிலும், செய்யுள் வழக்கிலும் பயன்படுத்தப்பட்டன.

இன்னிசை எழுப்பும் புல்லாங்குழல் செய்யப் பயன்படும் மூங்கில் மரத்திற்கு 25 பெயர்கள் எடுத்தியம்பப்பட்டுள்ளன.

"காம்பு, திகிரி, கண், வேழம், சந்தி,
தூம்பு, முளை, வெதிர், விண்டு, வேரல்,
முந்தூழ், தட்டை, கீசகம், வேய், பணை,
அம்பு, வரை, வேணு, கழை அமை, ஓங்கல்,
பாதிரி, கிளை, அரி, பாண்டி லுள்பட
வருபவை மூங்கில் எனவகுத் தனரே"

மேற்குறித்த நூற்பாக்களில், பல செந்தமிழ்ப் பெயர்கள் இடம் பெற்ற ஞான்றும், ஆரண்யம், வனம் முதலான வடமொழிப் பெயர்களும் காணப்படுகின்றன.

இலையுதிர் காட்டைத் திவாகரர் "முதையல்" எனும் பெயரால் அழைக்கின்றார்.

"முதையல் இலையுதிர்வு பிறங்கிய முதுகாடே"

பூக்காது காய்க்கும் மரத்தைத் திவாகரர், "கோளி பூவாது காய்க்கும் குளிர்மரம்" என்று குறிப்பிட்டுள்ளார்.

வண்டுகள் மொய்க்காத பூவா சண்பக(மர)ப் பூவையும் வேங்கை(மர)ப் பூவையும் திவாகரம் சுட்டுகிறது. "சண்பகமும் வேங்கையும் வண்டுணா மலர்மரம்"

பழம், பூ போன்றவற்றைக் குறிக்கும் பெயராகச் "செம்மல்" என்பதைத் திவாகரர் குறித்துள்ளார்.

"செம்மல் பழம் பூவாகச் செப்புவர்"

நன்கு தூற்றாத நெற்குவியலைப் "பொங்கழி" என்று திவாகரர் குறித்துள்ளார். "பொங்கழி தூற்றா நெற்கூடாகும்". விளைத்தெடுத்த கொத்துமல்லித் தவசத்தினை, "உருளரிசி" என்னும் ஒருதனிப் பெயரால், திவாகரர் சுட்டுகிறார்.

"உருளரிசி கொத்துமலி யென உரைப்பார்".

மாந்தர்தம் உணவு வகைகளான, குழம்பு, கூட்டு, அவியல், பொரியல் அனைத்திற்கும் சுவை யூட்டும் தாளிதம் செய்வதற்குப் பயன்படும் "கடுகை", "கடிப்பகை" என்று அழைக்கின்றார். "கடிப்பகை, ஐயவி, கடுகின் பெயரே".

உள்வயிரம் வாய்ந்ததும், திண்மையான உள்ளழுத்தமுடைய கருங்காலி முதலான மரங்களை, "ஆண்மரம்" என்று திவாகரர் சுட்டுங்கால், தொல்காப்பியர் கூறும், "அகக்காழ்" என்னும் பெயரையும் இணைத்தே இயம்பியுள்ள பாங்கு, குறிப்பிடத்தக்க வொன்றாகும். தொல்காப்பியத்தை அடித்தளமாகக் கொண்டு, திவாகரம் போன்ற நிகண்டுகள் படைக்கப்பட்டன என்பதைத் தெளிவுறுத்தும் பாங்கினில், "புறக்காழ்" மரங்களைப் "பெண்மரம்" என்று திவாகரர் தெரிவித்துள்ளார்.

"அகக்காழ் வன்மரம், ஆண்மரம் ஆகும்
அவை கருங்காலி முதலா யுள்ளன"

"புறக்காழ் வன்புல் பெண்மரம் ஆகும்
அவைதாம்,
தெரிக்கில் பனை, கமுகு, தெங்கு, மூங்கில்"

என்பவை, புறத்தே சற்று கடினமாயும், அகத்தே சோற்றுத்தன்மையுடைய பனை, பாக்கு, தென்னை, மூங்கில் மரங்களைப் "பெண்மரம்" என்று குறித்தது, அம்மரங்களின் உள்ளேயுள்ள மென்மைத் தன்மையை விளக்குவதற்கே எனலாம்.

வன்மை வாய்ந்த அகக்காழுள்ள வயிரம் பாய்ந்த மரங்களை, "ஆண்மரம்" எனப் பெயரிட்ட திவாகரர், மென்மை வன்மையின்றி நார்ச்சத்து மிக்க முருக்கமரம், பால்மரம், நார்மரம் முதலான மரங்களை "அலிமரம்" என்றறைகுவதுங் குறிப்பிடத்தக்கவொன்றாகும்.

"முருக்கு, நார், பால் மர முதலாயின
வேறு அலிமரம் எனும் விகற்பம் பெறுமே"

திவாகரர் சுட்டும் ஆண்மரம், பெண்மரம், அலிமரப் பாகுபாடுகள் மரங்களின் உருவ மற்றும் வன்மை, மென்மை, நார்த்தன்மையை அடிப்படையாகக் கொண்டு வகுக்கப்பட்டவை யெனலாம்.

மாந்தர்தம் வாழ்வியல் நிகழ்வுகளில், பரவலாகப் பயன்கொள்ளப்பெறும் பூமாலைகட்குரிய பெயர்களாகத் திவாகரர்,

"தொடையல், வாசிகை, சிகழிகை, கோதை,
படலை, அலங்கல், கத்திகை, பிணையல்,
அணியல், சுருக்கை, தொடலை, தாமம்,
தொங்கல், தெரியல், கண்ணி, தார், சூட்டு,
மஞ்சரி, ஒலியல், இலம்பகம், மாலை"

பேசுங்கால், இன்னவகையில் – இன்ன இடத்தில் – தொடுக்கப்பட்ட மாலைக்கு – இன்ன பெயர் என்றெல்லாம் மிக நுட்பமாக வகைமை செய்துள்ளார். எவ்வகை மாலையை எவ்வெவ்விடத்தில் அணிந்தால், எப்பெயர் சூட்டி வழங்க வேண்டும் என்றெல்லாம் மொழிந்துள்ளார். இம் மாலையின் பெயர்ப்பாகுபாடுகள் தமிழ்மொழியின் சொல்வளத்தைத் தெளிவுறுத்துவதோடு மட்டுமின்றி, தமிழர்தம் கலைவளத்தையும், செழிப்பான வாழ்க்கை வளத்தையும் திறம்பட அறிவிக்கின்றதெனலாம்.

## 5. இடப்பெயர்த்தொகுதி

தொன்மங்கள் நவிலும் மூவுலகு பற்றிய பெயர்கள், ஓரளவு இடம்பெற்ற ஞான்றும், மக்கள் வாழும் நிலவுலகு குறித்த பெயர்களே, இத் தொகுதியின் பெரும்பகுதியில் இடம்பெற்றுள்ளன. இத் தொகுதியில் பொதுவாக, துறக்கவுலகம், தெய்வ உலகம், (நரக) நிரையவுலகம், நிலவுலகம், திசைகள் பற்றிய பெயர்கள் கூறப்பட்

டிருப்பதைக் காட்டிலும், மக்கள் வாழ்விற் பயன்கொள்ளும், மலை, மலையின் பல்வகையுறுப்புகள், மேடு, பள்ளம், கடல், கழி, உப்பளம், ஆறு, வாவி, ஊருணி, மணல் வகைகள், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணைகள், ஊர், மனை, நகரம், நாடு, தெரு, கடை, கோவில், அரண்மனை, வீடு, கட்டட உறுப்புகள், அகழி, மதில், குதிர், யானை, குதிரை கட்டும் இடங்கள், அரங்கம், சுரங்கம், கல்லூரி, கழகம், போர்க்களம், சுடுகாடு, வயல்வகைகள், வழி, தூரம் முதலியவற்றின் பெயர்களே, விரிவாகப் பேசப்பட்டுள்ளன. இதனால் இத் தொகுதியை மக்களின் வாழ்வியற் பெயர்த்தொகுதி என வழங்கலாம். மேலும், இத் திவாகர நிகண்டு வரலாற்றுப் புகழ்மிக்க நாடுகள், ஊர்கள், மலைகள், ஆறுகள் பற்றிய பெயர்களைப் பதிவதிலும் முதலிடம் பெறுகிறது.

## வரலாற்றுப் புகழ்மிக்க யாறுகளும், இடங்களும்

இந்தியப் பெருநாட்டின் மலைகளான மேருமலை, பனி மலை இடம் பெறுவதோடு மட்டுமின்றி, தென்னாட்டில் புகழ் பெற்ற கொல்லிமலை, தென்பாண்டி நாட்டைச் சார்ந்த பொதியமலை, பேசப்படுகிறது. வரலாற்றுச் சிறப்புகள் வாய்ந்ததும், இளங்கோவடிகளால் சிறப்பிக்கப்படுவதும் சோழ, பாண்டிய நாட்டைச் சார்ந்ததுமான காவிரி, வையை யாறுகள் குறிக்கப் படுகின்றன.

பொருநை எனப்படும் தாமிரவருணி யாறும், குமரியெனப்படும் கன்னியாறும் சுட்டப்படுகிறது. சேரநாட்டைச் சார்ந்த ஆன்பொருநை யாறு பேசப்படுகிறது. ஆனிவானி என்பது ஆன்பொருநையின் மறுபெயராகும். மேலும் திவாகரர் தொண்டைநாட்டைச் சார்ந்த பாலாறு பற்றிப் பாடுவதோடமையாது, கௌதமை, கோதாவிரி முதலான ஆறுகள் பற்றியும் குறித்துள்ளார். வரலாற்றுப் புகழ்பெற்ற கடாரம், ஈழம் முதலான தமிழர்தம் ஆதிக்கப் பகுதியின் பெயர்களும், திவாகரத்துள் கல்லெழுத்தென பதிவு பெற்றுள்ளன. புலியூர், தில்லை என்னும் செந்தமிழ்ப் பெயர்களால் தேவாரத்துள் குறிக்கப்பட்ட தில்லை மாநகர், பிற்காலத்தே 'சிதம்பரம்' என வழங்க நேர்ந்து, இன்றளவும் இப்பெயரே வழக்கூன்றியுள்ளது. சிதம்பரமெனுமிப்பெயர் திவாகர நிகண்டில் ''மன்றம் சிதம்பரம்'' என்று பதிவாகியுள்ளது. இம்மன்றம் என்னும் பெயர், வள்ளளாரால் பலவாறு விதந்து போற்றப்படுகின்றது.

(எ.கா.) ''வாடலறச் சாகா வரங்கொடுக்கு மென்று மன்றில்
ஆடலடிப் பொன் மலர்க்கே வைத்தேன் ஐயாவே''
– (அருட்பா.331).

இறைவன் (தில்லையில்) மன்றத்தில் திருக்கூத்து நிகழ்த்துவது இன்று அனைவராலும், ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மையாகும்.

மலைகளுக்கு நடுவே அமைந்த ஊர் ''கேடகம்'' என்பதை

''கிரிபல சூழ அடுத்த ஊர் கேடகம்'' என்னும் நூற்பாவால் அறியலாம்.

மலையும், ஆறும் ஓர் ஊரின் அடுத்தடுத்து அமைந்திருக்குமானால், அது 'கர்வடம்' என்று வழங்கப்படும்.

(எ.கா.) ''மலையும் ஆறும் அடுத்த ஊர் கர்வடம்''

பலபண்டங்களை ஒருங்கே வரவழைத்து விலைபகர்ந்து விற்கும் அலைவாயிலுள்ள ஊர்ப் பெயர் ''பட்டினம்'' எனப்பெறும். இதனை,

''பண்டம் பலகொடு பகரும் கடற்கரை
மன்னும் பதியே பட்டின மாகும்'' என்று

திவாகரர் குறித்துள்ளார். நகரத்தைப் 'பாடி', 'புரம்' முதலான பெயர்களாற் குறித்துள்ளமையை,

''பாடியும் புரமும் நகரப் பதியே'' என்னும் நூற்பாவால் அறியலாம். நாலாபுறமும் சிற்றூர்கள் சூழ்ந்த பெரிய நகரம், 'மடப்பம்' என்று அழைக்கப்பட்டது.

(எ.கா.) ''மருங்கில் ஊர்சூழ் பெரும்பதி மடப்பம்''

பொதுவாக மலையைக் குறிக்க முப்பத்தெட்டுப் பெயர்களும், கடலைக் குறிக்க முப்பத்தாறு பெயர்களும், வாவியைக் குறிக்க இருபத்தேழு பெயர்களும், சேற்றைக் குறிக்கப் பதினேழு பெயர்களும் திவாகரர் தந்துள்ளார். இருபத்தேழு பெயர்களால், ''ஊரை''யும், பத்தொன்பது பெயர்களால் மதிலையும் சுட்டிய திவாகரர், ''வழி''யைக் குறிக்க, இருபத்தொரு பெயர்களைப் பயன்படுத்துகிறார்.

கடத்தற்கரிய கடுமையான வழியை,

''அத்தம், கடம், கடறு, தூம்பு, சுரம், அருநெறி''

போன்ற பெயர்களாலும், பல வழிகள் பிரிந்து செல்லும் இடத்தைக்,

**''கவலை, கவர்நெறி ஆகக் கருதுவர்'' என்னும்** நூற்பாவாலும் அறியலாம். **இவையனைத்தும்** தூயசெந்தமிழ்ப் பெயர்களாகும்.

சிறிய வழியினை, "விடங்கர் சிறுவழி ஆகும் என்ப" என்னும் நூற்பாவால் தெரிவித்துள்ளார். பெருவழியினை,

"பாதை பெருவழி" என்னும் பாடல் புலப்படுத்துகிறது. மக்கள் ஏறி, இறங்கப் பயன்படுத்தும் வழிப்பெயர்களை,

"படுகர், மடு இழிந்தேறப்படு நெறி" என்னும் நூற்பாவின் வாயிலாகத் தெரிவித்துள்ளார். நீண்ட வழியைக் குறிக்குமிடத்து, "அளக்கர், நீள் வழியே" என்று அழைத்துள்ளார்.

கழிவுநீர்க்குழாய் : "கழிவுநீர் செல்லும் குழாயினைத் தூம்புவாய், அங்கணம்" முதலான சொற்களால் திவாகரர் குறித்துள்ளார். இஃது, இன்று மக்களிடையே "சாக்கடை" என்னும் பெயரில் வழங்கக் காணலாம்.

(எ.கா.) அங்கணம் தூம்புவாய் சலதாரை யாகும்"

கல்லூரி : மாணவர்கள் பலதுறைக் கல்வி பயிலும், உயர்கல்வி பயிலிடத்தைத் திவாகரர், கல்வியூரி, கல்லூரி என்னும் தெரிந்தெடுத்த பெயர்களால், கி.பி. 8 ஆம் நூற்றாண்டிற் அமைந்துள்ளதும், இடப்பெயர்த் தொகுதியில் குறிக்கத்தக்கதாம்.

(எ.கா.) "கல்வியூரி கல்லூரியாகும்"

கழகம் என்னும் பெயரின் வேறுபட்ட வழக்குகள் : "கழகம்" என்னும் பெயர், பல் துறைகளில் பலர்கூடிப் பணியாற்றும் அனைத்து நிறுவனங்கட்குமுரிய பொதுப்பெயராகும். "பலர் கூடுமிடம்" என்னும் பொருண்மை மிக்க பெயரே கழகம். திவாகரர், 'கழகம்' என்னும் இப் பெயரை, மக்கள் கூடும் பல்வேறு இடங்களைச் சுட்டும் பொதுப்பெயராக வழங்கியுள்ள பாங்கு வருமாறு:-

"செல்லல் தீய்க்கும் பல்புகழ்ச் சேந்தனில்
வல்லுநர் நாவலர் வாய்ந்த இடமும்
மல்லும், சூதும், படையும் மற்றும்
கல்வி பயில் களமும் கழகம் ஆகும்"

சேந்தனைப் போல் கல்வியறிவிற் சிறந்தார் கூடுமிடமும், கல்விக் கூடங்களுமே முதற்கண் கழகம் என்னும் பெயரைப் பெற்றிருந்தன. "பின்னரே, மற்போர்ப் பயிற்சிக் களமும், படைக்கலப் பயிற்சிக்களமும், சூதாடு களமும், "கழகம்" என்னும் பெயர் பெற்றிருக்க வேண்டும்" என்பர் சுந்தர சண்முகனார். பலர் ஒன்று கூடுமிடம் என்னும் பொருண்மையை அடிப்படையாகக் கொண்டே, 'கழகம்' என்னும் பெயர், சூதாடுகளத்தைக் குறித்தது. இக்காலத்தே "club" என்னும் ஆங்கிலச் சொல் இடம் பல சுட்டி நிற்பதைப் போலத் திவாகரர் காலத்தில், அஃதாவது கி.பி. 8 ஆம் நூற்றாண்டில், பலர் கூடிப் பல்வேறு நிகழ்வுகள் நிகழ்த்தும், நிகழிடங்களனைத்தும் "கழகம்" என்னும் பெயரால் மக்கள் வழங்கத் தலைப்பட்டனர். இத்தகைய வேறுபட்ட வாழ்வியற் பொருண்மைகளைக் கி.பி. 8 ஆம் நூற்றாண்டிலேயே "கழகம்" என்னும் சொல் பெற்றிருந்தது.

## 6. பல்பொருள் பெயர்த்தொகுதி

"பல்பொருள் பெயர்த்தொகுதி பெரியகடைத் தெருவினைப் போன்ற" தென்பார் சுந்தர சண்முகனார். பொதுவாக இப் பல்பொருள் பெயர்த் தொகுதியில் பொன், மணி, விரைப்பொருள், உணவுவகை முதலியன கூறப் பெற்றுள்ளன. இத்தொகுதியின் சிறப்புகளைக் கணிக்க வந்த அகராதி வல்லுநர் "பல்வகைப் பொன்கள், மாழைகள், மணிகள், சங்கநிதி, பதுமநிதி, காந்தம், சூரிய காந்தக்கல், சந்திரகாந்தக்கல், சங்கு, கருப்பூரம், கத்தூரி, சாந்து, குங்கிலியம், பெருங்காயம், அரக்கு, சுக்கு, ஏலம் முதலான மருந்துச் சரக்குகள், நறுமணப் பொருட்கள், விறகு, கரி, சாம்பல், சாணம், புகை, பனிநீர், காவிக்கல், பஞ்சு, சோறு, பல்வகை உணவுப் பொருட்கள், தேன், பால், தயிர், நெய், மோர், சருக்கரை, கள், அமிழ்து, நச்சுப்பொருட்கள் ஆகியவற்றின் பெயர்களை வகைமைப் படுத்தியுரைப்பர்.

### பல்பொருள் தொகுதியின் சிறப்புகள் :-

சங்கநிதி, பதுமநிதி பற்றிப் பேச வந்த திவாகரர், தமக்கு உற்றுழி உதவி உறுபொருள் நல்கிய சேந்தனின் வரையாது வழங்கும் வள்ளன்மையை, நிதியமிரண்டுடன் இணைத்தே பேசுகின்றார்.

(எ.கா.) "செங்கைநிதி அம்பல் சேந்தன் செங்கையில்
சங்கின் வடிவினது சங்க நிதியே"

"தேமலர் அலங்கல் சேந்தன் செங்கையில்
தாமரை வடிவினது பதுமநிதியே" என்று

தமக்கு வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம், இரவலர்க்கு ஈந்து சிவந்த சேந்தனது, செங்கையின் சிறப்பியல்புகளைத் திவாகரர் பாராட்டுகிறார். திவாகரரின் செய்ந்நன்றி மறவாச் சீர்மைக்கு, மேற்குறித்த சங்கநிதி, பதுமநிதிப் பாடல்கள் சான்றாகத் திகழ்கின்றன எனலாம்.

சிற்றூர்ப் புறத்தே, சிறந்த நற் பொருளாகவும், நச்சுக்கொல்லியாகவும் விளங்கும் மாட்டுச் சாணத்தை, "சாணி புண்ணிய சாந்த மெனப்படும்" என்று புகழ்கிறார்.

## சிற்றுண்டியின் சிறப்புப்பெயர்கள்

சிற்றுண்டி என்னும் சொல் 'Tiffin' என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு இணையானதென்று பலர் கருதுவர். இக்காலத்தில் புதுவதாய் புதுக்கியதொரு தமிழ்ச்சொலன்று. கி.பி.8 ஆம் நூற்றாண்டளவிலேயே, பிட்டு, அஃகுல்லி, இடி, பில்லடை, அப்பம் முதலான உணவுப் பண்டங்களைக் குறிக்கத் திவாகரரால் பயன்படுத்தப்பட்ட சொல்லென்பதைக் கீழ்க்காணும் நூற்பாக்கள் தெளிவுறுத்துகின்றன.

"பூரிகம், நொலையல், கஞ்சம், தோசை,
பேத வகைப்பெயர் அப்ப மாகும்"

"அப்பம், பிட்டொடு, அஃகுல்லி, இடியெனச்
செப்பிய வெல்லாம் சிற்றுண்டி யாகும்"

## பல்பொருட் பெயர்கட்குரிய சில எடுத்துக்காட்டுகள்

இத் தொகுதியின்கண் சோற்றுணவுக்கு இருபத்து நான்கு பெயர்களும், அணிகலன்களுக்குப் பயன்படும் பொன்னைக் குறிக்க முப்பத்தெட்டுப் பெயர்களும், உண்ணுகைக்குப் பதின்மூன்று பெயர்களும், மதிமயக்கும் கள்ளுக்கு நாற்பத்தெட்டுப் பெயர்களும், இடம் பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக 'சோறு' எனும் தனியொரு சொல்லுக்குரிய பெயர்கள் வருமாறு :-

### i) சோற்றிற்குரிய 24 பெயர்கள் :

"புன்கம், மிதவை, பொம்மல், போனகம்,
அன்னம், ஓதனம், அயினி, அடிசில்,
பாளிதம், பொருகு, மிசை, பதம், பாத்து,
அமலை, உணவு, துப்பு, அசனம், கவளம்,
சொன்றி, நிமிரம், மடை, கூழ், புழுக்கல்,
ஒன்றிய மூரல், சோறென உரைப்பர்"

### ii) உண்ணல் தொழில் பற்றிய பதின்மூன்று பெயர்கள்

"மிசைதல், பக்கித்தல்
அயிலல், அனுங்கல், விழுங்கல், துய்த்தல்,
மேய்தல், அயிறல், நுகர்தல், அருந்தல்,
உண்டல், தின்றல், பருகுதல், என்றிவை
பண்பின் தொழிலைப் பகருங் கிளவி"

## கட்டுச்சோற்றைக் குறிக்கும் கன்னித்தமிழ்ப் பெயர்கள்

பொதி என்றால் மூட்டை; பொதி + சோறு – பொதிசோறு = பொதித்து வைக்கப்பட்ட கட்டுச்சோற்று மூட்டை.

ஆறு என்றால் வழி : உணா என்றால் உணவு. ஆறு + உணா – ஆற்றுணா = வழிநடைக்காகக் கட்டி எடுத்துச் செல்லும் உணவு மூட்டை.

தோள் + கோப்பு – தோட்கோப்பு = தோளில் கோத்தெடுத்துச் செல்லும் பொருளே தோட்கோப்பு என்பார், திவாகரர்.

(எ.கா.) "பொதிசோறு, ஆற்றுணா, தோட்கோப்பு ஆகும்" என்று, கட்டுச்சோற்றைக் குறிக்க, பொதிசோறு, ஆற்றுணா, தோட்கோப்பு என்னும் மூன்று பெயர்களைத் திவாகரர் குறித்துள்ளார். இம்மூன்றும் மக்கள்தம் வாழ்வியலில், இதுகாறும் வழங்கி, வழக்காறாகி நிலைத்து நிற்கும் வழங்குதமிழ்ச் சொற்செல்வங்கள் எனலாம்.

## தோட்கோப்பும் இன்றைய வாழ்வியலும்

முந்தைய நாளில் கட்டுச்சோற்றினைப் பொதிபோற் கட்டித் தோளில் கோத்தெடுத்துக் கொண்டு சென்றதால், "தோட்கோப்பு" என்று சோற்று மூட்டையை திவாகரர் வழங்குவார். நாகரிகம் மிக்கு விளங்கும் இக்காலத்திலும், தோளில் பையினைத் தொங்கவிட்டு செல்லும் பழக்கம், அங்கிங்கெனாதபடி எங்கும் பரவலாகக் காணப்படுகிறது.

# 7. செயற்கை வடிவப் பெயர்த்தொகுதி

செயற்கை வடிவப் பெயர்த்தொகுதி என்னும் பெரியதொரு தொழிற் பேட்டைக்குள் புகுந்து விட்டால் பல்வகைத் தொழிற் கருவிகள் உருவாகுதல் போல் இத் தொகுதியில், பல்வகை மாழைகள் (உலோகங்கள்), மரங்கள், தோல், நூல், மண் முதலானவற்றாலான எழில்மிகு செயற்கைப் பொருட்களின் பெயர்கள் இடம் பெற்றுள்ளன. அவைகளாவன.

1) பல்வகைப் படைக்கலங்கள்,
2) அணிகலன்கள்,
3) நாழிகை வட்டில் (கடியாரம்),
4) கண்ணாடி

5) பலவகை இசைக்கருவிகள்,
6) தேர், வண்டி, வீடுகளில் பயன்கொள்ளப் பெறும் பலவகைப் பொருட்கள்,
7) உழவு, நெசவுத் தொழிற்கருவிகள்.
8) எழுதுகோல்,
9) ஏணி,
10) தோணி,
11) கப்பல்,
12) கிளியோட்டுங்கருவி, குடை, சீப்பு, பந்து – காற்றாடி முதலான விளையாட்டுப் பொருட்கள்,
13) பலவகைக் காலணிகள்,
14) பலவகை உடைகள்,
15) கொடிகள், படுக்கை, ஓவியம் முதலியவற்றிற்குரிய பெயர்கள் இடம்பெற்றுள்ளன.

பலவகையான இன்னிசைக் கருவிகள் பேசப்பட்டுள்ளன. அவற்றுள் பறை என்பதும் ஒன்று. இருபது வகைப் பறைகள் விரிவாகப் பேசப்பட்டுள்ளன. தமிழர்தம் மரபார்ந்த இசைக்கருவியின் தொழில் வளத்தை இப்பெயர்கள் தெளிவுறுத்துகின்றன.

உயரமாக அமரும் நீளப்பலகையை, 'Bench' என்னும் ஆங்கிலச் சொல்லால் இக்காலத்தில் பலர் அழைக்கின்றனர். இக்காலத்தும், சிலவிடங்களில், இதனை, 'விசி' என்றும் 'விசிப்பலகை' என்றும் அழைக்கக் காணலாம். இவ் விசிப்பலகையினைத் திவாகரம், 'விசி', 'அரி' என்னும் இரு வேறு சொற்களால் விளம்பக் காணலாம்.

(எ.கா.) "விசி அரி ஆகும்"

இத்தொகுதியில், கூறையை (துணியை)க் குறிக்கும் பெயர்களாகத் திவாகரர் குறித்துள்ளது வருமாறு :

கூறையின் பெயர்

(எ.கா.) "மடியே, புட்டம், மாறுகம், கலை, உடை,
இலக்கர், கலிங்கம், சேலை, காடகம்
காழகம், அறுவை, வட்டம், சாடி,
தானை, வாதநம், கோடிகம், அம்பரம்,
ஆசாரம், ஆடை, தூசு, துகில், நீவி,
சமபடம், பட்டம், படாம், புடவை, கூறை".

கலிங்கம், காழகம் என்னும் பெயர்களைத் திவாகரர் தெரிவித்துள்ளதை நோக்குங்கால், அந்நாடுகளிலிருந்தும், தமிழகத்திற்கு உடைவகைகள் வந்தமை புலனாகும்.

**நல்லாடையின் பெயர் :** ஆடையின் பெயர்களாகத் திவாகரர்,

"எடகம், புங்கம், பங்கம், இடையல்,
வேதகம், சில்லிகை, சித்திலிகை, கத்தியம்,
நாகம், தூரியம், கருள், பாரி, நல்லாடை"

முதலானவற்றை, மொழிந்துள்ளார்.

### சேந்தனும் வீரக்கழலும் :

சேந்தனது வீரத்தை வியக்குமுகத்தான், செருக்களம் நோக்கிச் செல்லும் வீரர்கள் அணிந்து கொள்ளும் வீரக்கழலான, "காலணி வடத்தைக்" குறிக்கும் ஞான்று, சேந்தனின் வீரத்தையும் சிறப்பிக்கும் திறன் வருமாறு :–

(எ.கா.) "கெழுதகை அம்பல் கிழவோன் சேந்தனில்
விழைவுறு தியாகத்து வீரத்து விளக்கிய
கழலே ஆடவர் கால்மிசை யணிவடம்"

இவ்வாறு ஒவ்வொரு தொகுதியின் பெயர்களைச் சுட்டும் போதெல்லாம், சேந்தனின் சிறப்புகளை இணைத்து நன்றியறிவிப்புப் பாடல் பாடுவதன் வாயிலாகச் செய்ந்நன்றிமறவாத் திறத்தை, திவாகரர் வெளிப்படுத்துகிறார் எனலாம்.

## 8. பண்பு பற்றிய பெயர்த்தொகுதி

உளவியல் (Psychology), வடிவக்கணக்கு (geometry), முதலான துறை தொடர்பான அறிவியற் கருத்துகளைத் தமிழிற் படைப்பதற்குரிய பல்வகைச் சொற்கள், இத் தொகுதியின்கண் காணப்படுகின்றன. ஒரு சிலவற்றிற்கான பெயர்கள் நேரடியாகக் கிடைக்காவிட்டாலும், இத்தொகுதியில் இடம் பெற்றிருக்கும் சொற்கள், பல புதிய பெயர்களைப் படைத்துக் கொள்வதற்கு வழி வகுக்கின்றன எனலாம்.

காட்சிப் பொருண்மை பற்றிய பண்புப் பெயர்களைச் சுட்டும் வடிவு, அளவு, நிறம் பற்றிய பெயர்களும், கருத்துப் பொருண்மையை விளக்கும் பண்புப்பெயர்களான, சுவை, குணம், உணர்வு குறித்த பெயர்களும், இத்தொகுதியின் கண் இடம் பெற்றுள்ளன. கண்ணையும், கருத்தையும், ஒருங்கே கவர்ந்தீர்க்கும் தன்மையுள்ள வண்ணங்களான செம்மை, பசுமை, கருமை, பொன்மை, வெண்மை முதலியவற்றின் பெயர்களும், பரப்பு, அகலம், நீளம், தொகுதி, மிகுதி, பாதி முதலான அளவைப்பெயர்களும், வட்டம், வளைவு, திரள், குவிவு,

மொக்குள், உண்டை, உள்துளை, துவார(ம்) அமைப்புப் பெயர்களும், முழுமை, உயர்ச்சி, பெருமை, பருமை, சிறுமை, செறிவு, மென்மை, வன்மை, நுண்மை, நொய்மை முதலான பண்புப்பெயர்களும், ஒளி, அழகு, வலிமை, மதர்ப்பு. எளிமை, வெம்மை, தண்மை, வெற்றி, வீரம், தோல்வி, மனம், அறிவு, கருத்து, உணர்வு, விருப்பு, வெறுப்பு, அன்பு, அருள், இரக்கம், சினம், காமம், அச்சம், அருவருப்பு, வியப்பு, உவகை, கண்ணோட்டம், நன்மை, தீமை, நோய், வறுமை, செல்வம், இன்பம், துன்பம், சோம்பல், பகை, நட்பு, வஞ்சனை, பழமை, புதுமை, பொறாமை, ஒழுக்கம், பிறப்பு, இறப்பு, இளமை, நிலையாமை, உரிமை, ஆக்கம், தூய்மை, வளமை, உறவு, துறவு, மணம், கசப்பு, புளிப்பு, உறைப்பு, அளவைகள், ஒப்புமை முதலான பல்வகை பண்புகளைக் குறிக்கும் பெயர்களும், விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

பெருமைப் பண்பைக் குறிக்க முப்பத்தொன்பது பெயர்களும், மிகுதிப் பொருள் குறிக்க, இருபத்து மூன்று பெயர்களும், வலிமைப்பண்பைச் சுட்ட முப்பத்திரண்டு பெயர்களும், அச்சப்பண்பிற்கு நாற்பத்திரண்டு பெயர்களும், விருப்பப்பண்பை விளக்க இருபத்தைந்து பெயர்களும், துன்பத்திற்கு நாற்பத்தேழு பெயர்களும், குற்றங்குறிக்க இருபத்தேழு பெயர்களும், இன்னபிற பண்புகளைக் குறிக்க அவ்வப் பண்புசார் பெயர்களும், இத்தொகுதியின் கண்ணே விரிவாக இடம் பெற்றுள்ளன. பெருமைப் பண்பினைக் குறிக்கும், முப்பத்தொன்பது பெயர்கள் வருமாறு :–

> "தடம், தவவு, விபுலம், வியலிகை, வியன், விறல்
> முடலை, அகலுள், மோடு, செம்மை
> பீடு, கண், பாழி, பின், முன்பு, மால், மா,
> வந்தை, கலந்தை, பரி, பணை, அழுவம்,
> பிறங்கல், படு, நனி, இயக்கம், வியம், தகை,
> செம்மல், அணி, நன்று, அருமை, இருமை,
> கருமை, கதழ்வு, கயவு, மூரி
> பெருமை, பாடும், அண்ணலும், அதற்கே"

**உழுவலன்பு :** உழுவலன்பு என்பது பிறவிதொறும் தொடரும் அன்பாம். 'உழுவல்' என்பது எழுபிறவியும் தொடர்ந்து நீடிக்கக்கூடிய அன்பு என்னும் பொருளில் திவாகரர், எடுத்தாள்வது வருமாறு :

"உழுவல் எழுமையும் தொடர்ந்த அன்பு உரைக்கும்"

**பண்பு குறித்த சிறப்புப்பெயர்கள் :** இன்றையக் குமுகாயத்தில் இறுமாப்புடையோரே மிகுதியாகக் காணப்படுகின்றனர். ஏக்கழுத்தம் என்ற சொல்லால் இறுமாப்பினையும், மனமலர்ச்சியைச் செம்மாப்பு என்னும் சொல்லும் பெய்து காட்டும், நூற்பா வருமாறு :

> "இறுமாப்பு ஏக்கழுத்தம்"
>
> "செம்மாப்பு அகமலர்ச்சி"

எண்வகைச் சுவைகளாம் உள்ளத்தெழும் மெய்ப்பாட்டுணர்வுகளை உடம்பில் – உடலுறுப்புகளிற் வெளிப்படுத்தி ஆடுவதே நாட்டியம். இதனைத் திவாகரர் "நாட்டியம் குறிப்பே" என்னும் நூற்பாவின் மூலம் தெளிவுறுத்துகின்றார். உடலுறுப்புகளின் வாயிலாக, உள்ளத்துணர்வுகளை காண்பவர்தம் கண்ணையும் கருத்தையும் கவருமாறு, ஐம்பொறியசைவுகளின் மூலம் விளக்குவதே நாட்டியம். நாட்டியக் கலை என்பது பேசாத பேச்சுக் கலை என்னும் கருத்து இனிது புலனாகும். அடுத்துக் காரணம் என்னும் தமிழ்ச் சொல்லோடு, மேலும் பல சொற்களாகத் திறன், வாயில், பொருட்டு போன்றவற்றைக் குறித்துள்ள தன் பொருட்டுத் தமிழின் செம்மாந்த சொல்வளத்தைத் தெளிவுறுத்தும் திறன் வருமாறு :–

(எ.கா.) "............. பொருட்டும், திறனும், வாயிலும் காரணம் தெரிசொல்"

## பசை என்னும் சொல்லின் பயன்பாடு, குறிப்பு :

தமிழகரமுதலி வரலாற்றில் 'பசை' யென்னும் சொல், 'ஆக்கம்' ஊதியம், பயன், பேறு போன்ற பெயர்களில் கி.பி.8– ஆம் நூற்றாண்டில் மக்களிடையே வழங்கியதென்பதை,

> "ஊதியம், பசை, பயன், பலித்தம், ஆக்கமென்றோ
> ஓதிய ஐந்தும் இலாப மாகும்
> பேறும், அதிகமும் பேசுப இலாபம்" என்று

திவாகரர் அழைக்கிறார்.

மிகுதியான செல்வமுடையவனைப் 'பசை' யுடையன் என்றும், "இவன்" பெரிய பசையான ஆள்' என்றும், கல்லாதார் வழக்காக, நாட்டுப் புற மக்கள் இன்றும் வழங்கிவரக் காணலாம்.

(எ.கா.) "அவருக்குப் பசை ஏறிவிட்டது"
"அதில் நல்ல பசை படும்"
"அதில் ஏதேனும் பசைபடுமா?"
"அந்தத் தொழில் செய்தால் பசைக்குப் பஞ்சமில்லை"
"பசை இருந்தால்தானே வண்டி ஓடும்"
"பசையில்லா மனிதனுக்கு வசைதான் மிச்சம்"

இவ்வழக்குகளில் பசை என்பது, பணச்சார்பான

பொருள் குறித்தல் காண்க. இத்தகு உலகவழக்குச் சொற்களை, இலக்கியத்தில் வழக்கூன்றச் செய்த பெருமை, திவாகரரையே சாரும்.

### நிறுத்தலளவைப் பெயர்கள்

நிறுத்தலளவையுளொன்றாம் ஒரு பலத்தைத் 'தொடி' என்னும் பெயராலும், கால் பலத்தைக் கஃசு என்னும் பெயராலும், நூறு தொடிகொண்ட அளவையை "தூக்கு", "கா" என்னும் பெயர்களாலும் திவாகரர் அழைத்துள்ளார்.

"ஒரு பலப் பெயர் தொடி"

"கஃசு காற்பலம்"

"காக்கும், காவும், துலாமும் நன்று நிறை"

"இந்நிறுத்தலளவப் பெயர்கள், தமிழ்ச்சொல் வளத்தையும், அன்றையத் தமிழரின் கணக்கியல் கலைநுட்பத்தையும் எடுத்தியம்புகின்றன" என்பார் அகராதியியல் வல்லுநர்.

"தொடி", 'கஃசு' என்னும் இச்சீரிய செஞ்சொற்களை, எக்காலத்திற்கும் ஏற்றவண்ணம், 2000 ஆண்டுகட்கு முன்னரே, தெள்ளிய மனமும், ஒள்ளிய அறிவும், திண்ணிய நெஞ்சும், நுண்ணிய மதியும் கொண்ட திருவள்ளுவர், தமது நூலுள் எடுத்தாண்டுள்ளார்.

"தொடிப் புழுதி கஃசா உணக்கிற் பிடித்தெருவும் வேண்டாது சாலப் படும்" ஒரு பல(ம்) புழுதி கஃசாம் வண்ணம் ஏருழவன் அந்நிலத்தைக் காயவிடுவானாயின் ஒரு கைப்பிடியளவு எருவும் இடவேண்டாமல் பணைத்து நின்று விளையுள் நல்கும். இத் தொகுதியின் நிறைவுப்பகுதியிலும், சேந்தனது பெருந்தன்மைப் பண்பையும், கல்லாரிடத்து அறிவுமடம் பட்டும், கல்வியாளரிடத்தே, அறிந்தும் அறியாதது போல் அடங்கியிருக்கும் இயல்பினையும் "அறிமடம்" என்ற சொல்லால் நன்றியறிவுப்புப் பாடலில் சிறப்பித்துள்ளது வருமாறு :-

"பெருஞ்சேந்தன் அம்பல் பெருமான் போலத்
தெரிந்து பிறர் அறிவின் சோர்வுபுற மறைத்து
அறிந்து மறியார் போறல் அறிமடம்"

பண்புப்பெயர்த் தொகுதியின் சிறப்பியல்பினை ஒட்டுமொத்தமாக உரைக்க வந்த வ.செயதேவனார், "பண்பு பற்றிய பெயரில் காட்சிப்பொருள், உணர்விற்குப் பயன்படும் உண்மைப்பொருள், இவற்றின் குணத்தொடர்பு பற்றிய பெயர்கள் சேர்ந்துள்ளன" என்று வரைந்துள்ளது, உளங்கொளத்தக்க வகையில் உள்ளது.

இவ்வாறு திவாகரர், பண்புப் பெயர்த் தொகுதியில் குமுகாய மாந்தர்தம் வாழ்வியல் தொடர்பான பொருட்களைக் கி.பி.8 ஆம் நூற்றாண்டில் எடுத்தியம்பியதன் மூலம் தமிழகரமுதலி வரலாற்றில் சிறப்பிடம் பெறுகிறார் எனலாம்.

## 9. செயல் பற்றிய பெயர்த்தொகுதி

இத் தொகுதியில் வினைப்பெயர்கள் அனைத்தும் பொருண்மை குன்றா வண்ணம் விளக்கப்படுகின்றன. சற்றொப்ப இருநூற்றைம்பது வினைப்பெயர்கள் பேசப்பட்டுள்ளன. சில செயல்களுக்கு, இனிய அழகிய தூய தமிழ்ப்பெயர்கள் இடம்பெற்றுள்ளன. செய்தல் என்னும் வினைப்பெயர்

"அயர்தல், குயிற்றல், ஆற்றல், இழைத்தல்
வனைதல், செய்தல், மாற்ற மாகும்"

எனப் பல பெயர்களால் விளக்கப்பட்டுள்ளன. மகளிர்தம் விளையாட்டைக் குறிக்க,

"ஓரை, பண்ணை, கெடவரல், பொய்தல்,
உண்டாட்டு, கிரீடை, உப்பு, கேளி
வண்டல், தொடலை, மகளிர் விளையாட்டு"

என்னுமிவையனைத்தும், பண்டைத் தமிழகத்தில், மகளிர் ஆடிய விளையாடல்களாம். 'கிரீடை' என்னும் வடமொழிப் பெயரொழிந்த, பிறவெல்லாம் தூயதமிழ் ஆடற் பெயர்களே.

மேலும் திருவாசகத்தில் திருச்சாழல், திருப்பொற் சுண்ணம், திருவம்மானை போன்ற மகளிர் விளையாடல்களும் குறிக்கப்பட்டுள்ளன. பந்து விளையாட்டைக் குறித்து இலக்கியங்களில் பரவலான செய்திகள் காணப்படுகின்றன.

### திருவிழா பற்றிய பெயர்கள் :

கழகக்கால இலக்கியம் முதல் இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்கள் வரை கால மாற்றத்திற்கேற்ப திவாகரத்தில் குறிக்கப்படுகிறது. திருவிழா பற்றிய பெயர்கள் வருமாறு :-

"முருகும், சாறும், சேறும், விழாவே
உயர் துணங் கறலும், உற்சவம் ஆகும்"

## அழகுக் கலை

பொதுவாகச் சிறுவர் முதல் பெரியவர் வரை, தத்தம் பொருளியல் நிலைக்கு ஏற்றவண்ணம், அனைத்துப் பருவத்தினரும், ஒப்பனை செய்து கொள்ளும் ஒப்பனைக் கலை, இக்காலத்தே மிகுதியாகப் பரவியுள்ளது. திவாகரர், கி.பி.8 ஆம் நூற்றாண்டில், புனைவு செய்தலைப் புலப்படுத்தும் பாங்கினில், ஒன்பது தீந்தமிழ்ப் பெயர்களைக் குறித்துள்ளார். 'அலங்கரித்தல்' என்னும் வடசொல்லையும் சேர்த்துத் திவாகரம் புனைதல் அல்லது கவினுறத் தோன்றுதலைக் குறிக்கும், பத்துப்பெயர்கள் வருமாறு

"மண்ணல், கைசெய்தல், பொற்பு, அலங்கரித்தல்,
புனைதல், மிலைதல், வேய்தல், அணிதல்
வனைதல், ஒப்பனை மாற்றமாகும்"

அடுத்துத் தலைமகன் தலைமகளிடையே காணக்கூடும் இன்பச் சுவைமிக்க ஊடல், கூடல் குறித்த விளத்தம் பற்றிக் காண்போம்.

## ஊடலும் கூடலும்

தலைமகன் தலைமகளிடையே அவ்வப்போது தோன்றும் சிறுசிறு அன்புப் பிணக்கு அல்லது மனத்தாங்கலே ஊடலாகும். இவ்வூடலின் உச்சகட்டம், தலைமகன் தலைமகள்தம் கூடலேயாகும். இதனைச் செல்லமாகக் கடிந்து கொள்ளல் எனலாம். தொடங்குபவள், தலைவியேயாவாள். அதன் பின்னரே தலைவனும் ஊடுதல் போல் நடிப்பான். தலைமகன் பாற் குற்றமுள்ளவிடத்தும், இல்லாவிடத்தும், தலைமகள் அவனொடு ஊடிட, பொய்க்காய்வு கடிதில் மாய்ந்தொழியும். இந்த ஊடுதல் பண்பினைச் சிறப்பிக்க வந்த வள்ளுவர்,

"ஊடுதல் காமத்திற்கு இன்பம் – அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்" (குறள், 1330)

என்று குறித்துள்ளது காண்க. இத் திருக்குறட் கருத்தினை உள்ளடக்கியே, திவாகரர், "ஒல்" = "சிரல்" என்னும் பெயர்களாற் குறித்துள்ளார்.

'ஒல்' – லுதல் என்பது கூடுதல், இணைதல், பொருந்துதற் பொருண்மையை விளக்கமுறைப் பேசும் வினைச்சொல்லாகும். இச்சொல் 'ஒல்' என்னும் முதனிலையைக் கொண்டது. இம்முதனிலையாகிய 'ஒல்' என்னும் வேரடி, பொருந்துதல், கூடுதல் என்னும் பொருள் பயக்கும் 'உல்' என்னும் பொருந்துதற் கருத்து வேரடியினின்று முகிழ்த்ததாம்.

உல் → ஒல்.

தலைவன், தலைவியரிடையே நீட்டித்த ஊடல், ஒருவாறு முடிவடைந்து கூடலுக்கேற்றவாறு உருவாகும் சூழலை, 'ஒல்' என்றே திவாகரர் பெயர் சூட்டியுள்ளார். கூடுதலின் மறுபெயர் "சிரல்" என்பதாகும். 'துனி' என்பது புலவி நீட்டிப்பினைக் குறிக்கும். 'ஒல்', 'சிரல்' எனும் கூடுதற் பெயர்களைச் சுட்டும் திவாகர நூற்பாக்கள் வருமாறு :–

"ஊடலின் முதிர்தல் புலவி யாகும்"

"அதனின் நீடுதல் துனி யெனப் படுமே"

"ஒல்லும் சிரலும் முடிவிட னுரைக்கும்"

## தலைவனும் தலைவியும் – உடன்பாடெய்திக் குறைபொறுத்துக் கூடிப் பொருந்துதலே, ஊடல் முடிவிடம்

தமிழகரமுதலி வரலாற்றில், ஒல், சிரல் என்னும் பெயர்களுக்குப் பொருள் புகலவந்த அகரமுதலி வல்லுநர்களுட் பெரும்பாலோர், ஊடலின் முடிவிடம் (limit, end, top) எனப் பொருளுரைத்துள்ளனர். மொழிஞாயிறு பாவாணரும், பிற கழக இலக்கியப் புலவர்களும், திவாகரத்திற்குப் பின் தோன்றிய சூடாமணி நிகண்டு செய்த மண்டல புருடரும், ஒல் → ஒல்லல் = உடன்படுதல், கூடுதல், பொருந்துதல் என்னும் பொருண்மை கொண்டதென உரைத்துள்ளனர். புறப்பாடலிலும், உடன்படுதல் மற்றும் பொருந்துதற் கருத்துத் திறம்பட இடம் பெற்றுள்ளது.

"பாசறை யல்லது நீஒல் லாயே" (புறம். 31)

கந்த புராணத்தில், "கானத்து ஒல்லும் பேரழல்" என்னும் பாடல் வரியில் பொருந்துதற்கருத்து புலப்படுத்தப் பட்டுள்ளது காண்க. பரிபாடல் பகுதி, "பொறுத்தல்" என்னும், பொருண்மையை, "ஒல்" என்னும் முதனிலைக்கு அமைத்துள்ளது.

"ஒல்லுவ சொல்லாது" (பரிபா. 12)

பாவாணரின் வேர்ப்பொருள் விளக்கம் மற்றும் இலக்கியச் சான்றுகளைத் துணைக் கொண்டு நோக்கினால், "ஒல்" என்னும் முதனிலை, பொருந்துதல், உடன்படுதல், பொறுத்தல், கூடுதல் முதலான

பொருண்மைகளில், செய்யுள்வழக்கின் பயின்று வந்துள்ளமை, இனிது புலனாகும். இக் கருத்தினை, திவாகரத்திற்குப் பின்தோன்றிய சூடாமணி நிகண்டும்,

"ஊடலைத் தீர்த்தலின்பேர்
உணர்த்தலே ஒல்லல் ஆகும்" என

உறுதிப்படுத்தும். ஊடல் தீர்ந்த நிலையே "ஒல்லல்" என்பதை முடிவு செய்துள்ளது.

தலைவி ஊடிட தலைவன் தழுவிட இருவரும் தம்முள் கூடிப் பெறும் புணர்ச்சியின்பம் பாடுபெறும் தன்மையதாம். "ஒல்" என்னும் இச்சொல்லுக்குப் புலவர் சுந்தரசண்முகனார் பொருள் வரையறை செய்வது. "'ஒல்' என்பதற்கு ஊடல் முடிவிடம்" என்று பொருள். ஊடல் கொண்ட தலைவனும், தலைவியும் ஒருவருக்கொருவர் குறை பொறுத்து, உடன்பாடு எய்திப் பொருந்துதல் தானே ஊடல் முடிவிடமாகும்?" (சுந்தர சண்முகனார். 1971, பக்.122)

## திருமணம் – என்னும் பெயர் பற்றித் திவாகரம்

ஆண், பெண் இருவரும் உள்ளத்தால் ஒன்றிணைந்து கூடும், திருமணமே தித்திக்கும். இத் திருமணம் என்னும் சொல், இக் காலத்தே இருவகை வழக்கிலும், பெருவழக்காக வழங்கப்படுகிறது. திவாகரரும், ஓர் ஆணும், ஒரு பெண்ணும் கூடுகிற – இணைகிற நிகழ்வே, 'திருமணம்' என்று குறித்துள்ளது, வருமாறு :

"மணத்தல் – கூடுதல்"

**செயல்குறித்த பிற பெயர்கள் :** பொதுவாகச் செயலைக் குறிக்கும், பல்வேறு வகையான பெயர்களுள், மக்கள்தம் வாழ்வியலுள் இணைந்து இடம்பெற்றுள்ள சிறப்புமிக்க சில சான்றுகள் வருமாறு :

"ஊராண்மை மிக்க செயல்"

"பேராண்மை அரிய செயல்" – மிக்க செயலையும் அரிய செயலையும் தெளிவுறுத்தும் பொருண்மை பொதிந்த திருக்குறள் வருமாறு :–

"பேராண்மை என்ப தறுகண்ஒன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு"

ஆய்வு, சிறப்பாய்வு என்னும் பொருண்மைகளை அடிப்படையாகக் கொண்ட ஆலோசனை, மந்திராலோசனை முதலான வட சொற்களுக்குரிய நேரிய தமிழ்ச்சொற்களான, சூழ்ச்சி, உசாவல், தேர்ச்சி, நூல், எண்ணல் என்னும் ஒரைந்து சொற்களான், திவாகரர் குறித்துள்ளது வருமாறு :–

"சூழ்ச்சி, உசாவே, தேர்ச்சி, நூலென
யாப்புற எண்ணல் கிளவி யாகும்"

அடுத்து, ஒற்றுமை என்னும் சொல்லுக்கு திவாகரர் புதுப் பொருள் அமைத்துள்ளார்.

"ஒற்றுமை குறிக்கோள்" ஒற்றுமை, குறிக்கோளெனும் பொருண்மை பயப்பதாமென்பது அறிஞர்தம் ஆய்வின்பாற்பட்டது. அடுத்து, வரையறுத்தல் என்னும் பொருண்மையினைத் திவாகரர் கணித்தல், குணித்தல் என்னும் சொற்களால் விளக்குகிறார்.

"கணித்தலும், குணித்தலும் வரையறுத்த லாகும்" ஞாலத்தில், இசை, இலக்கியம், ஓவியம் சிற்பம், நாடகம், கணிதம், அறிவியல் ஆய கலைகள் அறிய விழையும் மாணாக்கரும் மற்றுமுள்ளாரெல்லாரும் ஆர்வமுடன் பயின்று வருகின்றனர். கணிதம் தவிர்ந்த ஏனைய கலைகளும், அறிவியல் முடிவுகளும், காலந்தோறும், மாறுபடும் தன்மையன. ஆனால் கணிதக்கலை என்றும் மாறா இயல்பினவாம். பண்டு, நான்கும், மூன்றும், ஒன்றுகூட்ட ஏழுதாம். இன்றதனை ஒன்றுகூட்ட எட்டாத வில்லையே! கணிதம் என்பது என்றும் மாறாத, ஒரே முடிவினவாதலின் திவாகரர், "கணித்தலும், குணித்தலும், வரையறுத்த லாகும்" என்று இயல்வரையறை செய்துள்ளார். அதனால்தான் "கணிதம் என்பது சரியான திருத்தமான ஒருவகை அறிவியல் (exact science) ஆகும் என அறிஞர்கள், கூறுகின்றனர்" என்பார் சுந்தர சண்முகனார். கணிப்பது கணிதமாகையால், திட்டவட்டமாக வரையறுக்கப் படுவதனைத்தும் கணிதமெனக் கழறுவாம்.

## கி.பி. 8 ஆம் நூற்றாண்டில் வழங்கிய வரிப் பெயர்கள் :

தமிழகரமுதலி வரலாற்றில், கி.பி.8 ஆம் நூற்றாண்டில் சேந்தன் காலத்தில் மக்கள் அரசிற்குச் செலுத்திய வரிகள், மற்றும் சிற்றரசர்கள் பேரரசர்களுக்கு செலுத்திய வரிகள் பற்றிய பாடல்கள் வருமாறு :–

## குடிமக்கள் அரசர்க்குச் செலுத்தும் வரிகள் குறித்த நூற்பா

"கரமும், கடனும், கறையும், குடியிறை
இறுப்பும், வரியும் ஏற்கும் அதற்கே" எனவும்,

## பேரரசர்கட்குச் சிற்றரசர் செலுத்திய வரிகள் :–

"அரசிறை, திறையே
கப்பமும், மிறையும் காட்டும் அதுவே" எனவும்,

சுங்கவரிகளைக் கூறுங்கால் :-

"உஃகு, சுங்கவிறை
ஆயம், சாரிகை, அஃதென மொழிப" என்றும்,

திவாகரம் இயம்பும்.

நடன நாட்டிய வகைகள் குறித்தும், கூத்தின் பெயர்கள் குறித்தும், திவாகரர் கூறுவது வருமாறு :-

"நடமே, நாடகம், கண்ணுள், நட்டம்
படிகம், ஆடல், தாண்டவம், பரதம்
ஆறுதல், தூங்கல், வாணி, குரவை
இலயம், நிலையம், நிருத்தம், கூத்தே

நடனம், தூக்கு, நாட்டியம், நட்டணம்,
நடையும், அதற்கே நவிலலு மாகும்"

"கரணம், பித்தம், மலைப்பு, பவுரி
பிரமரி, வீரட், டானம், குனிப்பே
உள்ளாளனம், கடகம் எனவே ஒன்பதும்
ஒள்ளிய கூத்தின் விகற்ப மாகும்"

பல்வகைத் தெய்வங்கள் ஆடும் கூத்தும், பாங்குற எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

1. திருமால் ஆடும் கூத்தின் பெயர்கள் :-

"அல்லியம், குடமாடல், மல்லே, மரக்கால்
எல்லொளி, மாயோன் ஆடலாகும்" என்றும்,

2. முழுமுதற் கடவுள் சிவபெருமான் ஆடும் கூத்தின் பெயர்கள் :-

"பாண்டரங்கம், கபாலம், கொடுகொட்டி,
என்றிவை மூன்றும் முக்கண னாடல்" என்றும்,

3. முருகன் ஆடும் கூத்தின் பெயர்கள் :-

"கொட்டியும், குடையும், குமரன் ஆடல்" என்றும்,

4. திருமகள் ஆடும் கூத்து :-

"பரவை என்பது திருமகள் ஆடல்" என்றும்,

5. வெற்றித்தெய்வம், கொற்றவை அல்லது காளி (துர்க்கை) ஆடும் கூத்து :-

"மரக்கால், கூத்தே, துர்க்கை ஆடல்" என்றும்,

இங்கு வெற்றித்தெய்வமாகிய காளி, துர்க்கை என்னும் வடமொழிப் பெயரால் குறிக்கப்படுகிறாள். தன் தமையனான திருமால் ஆடும் கூத்தாகிய மரக்கால் கூத்தினை ஆடுகிறாள் என்பதும், குறிக்கத்தக்கது.

6. மங்கையர் எழுவர் இயற்றும் கூத்து (சப்த கன்னியர்) :-

"எழுவர் மங்கையர் ஆடலும் துடியே" என்றும்,

7. காமன் ஆடும் கூத்து :

"பேடாடல் காமனது ஆடலாகும்"

மக்கள் கைகோத்துக் குழுவாக ஆடும் கூத்தினைக்

"குரவைக் கூத்தே கைகோத் தாடல்" என்றும் குறிப்பிடுவார்.

குறிஞ்சி நிலத்துவாழ் மக்கள், ஆடும் இக்குரவைக் கூத்தானது, குன்றக்குரவை என்றும், கோவலராடுங் கூத்து, ஆய்ச்சியர்குரவை யென்றும், பெயர்பெறும். இக் கூத்தினை மக்கள் தத்தம் கைகளைக் கோத்தும் குரவையொலி யெழுப்பியும் ஒன்றுகூடி வட்டமாக நின்று ஆடுவர். சிலப்பதிகாரத்தில், இருவகைக் கூத்தும் குறிக்கப்பட்டுள்ளது.

8. இருகை முடக்கியாடும் கூத்து :-

"முடக்கிய இருகை பழுப்புடை ஒற்றித்
துடக்கிய நடையது துணங்கை யாகும்" என்றும்,

9. வேலன் எனும் பூசாரி ஆடும் கூத்து :-

குறிஞ்சிநிலத்தில் வேலன் முருகனருள் பெற்று ஆடும் கூத்தாக தொல்காப்பியத்துள் குறிக்கப்பட்டுள்ளது. "வெறியாட்டயர்ந்த வேலனும்" என்றும், "வேலன் வெறியாட்டு" என்றும் இக்கூத்து, கழக இலக்கியங்களுள் இடம் பெற்றுள்ளது.

10. முருகன் அருளேறி ஆடும், வேலன்கூத்து

திவாகரத்துள்,

"அணங்கும், வெறியும், கழங்கும், வேலனாடல்"

என்றும்,

தெய்வத்தன்மை வாய்ந்த கூத்தின் பதின் பெயர்கள், திவாகரத்துள் குறிக்கப்பட்டுள்ளன. இக் கூத்துகளின் பெயர்கள் வாயிலாக, ஒவ்வொரு தெய்வத்திற்குரிய கூத்தின் பெயரும், தமிழ் மக்களுக்குக் கூத்துக் கலை மீதுள்ள ஆழமும் அகலமும், நாட்டமும் வேட்டமும், தெற்றென விளங்கும்.

சிறப்புச் செயல் குறித்த பெயர்கள் :

உண்ணத்தகும் உணவுப்பொருள்களை அடுகலத்துள் வைத்து, அவித்து உண்ணும் பழக்கம்,

திவாகரத்துள் சிறப்பாக இடம் பெற்றுள்ளது. அவித்தல் என்னும் செயல் பற்றித் திவாகரர்,

"நதுத்தலும், நொதுத்தலும், நுதுத்தலும் அவித்தல்" என்றறைகுவார். இப்பெயர்கள், மக்களின் இயல்பான வாழ்வியற் செயற்பாட்டைத் தெளிவுறுத்துவனவாம்.

அடுத்து இரண்டு காலடிளையும், கீழே பதியவைத்துக் கோழி போலும் குந்தியிருக்கும் செயலைத் திவாகரர்,

"குந்திய கால்நிலை குஞ்சித்த லாகும்" என்று குறித்துள்ளார். இகழ்ச்சி ஏளனச் சிரிப்பை "அசி" யெனுஞ் சொல்பெய்தாள்வார்.

"அசி அவமதிச் சிரிப்பா மென அறைவர்"

இவ்வாறு பலவகைச் சிறப்புச்செயல்களின் பெயர்கள், இடம்பெறக் காணலாம்.

### சேந்தனது கொடைமடம் :

கடையெழு வள்ளல்களில், வரையாது கொடுத்துக் "கொடைமடம்" பட்ட வள்ளலான பாரிபோல், அம்பல் நாயகன் சேந்தனும், தம்மைநாடி வந்த இரவலர்கட்குத் தக்கார், தகவிலர், உற்றார், அற்றாரென நோக்காது, வரையாது வழங்கிய செய்தியினைத் திவாகரர் தமது நன்றியறிவிப்புப் பாடலில்,

"திடமொழி அம்பல் சேந்தனை ஏய்ந்த
கொடைமடம் வரையாது கொடுத்த லாகும்"

என்று குறித்துள்ளார்.

இன்னார்க்குத்தான் கொடுக்க வேண்டும், இப்போதுதான் கொடுக்க வேண்டும், இத்தனை முறைதான் கொடுக்க வேண்டும், இன்னதுதான் கொடுக்க வேண்டும், இவ்வளவுதான் கொடுக்க வேண்டும் என்ற வரையறையின்றிக் கொடுத்த அம்பல்நாயகன் சேந்தனின், "கொடைமடம்" குறித்துப் பேசப்படும், இப்பாடல் புறநானூற்றிலுள்ள பாரிவள்ளலின் கொடைமடப் பாடலையொத்தது.

## 10. ஒலிபற்றிய பெயர்த்தொகுதி

"ஆசைதரும் இன்பம் ஆயிரங்கள் கோடி
ஓசைதரும் இன்பம் உவகையிலா இன்பமன்றோ"

என்னும் பைந்தமிழ்த் தேர்ப்பாகன்தம் பாடல் வரிகட்கேற்ப ஓசை (ஒலி) தொடர்பான பல்வேறு பிரிவுகளின் பெயர்கள் இடம் பெற்றுள்ளன. இறைவனை "ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே" என்று ஒலியின் சிறப்புப் பொருண்மையினைத் திருநாவுக்கரசர் உரைத்துள்ளதும், இங்கு ஓர்ந்துணரத்தக்கது. பல சொற்றொடர்களால் பேசப்படுவதே மொழியாகும். ஒவ்வொரு சொற்றொடரும், பல சொற்களால் அமைந்தது. ஒரு சொல், பல எழுத்துக்களால் ஆகியது. பல ஒலி அணுக்களால் உருவாகியதே ஓர் எழுத்தாகும். அஃதாவது அணுவணுவாய் அமைந்த பல ஒலிகளின் திரளே ஓர் எழுத்தாகும். சான்றாக, "ஊ" என்னும் ஓர் எழுத்தை ஒலிப்பதற்குச் சிறிது சிறிதாக – அணுவணுவாக, ஓசையை நீட்டிக் கொண்டே செல்லவேண்டும். எனவே, பல ஒலியணுக்களால் ஆகியதே எழுத்தாகும். பல எழுத்துகளால் அமைந்ததே சொல்லாகும். பல சொற்களால் உருவாகியதே சொற்றொடர். பல சொற்றொடர்களைக் கொண்டது ஒரு மொழி – என்பது புலனாகும். இதனைப் பவணந்தியார் தமது நன்னூலில்,

"மொழிமுதற் காரணமாம்
அணுத்திரள் ஒலி எழுத்து" எனச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்துள்ளார். இது காரண காரியமுறை (Logical Method) எனப்படும்.

எனவே, ஒலி பற்றிய பெயர்த்தொகுதியில், எழுத்துகளாலாகிய சொல்லிலக்கணமும், சொல்லாலான பொருளிலக்கணமும், பொருளை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்ட செய்யுளிலக்கணமும், செய்யுளோடு இணைந்த இசையிலக்கணமும் இயம்பப் பட்டிருப்பதில், யாதொரு ஐயமில்லை. இக்கரணியங்களால், நிகண்டுநூலை, மொழிநூல் வகையைச் சார்ந்ததென்று மொழியியலார் கருதுகின்றனர். அதிலும் சிறப்பாக, இந்த ஒலி பற்றிய பெயர்த்தொகுதியை ஒருவகை "மொழி அறிவியல்" கூறென்றே வழங்கலாம். பொதுவாக இத்தொகுதியில், சொல்வகை, பாவகை, யாழ்வகை, இசைவகை முதலானவற்றின் பெயர்கள் இடம் பெற்றுள்ளன.

இத் தொகுதியின்கண்ணே அமைந்த, ஒலி பற்றிய சிறப்புப்பெயர்களும், அதுகுறித்த கருத்து விளத்தங்களும் வருமாறு :

1. சொல்லுதலைக் குறிக்கும் சொற்களஞ்சியம் வருமாறு :–

"விரித்தல், கதைத்தல், உரைத்தல், கூறல்,
தெரித்தல், ஆடல், நொடித்தல், நவிலல்,
சாற்றல், பணித்தல், மொழிதல், வலித்திடல்,
ஏற்றல், முந்நான்கும், சொல்லுதற் கிசையும்,

"பகர்தல், செப்பல், இயம்பல், பாவல்,
குயிறல், இறுத்தல், கூறல், புகறல்,
கட்டுரை, விளம்பல், கரைதல், ஓதல்,
சொற்றல், வழங்கல், வசனம், காதை,
பேசல், பேச்சு, கிளப்பே, அறைதல்,
இசைப்பு, தோ்தல், மிழற்றல், வாணி,
அசைப்பு, என்றின்னவை, சொல்லென அறைவர்
குயில், வினா, எதிர்ப்பு, கீர், நுவல், பாணி
இயம், வாக்கு, என்பவும் சொல்லின்பால"

சொல்லுதல் பற்றிய இப்பெயர்களனைத்தும், வளர்தமிழ் மொழியின் சொல்வளச் செல்வத்தை விளம்புவதெனலாம்.

2. பல்காலும் விடாது பலமுறை ஒன்றை உரைத்தற்கு 'மீதுரையென்று' திவாகரம் பெயர் சூட்டியுள்ளது.

3. திவாகரர், விடாது பேசுதலைப் "பிதற்றுதல்" என்று மொழிந்துள்ளார். எடுத்துக்காட்டுகள் வருமாறு :-

"மீதுரை பல்கால் விளம்புத லாகும்"

"பிதற்றுதல் விடாது பேசுதலாகும்"

4. புறங்கூறுதலைச் சுட்டும் புதுமைப்பெயர்கள் :-

குறையொன்றுங் காணவியலாதார் மீது, குறை நயப்பித்தலைக் "கொண்டியம்" என்றும், புறங்கூறுதலைத் "தொடுப்பு" என்றும், திவாகரர் குறிப்பிட்டுள்ளார்.

"கொண்டியம், தொடுப்பு வெறும் புறங்கூறல்"

ஒருவரிடம் உள்ள குறையைச் சுட்டி, அவரைப் பற்றிப் புறம்பேசுதலைத் திவாகரர், "கொடுவாய்" என்று குறித்துள்ளார்.

5. ஒரு செய்தியினைச் சிலர் மட்டும் அறிந்து, அதன் விளைவாகப் பழித்துப் புறங்கூறலைத் திவாகரர், "அம்பல்" என்று உரைத்துள்ளார்.

"அம்பல் சிலரறிந்து தம்முட் புறங்கூறல்"

6. தலைவனும், தலைவியும் கருத்தொருமித்துக் கூடி இன்புறுதலைப் பலர் அறிந்து பழித்தலை, "அலர்" என்னும் கழக இலக்கியப் பெயரால், திவாகரர் அமைத்துள்ளார்.

"அலரே பலரும் அறிந்து அலர்தூற்றல்"

7. ஒருவர்தம் வளர்ச்சியின் மீது அக்கறை கொண்டு, எஞ்ஞான்றும் அவர் குறைபுரியாது செயலாற்றுவதைக் குறிக்கோளாகக் கொண்டு, அவர்தம் தவற்றினைச் சுட்டிக் காட்டி இடித்துரைத்துக் கண்டித்துப் பேசுதலைத் திவாகரர்,

"கழறலும் இடித்தலும் உறுதிக் கட்டுரை" என்று தெளிவுறுத்துகிறார்.

8. மயக்குறு மக்களின் மழலைமொழி குழலிசையினும் சிறந்தது; யாழிசையினும் இனிமை மிக்கது. இதனை வள்ளுவப் பெருந்தகை,

"குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்" (குறள், 66)

தம்மக்களின் இனிமை ததும்பும் மழலைச்சொல்லைக் கேளாதவரே குழலிசை இனிதென்றும் யாழிசை இனிதென்றும் பலபடப் பாராட்டிக் கூறுவர். குழவியின் பொருள் நிரம்பாத குதலைச்சொற்களை திவாகரர்,

"நிழற்றலும், மிழற்றலும், நிரம்பா மென்சொல்
மழலை, கொஞ்சல், குதலை, உல்லாபம்,
மிழலை, எனவும் விளம்பும் அதற்கே" என்று

குறிப்பிட்டுள்ளார்.

9. யாரேது சொன்னாலும், குற்றம் சுமத்தினும், பழிதூற்றினும், அதுபற்றி ஒன்றுங் கூறாமல், பிறருக்குப் போட்டியாகத் தொழிலொன்றுமின்றிச் சும்மா இருத்தலைத் திவாகரர்,

"வாளா என்கிளவி பேசா என்றாகும்" என்று மொழிந்துள்ளார்.

10. போருக்கு, அஃதாவது போட்டிக்குப் பிறரை அழைப்பதைத் திவாகரம் "அறைகூவல்" என்னும் இன்றைய மக்கள்வழக்கால் சுட்டியுள்ளது, குறிப்பிடத்தக்கது.

பேச்சுவழக்குச் சொற்களில், சில இலக்கியத்தரம் வாய்ந்தவை. ஒருசில இலக்கியத்துக்கும் புது வழி காட்டுபவை. மக்கள் வழக்கிலும் இலக்கியத்திலும், பெருவழக்காக வழங்குமிச்சொல்லொன்றே, தமிழ் வாழும் மொழியென்பதைக் காட்டப் போதரும் ஒரு சோற்றுப்பதமாகும்.

"அறைகூவல் பொர அழைத்தல்"

11. கல்வியையும், கற்றலையும் குறிக்கும் பெயர்கள், இன்றைய வாழ்வியலில் வழக்கூன்றியதாகவும், நுண்மாண் நுழைபுலமிக்கோர், கருதத்தக்க வகையிலும் அமைந்துள்ளது.

"உறுதியும், சால்பும், ஓதியும், அறிவும்
கலையும், கேள்வியும், கல்வி யாகும்

வித்தை, சாலம், விஞ்சை, ஊதியம்
மற்றிந் நான்கும் கல்வியின் நாமம்'' என்றும்,

கற்றல் பற்றி மேலும் விளக்க வந்த திவாகரர்,

''நவிலல், கெழுமல், பயிலல், ''கற்றல்'' என்றும் கூறியுள்ளமை, திவாகரர்தம் கல்வித்திறனுக்கு நற்சான்று படைக்கிறது. இந் நூற்பாவின் வாயிலாகத் திவாகரர் முன்னோர் மொழியைப் பொன்னே போல் போற்றியுள்ள திறம் வெளிப்படுமாறு :–

i) கல்வியின் பயனும், சிறப்பும் புலப்படும் நோக்கில், திவாகரர் பெயர்களை அமைத்துள்ளார்.

உறுதி (கல்வியால் விளையும் நன்மை).

சால்பு (கற்ற கல்வியானேற்படும் பெருந்தன்மைப் பண்பு).

அறிவு (நுண்ணிய, ஆழ்ந்தகன்ற கல்வியால் உண்டாகும், நூலறிவு).

ஊதியம் (கல்வியின் விளைவால் ஒருவர்தம் வாழ்வில் பெற்ற ஆதாயம் மற்றும் கற்ற கல்வியாலேற்படும் வாழ்வியற் பயன்).

ii) கலைகளைக் கற்பதும் கல்வியே யாகும்.

iii) ''கேள்வியும் கல்வியாகும்'' என்று திவாகரர் குறித்துள்ளதால் கிறித்துவிற்கு முற்பட்ட திருக்குறளைத் திவாகரர் கருத்தூன்றிக் கற்றறிந்ததும் பொன்னேபோற் போற்றியமையும் இனிது புலனாகும்.

''செல்வத்துட் செல்வம் செவிச்செல்வமென்னும்'' திருவள்ளுவர் தம் வாய்மொழிக்கேற்பவும்,

''கற்றில னாயினுங் கேட்க, அஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை'' (குறள், 414)

என்னும் குறட்கருத்தினை மெய்ப்பிக்கும் பாங்கினில், ''கேள்வியும் கல்வியாகும்'' என்று திவாகரர் மொழிந்துள்ளார் எனலாம்.

உறுதி நூல்களைப் படிக்க வாய்ப்பற்றோர் கல்வியறிவும் பட்டறிவும் நிறைந்த, சான்றோர் சொல்லக் கேட்க, அஃது அவர்க்குத் தளர்ச்சி வந்துழி பற்றுக் கோடாந்துணையாகு மென்றுணர்ந்த திவாகரர், கேள்வியும் கல்வியாகுமென்று மொழிந்துள்ளார் எனலாம்.

### இலக்கியம் பற்றித் திவாகரர் இயம்புவது :

இலக்கியம் என்பது வாழ்க்கையினை விளக்கும் வாழ்வியற் கண்ணாடி என்பது இலக்கியத் திறனாய்வாளர்தம் கொள்கையாகும். வாழ்வியற் கூறுகளை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குவதே இலக்கிய மென்பார் திவாகரர்.

''இலக்கியம்; உதாரணம், எடுத்துக்காட்டல்''

இந்நூற்பாவின் திறத்தைக் கூறவந்த புலவர் சுந்தர சண்முகனார், ''ஓர் உயர்ந்த கருத்தை – அறிவுரையை – அறத்தை (நீதியை) – படிப்பினையைத் தக்க (உதாரணத்தின்) எடுத்துக்காட்டின் வாயிலாக விளக்குவதே இலக்கியம். அந்த எடுத்துக்காட்டு (உதாரணம்) வரலாறாகவும், இருக்கலாம் அல்லது வாழ்க்கை நிகழ்ச்சியாகவும், இருக்கலாம். சிலப்பதிகாரம் போன்றவை வரலாற்று இலக்கியங்கள். திருக்குறள் போன்றவை வாழ்க்கைநிகழ்ச்சி இலக்கியங்கள்'' என்பார் சுந்தர சண்முகனார்.

1. அட்சன் (Hudson) என்னும் மேலை நாட்டறிஞர், இலக்கியம் பற்றிக் கூறுங்கால், ''மொழியின் வாயிலாக மக்களின்வாழ்க்கை முறையினை எடுத்து விளக்குவதே இலக்கியம்'' (literature is thus fundamentally an expression of life through the medium of language).

2. ''தலைசிறந்த கருத்துக் கருவூலமே இலக்கியம்'' – எமர்சன் (Emerson).

3. மக்களிடம் நற்பண்பை உருவாக்கவல்ல சிறந்த கருவிகளுள் இலக்கியமும் ஒன்று (literature is one of the most powerful instruments for forming character) என்று மார்லி குறிப்பிட்டுள்ளார்.

**வெண்பாவின் சிறப்பு :** தமிழிலுள்ள பல்வகைப் பாவினங்களுள், குறிக்கத் தக்கதும், அனைத்துப் பாவினங்கட்கும் அடிப்படையாய் அமைந்ததும், நால்வகைப் பாக்களேயாகும். அவை வருமாறு :–

1. வெண்பா. 2. ஆசிரியப்பா
3. கலிப்பா. 4. வஞ்சிப்பா.

இந்நால்வகைப் பாக்களுள், வெண்பாவே, முதன்மையானதும், சிறந்ததுமாகும். இதனைத் தமிழிலக்கியப் பரப்புணர்ந்தோரும், இலக்கிய வரலாறறிந்தோரும், நன்குணர்வர். திருவள்ளுவர்தம் உயர்ச்சியும், திருக்குறளின் மாட்சியும், பாப்புனைய வள்ளுவர் குறள்வெண்பாவைத் தெரிவு செய்தமை யொன்றே இவ்வுண்மையறியப் போதரும். திவாகரர் இப்பாவினைச் சிறப்பித்துப் பாடுங்கால், ''முதற்பா

வெண்பா'' என்று மொழிந்துள்ளமையால், வெண்பாவின் முதன்மை நன்கு புலனாகும்.

**எண்ணும் எழுத்தும் கணக்காம் :** எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகுமென்னும் முதுமொழியும், ''எண்ணென்ப ஏனை எழுத்தென்ப'' என்னும் வள்ளுவர்தம் வாய்மொழியும் சிறப்பிப்பது போல், 'எண்' எனப்படும் கணக்கையும், எழுத்தென்று பொருள்படும் இலக்கியத்தையும், ஒன்றிணைத்துக் ''கணக்கு'' என்று பெயரிட்டுள்ளது திவாகரம்.

எண்ணாலான கணிதத்தை மட்டுமே, இக்காலத்தார் ''கணக்கு'' என்று குறிக்கின்றனர். பண்டைக்காலத்தில் ''எழுத்து'' என்னும் சொல் இலக்கியத்தையும் குறித்தது. நற்றிணை முதலான 18 – கழக இலக்கியநூல்களை 'மேற்கணக்கு' என்றும், அடிநிமிர்வில்லாச் செய்யுள் பலவற்றால் அறம்பொருளின் பங்கினைப் பற்றிக் கூறும் நூல்வகை (பன்னருபா.346) கீழ்க்கணக்கு என்றும் பெயர் பெற்றமையால் 'கணக்கு' என்னும் பெயர், கணக்கிற்கும், இலக்கியத்திற்கும் பொதுவாய்த் திகழ்ந்ததெனலாம். இப் பொருண்மைகளை உள்ளடக்கியே திவாகரம்,

''எண்ணு மெழுத்தும் கணக் கெனப் படுமே''

என்று குறித்துள்ளது. கணக்கு என்ற சொல்லின், கழகக் காலப் பொருண்மையை, அடியொற்றி பெயரமைத்த பாங்கு, முன்னோர்மொழியைப் பொன்னேபோற் போற்றும் வகையிலமைந்துள்ளது.

**ஏழிசையின் மாண்பு :** இறைவனைப் ''பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி'' என்று அப்பரடிகளும், ''ஏழிசையாய் இசைப்பயனாய்'' என்று இறைவன் இசையாய் மிளிர்வதைச் சுந்தரரும், போற்றியுள்ளதால், தமிழிசைக்கு ஏழிசையே அடிப்படையாக அமைந்ததெனலாம். ஏழ் = எழுவும் இசை. ஏழ் என்னும் எண். இசை (சுரம்) ஏழாதலால், ஏழாம் என அப்பெயர் பெற்றது. பண்ணொன்ற இசைபாடும் இறையடியவர்தம் உள்ளத்தில்தான் இறைவன் உறைகின்றானென்று, நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் திருஞான சம்பந்தர் கூறுவார். இசையை இறைவடிவில் துய்த்தனர், நாயன்மார்களும், ஆழ்வார்களும் என்பதற்கு ஆதாரமாக, நாலாயிரத் தெய்வப் பனுவலும், தேவாரமும் திகழ்கிறது. இத்தகு சீர்மைமிகு ஏழிசைப்பெயர்களைத் திவாகரர்,

''குரலே, துத்தம், கைக்கிளை, உழையே
இளியே, விளரி, தாரம், என்றிவை
எழுவகை இசைக்கும் எய்தும் பெயரே'' என்று

குறித்துள்ளார்.

இப் பெயர்களனைத்தும் பண்டையிலக்கியத்திற் குறிக்கப்படும் பண்ணின் பெயர்களேயாகும். இவ்வெழுவகைப் பண்களுக்கும் அடிப்படை, ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் ஏழு தமிழெழுத்துகளென்று கி.பி.8 – ஆம் நூற்றாண்டைச் சார்ந்த திவாகரர் குறித்துள்ளார். கருநாடக இசையில் இடம்பெறும் ''ச, ரி, க, ம, ப, த, நி'' என்னுமிவ்வேழெழுத்துகளும், வடமொழி முறையைச் சார்ந்து அமைக்கப்பட்டவையாகும். பண்ணின் இசைக்கு அடிப்படையாயுள்ள தமிழெழுத்துக்கள் பற்றிய திவாகர நூற்பா வருமாறு :

''ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔவெனு
மிவ்வே ழெழுத்தும் ஏழிசைக் குரிய''

தமிழிசையுலகம் இவ்வுண்மையினை ஊன்றி ஆய்வு செய்து, உலகத்தவருக்கு மெய்ப்பிக்க வேண்டும்.

இவ் வொலித்தொகுதியின் இறுதிப்பகுதியில் பொதுவான ஒலியைச் சுட்ட இருபத்திரண்டு பெயர்களும், ஒலித்தலைக் குறிக்க முப்பத்தேழு பெயர்களும், ஆரவாரத்தைக் குறிக்க இருபத்தொரு பெயர்களும், பேசப்பட்டுள்ளன. மேலும், சிறப்புடன் குறிக்கப்பட்ட சிற்சில ஒலிவகைகள் பற்றிய பெயர்கள் வருமாறு :–

''பிளிறலும், குளிரலும், பிரற்றலும், சிரற்றலும்,
மருளலும், பயிறலும், குரைத்தலும், கனைத்தலும்
முளைத்தலும், அகவலும், எழுத்திலா ஓசை''

**பல்வகையொலிகள் விரவிக் கலந்தொலிக்கும் கலப்பொலிப் பெயர்கள் :**

பிரித்துரைக்க வியலாவண்ணம், பல்வகை யொலிகளும் விரவிக் கலந்தொலிக்கும் கலப் பொலிகளைத் திவாகரர்,

''தாமரம், பூசல், ஆர்ப்பு, கர்ச்சனை
குமுறல், உலம்பல், கோடணை, கோலா,
கலமே, தெழித்தல், கலகம், ஆகுலமோடு,
ஊறுதல், முந்நான்கு ஒன்றலாப் பேரொலி''

என்னும் தெரிந்த பன்னிரு பெயர்களைப் பகர்ந்துள்ளார்.

உலகவழக்கில், 'சரேலெனப் பாய்ந்தான்', 'பளாரென்று அறைந்தான்', 'கலீரென்று ஒலித்தது',

'வல்லென்று உரைத்தான்', 'குபீரெனச் சிரித்தாள்' போன்ற வழக்குகளில்/ இடம்பெறும் ஒலிக்குறிப்புப் பெயர்களாகத் திவாகரர் மொழிந்துள்ளது வருமாறு :-

"இம்மெனல், கல்லெனல், இழுமெனல், வல்லெனல்
பொம்மெனல், ஒல்லெனல், பொள்ளெனல்,
ஞெள்ளெனல், அன்ன அநுகரண ஓசையாகும்.
கொம்மெனல், விடேலெனல், நெரேலெனல்
முகேரெனல், அம்மெனல்,
சரேலெனல், அநுகரண ஓசை"

## இரட்டைக்கிளவியாக வரும் ஒலிப்பெயர்கள் :

இரட்டைக்கிளவியைப் பற்றிய ஒலிப் பெயர்களைக் குறிக்கும் நூற்பா வருமாறு:-

படபடெனல், கலகலெனல், பதபதெனல்
கொளகொளெனல், மொடுமொடெனல்
திடுதிடெனல், மொகமொகெனல், கலகலெனல்
நெடுநெடெனல், கடகடெனல், நிறையுபயவோசை"
(உபயம் = இரண்டு. உபய ஓசை = இரட்டை ஒலி)

இத் தொகுதியின் கண்ணே எடுத்துக்காட்டப் பட்ட ஒலிபற்றிய பாடல்களின் வாயிலாக, திவாகரர் மொழித்துறையில் நுணுகிச்சென்று நோக்கித் தம்மை, ஒரு மொழியியல் வல்லுநராக நிறுவியுள்ளாரெனலாம். இசை குறித்த தமிழெழுத்துகளைச் சுட்டிய திவாகரர், உபயம் முதலான வடசொற்களைத் தவிர்த்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

இவ்வொலிப் பெயர்த்தொகுதி இன்றைய மொழியியலாருக்கு மிகவும் பயன்தரும் பகுதியாகவுள்ளது. தமிழ் மொழியின் அடிப்படைக் கூறுகளாகத் திகழும் எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், பொருளிலக்கணம், யாப்பிலக்கணம், இசையிலக்கணம் முதலானவற்றை தொல்காப்பியத்தை அடிப்படையாகக் கொண்டு ஓரளவு விளக்கமுற்பட்ட திவாகரம் கி.பி.8 ஆம் நூற்றாண்டின் மொழிவளர்ச்சியைத் தெளிவுறுத்துகிறதெனலாம். இருவகை வழக்கிலும், ஓரளவு வடசொற்கள் கலந்த ஞான்றும், தமிழ் மொழியின் தனித்தியங்கும் வல்லமை சிறிதும் குன்றவில்லையெனலாம்.

## ஒரு சொல் பல்பொருட் பெயர்த்தொகுதி

இதுகாறும் திவாகரரால் விளக்கப்பட்ட கடந்த பத்துத் தொகுதிகளும், ஒவ்வொரு பொருளைச் சுட்டுதற்கரிய பல வகைப் பெயர்களையும் தெரிவிக்கும் தொகுதிகளாகும். ஆனால் இப்பதினோராந் தொகுதி முற்றிலும் வேறுபட்டது. இக்காலத்தே நாம் பயன்கொள்ளும், பொதுவான அகரமுதலி (Dictionary)யைப் போன்றது ஒவ்வொரு சொற்குமுரிய, அனைத்து வகைப் பொருள்களையும், திறம்படத் தெரிவிக்கும் பகுதியாகும். அதனால்தான், இத்தொகுதி, ஒருசொல் பல்பொருட் தொகுதி என்றழைக்கப்படுகிறது.

இத் தொகுதியின் கண்ணே, சற்றொப்ப முந்நூற்று எழுபத்தேழு சொற்கட்கான பெயர்கள் இடம் பெற்றுள்ளன. ஒரே பொருளை மட்டும் சுட்டும் சொல்லென்று ஏதுமில்லை. குறைந்தது இரண்டு பொருள்களையாவது, விளக்கும் வண்ணம் சொற்கள் அமைக்கப்பட்டுள்ளன. இருபத்து மூன்று பொருள்கள் தரும் சொல்லும், இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன என்பதும், குறிப்பிடத்தக்கவொன்றாகும். "இப் பதினோராந் தொகுதியில் நேர்முகமாக முந்நூற்று எழுபத்தேழு சொற்கட்குப் பொருள் கூறப்பட்டிருப்பினும், ஏனைய பத்துத் தொகுதிகளில் (9500) பல்லாயிரக்கணக்கான சொற்கட்குப் பொருள் கூறப்பட்டுள்ளது.............. முந்நூற்று எழுபத்தேழு சொற்களின், பொருள்களாகப் பல சொற்கள் தரப்பட்டுள்ளன. அந்தப் பல சொற்களின் பொருள்களாக இந்த முந்நூற்று எழுபத்தேழு சொற்களையும், கொள்ள வேண்டும்" (சுந்தரசண்முகனார் : 1971 : 135) என்று இத்தொகுதியில் அகரமுதலி அமைப்பில் கூறப்பட்ட சொற்கள் பற்றி குறித்துள்ளார்.

1. இக் காலத்தில் தோன்றியுள்ள பெரும்பாலான அகரமுதலிகளில், மக்கள் வழக்கிலுள்ள பெரும்பாலான எளிய சொற்கள் இடம்பெற்றுள்ளன. ஆனால் திவாகரர் போன்ற நிகண்டாசிரியர்கள், கற்றறிந்தார் மட்டும் புரிந்து கொள்ள நேரும் அரிய சொற்கட்கே பொருளுரைத் துள்ளனர் எனலாம்.

2. இக் காலத்தில் பல்வகைக் கலைகளும், தொடர்வண்டி (புகைவண்டி) முதலான கலைத்துறைச் சொற்கள், தமிழில் புதியனவாகப் படைக்கப்பட்டுள்ளன. இத்துறை சார்ந்த சொற்களெல்லாம், இக்கால அகரமுதலியில் பெரும்பாலான இடத்தைப் பிடித்துள்ளன எனலாம்.

3. பிற்காலத்தில், தமிழகத்தில் ஏற்பட்ட பிறமொழிக் கலப்பால், உருவாகிய சொற்களும் அகரமுதலியில் இடம்பெற்றன.

4. மேலும், பல்வகைச் சமயங்கள், நாகரிகங்கள் தொடர்பான சொற்களும், அகரமுதலியில் இடம்பெற்றன. இவ்வாறாகப் பலவழிகளிலும், இக்கால அகரமுதலிகள், நிகண்டுகளை விட, பெரிய அளவில் தோற்றமளித்தன.

5. சொல்லுக்குப் பொருள் புகலும் இன்றைய அகரமுதலி போல், இப்பதினோராந் தொகுதியிலுள்ள சொற்களனைத்தும், அகரவரிசைப்படுத்தப்பட்டவை. அன்றைய மக்களின் பயன்பாட்டில் இத்தொகுதி இருந்தாலும், அச்சுப்பொறி வந்தபின், இத் தொகுதி முழுமையும் "அகரமுறைச் சீர்திருத்தப் பதிப்பிற்கு" உட்படுத்தப்பட்டமையாலும், இன்றைய அகரமுதலி போல் "திவாகர நிகண்டு பிற்காலத்தவரால் சீர்திருத்தம் செய்து கையாளப்பட்டது" என்பார் சுந்தர சண்முகனார்.

இத் தொகுதியை அகரவரிசைப் படுத்திய பிற்காலத்தவர்கள், "ஆதியிற் பொருள்", "அந்தத்துப் பொருள்" என இரு பிரிவுகளாகப் பிரித்து விளக்கியுள்ளனர்.

**1. ஆதியிற் பொருள் :** சிறப்புமிக்க பொருளை முதற்கண் அமைத்துப் பொருள் புகல்வது அங்கதம் என்னும் பெயரைக் குறிக்கும். "அங்கதம் தோளணி, அரவு மாகும்" என்று குறிக்கும் முதல் நூற்பாவில், "அங்கதம்" என்னும் சொல், முதற்கண் வருமாறு பாடுவது. வேளாண்மை என்னும் பெயரைக் குறிக்கும் இறுதி நூற்பாவில்,

"வேளாண்மை, உபகாரம், ஈகையும் விளம்பும்"

வேளாண்மை என்னும் பெயரை முதலில் வைத்துப் பாடுவது. "இவ்வாறு அங்கதம், வேளாண்மை என்னும் சொற்களைப் பாடலின் முதலில் நிறுத்திப் பின்னர்ப் பொருள் கூறுவதால், இந்தப் பிரிவுக்கு ஆதியிற் பொருளென்று பெயர்" என்பார் சுந்தர சண்முகனார்.

**2. அந்தத்துப் பொருள் :** பொருட்களை முதற்கண் வைத்து, நூற்பாவினிறுதியில் பெயர் குறித்த சொல்லினை ஈற்றில் வைத்துப் பாடும் முறைக்கு, அந்தத்துப் பொருள் என்று பெயர்.

அணங்கு என்னும் சொல்லுக்குத் தெய்வம், பெண் தெய்வம் போன்றே பெண், மையல், நோய், வருத்தம், கொலை என்னும் ஆறு பொருட்களை முதற்கண் மொழிந்து, பெயரை ஈற்றில் வைத்துப் பாடியுள்ள முதல் நூற்பா வருமாறு :

(எ.கா.) "தெய்வமும் தெய்வத் துவமை மாதரும்
மையலும், நோயும், வருத்தமும், கொலையும்
ஐயமின் றுரைக்கும் அணங்கென் கிளவி"

இறுதி நூற்பாவின் இறுதியில் வையம் என்னும் பெயரமைய, பொருட்களை முதற்கண் வைத்துள்ள பாங்கு வருமாறு:-

"சிவிகையும் ஆனேறும் சகடமும் தேரும்
அவனியும் வையம் எனப் பெயராகும்"

இத்தொகுதியில் திவாகரர் ஒவ்வொரு சொல்லுக்குமுரிய பொருட்களை விளக்குங்கால், சிறப்பும், மதிப்புமிக்க பொருட்களை வரிசைப்படுத்திப் பொருளுரைத்துள்ள முறை குறிக்கத்தக்க வொன்றாகும். மேற்குறித்த நூற்பாக்கள் இம்முறையில் விளக்கப்பட்டுள்ளன.

மேலும், இத் தொகுதியின்கண் இடம்பெற்றுள்ள, முந்நூற்று எழுபத்தேழு சொற்களும், அகரவரிசைப் படுத்தப்பட்டு எடுத்துக்காட்டுகளுடன் மேலே காட்டியவாறு "ஆதியிற் பொருள்", "அந்தத்துப் பொருள்" என்னும் முறைப்படி விளக்கப்பட்டுள்ளது. இனி, இத் தொகுதியிலுள்ள சிறப்புமிகு சொற்களை, எடுத்துக் காட்டுகளுடன் காண்போம்.

## அடுதல் குறித்த சொற்பொருள் விளக்கம் :-

அடுதல் என்னும் சொல்லுக்குச் சமைத்தல், கொல்லுதல் (கோறல்) என்னும் இருவேறு பொருட்கள் தரப்பட்டுள்ளன. சமைத்தல் என்றாலே, ஆடு, கோழி முதலியவற்றின் உயிரைப் பறித்தலே என்று திவாகரர் கூறுகிறார்.

"அடுதல் சமைத்தலும் கோறலும் ஆகும்"

ஆடு, கோழி முதலியவற்றின் ஊன்தடியைச் சுட்டும், வாட்டியும் உட்கொள்ளுவதென்பது, மற்றொன்றைக் கொன்று வயிறு நிறைக்கும் தொடக்க நிகழ்வு மட்டுமின்றி, அன்றாட நிகழ்வுமாம். மேலே குறித்துள்ள நூற்பாவின் படி, உணவு சமைத்தல் என்றால், உயிர்களைக் கொல்லுதல் - மற்றும் கொன்று பதம் செய்தல் என்பதே, பொருளாகும். அக்காலத்தே ஊனுணவாயினும், மரக்கறி உணவாயினும், பச்சையாகவே உட்கொண்டனர். இக்காலத்தே தான் நாம் வேகவைத்து உண்ணுகிறோம். அடுதலைச் செய்யும் புலால் உணவாயினும், புல்லுணவாயினும், ஏனைய உயிர்களைக் கொன்று சமைத்தலேயாகும். இவ்வாறு அடுதல் என்னும் சொல், குமுகாய வாழ்வியல் பொருண்மைகளைத் தன்னகத்தே கொண்டு விளங்கும் பான்மையில், திவாகரரால் குறிக்கப்பட்டதெனலாம்.

## "கடி" என்னும் சொல் பயக்கும் பொருளாவன :

கடி என்னும் சொல்லுக்குப் பன்னிரு பொருள் செய்துள்ள தொல்காப்பியரை அடியொற்றி, திவாகரரும் பன்னிரண்டு பொருட்களை உரைத்துள்ளார்.

தொல்காப்பியம்

"கடியென் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே
அச்சம் முன்றேற்று ஆயீரைந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டாகும்மே"
(தொல். 866)

"ஐயமும், கரிப்பும் ஆகலும் உரித்தே"
(தொல். 867)

"கடியென் கிளவி, காப்பே, கூர்மை,
விரையே, விளக்கம், அச்சம், சிறப்பே,
வரைவே, மிகுதி, புதுமை, தோற்றம்,
மெய்படத் தோன்றும் பொருட்டாகும்மே
ஐயமும், கரிப்பும் ஆகலும் உரித்தே"

தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள இப்பொருண்மைகள், திவாகரத்திற்குப் பின்னர் வந்த அனைத்து நிகண்டுகட்கும், எல்லா அகரமுதலிகட்கும் பேருதவி புரிந்தன. "இந்நிகண்டுப் பொருட்களைப் பார்த்தே, இக்கால அகராதியினர், சொற்பொருள் விளக்கம் செய்துள்ளனர்" என்பார் சுந்தர சண்முகனார்.

"கேள்வியே கல்வியாகும்" புதியன கற்றுத் தெரிந்து கொள்வது மட்டும் கல்வியன்று; கற்றறிந்த அறிவுடையார்மாட்டுக் கேட்டுத் தெரிந்து கொள்வதும், கல்வியே என்பார் திவாகரர். கேள்வி என்னும் சொல்லுக்கு, காதால் கேட்கும் கேள்வியறிவு என்னும் பொருளோடு, கல்வி என்னும் பொருளும் திவாகரத்தில் இடம் பெற்றுள்ளது.

"கேள்வி கல்வியும் செவியும் கிளக்கும்"

திவாகரர், "கற்றில னாயினும் கேட்க" என்னும் திருக்குறளை அடிப்படையாகக் கொண்டே, மேற்குறித்த நூற்பாவினை இயற்றியுள்ளார். கல்வி, கேள்வி என்னும் பொருண்மையில், "கற்றல் கேட்டல் உடையார் பெரியார்" எனும் திருஞானசம்பந்தரின் தேவாரப்பகுதியும், ஈண்டு ஒப்புநோக்குதற்குரியது. கல்வி உளநூல், வளர்ச்சி பெற்றுள்ள இக்காலத்தில் (Educational Psychology) கேட்டுத் தெரிந்து கொள்ளுதல், ஐம்புலப்பயிற்சிக் கல்வியில் ஒன்றாகக் கருதப்படுகிறது (sense training).

## கொற்றம் – (Politics) :

கொற்றம் என்னும் சொல்லின் பொருட்களாக அரசியல், வெற்றி என்னும் சொற்கள் குறிக்கப் பட்டுள்ளன. கொற்றவன் என்பது, மன்னன் என்னும் பொருள்தரும் இலக்கியவழக்குச் சொல்லாகும். அரசை ஆள்பவனே அரசன். அரசன் இயல்பும், கடமையும் உரைப்பதே அரசியல் என்னும் சொல்லின் பொருளாகும்.

அரசு + இயல் – அரசியல்
இயல் = தன்மை, முறை

அரசனின் கடமையையும், அவன் பெற்ற வெற்றியையும் குறிப்பதே கொற்றம். இதைத் திவாகரர்,

"கொற்றம் அரசியலும் வெற்றியும் ஆகும்" என்று உரைத்துள்ளார்.

## குழையும் – குண்டலமும் – தோடும் – பனையிதழும்

பண்டைக் காலத்தே மக்கள் இயற்கையாகக் கிடைத்த தென்னை, பனை ஓலையைக் காதுகளில் அணிந்து வந்தனர். இன்றும் அம்மனுக்குக் காதோலை, கறுப்புமணி வைத்துச் சூட்டும் பழக்கம், சிற்றூர்ப்புறத்தே காணப்படுகிறது. அக் காலத்தே மக்கள் இயற்கை தந்த பூக்கள், பூவிதழ்கள், தளிர்கள், ஓலை போன்றவற்றால் குழை, குண்டலம், தோடு செய்து காதுகளில் அணிந்து மகிழ்ந்தனர். "ஓலை" என்பதே "காதோலை" என்னும் காதணியைக் குறிக்கும். காலப்போக்கில் வெயிலாலும், மழையாலும் மேற்குறித்த இயற்கைக் காதணிகள் பழுதுபட்டதால், பொன், வெள்ளி முதலியவற்றாலாகிய அணிகலன்களை அணியத் தலைப்பட்டனர். விலையுயர்ந்த பொன், வெள்ளியில் அணிகலன்கள் செய்து அணிந்தஞான்றும், பழைய பெயர்களை மறவாது, விலைமதிப்புடைய காதணிகளை ஓலை என்றும், தளிர் என்னும் பொருளுடைய குழை என்றும், இதழ், ஓலை என்னும் பொருண்மைமிக்க காதணியைத் "தோடு" என்றும், பெயரிட்டு இன்றுவரை வழங்கி வருகின்றனர். இக் கருத்தினை விளக்கும் திவாகரம் வருமாறு :

"குழையே, குண்டலம், தளிர், சேறும் ஆகும்"

"தோடே, தொகுதியும், பனையிதழ் போல்பவும்
பூவின் இதழும் புகலும் கிளவி"

கி.பி. 8 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த திவாகரர், தமக்கு முற்பட்ட காலத்தைச் சார்ந்த, தேவாரம், திருவாசகம், நாலாயிரத் தெய்வப்பனுவலிற் காணப்படும் தோடு, குழை,

செவிப்பூ போன்ற பொருள்களை உள்ளத்தில் கொண்டே, மேற்குறித்த நூற்பாவினை இயற்றியுள்ளார் எனலாம்.

(எ.கா.) "தோடுடைய செவியன்" – திருஞானசம்பந்தர்

"............... தோடே செவிப்பூவே" – ஆண்டாள்.

"காதார் குழையாட" – மாணிக்கவாசகர்

**ஞெள்ளல் :** பொதுவாக ஞகர வரிசையில் சொற்கள் மிகக் குறைந்தே காணப்படும் நிலையிலும் "ஞெள்ளல்" என்னும் சொல்லுக்குத் திவாகரர் சுட்டும் பொருண்மைகள் அனைவர்தம் கருத்தையும் ஈர்க்கும் வண்ணம் அமைந்துள்ளன.

(எ.கா.) "ஞெள்ளல், தெருவே, மேன்மையும் நிகழ்த்தும்"

"சோர்வு, மிகுதல், உடன்படல், படுகர்,
நாலினோடு ஒலியும், தெருவும், ஞெள்ளல்"

– என்று அந்தத்துப் பொருட் பகுதியில் திவாகரர் விளக்கியுள்ளார்.

**நூலே – கணிதம் :** பண்டைய வாழ்வியலில் கணிதம் நன்கு வளர்ச்சி பெற்றிருந்தது. "நூல்" – என்றால் – "எண்" எனப்படும் கணிதக்கலை. நினைவுக்கு வருமள விற்குக் கணிதம் மக்களிடையே வழக்கூன்றியிருந்தது. இதனைத் திவாகரர்,

"நூலே, எண்ணும், பனுவலும் ஆகும்"

என்னும் நூற்பாவில் விளக்கியுள்ளார்.

"மா" என்னும் ஓரெழுத்து மொழி பற்றி.. " ம ா " என்னும் ஓரெழுத்துச் சொல்லிற்குத் திவாகரர், ஆறு பொருட்களைக் குறிப்பிட்டுள்ளார்.

(எ.கா.) "மாவே, பெருமையும், கருமையும், சூதமும்,
மேவிய நாற்கால் உடையவும் வண்டும்
பூவுறை திருவென ஆறையும் பொருந்தும்"

(சூதம் = மாமரம், நாற்கால் உடைய = விலங்குகள், பூவுறைதிரு = தாமரைப் பூவில் உறையும் திருமகள்)

## "அரி" யென்னும் சொல் பயக்கும் பொருளாவன :

"அரி" என்னும் சொல்லுக்குத் திவாகரர், இருபத்து மூன்று பொருட்களை அமைத்ததோடு மட்டு மின்றி, எவையெவை தமிழ்ப் பொருட்கள் – எவையெவை வடமொழிப் பொருட்களென்று பகுத்தும் கூறியுள்ளார். அரியென்னும் தூய தென் சொல்லிற்குத் திவாகரர், பதினைந்து பொருள்களையும், எட்டுப் பெயர்களை வடமொழிப் பொருள்களாகவும், குறித்துள்ளமை வருமாறு :

கண்வரி, கடல்பொன், கிண்கிணிப் பெய்பரல்
பொன்னிறம், குதிரை, தவளை, குரங்கு
பகைவாள், சயனம், வலிவண்டு, வெம்புகை
எனப்பதி னைந்தும் அரியெனப் புகல்ப,
சிங்கம், திருமால், திகிரி, இரவி,
இந்திரன், காற்றே, யமனே, அங்கி என்று
அங்கண் வடமொழிச் சிதைவின் அரியாகும் –

இந்நூற்பாவில் திவாகரர் வடமொழிப் பொருளாக காற்று என்பதனைக் குறித்துள்ளார். காற்று என்பது தமிழ்ச்சொல்லாகும். தமிழ்ப் பொருளாகக் குறித்த சயனம் என்பது வடமொழிச் சொல்லாகும். அரி என்னும் சொல் தமிழ் இலக்கியங்களில் பொதுவாகப் பல்வகைப் பொருள்களில் பயின்ற ஞான்றும், சிறப்புப் பொருள்களையே திவாகரர் குறித்துள்ளார். திவாகரர் பொருள் விளக்கம் செய்துள்ள பாங்கு, நிகண்டு நூற்பாக்களை நெட்டுருச் செய்வோர், முட்டின்றிப் பொருள் புரிந்து, நிகண்டினைப் பயன்கொள்ளுதற் பொருட்டேயெனலாம்.

## "கிழி" என்னும் சொல் குறிக்கும் சிறப்புப் பொருண்மைகள் :

பெரிய துணியிலிருந்து கிழிக்கப்பட்ட துண்டுப் பகுதியே "துணி" என்னும் பொருண்மையில், "கிழி" என்று முதற்கண் பெயர் பெற்றது. அடுத்து இத்துண்டுக் கிழி(துணி)யில், எழுதப்படும் ஓவியமும், "கிழி" என்று வழங்கப்பட்டது. கிழிக்கப்பட்ட துண்டுத் துணியில் எழுதப்பட்ட ஓவியமே, பின்னாளில், "படம்" என்னும் பெயர் பெற்றது. பெரிய துணியிலிருந்து துண்டிக்கப்பட்ட துணியில் அல்லது கிழியில் கட்டப்பட்ட சிறிய பொற்காசு மூட்டையும், "கிழி" என்று பெயர்பெற்றது. இப் பொருண்மைகளை உள்ளடக்கியே, திவாகரர்

"எழுது படமும் இருநிதிப் பொதியும்
கிழிபடு துகிலும் கிழியெனற் குரிய" என்று

குறித்துள்ளார்.

ஒரு சொல் பல்பொருள் தொகுதியான, இப்பதினோராந் தொகுதி தமிழகரமுதலி வரலாற்றில் அகரமுதலி அமைப்பில், அகரவரிசைப் படுத்தப்பட்டுச் செம்மையாக அமைக்கப்பட்டிருத்தலால் சொற்பொருள் வளர்ச்சியினை ஆய்வு செய்வாருக்கு மிகமிக அடிப்படையாகத் திகழ்கிறது.

## "கூழ்" – என்னும் சொல்லின் சிறப்புகள் :

பல்வகை உணவுகட்கும், "கூழ்" என்னும் பொருண்மைகளில், இச்சொல் ஆளப்பட்டுள்ளது. பயிர்

தானே உணவுப் பொருளாக மாறுவதால், “கூழ்” எனல், சாலப்பொருந்துமெனலாம். இன்றைய உலகவழக்கில், பல்வகைத் தவசங்களின் மாவு முதலியவற்றால் குழையச் சமைத்த உணவுவகை “கூழ்” என்றழைக்கப்படுகிறது. பண்டைக் காலத்து மக்களும், பல்வகைக் கூலங்களை இடித்து மாவாக்கித் துழவி, அப்படியே உண்டனர். இதுவே அன்றைய சமையல் முறை. உணவு என்றால் கூழ், கூழ் என்றால் உணவு என்ற நிலை அன்று இருந்தது. காலப்போக்கில் பல்வகை உணவுகள் – சிற்றுண்டிகள் பல்கிப் பெருகிய ஞான்றும், தவசங்களை இடித்து நசுக்கிய மாவால் ஆகிய நீருணவு மட்டும், பழமையைத் தக்கவைத்துக் கொள்வது போல், இன்றும் “கூழ்” என்னும் பெயரிலேயே வழங்கி வருகிறது. அற்றை நாள் தொடங்கி, இற்றை நாள் வரை, புலவர் நாவிலும், அன்றாட மக்கள் வழக்கிலும், பொருந்திய சொல்லாக உணவு என்னும் பொருண்மையில், “கூழ்” வழங்கி வருகிறது. இன்றும், சென்னை மாநகரில், “கூழ் வார்த்தல்”, “கூழ் ஊற்றுதல்” என்னும் சொல்லாட்சிகளில் உணவு என்னும் பொருண்மையில், இச் சொல் வழக்கூன்றியுள்ளது. திவாகரர் “கூழ்” என்னும் சொல்லைச் சிறப்பிக்குங்கால்,

“பல்வகை உணவும், பயிரும், பொன்னும்
கொள்ப மாதோ கூழென் என் கிளவி”

என்று மூவகைப் பொருண்மைகளைக் குறிப்பிட்டுள்ளார். மேற்குறித்த நூற்பாவில் கூழ் என்னும் சொற்குப் “பொன்” என்ற பொருளும் சுட்டப்பட்டுள்ளதால், பழங்காலத்தில் “பொன் நாணயம்” புழக்கத்திலிருந்தது என்பதும், உணவுப் பொருளுக்காகப் பொன்னைக் கொடுத்த நிலையும் நன்கு புலப்படும். “பெரும்பாலான மக்கள் நாள்தோறும் பொன் கொடுத்து வாங்கும் பொருள் உணவுப் பொருள் மட்டுமேயாகும். எனவே, “பொன்னின பயனாக உணவுப் பொருள் வாங்கும் நோக்கமே, முனைப்புற்றிருந்ததால், பொன்னும் “கூழ்” எனப்பட்டது. ‘இந்தப் (சம்பளப்) பணத்தைக் கொண்டுதான், நாங்கள் இத்தனை பேரும் சாப்பிடவேண்டும்’ என்னும் உலக வழக்கில், பணத்துக்கும், உணவுக்கும் தொடர்பு, காட்டப்படுவதையும் ஈண்டு ஒப்பு நோக்குக” என்பார் சுந்தர சண்முகனார்.

**கலையில் வல்லவர் புலவர் :–** ஒவ்வொரு கலையிலும் வல்லவரைத் திவாகரர் புலவர் என்று அழைக்கிறார். பொதுவாகப் “புலவர்” என்பவர் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் துறைபோயவர். அஃதாவது பாப்புனைவதில் வல்லவர் என்ற பொருண்மையே மிகுதியாகக் காணப்படுகிறது. ஆனால் திவாகரர், கலை வல்லாரைப் புலவர் என்று குறித்துள்ளார்.

(எ.கா.) “அமரரும், கவிஞரும், ஆடுநரும், பாடுநரும்,
பொருநரும், அறிஞரும், புலவர் எனப்படுமே”
(அமரர் = தேவர்; பொருநர் = போர் மறவர்)

புலவர் என்னும் சொல்லால், அறுவகையினரைக் குறித்துள்ளார் திவாகரர். தேவருக்கும் இப்பெயர் உண்டு என்பது குறிக்கத்தக்கவொன்றாகும். பண்டைக்காலத்தே போரில் பெறும் வெற்றியை, “வாகை” என்னும் பெயரால் அழைத்தனர்.

## அறத்துறை வெற்றியும் – வாகையே யாகும் :

ஒரு துறையில் பெறுகின்ற வெற்றி மட்டும் வெற்றியன்று. பண்டைக்காலத்தே போரில் பெறும் வெற்றியை, “வாகை” என்னும் பெயரால் அழைத்தனர். போரில் வெற்றிபெற்ற மறவர் வாகைப் பூவைச் சூடிக்கொள்ளுதல் மரபாகும். ஆனால் திவாகரர் வாழ்வியல் துறைகள் அனைத்திலும் பெறுகின்ற வெற்றியை வாகையென்னும் பெயரால் அழைக்கிறார். தற்காலத்தே சிறு சிறு போட்டிகளிற் பெற்ற வெற்றியை, “அவர் வாகை சூடினார்” (அவர் வெற்றி பெற்றார்) என்னும் பொருண்மையில் கூறுதல் வழக்காறாகி விட்டது. போரில் பெறும் வெற்றி, போட்டியில் கிட்டும் வெற்றி – முதலானவையெல்லாம் வெற்றியன்று; உழைப்பு, கல்வி, பண்பு, கொடை, ஒழுக்கம், தவம், அறச்செயல்கள் முதலான நற்செயல்களிலெல்லாம், மற்றையோரினும் முதன்மை பெற்றுத் திகழ்வதே வாகையாகும். இந்த அரும்பெருங்கருத்தைத் திவாகரம், வாழ்வியலின் நற்செயற்பாடுகளின் வெற்றியுடன் இணைத்துத் தெரிவித்திருப்பது வருமாறு :–

“ஆள்வினை முதலாம் செய்கையும் நலனும்
கைவலம் முதலாம் கல்வியும் ஆண்மையும்
சால்பு முதலாம் பண்பும் ஈகையும்
ஒழுக்க முதலாம் தவமும் அறத்துறையும்
ஒருவரின் ஒருவர் வென்றியும் மிகுதியும்
வருவன எல்லாம் வாகையென்னும் பெயர்”

இந்நூற்பாவின் வாயிலாக, மறத்துறையில் கிட்டும் வாகையைக் காட்டிலும், அறத்துறையில் பெறும் வாகையே அளப்பருஞ்சிறப்பினது என்ற திவாகரர்தம் கொண்முடிபு, எஞ்ஞான்றும் மன்பதையில் நின்று நிலவும் தன்மைத்து எனலாம்.

## தன்னேரிலாத் தமிழ்மொழியின் சிறப்புப் பற்றித் திவாகரர்

இவ்வொரு சொல் பல்பொருள் தொகுதியில் தமிழகரமுதலி வரலாற்றில், கி.பி.எட்டாம் நூற்றாண்டில் திவாகரர், தமிழின் சிறப்புகளைச் செப்புமுகத்தான், "வாழித்தமிழ்" என்றும், "கன்னித்தமிழ்" என்றும் புகழ்கிறார். "கம்பலை", "மடங்கல்" என்னும் இரு சொற்களையும் தமிழர் இன்னின்ன பொருள்களில் வழங்குவரென்று குறிப்பிடுவதன் வாயிலாகத் தமிழைச் சிறப்பித்து, திவாகரரும் சிறப்பெய்துகிறார் எனலாம். அவர்தம் மொழிப்பற்றை வெளிப்படுத்தும் பாடல் வருமாறு:-

"இன்னாங் கோசை நடுக்கம் அச்சம்
கன்னித் தமிழோர் கம்பலை என்ப" என்றும்

"ஊழித்தீ, சிங்கம், உகமுடிவு, இடியென
வாழித் தமிழோர் மடங்கல் என்ப
கொடுங்கூற்றின் பெயரும், நோயும் கூறும்"

இத்தொகுதியின் இறுதியில், தமக்கு நல்லாதரவு நல்கியோனை,

"மலை, சுமை, பாரம், அம்பல் சேந்தனோடு
உலவிய பொறுமை, பார், ஐந்தும் பொறையே"

என்று பாடி, அளவிடற்கரிய பொறுமையின் பெட்டகமாகச் சேந்தனைப் புகழ்கின்றார்.

அகரமுதலி வடிவிலமைந்த இப்பதினோராந் தொகுதி, தமிழகரமுதலி வரலாற்றின் கி.பி.8 ஆம் நூற்றாண்டிலேயே கற்றறிவாரனைவராலும், விரும்பிக் கற்கப்படும் தொகுதியாகவும், கல்வியாளர்களால் மனனம் செய்து மாணவர்க்கு அறிவு புகட்டும், வாழ்வியல் தொகுதியாகத் திகழ்ந்தது. "பதினோராந் தொகுதியைப் பதினோராம் நிகண்டு' என ஒரு தனி நிகண்டே போல் குறிப்பிடும் வழக்கமும், அன்று இருந்தது. இதிலிருந்து, இத் தொகுதியின், சீர்மையும், பரந்த பயனும் நன்கு புலப்படும்" என்பார் சுந்தர சண்முகனார்.

## பல்பொருள் கூட்டத்து ஒருபெயர்த்தொகுதி அல்லது தொகையகராதி

பல்பொருள் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதிக்குப் பிற்காலத்தோர் "தொகையகராதி" யெனப் பெயர் சூட்டியுள்ளனர். இத்தொகுதி, ஐம்பொறி, முக்காலம், முப்பத்திரண்டு அறம் முதலான, எண்குழுப் பெயர்களில் அமைந்துள்ளவை, எவையெவை யென்று தெரிவிக்கும் பகுதியாகும். நிகண்டுகளின் முப்பெருந் தொகுதிகளுள் மூன்றாவதாக இத்தொகுதி அமைந்துள்ளது. முதல் பத்துத் தொகுதிகளை உள்ளடக்கிய, "ஒரு பொருள் பல் பெயர்த் தொகுதி" மற்றும் பதினோராந் தொகுதியான, "ஒரு சொல் பல்பொருள் பெயர்த் தொகுதி யென்னும் இரண்டு தொகுதிகளினின்று, முற்றிலும் வேறுபட்ட அமைப்பிற் காணப்படுகிறது. ஐம்பொறி என்னும், ஒரு பெயரின் கண்ணே அமைந்த ஐந்து என்னும் தொகை, "மெய், வாய், கண், மூக்கு, செவி" என்னும் பல பொருள்களின் கூட்டத்தைக் குறிப்பிடுவதால் இப்பகுதியைப், "பல் பொருள் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதி" என்று திவாகரர் குறிப்பிடுகிறார்.

இப்பன்னிரண்டாந் தொகுதியிலமைந்துள்ள சிறப்புச் செய்திகள் வருமாறு :-

**ஒன்று :** ஒன்று என்னும் எண்ணுப் பெயருக்குத் திவாகரர் வீடுபேறு என்று பொருளுரைத்துள்ளார். இவ் "வீடுபேறு" என்னும் பொருள் தனக்குவமை இல்லாதது. ஈடிணையில்லாத் தனித்த பெருமை உடையது.

"ஒன்றென் பதுவே வீடுபேறாகும்" என்று உயிர் வாழ்க்கையின் ஒப்பற்ற ஒரே பயனாகத் திவாகரர் குறித்துள்ளார்.

**இருவகையறம் :** இல்லறமும், துறவறமும் தமிழர்தம் இருவகை வாழ்வியல் அறங்களாகும். வள்ளுவப் பெருந்தகையும் இவ்விரு நெறிகளையே இல்லறவியல், துறவறவியல் என்னும் இரு பிரிவுகளில் விளக்கியுள்ளார். திவாகரர் இருவகையறம் பற்றி இயம்புங்கால், "இருவகை அறமே இல்லறம் துறவறம்" என்பார்.

**இருவகைப் பொருள்கள் :** குமுகாயத்திலுள்ள ஒவ்வொரு மனிதனுக்கும் இன்றியமையாது வேண்டப்படும் இரு கண்கள் போன்று அமைந்திருப்பது, கல்வியும், செல்வமுமாகிய இருவகைப் பொருள்கள் என்று திவாகரர் கூறுவது வருமாறு :-

"இருவகைப் பொருள் கல்விப்பொருள், செல்வப் பொருள்" என்று கல்லாத செல்வர்கள் நன்குணரும் வண்ணம், இவ்வையகத்தில் வாழ்வாங்கு வாழ்வதற்குரிய, முதன்மை வாழ்வியல் பொருளாகக் கல்வியைக் குறிப்பிட்டுள்ளார்.

**ஐம்பொறி :** தொகையகராதி என்று அகராதி வல்லுநர்களால் சிறப்பிக்கப் பெறும் பல்பொருள் ஒரு பெயர்த்தொகுதியில், தொன்றுதொட்டு எல்லாப் புலவர்களும் பேசுவது போன்று ஐம்பொறி பற்றிக் குறித்துள்ளது வருமாறு :-

"மெய், வாய், கண், மூக்கு, செவி, ஐம்பொறியே"

ஆனால் இக்கால உளவியல் அறிஞர்கள், உடல் – தசையின் இயக்கத்தையும் சேர்த்து, "இயக்கப் பொறி" (kinaesthetic) என்னும் பெயரிட்டு "பொறிகள் ஆறு" என்று பேசுகின்றனர்.

**ஐவகைத்தாயர் :** திவாகரர்,

"பாராட்டுந் தாய், ஊட்டுந்தாய், முலைத் தாய்
கைத்தாய், செவிலித்தாய், ஐந்தெனக் கழறுவர்"

என்று தாயரைப் பகுத்துள்ள பாங்கு தமிழகரமுதலி வரலாற்றில், நிகண்டு செய்பொருளாய் நின்று நிலவுகின்றது.

**அறுவகைப்படை :** படைகளை நால்வகையாகப் பகுத்துக் கூறுவது பண்டைய மரபாகும். காலாட்படை, தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை என்னும் மரபினுக்கு மாறாக அறுவகைப் படைகளைத் திவாகரர், அறைகுவார். அவை,

"வேல்தானை, வாள்தானை, வில்தானை, மேலோர்
தேர்த்தானை, பரித்தானை, களிற்றுத்தானை, என
ஆற்றல் சான்ற அறுவகைத் தானை"

காலாட்படையொன்றனையே, வேல்தானை, வாள்தானை, வில்தானை என முப்பிரிவாய் விரித்துள்ளமை புலனாகும். இருபதாம் நூற்றாண்டில் நிலப்படை, நீர்ப்படை, வானப்படை என்னும் இவற்றுடன் மலைப்பயிற்சிப் படையையும் சேர்த்து, இக்காலத்தும் படைகளை நான்கு பிரிவாகப் பகுக்கலாம்.

**அரசுறுப்புகள் ஆறு :** கிறித்துவிற்கு முன்பே, அரசனுக்கு இன்றியமையாது அடிப்படையாக வேண்டப்படும் ஆறு உறுப்புகளாக

"படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசரு ளேறு" (திருக். 381)

என்று திருவள்ளுவர் தெளிவாக்கியுள்ளது போல், தமிழகரமுதலி வரலாற்றில் கி.பி.8–ஆம் நூற்றாண்டில் திவாகரரும், முன்னோர் மொழியைப் பொன்னேபோல் போற்றும் பான்மையில், தமது மொழியிலக்கண நூலாகிய திவாகரத்தில்

"படையும், குடியும், கூழும், அமைச்சும்
அரணும், நட்பும், அரசியல் ஆறே"

என்று சுட்டியுள்ள திறன் போற்றத்தக்கது.

மேலும் திவாகரர், கி.பி. 8– ஆம் நூற்றாண்டில் வழங்கிய பதினெண் மொழிகளைப் பற்றியும், முப்பத்திரண்டு அறங்கள் குறித்தும் இத்தொகுதியில் விளக்கியுள்ளார்.

## பகுத்தறிவு விலங்குகட்கும் உண்டு!

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐம்புலன்கள் வழியாய் அறிவதாம் மன அறிவாகிய பகுத்தறிவையும் சேர்த்து, ஆறறிவுடையவர்களாகக் குமுகாய மாந்தர்களைக் குறிக்கும் மரபு, தொன்று தொட்டு வழங்கி வருவதாகும். ஆனால் முதற்கண் திவாகரர், மக்களையும் விலங்குகளையும் ஐந்தறிவு உயிர்களாக தெளிவுறுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கது. பின்னர், "மன அறிவாகிய ஆறாவது அறிவும் மக்களுக்கு உண்டு என்றும், அந்த ஆறாவது அறிவு, ஒரு சில விலங்குகட்கும் உண்டு" என்பார் சுந்தர சண்முகனார்.

"உற்றறி புலன், நா, மூக்கொடு, கண், செவி.
மக்களும், மாவும் ஐந்தறி வினவே"

"மனத்தோடு ஆறறி வினரே மக்கள்
ஒருசார் விலங்கும் அதுபெறற் குரித்தே"

இற்றை நாள்போன்று அற்றைக் காலத்தும், மக்களுள் சிலர் – சிலரென்ன பலர் – பகுத்தறிவற்ற விலங்கே போல் நடந்து கொள்வது கண்டு, செய்தளித்த நூற்பாக்களே இவையெனலாம்.

குரங்குகட்குள்ளும் மனவுணர்வுடைய ஒருசில உளவென்று, கிறித்துவிற்கு முன்பே தொல்காப்பியர் உரைத்த பொன்மொழியை, கி.பி.8 ஆம் நூற்றாண்டில் திவாகரர் தம் வாழ்வியலில் கண்கூடாகக் கண்டு, உரைத்த நூற்பாக்கள் எனலாம். இது குறித்த தொல்காப்பிய நூற்பா வருமாறு:–

"மக்கள் தாமே ஆறறி வுயிரே
பிறவும் முளவே அக்கிளைப் பிறப்பே
ஒருசார் விலங்கு முளவென மொழிப"

இப் பல்பொருள் ஒரு பெயர்த் தொகுதியில் பேடியின் இயல்புகளை, இயற்கையாக உள்ளது உள்ளவாறே, இன்றைய நிலைக்கு ஏற்றவண்ணம் பதினாறு பாடல் வரிகளில் எழிலுறப் படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

## பிங்கல நிகண்டு

திவாகரரின் மைந்தரான பிங்கலரால் கி.பி.8 ஆம் நூற்றாண்டில், பிங்கலந்தை என்று சிறப்பிக்கப்பெறும் பிங்கல நிகண்டு இயற்றப்பெற்றது. [இவர் ஆதி திவாகரரின் மகனார் என்று, 1934 – இல் அபிதான சிந்தாமணி இயற்றிய, ஆ. சிங்கார முதலியார் கருதுகின்றார். புலவர் சுந்தர சண்முகனாரும், வ.செயதேவனாரும் இக்கருத்தினை மறுத்துரைப்பர்]. கி.பி.13 –ஆம் நூற்றாண்டில் நன்னூலை யாத்த பவணந்தி முனிவரும், கி.பி.16–இல் அகராதி நிகண்டினை இயற்றிய சிதம்பர இரேவண சித்தரும் பிங்கலந்தையின் சிறப்புப் பற்றித் தமது நூலுட் பேசியுள்ளனர். இந் நிகண்டு சேந்தன் திவாகரத்தை விட மிகுதியான சொற்களஞ்சியத்தைக் கொண்டது. கி.பி.1890 ஆம் ஆண்டு சிவன்பிள்ளை என்பவரால் பதிப்பிக்கப்பட்டது.

சேந்தன் திவாகரம் இயற்றிய, திவாகரரின் மைந்தரே பிங்கலர் என்பதைப் பிங்கல நிகண்டின் சிறப்புப்பாயிரச் செய்யுளில்,

(எ.டு.) "செங்கதிர் வரத்தால் திவாகரன் பயந்த
பிங்கல முனிவன் எனத்தன் பெயர் நிறீஇ"

என்று நிறுவியுள்ளார்.

### பிங்கலத்தின் சிறப்புப் பற்றி ஏனைய நிகண்டாசிரியர்தம் செய்யுட்கள் வருமாறு:–

1. கி.பி. 13 – ஆம் நூற்றாண்டில் பவணந்தியார் கூறுவது :–

................ பிங்கல முதலா
நல்லோரு ரிச்சொலி னயந்தனர் கொளலே"
(நன். 460).

2. கி.பி.15 – ஆம் நூற்றாண்டில் (1520) புகழ் பெற்ற சூடாமணி நிகண்டினை யாத்த மண்டல புருடர்

(i) "செங்கதிர் வரத்தால் தோன்றும் திவாகரர்
சிறப்பின் மிக்க
பிங்கலர் உரை நூற்பாவில் பேணினர் செய்தார்"

(ii) "வருமுறை திவாகரம் போல்
வைத்துப் பிங்கலந்தை தன்னில்" என

இருவேறிடத்தும் புகழ்ந்துள்ளார்.

3. கி.பி. 1591 இல் அகராதி நிகண்டினை இயற்றிய புலியூர் இரேவணசித்தர், தமது தற்சிறப்புப் பாயிரத்தில்,

"தெரிதரு பிங்கலம் திவாகரம் முதலாய்ப்
பரவிய நிகண்டு பலவெடுத்து ஆராய்ந்து"

எனத் திவாகரத்திலும் பிங்கலத்திற்கே, இரேவண சித்தர் முதன்மை செய்துள்ளார்.

4. கி.பி. 17–ஆம் நூற்றாண்டில் ஆசிரிய நிகண்டு இயற்றிய ஆண்டிப் புலவர், தமது முன்னுரைப் பாயிரத்தில்,

"முந்துள திவாகரம் பிங்கல நிகண்டு"

எனப் பிங்கலம் பற்றிப் பேசியுள்ளார்.

மேற்குறித்த பிற நிகண்டாசிரியர்தம் கூற்றுகள், பிங்கலந்தையின் சிறப்பைப் பறைசாற்றுகின்றன எனலாம்.

### பிங்கலத்தின் காலமும், சிறப்பும் :–

புலவர் சுந்தர சண்முகனார் தமது "தமிழ் அகராதிக் கலை" என்னும் நூலுள், 169 – ஆம் பக்கத்தில், பிங்கலரின் காலம் கி.பி.8 – ஆம் நூற்றாண்டு என்று குறிப்பிட்டுள்ளார். இந் நிகண்டு "கி.பி.10 – ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது" (தா.வே.வீராசாமி. 1991, பக்.70). "தெரிதரு பிங்கலம்" என்று கி.பி.16 – இல் புலியூர் இரேவண சித்தரும், "பிங்கலம் முதலா" (நன்.460) என்று பவணந்தியாரும், கி.பி. 13 இல் குறிப்பிட்டுள்ளதால், பிங்கலம், திவாகரத்தினும் சிறந்ததென்றும், முந்தியதென்றும், அகராதி வல்லுநர் கருதுகின்றனர்.

திவாகரத்தில் 9500 சொற்களே இடம் பெற்றுள்ளன. ஆனால், அவரது மைந்தரியற்றிய பிங்கலந்தையில் 4121 நூற்பாக்களில், சற்றொப்ப 15,800 சொற்கள் விளக்கம் பெற்றுள்ளன. நிகண்டுகளின் முப்பெருந்தொகுதிகளுள், முதலிரு தொகுதிகளான, "ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதி", "ஒரு சொல் பல்பொருள் பெயர்த்தொகுதி ஆகியவற்றைத் தன்னகத்தே கொண்டது. திவாகரத்திலும், பிங்கலமே பெரும்பாலோராற் பயிலப்பட்டது. திவாகரம் தொகுதியென்று மொழிந்தவற்றையெல்லாம், பிங்கலம் வகையென்று வகுத்துள்ளது. திவாகரத்தின் முதல் பத்துத் தொகுதிகளை, பிங்கலர் ஒன்பது வகைக்குள் அடக்கிவிட்டார். திவாகரத்தில் உள்ள இரண்டாம் பிரிவைச் சேர்ந்த, பதினோராவது தொகுதியைப் பிங்கலர் தமது நூலில் பத்தாவது தொகுதியாக அமைத்துள்ளார்" சுந்தர சண்முகனார். திவாகரத்தில் உள்ள மூன்றாம் இனத்தைச் சேர்ந்த, பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதியினைப் பிங்கலர் பேசாது விட்டுவிட்டார். பிங்கலர் வகுத்துள்ள பத்துவகைகள் வருமாறு :–

1. வான்வகை – ஏழுலகம், வீடு, மழை பற்றியது
2. வானவர் வகை – தெய்வங்கள் பற்றியது.
3. ஐயர் வகை – முனிவர், கவிஞர் மக்கள் பெயர் பற்றியது.
4. அவனி வகை – இடங்கள் பற்றியது
5. ஆடவர் வகை – திவாகரத்தின் மக்கள் தொகுதியை ஒத்தது.
6. அநுபோகவகை – வாழ்வில் துய்க்கும் பொருள் பற்றியது
7. பண்பிற் செயலின் பகுதி வகை – திவாகரத்தில் உள்ளது போல், மக்கள் பண்பு – செயல் – பற்றியது
8. மாப்பெயர் வகை – விலங்கின் பெயர்களைக் கூறுவது
9. மரப்பெயர் வகை – திவாகரத்தின் மரப்பெயர்த் தொகுதியை ஒத்தது.
10. ஒரு சொல் பல் பொருள் வகை – திவாகரத்தின் பதினோராந் தொகுதியைப் போன்றது.

முதல் ஒன்பது வகைகளை உள்ளடக்கிய, ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதியுள், ஒரே பொருளுக்குரிய பல்வகைப் பெயர்களை விளக்கியுள்ளார். பத்தாவது ஒரு சொல் பல்பொருள் வகையில் ஒரு சொல்லுக்கரிய அனைத்துப் பொருள்களைப் பற்றியும் விளக்கியுள்ளார். பிங்கலருக்குப் பின்வந்த நிகண்டாசிரியர்கள், பிங்கலந்தையின் 15,800 சொற்களின் – சொற்பொருள்களின் எண்ணிக்கையைக் கருத்திற் கொண்டு திவாகரத்தைவிட, பிங்கலத்திற்கு முதன்மையளித்துள்ளனரெனலாம்.

## நூற்பா ஒற்றுமை

நூலமைப்பிலும், சிறப்பிலும் திவாகரம் போலவே பிங்கலமும் அமைந்துள்ளது. இவ்விரு நிகண்டுகளும் நூற்பா நடையில் அமைந்த ஞான்றும், திவாகரத்திலுள்ள சில நூற்பாக்களைப் போலவே பிங்கலத்திலும் சில நூற்பாக்கள் அமைந்துள்ளன.

ஆறறிவுயிர்கள் குறித்துத் திவாகரரும், பிங்கலரும் ஒரே தன்மையில் நூற்பாக்களை யாத்துள்ளனர். எங்கோ ஒரு சொல் அல்லது ஓரிரு எழுத்துகளைத் தவிர, பெரும் வேறுபாடு ஏதுமின்றி, திவாகரரும், பிங்கலரும் நூற்பாக்கள் அமைத்ததற்கான எடுத்துக்காட்டுகள் வருமாறு:–

திவாகரம்

### ஓரறிவுயிர்

1. "உற்றறி புலனது ஒன்றே உடைமையின்
மற்றைப் புல்லும் மரனும் ஓரறிவே"

### ஈரறிவுயிர்

2. "உற்றறி புலனும் நாவும் உடைமையின்
அட்டையும் நந்துவும் போல்வ ஈரறிவே"

### மூவறிவுயிர்

3. "உற்றறி புலன், நா, மூக்கும் உடைமையின்
முற்பெறு சிதல் எறும்பு இனைய மூவறிவே"

### நாலறிவுயிர்

4. "உற்றறி புலன், நா, மூக்கொடு, கண்ணும்
பெற்ற வண்டும், ஞெண்டும் நாலறிவே"

### ஐயறிவுயிர்

5. "உற்றறி புலன், நா, மூக்கொடு, கண், செவி
மக்களும் மாவும் ஐந்தறி வினவே"

### ஆறறிவுயிர்

6. "மனத்தோடு ஆறறி வினரே மக்கள்
ஒருசார் விலங்கும் அதுபெறற் குரித்தே"

மேற்குறித்த ஆறு நூற்பாக்களும் திவாகரத்தில் உள்ளவை. இனி, மேற்காண் கருத்தமைந்த பிங்கல நூற்பாக்கள் வருமாறு :–

பிங்கலம் :

### ஓரறிவுயிர்

1. "உற்றறி புலனது ஒன்றே உடைமையின்
மற்றைப் புல்லும் மரனும் ஓரறிவே"

### ஈரறிவுயிர்

2. "உற்றறி புலனும், நாவும் உடைமையின்
அட்டையும் நந்தும் போல்வ ஈரறிவே"

### மூவறிவுயிர்

3. "உற்றறி புலன், நா, மூக்கும் உடைமையின்
முற்பெறு சிதல், எறும்பு, இனைய மூவறிவே"

### நாலறிவுயிர்

4. "உற்றறி புலன், நா, மூக்கொடு, கண்ணும்
பெற்ற வண்டு, ஞெண்டு, ஆதி நாலறிவே"

### ஐயறிவுயிர்

5. "உற்றறி புலன், நா, மூக்கொடு, கண், செவி
மக்களும், மாவும் ஐயறி வினவே"

### ஆறறிவுயிர்

6. "மனனோடு ஆறறி வினரே மக்கள்
ஒருசார் விலங்கும் அதுபெறற் குரித்தே"

மேற்காண் ஆறு பிங்கல நூற்பாக்களும், "பொதுவாக முன்னோர் மொழியை – சிறப்பாகத் தந்தை சொல் போற்ற வேண்டும் என்னும் மரபைப் பிங்கலர் பின்பற்றியுள்ளார்" என்பார் சுந்தர சண்முகனார்.

பிங்கல நிகண்டின் பற்பல இடங்களில் தந்தையின் சொத்தாகிய திவாகரத்தை, பிங்கலர் பின்பற்றியுள்ளார். சில சொற்களையும், அடிகளையும், கூட்டியும், குறைத்தும், இடம் மாற்றியும் புதுக்கியும் நூற்பாக்களைப் பிங்கலர் யாத்துள்ளார்.

## முறைமாற்றம் :

பிங்கலத்தில் உள்ள, "ஒரு சொல் பல்பொருள் வகை" என்னும் பத்தாம் பகுதிதான், தற்கால அகரமுதலிபோல், ஒரு சொல்லுக்குரிய பல பொருட்களைப் பகரும் பான்மையில் அமைந்துள்ளது. இப் பகுதியில், 1091 சொற்களுக்கான பொருளமைதிகளைப் பிங்கலர், அகரநிரலில் அடுக்கிக் கூறாது முன்னும் பின்னுமாக அமைத்திருந்தார். கி.பி.1890 இல் பிங்கலந்தையைப் பதிப்பித்த, சிவன்பிள்ளை பிங்கலரது வைப்பு முறையினை மாற்றி, 1091 சொற்களை அ–ஆ; க–கா என இக்கால அகரமுதலி அமைப்பில், அடுக்கிப் பதிப்பித்துள்ளார். காட்டாக, முதல் மூன்று நூற்பாக்கள் வருமாறு :–

(அகப்பா)

(1) "புரிசையும் உள்ளுயர் நிலமும் அகப்பா"

(அகம்)

(2) "மனமும் உள்ளும் மனையும் பாவமும்
புவியும் மரப்பொதுப் பெயரும் அகமே"

(அகலுள்)

(3) "ஊரும் நாடும் அகலுள் ஆகும்"

(வை)

(1089) "வைக்கோலும் கூர்மையும் பகுதியும் வை எனல்"

(வைகல்)

(1090) "தினமும் தங்கலும் தெரியின் வைகல்"

(வையம்)

(1091) "உரோகினி நாளும் பாரும் தேரும்
ஏறும் ஊர்தியும் வையம் எனப்படும்"

இக்கால அகரமுதலி அமைப்பில் அகரவரிசைப்படி சிவன்பிள்ளை பதிப்பித்தமையால், கற்போர் சொற்களுக்கான பொருட்களை, எளிதில் கண்டுகொண்டனர். இதனால் பின்னாளில் பலராலும், பிங்கலந்தை பயிலப்பட்டது.

## மக்கள் வாழ்வியலில் திவாகரரும், பிங்கலரும்

கி.பி. 8 ஆம் நூற்றாண்டில் மக்கள் துய்த்துப் பயன்கொண்ட வாழ்வியற் பொருள்களைப் பிங்கலர் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார். தமது தந்தையாராகிய திவாகரர், பல் பொருள் பெயர்த்தொகுதியிலும், செயற்கை வடிவப் பெயர்த்தொகுதியிலும், அன்றைய மக்கள் பல்லாற்றானும் பயன்கொண்டு துய்த்த உணவு, உடை, இசை, நாட்டியம் முதலான பல்வகைச் செய்திகளையும் அமைத்து நிகண்டு இயற்றியது போல், மைந்தராகிய பிங்கலரும் உண்டும் உடுத்தும், பிறவாறும் துய்த்த அனைத்து வகைப் பொருட்களையும், பிங்கலத்தின் ஆறாவது பிரிவான அநுபோக வகையில் குறிப்பிட்டுள்ளதன் மூலம், தமிழகரமுதலி வரலாற்றில், மக்களின் துய்ப்புநிலை பற்றிய வாழ்வியற் கூறுகள், திறம்பட இடம் பெற்றுள்ளன என்று, அகரமுதலி வல்லுநர்கள் கருதுகின்றனர். நிகண்டுகளின் முப்பெருங் கூறுகளுள், முதலிரு கூறுகள், திவாகரத்தில் தமது தந்தையார் அமைத்த நூற்பாக்கள் போலவே, பல இடங்களில் பிங்கலரும் அமைத்துள்ள பாங்கு, சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

குறிப்பாகத் திவாகரர் இரு தொகுதிகளிற் கூறியதைப் பிங்கலர் குறிப்பிட்டுக் காட்டும் வாழ்வியல் தலைப்புகள் வருமாறு:–

1. உணவின் வகை
2. பூணின் வகை
3. இரத்தின (மணி) வகை
4. உலோக (மாழை) வகை
5. ஆடைவகை
6. பூச்சு வகை
7. சூட்டு வகை
8. இயல் வகை
9. இசை வகை
10. நாடக வகை
11. மண்டில வகை
12. படை வகை
13. காலாள் வகை
14. தோற்கருவி வகை

15. குடை வகை
16. ஆயுத (படைக்கலன்) வகை
17. செயற்கை வகை
18. அக்குரோணி வகை
19. வெள்ள வகை
20. இல்லணி வகை.

வாழ்வியற் பொருண்மையிலும், சொல் வளத்திலும், திவாகரமும், பிங்கலமும் ஒத்த நிலையிலேயே அமைக்கப்பட்டிருந்தாலும், பிங்கலத்தின் வெள்ளத்தனைய சொற்பெருக்கத்தினை ஏனைய நிகண்டாசிரியர்களும், நிகண்டுப் பதிப்பாசிரியர்களும், மிகுதியாகக் குறிப்பிட்டுப் பேசியுள்ளனர். தமிழகரமுதலி வரலாற்றில், சொற்களை விரிவாகத் தெரிந்து கொள்ள வேண்டுமாயின், பிங்கலமே பெரிதும் உதவும் என்பது, கி.பி. 13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பவணந்தியார் கருதுகோளாகும்.

## நன்னூல்

திவாகரம், பிங்கல நிகண்டுகளின் முப்பெருந் தொகுதிகளில் அமைந்துள்ள கூறுபாடுகளைத் தன்னகத்தே கொண்டு திகழும் நூல் நன்னூல். தமிழகரமுதலி வரலாற்றில் சூடாமணி நிகண்டிற்கு முன்பு, கி.பி. 13 ஆம் நூற்றாண்டில், பவணந்தியெனும் சைன முனிவரால் இயற்றப்பட்ட இந்நூலின், இடையியல், உரியியல்களில் அகராதிக் கூறுகள் பரவலாகக் காணப்படுகின்றன.

பவணந்தியார் கி.பி. 1178 முதல் கி.பி.1216 வரை சோணாட்டில் கோலோச்சிய மூன்றாம் குலோத்துங் கனின் கீழ் ஆட்சிபுரிந்த சீயகங்கன் என்னும் சிற்றரசனால் ஆதரிக்கப் பெற்றவர். இதனால் பவணந்தியாரின் காலம் கி.பி.13 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி யெனலாம். இந் நூலின் கண்ணே பிங்கலம் பற்றிய குறிப்புகள் காணப்படுவதால், அதற்குப் பிற்பட்டதென்று உறுதியாய்க் கூறலாம்.

## நன்னூலிற் காணப்படும் நிகண்டுக் கூறுகள்

நன்னூலின் சொல்லதிகாரத்திற் காணப்படும் இடையியலில், நிகண்டுகளின் முப்பெருந் தொகுதிகளுள் முதல் தொகுதியான, ஒருசொல் பல்பொருள் பெயர்த்தொகுதிக்குரிய, நிகண்டுக் கூறுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இடையியலிற் காணப்படும் 47 இடைச்சொற்களின் பொருள்கள், மிக விரிவாகப் பேசப்பட்டுள்ளன. ஏ, ஓ முதல், கின்று, நின்று வரையுள்ள நாற்பத்தேழு இடைச்சொற்களுள், ஏ, ஓ என்னும் இடைச் சொற்களுக்கான பொருள்களைக் குறித்துள்ள நூற்பாக்கள் வருமாறு :

'ஏ' கார இடைச்சொல், பிரிநிலை, வினா, எண், ஈற்றசை, தேற்றம், இசைநிறை என்னும் ஆறு பொருண்மைகளாற் சுட்டப்படும் என்பதை,

> ''பிரிநிலை, வினா, எண், ஈற்றசை, தேற்றம்
> இசைநிறை என ஆறு ஏகாரம்மே'' என்றும்,

''ஓ'' என்னும் இடைச்சொல், ஒழியிசை, வினா, சிறப்பு, எதிர்மறை, தெரிநிலை, கழிவு, அசைநிலை, பிரிப்பு என எட்டுப் பொருள்களிற் பயிலும் என்பதை,

> ''ஒழியிசை, வினாச்சிறப்பு, எதிர்மறை, தெரிநிலை
> கழிவு, அசைநிலை, பிரிப்பு என எட்டு ஒவே''

என்றும் விளக்கியுள்ளார். இந்த இடையியல், திவாகரத்திற் காணப்படும் 'ஒரு சொல் பல்பொருட் பெயர்த் தொகுதியைப் போன்றது'.

பவணந்தியார் தாம் செய்தளித்த நன்னூலின் உரியியல் பகுதியில், நிகண்டின் முப்பெருங் கூறுகளையும், முறைமை வழுவாது யாத்துள்ளார். முதற் பகுதியாகிய ஒரு சொல் பல்பொருள் பெயர்த் தொகுதிக்கு 'கடி' என்னும் சொல்லைக் காட்டாகக் காட்டலாம். இச்சொல் பதின்மூன்று பொருள்களைச் சுட்டியுள்ள பாங்கு வருமாறு :-

> ''கடியென் கிளவி, காப்பே, கூர்மை,
> விரையே, விளக்கம், அச்சம், சிறப்பே
> விரைவே, மிகுதி, புதுமை, ஆர்த்தல்,
> வரைவே, மன்றல், கரிப்பின், ஆகும்''

நிகண்டின் முப்பெருந்தொகுதியுள், இடைநின்ற ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதிக்கு, நன்னூலின் உரியியல் முழுதும் எடுத்துக்காட்டுகள் காணப்படு கின்றன. மிகல் என்னும் தனியொரு பொருண்மை குறிக்க வந்த பவணந்தியார்,

''சால, உறு, தவ, நனி, கூர், கழி'' என 6 சொல்வடிவஞ் செய்வார்.

''ஓசை''ப் பொருளை,

"முழக்கு, இரட்டு, ஒலி, கலி, இசை, துவை, பிளிறு, இரை, இரக்கு, அழுங்கு, இயம்பல், இமிழ், குளிறு, அதிர், குரை, கனை, சிலை, சும்மை, கௌவை, கம்பலை, அரவம், ஆர்ப்போடு, இன்னன, ஓசை" யென இருபானிரு சொல் வடிவங்களிற் காட்டுவார். இனி, நிகண்டின் மூன்றாவது தொகுதியான, "பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி, உரியியலின் தொடக்கத்தில், ஓரறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர், நாலறிவுயிர், ஐயறிவுயிர் முதலானவை எவையெவை யென்று தெளிவுறுத்தும் நூற்பாக்கள் வருமாறு :-

"புல், மரம் முதல உற்றறியும் ஓரறிவுயிர்",

"முரள், நந்து, ஆதி, நாவறிவோடு, ஈரறிவுயிர்",

"சிதல், எறும்பு, ஆதி, மூக்கறிவின் மூவறிவுயிர்"

"தும்பி, வண்டு, ஆதி, கண்ணறிவின் நாலறிவுயிர்"

"வானவர், மக்கள், நரகர், விலங்கு, புள்
ஆதி, செவி, யறிவோடு, ஐயறிவுயிரே"

ஆறாவது அறிவு தொடர்பில் பவணந்தியார் ஏதும்அறைகுவாரில்லை.

மேலும் நன்னூலின், உரியியலில் உயிர்ப் பொருள்களின் பண்புகளும், உயிரிற் பொருள்களின் பண்புகளும், விரித்துரைக்கப்பட்டுள்ளன. முடிவாகக் கூறுவதென்றால், "நன்னூலில் நிகண்டுக் கூறு மிக மிகச் சுருங்கிய அளவிலேயே உள்ளது" என்பார் சுந்தர சண்முகனார். உரியியலின் இறுதியில், "மொழியிலக்கண நூலாகிய இந்நன்னூலில் எல்லாச் சொற்களையும் பற்றிச் சொல்லிக் கொண்டிருக்க முடியாது; அவற்றையெல்லாம் பிங்கலம் முதலாகிய நூல்களில் விரிவாகக் கண்டு கொள்க" என்று உரைத்துள்ளது நன்னூலின் மாட்சிமையைப் புலப்படுத்தும் பான்மையில் அமைந்துள்ளது.

நிகண்டுகளின் முப்பெருங் கூறுகளைச் சிற்சிலவே பெற்ற ஞான்றும், காலப்போக்கில், தொல்காப்பியத்திற்கு அடுத்த நிலையில் நன்னூல் மொழியியலார் மற்றும் கல்வியாளர்களால், பெரிதும் பயிலப்பட்டு வருகின்றது. தமிழகரமுதலி வரலாற்றில் கி.பி.13 ஆம் நூற்றாண்டிற்குப் பின்பு, பிற்காலத்து மொழி நடைக்கு ஏற்றவண்ணம் தொல்காப்பித்தைக் காட்டினும், தெளிவாகவும், சுருக்கமாகவும் நன்னூல் அமைந்துள்ளதால், எல்லோராலும் விரும்பிப் பயிலப்படுகிறது. இக்காலத்தே நன்னூலின் ஆட்சி பெருகியுள்ளதால், மக்களிடையேயும் மிகுதியாக வழக்கூன்றியுள்ளதெனலாம்.

## சூடாமணி நிகண்டு

மண்டல புருடரின் சூடாமணி நிகண்டிற்குப் பின் திவாகரம், பிங்கலம் உள்ளிட்ட நிகண்டுகள் தம் செல்வாக்கினைப் படிப்படியாக இழந்தன. "சூடாமணி நிகண்டிற்குப் பின்னர்த் தோன்றிய எந்த நிகண்டும், சூடாமணியின் இடத்தைப் பிடிக்க முடியவில்லை" என்பது அகரமுதலி வல்லுநர்தம் ஆணித்தரக் கருத்தாகும். பிற்காலத் தவர்களால் விரும்பிப் பெரிதும் படிக்கப்பட்டதும், மனனம் செய்வதற்குகந்த வண்ணம், விருத்தப்பாவில் அமைந்த சிறப்பினை உடையதும், சூடாமணி நிகண்டே எனில் மிகையன்று. இந் நிகண்டு பற்றி அகராதி வல்லுநர் தா.வே. வீராசாமி கூறுவது வருமாறு.

"சோழப் பேரரசின் பின்வந்த குழப்ப நிலையில் தோன்றிய சொற்களையும் இதில் காணலாம். இந்நூலின் பன்னிரு தொகுதிகளில் 1,100 சொற்கள் உள்ளன. இதன் பதினோராம் தொகுதியை மாணவர்கள் மனனம் செய்து வந்தனர். இந் நிகண்டே மக்களிடம் நன்கு செல்வாக்குப் பெற்று விளங்கியது. நூற்றுக்கு மேற்பட்டு, இதன் பதிப்புகள் வெளிவந்தமை, இக் கருத்தை வலியுறுத்தும்" என்பார் தா.வே.வீராசாமி.

கி.பி. 16 ஆம் நூற்றாண்டில் நிகண்டு என்றால் சூடாமணிதான் - நிகண்டு படித்தவர் என்றால், சூடாமணி படித்தவர்தாம் என்று பொருள் கொள்ளும் அளவுக்கு, இந் நிகண்டு மக்களிடையே மிகவும் பரவி மிளிர்ந்தது. தலைமேல் அணியும் தலைமணியணி மாண்புடன் ஒளிர்வது போல், நிகண்டுகட்குள் தலைசிறந்து திகழும் சூடாமணி நிகண்டு, அக்காலத்தே அனைத்து நிகண்டுகளிலும், தலைசிறந்த நிகண்டாகத் திகழ்ந்தது. சூடாமணி நிகண்டைச் சூளாமணி நிகண்டு என அழைக்கும் ஒருசார் வழக்கமும் உண்டு. இந்நிகண்டு பன்னிரண்டு தொகுதிகளையுடைய தாதலின், "சூடாமணி பன்னிரண்டு நிகண்டு" என்றும் இதனை அழைப்பதுண்டு.

**ஆசிரியர் வரலாறு :** சூடாமணி நிகண்டின், ஆசிரியர் மண்டல புருடரை, சில ஏட்டுச் சுவடிகள் "மண்டல புருடோத்தமன்" என்றும் குறிப்பிடுகின்றன. தற்சிறப்புப் பாயிரத்தில், "மண்டலவன்" என்று தம்மைக் குறிப்பிட்டுள்ளார்.

"விரவிய தேவர் மக்கள்
விலங்கொடு மரம் இடம் பல்

பொருள் செயும் வடிவு பண்பு
போற்றிய செயல் ஒலிப்பேர்
ஒருசொல் பல் பொருளி னோடும்
உரைத்தபல் பெயர்க்கூட் டந்தான்
வருமுறை திவாகரம் போல்
வைத்துப் பிங்கலந்தை தன்னில்''

"ஒருங்குள பொருளும் ஓர்ந்திட்டு
உரைத்தனன் விருத்தம் தன்னில்
இருந்தவை நல்லோர் குற்றம்
இயம்பிடார் என்ப தெண்ணித்
திருந்திய கமல வூர்தி
திருப்புகழ் புராணம் செய்தோன்
பரந்தசீர்க் குணபத் திரன்தாள்
பணிந்தமண் டலவன் றானே''

மேலே கொடுக்கப்பட்டவை சூடாமணி நிகண்டின் முகப்பில் மண்டல புருடரியற்றிய தற்சிறப்புப் பாடல்களெட்டனு ளிறுதிய திவ்விரண்டுமாம். இத் தற்சிறப்புப் பாடல்களின் வாயிலாக, இவர் அருகக்கடவுளை வணங்கும் சமண சமயத்தவர் என்பது புலனாகிறது. விருத்தப் பாக்களானாகிய இச் சூடாமணி நிகண்டாசிரியர், மண்டலவர் குணபத்திரரின் மாணாக்கர் என்பதும் தெளிவாகிறது. மண்டலபுருடர், தம் ஆசிரியர் குணபத்திரரின் கட்டளைக்கேற்ப, திவாகரம், பிங்கலந்தையைத் தழுவி, இந்நிகண்டினை இயற்றி யமையும் புலனாகிறது. இந் நிகண்டின் பன்னிரு தொகுதிகளிலுள்ள இறுதிப்பாடல்கள் வாயிலாக மண்டலபுருடர், நீர்வளம், நிலவளம், பொழில்வளம் முதலான எழில் தவழும் இயற்கை வளங்களைத் தன்னகத்தே கொண்டு திகழும் வீராபுரம் என்றழைக்கப்படும் வீரை என்னும் ஊரினர் என்பதும், இவர்தம் ஆசிரியர்பால் இவருக்குரிய ஆறா அன்பும் மாறாக் காதலும், இனிது புலப்படும்.

"திருக்கிளர் குணபத்திரன்தாள் சென்னியில் சூடிக் கொண்டோன்
மருக்கிளர் பொழில்சூழ் வீரை மன்னன் மண்டலவன் தானே''

மேலும், மண்டலவர் தொண்டைமண்டலத்தைச் சேர்ந்தவர் என்பதைத் தொண்டைமண்டல சதகம் பின்வருமாறு கூறுகிறது.

"............ நிகண்டு சூடாமணி தானுரைத்த மண்டலவன்
குடிகொண்டது நீள்தொண்டை மண்டலமே''

**மண்டலவர் காலம் :** இந்நிகண்டாசிரியரின் காலத்தைச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகரமுதலியின் பதிப்பாசிரியர், கி.பி.1520 – ஆம் ஆண்டு என்று குறிப்பிட்டுள்ளார். சூடாமணிநிகண்டின் ஒன்பதாவது தொகுதியாகிய செயல் பற்றிய பெயர்த்தொகுதியின் வாயிலாக, மண்டலபுருடர் கிருட்டிண தேவராயர் காலத்தவர் என்பது தெளிவாகிறது. அப்பாடல் வருமாறு :

"படை மயக்குற்ற போதும்
படைமடம் ஒன்றி லாதான்
மடைசெறி கடகத் தோளான்
மதிக்குடை மன்னர் மன்னன்
கெடிமன்னர் வணங்குத் தாளான்
கிருட்டிண ராயன் கைபோல்
கொடைமடம் என்று சொல்ப
வரையாது கொடுத்த லாமே'' – இப்பாடலிற் குறிக்கப்பெறும் கிருட்டிணராயன், தொண்டைமண்டலச் சிற்றரசனாவான்.

## கி.பி. 12 முதல் கி.பி. 16 ஆம் நூற்றாண்டிற்குள் வாழ்ந்தவர்

மண்டல புருடர், சூடாமணியிலுள்ள பன்னிரண்டாம் தொகுதியின் தொண்ணூறாவது செய்யுளில், கி.பி. 12 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த, பாற்கரர் இயற்றிய "பாற்கரம்'' என்னும் கணிதநூலைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

"குணகாரம் பரியச்சந்தான் குறித்த பாற்கரமே மூலம்'' என்னும் பாடல் வரியின் வாயிலாக, மண்டல புருடர் கி.பி. 12 ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர் என்பது மட்டும் உறுதி; இது போலவே, பதினாறாம் நூற்றாண்டிற்கு உட்பட்டவர் என்பதும் உறுதி'' என்பார் சுந்தர சண்முகனார்.

## சூடாமணியின் அமைப்பும் சிறப்பும்

தமிழகரமுதலி வரலாற்றில், காலநோக்கில் மூன்றாமிடத்தைப் பெற்ற, இந் நிகண்டு, பயன்பாட்டு நோக்கில் முதலிடத்தை பெற்றுள்ளது. சூடாமணி, திவாகரம் போலவே பன்னிரு தொகுதிகள் அடங்கியது. இப் பன்னிரு தொகுதிகளிலும் 1189 செய்யுட்கள் உள்ளன. மண்டலபுருடரின் தற்சிறப்புச் செய்யுள் எட்டுடன் சேர்த்து, 1197 பாடல்கள் என்று, யாழ்ப்பாணத்து ஆறுமுக நாவலர், கி.பி.1957–இல், தமது 17 ஆவது பதிப்பிற் குறித்துள்ளார்.

| | | |
|---|---|---|
| 1. தேவப்பெயர்த் தொகுதி – பாடல்கள் | 93 | 11,000 சொற்கள் |
| 2. மக்கட்பெயர்த் தொகுதி – பாடல்கள் | 106 | |
| 3. விலங்கின் பெயர்த்தொகுதி – பாடல்கள் | 78 | |
| 4. மரப்பெயர்த் தொகுதி – பாடல்கள் | 68 | |
| 5. இடப்பெயர்த் தொகுதி – பாடல்கள் | 68 | |
| 6. பல்பொருட் பெயர்த்தொகுதி – பாடல்கள் | 35 | |
| 7. செயற்கை வடிவப் பெயர்த்தொகுதி – பாடல்கள் | 76 | |
| 8. பண்பு பற்றிய பெயர்த்தொகுதி | 82 | |
| 9. செயல் பற்றிய பெயர்த்தொகுதி | 67 | |
| 10. ஒலி பற்றிய பெயர்த்தொகுதி | 52 | |
| 11. ஒரு சொல் பல்பொருட் பெயர்த் தொகுதி | 310 | 1,575 சொற்கள் |
| 12. பல்பெயர்க் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதி | 154 | |
| | 1189 | |
| மண்டல புருடரின் தற்சிறப்புப் பாயிரப் பாடல்கள் | 8 | |
| ஆக மொத்தப் பாடல்கள் | 1197 | |
| மொத்தச் சொற்கள் | | 12,575 |

மண்டலபுருடர் தம் நிகண்டின் ஒவ்வொரு தொகுதியின் இறுதியிலும், பாடல் எண்ணிக்கையைக் குறிப்பிட்டுள்ளார். இந் நிகண்டு பலரால் பலமுறை பதிப்பிக்கப்பட்டுள்ளது. யாழ்ப்பாணத்து ஆறுமுக நாவலரால் ஆராயப்பட்ட 17 ஆவது பதிப்பு, கி.பி.1957 ஆம் ஆண்டில் வெளியாயிற்று. ஒவ்வொரு தொகுதியிலும் தொடக்கத்தில் காப்புப்பாடலும் இறுதியில் பாடல் எண்ணிக்கையும் சுட்டப்பட்டுள்ளமைக்கு எடுத்துக் காட்டாக, ஐந்தாவது இடப்பெயர்த் தொகுதியிலுள்ள முதற் பாடலும், இறுதிப்பாடலும் வருமாறு:–

முதற் பாடல் – காப்பு

"கடலெழும் இரவி கோடி கால்சீத்துப் பொடித்த தென்ன
மடலவிழ் கமல வூர்தி வந்த வாமனையே போற்றி
அடைவுள திணைதேம் ஊர்வான் அகம்புறம் ஆதியாய
இடனுடைத் தாகவைத்த இடப்பெயர்த் தொகுதி சொல்வாம்"

திவாகரத்திலும், பிங்கலத்திலும் இல்லாத இசைச்சுவை, சூடாமணியில், அளவிறந்தமைந்துள்ளது. இக் கருத்தினை மண்டலபுருடர் எழுதிய தற்சிறப்புப் பாயிரத்தால் அறியலாம். "திவாகரமும் பிங்கலமும் நூற்பா (சூத்திர) நடையில் இருப்பதால், படித்து நினைவில் இருத்துவதற்குக் கடினமாயுள்ளது என்று கருதித் தாமே விருத்தப்பாவால் சூடாமணியை எழுதியிருப்பதாக, ஆசிரியர் தற்சிறப்புப் பாயிரத்தில் கூறியுள்ளார். இசையுடன் படித்துச் சுவைப்பதற்கும், அந்த இசையோட்டத்துடன் செய்யுளை நினைவில் இருத்துவதற்கும் விருத்தம் மிகவும் ஏற்றது" என்பார் சுந்தர சண்முகனார்.

மேலே விருத்தாப்பாவின் இன்னிசையை மனத்திலிருத்தி மனனம் செய்வதற்கு, ஏற்ற வண்ணம் அமைந்த, ஐந்தாம் தொகுதியின் முதற்பாடலாகிய, காப்புச் செய்யுளைக் கண்டோம். அடுத்து, இத் தொகுதியினிறுதியில் அமைந்த இன்னிசைப்பாடல் வருமாறு :–

"முன்னொடு மேலும் மற்று மொழியுமஞ் ஞாங்கர் தானே
முன்னரே தலைத்தா ளாகும் முதலொடு புரமும் அப்பேர்
அன்னதிவ் விடப்பேர்க்கு எட்டோடு அறுபது விருத்தம் செய்தான்
மன்னுசீர்க் குணபத்திரன் தாள் வணங்கு மண்டலவன் தானே"

## பதினோறாவது (தொகுதி) நிகண்டு :–

தமிழகரமுதலி வரலாற்றில், இதுகாறும் வெளிவந்த நிகண்டுகளுள், சூடாமணி நிகண்டின் ஒரு சொல் பல்பொருள் தொகுதி, அக்காலத்தே தமிழ் பயிலும் மாணவர்களாலும், பயிற்றுவிக்கும் புலவர்களாலும், அதன் பொருண்மையையும், சிறப்பையும் செல்வாக்கையும், மக்களிடையே வழக்கூன்றியமையும் கருத்திற் கொண்டு "பதினோராவது நிகண்டு" என தனியொரு நிகண்டே போல் வழங்கப்பட்டு வந்தது. ஒரு சொல்லுக்குரிய பல்வகைப் பொருள்களைப் பாங்குடன் விளக்கும், இக்கால அகரமுதலி அமைப்பில் (Homonyms) அமைக்கப்பட்ட பகுதியாதலின், இப் பதினோராந் தொகுதி முதன்மை பெற்றிருந்தது. நிகண்டு படித்தவர்கள் என்றால் சூடாமணியின், பதினோராவது தொகுதியைப் படித்தவர்கள் என்று பொருள் கொள்ளும் அளவுக்கு, இத்தொகுதி உயர்வுடையதாய்க் கருதப்பெற்று வந்தது. "பதினோராவது நிகண்டு என்பது சூடாமணியின் ஒரு பகுதியென்பதை அறியாமல், அதனை ஒரு தனி நிகண்டாகவே அன்றும் சிலர் கருதினர்; இன்றும் சிலர் கருதுகின்றனர்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.204). "நூற்றுக்கு மேற்பட்ட இதன் பதிப்புகள் வெளிவந்தமை, இக்கருத்தை வலியுறுத்தும்" (தா.வே.வீராசாமி. 1991, பக்.70).

புதுச்சேரி நயநப்ப முதலியார், தில்லை நடராச சுவாமி போன்றோர், இப் பதினோராந் தொகுதியைத் தனிநூலாக அச்சிட்டுத் தமிழகரமுதலி வரலாற்றில், இத் தொகுதியின் சொல்லாட்சியையும், மாட்சிமையையும் புலப்படுத்தியுள்ளனர். நயநப்ப முதலியாரின் கி.பி.1836 – ஆம் ஆண்டுப் பதிப்பில் "ஒரு சொல் பல்பொருட் டொகுதி" என்பது நூற்பெயராகவும், நடராச சுவாமி பார்வையில், பூ.மூ. இராசு முதலியாரின் கி.பி.1910 – ஆம் ஆண்டுப் பதிப்பில், "பதினோராவது நிகண்டு" என்பது நூற்பெயராகவும் குறிப்பிடப்பட்டிருப்பது நிகண்டுதரு வரலாற்றின், சிறப்புடைச் செய்தியாகும். கி.பி.16 – ஆம் நூற்றாண்டிலேயே, இத் தொகுதியின் இன்றியமையாச் சிறப்பினை, நன்குணர்ந்த மண்டலபுருடர், இத் தொகுதியின் கண்ணே தாம் சொல்ல வந்த 1575 சொற்களையும், பதினெட்டுவகை எதுகைச் சொற்களாகப் பிரித்துக் கொண்டு, அனைவரின் மனத்திலும் பதியும் பான்மையில் அமைத்துள்ளார். எடுத்துக்காட்டு வருமாறு:–

### "க" கர எதுகைக்கான பாடல்

"பகவனே ஈசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்
பகலே நாள் ஒரு முகூர்த்தம் பகலவன் நடுவே தேசு
மகரமே சுறாப்பூந் தாதாம் வசி கூர்மை வசியம் வாளே
அகம் மனம் மனையே பாவம் அகலிடம் உள்ளுமாமே"

இப்பாடலடிகளில் இரண்டாமெழுத்து ஒன்றிவரும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ள இப்பாடலில் பகவன், பகல், மகரம், வசி, அகம் என்னும் ஐந்து சொற்கட்குரிய பொருள்கள் தரப்பட்டுள்ளன.

### "ன" கர எதுகைக்கான பாடல்

"தானமே மதம் நீராட்டுத் தருகொடை சுவர்க்கம் நாற்பேர்
பீனமே பருமை பாசி பேடு என்ப பேடி ஊரே
நானமே பூசும் பூச்சு நானமும் குளிக்கு நீரும்
வானம் ஆகாயம் என்ப மழை உலர்மரமும் ஆமே"

இப்பாடலில் தானம், பீனம், பேடு, நானம், வானம் என்னும் ஐந்து சொற்களின் பொருள்கள் கொடுக்கப்பட்டுள்ளன. பொதுவாக விருத்தப் பாக்களின் நான்கு அடிகளிலும், எதுகைச் சொற்கள் அமைந்துள்ளதால், அனைவர் மனதிலும் நின்று நிலவுகின்றனவெனலாம்.

இத் தொகுதியில் சொற்பொருளை அடைமொழி வாயிலாக விளக்குவதனால் சொற்களின் பொருள், கற்பவர்தம் மனத்தில் பசுமரத்தாணியாய் பதியக்கூடும். 'விழவு' என்னும் சொல்லுக்கு விளங்கித் தோன்றுதல் என்னும் பொருண்மைமிக்க அடைமொழியை அமைத்துள்ளார்.

"விழவு என்ப மிதுனராசி விளங்கும் உற்சவமு மாகும்" அடுத்து, "குழல்" என்னும் சொல்லுக்குத் துளையுடைப் பொருள், மயிர், இசைக்குழலென மூவேறு பொருள் செய்துள்ளவாறு :

"குழல் துளையுடைப் பொருட்பேர் மயிர் இசைக்குழல் முப்பேரே"

இப் பதினோராந் தொகுதிக்குப் பல்வேறுரை செய்து செம்மைப் படுத்தியுள்ளனர். வேதகிரி முதலியார், நயநப்ப முதலியார் போன்றோர் எல்லோரும் எளிமையாகக் கற்று 18, 19 ஆம் நூற்றாண்டுகளில், பிறருக்கும் கற்பிக்க ஏதுவாக இருக்கும் வண்ணம் இப்பகுதியை அமைத்துள்ளனர். ஆசிரியர் மண்டல புருடர் 1575 சொற்களை 310 விருத்தப்பாக்களில் பொருள் புகன்றதை, கி.பி.1842 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த களத்தூர் வேதகிரி முதலியார், மண்டலபுருடர் பதினெட்டு மெய்யெழுத்துகளின் அடிப்படையில், பதினெட்டுவகை எதுகைச் சொற்களாக அமைத்ததை, ஒரே எதுகைச் சொற்கள் அமைந்த பாடல்களைத் தனியாகவும், கலப்பு எதுகைச் சொற்கள் அமைந்த பாடல்களைத் தனித்தனியாகப் பிரித்து, தமிழ்மொழியில் விடுபட்ட ஏனைய சொற்களை, எதுகை முறையில் அமைத்துப் புதிதாக 290 விருத்தப் பாக்களை இயற்றிச் சூடாமணி நிகண்டின், பதினோராவது தொகுதியினைப் புதுக்கி அமைத்துள்ளார். மேலும், 18,19 ஆம் நூற்றாண்டுகளில், சில பதிப்பாசிரியர்கள், இப் பதினோராந் தொகுதியினைத் திவாகரத்தில் செய்தது போல், ஆதியிற் பொருள் – அந்தத்துப் பொருளென, இருவேறு பிரிவாய்ப் பகுத்தும் மிகவும் எளிமைப்படுத்தியும் அமைத்துள்ளனர். இவ்வாறு அமைத்த பதிப்பினுள் கி.பி.1836 ஆம் ஆண்டு பதிப்பித்த திருவாளர், நயநப்ப முதலியாரின் பதிப்பு, முதலிடம் பெறுகின்றது. எல்லோரும் எளிதில் புரிந்து கொள்ளும் வண்ணம், இவரது உரைசார்ந்த பதிப்பு அமைந்துள்ளது. புதுச்சேரியைச் சார்ந்த "இவர் தொல்காப்பியம், திவாகரம் முதலிய பல நூல்களை ஆராய்ந்ததன் துணைகொண்டு பல நூல்களிலிருந்து, தக்க மேற்கோள்களைக் காட்டிப் பிழையின்றி உரையியற்றினார்[1]" இவ்வுரை, கி.பி.1836 – இல் அனைவரும் போற்றும் வண்ணம் அமைந்திருந்தது. பல்லாற்றானும் எளிமைப் படுத்தப்பட்ட இப் பதினோராந் தொகுதியை அதனுடைய பல்வேறுபட்ட சிறப்புகளைக் கருத்திற்கொண்டு கல்வியறிவுடையாரனைவரும்,

விரும்பிக் கற்றனர். நிகண்டுதரு வரலாற்றில், பதினோராவது நிகண்டு என்னும் புகழ்மிக்க இத்தொகுதி நூற்றுக்கு மேற்பட்டு பதிப்பிக்கப்பட்டது. இத் தொகுதியின் பொருண்மைச் சிறப்பினை, உப்பு, சமன் ஆகிய இரண்டு எடுத்துக்காட்டுகள் வாயிலாகக் காணலாம்.

உப்பு என்னும் சொல்லுக்கு, பெண்கள் ஆடும் ஒருவகை விளையாட்டு, உவர்ப்புத் தன்மை (கரிப்புச்சுவை), கடல், இனிமை முதலான நால்வேறு பொருள் செய்வார் மண்டலபுருடர்.

"உப்பு மெல்லியலாராடல், உவர், கடல், இனிமை நாற்பேர் "இந்நான்குள் பொருள்களுள், முதல் மூன்றும் அனைவரும் அறிந்ததே. இறுதியதாம் "இனிமை" என்பது புதுமைப்பொருள் பயப்பது. கரிப்புடைய உப்பு, சோடியம், குளோரைன் என்னும் நச்சுப்பொருள் இரண்டின் கலவையாம். உண்ணும் அளவுணவு உணவை இனிமையாக்கும் ; அளவுக்கு அதிகமானால் உணவை நஞ்சாக்கும். எந்த உணவையும் உடலுக்கு ஏற்றவண்ணம் அமிழ்தமாக்கும் தன்மையும், நஞ்சாக்கும் இயல்பும், உப்புக்கே அமைந்ததெனலாம். அதனால்தான் தெலுங்குப் பெரியாராகிய வேமன்னர், "வேமன்ன பத்தியம்" என்னும் தமது நூலின் ஒரு பாடலில், ஒப்பிலா உப்பின் தனித்தன்மை குறித்து, "உப்பில்லாத கறி உதவாது" என்னும் பொருண்மையில், 'உப்பு லேனு கூர வூனம்புருச்சலகு' என்றுரைத்தார் போலும்! எவ்வகை யுணவையும் விரும்பியுண்ணும் வகையில் இனிமையாக அமைப்பது, சுவை பயப்பது உப்பேயாதலால் உப்பிற்கு "இனிமை" என்னும் பொருளுரைத்தார் போலும்.

## "உணவுக்கு இனிமை பயப்பதும் தாமும் உணவாக அமைவதும் உப்பே"

உணவைச் சுவையுடையதாக்குவதும், தாமே உணவாக பயன்படுவதும் உப்பேயாகும். கறியுண வாயினும், ஊனுணவாயினும் எல்லாரானும் விரும்பி உண்ணக்கூடியதாகச் செய்வது உப்பேயாதலின், உணவுக்கு "உப்பு" என்னும் குழூஉக்குறிப் பெயரும் உண்டு. "அவர் உப்பைத் தின்றுவிட்டு அவருக்கே கேடு செய்யலாமா?, "உப்பிட்டவரை உள்ளளவும் நினை" முதலான வழக்குகளில், உப்பெனும் ஒரு தனிச்சொல் உணவு என்னும் பொருண்மையிற் சுட்டப்படுவதறிவாம். எவ்வகை யுணவையும் இனிமையாக்குதற் பொருட்டு, மக்களுக்கு இயல்பாகவே உப்பு உணவாக அமைந்துள்ளதால், மண்டல புருடர் ஐந்தாவது பொருளை "இனிமை" என்னும் பொருண்மையில் அடக்கி யுள்ளாரெனலாம்.

வான்புகழ் வள்ளுவப் பெருந்தகை உப்பிற்கு 'இனிமை'ப் பொருள் உரைத்துள்ளார். தலைமகனும், தலைமகளும் இனிதுள்ளம் ஒத்துக் கூடுங்கால், தலைவியின் பிறைநுதல் வெயர்ப்பச் செய்த கலவியின்கண் உள்ள இனிமையாம். இவ் இனிமை ஒருங்கே நுகரும் ஐம்புலவின்பம் என வள்ளுவர், "ஊடலுவகை" என்னும் பகுதியில் உரைப்பது வருமாறு:

"ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு" (குறள், 1328)

இக் குறட்பாவின் கண்ணே அமைந்துள்ள உப்பு என்னும் சொல்லிற்கு, "இனிமை" யென்னும் பொருள் இயம்பும் நிகண்டு நூலார் மண்டலபுருடர், "இலக்கியம் கண்டதற்கு இலக்கணம்" என்னும் மெய்வழக்கினுக் கேற்பச் சொற்பொருள் செய்துள்ளார்.

மற்றும் உலகியலில் கூட கண்ணுக்கினிய கவினுறு காட்சியைக் கண்டு மகிழாத மனிதனும் – உள்ளங்கவர் எழுத்தோவியத்தைச் சுவைக்காத கலைஞனும் – மனத்தில் எஞ்ஞான்றும் நின்று நிலவும் நடைவளச் சொற்பொழிவினைக் கேட்டுச் சுவைக்காத ஆர்வலரும் அல்லது – "இன்னும் வேறு ஏதேனும் ஒன்றோ சுவை பயக்கவில்லையாயின், "அதில் உப்பு சப்பு ஒன்றும் இல்லை" என்று கூறி, மக்கள் உதட்டைப் பிதுக்குவது கண்கூடு" (சுந்தர சண்முகனார். 1971, பக்.215). இவ்வாறெல்லாம் உப்பு என்னும் சொல் இனிமைப்பொருள் பெற்று உலகியலில், வழக்கூன்றிய தெனலாம்.

## "சமன் செய்யும் வாழ்வியலறம்"

'சமன்' என்னும் சொல்லிற்கு, எமன், நடு என்னும் இருவகை வாழ்வியலறமென சூடாமணி நிகண்டு சொற்பொருண்மை செய்யும். உடல்வேறு – உயிர்வேறாக, உயிர்களைக் கூறுபடுத்தும் கூற்றுவனே எமன். இவன் சமன்செய்து சீர்தூக்குந் தன்மையன். இவன் நேர்மையாளன். அனைத்துயிரையும் உடலினின்று உரிய காலத்தில் கூறுபடுத்தும் நடுநிலையாளன். நடுவு நிலைமை தவறாத எமனுக்கு, எவரும் கையூட்டுத் தந்து, உயிரை எடுப்பதில், அரசன் முதல் ஆண்டி வரையும் – இல்லறத்தார் முதல் துறவியர் ஈறாகவும் – ஏழை – பணக்காரன் ஏற்றத்தாழ்வின்றியும் – இளையவர் – முதியர் வேறுபாடின்றியும், அவரவர்க்கமைந்த காலக்கணக்கின்

படி, ஒரு நொடி நேரமும் தாழ்க்காது உயிர்களைப் பற்றிச் செல்பவன்.

"சமன் யமன் நடுவும் ஆகும்" என்பார், மண்டலபுருடர். நடுநின்று உயிர்களைப் பற்றும் எமன்தன் திறத்தைச் சாத்தனார்,

"தவத்துறை மாக்கள் மிகப் பெருஞ் செல்வர்
ஈற்றிளம் பெண்டிர் ஆற்றாப் பாலகர்"

"முதியோர் என்னான் இளையோர் என்னான்" என்று பதிவு செய்துள்ளமை ஈண்டு உணரத்தக்க தொன்றாகும். சம நோக்குடன் செயலாற்றும் எமனின் நடுநின்ற பண்பினைப் பாராட்டுமுகமாய் "எமதருமன்" அழைக்கின்றனர் போலும்! "சமன்" – என்னும் பெயர்க் காரணியத்திற்குப் பெருமை சேர்ப்பவனும் எமனே எனலாம்.

இதுகாறும் இயம்பியவற்றால், கி.பி.12 முதல் 16 – ஆம் நூற்றாண்டு வரையுள்ள காலகட்டத்தில் தோன்றிய இச்சூடாமணி நிகண்டு, தமிழகரமுதலி வரலாற்றில் நிகண்டுகளைப் பொறுத்தமட்டில் மூன்றாம் இடத்தைப் பெற்ற போழ்தும், "பதினோராவது நிகண்டு" என்று, அகரமுதலி வல்லுநர்களாற் சிறப்பிக்கப்படும் ஒரு சொல் பல் பொருட் டொகுதியைப் (Homonyms) பொறுத்தமட்டில், அனைவராலும் ஆர்வத்துடன் பயிலப்பட்ட பகுதியாகவும், முதலிடத்தில் வைத்து நூற்றுக்கு மேலான பதிப்புகள் பதிப்பிக்கப் பெற்றமையானும் கல்வியாளர்களால் பெரிதும் மதிக்கப் பெறுகின்றதெனலாம்.

தமிழகரமுதலி வரலாற்றில் சூடாமணி நிகண்டே, மக்களால் விரும்பிப் பயிலப்பட்டதாலும், புலவர் பெருமக்கள் அதை மனனம் செய்து மாணாக்கர்கட்குப் பயிற்றுவித்ததாலும், அச்சுவசதி ஏற்பட்ட பின்னர், பலரால் பலமுறை பதிப்பிக்கப்பட்டது. வரலாற்றின் அடிப்படையில் சில பதிப்புகள் வருமாறு:–

1. நூல்முழுதும் உரையுடன் (12 ஆம் தொகுதிக்கு மட்டும் உரையில்லை) யாழ்ப்பாணத்து நல்லூர் வித்துவ சிரோமணி. ச.பொன்னம்பலனாரால் கி.பி.1898 ஆம் ஆண்டு பார்வையிடப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இதுவே பலமுறை பதிப்பிக்கப்பட்டுள்ளது.

2. நூல் முழுவதும், மணிமங்கலம் வடிவேலு பார்வையிடப்பட்டு, மதுரை குருசாமியால், கி.பி.1901 ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டுள்ளது.

3. நூல் முழுவதும் உரையுடன், பாரிப்பாக்கம் முனியப்பரால் பார்வையிடப்பட்டு, அப்பாவு அவர்களால் கி.பி. 1910 ஆண்டு பதிப்பிக்கப்பட்டுள்ளது.

4. நூல் முழுவதும் யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரால், ஆராயப்பட்ட பதிப்பு பலமுறை வெளிவந்து விட்டது. 17 ஆம் பதிப்பு கி.பி.1957 ஆம் ஆண்டு வெளியாயிற்று.

5. நூல் முழுவதும் நா. கதிரைவேல் மாணவர் ப.கணேசனார் செப்பனிட்ட உரையுடன் கி.பி.1933 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

6. சூடாமணியின் பதினோராவது தொகுதி மட்டும் புதுவை நயநப்பனார் உரையுடன், திரு. வேங்கடாசலரது சென்னை சரசுவதி அச்சுக்கூடத்தில் கி.பி.1836 – ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டுள்ளது.

7. பதினோராவது தொகுதி மட்டும், தில்லை நடராச சுவாமி அவர்களால் பார்வையிடப்பட்டு, பூ.மு. இராசு அவர்களின் சென்னை புரசை ரூபி அச்சுக்கூடத்தில் கி.பி. 1910 ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டுள்ளது.

இவ்வாறாகப் பலரால் பலமுறை பதிப்பிக்கப்பட்டதன் வாயிலாகச் சூடாமணி நிகண்டின் ஆட்சியும், மாட்சியும், மக்களிடையே வழக்கூன்றியமை இனிது விளங்கும்.

## அகராதி நிகண்டு – கி.பி.1594

தமிழகரமுதலி வளர்ச்சியிலும் – வரலாற்றிலும், ஒரு மாபெரும் மாற்றத்திற்கு வித்திட்டதும் – முதற்கண் 'அகராதி' யென்னும் சொல்லை, தமிழுலகிற்கு வழங்கிய பெருமை படைத்ததும், இவ்வகராதி நிகண்டேயெனில் மிகையன்று. பண்டைக் காலத்தில் சொற்பொருள் கூறும் துறைநூலை 'உரிச்சொல்' என்றும், "உரிச்சொற்பனுவல்" என்றும் மக்கள் அழைத்தனர். இடைக்காலத்தில் "நிகண்டு" என்னு பெயரால், தமிழகரமுதலி வரலாற்றில் குறித்தனர். இக்காலத்தில் அகராதி அல்லது அகரமுதலி என்னும் பெயரால் அழைக்கின்றனர். தமிழகரமுதலி வரலாற்றில் 1921 ஆம் ஆண்டு, மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால், அகராதி நிகண்டு பதிப்பிக்கப்பட்டது.

### அகராதி நிகண்டின் சிறப்பும் – ஆசிரியரும் – ஓர் பார்வை :

உலக அகரமுதலி வரலாற்றில், முதன்முதலாக, அகரவரிசையில் சொற்கள் அமைக்கப்பட்ட

பெருமையினை உடையது, இவ்வகராதி நிகண்டு. தமிழகரமுதலி வரலாற்றிலும், இவ்வகராதி நிகண்டு ஒரு மாபெருந் திருப்பு முனையாகத் திகழ்கிறது. இந் நிகண்டின் சிறப்புப் பற்றிப் புலவர் சுந்தர சண்முகனார் கூறுவது. "அகராதி, நிகண்டு என்னும் இரண்டு பெயர்களையும் இணைத்துக் கொண்டு, இந்த அகராதி நிகண்டு காட்சியளிப்பது ஒரு புதுமையே" (சுந்தர சண்முகனார். 1971, பக்.218). தமிழகராதிக் கலை வளர்ச்சியில், முதன்முதலாகச் சொற்களின் முதல் எழுத்துகளைப் பொறுத்தமட்டில் அகர வரிசையில் அமைத்துத் தந்ததன் வாயிலாக, இந் நிகண்டினை இயற்றிய புலியூர் இரேவண சித்தர், கி.பி.1594 – ஆம் ஆண்டிலேயே, பொதுவாக உலக அகரமுதலிகளில், சிறப்பாகத் தமிழகரமுதலிகளில் வண்ணமாலை வரிசைத் தோற்றத்திற்கு அடிப்படை அமைத்துத் தந்த பெருமை, படைத்தவராகிறார். இக்கால அகரமுதலி அமைப்பில், அகராதி நிகண்டு என்னும், அதன் பெயருக்கு ஏற்றவண்ணம், இரேவணசித்தர், இந்நிகண்டினை அமைத்தது மட்டுமின்றி, அகராதி யென்னும் பெயரைப் படைத்தவரும் இவரேயாவார். அகராதி என்னும் பெயரிலுள்ள "ஆதி" என்னும் பின்னொட்டு வடதமிழ் வடிவமாதலால், மொழிஞாயிறு பாவாணர் 'அகரமுதலி' என்ற சொல்லை, இக்காலத்தே வழக்கூன்றச் செய்தார். இந்நூலுக்குப் பின்பே, மேலைநாட்டில், அகரவரிசை அமைப்பில் அகராதிகள் முகிழ்த்தன. இவ்வாறு அகராதி நிகண்டு, அகரமுதலி அமைப்பில், பொதுவாக மேலைநாட்டு அகராதி வரலாற்றிலும், சிறப்பாகத் தமிழகரமுதலி வரலாற்றிலும் தழைத்தோங்குதற்கு, வழிகாட்டியவர் புலியூர் இரேவண சித்தராவார். நூற்பா (சூத்திர) அமைப்பில் இந்நிகண்டினை யாத்துள்ளார். சூத்திர (நூற்பா) அமைப்பில் இயற்றப்பட்ட இவ்வகராதிக்கு, "இரேவண சூத்திரம்", "சூத்திர வகராதி" என்ற பெயர்களும் உண்டு.

புலியூர்ச் சிதம்பர இரேவணசித்தர் என்பது இவர்தம் முழுப் பெயராகும். "இவர் சைவ வேளாள மரபைச் சார்ந்த, வீரசைவச் சமயத்தவர் என்று சொல்லப்படுகிறார். ஆசிரியர் பல பாக்களில் பட்டீச்சுரரைத் தொழுதிருப்பதால், திருப் பட்டீச்சுரத்தில் எழுந்தருளியுள்ள சிவனைக் குலதெய்வமாகக் கொண்டவர் என்பது புலப்படும்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.219). தொடக்கத்தில் புலியூர் இரேவண சித்தர் பிள்ளையார் மேல் இரண்டு காப்புப் பாடல்களைப் பாடியுள்ளார். அவை வருமாறு :-

"சோதி விநாயகர் பாதமெனமுடி
வோதிய நாவினார் நீதி யுள்ளார்களே
வெள்ளை வாரணப் பிள்ளையார் பதம்
உள்ளு வார்மனக் கள்ள மாறுமே"

இவையன்றி, ஒவ்வொரு தொகுதியைத் தொடங்குங்கால், இறைவணக்கத்துடன், இன்ன தொகுதியைப் பாடுகின்றேன் என்று குறித்துள்ளார். பிள்ளையார் வழிபாட்டினைத் தொடர்ந்து, ஆசிரியரின் தற்சிறப்புப் பாயிரப் பாடல் அமைந்துள்ளது. இத் தற்சிறப்புப் பாயிரத்தில் இவர்தம் காலம், நிகண்டின் அமைப்பு மற்றும் நூற்சிறப்பும் எடுத்துரைத்துள்ளார். தற்சிறப்புப் பாயிரத்திலுள்ள சிறப்புக் குறிப்புகள் வருமாறு:-

"தேசுகொள் பட்டீச் சுரன்பதம் பணிந்து
..............................................................
வருமிதில் ஒருசொல் பலபொரு ளதனைத்
..............................................................
பரவிய நிகண்டு பலவெடுத் தாராய்ந்து
அதிற்சில திரட்டி அகரமுதலாய்
..............................................................
மொழிமுதல் எழுத்து நூற்றொரு நாலடைவே
..............................................................
மன்னு சூத்திர மூவாயிரத் துடனே
முந்நூற் றறுபத் தெட்டெனுந் தொகையாய்
வந்திடுந் தொகுதி ஈரைந்தென வகுத்தே
அரிய சகாத்தம் ஆயிரத் தைஞ்ஞூற்
றொருபத் தாறென உரைத்திடும் ஆண்டினில்
.................................... அகராதி நிகண்டென
ஓதினன் யாவரும் உணர்ந்திட நினைந்தே"

இப் பாயிரப் பாடல் அகராதிநிகண்டின் சிறப்புச் செய்திகளைத் தெரிந்து கொள்ளுதற்குரிய அகச்சான்றாய்த் திகழ்கிறது. இச் சிறப்புச் செய்திகள் வருமாறு :-

1. அகராதி நிகண்டு, ஒரு சொல் பல்பொருட் பிரிவைச் சார்ந்தது.
2. அகரமுதல் வகர ஈறாகப் பத்துத் தொகுதிகளை உள்ளடக்கியது.
3. அகராதி முறையில் அமைந்தது.
4. நூற்பா நடையது.
5. மொத்த நூற்பாக்கள் – 3368.
6. சொற்கட்கு ஒரு பொருள் முதல், நாற்பத்தாறு பொருட்கள் வரை கூறப்பட்டுள்ளன.
7. நூலின் பெயர் அகராதி நிகண்டு.
8. நூல் எழுந்த காலம் சக ஆண்டு 1516 (அல்லது) கி.பி.1594.

## அகராதி நிகண்டின் (இரேவணச்சித்தரின்) சிறப்புக் குறித்து தா.வே.வீராசாமியார் :

அகர முதலாகச் சொல்நிரல் அமைவதை, இவரே முதலில் எடுத்தாண்டார். முதலெழுத்தை மட்டும் அகரவரிசையில் ஒழுங்குபடுத்தினார். இந்நூலில் 3334 நூற்பாக்கள் உள்ளன. ஒரு பொருள், இரு பொருள் கொண்ட சொற்கள் 3368, தனியே தொகுக்கப் பட்டுள்ளன. இவர் அகரவரிசையில் நூற்பாக்களை இயற்றத் திருநாவுக்கரசரின் (கி.பி.7 ஆம் நூற்றாண்டு) "சித்தத் தொகைத் திருக்குறுந்தொகை" போன்றவை தூண்டியிருக்கலாம். அகரவரிசையில் எழுந்த முதல் ஒப்புநோக்கு நூல் இதுவே. தமிழ் அகராதி வரலாற்றில், இது தனியிடம் பெறும் சிறப்புடையது. அகரவரிசை அமைப்பைச் சுட்ட, இவர் பயன்படுத்திய அகராதி என்ற பெயர், இன்று அகராதிக்குரிய நூற்பெயராகவே அமைந்துவிட்டது.

### அகராதி நிகண்டின் சிறப்புக் கூறுகள் :

மற்ற நிகண்டுகளினும், இந்நிகண்டிற்கு மற்றொரு புதுமையும் உண்டு. அகரவரிசை தொடர்பில் இந்நூல் கீழ்க்காணும் பத்துத் தொகுதிகளில் பிரிக்கப்பட்டுள்ளது. அவையாவன :

1. அகராதிப்பேர்த் தொகுதி
2. ககராதிப்பேர்த் தொகுதி
3. சகராதிப்பேர்த் தொகுதி
4. ஞகராதிப்பேர்த் தொகுதி
5. தகராதிப்பேர்த் தொகுதி
6. நகராதிப்பேர்த் தொகுதி
7. பகராதிப்பேர்த் தொகுதி
8. மகராதிப்பேர்த் தொகுதி
9. யகராதிப்பேர்த் தொகுதி
10. வகராதிப்பேர்த் தொகுதி

அகரமுதல் 'ஔ' காரம் வரையுள்ள உயிர்முதற் சொற்கள் யாவும் அகராதிப் பேர்த் தொகுதியிலும், 'க' தொடங்கி, 'கௌ' வரையுள்ள உயிர்மெய்முதற் சொற்களெல்லாம், ககராதிப் (ககர இனம்) பேர்த் தொகுதியிலும், இவைபோலவே மற்ற மற்றச் சொற்களெல்லாம், மற்ற மற்றத் தொகுதிகளிலும், அடக்கப்பட்டுப் பொருள் கூறப்பட்டுள்ளன.

இத்தொகுதிகளில் பலவகையான சொற்கள் இடம்பெற்றுள்ளன.

1. பிற நிகண்டுகளிலுள்ள சொற்கள்
2. சங்க இலக்கியங்களிலுள்ள அருஞ்சொற்கள்
3. இளம்பூரணர், நச்சினார்க்கினியர் முதலான உரையாசிரியர்கள் தம் உரைகளிற் காணப்படும் அருஞ்சொற்கள்.
4. பிற்காலத் தமிழிலக்கியங்களிற் காணப்படும் சொற்கள்.
5. உலகவழக்குச் சொற்கள்
6. வடமொழி, தெலுங்கு, கன்னடம் முதலியவற்றினின்றும் திரிந்து வந்த சொற்கள்.

"அ"கரத்தில் தொடங்கும் சொற்களை முதற்கண் அமைத்து, அகராதி நிகண்டில் இரேவண சித்தர் ஒரு புதுமையைப் புகுத்தியுள்ளார். ஒரு பொருள் மட்டும் தரும் பகுதிக்கு, "அம்முதல் ஒரு பெயர்" என்ற தலைப்பினைக் கொடுத்துள்ளார். "அம் முதல் ஒரு பெயர்" என்றால், "அ" என்னும் எழுத்தை முதலில் பெற்று, ஒரேயொரு பொருள் தரும் சொல் என்னும் பொருண்மையில் அமைத்துள்ளார்.

(அம் முதல் ஒரு பெயர்)

"அரன் என்பதுவே சங்கரன் ஆகும்.

அம் முதல் ஒரு பெயர் முதல், அம் முதல் நாற்பத்தாறு பெயர்கள் வரையுள்ள நூற்பாக்களை இரேவணச் சித்தர் அமைத்துப் புதுமை செய்துள்ளார். "அரி" என்னும் சொல்லுக்கு நாற்பத்தாறு பெயர்களைக் குறித்துள்ளார். இதுபோன்றே உயிர்மெய் முதற் சொற்களை வண்ணமாலை வரிசையில் அமைத்து, உலக அகரமுதலிகட்கு மட்டுமின்றி தமிழகரமுதலிக்கும் அகரமுதலி வரலாற்றில், இரேவண சித்தர் வழிகாட்டியுள்ளார்.

## உரிச்சொல் நிகண்டு – கி.பி. 1600

பொருள் எளிதில் புலப்படாததும், செய்யுட்கே யுரியதும், பெயரெச்சம் வினையெச்சம் போன்றவற்றிற்கு மூலச்சொல்லாக விளங்கும் சொல், உரிச்சொல் எனப்படும். பொருளால் புடைபெயரும் சொல்லென்பர் அகரமுதலி வல்லுநர். இவ்வாறு மொழிக்கு ஆக்கந் தரும் உரிச்சொல் பற்றிய நூலுக்கு, உரிச்சொல் நிகண்டு என்று பெயர். இவ்வுரிச்சொல் நிகண்டினைக் காங்கேயர் கி.பி. 1600 இல் இயற்றினார். "இவர் தொண்டை மண்டலத்திலுள்ள செங்கற்பட்டைச் சார்ந்தவர் என்று ஒரு பிரிவினரும், கொங்கு நாட்டினர் என்று கொங்கு மண்டல சதக ஆசிரியரும் கூறுகின்றனர்" என்பார் சுந்தர சண்முகனார்.

## உரிச்சொல் நிகண்டின் காலமும் - நூற்சிறப்பும்

காங்கேயர் கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி அல்லது 17 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சார்ந்தவர் என்று ஒரு சாரார் கருதுவர். பதினெட்டாம் நூற்றாண்டில் அரும்பொருள் விளக்க நிகண்டு இயற்றிய அருமருந்தைய (தேசிக)ர், தமது நூலின் பாயிரப் பகுதியில், கி.பி. 16 ஆம் நூற்றாண்டில் சூடாமணி நிகண்டு இயற்றிய ஆசிரியர், மண்டல புருடருக்கு அடுத்து வைத்தெண்ணத்தக்கவர் காங்கேயர் என்று குறிப்பிட்டுள்ளார்.

"மாவியல் சிறக்கும் வீரை
மண்டலவன் காங்கேயன்" என்னும் அறம்பொருள் விளக்கப் பாடற்பகுதியால் கி.பி.16 ஆம் நூற்றாண்டின ரெனக் கருதப்படும் மண்டலபுருடருக்கும், கி.பி.18 ஆம் நூற்றாண்டினரெனக் கருதப்படும் அருமருந்தைய (தேசிக)ருக்கும் இடைப்பட்டவராகக் காங்கேயனைக் கொண்டு, உரிச்சொல் நிகண்டின் காலம் கி.பி.17 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என முடிவு கட்டுதல் ஒரு சார் பொருத்தமுடைத்து. காங்கேயர் 14 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்றும் சிலர் கருதுவர்.

**சிவ(சைவ) சமயத்தினர்** : காங்கேயர் சிவ(சைவ) சமயத்தைச் சார்ந்தவரென்பதை, உரிச்சொல் நிகண்டில் அமைந்துள்ள, முதற்பாடலால் அறியலாம்.

"திருமாலுஞ் செங்கமல மேயானுங் காணாப்
பெருமான் பிறைசூடும் பெம்மான் - அருள்மூர்த்தி
நன்னெஞ்சி னான்மறையோன் தில்லை நடம்புரிவோன்
என்னெஞ்சின் மேய இறை"

இப்பாடலின் வாயிலாகச் செங்கண் நெடுமாலும், நான்முகனும் காண்பதற்கரியன்; நன்னெஞ்சமுடைய அன்பர்க்கு எளியனென்றும், சிவபெருமானின் பெருமைகளைப் பாடிப் பரவியுள்ளதால், காங்கேயர் சைவரேயெனலாம்.

காங்கேயர்தம் உரிச்சொல் நிகண்டு, நிகண்டின் முப்பெரும் பிரிவுகளை உள்ளடக்கியது; 287 வெண்பாக்களால் ஆகியது; மூவாயிரத்து இருநூறு சொற்களைக் கொண்டது. கொல்லம் ஆண்டு 950 இல் அஃதாவது கி.பி.1775 ஆம் ஆண்டில், முதற்கண் ஏடு பெயர்த்து எழுதப்பட்டது. பன்னிரு தொகுதிகளாக அமைந்த உரிச்சொல் நிகண்டின் ஓலைச் சுவடிகளைப் பராக்கிரம பாண்டிய தேவன் பத்துத் தொகுதிகளாக ஒழுங்குபடுத்தியதை,

"உத்தமசீலத்துக் காங்கேயன் சொன்ன உரிச்சொல் தன்னை
வைத்த மனத்து ................
.................. பராக்கிரம பாண்டியதேவன் கண்டீர்
பத்துத் தொகுதியிற் சேர்த்தான் எவரும் படித்திடவே"

என்னும் பழம்பாடல் மூலம் அறியலாம். பராக்கிரம பாண்டியதேவன், உரிச்சொல் நிகண்டின் பத்தாவது தொகுதியில், ஒலி பற்றிய பெயர்த் தொகுதியை, பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதியையும் சேர்த்து ஒழுங்கு படுத்தியதை உரைப்பதால், முதற்கண் உரிச்சொல் நிகண்டில் பன்னிரு தொகுதிகள் இருந்தமை தெளிவு. இந் நிகண்டு குமாரசாமிப் புலவரால், 1908 ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டது.

## உரிச்சொல் நிகண்டுரை கி.பி.1840

கி.பி. 1775 ஆம் ஆண்டில் ஏடு பெயர்த்து, சீர்மைப்படுத்தி வெளியிட்ட பராக்கிரம பாண்டியதேவன் பதிப்பிற்குப் பின்பு, உரிச்சொல் நிகண்டின் பல பதிப்புகள் வெளிவந்தன. அவற்றுள் முதன்மையானது, சிற்றம்பலம் என்னும் தமிழாசிரியரின் உரையுடன் கி.பி.1840 இல் "உரிச்சொல் நிகண்டுரை" என்னும் பெயரில் வெளிவந்த புதுவைப் பதிப்பாம். இப்பதிப்பு புதுச்சேரி அரசு அச்சகத்தில், பத்துத் தொகுதிகளுக்கான உரையுடன் புதுவைக் குவெர்னமா அச்சுக்கூடத்தில், பேராசிரியர் சிற்றம்பலம் அவர்களால் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது.

உரிச்சொல் நிகண்டுரை என்னும் இந்நூல், காங்கேயர் யாத்த 287. வெண்பாக்களுக்கு, பேராசிரியர் சிற்றம்பலம் வரைந்த உரையுடன் ஆனது. இந்நூல் கி.பி.1840 ஆம் ஆண்டு, புதுவையில் மர்க்கிதே சேங்கிமோ என்பவர் ஆளுநராய் இருந்த ஞான்று, துத்தென் என்னும் வெள்ளைத்துரை அரசினர் அச்சகத் தலைவராய் இருந்தபோது, வெள்ளையர் மேற்பார்வையில் நடந்த அரசினர் பள்ளிக் கூடங்களில் பாடமாக வைக்கப்பட்டிருந்தது. இச்செய்தி நிகண்டு வரலாற்றில் அல்லது தமிழகரமுதலி வரலாற்றில் குறிக்கத்தக்கது.

இவ்வுரிச்சொல் நிகண்டும், உரையும் புதுச்சேரியில் பிரஞ்சுக்காரர்களின் ஆட்சி நிலைத்த பின்னரும், அரசினர் பள்ளிகளில் கற்பிக்கப்பட்டு வந்தது. அந்நிகண்டு, உரையும் இருக்குமிடம் தெரியவில்லை. நூலகங்களில் கேட்பாரின்றிக் கிடக்கின்றது.

## உரிச்சொல் நிகண்டும் – உரையும்

ஒருசொல் பல்பொருட்டொகுதியிலமைந்த, முதற் பாடலும், பேராசிரியர் சிற்றம்பலத்தின் உரையும் வருமாறு :-

"அரி" என்னும் சொல்லுக்குப் பதினாறு பொருள்களும், "கோ" என்னும் சொல்லுக்குப் பதினொரு பொருள்களும் சுட்டும் காங்கேயர் பாடல் :

"அரிபன்றி தேரைகிளி பச்சையளி சிங்கம்
பரிகவிபாம் பிந்திரன்மால் கால்கூற் றிருசுடர்தீ
கோவிறை திக்குக் கிரணஞ் சலங்குலிச
மாவுரைகண் பார்சுவர்க்க மம்பு"

**சிற்றம்பல ஆசிரியர் உரை :-** அரி என்றது – பன்றி, தேரை, கிளி, பச்சை, வண்டு, சிங்கம், குதிரை, குரங்கு, பாம்பு, தேவேந்திரன், திருமால் (விஷ்ணு), காற்று, இயமன், சந்திரன், சூரியன், நெருப்பு – ஆக 16.

கோ என்றது – இராசா, திக்கு, கிரணம், நீர், வச்சிராயுதம், கூப்பிடல், சொல், கண், (பூமி) நிலம்; தெய்வவுலகம் (லோகம்); அம்பு – ஆக 11.

**கயாதர நிகண்டு :** கி.பி. 15 அல்லது கி.பி. 17.

"கயாதர நிகண்டினைக் கயாதரர், கி.பி.15–ஆம் நூற்றாண்டில் இயற்றினார்" என்பார் தா.வே. வீராசாமி. இவர் 17 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவரென புலவர் சுந்தர சண்முகனார், முனைவர் வ.ஜெயதேவன் போன்றோர் கருதுகின்றனர். கி.பி. 18 ஆம் நூற்றாண்டில் அரும்பொருள் விளக்க நிகண்டினை இயற்றிய அருமருந்தைய (தேசிக)ர், இவர்தம் நிகண்டுப் பாயிரத்தில் .............

"ரேவண சித்தன் செஞ்சொற்
கயாகரன் இவராற் சொற்ற" என்று குறிப்பிட்டுள்ளதால், இவர் தம் காலத்திற்கு (கி.பி.18 ஆம் நூற்றாண்டு) முந்தியவர் என்று புலவர் சுந்தர சண்முகனார் கருதுகின்றார். இந் நிகண்டு பேராசிரியர் வையாபுரி அவர்களால் 1939 ஆண்டு பதிப்பிக்கப்பட்டது.

### பிறப்பிடமும் நிகண்டுச் சிறப்பும்

இராமேச்சுரத்தில், சைவ மரபில் தோன்றிய கயாதரர், தம் நிகண்டு நூலைக் கட்டளைக் கலித்துறை யாப்பில், அனைவர்தம் நெஞ்சில் பதியும் வண்ணம் அந்தாதித் தொடையில் அமைத்துள்ளார். வேதகிரி வெளியிட்ட இலக்கியக் களஞ்சியத்திலும், மாறனலங்காரம் என்னும் அணியிலக்கண நூலின் உரையிலும், இந் நிகண்டு, "கயாகர நிகண்டு" என்று சுட்டப்பட்டுள்ளது. ஆண்டிப் புலவர் இயற்றிய ஆசிரிய நிகண்டின் பாயிரத்திலும், "கயாகரம்" என்றே குறிக்கப்பட்டுள்ளது.

(எ.கா.) "முறைபெறு கயாகரம் பகரும் அகராதி யிவை
முற்றும் ஒன்றாய்த் திரட்டி"

கயாதரர், தமது நிகண்டின் தற்சிறப்புப் பாயிரப் பாடல்களில், தமது பெயரைக் கெயாதரன் என்றும், தமது நிகண்டினைக் "கெயாதரம்" என்றும் குறிப்பிட்டுக் காட்டும் பாடல்கள் வருமாறு :-

### "கெயாதரன்" என்று சுட்டும் பாடல் :-

"பேதையர் பித்தர் அறியாத பாலர்சொற் பேதங்கொள்ளார்
ஓதினுங் குற்றந் தெரியார் பெரியவர் ஓங்கிடப
கேதனன் பற்று மறவாத தேவைக் கெயாதரன்தொல்
வேதியன் சொற்ற உரிச்சொற் பனுவலு மேம்படுமே"

### கெயாதரம் என்று குறிக்கும் பாடல் :-

"வடக்குங் குமக்கொங்கை மங்கைதன் பங்கன் மலரடிக்கீழ்க்
கிடக்குந் தனிநெஞ் சுடையோன் உரிச்சொல் கிளர்பனுவல்
குடக்குங் குணக்கும் வடக்குந் தென்பாலுங் குவலயத்து
நடக்கும் படியாக் கெயாதரம் என்றுபேர் நாட்டினனே"

என்று கயாதரர் ஒவ்வொரு பாடலிலும், தனது பெயரையும், நூலின் பெயரையும் குறிப்பிட்டுள்ளார். கந்தகத்தைக் கெந்தகம் என்றுரைப்பது போன்று கயாதரமும், கெயாதரமென்று பேசப்பட்டும், எழுதப்பட்டும் வந்திருக்கலாம். பேச்சு நடைக்கு ஏற்றவண்ணமே, எழுத்து நடை அமையும் என்ற இக்கால மொழியியலார் கொள்கைக்கு ஏற்றவாறே கயாதரம், கெயாதரம் ஆயிற்று எனலாம்.

**கயாதரம் புதுமை அமைப்பு :-** திவாகரம், சூடாமணி, உரிச்சொல் நிகண்டுகளின் உட்பிரிவுகள் "தொகுதி" என்ற பெயராலும், பிங்கலத்தில் வகை என்றும் குறிப்பிட்டுள்ளது போல், கயாதரத்திலமைக்கப் பட்டுள்ள பதினொரு பிரிவுகளும், "இயல்" என்று சுட்டப்பட்டுள்ளன. கயாதரத்தில் அமைக்கப்பட்டுள்ள பதினோரியல்களும் நிகண்டுகட்குரிய முப்பெரும் பிரிவுகளுள், முதலிரு பிரிவுகளை விளக்குவனவாகும். கயாதரத்திலுள்ள பதினோரியல்களும் வருமாறு:-

1. தெய்வப் பெயரியல்
2. மக்கட் பெயரியல்
3. இடப் பெயரியல்

4. விலங்கின் பெயரியல்
5. மரப் பெயரியல்
6. பல்பொருட் பெயரியல்
7. செயற்கை வடிவிற் பெயரியல்
8. பண்புப் பெயரியல்
9. செயல் பற்றிய பெயரியல்
10. ஒலி பற்றிய பெயரியல்
11. ஒரு சொல் பல்பொருளியல்

இறுதியதாம் இப் பதினோராவது இயல்பிற்காலத்தே இடைச்செருகலாகச் சேர்க்கப்பட்டதெனச் சிலர் கருதுவர். "இது பொருந்தாது. பதினோரியல்களும் அமைந்துள்ள ஓலைச்சுவடியின் இறுதியில் காணக்கூடும் பாடல் வருமாறு :

"அரும்பொருள் அந்தாதி சூடிய சீதரன் அம்பிகையைத்
தரும்பொருள் செய்த பரம்பரை யான்றினம் தண்டமிழோர்
விரும்பியகோவை யுரிச்சொற் பனுவல் விரித்துரைத்தான்
பெரும்பொருள் கண்ட கெயாதரன் தேவைப் பெருந்தகையே"

பதினோராவது தொகுதியும், கயாதரத்தில் உண்டு என்பது இப்பாடலாற் புலனாகும்".

கி.பி.18 ஆம் நூற்றாண்டில் அரும்பொருள் விளக்க நிகண்டு செய்த அருமருந்தைய தேசிகர், கயாகரனின் ஒரு சொல் பல்பொருள் தொகுதியினின்று சொற்களைத் தெரிவுசெய்து, ஒரு பெரும் நூலை உருவாக்கியதாகக் கூறும் பகுதி வருமாறு :

"............... ரேவண சித்தன் செஞ்சொற்
கயாகரன் இவராற் சொற்ற
பாவியல் நூற்கூறு ஓர் சொல்
பால் பொருள் தொகையெலாம் சேர்த்து
ஓவிலா வளஞ் சிறப்ப
ஒருபெரு நூலதாக" என்னும் பாடற்

பகுதி, கயாதரத்தில் பதினோராம் பகுதி உண்டென்பதை உறுதிப்படுத்துகிறது.

கயாதரத்தில் மொத்தம் 566 பாடல்கள் உள்ளன. முதல் பத்து இயல்களில் 10,500 சொற்களும், பதினோராவது இயலில் 850 சொற்களும், இடம்பெற்றுள்ளன.

பதினோராந் தொகுதியாகிய ஒருசொல் பல்பொருளியலினின்றும் எடுத்துக்காட்டுப் பாடல்கள் வருமாறு:-

"அரிகடல் மால்பன்றி ஆயுதம் பச்சை அளி அருக்கன்
எரிபுகை கிண்கிணி பெய் பரல் ஐம்மை யமன் கிளிகண்
வரிவலி இந்திரன் மாருதம் நேமி மடங்கல் மது
பரிபகை செந்நெற் கதிர்தேரை வானரம் பாம்பு பொன்னே"

"பொன்னேர் இரும்பு சுரர்குரு மாடை பொலிவு திரு
என் ஏர் அழகு முழு பெற்றமும்; எல் ஒளி பகலாம்
தென்னே வனப்பும் இசை பாடலும் தென்றிசையும் என்ப
கொன்னே பெருமை பயனிலி அச்சம் கொளும் பொழுதே"

மேற்காண் முதற் பாடலில். "அரி" என்னும் சொல்லுக்கும், இரண்டாம் பாடலில் பொன், ஏர், எல், தென், கொன் ஆகிய சொற்கட்குமுரிய பொருள்கள் கொடுக்கப்பட்டுள்ளன. மற்றும், முதற் பாடலின் இறுதியிலுள்ள, "பொன்" என்னும் சொல்லே, அடுத்த பாடலின் முதலாக அந்தாதித்தொடை அமைப்பில் அமைந்து, தமிழகரமுதலி வரலாற்றில் சிறப்பிடம் பெறுகின்றதெனலாம்.

கயாதரத்தின் ஒவ்வோர் இயலின் இறுதியிலும், ஆசிரியர்தம் பெயர், வரலாறு, இயலின் பெயர் ஆகியவை கூறியுள்ளதும், நிகண்டு வரலாற்றில் குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

## பல்பொருட் சூடாமணி – (கி.பி.1700)

நிகண்டுகளின் முப்பெரும் பிரிவுகளுள், "ஒருசொல் பல்பொருட் பெயர்த் தொகுதி" என்னும் இரண்டாம் பிரிவையும், "பல்பொருட் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதி" என்னும் மூன்றாம் பிரிவையும், தன்னகத்தே கொண்டு ஈசுரப் பாரதியார், கொல்லம் 876 ஆம் ஆண்டில் அஃதாவது கி.பி.1700 இல், பல்பொருட் சூடாமணி நிகண்டினை இயற்றினார்.

இதனை வடமொழி நிகண்டென்றும் கூறுவர். விருத்தப்பாவினாலாகிய, இந் நிகண்டு, நிகண்டுகளின் முப்பெரும் பிரிவுகளை உள்ளடக்கிய தென்பார், முனைவர். வ. ஜெயதேவனார். இந்நிகண்டுபற்றிய பிற செய்திகளை, அச்சில் வாராத நிகண்டுகளின் தலைப்பில் கண்டு கொள்க. வடமொழி நிகண்டாகிய அமரகோசத்தைப் பின்பற்றி பல்பொருட் சூடாமணி தோன்றியது என்பார் வ.செயதேவன்.

பல்பொருட் சூடாமணி நிகண்டின் உட்பிரிவுகள், ஏனை நிகண்டுகளைப் போலன்றிக் "காண்டம்" என்னும் பெயரில் அமைந்துள்ளது. இந்நிகண்டு, நிகண்டுகளின் இருபெருந் தொகுதிகளை உள்ளடக்கியது. ஆசிரியர்

இந்நிகண்டினைப் பின்வருமாறு மூன்று காண்டங்களாகப் பகுத்துக் கொண்டார்.

1. ஒருசொல் ஒருபெயர்க் காண்டம் – 2800 சொற்கள்
2. ஒருசொல் பல்பொருட் காண்டம் – 1465 சொற்கள்
3. பல்பெயர்க் கூட்டத்து ஒருபெயர்க் காண்டம் – தொகைப் பெயர்களை விளக்குவது

## வடமலை நிகண்டு (கி.பி. 1700)

பல்பொருட் சூடாமணி நிகண்டும், வடமலை நிகண்டும் ஒன்றேயாகும். விருத்தப்பாவில் ஈசுரபாரதியால் கி.பி.17 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. நிகண்டின் முப்பெரும் பிரிவுகளைக் கூறும் இந்நிகண்டு, 1983 இல் மேனாள் தொல்பொருள் ஆய்வுத் துறை இயக்குநர் நாகசாமியால் பதிப்பிக்கப்பட்டது.

## கைலாச நிகண்டு சூடாமணி (கி.பி.17 ஆம் நூற்றாண்டு)

கைலாச நிகண்டு சூடாமணி என்னும் இந்நூலின் பெயரைக் கொண்டு, இதன் ஆசிரியர் பெயர் கைலாசம் என்பதாக இருக்கலாம். ஆசிரியர் 17 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்திருக்கலாம் என்பது ஆய்வாளர்தம் கருதுகோளாகும். ஐம்பத்தாறு தொகுதிகளையுடையது; நூற்பா நடையாலாகியது. இந் நிகண்டினுள்ள முதல் 49 பிரிவுகள், திவாகரத்திலுள்ள முதல் பத்துத் தொகுதிகளின் அமைப்பினை யுடையது. இறுதியிலுள்ள ஏழு பிரிவுகள், திவாகரத்தில் பதினோராவது தொகுதியான, ஒருசொல் பல்பொருட் பெயர்த் தொகுதியின் வகைகளாகும். நிகண்டுகளின் முப்பெரும் பிரிவுகளின், இரண்டாவது பிரிவினைக் கைலாச நிகண்டு ஏழு வகைகளாகப் பகுத்துள்ளது. அவை வருமாறு:–

1. ஓரெழுத் தொரு மொழி
2. ஓரெழுத்தொற்றொரு மொழி
3. ஈரெழுத்தொரு மொழி
4. ஈரெழுத்தொற்றொரு மொழி
5. மூவெழுத்தொரு மொழி
6. மூவெழுத்தொற்றொரு மொழி
7. நாலெழுத் தொரு மொழி

இந் நிகண்டு தொகுதிப் பிரிப்பில், பிங்கல நிகண்டை ஓரளவு ஒத்துள்ளது. அஃதாவது பிங்கலத்தில் வான்வகை; வானவர் வகை, ஐயர் வகை, அவனி வகை போன்ற பிரிவுகள் உள்ளதுபோல், கைலாச நிகண்டிலும் விண்ணவர் வகை; விண்ணின் வகை, மண்ணின் வகையெனப் பிரிக்கப்பட்டு – 15000 பெயர்கள் அமைக்கப்பட்டுள்ளன.

மேற்காண் பிரிவேழனுள், ஓரெழுத்தொரு மொழிப்பிரிவு மட்டும், அகரவரிசையில் அமைக்கப் பட்டுள்ளது. ஓரெழுத் தொற்றொரு மொழிப்பிரிவி லிருந்து, மூன்று நூற்பாக்கள் வருமாறு:

"ஓர் இடைச் சொல்லும் உரைக்குங் காலமும்
பேசில் வறிதும் பெருமையுங் கொன்னே
அச்சமும் ஆங்கதற் காகும் என்ப"

"காற்றும் வழியும் காலும் பொழுதும்
கூற்றும் அளவையும் குவிதேர் உருளையும்
காம்பும் தறியும் கண்ணென் உருபும்
வான்கொடிப் படரு மரமும் புதல்வரும்
சரிபுனல் ஓடைத் தாழ்ந்த வதியும்
உரியதோர் இலக்கமும் உரைக்கும் காலே"

"அருக்கன் முதலா வாய்ந்த வொன்பதும்
வலியும் கொள்கையும் வல்லிடை யூறும்
கொலையும் பிசினமும் கோளெனத் தகுமே"

மேற்காண் நூற்பாக்களிலும் முறையே கொன், கால், கோள் என்னும், இம்மூன்று சொற்கட்குரிய பொருள்கள் கொடுக்கப்பட்டுள்ளன. கொ, கா, கோ என்னும் ஓரெழுத்தடுத்து ன், ல், ள் என்னும் ஒற்று வந்துள்ளதால், இச்சொற்கள் ஓரெழுத்தொற்றொரு மொழி என்னும் தொகுதியில் சேர்க்கப்பட்டன. அச்சில் வாராத நிகண்டுகள் தலைப்பில், இந்நூல் பற்றிய பிற செய்திகளைக் கண்டு கொள்க.

## பாரதி தீபம் – கி.பி. 17 ஆம் நூற்றாண்டு

கி.பி. 17–ஆம் நூற்றாண்டில் திருவேங்கட பாரதி என்பவரால் இயற்றப்பட்ட இப் பாரதி தீப நிகண்டெனும் தமிழ்ச் சொற்பொருள் விளக்கம் செய்யும் நூல், 737 கட்டளைக் கலித்துறைப்பாக்களானானது. பதின் மூன்றாயிரம் சொற்களுக்குப் பொருள் செய்யும் இந்நிகண்டு 1980 இல் சண்முகம் பிள்ளை என்பவரால் பதிப்பிக்கப்பட்டது.

**ஆசிரியரும் நூற்சிறப்பும் :** தென்கடம்பை என்னும் ஊரைச் சார்ந்த துறவியரான திருவேங்கட பாரதி

யாவர். இவர் நிகண்டின் ஒவ்வொரு தொகுதியின் இறுதியிலும், இத்தனையாவது தொகுதியாகிய, இந்தத் தொகுதியை, இன்னார் செய்தார் என்ற குறிப்பு உள்ளது. எடுத்துக்காட்டாக, மூன்றாம் தொகுதியாகிய விலங்கின் பேர்த்தொகுதியின் இறுதிப் பாடல் வருமாறு:-

"மீன்றாவு வாவிக் கடம்பையில் வாழ்திருவேங்கடவன்
என்றாதல் கூறுங் கவிவேந்தன் பாரதி யேற்றமலர்த்
தேன்றாழ் தொடைப்பயன் செப்பிய பாரதி தீபந்தன்னில்
மூன்றாவது விலங்கின் பேர்த்தொகுதி முடிந்ததுவே" -

இன்ன பிறபாடல்கள் ஆசிரியரைப் பற்றி அறிந்து கொள்ளத் துணை புரிகின்றன.

கயாதரத்தைப் போன்று கட்டளைக் கலித்துறைப் பாடல்களைத் திருவேங்கட பாரதி கற்பவர் நெஞ்சில் நிற்கும் வண்ணம் யாத்துள்ளார். பன்னிரண்டு தொகுதியிலுள்ள பாடல்கள் யாவும், இவர்தம் பாவியச் சிறப்பைப் பறைசாற்றும் வண்ணம் அமைந்துள்ளன. இந் நிகண்டினைச் சிறப்பித்துப் பேச வந்த புலவர் சுந்தர சண்முகனார் "முதல் பத்துத் தொகுதிகளில் மட்டும் 13,000 சொற்கள் இடம் பெற்றுள்ளனவாம். மாதிரிக்காக, முதல் தொகுதியாகிய தெய்வப் பெயர்த்தொகுதியின் தொடக்கத்தில், சிவன் பெயர்களைக் குறிப்பிடும் பாடல் வருமாறு:-

"அரன்இறை வன்சிவன் சங்கரன்நித்தன் அமலன் கங்கா
தரன் உமை பங்கன் மலைவில்லி தற்பரன் தாணுச்சம்பு
புரதக னன்புனி தன்பிறை சூடி புலியதளோன்
பரசு தரன் கயிலாயன் கபாலி பசுபதியே"

மேலுள்ள பாடலில் ஒவ்வொரு பெயருக்கு முன்னால், எவ்விதமான அடையேதுமின்றிப் புரிந்துகொள்ளும்படி அமைக்கப்பட்டிருப்பது மிகவும் குறிப்பிடத்தக்கது".

## ஆசிரிய நிகண்டு
## (கி.பி. 17 ஆம் நூற்றாண்டு)

தொண்டை நாட்டிலுள்ள செஞ்சியையடுத்த, ஊற்றங்கால் எனும் ஊரைச் சார்ந்த ஆண்டிப் புலவரால், கி.பி. 17 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், ஆசிரிய விருத்தத்தால் யாக்கப்பட்ட நிகண்டாதலின், ஆசிரிய நிகண்டு என்னும் பெயர், இந்நிகண்டிற்கு ஏற்பட்ட தென்பர். சங்கறுக்கும் நற்கீரர் குலத்தைச் சார்ந்த இவர் முகமன் வழக்காக, நற்கீரர் என அழைக்கப் பட்டமைக்கான, எடுத்துக்காட்டுப் பாடல் வருமாறு:-

"மன்னுசெஞ் சிச்சீமை சூழ்தொண்டை வளநாட்டில்
வாய்த்த வூற்றங்காலில் வாழ்
வளையறுப் போர்குலன் பாவாடை வாத்தியார்
மைந்தனாம் நற்கீரனே"

ஆண்டிப்புலவர் தமக்கு முன்பு நிகண்டுகளை யாத்த திவாகரர், பிங்கலர், காங்கயன், கயாகரர் போன்றோர் செய்தன, செய்தளித்தமை குறித்துத் திரட்டி, ஆசிரிய நிகண்டுப் பாயிரத்தில் கூறியுள்ளார்.

"முந்துள திவாகரம் பிங்கல நிகண்டு சீர்
முந்து காங்கயன் உரிச்சொல்
முறைபெறு கயாகரம் பகரும் அகராதி யிவை
முற்றும் ஒன்றாய்த் திரட்டி" -

யாத்துள்ளாரென்பது, இதன் மூலம் தெளிவாகிறது.

### நூலமைப்பும் சிறப்பும் :

ஆசிரிய நிகண்டு 263 ஆசிரிய விருத்தப் பாக்களினால் ஆகியது. மிக நீளமான அடிகளுடன் அமைந்தது. பதினொரு தொகுதிகளுடன் அமைக்கப்பட்டது. முதற் பத்துத் தொகுதிகளில் மட்டும் 12,000 சொற்கள் தெளிவுறுத்தப் பட்டுள்ளன. பதினோராற் தொகுதியாகிய ஒரு சொல் பல்பொருட் பெயர்த்தொகுதியிலிருந்து காட்டாக, ஒரு பாடல் வருமாறு:-

"கஞ்சமிகு தீபமோர் தகழிவட் டப்படைக்
கலமேறு தாளமுடனே
கட்டில் எட்டும் பாண்டில் என்பர் செல்வம் பெருமை
சஞ்சரிக மிகவெறுப் பொடுகமலை வரவழைத்
தல்பிண்டி பத்துமாவென்
றாகும்வெறி யாட்டுநாற் றங்கலக் கத்துடன்
சாறுவெம் பேய்வெருவுதல்
எஞ்சல்பெறு வட்டமொடு துருவையிரு
நாலும்வெறி யெழுமோசை பற்றுநாடூர்
ஏற்றகர தலநெடும் போதுபுனல் சோலைபல்
லியம்பண்ட மிவைபாணியாம்
செஞ்சொலா வணங்கோட ரம்புனற் கரைபாகல்
திகழ்விலங்கின்வால் பசுச்
செய்வரம் பிவைகூல மென்றுமுத் தமிழ்முனி
செப்புமிப் பொருளாகுமே"

இப் பாடல் ஆண்டிப்புலவரின் பாத்திறனுக்கும், இலக்கணப் புலமைக்கும் சான்று பகர்வனவாம். பார்வைக்குப் பதினாறு அடிகள் உடையதுபோல் தோன்றினாலும், ஒவ்வோர் அடியும், பன்னிரண்டு

சீர்களில், பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தாலானது. இப்பாடலின் கண், "பாண்டில்" என்னும் சொல்லுக்கு எட்டுப் பொருளும் (எட்டும் பாண்டில்) – "மா" என்னும் சொல்லுக்குப் பத்துப் பொருளும் (பத்துமா); "வெறி" என்னும் சொல்லுக்கு எட்டுப் பொருளும் (இரு நாலும் வெறி) உரியன என்று எண்ணிட்டதன் மூலம், பாடலியற்றும் திறத்தினை ஆசிரியர் வெளிப்படுத்தியுள்ளார். இந்நிகண்டு 1978–ஆம் ஆண்டு சொக்கலிங்கம் என்பவரால் பதிப்பிக்கப்பட்டது.

## அரும்பொருள் விளக்க நிகண்டு – கி.பி.1763.

திவாகரம், பிங்கலம், உரிச்சொல் முதலான அனைத்து நிகண்டுகளின் பதினோராந் தொகுதியினின்று அருஞ்சொற்களைத் தன்னகத்தே கொண்டு திகழும் அரும்பொருள் விளக்க நிகண்டு கி.பி.18–ஆம் நூற்றாண்டில், அருமருந்தைய தேசிகரால் இயற்றப்பட்டது. "அரும்பொருள் விளக்கத் தீபிகை" – என்று இந்நூலாசிரியர், தற்சிறப்புப் பாயிரத்தில் சிறப்பித்துக் கூறியுள்ளார். பதினெட்டுத் தொகுதிகளாக ஆசிரியர் இந்நூலினை, எழுநூறு விருத்தப்பாக்களில் யாத்தள்ளார்.

## ஆசிரியர் சிறப்பும் – நூற்சிறப்பும்

திருச்சீர் அலைவாய் (திருச்செந்தூரில்) தோன்றிய அருமருந்தைய (தேசிக)ர், சிவப்பிரகாசர் என்பவரின் திருமகனாவார். வீரசைவக் குடும்பத்தில் தோன்றிய இவர், தமது ஆசிரியரான பச்சைக் கந்தரின் ஆணைக்குட்பட்டு, பதினெட்டுத் தொகுதிகளில் 3,200 சொற்களைத் தெளிவுறுத்தியுள்ளார். இந்நிகண்டு 1931 ஆம் ஆண்டு, பேராசிரியர் வையாபுரி அவர்களால் பதிப்பிக்கப்பட்டது. பல பொருள் ஒரு சொல்லுக்கென்றே முதலில் அமைக்கப்பட்ட இந்நிகண்டு, சொல்வளத்திலும், எதுகை நயத்திலும் உயர்ந்துள்ளது. ஆசிரியர் பதினெட்டுத் தொகுதிகளின் இறுதியிலும், திருச்செந்தூர் முருகன் மீது தமக்குள்ள ஆரா அன்பின் மாறாக்காதலை வெளிப்படுத்துகிறார்.

"செந்தில் மேவும் அருமருந்தையன்", "செந்தில் அரு மருந்தையன்" என்று ஒவ்வொரு தொகுதியின் இறுதியிலும், குறிப்பிட்டதின் வாயிலாகச் செந்தில் வேலவன்பால், தமக்குள்ள ஈடுபாட்டினை வெளிப்படுத்துகிறார். "இந்நூற் பாயிரத்தின் இறுதிச் செய்யுளில் ஆசிரியர், இந்நிகண்டு வெளியான காலத்தைத் தெளிவாகத் தெரிவித்துள்ளார். சகம் 1685 ஆம் ஆண்டில், அஃதாவது கி.பி.1763 ஆம் ஆண்டில், தமிழ் சித்திரபானு ஆண்டில், மாசித் திங்கள் சிவராத்திரி வழிபாடு நிகழ்ந்த ஒரு வெள்ளிக் கிழமையில், சிதம்பரத்தில் திருக்கோயிலில், இந்நிகண்டு அரங்கேற்றம் செய்யப்பட்டது" என்பார் சுந்தர சண்முகனார்.

விருதப்பாவினாலாகிய இந்நிகண்டில், பதினோராந் தொகுதியாகிய, ஒரு சொல் பல்பொருள் பெயர்த் தொகுதியை மட்டுமே விரிவாக விளக்கும் பான்மையில், அமைக்கப்பட்டுள்ள 3200 சொற்களும், உரிச்சொல், கயாதர நிகண்டுகளிற் காணப்படும் சொல்லளவினுமிந் நிகண்டு கூடுதற் சொற்பொருட் சிறப்புடையது.

| | | |
|---|---|---|
| 1. ககர வெதுகை | : | 2. ஙகர வெதுகை |
| 3. சகர வெதுகை | : | 4. ஞகர வெதுகை |
| 5. டகர வெதுகை | : | 6. ணகர வெதுகை |
| 7. தகர வெதுகை | : | 8. நகர வெதுகை |
| 9. பகர வெதுகை | : | 10. மகர வெதுகை |
| 11. யகர வெதுகை | : | 12. ரகர வெதுகை |
| 13. லகர வெதுகை | : | 14. வகர வெதுகை |
| 15. ழகர வெதுகை | : | 16. ளகர வெதுகை |
| 17. றகர வெதுகை | : | 18. னகர வெதுகை |

இந்நிகண்டு செய்யுளின் அடிதோறும் காணும், முதற்சொல்லிலுள்ள இரண்டாவது எழுத்து ஒத்துவரும் வண்ணம் தொடுக்கப்பட்டுள்ள பாங்கு, நெட்டுருக் கொள்ள எளிமையாக உள்ளது. ஓர் எதுகைச்சொல்லில் மற்றொரு எதுகைச்சொல் கலந்துள்ள சூடாமணி நிகண்டு போல் அன்றி, அருமருந்தையர் ஓர் இனவெதுகைச் சொற்களோடு, வேறினவெதுகைச் சொல் கலக்காமல், எளிதில் மனனம் செய்வதற்கு ஏற்றவாறு அமைத்துள்ளார். இவ்வமைப்பு நிகண்டு வரலாற்றில் குறிப்பிடத்தக்கதென்று அகராதி வல்லுநர் கருதுகின்றனர். நிகண்டினைச் சுவைக்கும் வண்ணம் அமைத்துள்ள அருமருந்தையர் தற்சிறப்புப் பாயிரத்தில் பாடியுள்ள ஒன்பது பாடல்கள் வாயிலாக, நூலமைப்பும், நூற்சிறப்பும், தமது வரலாறும் விளக்கமுறுகிறது. இவ்வொன்பது பாடலுள் ஏழாம் பாடல் வருமாறு .

"நவை யறு ககர மாதி
 னகரவீ றெதுகை தன்னால்
நுவலடிக் கிரண்டு மொன்றும்
 நுண்பொருள் ஒருங்கு சேர்த்திச்

சுவைதிகழ் சொல்வி ருத்தத்
தொகை யெழு நூறு தன்னால்
அவை நலோர் குற்றஞ் சொல்லார்
என்பதை யகத்தி லெண்ணி"

மேற்காண் பாடல், நிகண்டமைப்பு மற்றும் நிகண்டில் இடம் பெற்றுள்ள பாடல்களின் தொகை, இத்துணையெனத் தெளிவுறுத்துகிறது. இப்பதினெண் தொகுதிகளிலும், அருமருந்தையர் தொகுதிதொறும், தொடக்கமாக முருகனை வணங்கித் தொடங்குகிறார். இன்ன எதுகையைப் பற்றிச் சொல்லத் தொடங்குகிறேன் என்றும் குறித்துள்ளார். இது போன்றே, ஒவ்வொரு தொகுதியை முடிக்கும் ஞான்றும், செந்திலில் வாழும் முருகனை வணங்கும், அருமருந்தையன் என்கிற நான் இன்ன எதுகையைப் பற்றி, இத்தனை பாடல்கள் பாடினேமென எண்ணளவிட்டு, எதுகைப்பெயரும் தம் பெயருடன் ஊர்ப்பெயரும், வழிபடுகடவுட் பெயரும் கூறியுள்ளார். சான்றாக முறையே 'ல'கர வருக்கம் மற்றும் 'ழ'கர வருக்க, எதுகைத் தொகுதியின் முதற் பாடலும், இறுதிப் பாடலும் வருமாறு:

## எதுகைத் தொடையமைந்த பாடல்

"கொலை கிளர்ந் தொளிருஞ் செய்ய
கூரிலை வடிவேற் றாங்கு
மலைசெறி கடகத் திண்டோள்
மஞ்ஞைவா கனத்தெம் பெம்மான்
முலைமுகிழ்க் குறமின் கேள்வன்
மூவிரு முகனைப் போற்றிக்
கலைவளர் புகழ் சகார
எதுகையின் கவியைச் சொல்வாம்"

"வழுவில வொலிசி றக்கும்
வல்லின மாஞ்சகார
மொழியெது கையினிற் செய்யுள்
மூவொன்ப தாகச் செய்தான்
கழுதுண அசுரர் சேனைக்
கடறொலை குகனைப் போற்றும்
அழகியற் செந்தின் மேவும்
அருமருந்தையன் றானே"

ககர எதுகைப் பகுதியின் முதற்பாடலில், அகவல், தகவு, பகவதி, முகவு என்னும் சொற்களின் மூன்று பொருள்கள் "முப்பேர்" என்று தரப்பட்டுள்ளன. அப்பாடல் வருமாறு :

## ககர எதுகை – முதற்பாடல்

"அகவலே அழைத்தல் ஆடல் ஆன்ற ஆசிரியம் முப்பேர்
தகவறி வுடனொ ழுக்கம் தெளிவும் சற்குணமும் சாற்றும்
பகவதி உமையே துர்க்கை தருமதே வதைப்பேர் பன்னும்
முகவுமா ளிகைமு கப்பே மொள்ளுதல் காந்திக்கும் பேர்"

இனி, னகர எதுகையின் இறுதிப்பாடலின் வாயிலாக, மன்றம், கன்று, நன்று என்னும் சொற்கட்குரிய ஏழு பொருள்கள் – "ஏழ்பேர்" என்று, குறிக்கப்பட்டுள்ள பாங்கு வருமாறு :–

"மன்றமே தெருட்சி மெய்ம்மை வாசம் அம்பலமே வீதி
நின்றகல் யாணத்தோடு வெளியென நிகழ்த்தும் ஏழ்பேர்
கன்றுகை வளையே அற்பம் காட்டிய இளமை குட்டி;
நன்றே உத்தமத்தி னாமம் நல்லறந் தானும் ஆமே"

இவ்வாறே அருமருந்தையர், நூல் முழுவதும் சொற்பொருளை, எண்ணிக்கையிட்டு உரைத்துள்ளார்.

## நூற்பயன்

அரும்பொருள் விளக்க நிகண்டின் இறுதிப் (700 ஆவது) பாடலில், இந் நூலைக் கற்பவர்கள் சிறந்த புலமையும் செல்வமும் பெற்றுப் பெருமையுடன் வாழ்வர் என்று குறிப்பிட்டுக் காட்டும் பாடல் வருமாறு :

"இருமை யொன் றியதிருச் செந்தின் முருகோனை யேத்தும்
அருமருந்தையன் சொற்ற அரும்பொருள் விளக்கம் கற்றார்
பொரு முரண் டெறப்படுத்தும் புலமைநாற் றிறம் விளக்கும்
திருமருங் குறப்பொ ருத்தும் செருக்குட னிருப்பர் தாமே"

"சொற்பொருளை யடுத்துப் பொருள் தொகையின் எண்ணிக்கையைச் சுட்டும்" பாங்கினில் ஆசிரிய நிகண்டு தோன்றியதென்பார் வ.செயதேவன்.

## தொகை நிகண்டு
## (கி.பி. 18–ஆம் நூற்றாண்டு)

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள, கல்லிடைக்குறிச்சி என்னும் ஊரைச் சார்ந்த சுப்பிரமணியக் கவிராயரால் இத்தொகை நிகண்டு இயற்றப்பட்டது. நிகண்டுகளின் மூன்றாவது பிரிவான பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதியின் விளக்கமே, இத்தொகை நிகண்டின் தோற்றமாகலாம்.

தமிழகரமுதலி வரலாற்றில் கி.பி.19 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சிவசுப்பிரமணிக் கவிராயரால் இயற்றப்பட்ட நாமதீப நிகண்டின் பாயிரத்தில், இத்தொகை

நிகண்டு பற்றிய குறிப்புக் காணப்படுவதால், தொகைநிகண்டை இயற்றிய சுப்பிரமணியக் கவிராயர் கி.பி.18–ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவரென்று, அகராதி வல்லுநர் கருதுகின்றனர். நாமதீப நிகண்டின் ஆசிரியர் சிவசுப்பிரமணியக் கவிராயர் பாயிரப்பாடலில் காணப்படும் தொகை நிகண்டு பற்றிய குறிப்பு வருமாறு :–

''பன்னுந் தொகை நிகண்டிற் பார்க்கவிரி வாமவைகள்
இன்னசுருக் கத்தடங்காவே''

பன்னிரண்டாவது தொகுதியிலுள்ள. தொகைப்பெயர்களை விரிவாக விளக்கும் இத்தொகை நிகண்டில், இரு சுடர், முக்குணம், ஐம்பொறி முதலான தொகைப்பெயர்கள் விளக்கப்பட்டுள்ளமையான், இது தொகை பெயர்த்தாயிற்று போலும்.

திவாகரத்தில், பன்னிரண்டாவதாக உள்ள பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதியே, காலச் சக்கரத்தின் சுழற்சியினால் நிகண்டு வரலாற்றில், பல்கிப் பெருகித் தனியொரு நிகண்டாக உருவெடுத்திருக்கலாம்.

## பொருள் தொகை நிகண்டு (கி.பி.18–ஆம் நூற்றாண்டு)

ஒரு காலத்து ஒரு பொருள் செய்த சொல்லொன்றே, பிற்காலத்து அக்குறிப்பிட்ட சொல்லின் முதற்பொருள் வழியாக, பல்வேறு பொருள் ஒவ்வொன்றாம் தோன்றுதலின், அது பலபொருட் சொல்லாம் தன்மையுறும். பலபொருள் ஒருசொல் வரிசையைச் சார்ந்த நூலினை இயற்றியவர், புதுக்கோட்டைச் சீமையில் உள்ள, குடுமியான் மலையைச் சார்ந்த, சுப்பிரமணிய பாரதி ஆவார். ''இவரது காலம் பதினெட்டாம் நூற்றாண்டாக இருக்கலாம். பொருள் தொகை நிகண்டு என்னும் பெயரிலிருந்தே, இந்நூல் பல் பொருட் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதியின் விரிவான, மறு உருவம்'' (சுந்தர சண்முகனார். 1971, பக்.265) எனலாம்.

இந் நிகண்டு மதுரைத் தமிழ்ச் சங்கத்திலுள்ள, திருவாவடுதுறை ஆதீனப் புலவர் சே.ரா. சுப்பிரமணியக் கவிராயரால் 1920–ஆம் ஆண்டு, ஆறணா விலைக்குப் பதிப்பிக்கப்பட்டது.

இந்நிகண்டு, 1000 நூற்பாக்களைக் கொண்டது. சுப்பிரமணிய பாரதியால் 878 நூற்பாக்களும், 1920–இல் பதிப்பித்த மதுரைத் தமிழ்ச் சங்கத்திலுள்ள சே.ரா.சுப்பிரமணியக் கவிராயரால் 122 நூற்பாக்களும் சேர்த்துப் பதிப்பிக்கப்பட்ட இந்நிகண்டு, தொகைப்பெயர்களை விளக்குவதால், பொருட்டொகை நிகண்டு என்னும் பெயர்பெற்றது என்பார் அகராதி வல்லுநர் தா.வே.வீராசாமியார், எடுத்துக்காட்டாகச் சில நூற்பாக்கள் வருமாறு:–

### பிள்ளையார் வணக்கம்

''அருட்கடல் விநாயகன் அடியிணை யிறைஞ்சிப்
பொருட்டொகை நிகண்டினைப் புகலுது மியாமே''

ஒரு பொருள் :

இந்நிலவுலகி எஞ்ஞான்றும் ஒன்று என்னும் பொருளைச் சிறப்பிப்பது, வீடு பேறொன்றையே என்பது சுப்பிரமணிய பாரதியின் கருத்தாகும். இக்கருத்தையே ''ஒன்றவன் தானே'' என்று திருமூலர் வலியுறுத்துகிறார். பொருள்தொகை நிகண்டாசிரியர் வீடுபேற்றையும் இறைவனையும் ஒன்றாகவே உணர்ந்து, தமது நூலுள், நுவல்வாரானார்.

### ஒரு பொருள்

''ஒருமை யாவது முத்திப் பேறாம்
அஃதிறை யுணர்ந்துற லாமென மொழிப''

(ஒன்று எனச் சிறப்பிக்கத்தக்கது வீடுபேறு)

### இரு பொருள்

தேவ மருத்துவர் இருவர் = அச்சுவினி, தேவர் எனப்படுவர்.

இக்கருத்தினை,

''அச்சுவினி தேவர் அவர் இருவோர் தமைத்
தேவ மருத்துவர் எனச் செப்புவர்''

### முப்பொருள்

முப்பொருள் என்னும் சொல், மூன்று தெய்வத்தைச் சுட்டும் பொருண்மைதென்பதை,

''அயன் அரி அரன் மும்மூர்த்தி யாமே''

என்னும் நூற்பாவா னறியலாம். 18–ஆம் நூற்றாண்டில் புலவர்கள், வடசொற் கலந்து நூற்பா செய்தமையை,

''அயனம் இரண்டு உத்தரம் தக்கிணமே''

எனவரும் நூற்பாவா னறிவாம்.

இவ்வாறாக ஒரு பொருள் முதல், நூறு பொருட்கள் வரையுள்ள நூற்பாக்கள், தொகைப் பெயர்களாக இந் நிகண்டிற் குறிக்கப்பட்டுள்ளன. இந்நிகண்டிற் காணப்படும் இறுதி நூற்பாவானது,

"இங்கு கூறியவற்றையும், கூறாதொழிந்தவற்றையும், பழைய காப்பியங்களில் கற்றுணர்தல், கற்றுத் துறைபோய கல்வியாளர்தம் கடமை யென்று" குறிப்பிட்டுள்ள நூற்பா வருமாறு:-

"சொல்லிய அல்லன தொல்காப் பியங்களிற்
கண்டுணர்ந் திடுதல் கற்றோர் கடனே" -

ஈண்டு தொல்காப்பியங்கள் என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளது, பழைய காப்பியங்கள் பலவற்றையாம்.

## பொதிகை நிகண்டு
## கி.பி. 18 ஆம் நூற்றாண்டு

கி.பி.18 ஆம் நூற்றாண்டில் சாமிநாதக் கவிராயரால் இயற்றப்பட்ட பொதிகை நிகண்டு விருத்தப்பாவான் 14,500 சொற்களுக்கும், நூற்பாவான் 2,228 சொற்களுக்கும், பொருள் செய்துள்ளது. நிகண்டின் முதலிரு பெரும்பிரிவுகளை விளக்கும் இந்நிகண்டு, பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்களால் 1934 ஆம் ஆண்டு, பதிப்பிக்கப்பட்டுள்ளது. இந்நிகண்டினைப் பற்றி அகராதி வல்லுநர் தா.வே.வீராசாமி கூறுவது : பொதிகை நிகண்டின் ஒரு பகுதி ஆசிரியப்பாவிலும், மற்றொரு பகுதி நூற்பாவிலும் சாமிநாதக் கவிராயரால் இயற்றப்பட்டது. முதல் ஒன்பது இயல்களில், 14,500 சொற்கள் உள்ளன. திருநெல்வேலி வட்டார வழக்குச் சொற்கள் இவற்றில் காணலாம். "முதலிரு எழுத்துகள் வரை அகரநிரலைக் கொண்ட பொதிகை நிகண்டு" பதினெட்டாம் நூற்றாண்டு நிகண்டுகளிற் குறிப்பிடத்தக்கதாகும் என்பார் வ.செயதேவன்.

**ஆசிரியரும் - நூற்சிறப்பும் :** திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள கல்லிடைக் குறிச்சி யென்னும் ஊரைச்சார்ந்த சாமிநாதக் கவிராயருக்கு, சாமிகவிராசன் என்ற சிறப்பெயருமுண்டு. இவரது மைந்தரான சிவ சுப்பிரமணியக் கவிராயர், பூவைப் புராணம், நாமதீப நிகண்டு போன்ற நூல்களை இயற்றியுள்ளார். பொதிகை நிகண்டேயன்றி, ஆசிரியர் தம் பெயரால், சாமிநாதம் என்னும் இலக்கண நூலை யாத்துள்ளார். இதனை, சாமிநாதத்தின் பாயிரப்பகுதி பின்வருமாறு பேசும்:-

"பூமிசைப் பன்மொழியின் வேங்கடமுக் கடற்குட்
புணர் தமிழைந் தியல் நிகண்டாய்ந் தாா்எளிதி னுணரத்
தோமின் முன்னூல் வழியொருநூல் வேண்டுமெனத்
துறைசைச்
சுடர்மணி சுப்பிரமணியக் குருமணி பார்த்தருள
ஆமிதெனக் குருபதமும் திருக்குறிப்பும் தலைக்கொண்
டகத்தியனைச் சிவசுப்ரமணியனென ஈன்ற
சாமிகவி ராசனதி குலத்தோன் கல்லிடையூர்ச்
சம்பனன் செய்தனன் சாமிநாத மென்றிந்நூலே"

இப்பாடலின்கண் சிவசுப்பிரமணிக் கவிராயரின் தந்தை சாமிகவிராசன் என்னும் குறிப்பு வந்துள்ளது காண்க. பூவைப் புராணம் வாயிலாக, மைந்தரின் காலம் கொல்லம் 985 ஆம் ஆண்டு அஃதாவது கி.பி.1810-ஆம் ஆண்டு என்னும் கருத்துப் புலனாவதால், தந்தை சுவாமிநாதக் கவிராயர் 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியினரெனலாம். இவர்கள் இருவரும் மைந்தன் தந்தை யென்னும் உறவினைச் சிவசுப்பிரமணிக் கவிராயர் இயற்றிய நாமதீப நிகண்டின் பாடல் வரிகளால் அறியலாம்.

"எந்தை பொதிகை நிகண் டென்றோர்சொற் பல்பெயரே
தந்தனன்காண் பல் கூட்டஞ் சாரொருபேர்"

அகராதி நிகண்டைப் போன்ற அகரவரிசையில் அமைக்கப்பட்ட முதற் பகுதி, 500 ஆசிரிய விருத்தமுள்ளடக்கிய பத்துத் தொகுதிகளைக் கொண்டது. முதல் ஒன்பது தொகுதியில், 14,500 சொற்களும், பத்தாவது தொகுதியில் 1350 சொற்களும், இடம்பெற்றுள்ளன. இரண்டாம் பகுதியில், நெல்லை வட்டாரவழக்குச் சொற்களுடன், 2288 சொற்கள் நூற்பா நடையில் இடம் பெற்றுள்ளன.

அகராதி நிகண்டில் முதலெழுத்து மட்டும் அகரநிரலில் அமைந்துள்ளது. ஆனால், "பொதிகை நிகண்டிலோ, அகம், அகைத்தல், அகப்பா என முதலெழுத்தோடு, இரண்டாம் எழுத்தும் அகரவரிசையில் அமைந்துள்ளது. சான்றாக, ஒரு சொல் பல்பொருட் தொகுதியிலுள்ள முதல் மூன்று நூற்பாக்கள் வருமாறு:-

"அகம் தருவும் குறையும் வெற்பும் மனையும்
அகமும் உள்ளும் ஆன்மாவும் அகப்பொருளும்
இடமும் பாவமு மல்லவு மாகும்"

"அகைத்தல் அறுத்திடலும் ஒடித்திடலும் ஈர்தலும்
வேதனை யும்மென விளம்பினர் புலவர்"

"அகப்பா உண்மதில் மேடையும் மதிலும்"

அகம், அகைத்தல், அகப்பா எனும் மூன்று சொற்களுக்கும், மேற்காண் நூற்பாக்கள் மூலம் பொருள் கூறப்பட்டுள்ளது.

## உசித சூடாமணி நிகண்டு (கி.பி.18 ஆம் நூற்றாண்டு)

தமிழகரமுதலி வரலாற்றில் கி.பி.18–ஆம் நூற்றாண்டினிறுதியில், சிதம்பர கவிராயரால் உசித சூடாமணி நிகண்டு இயற்றப்பட்டது. 197–விருத்தப் பாக்களினால் அமைக்கப்பட்டது. நிகண்டின் முப்பெருந் தொகுதிகளுள், முதல் தொகுதியைப் பற்றிப் பேசுவது. இடம்பெருஞ் சொற்களின் எண்ணிக்கை அறியக்கூட வில்லை. இந்நிகண்டின் முதற் பதிப்பு, 1903–இல் மலையக் கவுண்டர் குழுவினரால், கோவையில் அச்சேற்றப்பட்ட இந்நூலுக்குப் புலவர் பெருமக்கள் சாற்றுப் பாடல்கள் அளித்துள்ளனர்.

**நூலமைப்பும் சிறப்பும் :** இந்நிகண்டு பதினெண் (18) தொகுப்புடையது. உசித சூடாமணி யெனும் இந்நிகண்டின் நூற்பொருள் தெளிவுறும் வண்ணம் அமைந்துள்ள, தொகுப்புகளின் பெயர்கள் வருமாறு:–

1. தேவ சரித்திரத் தொகுப்பு
2. வருணாச்சிரம வொழுக்கத் தொகுப்பு.
3. இராச சின்னத் தொகுப்பு
4. காம சின்னத் தொகுப்பு
5. எழுவகைப் பெண் பருவத்தொகுப்பு
6. எழுவகை யாண் பருவத்தொகுப்பு
7. எழுவகை மண விவரணத் தொகுப்பு
8. புணர்ச்சி வகைத் தொகுப்பு
9. புணர்தற்குரிய வகைத் தொகுப்பு
10. பிரிவின் வகைத் தொகுப்பு
11. பெண் விரக வகைத் தொகுப்பு
12. புருட விரகத் தொகுப்பு
13. விரகப் பெண்ணின் பகையாதிய தொகுப்பு
14. மகளிர் பாதாதி யுவமைத் தொகுப்பு
15. பெண்ணி னுவமை அலங்காரத் தொகுப்பு
16. புருட வுவமை யலங்காரத் தொகுப்பு
17. முப்பொருள் வகைத் தொகுப்பு
18. உதாரண வொழிபென்ற உசிதப்பொருள் அலங்காரத் தொகுப்பு.

**வடசொற் தொகுப்புகள் குறித்த குறிப்புரை :–**

மேற்குறித்த பதினெண் தொகுப்புகளிலும் வடசொற்கள் விரவிக் காணப்படுகின்றன. அக் காலத்தே வடசொற்களைக் கலந்து, நிகண்டுகளை அமைத்தால் தான், உயர்ந்த கவிராயர் அல்லது புலமை சான்றவர் என்று மதித்தனர் போலும். அதனாற்றான், உசித சூடாமணி போன்ற வடசொற்கலப்புள்ள நிகண்டுகள் மக்களிடையே வழக்கொழிந்தன.

எடுத்துக்காட்டாக இந்நிகண்டின் முதல் தொகுப்பிலுள்ள குமரக்கடவுள் குறித்த பாடல் வருமாறு:–

“பரவு மிருமூன் றக்கரத்தான்
பரனுக்குபதேசம் புகன்றோன்
விரவுமறுவர் முலையுண்டோன்
வேலை சுவற வேல் விடுத்த
வரவோ னாறு படைவீட்டை
யுடையோ னாறுமுகன் பன்னிரு
கரவேள் சரவணோற் பவன்சூர்
கணியாச் சுப்பிர மணியன்னே”

– இந்நிகண்டு குறிப்புரையுடன் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இப்பாடலிலும், உபதேசம், சரவணோற் பவன், சுப்பிரமணி முதலான வடசொற்கள் விரவி வந்துள்ளன.

## நாமதீப நிகண்டு (கி.பி.1810)

முழுமையான தமிழ் நிகண்டுகளின் முத்திறக் கூறுபாடுகளுள், முதற் கூறாகிய ஒரு பொருட் பல்பெயர்த் தொகுதியை அடிப்படையாகக் கொண்டு, கி.பி.18–ஆம் நூற்றாண்டின் இறுதி அல்லது 19–ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில், திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த கல்லிடைக் குறிச்சியில் தோன்றிய சிவசுப்பிரமணியக் கவிராயரால், நாமதீப நிகண்டு இயற்றப்பட்டது. பெயர்ப் பொருட்களை விளக்குவதால் நாமதீப நிகண்டு எனப் பெயர் பெற்றது என்பது அகரமுதலி வல்லுநர்தம் கருத்தாகும். இந்நிகண்டு உரிச்சொல் நிகண்டு போல, வெண்பா யாப்பினது. நூலாசிரியர் தாம் பாடிய 800 வெண்பாக்களிலும், 12,000 பொருட் பெயர்களை விரித்துரைத்துள்ளார். ஆசிரியர் பாடிய பாயிரப் பாடல்களையும் சேர்த்து, நூலின் கண்ணே 808 வெண்பாக்கள் காணப்படுகின்றன. ஆசிரியர் இந்நிகண்டினை, முந்து தமிழ்ப் புலவர் பெருமக்கள் செய்தன அனைத்தும் தேடி, ஒன்று திரட்டி, உழைப்பெடுத்துக் கொடுத்துள்ள திறத்தினை,

“பல்லாயிர நிகண்டிற் பண்டிதர்கள் சொன்னபொருள்
எல்லாமெளிதா யினிதுணரக் – கல்லிடையூர்
மன்னுசிவ சுப்ர மணியன் கவிராசன்
பன்னுதமிழ் நாமதீ பம்” தெளிவுறுத்தும்.

## நூலாசிரியர் பெருமையும் – நூற்சிறப்பும்

சாமிநாதக் கவிராசர், அகத்தியரைத்தான் சிவசுப்பிரமணியன் என்னும் பிள்ளையாகப் பெற்றார் என்னும் கருத்தினை,

"அகத்தியனைச் சிவசுப்ர மணியனென ஈன்ற
சாமிகவிராசன்" – என்னும் பாடலின் வாயிலாகத் தெரிவித்துள்ளார்.

சிவ சுப்பிரமணியக் கவிராயர், அகத்தியரைப் போன்று, பரந்து விரிந்த புலமை நலமுந் தலைமை சேர் தனித்தன்மையுமுடையவராய்த் திகழ்ந்தமையை, மேற்காண் பாடலடிகள் பகரும்.

ஏனைய பிற நிகண்டினும், புதுமையான அமைப்பினையுடைய இந்நிகண்டு, நான்கு படலங்களாகவும், ஒவ்வொரு படலமும் பல வர்க்கங்களாகவும் பகுக்கப்பட்டுள்ளமை வருமாறு:-

I. உயர்திணைப் படலம்
   1. தெய்வ வர்க்கம்.
   மானிட வர்க்கம் ........................................... 2

II. அஃறிணை உயிர்ப்பொருள் படலம் .............. 5
   1. நாற்கால் உயிர்ப்பொருள் வர்க்கம்
   2. பறவை உயிர்ப்பொருள் வர்க்கம்
   3. ஊர் உயிர்ப்பொருள் வர்க்கம்
   4. நீர்வாழ் உயிர்ப்பொருள் வர்க்கம்
   5. தாவர உயிர்ப்பொருள் வர்க்கம்

III. அஃறிணை உயிரில் பொருட் படலம் ............ 5
   1. இயற்கைப் பொருள் வர்க்கம்.
   2. செயற்கைப் பொருள் வர்க்கம்
   3. இட வர்க்கம்
   4. கால வர்க்கம்
   5. சினை வர்க்கம்

IV. குணநாமப் படலம்
   1. உயிர்ப்பொருள் – மனக்குண வர்க்கம் ..... 4
   2. உயிர்ப்பொருள் – வாக்குக் குண வர்க்கம்
   3. உயிர்ப்பொருள் – செயற்குண வர்க்கம்
   4. உயிரில் பொருள் – குண வர்க்கம்

நான்கு படலங்களும் சேர்த்து மொத்தம் 16 வர்க்கங்கள்

நான்கு படலங்களிலமைந்த 16 உட்பிரிவுகளில், ஏனைய நிகண்டுகளைக் காட்டிலும் தமிழகரமுதலி வரலாற்றில் பொருட்பெயர்களை, புதுமையாக அமைத்துச் சிறந்த முறையில் விளக்கியுள்ள, சிவசுப்பிரமணியனாரின் நூற்சிறப்பை விளக்கவந்த பதிப்பாசிரியர், 11 பெயர்களுள், சங்ககாலந் தொட்டு இந்நூலாசிரியர்காலம் வரை, தமிழிற் பயின்றுள்ள சொற்களைக் காணலாம். மலைநாட்டிலிருந்து தமிழிற் புகுந்த சில திசைச்சொற்களும், இதன்கண் உள்ளன. "தை நாறு கன்று" என இந்நூல் கூறுவது, மலையாள மொழியில், மரக்கன்று, "தை"யென இன்றும் வழங்குவதேயாகும். ஆட்சி என்பது வாரத்தின் பெயரென இந்நூலுணர்த்தும். மலையாளத்தில் இம்மொழி இன்றும், இப்பொருளில் வழங்குகிறது'" இத்தகு புதுமைச் சொற்கள் பல நிறைந்த நாமதீப நிகண்டினை 1930 இல், பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை சிறப்புக் குறிப்பினையும், தமது பதிப்புரையில் சேர்த்துள்ளார்.

எடுத்துக்காட்டாக உயர்திணைப் படலத்தின் முதற் பாடல் வருமாறு :-

"நந்திபெம்மான் ஆலமர்ந்தோ னம்பனிறை சோதிசெம்மல்
அந்தி வண்ணன் தாணு நித்தன் ஆனந்தன் – இந்தினன் தீ
முக்கணான் ஐந்து முகன்திகம்ப ரன்சடையன்
நக்க னெண்டோ ளன்பிஞ் ஞகன்"

இவ்வெண்பாவில் ஆலமர்க்கடவுளின் அருந்தமிழ்ப் பெயர்கள் அடைவு செய்யப்பட்டுள்ளன.

நான்காவது படலமான, குணநாமப் படலத்தின் இறுதிப் பாடல் வருமாறு :-

"காதமொடு சாமரத்தங் காவதமுக் கூப்பாடாம்
கோதில்கவி யூதமிரு கூப்பாடாம் – ஓதுநல்ல
நானூறு விற்கிடை கோழிப் பறவைத் தூரமே
தானா வது கிரவுஞ் சம்"

மேற்காண் பாடலில், முந்தைய நீட்டலளவையைக் குறிக்கும் காதம், காவதம் முதலிய பெயர்கள் பேசப்பட்டுள்ளன. இந் நூலின் பதிப்பாசிரியர், நூலின் பிழை திருத்தம் செய்வதோடு மட்டுமின்றி, நூலின் மேற்பகுதியில் மூலபாடமும், அடிக்குறிப்பில் அம்மூல பாடங்களுக்குரிய உரைபாடமும், நூல் முழுமைக்கும் அமைத்துள்ளார். அருஞ்சொற்களை, அனைவரும் எளிமையாக அறிந்து கொள்ளுமாறு பதிப்பித்ததோடு மட்டுமின்றி, நூலின் இறுதியில் அமைக்கப்பட்டுள்ள சொல்லகராதி, சொற்பொருள் தொடர்பான செய்திகளை, எளிதில் கண்டுகொள்ளத் துணை நிற்கிறது.

## வேதகிரியார் சூடாமணி நிகண்டு (கி.பி.1842)

சூடாமணி நிகண்டின் பதினோராந் தொகுதியைப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த களத்தூரைச் சார்ந்த வேதகிரியார், எளிமையாகக் கற்குமாறு "வேதகிரியார் சூடாமணி" நிகண்டினை யாத்துள்ளார். நாளுக்கு நாள் பெருகிவரும் சொற்களைச் சேர்க்குமுகத்தான், சூடாமணியில் இல்லாத பல புதிய சொற்களைத் தொகுத்து, எதுகை முறையில் புதிதாக 290 விருத்தப்பாக்களை இயற்றிச் சூடாமணியின்" பதினோராந் தொகுதியிலுள்ள 310 பாடல்களுடன் கலந்து, 600 பாடல்கள் கொண்ட, ஒரு தனி நூலாக விரிவாக்கினார். இந்நூலினை, "நிகண்டு" என்னும் பெயரால், யாழ்ப்பாணத்துத் தமிழ்ச் சங்கத்தார், கி.பி.1843–இல் வெளியிட்டனர்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.84).

### ஆசிரியர் காலமும் – நிகண்டுச் சிறப்பும் :

"சூடாமணி நிகண்டின் பதினோராம் தொகுதியில் 1575 சொற்களே, பொருள் விளக்கம் செய்யப் பெற்றுள்ளன. ஆனால் இதிலோ 2526 சொற்கள் இடம் பெற்றுள்ளன. இந்நூல் முழுவதற்கும் வேதகிரியாரே, தெளிவாக உரை எழுதியுள்ளார். இது கி.பி.1842 ஆம் ஆண்டில் யாழ்ப்பாணச் சங்கத்தாரால் பதிப்பிக்கப்பட்டது. எனவே ஆசிரியர் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியினர் என்பது தெளிவு. இந்நூலேயன்றி மேலும் இலக்கியக் களஞ்சியம் முதலிய பல நூல்கள் வெளியிட்டிருக்கிறார், வேதகிரியார். "தொகைப்பெயர் விளக்கம் என்னும் நிகண்டு நூலும் இவருடையதே" என்பார் சுந்தர சண்முகனார்.

வேதகிரியார் சூடாமணி, ஒரு சொல் பல்பொருட்டொகுதி என்னும் பிரிவைச் சார்ந்ததாகும்.

## கந்தசுவாமியம் – கி.பி.1844

பழைய நிகண்டுகளிற் காணப்படும் சொற்களைத் தெரிந்தெடுத்துத் தொகுத்து, நூற்பா நடையில், கீழ்வேளூர் என்னும் ஊரைச் சார்ந்த, சுப்பிரமணியரால், கி.பி.1844 – இல் கந்தசுவாமியம் இயற்றப்பட்டது.

### கந்தசுவாமியத்தின் சிறப்பு :

எந்நிகண்டிற்கும் இல்லாத் தனிப்பெருஞ் சிறப்பு, இந்த சுவாமியத்திற்கே உண்டு : அஃது யாதெனின், "நிகண்டு நூல்கள் இப்படியிப்படி அமைக்கப்பட வேண்டும், என இருபத்து நான்கு கட்டளைகள் (விதிகள்), இந்நூலிற் கூறப்பட்டுள்ளன. அவ்வாறே, இந்நிகண்டும் அமைக்கப்பட்டுள்ளது" என்பார் சுந்தர சண்முகனார். சொல்லியவண்ணம் செய்து காட்டியமைக்கு, காட்டாகக் கந்தசுவாமியம் அமைந்துள்ளது.

### கந்தசுவாமியத்தின் பதிப்பு வரலாறு:

வழிபடும் கந்தன் மீது தாம் கொண்ட ஆராக்காதலால், அளவற்ற ஈடுபாட்டினால், தாம் எழுதிய நூற்குக் கந்தசுவாமியம் என்னும் பெயரைச் சுப்பிரமணிய தேசிகர் சூட்டியிருக்கலாம்.

"கந்த சுவாமியத்தின், முதலிரு தொகுதிகள் மட்டும், கி.பி.1844 இல் அச்சாயின. முதல் தொகுதியில், 1318 சொற்களும், இரண்டாம் தொகுதியில், 1425 சொற்களும், இடம் பெற்றுள்ளன.

1844 ஆம் ஆண்டில் அச்சாகியிருப்பதை நோக்கின், ஆசிரியரின் காலம், கி.பி.19 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்பது புலனாகும்."

### தொகைப்பெயர் விளக்கம் : (கி.பி.1849)

"கி.பி.1849 இல் இயற்றிய வேதரியாரின் நூல் தொகைப்பெயர் விளக்கம். இந்நூலில் தொகைப் பெயர்கள் அகரவரிசையில் அமைந்துள்ளன. வேதகிரியாரின் தலைசிறந்த தமிழ்ப்புலமை, இத்தொகைப் பெயர் விளக்கத்தில் பரவலாகக் காணப்படுகின்றது. பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி, என்னும் பிரிவை சேர்ந்த இந்நூல், கி.பி.1849 ஆம் ஆண்டில் அச்சிடப்பட்டுள்ளது" நூல் இயற்றிய ஆண்டிலேயே அச்சிடப்பட்டதும், அகரமுதலி வரலாற்றில் குறிப்பிடத் தக்க செய்தி எனலாம்.

## இலக்கத் திறவுகோல் (கி.பி. 19 ஆம் நூற்றாண்டு)

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகரமுதலியின் வாயிலாக 'இலக்கத் திறவுகோல்' என்னும் நூல் குறித்த செய்தியைத் தெரிந்து கொள்கிறோம். இது பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதியைச் சார்ந்ததாகும். இலக்கம் என்றால் எண்; தொகை எண்களாற் சுட்டப்படும் பொருள்களை அறிந்து கொள்வதற்குரிய, திறவு (சாவி) கோல் போன்று, இந்நூல் அமைக்கப்பட்டுள்ளதால், "இலக்கத் திறவுகோல்" என்று பெயர்பெற்றது. திறவுகோல் இருந்தால் தானே, திறந்து உள்ளேயிருக்கும் பொருட்களைக் காண இயலும்! அது போன்றே, இந்

நூலின் துணை கொண்டு, தொகை எண்களிற் பொதிந்துள்ள அல்லது அமைந்துள்ள பொருட் பெயர்களைத் தெரிந்து கொள்ளலாம். ஒருமை, இருமை முதலிய எண்தொகைகள் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன.

இந் நூலின்கண்ணே, தொகைஎண்களாற் சுட்டப்படும் பொருட்பெயர்கள் அகரவரிசையில் முறையாக அமைக்கப்பட்டுள்ளன. இவற்றிற்கான அட்டவணை (Alphabetical list) யும், இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளது. இந்நூல் பற்றிய குறிப்பு, சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகர முதலியின் முகவுரையில் காணப்படுகிறது.

## நாநார்த்த தீபிகை நிகண்டு (கி.பி.1850)

ஒரு சொல் பல பொருள்களை மட்டும் சிறப்பிக்கும், அகராதி நிகண்டு, அரும்பொருள் விளக்க நிகண்டு போன்று, பதினோராந் தொகுதி ஒன்றைப் பற்றி மட்டுமே, வரித்துரைப்பது. கி.பி.1850–ஆம் ஆண்டில் திருநெல்வேலிச் சீமை பாவூரின்கண் வாழ்ந்த, கவிராயர் முத்துசாமி என்பவர், நாநார்த்த தீபிகை நிகண்டை இயற்றினார். இவர் சைவவேளாள மரபினர். பழனிக் கடுத்த உடுமலைப்பேட்டையிலிருந்து, பாவூரில் குடியேறியவராவார். பாவூருக்கருகிலுள்ள சிறுகுன்றி லமைந்த குமரக்கோட்டத்தையும், தமது முன்னோரையும் குறிப்பிடும், தற்சிறப்புப் பாயிரப் பாடல் வருமாறு:–

"கந்தன் பழனிப் பதிக்குமரன்
கருணைபெறு செண்பகக் கவிஞன்
மைந்தன் எழுதாயுதப் பெருமாள்
எனும்நா வலர்கோன் வரமதால்
வந்த அடியேன் அவரிருதாள்
வணங்கிப் புகல்வன் வடநூற்சொற்
செந்தமிழினும் பொருள் தொடுத்துச்
செயுநா நார்த்த தீபிகையே"
(தற்சிறப்புப் பாயிரம் – 7)

**நூலமைப்பும் – சிறப்பும் :** 1102 விருத்தப் பாக்களினாலாகிய நாநார்த்த தீபிகை நிகண்டு, 5, 452 சொற்களுக்குப் பொருள் விளக்கம் செய்துள்ளது. "சூடாமணி நிகண்டின், பதினோராவது தொகுதியைப் பின்பற்றி, எதுகைத்தொடை சிறக்க ஆக்கப்பட்டுள்ளது. எதுகைக் கலப்பின்றி, வேதகிரியார் சூடாமணியில் அமைக்கப்பட்டுள்ளது போல், யாக்கப்பட்டது நாநார்த்த தீபிகையின் தனிச்சிறப்பாகும்" என்பார் மு. சண்முகம் பிள்ளை. சொற்கட்கு முன்னால் வேண்டாத அடைமொழிச் சொற்கள் இதில் இல்லை. இந்நிகண்டின் சிறப்புக் குறித்துப் புலவர் சுந்தரசண்முகனார், அரும்பொருள் விளக்க நிகண்டைப் பல வகையில் ஒத்துள்ளது. "அஃதாவது, அது போலவே, இஃதும் ஒரு சொல் பல்பொருட் பெயர்த்தொகுதியென்னும் இரண்டாவது பெரும்பிரிவைச் சார்ந்தது. விருத்த யாப்பினால் ஆனது. ககர எதுகை முதல், னகர எதுகை ஈறாக, எதுகைமுறையில் பாகுபாடு செய்யப்பட்டுள்ளது. இதன் எதுகையமைப்பு மிகத் தெளிவாயுள்ளது. ஆசிரியர், முன்னோர் நிகண்டுகளிலுள்ள சொற்களோடு, பல வடமொழித்திரிபுச் சொற்களுக்கும், இந்நூலில் பொருள் கூறியுள்ளார்" என்பார் சுந்தர சண்முகனார். இச்செய்திகளை நூலின் முகப்பில் ஆசிரியரே பாடிய தற்சிறப்புப் பாயிரம் பின்வருமாறு பேசும்:–

"ககராதி னகாரவீறு எதுகை வைத்து............."

"வடநூற்சொல் செந்தமிழினும் பொருள்
தொடுத்துச் செயம் நாநார்த்த தீபிகை............"

"அடைசொற்கு அஞ்சிப் பற்பல
விருத்தத் தானும் பகர்ந்த ...................."

"............ முன்னோர் பன்னூலிற்
சில வெவ்வே றுரைத்த வெல்லாஞ்
சேர்த் தொன்றாய்த்திரட்டி யோர்சொல்
பல பொருள் என்னும் நாநார்த்த
தீபிகை பகர லுற்றாம்"

நாநா = பல
நாநா → நானா. ஒருகா. நாலா → நாநா → நானா.
நாலாவிதம் → நாநாவிதம் → நானாவிதம்
நாநாவிதமான → நாலாவிதமான = பலவிதமான.
(உ.வ.)

நாநாவிதமான என்னும் உலகவழக்கு, நாலாவிதமான என்னும் பொருண்மையில், மக்களிடையே வழக்கூன்றியுள்ளது. நாநா + Skt அர்த்தம் – நாநார்த்தம். நாநார்த்தம் = பல பொருள். நாநார்த்த தீபிகை யென்பது, சொற்கட்குரிய பொருளைப் பல்லாற்றானும் விளக்குவது. சொற்கட்குப் பெயர்ப்பொருள் விளக்கமென்னும் ஒளியைப் பாய்ச்சும் நாநார்த்த தீபிகையைப் பல்பொருள் விளக்கம் தரும் நிகண்டு எனலாம். அகரமுதலி வரலாற்றில், 1936 இல், சென்னைப் பல்கலைக் கழகத்தில், தமிழ்த்துறைத் தலைவராய்த் திகழ்ந்த சு.அனவரத விநாயகம் பிள்ளை அவர்களால், சொற்பொருண்மை செய்து பதிப்பிக்கப்பட்டது. இப் பதிப்பினால் இந்நிகண்டு மென்மேலும், கல்வியாளர்களிடையே பெருஞ் செல்வாக்குப் பெற்றது. இந்நிகண்டின் பதிப்பாசிரியர்,

சொற்பொருள்களுக்கு அடிப்படையான குறிப்புகளைத் தமிழ், வடமொழி நிகண்டுகள் பலவற்றிலிருந்து, எடுத்துத் தந்துள்ளார். பதிப்பாசிரியர் தம் அயராத பேருழைப்பையும், நுண்மாண் நுழைபுலஞ் சான்ற கூர்த்த மதியையும் வெளிப்படுத்தும் பாங்கினில், நாநார்த்த தீபிகையின் சொற்பொருள் அமைந்துள்ளது.

"பதிப்பாசிரியர் தாம் எழுதிய பதவுரையில், ஒவ்வொரு பொருளுக்கும், ஒப்பான பொருளுடைய நிகண்டுப் பகுதிகளையும் எடுத்துக்காட்டி, நூலைப் பதிப்பித்துள்ள பாங்கு, மிகவும் போற்றத்தக்கது. நிகண்டு நூல்களை எவ்வகையில் பதிப்பித்தால், தமிழறிஞர் களுக்கும், ஆய்வாளர்களுக்கும், உறுதுணையாயிருக்கும் என்பதற்கு வழிகாட்டியாய் விளங்குவது, இந்நாநார்த்த தீபிகையின் பதிப்பு. இந் நிகண்டில் பொருள் விளக்கப் பெற்ற, பல பொருள் ஒரு சொற்களுக்கு அகராதியும், நூலிறுதியில் பதிப்பாசிரியர் தொகுத்துத் தந்திருப்பது எல்லாவற்றிலும், மிகுந்த சிறப்பாகும்" என்பார் மு. சண்முகம் பிள்ளை. இந்நிகண்டு அகரமுதலி வரலாற்றில், சிறப்பாக நிகண்டுப் பதிப்பில் செம்மையாகப் பதிப்பித்துள்ள பாங்கு, பிறநூற் பதிப்பாளருக்கும் பேருதவி புரியும் என்பதில் யாதொரு ஐயமில்லை. பதிப்பாசிரியர் இந்நிகண்டின் துணையால், நூலில் நுவலப்பெற்ற சொற்களையும், அவற்றிற்கமைந்த பொருள்களையும் அனைவரும் எளிதில் அறியும் வண்ணம் பதிப்பித்ததோடு மட்டுமின்றி, பதவுரையின் வாயிலாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் அகரமுதலி வரலாறு, மிகச்சிறந்த முறையில் அமைய அடிகோலியுள்ளார்.

## சிந்தாமணி நிகண்டு (கி.பி.1874)

கி.பி.1874 ஆம் ஆண்டில், யாழ்ப்பாணத்து வல்லி பட்டினத்துறை என்னும் ஊரில் வாழ்ந்த வைத்தியலிங்கம் என்பவர், சிந்தாமணி யெனும் இந்நிகண்டினை இயற்றினார். இளைஞர்கள் சிறப்பாகச் சொல்லிற்குரிய ஒரு பொருளைத் தெளிவாகப் புரிந்து கொள்ளுதற் பொருட்டு, இந்நிகண்டு இயற்றப்பட்டதென்று, ஆசிரியரே சிறப்புப் பாயிரத்தில் குறிப்பிட்டுள்ளது வருமாறு :-

"நேர்செறி இளைஞர் ஓர் சொற்கு
ஒரு பொருள் நேராய் ஓரப்
பார்செறி நிகண்டு சிந்தா
மணியெனப் பகர்வன் ஒன்றே"

மாணவர்களுக்கும் பயன்படும் வண்ணம் அமைக்கப்பட்ட இந்நிகண்டு, 19 ஆம் நூற்றாண்டு அகராதிவரலாற்றில், ஒரு திருப்புமுனையாகத் திகழ்கிறது. இந்நிகண்டின் சிறப்புக் குறித்து, இயம்ப வந்த அகராதி வல்லுநர், "அன்று கல்வித்துறையில் மொழிப்பயிற்சி இன்றியமையாது இடம் பெற்று, மிகவும் கவனிக்கப்பட்டிருந்தது. எப்படியாவது, நிகண்டுகளின் வாயிலாகச் சொற்பொருள்களை, மாணவரின் உள்ளத்தில் பதித்துவிட வேண்டும் என்று கருதாமல், "எளிமையிலிருந்து படிப்படியாக அருமைக்குச் செல்லுதல்", என்னும் உளநூல் முறையை (Psychological method) ஒட்டி, ஒரு சொல்லுக்குரிய முக்கியமான ஒரு பொருளை" ஆசிரியர் கற்பித்து, மாணவர்களின் உள்ளத்தில் பதியச் செய்தனர். இஃது, 19 ஆம் நூற்றாண்டுத் தமிழகர முதலி வரலாற்றில், குறிக்கத்தக்க சிறப்பான செய்தியாகும்.

வைத்தியலிங்கனார், சிந்தாமணி நிகண்டில் முற்றிலும், "ஒரு சொல்லுக்கு ஒரு பொருள்" என்னும் முறையில் 400 செய்யுட்களில், 3000 சொற்களை விளக்கியுள்ளார். ஒரு சொல்லுக்குப் பல பொருள்களைச் சுட்டியுள்ள, முந்தைய நிகண்டுகளின் அமைப்பினை முற்றிலும் தகர்த்து, அகரமுதலி வரலாற்றில் சிந்தாமணி நிகண்டினை வழக்கூன்றச் செய்த பெருமை, வைத்திய லிங்கனாரையே சாரும். இந்நிகண்டிலுள்ள சொற்களைக் கற்போர், உளத்திற் பதியும் வண்ணம், எதுகை முறையில் அமைத்துள்ளார்.

## அபிதானத் தனிச்செய்யுள் நிகண்டு

பல்வகைப் பாக்களினானியன்ற இந்நிகண்டின் ஆசிரியர் கோபாலசாமி ஆவார். இவர் கீழ்வேளூரைச் சேர்ந்த வீராசாமி மைந்தராவார். அபிதானம் என்றால் பெயர். நூலின் பெயருக்கேற்ப பல்பொருட் பெயர்களும், இந்நிகண்டில் இடம் பெற்றுள்ளன.

நிகண்டின் முப்பெருந் தொகுதிகளுள், முதல் தொகுதியாகிய, "ஒரு பொருள் பலபெயர்த் தொகுதியை விளக்கும் இந்நூல் பற்றி அகராதி வல்லுநர் கூறுவது.

"இந் நூல் பல்லினப் பாவகையால் பாடப்பட்ட தாகும். இதன் முதல் தொகுதி மட்டும் ஆசிரியர் வாழ்ந்த போதே, கி.பி.1878 ஆம் ஆண்டில் அச்சிடப்பட்டது. எனவே, ஆசிரியர் காலம் 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி என்பது தெளிவு" (சுந்தர சண்முகனார். 1971, பக்.283).

இந் நிகண்டு "கி.பி.1875 ஆம் ஆண்டு, நாகப்பட்டணத்திலுள்ள இசுகாட்டி (ஸ்காட்டிஷ் பிராஞ்சு பிரஸ்) பிராஞ்சு அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது"

பாடல் மற்றும் சொற்களின் எண்ணிக்கை பற்றிய தெளிவான செய்திகள், இதுகாறும் கிடைக்கவில்லை.

## விரிவு நிகண்டு – கி.பி.19 ஆம் நூற்றாண்டு

ஆசிரியர் அருணாசல நாவலர். பேராசிரியர் வையாபுரி இந் நிகண்டினைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். சூடாமணி நிகண்டின் பதினோராவது தொகுதியை, முதல்நூலாகக் கொண்டு சொற்பொருள் விளக்கிச் செல்வதால் இந்நூல், "பதினோராவது விரிவு நிகண்டு" என்றும் அழைக்கப்பட்டது.

ஒரு சொல் பல்பொருட் தொகுதியைச் சேர்ந்த நிகண்டுகளுக்குள்ளே, விரிவு நிகண்டே மிகப் பெரியதாகும். இதில் ஏறக்குறைய 1150 விருத்தப்பாக்கள் உள்ளன.

பெயருக்கு ஏற்ற வண்ணம் மிக விரிவாகப் பல்பொருள் விளக்கும், இந் நிகண்டு குறித்த பிற செய்திகள் "அச்சில் வாராத நிகண்டுகள்" என்னும் தலைப்பில் இடம்பெற்றுள்ளன.

### ஆரிய நிகண்டு

தமிழில் வடசொற்கள் நிரம்பப் புகுந்த 19 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட நிகண்டு. இந் நிகண்டில், தமிழில் கலந்த, வடசொற்களையெல்லாம் திரட்டி, அவற்றிற்குரிய பொருள் கூறுவதாயிருக்கலாம். இவ்வாறு வட சொற்களையே விரிவாக விளக்குவதால், ஆரிய நிகண்டு என்னும் பெயரைப் பெற்றிருக்கலாம் என்று அகராதி வல்லுநர் கருதுவர்.

நீர்வேலி என்னும் இடத்தைச் சேர்ந்த சங்கர பண்டிதர் என்பார் தாம் இயற்றிய "சைவப் பிரகாசனம்" என்னும் நூலில், நூற்பா நடையில், ஆரியநிகண்டு என ஒரு நிகண்டு நூல் உள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார்.

மேற்குறித்த செய்தி, சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகரமுதலியில் காணப்படுகிறது.

## பொதிகைநிகண்டு – கி.பி.19 ஆம் நூற்றாண்டு

வேதகிரி எழுதிய இலக்கியக் களஞ்சியம் (கி.பி.19) என்னும் நூலில், இந்நிகண்டின் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் இந்நிகண்டின் வாயிலாக, "ஔவை நிகண்டு" என்னும் பெயரில் ஒரு நிகண்டு, 19 ஆம் நூற்றாண்டில், மக்களிடையே வழக்கூன்றிய செய்தியும் தெளிவாகிறது.

பொதிகை நிகண்டு விருத்தப்பா வகையால் ஆனது. பொன்னின் சிறப்பியல்புகளாகப் பொதிகை நிகண்டில் காணப்படும் பாடல் வருமாறு :-

"தட்டுநீட் டுங்குறல் தணலினின் றுருகல்
தன்னெடை குறைதலில் லாமை
கொட்டு கடின மின்மை யாணிக்குக்
கூறுமாற் றறிவித்தல் சோதி
விட்டுவிட் டொளிர்தல் மிகுபுடத் திருத்தல்
வெவ்வழல் வென்றியைக் கொள்ளல்
கட்டிசாய்த் திடுகிற் பள்ளங்கொண் டதிக
கனங்கொளல் கனகலக் கணமே"

இப்பாடலிற் குறிப்பிடப்படும் பொன்னியல்புகள் வருமாறு :

1. தட்டி நீட்டப்படல்
2. நெருப்பில் உருகுதல்
3. எடை குறையாமை
4. தட்டுவதற்குக் கடினம் இல்லாமை
5. உரையாணிக்கு மாற்று அறிவித்தல்
6. விட்டுவிட்டுச் சுடர் வீசுதல்
7. புடம் போடப்படல்
8. நெருப்பால் அழியாமை
9. கனமாயிருத்தல் முதலானவாம்.

### ஔவை நிகண்டு (கி.பி.19)

இந்நிகண்டும், வேதகிரி எழுதிய இலக்கியக் களஞ்சியத்தின் வாயிலாக, தமிழகரமுதலி வரலாற்றில் மிளிர்கின்றது. வேதகிரி முதலியாரின் காலம் கி.பி.19 ஆம் நூற்றாண்டாகையால், ஔவை நிகண்டும் அவர் காலத்தே மக்களிடையே பயின்றிருக்கலாம். ஔவை என்னும் பெயருடைய பிற்காலத்தைச் சார்ந்த (கி.பி.19) ஒருவரால், இந்நிகண்டு இயற்றப்பட்டிருக்கலாமென்பர்.

இந் நிகண்டிலுள்ள ஒரு பாடல் வருமாறு :-

"ஏலம், தக்கோலம், சூடன்
இலவங்கம், சாம்பிராணி
காலஞ்செல் அகில், சந்து, ஓங்கு
கத்தூரி, புழுகு, மௌவல்,
கோலமார் மருக்கொழுந்து, வெட்டி,
குங்குமம், இலாமிச்சம் வேர்,
சாலும் சண்பகம், சவ்வாது
சாற்றும் சோடச வாசப்பேர்"

இப்பாடலின் கண்ணே, குறிக்கப்பெறும், பதினாறு வகை மணப்பொருள்களின் வாயிலாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டில். மக்கள் வாழ்வியல் நிகழ்வுகளிலும், உணவுப் பொருள்களிலும் மணப்பொருள்கள் பெற்றிருந்த சிறப்பும் தெளிவாகிறது.

இதுபோன்று நூற்றுக்கணக்கான நிகண்டு நூல்கள், தோன்றி மறைந்துள்ளன. அவற்றுள் சிறப்பிடம் பெறுவது, சோழவந்தான் சண்முகம் பிள்ளை அவர்கள் வெளியிட்ட அந்தாதித் தொடை நிகண்டாகும்.

## கலைத்துறை நிகண்டுகள் (மருத்துவம்)

அறுபத்து நான்கு கலைகளுள், மருத்துவக் கலையும், கணியக் (சோதிடக்) கலையும், அகராதி வல்லுநர்கள் அடங்குமென்பர். பண்டைத் தமிழிலக்கியப் புலவர்கள், வடமொழி, மருத்துவம், கணியம் போன்றவற்றுள் வல்லவராயிருந்தனரென்பதை, அவர்கள் இயற்றியுள்ள நிகண்டுகள் உறுதிப்படுத்துகின்றன. பல கலைகளுக்குரிய சொற்கள், தொல்காப்பியர் காலம் முதல் பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை மக்களிடையே பயின்று வந்தது சித்தர் தம் பாடல்களிலுள்ளதெனலாம். பதினெண் சித்தர்கள் மருத்துவம் பற்றிப் பதினெட்டு நிகண்டு நூல்கள் பாடியுள்ளனர். வானநூல், மருத்துவம் பற்றிய சொற்களைக் கையாண்டுள்ளனர். சான்றாக அகத்தியர், போகர் ஆகியோர் நிகண்டுகளிற் காணப்படும் மருத்துவச் செய்திகள் வருமாறு :-

### 1. அகத்தியர் நிகண்டு (பிற்கால அகத்தியர்)

பிற்கால அகத்தியரால் இயற்றப்பட்ட இந்நிகண்டு விருத்தப் பாவானியன்றது. இந்நிகண்டிற்கு ஏமதத்துவம், பஞ்ச காவிய நிகண்டு, பஞ்ச காவிய நிகண்டு எண்ணூறு, அகத்தியர் நிகண்டு எண்ணூறு முதலான பெயர்கள் வழக்கிலுண்டு. இந்நூலின் வைத்திய காண்டம் முதலான எட்டுக் காண்டங்களில் ஆயிரத்திற்கு மேற்பட்ட பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

அகத்தியர் ஒவ்வொரு காண்டத்தின் தொடக்கத்திலும், கடவுள் வாழ்த்துடன் தொடங்கி, அக்காண்டத்தில் கூறப்படும் மருத்துவச் செய்திகளையும் விளக்கமாகக் குறிப்பிட்டுள்ளார். "புலத்தியனே கேள்" என்று புலத்தியனை விளித்துரைப்பது போல் நூல் அமைந்துள்ளது. சித்தர்களைப் பற்றியும், இந்நிகண்டில் குறிப்புகள் அமைக்கப்பட்டுள்ளன. இந்நிகண்டில் மூளை, சுக்கு ஆகிய இரண்டினைச் சுட்டும் பல பெயர்கள் வருமாறு :-

**மூளையின் பெயர் :** அகத்தியர் நிகண்டின் முதல் காண்டத்தில் மூளையைக் குறிக்கும் பெயர்களமைந்த பாடல் வருமாறு :-

"முடியான அகாரமதின் முதற்கரு தானாகும்
மூலவெளி சச்சிதா நந்தவெளி யாகும்
அடியான படியாகும் பரவெளியு மாகும்
அந்தமெனும் ஞானவழி ஆகாய வெளிதான்
குடியான மூலவெளி கைலைவெளி யாகும்
குருவிருப்பா ரண்டமெனும் அகண்ட மெனும்பெயர்
செடியான பேரண்ட பேரொளி யென்றும் பெயர்
செப்பினோம் இந்தபடி சிரசதுவின் பெயரே"

இக்காண்டத்தின் அடுத்தடுத்த பாடல்களில், மூளை பற்றியும், மூளைக்குள் இருப்பவை பற்றியும் விளக்கியுள்ளார். உடற்கூறு மருத்துவம், ஓகம் முதலான மக்கள் நலம் போற்றும் வாழ்வியற் கலை குறித்து அகத்தியர் நிகண்டு விளக்குகிறது.

#### சுக்கின் பெயர்கள்

"மகத்தான வருக்க மென்றும் நாகராதி யென்றும்
மடவான வீயமென்றும் அதற்குப் பேரு
அகத்தான வகநாதம் என்றும் பேரு
அருளினோம் வலதம் என்றும் அதற்குப் பேரு
வகத்தான வேர்க்கொம்பு வென்றும் பேரு
வசனித்தோ மஞ்சத்த மென்றும் பேரு
நகத்தான நாக்குமம் என்றும் பேரு
நளினமதாய்ச் சொல்லிவிட்டோம் சுக்கின் பேரே"

இப்பாடல் ஐந்தாம் காண்டத்தில் அமைந்துள்ளது. இக்காண்டத்தில் மருந்து பற்றிய செய்திகளும், செய்முறைகளும் ஏராளமாக உள்ளன. நோய்நொடியின்றி நலமாக வாழ்வதற்குரிய வாழ்வியற் கூறுகள், இக் காண்டத்தில் காணப்படுகின்றன.

ஏழாம் காண்டத்தில், பல்வகை ஓக நிலைகள் பேசப்பட்டுள்ளன. இப்பகுதியில் மதப்பூ இளகியம் (லேகியம்) என்னும் மருந்தின் செய்முறை குறிப்பிடத்தக்கது. இவ்வாறு அகத்தியர் நிகண்டில் உடலோம்புதலும், ஓகம் பலகற்று உயிரோம்புதல் முறையும், விளக்கம் பெற்றுள்ளது.

## போகர் நிகண்டு

சித்தர்களியற்றிய நிகண்டுகளுள், அகத்தியருக்கு அடுத்த நிலையில் போகரின் மருத்துவ நிகண்டு, அன்றைய மக்களால் பயிலப்பட்டது. விருத்தப்பாவினால் ஆகியது. "போகர் நிகண்டு ஆயிரத் திருநூறு" – என்பது இதன் பெயராகும். போகர் பல நூல்களை யாத்துள்ளார். மருத்துவச் செய்திகளை மிகுதியாகச் கூறுவது; பாடல்கள்தம் எண்ணிக்கையைப் பெயராகக் கொண்டது. "போகர் நிகண்டு ஆயிரத்திருநூறு" என்னும் புகழ்பெற்ற நூலாகும். இந்நூலுள் மற்ற சித்தர்களாற் செய்யவியலாத வியத்தகு அருஞ்செயல்கள் போகர் செய்ததாகக் கூறப்படும் செய்திகள் பல உண்டு. இவர் அகத்தியரின் மாணாக்கர் என்று ஆய்வாளர் கருதுவர். ஆனால், காலாங்கிநாதர் என்பவரின் மாணாக்கரென, தாமியற்றிய, "போகர் ஏழாயிரம்" என்னும் நூலில் தெரிவித்துள்ளார். போகரின் மாணக்கர்களாகக் கொங்கணர், கருவூர் சுந்தரானந்தர், மச்சமுனி, நந்தீசர், இடைக்காடர், கமலமுனி, சட்டைமுனி முதலிய சித்தர் பெருமக்கள் பேசப்படுகின்றனர். போகர் ஏழாயிரம், நிகண்டு பதினேழாயிரம் சூத்திரங்கள், "எழுநூறு யோகம்" முதலான நூல்களும், இவரால் பாடப் பெற்றவையாகும்.

## "போகர் நிகண்டு ஆயிரத்திருநூறு"

இந்நிகண்டில் உடற்கூறு மருத்துவம் தொடர்பான பல்வகைப் பொருள்கட்குரிய பெயர்கள் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இந்நிகண்டின் கடவுள் வாழ்த்துப் பாடல் வருமாறு:–

"அகண்ட பரிபூரணமாம் ஐயர் பாதம் போற்றி
அடுத்து நின்ற உமையவள் தாய் பாதம் போற்றி
நிகண்டெனவே திருமூலர் நாயர் பாதம் போற்றி
நீங்காமல் காலாங்கி ஐயர் பாதம் போற்றி
புகழ்ந்து நின்ற நாதாக்கள் ரிஷிகள் பாதம் போற்றி
புகழான வாக்குடைய வாணி பாதம் போற்றி
முகந்து நின்ற குஞ்சரத்தின் பதத்தைப் போற்றி
மூவுலகும் மெச்சுதற்கு நிகண்டு கேளே"

மேற்குறித்த பாடலின்கண்ணே, போகர், சிவனையும், உமையையும் பிள்ளையாரையும், கலைமகளையும், சித்தர்களையும், முனிவர்களையும் காப்பாக வணங்கிப் பின்னர் நூலைத் தொடங்கும் பாங்கினைத் தெரிவித்துள்ளார்.

## கல்நாரின் மருத்துவப் பெயர்களைக் குறிக்கும் பாடல் :

"கல்நாரின் பெயர்தனையே கருதக் கேளு
கல்லுக்குட் சவளையாங் கடியசீலை நாரு
அல்நாரு வில்லுக்குள் சிலாவிந்து வாகு
மாற்றிகம் பூங்கல்லின் கார மாகும்
செல்நாரு சிலையின்ரவி கல்லு மாகும்
சிறுநாரு கல்லதுதான் சிவப்பு மாகும்
முல்நாரு சத்துமாம் சுண்ண மாகு
முக்கிரமாங் கல்நாரின் பெயருந் தானே"

போகர் நிகண்டில் சித்தர்களின் வயது குறிப்பிடப்பட்டிருப்பது, மிகவும் சிறப்பான, குறிக்கத்தக்க செய்தியாகும். "சித்தர்களின் குறைந்த வாழ்நாளெல்லை 120 ஆண்டுகளாம். உயர்ந்த எல்லை 700 ஆண்டுகளாம். அவர்தம் சராசரி வாணாள் 500 ஆண்டுகளாம்" என்பார் சுந்தர சண்முகனார்.

இந்நிகண்டின் வாயிலாக, வெடியுப்பு நீர்மம் (திராவகம்); தங்கச்சாறு (இரசம்) எடுக்கும் முறையும் – இன்னும் பல மருந்துகள் செய்முறைகளும், பல பாடல்களில் விளக்கப்பட்டுள்ளன. கடைகளில் விற்கக்கூடிய அறுபத்து நான்கு நாட்டுமருந்துச் சரக்குகளின் பெயர்கள், இந்நூலில் அழகாகக் கூறப்பட்டுள்ளன.

பல அரும்பெரும் பொருள்களைத் தெரிவிக்கும் இந்நிகண்டு கிடைத்தற்கரிய தென்றும், இஃது ஆயிரத்து இருநூறு பாடல்களைக் கொண்டதென்றும், இந்நிகண்டின் இறுதிப் பாடல் மூலம் போகர் தெரிவிக்கும் பாங்கு வருமாறு :–

"கிட்டாது இந்நூல்தான் எவர்க்குக் கிட்டும்
கிருபையுடன் சிவயோகி முனிவர்க்குக் கிட்டும்
எட்டாத பொருள்க ளெல்லாம் இதிலே தோயும்
என்மக்காள் சித்தர்களே முனிவர்க் கென்றும்
அட்டாத ஆயிரத் திருநூறாக
அறைந்திட்டேன் நிகண்டெனவே பெயர் வகுத்தேன்
திட்டாமல் எந்தனை நீர் எப்போதுந்தான்
திறமுடனே துதிக்கு நூல் இது முற்றே".

இந்தப் போகர் நிகண்டைப் போல இன்னும் பல மருத்துவ நிகண்டுகள், தமிழ்மொழியில் நூற்றுக் கணக்கில் தோன்றியும், போற்றுவாரின்மையால், மறைந்தே போயினவாம்.

## 2. வானநூல் நிகண்டு

கணியநூல் (சோதிடக் கலை) பற்றிய நிகண்டுகள் தமிழில் தோன்றி காலவெள்ளத்தில் மறைந்து போயின. இத்துறை நிகண்டிற்குச் சான்றாக சாதக சிந்தாமணி என்னும் கணிநூல் இயற்றிய, "தில்லை நாயகர்" என்னும் கணிப்புலவரின் படைப்பாகிய "கால நிகண்டு"ம், "காரக நிகண்டு"ம் குறிப்பிடத்தக்கன.

**காலநிகண்டு :** இந்நிகண்டு, "ஒருபொருள் பல் பெயர்த் தொகுதி" என்னும் பிரிவினைச் சார்ந்தது. இதில் கிழமை, இருப்பு (திதி), நாள் (விண்மீன்), ஓகம் (யோகம்), கரணம், ஓரை (இராசி); கோள் முதலான காலத்தொடர்புடைய செய்திகள் பேசப்பட்டுள்ளன. ஒவ்வொரு பொருளையும் குறிக்க, எத்தனைப் பெயர்களுண்டோ, அத்தனையும், கொடுக்கப்பட்டுள்ளன. சான்றாக இந்நிகண்டிலிருந்து ஒரு சில பாடல்கள் வருமாறு:-

இரலை (அசுவினி), தாழி (பரணி), ஆரல் (கார்த்திகை)

"பரிமருத் துவனாள் யாழேறு செந்நி
பகர்வாசியைப் பசி யிரலை
பரிவுறு முதனாள் அசுபதி யாகும்
பகலவன் றாழிமுக் கூட்டும்
சரியுறு கிழவன் பூதஞ் சோறடுப்புத்
தருமநாள் பரணியே யென்பர்
எரி பிறந்திடு நாள் நாவிதன் அங்கி
இறால் அளக்கு என்பர் கார்த்திகையே"

அடுத்து, ஞாயிற்றின் பெயர்களைக் குறிப்பிடும் பாடல்கள் வருமாறு :-

"பருதி, ஆதித்தன், இமகரன், பதங்கன்
பனிப்பகை, விண்மணி, என்றூழ்
அருணன், மார்த்தாண்டன், பாற்கரன், கதிரோன்
ஆயிரங் கதிரி நன்றபநன்
இருள்வலி சண்டன் சூரியன் மித்திரன்
எல்லை அம்போருக நண்பன்
தருமொழி வேந்தன், சூரனே கவிதாத்
தரணிபன், சுடரவன் என்பார்"

"அனலியே பகலோன் வெய்யவன் பானுமரி
அண்டயோநி ஏழ் பரியோன்
கனலியே சான்றோன் விலோசநன் மாவே
காலத்தை யளந்திட்டோன் இரவி
இனவிரிச் சிகனே திவாகரன் ஒற்றை
யாழியன் அருணனோ டுதயன்
தினகரன், அருக்கன், ஞாயிறு, பதங்கன்
செப்பிய, கிரண மாலியனே"

இதுபோன்று, காலநிகண்டின் கண்ணே, ஒவ்வொரு காலப்பொருட்குரிய பல பெயர்களும் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

## 3. காரக நிகண்டு

காரக நிகண்டின் வாயிலாக, மேழம் (மேடம்), விடை (இடபம்), இரட்டை (மிதுநம்) முதலானவற்றின் உருவங்களும், காரகங்களும், பலவற்றின் பயன்பாடுகளும் – இன்னபிற செய்திகளும், இடம் பெற்றுள்ளன.

காரகம் என்பது, 'வினைமுதல்' அல்லது செயல் தலைமை என்னும் பொருண்மை பயக்குஞ் சொல்லாம். சொல் = உரிமை.

காரகன் = செய்வோன், இயற்றுவோன் என்னும் பொருண்மை பொதிந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

எடுத்துக்காட்டாகக் காரகநிகண்டில் மேழத் (மேடம்) தின் உருவம் பற்றிக் குறிப்பிடும் முதற்பாடல் வருமாறு :-

"மேடந்தான் மேடரூபமேயாகும்
மேவிடம் காடு நாற்காலாம்
நீடிய தாதுவாகும் கீழ்த் திசையாம்
நிறம், சிவப்பரசன் சாதியதாம்
தேடிய ஆண்பால் நிலமகன் வீடாம்
திநகரன், தனக்கு உச்சமாகும்
வீடிய சநிக்கு நீசமாம் இரவில்
விழித்திடும் இராசியும் என்பார்"

ஆட்டின் உருவமுடைய மேழ (மேட) ஓரையைப் (இராசியைப்) பற்றிய செய்திகள், இப்பாட்டில் இடம் பெற்றுள்ளன.

தில்லை நாயகர் இயற்றிய இந்தக் கணிநூல் நிகண்டிற்கு முன்னும் கணி நிகண்டுகள் தோன்றி காலவெள்ளத்தில் அழியுண்டன போலும். !

## அச்சில் வாராத நிகண்டுகள்

தமிழகரமுதலி வரலாற்றில் அச்சில் வாராத நிகண்டுச் சுவடிகளைத் தேடித் திரட்டியதோடு மட்டுமின்றி, அவற்றினின்று நான்கு நூல்களை உருவாக்கி வெளிக் கொணர்ந்த பெருமை, பேராசிரியர்

வையாபுரி அவர்களையே சாரும். இவர், தம்மிடம் சுவடி நிலையிலிருக்கும் நிகண்டுகளில், இரண்டினைப் பற்றிய விளத்தங்களை, அரும்பொருள் விளக்க முன்னுரையில், குறிப்பிட்டுள்ளார். அவையாவன.

1. கைலாச நிகண்டு சூடாமணி.
2. பல்பொருட் சூடாமணி.

## 1. கைலாச நிகண்டு சூடாமணி

இந்நிகண்டு பிங்கல நிகண்டின் அமைப்பு முறையினைத் தழுவியது. இதனை வலியுறுத்தும் வையாபுரிப்பிள்ளையின் கூற்று வருமாறு :– "இது பிங்கலந்தையின் வழிப்பட்டதென்பது, விண்ணவர் வகை, விண்ணின் வகை, மண்ணின் வகை எனத் தொடங்கிச் சென்று ஊர்வன இறுதியாக வரும் 49 பகுப்புகளாலும், இறுதியில் ஒரு சொற் பல்பொருட் பெயர்களை வைத்திருக்கும் முறைமையாலும் அறியப்படும்".

கைலாச மென்ற அடைமொழியால், இதனை இயற்றியவர் 'சைவர்' என்றும் கருதலாம். இந்நிகண்டு இற்றைக்கு ஏறத்தாழ 350 ஆண்டுகட்கு முன்பு இயற்றப்பட்டதெனக் கருதுவர்" மு. சண்முகம் பிள்ளை. இந்நிகண்டின் படியினைப் (பிரதி) பெற்ற பாங்கினைக் குறித்து பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை கூறுவது : இதன் பிரதி (படி) ஒன்று தொன்னூற் கருவூலமென்று சொல்லத்தகும் திருமேனி இரத்தினக் கவிராயர் பரம்பரையினர் வீட்டிலிருந்து கிடைத்தது.

## 2. பல்பொருட் சூடாமணி நிகண்டு அல்லது வடமலை நிகண்டு

இந்நிகண்டினை இயற்றியவர் ஈசுர பாரதியார். இவர் மடசை என்னும் ஊரைச் சார்ந்தவர். "இவ்வூர் திருவில்லிபுத்தூரை அடுத்துள்ள மடவார் வளாகம் என்ற ஊராக இருக்கலாம்" என்பார் மு. சண்முகம் பிள்ளை. இவருடைய தந்தையார் பெயர் சிதம்பர பாரதி. இந்நூல் கி.பி.1700 இல் இயற்றப்பட்டது. இந்நிகண்டின் பாயிரச்செய்யுள் வாயிலாக நாம் அறியலாம். இந்நூலாசிரியர் அமரகோசம் என்னும் வடமொழி நூலைப் பின்பற்றி ஒரு சொல்லொரு பெயர்த் தொகுதி (காண்டம்); ஒரு சொற் பல்பொருட்டொகுதி (காண்டம்); பல பொருட் கூட்டத்தொரு பெயர்த் தொகுதி (காண்டம்) என்னும் மூன்று (காண்டங்களை) பகுதிகளை ஆக்கியுள்ளார்.

முனைவர் உ.வே.சாமிநாதர் நூலகத்திலுள்ள ஓலைச்சுவடியின் பாயிரத்தில் இந்நிகண்டின் பெயர் "வடமொழி நிகண்டு" என்ற குறிப்புக் காணப்படுகிறது. மேலும் இப்பகுதியில், இந்நிகண்டின் ஆசிரியர் பற்றிய குறிப்பும், நூலின் அமைப்புப் பற்றிய விளத்தங்களும் வருமாறு :–

"பார்புகழ் திருநெல் வேலியம் பதிவாழ்
ஐங்கரத் தொரு கோட் டானையை வடிவேற்
சிங்கந் தன்னைச் சிறப்புடன் ஈன்ற
பிடிவடி வுடைய பெண்கொடி பாகத்து
அடிகள் செம்பொன் அடிகளை வணங்கி
ஒருபெய ரொருபொருள் உரைக்கும் காண்டமும்
ஒரு பொருள் பல்பெயர் ஓதுங் காண்டமும்
பல்பெயர்க் கூட்டத் தொருபெயர்க் காண்டமும்
சொற்பொருட் காண்டத் தொகை மூன் றாக்கி
ஈட்டுபுக ழிரையூர் வடமலை நிகண்டென
நாட்டினன் மடசை நன்னகர் வாழும்
சிதம்பர பாரதி சேய்தின முமையாள்
பதம்பணி யீசுர பாரதி தானே"

இந்நிகண்டின் காலத்தை அறுதியிட்டுரைக்கும் பல்பொருட் சூடாமணியின் பாயிரச் செய்யுள் வருமாறு :–

"கொல்ல மெண்ணூற் றெழுபத்தாறெனக்
கணிதப் பாவாணர் குறித்த வாண்டின்
மல்குபுகழ் விக்கிரம வருடத்தா வணிமூல
வளஞ்சேர் நாளில்
நெல்லைநகர் வடிவுதந்த வேய்முத்தைப்
பணிந்துலகி னெடுநா ணிற்கப்
பல்பொருட் சூடாமணியை யீசுரபா ரதிதமிழாற்
பாடினானே"

இந்தப் பாடலின் ஈற்றடியால் "வடமலை" நிகண்டு என்னும் மறுபெயர், இந்நிகண்டிற்கு உண்டெனத் தெளியலாம்.

"பல்கலைதேர் வடமலைநன் நிகண்டினையீ
சுரகவிஞன் பகர்ந்திட் டானே"

உ.வே.சாமிநாதர் நூலகத்தில் காணப்படும், வடமலை நிகண்டின் பாயிரப்பகுதியும், பல்பொருட் சூடாமணியின் பாயிரச் செய்யுட் பகுதிகளும், வேறுபாடற்றுக் காணப்படுவதால், இதுகாறும் இருவேறு நிகண்டெனச் சொல்லப்பட்டது ஒன்றேயென்று துணியலாம்.

ஆனால், "தமிழகராதிக் கலை" ஆசிரியர் புலவர் சுந்தர சண்முகனார், பல்பொருள் சூடாமணி நிகண்டை, அகராதி நிகண்டுடன் ஒப்பு நோக்கி, இந்நிகண்டின் சிறப்புகள் பற்றிக் கூறுவது வருமாறு :–

நிகண்டின் முப்பெரும் பிரிவுகளுள், "ஒரு சொல் பல்பொருள் பெயர்த் தொகுதி" என்னும் இரண்டாம் பிரிவையும்' ""பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி" என்னும் மூன்றாம் பிரிவையும் பற்றிப் பேசுகிறது. ஒரு சொல் ஒரு பெயர்க்காண்டத்தில் 2800 சொற்கள் இடம் பெற்றுள்ளன. ஒரு சொல் பல்பொருட் காண்டத்தில் 1465 சொற்கள் இடம் பெற்றுள்ளன. பல் பெயர்க் கூட்டத்து ஒரு பெயர்க் காண்டம் தொகைப்பெயர்களைப் பற்றி விளக்குகிறது.

அகராதி நிகண்டைப் போலவே இந்நிகண்டும், அகரவரிசையில் அமைந்துள்ளது. இதிலும் சொற்களின் முதலெழுத்தளவில் அகரவரிசை மேற்கொள்ளப் பட்டுளதாயினும், அகராதி நிகண்டை விட இந்நிகண்டு படிப்போர்க்கு எளிதில் பயனளிக்கவல்லது.

அகராதி நிகண்டில் சொற்கள் பத்துப் பிரிவுகளில், பரவலாகப் பொருள் தரப்பட்டுள்ளன. ஆனால், பல்பொருள் சூடாமணி நிகண்டில் பத்துப் பிரிவுகளில் பகரப்பட்ட சொற்பொருள்கள், இரு பிரிவுகளில் அடக்கப்பட்டுள்ளன. இரு நிகண்டுகளிலும் சொற்கள் முதலெழுத்து முறையில், அகரவரிசையில் அமைக்கப்பட்டுள்ளதால் சொற்களின் பொருள் காணும் பாங்கு எளிதாக்கப்பட்டுள்ளது. ஆனால் "அகராதி நிகண்டில் அம் முதல் இரு பெயர், "அம்" முதல் நாற்பத்தாறு பெயர் என்ற சிக்கல் உள்ளது. பல்பொருள் நிகண்டில் இச்சிக்கல் இல்லை. பொருள் காணுவதற்காக ஒரு சொல்லைத் தேடி எடுக்க வேண்டுமாயின், அகராதி நிகண்டினும், பல்பொருள் சூளாமணி நிகண்டில் விரைவில் முடியும்.

இனி, பல்பொருள் சூளாமணி நிகண்டின் அமைப்பு முறையை விளக்கும் அகச்சான்றாக, ஆசிரியரே இயற்றியுள்ள பாயிரச் செய்யுள் வருமாறு :-

"தோன்றுகாண் டச்சடையான் தொல் சீர்சேர் நாமநூல்
மன்று காண்டத்தால் மொழிகின்றேன்
................" என்றும்,

"நாவுவந்த பல்பொருட் சூளாமணியைப் பாரில்
நாட்டிய சீர்முதற் காண்டமென்னும் பேர்தான்
பூவுவந்த ஒரு பெயரோர் பொருளேயாகும்
போற்றிரண்டாங் காண்டம்பல் பொருளினோர்சொல்
சேவுவந்த நெல்வேலிப் பெருமான் ஈன்ற
செவ்வேளின் திருவருளால் தேர்ந்து நான்சொல்
பாவுவந்த பெயர்மூன்றாங் காண்டமாகும்
பலபெயர்க் கூட்டத்தொருபேர் பலவுந்தானே"

மேற்காண் பாடல்களின் வாயிலாகப் பல்பொருட் சூடாமணிநிகண்டின் உட்பிரிவுகள் குறிக்கப்பட்டுள்ள செய்தியினைத் தெரிந்துகொள்ளலாம். ஏனைய பிற நிகண்டுகளின் உட்பிரிவுகள், தொகுதி, வகை, வர்க்கம், இயல் என்னும் பெயர்களால் அழைக்கப்பட, இந் நிகண்டின் உட்பிரிவோ, "காண்டம்" என்று அழைக்கப் பட்டுள்ளமையும், குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

## 3. அகராதிமோனைக் ககராதி யெதுகை

அகராதிமோனைக் ககராதியெதுகை என்னும் நிகண்டின் பெயரமைப்பே, ஒரு சொற் பலபொருள் உணர்த்தும் நூல் என்பதைத் தெளிவுறுத்தும். பேராசிரியர் வையாபுரியிடம் உள்ள அச்சில் வாராத ஓலைச்சுவடிகளுள், இந்நூலும் ஒன்று. தற்பொழுது இச்சுவடி, கல்கத்தா தேசியநூலகத்தில் உள்ளது.

## 4. நவமணிக்காரிகை நிகண்டு

பெரும்புலவர் அரசஞ் சண்முகம் பிள்ளை அவர்கள் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில வாழ்ந்தவர் ஆவார். இவரது சொந்தவூர் மதுரையம்பதிக் கருகிலுள்ள சோழவந்தான் என்னும் பேரூராகும். இவர் தொல்காப்பியம் முதல் நன்னூல் வரை, அனைத்து இலக்கிய இலக்கணங்களையும் கற்றுத் தேர்ந்த வித்தகர். இவரால் இயற்றப்பட்டதே நவமணிக்காரிகை நிகண்டு; இந்நிகண்டு பற்றிப் புலவர் மு.சண்முகம் கூறுவது. "பெயருக்கு ஏற்ப இது கட்டளைக் கலித்துறைச் செய்யுளால் அமைந்தது என்பதும், ஒன்பது தொகுதியாக ஆசிரியர் இந்நூலை ஆக்கத் திட்டமிட்டிருந்தார் என்பதும், தெரிய வருகின்றன. இலக்கிய இலக்கணக் கடல்களில் ஊறித் திளைத்துத் தம் பாடல்களினாலும், கவிதைகளினாலும், ஆய்வுரைகளினாலும், தமிழ் வரலாற்றில் தனியிடம் பெற்றவர். இவருடைய நிகண்டு நூல், முற்றுப்பெற்றதா என்று சொல்லக் கூடவில்லை. இவருடைய பேரன் முறையினரான திருவாளர் இராக்கப்பர், சோழவந்தானில் இப்பொழுது முதியோராய் வாழ்ந்து வருகிறார். இவருக்கு அரசஞ் சண்முகனார் நூல்கள் பலவும் மனப்பாடம். நவமணிக்காரிகை நிகண்டின் தெய்வப்பெயர்த் தொகுதியை அப்படியே ஒப்பிக்கிறார் இப்பெரியார். 122 செய்யுட்களைக் கொண்ட தெய்வப்பெயர் பற்றிய முதல்தொகுதி இவர் வாய்மொழியால் கேட்டுப் பதிவு செய்யப்பட்டிருப்பதாகத்

தெரியவருகிறது. புலவர் பெருமான் அரசஞ் சண்முகனாரின் நூல்களை மீண்டும் வெளியிடும் பணியினைச் செய்துவரும் சோழவந்தான் கிண்ணிமடத்து அறங்காவலர்கள், இந்நிகண்டுப் பகுதியையும் வெளியிடுவார் என்று எதிர்பார்க்கலாம்.

## 5. விரிவு நிகண்டு

இந்நிகண்டு விரிவாய்மைந்த பெரிய நூல் என்பதை இதன் பெயரின் வாயிலாகவே நாம் தெரிந்து கொள்ளலாம். ஒருசொற்பல் பொருள் விளக்கும் இந்நிகண்டின் வரலாறு குறித்துப் பேராசிரியர் வையாபுரி கூறுவது வருமாறு:-

"இன்றைக்கு 12 வருடங்கட்கு முன்னர், வீரராகவபுரத்தில் வழக்குரைஞரா யிருந்த பூமிநாதர் களின் தந்தையாரும் வீரவநல்லூர் வாணராம் நா.அருணசலநாவலரவர்கள் 'விரிவு நிகண்டு' எனப்பெயரிய நூலொன்று விருத்தப்பாவால் இயற்றி உரையும் வகுத்திருக்கின்றார்கள். நாவலரவர்கள் காலஞ்சென்று, இப்பொழுது சுமார் 25 வருடங்கள் இருக்கலாம்".

இந்நிகண்டின் படி, திருநெல்வேலி வழக்குரைஞர் திருவாளர் வி.எசு. சங்கர சுப்பிரமணி யரால், பேரா. வையாபுரிக்குக் கிடைத்தது. சூடாமணி நிகண்டினை அடிப்படையாகக் கொண்டு, வழக்குச் சொற்களும், பொருள்களும், விரிவு நிகண்டில் விரிவாக அமைக்கப்பட்டுள்ளன என்பதைப் பின்வரும் அதன் காப்புச்செய்யுள் விளக்குகிறது.

"பொன்பொலி வீரைவேணிப் பூமிநாத தன்றன்றாசன்
முன்புறு நிகண்டோ டேனை முதுமொழிப் பொருள னேகம்
இன்புறு மெதுகையாக வியற்றுமிந் நிகண்டை மேலோர்
அன்பமை கருத்துட் கொள்ள வருள்செ யைங்கரமா தேவே"

இந்நூலின் இறுதிப்பகுதி மிகவும் பழுதுற்றுச் சிதலமடைந்துள்ளது. இதனால், விரிவுநிகண்டின் செய்யுட்டொகை உறுதி செய்யப்படவில்லை. "தெளிவாக அறிவது 1036 செய்யுட்கள். பல செய்யுட்கள் எண்ணிடப் பெறாதுள்ளன. ஆகவே 1100 செய்யுட்கு மேற்பட இந்நூலில் உள்ளனவென்று கொள்ளலாம். வழக்குச் சொற்கள் புக்கு இது மிக விரிந்த நூலாதலைக் கீழ் வரும் செய்யுட்களாலறிக".

"அகமிடம் பாம்பு தானி யம்புவி பள்ளமுள்ளோ
டகலியப் பொதுவே தண்ட மாகாய மாழ மான்மா
பகலனே முருபு துக்கம் பாவமுள் ளிடமோர் தாரு
தகுதியில் குணம்வீ டோடு சாருபத் திரவம்
நெஞ்சாம்"

திருநெல்வேலி மாவட்டத்தில், மக்கள்வழக்கிற் காணப்படும் சொற்கள், விரிவு நிகண்டில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

"கம்மலே யிரும லோர்வ கைக்கடுக் கன்காதோலை
பம்மல் மாசோடு மங்கல் குரலடைப் பென்பர் பாரோர்
பம்பல்மந் திப்புமுடல் பொருத்திக்கட் டுகைமந்தாரம்
செம் முதலைம்பே ரென்பர் சீமாட்டி தலைவி செல்வி"

இப்பாடலின் கண்ணே, கம்மல், பம்மல் முதலான சொற்கட்குப் பொருள் கூறப்பட்டுள்ளன.

## நிகண்டுகளில் ஒருசொற் பலபொருட் பகுதி அமைப்பு – ஒப்புமை – ஒரு கண்ணோட்டம்

தமிழகரமுதலி வரலாற்றில், ஒருசொற் பலபொருட் பகுதி, சொற்பொருள் தெரிதற்கும், பிற்காலத்தே அகரநிரல்படி வளர்ச்சியடைந்து, அகரமுதலிகள் உருவாவதற்கும் அடிப்படையாயிருந்த தென்பது, அகரமுதலி வல்லுநர்தம் கொண்முடிபாகும். இப்பகுதியின் அமைப்பொற்றுமை பொறுத்தமட்டில், தொல்காப்பிய உரியியற்பகுதியை, அடித்தளமாகக் கொண்டு, திவாகரரும், பிங்கலரும் எதுகைத்தொடை சிறக்கும் நூற்பாக்களை யாத்தனர். ஆனால் காலப்போக்கில், ஏட்டுச் சுவடியினின்று, இந்நூலினைப் பதிப்பித்தோர், ஆசிரியர் அமைத்த ஒழுங்கு முறையை மேற்கொள்ளா தொழிந்தனர். அகரமுதலி மக்களிடையே வழக்கத்திற்கு வந்த பிற்காலத்தில், வடமொழிக்கலப்பு வளரத் தொடங்கியதால், திவாகரத்திலுள்ள ஒரு சொல் பல்பொருட் பகுதியை ஆதியிற் பொருள், அந்தத்துப் பொருள் என இருகூறுபடுத்தி சொற்களை அகரநிரலில் – அகராதி முறையில் நூற்பாக்களை மாற்றியமைத்தனர். இம்மாற்றம் கி.பி.1702 ஆம் ஆண்டிற்கு முன்பே நிகழ்ந்ததெனலாம். எனவே "திவாகரர் அமைத்த முறை மாறி இப்புதுமுறைப்படியும் ஏடுகள் அமையலாயின. இம் முறையையே திவாகரப் பதிப்பாசிரியர்கள் பின்பற்றி வந்துள்ளனர். திவாகரம் பதினொன்றாம் தொகுதி

முற்றுமே சொற்களை அகர வரிசையில் நூற்பாக்களை மாற்றியமைத்த முறையும் ஏட்டுப் பிரதியில் காணப்படுகிறது

பிங்கல நிகண்டை முதன்முதல் பதிப்பித்த சிவன்பிள்ளை ஒருசொற் பல்பொருள் வகையான, பத்தாம் தொகுதியை ஆசிரியர் அமைத்த முறையிற் பதிப்பிக்கவில்லை. சொற்களை அகரவரிசைப்படுத்தி, அகரமுதலி வடிவில் நூற்பாக்களை மாற்றியமைத் துள்ளார். அகரமுதல், வகரம் ஈறாகப் பிரித்து, பத்துப் பகுதிகளாக அச்சிட்டுள்ளார். திவாகரம், பிங்கலம் எனுமிவ்விரண்டு நூல்களிலும், பதினொன்றாம் தொகுதியாகிய ஒருசொற் பல்பொருட் பகுதி, ஆசிரியர் அமைத்த முறையில் இதுவரை அச்சிடப் பெறவேயில்லை.

கி.பி.1594 இல் இரேவண சித்தர் முற்றிலும் அகரமுதலி அமைப்பில் "அகராதி நிகண்டு" என்னும் பெயரில், ஒருசொல்பல்பொருள் விளக்க நூலை உருவாக்கியுள்ளார். இந்நிகண்டில், ஒவ்வோ ரெழுத்திற்கும், ஒரு பொருள் முதல், 46 பொருள் வரை அமைத்து, விளக்கியுள்ள திறன் குறிப்பிடத்தக்க வொன்றாகும். "முதலெழுத்து அகரவரிசையே தவிர அகராதி முறையை முழுமையாகத் தழுவியமைந்தன்று" என்பார் மு. சண்முகம் பிள்ளை.

சாமிநாதக் கவிராயரால் 18 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட பொதிகை நிகண்டில், திவாகரத்தில் பதினோராவது தொகுதியாக அமைக்கப்பட்ட ஒருசொற் பல்பொருட் பகுதி, இரண்டாம் பகுதியாக அமைக்கப்பட்டுள்ளது. இந் நிகண்டு முழுவதும், "அகராதி முறை தெளிவுற நன்கு அமைந்துள்ளது. அகரவர்க்கம், ஆகார வருக்கம் என எழுத்து வருக்கம் மாறும்போது, வருக்கம் சுட்டும் தலைப்பும் காணப்படுகிறது.

முற்றிலும் நூற்பாவினாலாகிய, தமிழுரிச்சொற் பனுவலில், ஒருசொல் பல பொருள் விளக்கும் சொற்கள் மட்டும் அகரமுதலி அமைப்பில், விளக்கம் அமைக்கப்பட்டுள்ளது.

ஆனால், சூடாமணி நிகண்டின் ஆசிரியர் மண்டல புருடரோ, 16 ஆம் நூற்றாண்டில் யாவரும் மனனம் செய்தற்கு எளிதாக இருக்கும் வண்ணம், எதுகை முறையில் சொற்களை அமைத்து, சற்றுப் புதுமையான வகையில் விருத்தப்பாவில் 11,000 சொற்பொருள்களை அமைத்துள்ளார். சூடாமணி நிகண்டிற்கு முந்திய நூல்கள் எதுகை முறையில் அமையவில்லை என்பதும், மனனம் செய்வதற்கு சற்றுக் கடினமாயிருந்ததும் குறிப்பிடத்தக்கதாகும். மண்டல புருடரோ, தமது சூடாமணி நிகண்டில், எளிதாக மனத்திற் பதியுமாறு, ககரம் முதல் னகரம் ஈறாகப் பதினெட்டு எழுத்துகளும், எதுகையில் அமைத்துச் சொற்பொருளை விளக்கியுள்ளார்.

இம் முறையைப் பின்பற்றிப் பத்தொன்பதாம் நூற்றாண்டில், வேதகிரி முதலியாரால் 2526 சொற்பொருள்களை விளக்கும் 600 விருத்தப் பாக்களுடன், "வேதகிரியார் சூடாமணி நிகண்டு" இயற்றப்பட்டது. வேதகிரி சூடாமணி நிகண்டு 583 பாடல்களில், புதிய சொற்பொருள்களை விளக்குவது.

மண்டலபுருடரின் எதுகைமுறை அமைப்பில் விருத்தப்பாக்களால் ஆகிய பல நிகண்டு நூல்கள், 18,19 ஆம் நூற்றாண்டுகளில் தோன்றின. அவை வருமாறு :-

1. அரும்பொருள் விளக்க நிகண்டு, 18–ஆம் நூற்றாண்டில் அரும்மருந்தையரால் 700 விருத்தப் பாக்களால் யாக்கப்பட்டது. 3200 ஒரு சொல் பல்பொருள்களை உள்ளடக்கியது.

2. பொதிகைநிகண்டு, 18–ஆம் நூற்றாண்டில், சாமிநாதக் கவிராயரால் 500 விருத்தப்பாக்களில், 14,500 சொற்பொருள்களை விளக்கும் பான்மையில் உருவாக்கப்பட்டது. மேலும், இந்நிகண்டில் 2,228 சொற்பொருள்களை விளக்கும் நூற்பாக்களும் இடம் பெற்றுள்ளன.

3. நாநார்த்த தீபிகை, முத்து சுவாமி என்பவரால், 19–ஆம் நூற்றாண்டில், 1,110 (ஆயிரத்து நூற்றிப்பத்து) விருத்தப் பாக்களின் மூலம், 5,432 ஒரு சொற் பல்பொருள்களை விளக்கும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளது.

287 வெண்பாக்களில் உரிச்சொல் நிகண்டு, கி.பி.14–ஆம் நூற்றாண்டில், காங்கேயரால் 3,200 ஒரு சொற் பல் பொருள்களுடன் இயற்றப்பட்டது. மேலும், 13,000 ஒரு சொற் பல்பொருள்களை விளக்கும் வண்ணம், கி.பி.17–ஆம் நூற்றாண்டில், திருவேங்கட பாரதி என்பவரால் பாரதிதீபம் யாக்கப்பட்டது. இந்நிகண்டு 737 கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களால் ஆகியது.

முடிவாக அனைவரும் கற்றும் இன்புறுவதற்கு ஏற்றவாறு, எதுகை முறை யாப்பில் அமைந்த இவ்வொரு

சொல் பல்பொருட் தொகுதி, மேலும் எளிதில் உள்ளத்தில் நிற்கும் வண்ணம், விருத்தமுறைப் பாடங்களில் கூடிய எதுகை அமைப்புடன் காலப்போக்கில் வளர்ச்சியுற்ற தெனலாம். எதுகையமைப்பு மட்டுமின்றி, அகரமுதலி யமைப்பினையும் தன்னகத்தே கொண்டு, தமிழகரமுதலி வரலாற்றில் பெருகி வளர்ந்துள்ளது. பல்வேறு அகரமுதலிகள் பெருகி வரும் இந்நாளில் அனைவரும் நிகண்டுகளின் சொற்பொருள்களை எளிதில் அறிய வேண்டுமாயின், ஒரு சொற் பல்பொருட் பகுதிகளை, முறையாக அகரநிரல்படி அமைக்க வேண்டியது இன்றைய அகரமுதலி வல்லுநர்தம் கடப்பாடாகும். "இத்தகைய ஓர் நிகண்டு அகராதி தோன்ற வேண்டுமாயின் எல்லா நிகண்டுகளுமே, தனித்தனி அகராதிகளுடன் தெளிவுறப் பதிப்பிக்கப் பெறல் வேண்டும்" என்பார் மு. சண்முகம் பிள்ளை. நிகண்டுகளின் பொருட் பாகுபாடு ஒப்புமை குறித்த அட்டவணை வருமாறு :–

## நிகண்டுகளின் பொருட்பாகுபாடு ஒப்புமை அட்டவணை

| பிரிவு எண். | திவாகரம் | பிரிவு எண் | பிங்கலம் | பிரிவு எண். | சூடாமணி, உரிச் சொல் நிகண்டு | பிரிவு எண். | கயாதரம் |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | தெய்வப் பெயர்த் தொகுதி | 1<br>2 | வான் வகை<br>வானவர் வகை | 1 | தேவப் பெயர்த் தொகுதி | 1 | தெய்வப் பெயரியல் |
| 2. | மக்கட் பெயர்த் தொகுதி | 5 | ஆடவர் வகை | 2 | மக்கட் பெயர்த் தொகுதி | 3 | மக்கட் பெயரியல் |
| 3. | விலங்கின் பெயர்த் தொகுதி | 8 | மாப்பெயர் வகை | 3 | விலங்கின் பெயர்த் தொகுதி | 4 | விலங்கின் பெயரியல் |
| 4. | மரப்பெயர்த் தொகுதி | 9 | மரப் பெயர் வகை | 4 | மரப் பெயர்த் தொகுதி | 5 | மரப் பெயரியல் |
| 5. | இடப் பெயர்த் தொகுதி | 4 | அவனி வகை | 5 | இடப் பெயர்த் தொகுதி | 2 | இடப் பெயரியல் |
| 6. | பல்பொருட் பெயர்த் தொகுதி | 6 | அனுபோக வகை | 6 | பல்பொருட் பெயர்த் தொகுதி | 6 | பல்பொருட் பெயரியல் |
| 7. | செயற்கை வடிவப் பெயர்த் தொகுதி | 6 | அனுபோக வகை | 7 | செயற்கை வடிவப் பெயர்த் தொகுதி | 7 | செயற்கை வடிவிற் பெயரியல் |
| 8. | பண்பு பற்றிய பெயர்த் தொகுதி | 7 | பண்பிற் செயலிற் பகுதி வகை | 8 | பண்பு பற்றிய பெயர்த் தொகுதி | 8 | பண்பு பெயரியல் |
| 9. | செயல் பற்றிய பெயர்த் தொகுதி | 7 | "" | 9 | செயல் பற்றிய பெயர்த் தொகுதி | 9 | செயல் பற்றிய பெயரியல் |
| 10. | ஒலி பற்றிய பெயர்த் தொகுதி | 7 | ஷ உட்பிரிவு :<br>வாய் வகை,<br>செவி வகை | 10 | ஒலி பற்றிய பெயர்த் தொகுதி | 10 | ஒலி பற்றிய பெயரியல் |
| 11. | ஒரு சொற் பல்பொருட் பெயர்த் தொகுதி | 10 | ஒரு சொற் பல பொருள் வகை | 11 | ஒரு சொற் பல் பொருட் பெயர்த் தொகுதி | 11 | ஒரு சொற் பெயரியல் |
| 12. | பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி | 3 | ஐயர் வகை | 12 | பல்பெயர்க்கொரு பெயர்த் தொகுதி | | |

## அகரமுதலி வல்லுநர்கள் பார்வையில் நிகண்டுகளின் முப்பெரும் பகுதிகள்

பொருள்களின் கூறுபாடுகளனைத்தும் விளக்கமாக புலப்படுத்தும் பாங்கினில் திவாகரர் முதலியோர், நிகண்டுகளைப் பன்னிரு பகுதிகளாகப் பகுத்துக் காட்டிய ஞான்றும், அகரமுதலி வல்லுநர்கள் நிகண்டுகளின் பொதுவியல்புகளைக் கருத்திற்கொண்டு, முப்பெரும் பகுதிகளாகப் பிரித்துள்ளனர்.

I. நிகண்டுகளின் முதற்பிரிவு – ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதி. இத்தொகுதியினை, மொழியிய லாரும், அகரமுதலி வல்லுநர்களும், ஆங்கிலத்தில் வழங்கும் சொற்கருவூலத்திற்கு (Thesaurus) இணையாகக் கருதுவர். உசித சூடாமணி நிகண்டு, நாமதீப நிகண்டு, அபிதானத் தனிச்செய்யுள் நிகண்டு போன்றவை, இப்பகுதியினைத் திறம்பட விளக்குகின்றன எனலாம்.

II. நிகண்டுகளில் அமைந்துள்ள இரண்டாம் பிரிவு – ஒரு சொல் பல் பொருட் பெயர்த் தொகுதி – இத்தொகுதியில் ஒவ்வொரு சொல்லுக்கும் பல்வகைப் பொருள்கள் பாங்குடன் இடம் பெற்றுள்ளன. இத்தொகுதி அகரமுதலி போன்ற அமைப்பினை உடையது. இத்தொகுதியின் அமைப்பினை அகராதியியல் அறிஞர் பின்வருமாறு பேசுவர்.

1. "ஒவ்வொரு சொல்லுக்குமுரிய பல பொருள்களையும் விளக்கிச் சொல்வது பதினோராந் தொகுதி. இது அகராதி போல ஒரு சொல்லின் பல பொருள்களையும் விளக்கும் பகுதியாதலின், இது மிகவும் சிறப்பு வாய்ந்ததாகக் (முக்கியமாக) கருதப்படும். "ஒரு சொல் பல்பொருள் விளக்கம்" என்று இப்பகுதியைக் குறிப்பிடலாம்" (மு. சண்முகம் பிள்ளை, பக்.19).

2. நிகண்டுகளின் இரண்டாம் பிரிவு – ஒரு சொல் பல்பொருள் பெயர்த் தொகுதி – அகராதி நீர்மையது. எனவே இத்தொகுதி மிகுதியும் போற்றப் பட்டது. இரண்டாம் பிரிவை மட்டும் அகராதி நிகண்டு, அரும்பொருள் விளக்க நிகண்டு, வேதகிரியார் சூடாமணி நிகண்டு, நாநார்த்த தீபிகை, சிந்தாமணி நிகண்டு, விரிவு நிகண்டு ஆகியன கொண்டுள்ளன" (வ.செயதேவன். 1985, பக். 69).

3. இப்பகுதி "நாம் இந்தக் காலத்தில் பயன்படுத்தும் அகராதியைப் (Dictionary) போல, ஒரு சொல்லுக்கு எத்தனை பொருள்கள் உண்டோ, அத்தனை பொருள்களும் கொடுக்கப்பட்டுள்ள பகுதியாகும்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.135).

III. நிகண்டின் முப்பெரும் பிரிவுகளுள், பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதி முற்றிலும் வேறுபட்டது. இத்தொகுதியில், பல பொருள்களின் கூட்டமாகிய தொகைப் பெயர்கள் அஃதாவது எண்ணிக்கையால் குறிக்கப்படும் பெயர்கள், விளக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக மூன்று என்னும் எண்ணால் சுட்டப்படும் மூவறிவு" என்னும் தொகைப்பெயர், தொடுஅறிவு, நாக்கறிவு, மூக்கறிவு என்னும் பல பொருள்களின் கூட்டத்தைக் குறிக்கிறது.

| | | |
|---|---|---|
| | உற்றறிவு | |
| ஐயறிவு | (தொட்டறிவு) | பொருட்டொகை |
| என்னும் தொகைப் | நாக்கறிவு | நிகண்டு |
| பெயர் விளக்கும் | மூக்கறிவு | இவ்வகையைச் |
| பொருண்மைகள் | கண்ணறிவு | சார்ந்தது. |
| | செவியறிவு | |

இத் தொகுதியில், "இருவினை; முப்பொறி" போன்ற தொகைப்பெயர்களே விளக்கப்பட்டுள்ளன.

பல பொருள்களின் கூட்டத்தைக் குறிக்கும், ஒரு தொகைப் பெயராக இருத்தலின், இத் தொகுதியினைத் தொகைப்பெயர் விளக்கம் என்று அகராதியியல் வல்லுநர் குறிப்பர்.

இத் தொகுதி பற்றி வ.செயதேவனார் "நிகண்டுகளின் மூன்றாம் பிரிவு – பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி – தமிழுக்கும் வடமொழிக்கும் உரியது" (தா.வே.வீராசாமி. 1991, பக்.72) என்பர்.

மேலே குறிப்பிட்டுள்ள மூவகைக் கூறுகளும் நிரம்பப் பெற்றதாய், பன்னிரு தொகுதிகளின் அமைப்பையும் உள்ளடக்கியதாய் அமைந்த நிகண்டு நூல்கள் பல. திவாகரம், பிங்கலம், உரிச்சொல் நிகண்டு, கயாதரம், பாரதி தீபம், சூடாமணி, ஆசிரியநிகண்டு, கைலாச நிகண்டு, பல்பொருள் சூடாமணி நிகண்டு போன்றவை, மூவகைக் கூறுகளையும் முழுமையாகப் பெற்றவை எனலாம். நிகண்டுகட்குரிய இலக்கணக் கூறுகளைத் தன்னகத்தே கொண்டு மிளிரும் முழுமையானதும், காலத்தால் முற்பட்டதுமான முதல் நிகண்டு திவாகரமேயாகும்.

## வரலாற்று நோக்கில் அகராதிகள்

நிகண்டுகளிற் காணப்பெறும், சொற்பொருள் விளக்கும் பண்பும், கலைக்களஞ்சியப் பண்பும் முறையே அகரமுதலிகள் உருவாதற்கு அடிகோலின. நிகண்டு நூல்களைப் போன்று பாடல் வடிவிலன்றித் தனித்தனிச் சொற்களை ஒன்றன்பின் ஒன்றாக, வண்ணமாலை வரிசை (அகரவரிசை) யில், அமைத்துப் பொருள் விளக்கம் செய்யும் நூலே அகரமுதலியாகும். 'அகராதி'யென்பதைப் பாவாணர் "அகரமுதலி" யென்னும் தூய செந்தமிழ் வடிவமாக்கினார். இத்தகைய அகரமுதலி அல்லது அகராதிகள், கி.பி.17 ஆம் நூற்றாண்டிலேயே முகிழ்த்தன வெனலாம். பதினேழாம் நூற்றாண்டில் தோன்றிய இவ்வகரமுதலிக் குழவியானது, பதினெட்டு - பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் முன்னிளமைப் பருவத்தையும் பின்னிளமைப் பருவத்தையும் கடந்து இவ்விருபதாம் நூற்றாண்டில் கட்டிளங்காளையாக உலா வருகின்றதெனலாம். நிகண்டுக் காலத்திலேயே அகரநிரல் குறித்த கருத்துப் பயின்ற ஞான்றும், பதினெட்டாம் நூற்றாண்டில்தான் வண்ணமாலை வரிசை முழுமை பெற்றது.

### அகரமுதலிகட்கு அடிப்படை வண்ணமாலை வரிசையே

அகரமுதலிகட்கு இன்றியமையாது வேண்டப் படும், வண்ணமாலை வரிசையானது, தமிழகரமுதலி வரலாற்றில் – 18 ஆம் நூற்றாண்டில் முழு வடிவம் பெற்ற ஞான்றும், கி.பி.13,14 ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய வைணவ உரைகளிலேயே, செல்வாக்குப் பெறத் தொடங்கின எனலாம். இக்காலத்தில் தோன்றிய வைணவ உரை விளக்கமானது, மணிப்பிரவாளநடையில் வளர்ந்த போழ்தும், கி.பி.13,14 ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த மக்களின் பேச்சு வழக்கிற்கு, நற்சான்று படைக்கின்றதெனலாம். இவ்வாறு அகரவரிசைக் கருத்தானது, அகரமுதலி வரலாற்றில் கி.பி.13,14 ஆம் நூற்றாண்டுகளில் வைணவ உரைகளில் உருவாகி, கி.பி.17,18 ஆம் நூற்றாண்டுகளில், முழு வடிவம் பெற்ற அகரமுதலிகளை உருவாக்கியதெனலாம். இவ்வாறு அகராதிகளில் வண்ணமாலை வரிசையானது கி.பி.13 இல் உருவாகி, கி.பி.18 ஆம் நூற்றாண்டில் முழு வளர்ச்சியுற்று, கி.பி.19, 20 ஆம் நூற்றாண்டு அகரமுதலிகளில் அடிப்படையாகத் திகழ்கிறது. இக்கருத்தினைத்தான், "அகரநிரல் பற்றிய ஆர்வம், அகராதிகள் உருவாவதற்குரிய வழிகளை வகுத்தது" என்பார் வ.செயதேவன்.

### வரலாற்று நோக்கில் தமிழகராதிகள் கி.பி.17.

1. தமிழ்ச் சொல்லுக்குத் தமிழ்ச் சொல்லாலேயே பொருள் கூறும் அகராதிகள் கி.பி.17 ஆம் நூற்றாண்டில் தோன்றின.

2. கி.பி.18, 19, 20 ஆம் நூற்றாண்டுகளில், மேற்குறித்த அகராதிகளுடன் தமிழுக்குப் போர்த்துக்கீசிய அகராதிகளும், முகிழ்த்தன.

3. போர்ச்சுக்கீசிய சொல்லுக்கு நேரான தமிழ்ச்சொல் தரும் போர்ச்சுகீசிய – தமிழ் அகராதி தோன்றியது.

4. இது போன்றே, இக்கால கட்டத்தில் தமிழ் இலத்தீன் – இலத்தீன் தமிழ் அகராதிகளும் தோன்றின.

5. தமிழ் பிரெஞ்சு – பிரெஞ்சு தமிழ் அகராதிகளும் முகிழ்த்தன.

6. தமிழ் செர்மனி – செர்மனி தமிழ் அகராதிகளும் இயற்றப்பட்டன.

7. தமிழ் உருசியன் – உருசியன் தமிழ் அகராதிகளும் உருவாகின.

8. தமிழ் ஆங்கிலம் – ஆங்கிலம் தமிழ் அகராதிகளும் இயற்றப்பட்டன.

9. தமிழ் இந்தி – இந்தி தமிழ் அகராதிகளும் தோன்றின.

10. கிரந்தம் – தமிழ் அகராதிகளும் உருவாகின.

11. இந்துத்தானி – தமிழ் அகராதியும் முகிழ்த்தன.

12. தமிழ் சிங்களம் அகராதிகளும் படைக்கப்பட்டன.

13. மலாய் – தமிழ் அகராதிகளும் எழுந்தன.

14. பர்மா – தமிழ் அகராதியும் தோன்றின.

15. ஆங்கிலம் – தெலுங்கு – தமிழ் அகராதியும் தோன்றின.

16. இந்தி – மராத்தி – தெலுங்கு – தமிழ் அகராதியுமென இருமொழி, மும்மொழி அகராதிகளும் தோன்றின; நாளும் புதுப்புது அகராதிகள் தோன்றிய வண்ணம் உள்ளன. மற்றும் நீண்ட நாளாக நம் நாட்டில் நிலவுகிற வடமொழியோடு பிணைந்த சொற்களும் இவற்றில் இணைந்தன.

17. தமிழ் – வடமொழி அகராதியும்; பின்பு தமிழோடு கலந்த சொற்களும் இவற்றில் இணைந்தன.

18. தமிழ் – இந்தி ; இந்தி – தமிழ் அகராதிகளும், தமிழகரமுதலி வரலாற்றில் குறித்தாக வேண்டிய செய்திகளாகும்.

## தமிழகரமுதலி வரலாற்றில் அகராதிப்பகுப்பு முறை

பொதுவாக, அகரமுதலி வல்லுநர்கள் அகராதிகளை வரலாற்று அகராதிகள் என்றும் (Diachronic dictionaries) ; தற்கால விளக்க அகராதிகள் (synchronic dictionaries) என்றும் இருவகையாகப் பகுப்பர்.

### வரலாற்று அகராதிகள் :–

வரலாற்று அகரமுதலிகள் சொற்களின் வடிவத்திற்கும், பொருண்மைக்கும் முதலிடம் தருபவையாகும். இவ்வரலாற்று அகராதிகளை அகரமுதலி வல்லுநர் இருவகையாகப் பகுப்பர். அவை வருமாறு :–

1. வரலாற்றுமுறைப் பொருள் அகராதிகள் (Historical dictionaries) : "தமிழில் வரலாற்று முறைப் பொருள் அகரமுதலிகள், முழுமை பெறவில்லை; ஆனால் இவ்வகராதியை உருவாக்கும் முயற்சிகள் தொடர்ந்த வண்ணம் உள்ளன. வரலாற்று முறைப் பொருள் அகராதிகள், வரலாற்றுச் சான்றுகள் நிறைந்த கால கட்டத்தில் தோன்றிய சொற்களின் வடிவத்திலும் பொருளிலும் உண்டாகும் மாற்றங்களைப் பதிவு செய்வதில் கருத்துச் செலுத்தும். அண்ணாமலைப் பல்கலைக் கழக மொழியியல் துறையும், கேரளப் பல்கலைக் கழகத் தமிழ் மொழியியல் துறையும் இவ்வகை அகரமுதலியினை வெளிக்கொணர முயல்வதாகத் தெரிகிறது. ஆனால், அது இந்நாள் வரை கைகூடவில்லை.

சென்னையில் இராசம் என்பார், வரலாற்று முறைப்பொருள் அகராதி ஒன்றை வெளிக்கொணரத் திட்டமிட்டுப் பழந்தமிழ் நூல்களுக்கெல்லாம் சொல்லடைவு செய்து வருவதாகத் தெரிகிறது. "இன்றுள்ள அகராதிகளுள், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி, ஓரளவு வரலாற்று முறையில், பொருள் கூற முயற்சி செய்துள்ளது" (வ.செயதேவன். 1985, பக்.85) எனலாம். காட்டாகப் பின்வரும் பதிவைப் பதிவு செய்யலாம்.

(எ.டு) சூள் – தல் (வி.). 1. ஆணையிடுதல், "ஐய சூளினடிதொடு குன்றோடு" (பரிபா. 8 :70). 2. வஞ்சினங் கூறுதல்; "சூட்கின்ற வீரம்" (கம்பரா. நிகும்ப. 82)

சென்னைப் பல்கலைக் கழக அகரமுதலியிலுள்ள அனைத்துப் பதிவுகளுமே, வரலாற்று முறைப் பொருள் பயப்பனவென்று கொள்ளவியலாது. இப் பொருண்மை யைப் பின்வரும் சான்று உறுதிப்படுத்துகிறது.

சூள் (பெ.) 1. வஞ்சினம் (சபதம்). "சூள் பேணான் பொய்த்தான் மலை" (கலித்.41).

2. ஆணை. "இன்னாத் தொல்சூ ளெடுத்தற் கண்ணும்" (தொல். பொருள். 147)

"சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி உருவான காலத்தில், பல்வேறு தமிழ் நூல்களின் காலம் வரையறை செய்யப்படாமல் இருந்தது. எனவே, இவ்வகராதி வரலாற்றுமுறைப் பொருள் அகராதியாக உருவாக்கம் பெறவில்லை" (வ.செயதேவன். 1985, பக்.85) என்பதும் கருதத்தக்கது.

### சொற்பிறப்பியல் அகராதிகள்

அகரமுதலி வரலாற்றில் சிறப்பிடம் பெற்றுள்ள "சொற்பிறப்பியல் அகரமுதலி குறித்த விரிவான செய்திகளைச் சொற்பிறப்பியல் அகரமுதலி" என்னும் பகுதியிற் கண்டு கொள்க.

### தற்கால விளக்க அகராதிகள்

தற்கால விளக்க அகராதிகளைப் பொது அகராதிகள் எனவும், சிறப்பு அகராதிகள் எனவும், இரண்டாகப் பகுக்கலாம். இவ்விரண்டினுள், பொது அகராதிகள், மொழியின்கண் அமைந்த அனைத்துச் சொற்களுக்கும், பொதுவாகப் பொருள் வரையறை செய்யும் பாங்கின எனலாம். இவ்வாறல்லாமல், மொழியின் சொற்களுள், சிறப்பாகக் குறிப்பிட்ட ஏதேனும் ஒரு பகுதிக்கு மட்டும் விளக்கந் தருபவை, சிறப்பகராதிகள் எனலாம்.

### பொது அகராதிகள்

தமிழ் மொழியிலுள்ள பொது அகராதிகளை இரு வகைகளாகப் பிரிக்கலாம். 1. தகுமொழி விளக்க அகராதிகள் (Standard Descriptive Dictionaries) 2. மீவிளக்க அகராதிகள் (Overall Descriptive Dictionaries).

"தகுமொழி விளக்க அகராதிகள் ஒரு மொழியில் உள்ள கிளை மொழிகளையும், திசை வழக்குகளையும் விலக்கி, அம் மொழியின் தகுமொழிச் (Standard language) சொற்களுக்கு மட்டுமே பொருள் விளக்கம் செய்யும். மீவிளக்க அகராதிகள், ஒரு மொழியின் தகுமொழிச் சொற்களுக்கு மட்டும் அன்றிக் கிளைமொழிகள், திசைவழக்குகள், குறுமொழிகள், கொச்சைவழக்குகள், துறைசார்வழக்குகள் முதலிய எல்லா சொற்களுக்கும், இனம் சுட்டிப் பொருள் விளக்கம் செய்யும்" (வ.செயதேவன். 1985, பக்.91). தமிழ் மொழியில் இவ்விரு வகையான அகராதிகளும் உள்ளன.

## தகுமொழி விளக்க அகராதிகள்

அகரமுதலி வரலாற்றில், 17 ஆம் நூற்றாண்டில் தோன்றியதும், அருஞ்சொற்களுக்குப் பொருளுரைப்பது மான, "அகராதி மோனைக் ககராதி எதுகை"யை முதல் தகுமொழி விளக்க அகராதியாகக் கொள்ளலாம். இதற்கடுத்த நிலையில் குறிப்பிடத்தகும் அகரமுதலி, திவாகரம், சூடாமணி முதலான நிகண்டுச்சொற்கட்குப் பொருள்விளக்கம் செய்யும் "பத்துச் சொல்லகராதி" யாகும்.

1850 இல் அண்ணாசாமி பிள்ளை தொகுத்த, "ஒரு சொல் பல்பொருள் விளக்கம்" 19 ஆம் நூற்றாண்டில் எழுந்த தகுமொழி விளக்க அகராதியாகும். இது நிகண்டுகளின் பதினொன்றாம் தொகுதி போல் பெயர் உடையதாயிருக்கிறது. இதில் ஒரு சொல்லுக்குப் பொருளாகக் கொடுக்கப்பட்டிருக்கும் சொல்லுக்கும், இன்னொரு சொல்லால் விளக்கம் தரப்பட்டுள்ளது" (வ.செயதேவன். 1985, பக்.91).

(எ.கா.) வரி = சுணங்கு = தேமல்
எழுத்து = அக்கரம்
பாட்டு = இசைப்பாட்டு
வாரிதி = கடல்.

மேலும், 19–ஆம் நூற்றாண்டில், யாகப்பர் வெளியிட்ட, "கடின சொற்களின் அகராதியும், இவ்வரிசையில் இடம் பெறத் தக்கதாகும். 20–ஆம் நூற்றாண்டில் சுன்னாகம் குமாரசாமி வெளியிட்ட, "இலக்கியச் சொல்லகராதி" குறிப்பிடத்தக்கது. இது கலித்தொகை, இராமாயணம், சிந்தாமணி, நிகண்டுகள் மற்றும் பல இலக்கியங்களில் உள்ள இன்றியமையாப் பெயர்ச்சொற்களை விளக்குகிறது. இதன் காலம் 1914. மேற்குறித்தவை தவிர, வேறு தகுமொழி விளக்க அகராதிகள், இருப்பதாகத் தெரியவில்லை.

## மீவிளக்க அகராதிகள் (17 ஆம் நூற்றாண்டு)

தமிழகரமுதலி வரலாற்றில், "கி.பி.17–ஆம் நூற்றாண்டில் தோன்றிய முதல் மீவிளக்க அகராதி, "வைணவ விளக்கவுரை அருஞ்சொல் அகராதி"யென்று, அகரமுதலி வல்லுநர் வ.செயதேவனார் குறிப்பிட் டுள்ளார். ஐரோப்பியர்தம் வருகைக்குப் பின்னர், தமிழர் தொகுத்த அகரமுதலிகளும், மேனாட்டார் இயற்றிய அகராதிகளும், பெரும்பான்மை மீவிளக்க அகராதிகள் எனலாம். மக்கள் எப்படி ஒலித்து வந்தார்களோ, அப்படியே வீரமாமுனிவர் தமது சதுரகராதியில் அமைத்து காட்டியுள்ளார்" என்பார் வ.செயதேவன்.

(எ.டு.) அரண்மனை யினைச் சதுரகராதி பேச்சுவழக்கு வடிவமாக அரண்மனை என்றே குறித்துள்ளது.

இராமய்யன் அம்மானையிலும் "அரண்மனை" என்றே பதிவு செய்யப்பட்டுள்ளது.

இலக்கியத் தமிழோடு பேச்சுத்தமிழையும் சேர்த்து அகராதியில் அமைத்த மீவிளக்க அகராதிப் பண்பு, 18–ஆம் நூற்றாண்டில் தோன்றிய "பெப்ரீசீயசு" தமிழ் – ஆங்கில அகராதியிலும் காணப்படுகிறது. நேர்த்தி → நேத்தி. நேர்த்தியென்ற செம்மையான வடிவு "நேத்தி" என்றும் பேச்சுவழக்கில் இடைக்குறையாய் வருவது காண்க.

(எ.டு) நேத்தி – neat, proper, genteel, curious elegant.
பசாரி – a whore, a bad and quarrelous woman.
பசாரியாட்டம், பசாரித்தனம் – the quarrel someness of a woman.

"பசாரி" போன்ற வழக்கிலுள்ள அயன்மொழிச் சொற்களும் 'பெப்ரீசீயசு' அகராதியில் மேற்குறித்தவாறு, இடம் பெற்றுள்ளது காண்க. இராட்லர் அகராதியில், மீவிளக்கப் பண்பு அமைக்கப்பட்டிருப்பதற்கான சான்று வருமாறு :– டப்பு = sub 1. a copper coin, a dub; 2. a falsehood. வின்சுலோ அகராதியிலுள்ள மீவிளக்கக் கூறு, "வின்சுலோ அகராதி" என்னும் தலைப்பில் குறிக்கப்பட்டுள்ளது.

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதியில் உள்ள மீவிளக்கச் சான்று வருமாறு :–

இடுக்குவார் கைப்பிள்ளை – எடுப்பார் கைப்பிள்ளை

## சிறப்பு அகராதிகள்

சிறப்பகராதிகள் எண்ணிறந்தனவாயினும், இன்றியமையாக் கூறுகள், சிலவற்றை அடிப்படையாகக் கொண்டு, அகராதி வல்லுநர் முப்பெரும் பிரிவுகளாகப் பிரித்துள்ளனர்.

I. வரைவில் சேர்க்கை அகராதிகள் (Dictionaries of free combinations).

II. மரபுச் சேர்க்கை அகராதிகள் (Dictionaries of set combinations)

III. விதிப்பு அகராதிகள் (Prescriptive Dictionaries)

## I. வரைவில் சேர்க்கை அகராதிகள்

ஒரு மொழியின் கண்ணே, அம்மொழி பேசுவோர்தம் கருத்து வெளிப்பாட்டு விருப்பத்திற்கு ஏற்றவாறு, ஓர் ஒழுங்கிற்குட்பட்டுச் சொற்கள் சேர்க்கப் படுகின்றன. இச் சொற்சேர்க்கையானது, பேசுவோரின் விருப்பத்திற்கு ஏற்றவண்ணம் தொடர்தோறும் வேறுபட்டுச் செல்லலாம். "இவ்வாறு ஒரு வரையறையுள் அடங்காது சேர்க்கப்படும் சொற்சேர்க்கையானது, பெரும்பாலும் அடைமொழி நீர்மையிலோ (attributive) அல்லது முற்றுச் சொல் நிர்மையிலோ (completive) அமைகின்றன" என்பார் வ.செயதேவன். இத்தகு சொற் சேர்க்கையினை மிகுதியாகவுடைய அகர முதலிகள், "வரைவில்சேர்க்கை அகராதிகள்" என்று அகரமுதலி வல்லுநர்களால் அழைக்கப்படுகின்றன.

இவ்வகரமுதலிகள் பலவகைப்படும். அவற்றின் உட்பிரிவுகள் வருமாறு :-

1. கிளைமொழி அகராதிகள் (Dialect Dictionaries)
2. கலைச் சொல்லகராதிகள் (Glossaries)
3. நூல் அகராதிகள் (Text dictionaries)
4. குறுக்கவிளக்க அகராதி (Dictionaries of abbreviation).

### 1. கிளைமொழி அகராதிகள்

ஒரு மொழியிலுள்ள பல்வேறு கிளைமொழிகளை அடிப்படையாகக் கொண்டு, மொழி வேறுபாட்டினை விளக்குவன, 'கிளை மொழி அகராதிகள்' ஆகும். தமிழகரமுதலி வரலாற்றில், கிளைமொழி அகராதிகள் கி.பி.1827 முதல் வெளிவரத் தொடங்கின. இவ்வகையில், வீரமாமுனிவர் இயற்றிய தமிழ் - இலத்தீன் அகராதி, தமிழ்க்கிளை மொழிகளை விளக்கும் முதலாவது ஆகும்.

'Vulgaris Tamulicae linguae dictionariun Tamulico - Latinum' (1827). இக்கிளை மொழி அகராதி வீரமாமுனிவரால் இயற்றப்பட்டு, 1827 இல் முதற்பதிப்பாக வெளிவந்தது. இக்கிளைமொழி அகராதியின் பின்னிணைப்புத் தொகுதி 1884 இல் வெளியானது. இதன் இரண்டாவது பதிப்பு கி.பி.1882 இல் வெளியானது.

வீரமாமுனிவர், வட்டார வழக்கு அகராதி யினையும் தொகுத்துள்ளார். இவ்வகராதி பற்றி ஏதும் அறிய இயலவில்லை.

போப் தொகுத்த, "A Compendious. Tamil - English - Dictionary" - யின் மூன்றாவது பகுதி தமிழ்மொழியின், வட்டாரவழக்குகளை விளக்கும், கிளைமொழி அகராதியாகும். "கி.இராச நாராயணன் தொகுத்த அகராதி, திருநெல்வேலி வட்டார வழக்கை விளக்கும்" என்பார் தா.வே.வீராசாமி.

### கலைச்சொல்லகர முதலிகள் (Glossaries) கி.பி.1894 முதல்

"கலைச் சொல்லகராதிகள், கலைச் சொற்கள், துறை வழக்குகள் முதலியவற்றை அகராதி அலகுகளாகக் கொண்டவை" (வ.செயதேவன். 1985, பக்.94). 19-20 ஆம் நூற்றாண்டுகளில், பல்வேறு துறை தொடர்பான கலைச்சொல் அகரமுதலிகள் வெளிவந்துள்ளன.

1. முதற்கண், அகரமுதலி வரலாற்றில் இலங்கை அரசு வெளியிட்ட கலைச்சொல் தொகை அகராதி, 1894 ஆம் ஆண்டைச் சார்ந்தது. இஃது அரசு அலுவலகக் கடிதப் போக்குவரவு பற்றியது.

2. இலங்கை அரசு, இந்த நூற்றாண்டின் பிற் பகுதியிலும், சில கலைச்சொல் நூல்களை வெளியிட்டுள்ளது.

3. மரப்பெயர் பற்றிய கலைச்சொல் தொகுதிகள், பிரெஞ்சில் சென்ற நூற்றாண்டில் வெளிவந்தது.

4. மருத்துவம், விலங்குநூல், அளவைநூல் பற்றிய, துறைசார் கலைச்சொல் அகராதிகள் இலங்கையிலும், தமிழகத்திலும் இரு நூற்றாண்டிலும் வெளிவந்தன.

5. 1915-இல் லூசிங்டன் (Lushington) தொகுத்த, மரப்பெயர்களுள் பெரும்பாலானவை தமிழ்ப்பெயர்களே யாகும்.

6. 1900-இல் புத்தமதச் சொற்களை, உ.வே.சாமிநாதையர் தனியாகத் தொகுத்து வெளியிட்டுள்ளார்.

7. "நாட்டு 'விடுதலை இயக்கத்தில் நாட்டு மொழிகள் வளர்ச்சி பெறும் இயக்கம் வளர்ந்ததால், தமிழில் கல்வி வளர வேண்டுமென்ற இயக்கத்தால், 1936 இல், சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம், கலைச்சொல் தொகுதிகளை வெளியிட்டது" (தா.வே.வீராசாமி. 1991; பக்.81).

8. 1941 இல் அகரமுதலி வரலாற்றில் சென்னைத் தமிழ்ப்பாதுகாப்புக் கழகம், "ஆட்சிச்சொல் அகர வரிசை"யை வெளியிட்டது.

9. இருபதாம் நூற்றாண்டில் இந்திய விடுதலைக்குப் பின், மக்களாட்சி மலரத் தமிழ்நாடு அரசு துறைசார் பல கலைச்சொற்றொகைகளை வெளியிட்டது.

(எ.கா.) "கலைக்கதிர்" வெளியீடுகள், கலையறிவியல் கலைச்சொற்களைத் தமிழில் உருவாக்கின.

10. 1957 முதல் 2000 வரை "ஆட்சிச் சொல்லகராதி – பொது" (Glossary of Administrative Terms - General . English - Tamil) எனும் இனமொழி அகராதியை வெளியிட்டது. தமிழ் வளர்ச்சித் துறை இதுகாறும் ஆறு பதிப்புகளைக் கண்டுள்ளது.

11. 1996 இல் வணிகர்கள் பயன்படுத்துவதற்கான 537 சொற்களடங்கிய சொற்பட்டியலைத் தமிழ் ஆட்சிமொழி – தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சர், தமிழ் வளர்ச்சித் துறையின் சார்பாக வெளியிட்டார். இச்சொற்பட்டி தமிழக மக்களிடையே பரவலான வரவேற்புக்கு வழிவகுத் துள்ளது.

(எ.கா.) "Agent - முகவர்; Agencies – முகவாண்மை; Agroservice - வேளாண்பணி" (தமிழ்நாடு அரசு வெளியீடு, 6 ஆம் பதிப்பு 2000. ஆட்சிச் சொல்லகராதி – பொது. பக்.297).

12. மேலும், இருபதாம் நூற்றாண்டில் தமிழக அரசின் போக்குவரத்து, கூட்டுறவு, சட்டம், புள்ளி விவரம், வருவாய், வேளாண் போன்ற துறைசார் சொற்களுடன் கூடிய துணை அகராதிகள் வெளிவந்தன.

13. அகரமுதலி வரலாற்றில், 1913 இல், வி.டி.பண்டிதரும், 1976 இல் மத்தியாசும், வேலாயுதம் 1940–லும், 1960 இல் இராமலிங்கனாரும் முறையே, நிலைத்திணையியல் (தாவரஇயல்), கணிதம், பொதுவியல், ஆட்சியியல் போன்ற துறைதொடர்பிலான கலைச் சொற்களைத் திரட்டி வெளியிட்டுள்ளனர்.

14. "தமிழ்ப்பல்கலைக் கழகம், அறிவியல் கலைச் சொல்லாக்கப் பணியில் ஈடுபட்டுள்ளது" (தா.வே. வீராசாமி. 1991, பக்.81).

## நூல் – அகராதிகள் (சொல்லடைவுகள்) (1886 முதல் 1960 வரை)

இலக்கிய – இலக்கண ஆய்வுகட்கு, நூலக ராதிகள் அல்லது சொல்லடைவுகள் இன்றியமையாது வேண்டப்படுவனவாம். பல்லாயிரமடியுடைய நூல் முழுதும் மனப்பாடம் செய்வதும், உரியநேரத்தில் தேவையான சொற்களை நினைவு கூர்வதும், இன்றுள்ள சூழலில் இயலாததாகையால், இத்தேவையை நிறைவு செய்வதற் பொருட்டு, நூல் அகராதிகள் அல்லது சொல்லடைவுகள் தோன்றின. "ஒரு நூலிற் காணும் சொற்களைத் தொகுக்கும் பழக்கம், ஆங்கிலேயர் தொடர்பால் தமிழகத்தில் ஏற்பட்டது எனலாம். நூல் அகராதிகள் இருவகைப்படும். 1. சொற்குறிப்பு அகராதி, 2. சொற்பொருட் குறிப்பு அகராதி.

### 1. சொற்குறிப்பு அகராதி

ஒரு நூல் அல்லது பல நூல்கள், குறிப்பிட்ட காலத்தில் வெளிவந்த நூல்கள் அல்லது குறிப்பிட்ட வகைநூல்கள், பயன்படுத்திய சொற்களைத் தொகுத்துக் கூறுவது சொற்குறிப்பு அகராதியாம்.

### சொல்லடைவு

ஒவ்வொரு நூலிலும் வழங்கப்படும் அருஞ் சொற்களை, அகரவரிசைப்படுத்தி நூலுடன் இணைக்கும் பட்டியல் சொல்லடைவு (Index) ஆகும்.

இவ்வகையில் அகரமுதலி வரலாற்றில் முதன்முதலாக 1886 ஆம் ஆண்டு ஜி.யு.போப், திருக்குறளுக்குச் சொற்குறிப்பு (verbal concordance) அகராதியினையும் – சொற் பொருட் குறிப்பு அகராதியினையும் வடிவமைத்தார். "இதுவே தமிழில் வந்த முதல் அகராதியும் (Lexicon) ஆகும். இவ்வாறே இவர் நாலடியாருக்கும், திருவாசகத்திற்கும் நூல் வெளியிட்டுள்ளார்" (வ.செயதேவன். 1985; பக்.95).

சொற்குறிப்பு மற்றும் சொற்பொருட் குறிப்பு அகராதிகள் வளர்வதற்குக் களம் அமைத்துத் தந்தவர் உ.வே.சா. எனில் மிகையன்று. உ.வே.சா.பதிப்புகளிற் காணும் அடிக்குறிப்புகளும், அருஞ் சொல்லகராதிகளும், பின்னாளில் உரைவரைந்த அவ்வை துரைசாமி பிள்ளை முதலான அனைத்து உரையாசிரியர்கட்கும் உறுதுணை

புரிந்தன. "உ.வே.சா. பதிப்புகளில் இடம்பெற்றுள்ள அருஞ்சொல் அகராதி முதலியன சொல்லடைவையும், இவரது பதிப்பில் ஒவ்வொரு பாவின் கீழ்வரும் ஒப்புமைப் பகுதிகள், சொற்பொருட் குறிப்பு அகராதியையும், ஒத்தவை எனலாம்" (தா.வே.வீராசாமி. 1991, பக்.81).

1924 இல் வா. மார்க்க சகாயம் வெளியிட்ட திருக்குறள் சொற்குறிப்பு அகராதி, கலித்தொகைப் பதிப்பில் இடம் பெற்றுள்ள, அரும்பதம் முதலியவற்றின் அகராதியை ஒத்தது.

1952 இல், முதன்முதலில் திருக்குறட் சொற்கள் முழுவதையும் திரட்டிச் சாமி வேலாயுதம் திருக்குறட் சொல்லடைவை வெளியிட்டார்.

"திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக் கழகத்தில், வ.அய். சுப்பிரமணியத்தின் நேர்ப் பார்வையில், பல சொல்லடைவுகள் உருவாக அவருடைய புறநானூற்றுச் சொல்லடைவு வழிகாட்டியது" (தா.வே.வீராசாமி. 1991, பக்.81). எசு.வி.சுப்பிரமணியத்தின் அகநானூற்றுச் சொல்லடைவும், சிலம்புச் சொல்லடைவும் 20 ஆம் நூற்றாண்டுச் சொல்லடைவுகளில், சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை.

தமிழகரமுதலி வரலாற்றில் இருபதாம் நூற்றாண்டுச் சொல்லடைவுகளில், புகழ் பெற்றதும், அகராதி வல்லுநர்க்கு அருந்துணை புரியும் மிகச்சிறந்த சொல்லடைவாக, புதுவை பிரெஞ்சு இந்தியக் கலைக்கழகத்தின் 'பழந்தமிழ் நூற் சொல்லடைவு' விளங்குகிறது எனலாம். வ.அய்.சுப்பிரமணியத்தின் புறநானூற்றுச் சொல்லடைவானது, அகரமுதலி வரலாற்றில் மேலும் பல சொல்லடைவுகள் தோன்று வதற்கு உறுதுணை புரிந்தது. அதைப் பின்பற்றிச் ச.வே.சுப்பிரமணியத்தின் சிலப்பதிகாரச் சொல்லடைவும், இளையபெருமானின் ஐங்குறு நூற்றுச் சொல்லடைவும் வெளிவந்தன.

மேலும், இந்நூற்றாண்டில் உருவாக்கப்பட்ட சொல்லடைவு நூல்களுள், கம்பராமாயணத்திற்கு வேலவன் கோவிந்தன் குட்டியும், பெரிய புராணத்திற்கு வீராசாமியும், பெருங்கதைக்கு இளவரசும், வில்லி பாரதத்திற்குக் குற்றாலமும், கல்வெட்டுச் சொல் தொடர்பில் பன்னீர்ச் செல்வம், சி.கோவிந்தராசனும் (கல்வெட்டுக் கலைச்சொல் அகரமுதலி – 1987) தேடித் தொகுத்தனவெல்லாம் அகரமுதலி வரலாற்றில் குறிப்பிடத்தக்கனவாகும். "அண்ணாமலை, மதுரை காமராசர் பல்கலைக் கழகங்களும், இத்துறையில் ஈடுபட்டன".

இவ்வகை அகரமுதலிகள், "பழைய இலக்கியங் களைச் செம்மையாகப் பதிப்பிக்கவும், மொழி வரலாற்றை அறிந்து கொள்ளவும், வரலாற்றுமுறைப் பொருள் அகராதியை உருவாக்கவும் பெரிதும் பயன்படும். கேரளப் பல்கலைக் கழகமும், அண்ணாமலைப் பல்கலைக் கழகமும், இத்துறையில் பல நூல்களை வெளியிட்டுள்ளன" (வ.செயதேவன். 1985, பக்.96).

## பொருள் விளக்க அகராதிகள்

"பொருள் விளக்க அகராதிகளில், மேற்கோள் விளக்க அகராதிகள் சில வெளிவந்தன. தொல்காப்பியப் பொருளதிகாரத்திற்கு நாகமணியும், திருக்குறளுக்குத் தாமோதரனும், இத்தகைய அகராதிகளை உருவாக்கினர்" (தா.வே.வீராசாமி. 1991, பக்.81).

## தேவார, திருவாசக ஒளிநெறிகள் 1946–1967 – கழக வெளியீடு

தணிகைமணி வ.சு.செங்கல்வராயர்களால் உருவாக்கப்பட்ட தேவார, திருவாசக ஒளிநெறிகள் அகரமுதலி வரலாற்றில் பொருள்விளக்க அகராதிகளாக மிளிர்கின்றன. இவர் அப்பர், சம்பந்தர், சுந்தரர், மணிவாசகர் பாடல்களில் பொதிந்துள்ள, அரிய பெரிய செய்திகளைப் பல்வேறு தலைப்புகளின் கீழ், அகரவரிசையில் அமைத்துள்ளார்.

திருஞான சம்பந்தர் தேவார ஒளிநெறி, மூன்று தொகுதிகளைக் கொண்டது. முதல் தொகுதியின் முதற் பதிப்பு – 1946. இரண்டாம் பதிப்பு – 1963. இரண்டாம் தொகுதியின் முதற் பதிப்பு – 1950. இரண்டாம் பதிப்பு – 1963. மூன்றாந் தொகுதியின் முதற் பதிப்பு – 1954. இரண்டாம் பதிப்பு – 1963.

## அப்பர் தேவார ஒளிநெறி 1960–1962.

திருநாவுக்கரசர் தேவார ஒளிநெறி இரண்டு தொகுதிகளாக அச்சிடப்பட்டு, முதல் தொகுதி 1960–லும், இரண்டாம் தொகுதி – 1962 லும், கழக வெளியீடாக வெளிவந்துள்ளது.

## சுந்தரர் தேவார ஒளிநெறி – 1963.

ஒரு தொகுதியாக உள்ள சுந்தரர் தேவார ஒளிநெறி 1963 இல், முதல் பதிப்பாகத் திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் வெளியிட்டனர்.

## திருவாசக ஒளிநெறி – 1967

வ.சு.செங்கல்வராயர்கள் தேவார ஒளிநெறி போலவே, மாணிக்கவாசகரின் திருவாசகத்திலுள்ள சைவ சித்தாந்தக் கொண்முடிபு, இறைவன் எளிவந்து ஆட்கொண்ட தன்மை, ஆதன் – இறைவன் உறவு குறித்த சொற்களும் சொற்பொருள்களடங்கிய அகரவரிசையை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1967 இல் வெளியிட்டுள்ளது.

மர்ரேக் குழுவின் 'பாட்டும் தொகையும்' 1958 இல் வெளிவந்துள்ளது. இது பொருள்விளக்க அகராதி வகையைச் சார்ந்தது.

## குறுக்க விளக்க அகராதி (Dictionaries of Abbreviation)

"கி.மு.; கி.பி.; ஐ.நா; இ–ள்; எ–கா போன்ற குறுக்கங்கள், தமிழில் வழங்கிவரினும் இவற்றை விளக்கும் குறுக்க விளக்க அகராதி, இதுவரை தோன்றவில்லை".

## மரபுச்சேர்க்கை அகரமுதலிகள்

19, 20 ஆம் நூற்றாண்டுகளில், மொழியில் நிலைத்து நிற்கும் மரபுச் சேர்க்கைகளைத் தொகுத்துத் தனி அகராதிகளாக வெளியிட்டனர். பல சொல் அகராதி அலகுகளான, இம் மரபுச் சேர்க்கையில், ஒரு சொல்லை நீக்கிவிட்டு, அதற்குப் பகரமாகப் பிறிதொரு சொல்லை அமைக்க முடியாது. அமைப்பின் பொருட் சிறப்பு அழியும். "மண் குதிரை" என்னும் மரபுச் சேர்க்கையைப் "பொன் குதிரை" என்றோ, "மண் கழுதை" என்றோ வழங்கினால், பொருட்சிறப்பு அழியும். மரபுச்சேர்க்கையில் உள்ள சொற்களிலிருந்து, சில சமயங்களில் நேரடியாகப் பொருள் கூற முடியாது. அவை சேர்ந்து, வேறு பொருளை உணர்த்தும். "மண் குதிரை" என்னும் மரபுச் சேர்க்கைக்கு மண்ணாலான குதிரை என்று பொருள் இல்லை. 'நம்ப இயலாத பொருள்' என்றே பொருள். மரபுச் சேர்க்கையில், ஒரு சொல் பொருளற்றதாக ஆகி விடவும் வாய்ப்பு உண்டு. இதற்கு எடுத்துக்காட்டு கரும்பலகை. இப்போது கருமை தவிர பிற வண்ணங்களிலும், எழுதும் பலகைகள் இருப்பதைக் காணலாம். மேலும் மரபுச் சேர்க்கைச் சொல்லுக்கு ஒரு பொருட் பன்மொழி உண்டு.

(எ.டு.) விலைமகள் – பரத்தை. இவ்வியல் புடைய மரபுச் சேர்க்கைச் சொற்களைக் கொண்ட அகராதிகளை

1. மரபுத் தொடர் அகராதி (Dictionary of Idioms and Phrases)
2. பழமொழி அகராதி (Dictionary of Proverbs)
3. மேற்கோள் அகராதி (Dictionary of Quotations)
4. ஒரு பொருட் பன்மொழியகராதி (Ideological Dictionary of Dictionary of synonyms).
5. எதிர்ச்சொல்லகராதி (Dictionary of Antonyms)
6. ஒலிக் குறிப்பு அகராதி (Dictionary of Onamatopoeic words)
7. பொருட்புல அகராதி (Systematic Dictionary) யென்று அகராதியியல் வல்லுநர் வகைப்படுத்தியுள்ளனர்.

## மரபுத் தொடர் அகராதி (கி.பி.1841 முதல் 1977 வரை)

ஆங்கிலம் – தமிழ் மரபுச் சேர்க்கைகளை, முதன் முதலில் யாழ்ப்பாணப் புத்தகச் சங்கம், 1844 ஆம் ஆண்டு தொகுத்தளித்தது. இதனையடுத்து, 1881 இல் சென்னையில், ஆங்கிலம் – தமிழ் மரபுத் தொடர்களைக் கொண்ட நூலொன்றைக் கிறித்துவச் சங்க அச்சகம் வெளியிட்டது. 1900 இல் இராமசாமி தமிழ் மரபுத்தொடர் அகராதியை மொழிபெயர்ப்பிற்குதவும் பாங்கினில் உருவாக்கினார். இத்துறையில், 1939, 1953 ஆம் ஆண்டுகளில் தமிழ்ப் பாதுகாப்புக் கழகம், முறையே உவமை அகரவரிசை, மரபுத்தொடர் அகரவரிசை ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளது. 1977 இல் பூந்துறையான் வெளியிட்டுள்ள, "மரபுத் தொடர்களும், சொற்றொடர் களும்" என்னும் அகரமுதலியே இதுகாறும் வெளிவந்துள்ள அகராதிகளுள், பெரிய வடிவில் வெளியிடப்பட்டுள்ளது.

**பழமொழியகராதி** : கி.பி.1842 ஆம் ஆண்டு காலப் பகுப்பில் விளக்கப்பட்டுள்ளது.

## மேற்கோள் அகராதி :

"இவ்வகையில் தமிழில் மிகுதியாக அகராதி வரவில்லை. சிந்தனைக் களஞ்சியம் முதலான ஒரு சில அகராதிகளே இயற்றப்பட்டுள்ளன. இவையும் அகராதியியல் நெறியில் அமையவில்லை" (வ.செயதேவன். 1985, பக்.97).

## ஒரு பொருட் பன்மொழி அகராதி 1862 முதல் 1934 வரை :

அகரமுதலி வரலாற்றில் ஒரு பொருட் பன்மொழி அகரமுதலிகள் 1862 முதல் வெளிவரத் தொடங்கின. "இராச கோபாலரின் தொகுப்பகராதி, இவ்வகையில் குறிப்பிடத்தக்கது. 1908 ஆம் ஆண்டில் சங்கர நாராயணர் வெளியிட்ட தமிழ் – ஆங்கில அகராதியும் –, 1934 ஆம் ஆண்டு வெளிவந்த மணியகராதியும், ஒரு பொருட் பன்மொழியகராதிகளுள் குறிப்பிடத் தக்கனவாகும்'' (தா.வே.வீராசாமி. 1991, பக்.82).

## இருமொழி அகராதிகளின் ஏற்றமும் ஒருமொழியகராதியின் வீழ்ச்சியும்

அகரமுதலி வரலாற்றில் 19 ஆம் நூற்றாண்டில் வெளிவந்த இருமொழியகரமுதலிகளின் செல்வாக்கு ஒருமொழியகராதிகளின் வளர்ச்சியைச் சற்றுக் குறைத்தனவென்று அகரமுதலி வல்லுநர் கருது கின்றனர். இது பற்றி தா.வே.வீராசாமி, ''இரு மொழி அகராதிகளால் ஒரு மொழி அகராதி வளர்ச்சி குன்றியது'' என்று குறிப்பிட்டுள்ளது கருதத்தக்கது. மேலும் இக்காலக் கட்டத்தில், யாழ்ப்பாண அகராதியை விரிவுபடுத்திப் பேரகராதி அல்லது ''விரிவகராதி''யாக, அமைத்துள்ளனர். ஆர்வத்தால் பல புதிய பதிப்புகள் மிகுதியான பிழைகளுடன் வெளிவந்தன.

### தமிழில் ஒருமொழி அகராதிகள்:

தமிழ்ச் சொற்களுக்குத் தமிழில் பொருள்தரும் ஒருமொழி அகராதிகள், நூற்றுக்கும் மேற்பட்ட அளவில் வெளிவந்துள்ளன. இந்நூற்றாண்டில் இதன் வளர்ச்சியை நன்கு காண முடியும். சிறிதும் பெரிதுமாகத் தமிழகராதிகள், தமிழ்க்கல்வி ஆர்வப் பெருக்கிற்கேற்ப வெளிவந்தன. அவற்றுள், கா.நமச்சிவாயரின் தமிழ் மொழி அகராதி (1918), அனவரதவிநாயகம் அவர்களின் மாணவர் தமிழ் அகராதி (1921), பர்மாவிலிருந்து இராவுத்தர், (1922) நாகுமீரா (1923) வெளியிட்ட அகராதிகள், பவானந்தம் பிள்ளையின், தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி (1925) என்பவை குறிக்கத்தக்கனவாம். அனவரதவிநாயகம் மாணவர் தமிழ் அகராதியில் (1921) 26000 சொற்கள் உள்ளன. பவானந்தரின் அகராதியில் 33000 சொற்களுக்குமேல் உள்ளன. மாணவர்க்குப் பயன்படும் அளவில் மே.வீ.வேணுகோபாலரின் இளைஞர் தமிழ்க்கையகராதி (1928) 8500 சொற்களுடன் வெளிவந்ததை ஒப்பிடின் இருமொழி அகரமுதலிகளால் ஒருமொழி அகரமுதலி வளர்ச்சி குன்றியது தெளிவுபடும். பகுத்தறிவுப் போட்டிக்கென வெளிவந்த ஆனந்தவிகடன் அகராதி (1935) தனிப்பட்ட அகராதி ஆகும். விக்டோரியா தமிழ் அகராதி (1934), சூபிலி தமிழ் அகராதி (1935) என்பவை ஆங்கில அரசுக்குரிய மரியாதையைத் தங்கள் பெயரிலேயே தெரிவித்தன. கிருட்டிணசாமி என்பவர் நவீன தமிழ் அகராதியில் 20500 சொற்கள் அமையத் தொகுத்தார் (1935). இவரே 1939 இல் தமிழமிழ்த அகராதியையும் அளித்தார்.

### கையகராதிகள்:

கழகத்தமிழ்க் கையகராதி 12500 சொற்களுடன் 1940 இல் வெளிவந்தது. இது மாணவரிடையே செல்வாக்குப் பெற்ற அகராதி ஆகும். தமிழகராதிகள், இந்திய நாட்டு விடுதலைக்குப் பின் பல்வேறு வகையில் வெளிவந்தன. நடராசனின் கார்த்திகேயினி புதுமுறை அகராதியும் (1949) ந.சி.கந்தையாவின் செந்தமிழ் அகராதியும் (1950) வெளிவந்தன. சென்னைப் பல்கலைக் கழகத்தின் சுருக்கத் தமிழ் அகராதி 1955 இல் வெளிவரினும், கோனார் தமிழ்க் கையகராதி இதே ஆண்டில் வெளிவந்து பெரும் செல்வாக்குப் பெற்றது.

### குழு அகராதி:

தனி ஒருவர் அகராதி திரட்டிய நிலையிலிருந்து, கழகப்புலவர் குழு திரட்டிய கழகத் தமிழகராதி 1964 இல் உருவாயிற்று. மே.வீ.வேணுகோபாலர் தமிழுக்குத் தமிழ்க்கையகராதியும் (1966) மாணவரிடம் பரவியது. 'லிப்கோ' நிறுவனம் பெரிய, சிறிய அகராதிகளை வெளியிட்டது. மணிமேகலைத் தமிழகராதி என்பது (1979) எளிய முறையில் உருவாக்கப் பெற்றது ஆகும். தமிழக அரசின் வெளியீடாகத் தமிழ் – தமிழ் அகரமுதலி மு.சண்முகம் அவர்களால் 1985 இல் வெளியிடப் பட்டுள்ளது.

### தமிழ்ப் பல்கலைக்கழகப் பேரகராதித் திட்டம்:

இந்நிலையில் (1984) தமிழ்ப் பல்கலைக்கழகம் தஞ்சையில் பேரகராதி ஒன்றை நான்காண்டிற்குள் முடிக்கத் திட்டம் தீட்டியது. மு.அருணாசலம் தலைமைப் பதிப்பாளராகப் பணியேற்றார். இப்பேரகராதி சங்க கால முதல் இன்றுவரையுள்ள இலக்கிய வழக்குகளையும், வட்டார வழக்குகளையும், பல அறிஞர்களின் ஒத்துழைப்புடன் திரட்டிப் பல தொகுதிகள் வெளிவந்தன. இலங்கை, மலாயா, தென்னாப்பிரிக்கா ஆகிய பகுதிகளில்

வாழும் தமிழ் மக்கள் பயன்படுத்தி வரும் சொற்களும் இத்தொகுதிகளுள் இடம் பெற்றுள்ளன. இப்போதைய நிலையில் சொற்பிறப்பைப் பற்றி எண்ணவில்லை. மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் தொடங்கிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிப் பகுதிகள் தமிழ் நாட்டரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் வெளிவந்த வண்ணம் உள்ளன. இத்துடன், தனித் தமிழகர முதலி ஒன்று உருவாக வேண்டும் என்ற எண்ணமும் எழுந்து, அதனை உருவாக்கும் முயற்சியும் வளர்ந்து வருகிறது.

## தமிழில் இருமொழி அகராதிகள்:

தமிழில் இருமொழி, பன்மொழி அகராதிகள் வெளிவந்துள்ளன. ஐரோப்பிய மொழிகள், கிழக்காசிய மேற்காசிய மொழிகள், இந்திய மொழிகள் ஆகியவற்றில் பொருள் விளக்கம் தரும் அகராதிகள் என இவற்றைப் பகுக்கலாம். ஐரோப்பியர் வரவால் அவர்கள் மொழிகளின் துணையுடன் தமிழகராதிகள் பல வெளிவந்தன. குறிப்பாக ஆங்கில ஆட்சி தமிழகத்தில் நிலைத் திருந்ததால் தமிழ் – ஆங்கிலம், ஆங்கிலம் – தமிழ் அகராதிகளின் எண்ணிக்கை மிகுதியாக உள்ளன.

## தமிழ்–ஆங்கில அகராதிகள்:

19 ஆம் நூற்றாண்டில் ஐரோப்பியரால், தமிழ்–ஆங்கில அகராதிகள் தொகுக்கப்பட்டன. ஒரு சில தமிழர்களும் அவற்றைத் தொகுத்தனர். இராட்லெரின் தமிழ் – ஆங்கில அகராதி எட்டு ஆண்டுகளில் (1834 – 1841) உருவாயிற்று. ஐரோப்பிய அலுவலரின் பயன்பாட்டிற்கெனப் பெர்சிவலின் இருமொழி அகராதி, உரோமன் எழுத்தில் கி.பி.1861 இல் வெளிவந்தது. அடுத்த ஆண்டு வின்சுலோவின் அகராதி மக்கள்வழக்குத் தமிழையும் சேர்த்து வெளிவந்தது. விசுவநாதர், இலக்கியத் தமிழ் ஆங்கில அகராதியை கி.பி.1870 இல் உருவாக்கினார். கி.பி.1897 இல், பெப்ரீசியசின் இருமொழி அகராதி வெளிவந்தது குறிப்பிடத்தக்கது.

தமிழ் ஆங்கிலக் கையகராதியை 1900 இல் டேனேயும், சுபவாக்கியமும் தொகுத்தனர். அடுத்துக் கிருட்டிணசாமி ஐயரின் கையகராதி வந்தது (1921). 'லிப்கோ'வின் தமிழ் – தமிழ் – ஆங்கில அகராதி 1966 இலும், பாலகிருட்டிணரின் அகராதி 1976 இலும் வெளிவந்தன. வின்சுலோ அகராதியின் மறுபதிப்பு 1983 இல், வெளியிடப்பட்டது.

## ஆங்கிலம் – தமிழ் அகராதிகள்:

ஆங்கிலம் – தமிழ் அகராதிகள் பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் இந்நூற்றாண்டின் மத்தியிலும் மிகுதியாக வெளிவந்தன. பெப்ரீசியசின் அகராதி கி.பி.1786 இல் இரு தொகுதிகளாக வந்தது. கி.பி.1846 இல் வீராசாமி 20500 சொற்கள் அடங்கிய கையடக்க அகராதி வெளியிட்டார். ஆங்கிலம் – தமிழ் அகரமுதலிகள் பெரும்பாலும் பள்ளி மாணவர்களுக்குப் பயன்படும் தன்மையின.

போப் தொகுத்த இருமொழி அகராதி (1905–6) பல பகுதிகளாக இருந்தது. பேச்சு வழக்கையும் அகராதியில் சேர்த்து அவற்றைப் பயிலும் வெளிநாட்டினர் புரிந்து கொள்ள வகை செய்தார். சாமிநாதரின் அகராதியில் சொற்கள் 12800க்கு மேல் இருந்தன. அதனை மேலும் பெருக்கி வெளியிட்டனர் (1905). யாழ்ப்பாணத்திலிருந்து ஆங்கிலச் சொற்றொடர் களுக்குரிய தமிழ்ச் சொற்களை முத்துத் தம்பி 1907 இல் வெளியிட்டார். கொழும்பில் அடிப்படை ஆங்கிலம் – தமிழ் அகராதி உருவாயிற்று. ஆங்கிலச் சொல்லுக்கு ஆங்கிலப் பொருள், பின்னர்த் தமிழ் என்னும் வகையில் சுப்பிரமணியனின் அகராதி 1947 இல் வந்தது. இதனை ஒட்டித் தங்கவேலுவின் மணி புதுமுறை மாணவர் அகராதி 1949 இல் வந்தது.

ஐம்பதுகளில் இத்தகைய போக்கில் சில அகராதிகள் வந்தன. கா.அப்பாதுரையின் கழக ஆங்கிலத் தமிழ்க் கையகராதி (1952) மிகுந்த செல்வாக்குடன் பரவியது. 'லிப்கோ' நிறுவனம் சிறிய, பெரிய அகராதிகளை (1959) வெளியிட்டது. கொழும்பில் நாகலக்குமி ஆங்கிலம் – ஆங்கிலம் – தமிழ் அகராதியை அளித்தார். சென்னைப் பல்கலைக் கழகத்தில், அ.சிதம்பர நாதரைத் தலைவராகக் கொண்டு ஆங்கிலம் – தமிழ் அகராதி மூன்று பகுதிகளாக முதலில் வெளிவந்தது. (1963–65). யாழ்ப்பாணத்தில் வரதர் மாணவ அகராதி 1970 இல் நாகலக்குமி நெறியில் உருவாயிற்று. பார்ன்வெல் (Parnwell) முதலானோர் உருவாக்கிய, ஆங்கிலம் – தமிழ் அகராதி, ஆக்சுபோர்டு நிறுவனத்தால் வெளியிடப்பட்டது. இதில் மிகுதியாகப் படங்கள் உள்ளன.

## தமிழ் – பிரஞ்சு அகராதிகள்:

கி.பி.1750 இல் உருவான பிரஞ்சு – தமிழ் அகராதி பாரிசில் சுவடி வடிவில் உள்ளது. மேலும் பிரஞ்சு – தமிழ் அகராதி பாரிசில் கி.பி.1831 இல் வெளியிட்டனர். கி.பி.1845 இல் பெசுகியின் அகராதி வெளிவந்தது. இலத்தீனையும் சேர்த்து மும்மொழியில் பொருள்காணப்

பாண்டிச்சேரியிலிருந்து, கி.பி.1846 இல் ஓர் அகராதி வெளியாயிற்று. டூபூய் (DuiPuis), மூசே (Mousset) தயாரித்த பிரஞ்சு–தமிழ் அகராதி, பாண்டிச்சேரியில் கி.பி.1850 இல் வெளிவந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டில், பல பிரஞ்சு–தமிழ் அகராதிகள் வெளிவந்தன. பாண்டிச்சேரிப் பகுதி, பிரஞ்சு ஆட்சியின் கீழ் இருந்தமை, இத்தகைய அகராதிகள் வெளி வரக் காரணம் ஆயிற்று. டூபூய், மூசே அகராதியின் பல பதிப்புகள் 1938 இலும், 1942 இலும், வெளிவந்தன.

### தமிழ்–உருசிய அகராதி:

தமிழ் – உருசிய அகராதியைப் பியாதி கோர்சுகி, உருதின் ஆகியோர் 1960 இல் பதிப்பித்தனர். இதில் 38000 சொற்கள் உள்ளன. இத்துடன் அந்திரோனவ் எழுதிய தமிழ் இலக்கணச் சுருக்கமும் உள்ளது. 1965 இல் அந்திரோனவ், இப்ரகீமவ், யுனானவா ஆகியோர் உருசிய–தமிழ் அகராதியை வெளியிட்டனர். இது 1960 இல் வெளிவந்த தமிழ் – உருசிய அகராதியின் தொடர்ச்சியாகும். இதில் பலதுறைகளிலுமுள்ள அரிய சொற்கள் இடம் பெற்றுள்ளன. இக்கால இலக்கியத்திலுள்ள சொற்களும் இதில் உள்ளன. இதில் ஏறக்குறைய 24000 சொற்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

### தமிழ் – இலத்தீன் அகராதி :

இரண்டு தமிழ் – இலத்தீன் அகராதிகள், வீரமாமுனிவரால் தொகுக்கப் பெற்றன. இவற்றுடன் குரி (Gury) அகராதியும் (1867), சுந்தர சண்முகனார் அகராதியும் (1970) குறிப்பிடத்தக்கவை.

### தமிழ்–போர்ச்சுகீசிய அகராதி :

தமிழ்–போர்ச்சுகீசிய அகராதி 1879 இல் உருவாயிற்று. ஆண்டெம்டெ புரொயென்கா (Antam de Proenca) இதன் தொகுப்பாசிரியர். இதனை மலேசியாப் பல்கலைக் கழகம் 1966 இல் வெளியிட்டது. இரொதெசே நூலகத்தில் மதிப்புள்ள நூலாகச் செர்குராவின் (Cerquera) தமிழ் – போர்ச்சுகீசிய அகராதி (1855) குறிப்பிடப்பட்டுள்ளது. இராபர்ட் டி நொபிலியின் (Robert de Nobile) தமிழ்–போர்ச்சுகீசிய அகராதி 1968 இல், வெளிவந்தது.

### இசுலாம் செல்வாக்கு :

தமிழர்கள் மேற்காசியாவில் அரபு நாடுகளுடன் கொண்ட வணிகத் தொடர்பும் தமிழகத்தில் இசுலாம் பரவியதும் அரபு–தமிழ் அகராதிகள் தமிழகத்தில் உருவாக வாய்ப்பளித்தன. குலாம் காதிர் நாவலர் (1902), முகம்மது அப்துல்லா (1905) ஆகியோர் இத்துறையில் அகராதிகளை வெளியிட்டனர். உவைசு என்பவர் மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தில் தமிழிலக்கிய அரபுச்சொல் அகராதியை 1983 இல் தொகுத்துள்ளார்.

### கிழக்காசியா :

கிழக்காசியாவிற்குத் தமிழர்கள் பழங்காலந் தொட்டுச் செல்லவும், குடியேறவும் வாய்ப்பிருந்தது. புள்ளப்பரின் தமிழ் – பர்மா அகராதி (1905) குறிப்பிடத்தக்கது. சதாசிவம், தமிழ் – மலாய் அகராதியைத் (1938) தொகுத்தார். மலாய்–தமிழ் அகராதியைச் சாமி (1962) வெளியிட்டார். மாணவர் மலாய் – தமிழ் – ஆங்கிலம் ஆகிய மும்மொழி அகராதியை வேலுசாமி (1964) அளித்தார். தமிழ் – சிங்களம் அகராதியைக் கதுகோலிகே (1960) தொகுத்துள்ளார். தமிழ் – நிப்போங் அகராதியும், சப்பான் – தமிழ் அகராதியும் (1942) வெளிவந்தன.

### இந்திய மொழிகள் :

இந்திய மொழிகளுள் தமிழ் – வடமொழி அகராதியினை வேங்கடேச சர்மா தொகுத்தார். வடமொழி – தமிழ் அகராதிகள் பல வெளிவந்துள்ளன. சென்ற நூற்றாண்டில் வடமொழி திரவிய நிகண்டு (1857), பதார்த்த பாசுகரம் (1878) ஆகியவை வெளியாயின. இந்த நூற்றாண்டில் வடமொழி – தமிழ் அகராதிகளைச் சீனிவாசர் (1928), வேங்கடேசர் (1930), பாபநாசசிவம் (1962) ஆகியோர் தொகுத்து வெளியிட்டனர்.

தமிழ் – இந்தி அகரமுதலி (கோசம்) அரிகரரால் (1926) தொகுக்கப்பட்டது. அந்தோணிப்பிள்ளை இந்தி – தமிழ் அகராதியைத் (1878) தொகுத்தார். அரிகரரின் இந்தி – தமிழ் கோசம் (1925), கா. அப்பாத் துரையின் இந்தி – தமிழ் அகராதி (1957) போன்றவை வெளிவந்தன. இரமாபாய் சோசியின் மராத்தி – தமிழ் அகராதி (1961) வெளிவந்தது. தமிழ் – தெலுங்கு அகராதி ஒன்றைச் சேசாசார்லு 1939 இல் வெளியிட்டார். தெலுங்கு – தமிழ் அகராதியைக் கிருட்டிணசாமி (1925) அளித்தார்.

பன்மொழி அகராதிகள் தமிழில் வெளி வந்துள்ளன. தமிழ் – ஆங்கிலம் – செர்மன் (1869), ஆங்கிலம்–மலாய்–சீனம் – தமிழ் (1824), தமிழ்–இந்துத்தானி–பர்மீயம்–ஆங்கிலம் (1886), இந்தி–மராத்தி–தெலுங்கு–தமிழ் (1964), கன்னடம்–தெலுங்கு–தமிழ்– ஆங்கிலம் – இந்துத்தானி (1891) ஆகியவை குறிப்பிடத்தக்கவை. ஆறு மொழிகளின் சொற்றொகையும்

வெளிவந்துள்ளது. (1884, 1896) பொதுவாகச் சென்ற நூற்றாண்டின் இறுதியில், பல மொழிச் சொற்றொகைகள் பெரிதும் வெளிவந்தன.

அகராதிகளாய்த் தொகுக்கப் பெற்று அச்சில் வெளிவராத நூல்கள் சென்னை உ.வே.சாமிநாதர் நூலகம் போன்றவற்றில் உள்ளன. அவற்றுள் அகநானூறு அகராதி, தலக் குறிப்புகள், திருக்குறள் பரிமேலழகர் அரும்பத அகராதி. தேவார அருந் தொடரகராதி, புலவர் வரலாறு, வாகட அகராதி போன்றவை அடங்கும்.

## ஒருபொருட் பன்மொழி முதலியன :

ஒரு பொருட் பன்மொழி அகராதிகளில் – இராசகோபாலரின் தொகுப்பகராதி (1862), சங்கர நாராயணர் தமிழ் – ஆங்கில மொழி அகராதி (1908), மணி அகராதி (1934) ஆகியவை குறிப்பிடத்தக்கன. எதிர்ச்சொல் அகராதி, அடுக்குமொழி அகராதி, ஐம்பொறி அகராதி, பல தெய்வங்களுக்குரிய அடைமொழி அகராதிகள் போன்றவற்றை மு.சதாசிவம் அண்மையில் தொகுத்துள்ளார். எழுத்து வேறுபாடுகளைக் காட்டும் புதுமுறை அகராதியை நடராசன் வெளியிட்டார் (1949). சிலேடை அகராதியை இராமசாமிப் புலவர் (1960) வெளியிட்டார். மக்கட் பெயர், இல்லப்பெயர், முசுலிம் பெயர் ஆகியவற்றையும் தொகுத்துத் தனித்தனியாக வெளியிட்டுள்ளனர்.

## விதிப்பு நிலை:

விதிப்பு நிலை அகராதிகளைப் பயிற்று நிலை, வரிவடிவம், ஒலிப்பு, எதுகை மோனை என நான்கு வகைப்படுத்துவர். ஆங்கிலம் – தமிழ் ஒலிப்புநிலை குறித்து அங்கடெல் (Anketell) (1888) ஓரகராதி வெளியிட்டார். மார்ட்டினே (Martinat) என்பவர் தமிழ் – பிரஞ்சு ஒலிப்பகராதியைத் தொகுத்தார் (1890–97). தமிழ் – ஆங்கிலம், ஆங்கிலம் – தமிழ் ஒலிப்புப் பற்றிய அகராதி, இலங்கையில் (1932) வெளிவந்தது. அப்பாவு அவர்களின் எதுகை மோனை அகராதி 1938 இல் தொகுக்கப் பெற்றது.

## அகராதி அமைப்பு :

அகராதியில் ஒரு மொழியின் சொற்கள் தொகுக்கப் பெறுகின்றன. சொற்களைப் பதிவு செய்யும்போது சொல் விளக்கக் கூறு முதலிலும், பொருள் விளக்கக் கூறு பின்னரும் அமையும்.

## சொல் விளக்கக் கூறு :

இதில் பதியப் பெற்ற தலைச்சொல், அதன் ஒலிப்பு முறை, இலக்கணக் கூறு, சொற்பிறப்பு, உடன்பிறப்பு மொழிகளின் ஒப்புமைக் கூறு ஆகியவை அமையும்.

## தலைச்சொல் :

பெயர், வினை ஆகிய சொற்களுக்குரிய அடிப்படை வடிவம் தலைச் சொல்லாக இடம்பெறும். தொடக்க நிலையில் இத்தகைய அடிப்படை வடிவம் தமிழ் அகராதிகளில் தக்க முறையில் அமையவில்லை. வின்சுலோ தமிழ் – ஆங்கில அகராதி (1862) நீண்ட சொற்றொடர்கள், முடியாத் தொடர்கள் போன்றவற்றைத் தலைச் சொல்லாகத் தந்துள்ளது. இக்குறை சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதியில் நீக்கப்பெற்றது. தமிழல்லாத பிற மொழித் தலைச் சொற்களை உடுக்குறியிட்டுப் பெப்ரீசியசு அகராதி (1779) காட்டும். ஒப்புருச் சொற்களைப் பிரித்துக் காட்ட எண்களைப் பயன்படுத்தினர். (மா[1] மா[2]...) பேரகராதியே இம்முறைக்கு வழிகாட்டியது.

## ஒலிப்பு முறை :

ஒலிப்பு முறை பற்றி விளக்கமில்லாவிடினும் எழுத்துப்பெயர்ப்பு முறை சில அகராதிகளில் சுட்டப்பெறும். சான்றாகச் சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலிப் பகுதிகளிலும், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிப் பகுதிகள் அனைத்திலும், அயல்நாட்டினரும் எளிதில் அறிந்து கொள்ளும் வண்ணம் எழுத்துப் பெயர்ப்பு முறை அமைக்கப்பட்டுள்ளது.

## இலக்கணக்கூறு :

இலக்கணக் கூற்றினை இராட்டிலர், வின்சுலோ அகராதி போன்றவற்றில் காணலாம். வினைப்பகுப்பு முறையைப் பல நிலைகளில், தமிழ் அகராதிகள் பயன்படுத்தியுள்ளன. சதுரகராதியில் தொழிற்பெயர் வடிவமும். பெப்ரிசியசில், கிரால் முறைப்படி மென்மை, இடைமை, வன்மை வடிவங்களும் காணப்பெறும். இராட்டிலெரில் நிகழ் காலத்தை ஒட்டி மற்றக் காலத் திரிபுகள் அமைந்துள்ளன. வின்சுலோவில் வினைப் பகுதிகளை ஒட்டி முற்றெச்ச வடிவங்கள் காணப் பெறும். சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதி வினையடிகளை 13 வகைப்படுத்திக் காட்டும். சொற்பிறப்பு முறையைப் பொருள் விளக்கத்தின் முன்னோ பின்னோ அளிப்பர்.

இது, வின்சுலோவில் பொருள் விளக்கத்தின் பின்னும், சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதியில் பொருள் விளக்கத்தின் முன்னரும் காணப்பெறும்.

### பொருள் விளக்கம் :

தலைச்சொல்லின் பொருள் விளக்கப் பகுதியில், பொருள் வரையறை, மேற்கோள், குறிப்பீடு, படம் ஆகியவை இடம் பெறும்.

### பொருள் வரையறை :

பொருள் வரையறை செய்யும்போது எல்லாவகையிலும் பொருள் நிறைவுடையதாய் அமைதல் வேண்டும். அது மிகைபடவோ குறைபடவோ அமைதல் கூடாது. எளிய சொற்களில் பொருளை அறிதியிட்டுக் கூற வேண்டும். பொருள் வரையறையில் செப்பமுடைய அகராதியே சிறந்த அகராதி. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் வெளியிட்ட அனைத்துப் பகுதிகளிலும் பொருள்வரையறை செப்பமுடன் அமைக்கப்பட்டுள்ளது.

### மேற்கோள் :

பொருள் தெளிவு பெறவும், சொல்வழக்கு உறுதி பெறவும், மேற்கோள் அமையும். இதற்கு இலக்கியவழக்கும், பேச்சுவழக்கும் பயன்படும். வெளிநாட்டார் தமிழக மக்களுடன் பழகப் பேச்சு வழக்கிற்கே முதலிடம் அளித்தனர். சிறுபான்மை மேற்கோள்களை இலக்கியத்திலிருந்து கொண்டனர். சங்க அகராதி விரிந்த அளவில், இலக்கிய மேற்கோள்களை அளித்தது. அதனையும் விஞ்சிய நிலையில் சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி உள்ளது.

### குறிப்பீடு :

ஒரு சொல் எத்துறையைச் சார்ந்தது, எப்பகுதி மக்கள் அதனைப் பேசுகின்றனர் என்பன குறித்து அறியத்தக்க செய்திகளைக் குறிப்பது குறிப்பீடு ஆகும். பேச்சு வழக்கு, குறுமொழி, அருகிய நிலை, வீழ்ந்த வழக்கு முதலியவற்றைக் குறிக்கும். இசை, மருத்துவம், விலங்கியல் போன்ற துறைகளுக்குரிய சொல் எனவும் குறிக்கும்.

### பட விளக்கம் :

பார்த்ததும் விளங்கும் வகையில் படங்களையும் சில அகராதிகள் பயன்படுத்தும். இராமநாதன் (1909) எதிராசுலு நாயுடு (1915) ஆகியோர் வெளியிட்ட அகராதிகளில் சொல் விளக்கப்படங்கள் உள்ளன. இன்று மாணவர்க்கு வெளியிடும் சில அகராதிகளில் படங்கள் உள்ளன. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிப் பகுதிகள் அனைத்திலும், வண்ணப்படம்-கறுப்பு வெள்ளைப் படங்கள் வேண்டிய இடங்களில் அமைக்கப் பட்டுள்ளன.

### சொல்வைப்பு நிலை :

சொல்வைப்பு நிலை, அகராதிகளில் பொதுவாக அகரநிரலில் அமையும். முதலில் உயிரும் பின் மெய்யும் கொள்வர். வின்சுலோ போன்றவர்கள் உயிரை அடுத்து உயிர்மெய்யைக் கொள்வர். சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி, மெய்க்குப் பின்னரே உயிர்மெய்யைக் கொண்டுள்ளது.

### பொருள்வைப்பு நிலை :

பொருள்வைப்பு நிலையிலும் அகரநிரலைப் பின்பற்றுவதும் உண்டு. இதனைச் சதுரகராதியில் காணலாம். வரலாற்று முறையிலும், அவ்வாறு இயலாத இடங்களில் அளவை முறையிலும், பிறமொழிச் சொற்பொருளுரைக்க எது எளிய முறையோ அம்முறையிலும், சென்னைப் பல்கலைக்கழக அகராதி பொருள் உரைக்கும் நெறியைப் பின்பற்றியுள்ளது. எருதந்துறை (ஆக்சுபோர்டு) வரலாற்றுமுறைப் பேரகராதி, டெக்கான் கல்லூரியில் உருவாகி வரும் வடமொழி வரலாற்றுமுறைப் பேரகராதி, இம்முறைக்குத் தக்க எடுத்துக்காட்டுகளாகும்.

## வைணவ விளக்கவுரை – அருஞ்சொல் லகராதி (கி.பி.17)

தமிழகராமுதலி வரலாற்றில் கி.பி.17 இல் இயற்றப்பட்ட, "வைணவ விளக்கவுரை அருஞ்சொல் அகராதி" யைத் தமிழில் தோன்றிய முதல் "மீவிளக்க அகராதி" யென்று, தற்கால அகரமுதலி வல்லுநர் பகுப்பர்" (வ.செயதேவன். 1985, பக்.92). அக்காலத்திய வைணவப் பெரியவர்களால் இயற்றப்பட்ட இவ்வகராதி, "கி.பி.13,14 ஆம் நூற்றாண்டு மக்களின் பேச்சுவழக்குச் சொற்களை அறிந்து கொள்ளப் பெரிதும் பயன்படு" (வ.செயதேவன். 1985, பக்.92) மென்பர். திருவாய் மொழி போன்ற, நாலாயிரத் தெய்வப் பனுவல்களில் (நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்) காணப்படும் தமிழும், வடமொழியும் கலந்த சொற்களை வைணவப் பெரியவர்கள், அகரவரிசைப்படுத்தி, இவ்வகராதியை அமைத்துள்ளனர்.

வண்ணமாலை வரிசைச் சிறப்பே, இவ்வகராதியிலுள்ள, மிகச் சிறந்த கூறாகும். சதுரகராதிக்கு முந்தைய காலக்கட்டத்தில், "அகரநிரலில் மக்கள் வழக்குச் சொற்களை, மணிப்பிரவாள நடையில் இவ்வகராதி விளக்குகிறது" (தா.வே.வீராசாமி. 1991, பக்.72) என்பர்.

இவ்வகராதியே அன்றிச் "சம்பிரதாய அகராதி" என ஒன்றும் உள்ளது. வைணவச் சார்புடைய இவ் வகராதி, இருபதாம் நூற்றாண்டில் அச்சிடப்பட்டாலும், தோன்றிய காலம் திட்டமாகத் தெரியவில்லை" (சுந்தர சண்முகனார். 1971, பக்.298).

## அகராதி மோனைக்ககராதி யெதுகை கி.பி.17 ஆம் நூற்றாண்டு – அகராதிகள்

தமிழகரமுதலி வரலாற்றில், கி.பி.17 ஆம் நூற்றாண்டில், அகரமுதலி அமைப்பிலும் – ஆனால் நிகண்டு நடையிலும், தோன்றிய நூல், "அகராதி மோனைக்கு அகராதி எதுகை"யாகும். வண்ணமாலை வரிசையை நிலைநிறுத்துவதே அகரமுதலியின் அடிப்படைப் பணியென்னும் கருத்தினை மெய்ப்பிக்கும் வண்ணம், இவ்வகராதி சொற்களின் முதல் மற்றும் இரண்டாம் எழுத்தையொட்டிச் சொற்களை அகரவரிசையில் அமைத்துப் பொருள் கூறியுள்ளது. கி.பி.13,14 ஆம் நூற்றாண்டு வைணவவுரை, அகரநிரலுக்குப்பின், கி.பி.17 ஆம் நூற்றாண்டு அகராதி வரலாற்றில் குறிப்பிடவேண்டிய செய்தியாகும். இவ்வகராதியில் சொற்கள் முதல் எழுத்து, இரண்டாமெழுத்து முறை வண்ணமாலை வரிசையில் அமைக்கப்பட்டு, சொற்பொருள் விளக்கம் நிகண்டு நடையைப் பின்பற்றியும் அமைந்துள்ளது. செய்யுள் நடையில் பொருள் விளக்கப்படாததும் குறிக்கத்தக்கது.

சற்றொப்ப, 7500 சொற்கள் பொருள் விளக்கம் செய்யப்பட்டுள்ள இவ்வகராதியின் ஆசிரியர் பற்றி உறுதியாக ஒன்றும் தெரியவில்லை". "இது பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றியிருக்கலாம்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.296) என்பர். "அகராதி மோனைக்கு அகராதி எதுகை" – பற்றி அகராதி வல்லுநர் தா.வே. வீராசாமி கூற்று வருமாறு. "சதுரகராதிக்கு முன், அகராதி ஓலைச்சுவடி ஒன்று, "அகராதி மோனைக்கு அகராதி யெதுகை" (17–நூ) என்ற பெயரில் இருந்தது. அதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. சொல்லில் இரண்டாம் எழுத்து என்ற அளவிலேயே அகரநிரல் பின்பற்றப்பட்டது. இதில் 7500 சொற்கள் உள்ளன. உருபுகள், தொடர்கள், சிறப்புப் பெயர்கள் ஆகியவற்றைத் தொகுத்துள்ள இது நிகண்டு நெறியில் சொற்பொருள் கூறும்" (தா.வே.வீராசாமி. 1991, பக்.72) எளிய சொற்கள் ஏதும் இதில் குறிப்பிடப்படவில்லை. 'அகல்வுற்று' என்பது போன்ற எச்சச் சொற்களும் "செய்பொழில்" என்பது போன்ற தொடர்களும் 'காண்போதல் உற்றார்' என்பது போன்ற சொற்றொடர் வடிவங்களும், இவ்வகராதியில் இடம் பெற்றுள்ளன.

## பத்துச் சொல்லகராதி (கி.பி.17 ஆம் நூற்றாண்டு)

திவாகரம், உரிச்சொல் நிகண்டு, சூடாமணி, நாமதீப நிகண்டுகளிற் காணப்படும் சொற்கள், வண்ணமாலை வரிசைப்படுத்தப்பட்டுப் பத்துப் பிரிவுகளிற் பொருள் விளக்கம் செய்யும், "பத்துச் சொல்லகராதி", கி.பி.17 ஆம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்டது. "பத்துச் சொல்லகராதி, ஓரெழுத்துச்சொல் ஈரெழுத்துச் சொல் போன்றவற்றையும், தனியே தொகுத்துத் தந்துள்ளது" (தா.வே.வீராசாமி. 1991, பக்.72).

ஒவ்வொரு எண்ணிற்குரிய எழுத்திலமைந்த இவ்வகராதியின் பெயரமைப்பு, எண்களை அடிப்படையாகக் கொண்டு பெயரமைக்கப்பட்டுள்ளது. "பத்தாந் தொகுதியில், பத்து எழுத்துகளாலான சொற்களும் இடம் பெற்றுள்ளன. ஒரு சொல்லுக்குப் பொருள் அறிய வேண்டுமாயின், அச்சொல்லில் எத்தனை எழுத்துகள் உள்ளனயென்றெண்ணிப்பார்த்து, அத்தனையாவது தொகுதியில் சென்று, அகரவரிசைப்படி தேடினால் மிக எளிதில், அச்சொல்லையும், பொருளையும் கண்டு பிடித்துவிடலாம். ஆனால் பத்துக்கு மேற்பட்ட எழுத்துகளையுடைய சொல்லுருவங்கள் இந்த அகராதியில் இல்லை" (வ.செயதேவன். 1985, பக்.78).

## தமிழ் – போர்ச்சுக்கீசிய அகராதி (கி.பி.1679)

"ஐரோப்பிய வணிகர்களுடன், தமிழகத்திற்குக் கிறித்துவப் பாதிரிமார்களும் வந்தனர். இவர்களால், "தமிழகராதிக் கலை", பெரிதும் வளர்ந்தது" (தா.வே.வீராசாமி. 1991, பக்.72) வணிகம் புரிதற்பொருட்டு வந்த ஐரோப்பியர் காலப் போக்கில், தம் சமயத்தையும் பரப்ப விழைந்தனர். ஐரோப்பியர் முதற்கண் தமிழ் மொழியைக் கற்றனர். வரலாற்றுப் புகழ்வாய்ந்த இடங்களில் தங்கித் தமிழர்களுடன் பழகி, அவர்களின்

பழக்க வழக்கங்களை நன்கறிந்தனர். தம் முயற்சிக்கு உறுதுணையாக, அச்சகங்களையும் அமைத்தனர். இச்சூழலில், ஐரோப்பிய மொழிகளோடு, தமிழ் அகராதிகள் பல தோன்றின. தமிழ் மக்கள் ஐரோப்பிய மொழிகளை அறிந்து கொள்ளவும், புதிதாக வரும் ஐரோப்பியர் தமிழ் மொழியை அறிந்து கொள்ளவும் தமிழ் – போர்த்துக்கீசிய அகராதி போன்றவை அருந்துணை புரிந்தன. இத்தமிழ் – போர்த்துக்கீசிய அகராதி, கி.பி.1679 ஆம் ஆண்டில், 'ஆந்தம் தெப்ரோயன்சா' என்னும் ஐரோப்பியத் துறவியால் (Fr. Antem de Proenca) இயற்றப்பட்டது. இவ்வகராதியைத் திப்புசுல்தான் எரியூட்டியமையான் இதுபற்றிய வேறு செய்திகள் அறியக் கூடவில்லை. மலையாளத்திலுள்ள அம்பலக்காடு என்னும் இடத்தில், இவ்வகராதி பதிப்பிக்கப்பட்டது.

இதுமட்டுமின்றி ஐரோப்பிய தமிழ் அகராதிகளும், 18,19 ஆம் நூற்றாண்டுகளில் தோன்றின.

## திக்சியனரியம் தமுலிசம் (Dictionarium Tamulicum) (கி.பி.1712)

இத் தமிழகராதி, பதினெட்டாம் நூற்றாண்டில், தோன்றிய முதல் அகராதியாகும். இதனை ஆக்கியவர் "பர்தோல் மாஸ்சிய சீகன்பால்க்" (Bartholmaeus Ziegenbalg) ஆவார்; எழுதிய காலம் கி.பி.1712 ஆகும். வரலாற்று நோக்கில், இவ்வகராதி சிறப்பிடம் பெறவில்லை.

## சதுரகராதி (கி.பி.1732)

இத்தாலியினின்று தமிழகத்திற்குக் கிறித்துவத்தைப் பரப்ப வந்த கிறித்துவத் துறவியான பெஸ்கி (Father Beschi) என்னும் வீரமாமுனிவரால் கி.பி.1732 இல் இயற்றப்பட்ட சதுரகராதி 19 ஆம் நூற்றாண்டில் பதிப்பிக்கப்பட்டது.

1. பெயரகராதி
2. பொருளகராதி
3. தொகையகராதி
4. தொடையகராதி.

எனும் நான்கு பிரிவுகளை உள்ளடக்கியதால், "சதுரகராதி" என்னும் பெயர் பெற்றது. பதினெட்டாம் நூற்றாண்டு அகராதிகளுள், மிகச் சிறந்து விளங்குவது சதுரகராதியேயாகும். முதல் எழுத்து அல்லது இரண்டாமெழுத்தோடு அமையாது, சொற்களின் கடைசியெழுத்து வரைக்கும். அனைத்துச் சொற்களும், முழுமையாக வண்ணமாலை வரிசைப் படுத்தப்பட்டு, தமிழுக்கு தமிழ்ச் சொல்லிலேயே பொருள்கூறும், முதலகரமுதலி இதுவேயாகும். அதனால்தான் வீரமாமுனிவர், "தமிழகராதியின் தந்தை" எனச் சிறப்பிக்கப்பெற்றார். இந்நூல் "தமிழ் என்னும் பெருங்கடலைக் கடக்கப் பயன்படும் மரக்கலமாகத் திகழ்கிறது, என இதன் பாயிரப்பகுதியில் கூறப்பட்டுள்ளது. கி.பி.18 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தே அன்றி, இன்றும் அனைவராலும் நம்பப்படும் மிகச்சிறந்த அகராதியாக இவ்வகராதி திகழ்கிறது. "இவ்வகராதி பழைய நிகண்டுகளின் போக்கை மாற்றிப் புதிய வழியைக் காட்டியது. தெளிவு பெற வேண்டிச் செய்யுள் வடிவை நீக்கியது. அகரநிரலை முழுதும் பின்பற்றியது. கடினமான மிகப் பழஞ் சொற்களைக் கைவிட்டது. எளிய சொற்களை ஏற்றுக் கொண்டது. நிகண்டுகளிற் காணும் சொற்களின் அடைவாகச் சதுரகராதி விளங்குகிறது. அகராதி என்னும் சொல்லின் பொருளுக்கேற்பத் தலைப்பில் அகராதி என்ற சொல்லைப் பெற்றிருப்பது சதுரகராதியே" (தா.வே.வீராசாமி. 1991, பக்.72).

1. பன்னிரண்டாயிரம் சொற்கள் வரை பொருள் விளக்கமுற்ற இப்பெயரகராதி என்னும் பிரிவில், ஒவ்வொரு சொல்லுக்கும் பல பொருள்கள் கூறப்பட்டுள்ளன.

2. பொருளகராதியில் சிவன், திருமால், நிலம் போன்ற ஒவ்வொரு பொருளுக்குமுரிய பல பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

3. மூன்றாம் பிரிவான தொகையகராதியில், பல்வேறு துறைக் கலைச் சொற்களும், "இரு சுடர்", "முக்குணம்" போன்ற தொகைப்பொருள்களும் விளக்கப்பட்டுள்ளன.

4. தொடையகராதியில், அகம் – இகம் – உகம் என்பன போன்றும். ஊற்றம் – ஏற்றம் – கூற்றம் என்பன போன்றும், முதலெழுத்துத் தவிர, ஏனையவெழுத்துகள் எல்லாம் ஒத்து வந்து, செய்யுளின்பம் பயக்கக் கூடிய, எதுகைத்தொடைச் சொற்கள் (Rhyming words) அனைத்தும் ஒன்றி வரத் தொடுத்து, வண்ணமாலை வரிசையில் பொருள் விளக்கப்பட்டுள்ளன.

## திவாகரம் – பிங்கலம் – சதுரகராதி – ஒப்புமை :-

சதுரகராதியிலுள்ள பெயரகராதியும் தொடையகராதியும், திவாகரம், சூடாமணி ஆகிய நிகண்டுகளிற் காணப்படும் பதினோராந் தொகுதியான, ஒரு சொல் பல் பொருட் பெயர்த் தொகுதியைப் போன்றவையாகும்.

பொருளகராதி, அந்நிகண்டுகளிலுள்ள முதற் பத்துத் தொகுதிகளைப் போன்றதாகும். அஃதாவது, "ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதி" என்னும் முதற் பெரும் பிரிவைச் சார்ந்ததாகும். தொகையகராதி, அந்நிகண்டுகளின் பன்னிரண்டாந் தொகுதியான, "பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதி" என்னும் மூன்றாம் பெரும் பிரிவைச் சேர்ந்ததாகும்.

## சதுரகராதியின் பதிப்பு வரலாறு:-

1. சதுரகராதி, கி.பி.1732 இல் இயற்றப்பட்ட போழ்தும், 19 ஆம் நூற்றாண்டில்தான் பதிப்பிக்கப்பட்டது. இதன் இரண்டாம் தொகுதியான பொருளகராதி மட்டும் திருச்சிற்றம்பலர் என்னும் அறிஞரின் உதவியுடன், எல்லிசு (Ellis) என்னும் வெள்ளையரால் கி.பி.1819 ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்டது.

2. பின்னர், நான்கு தொகுதிகளும் கொண்ட நூல் முழுவதுமே "இரிச்சர்டு கிளர்க்கு" (Richard Clarke) என்பவரின் ஆணையின் வண்ணம், தாண்டவராயர், இராமச்சந்திரக் கவிராயர் முதலானோரின் மேற்பார்வையில் 1824 ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்டது.

3. இவ்வகராதியின் இரண்டாம் பதிப்பு கி.பி.1835 ஆம் ஆண்டில் "ரெவரன்ட் சே.சுமித்து" (Rev. J. Smith) என்பவரால் வெளியிடப்பட்டது. இவ்விரண்டாம் பதிப்பில், "பெயர்ப் பகுதியில் மட்டும் 12,400 சொற்கள் உள்ளன. முதற் பதிப்பில், இவ்வளவு சொற்கள் இல்லை" (தா.வே.வீராசாமி. 1991, பக்.73).

கி.பி.1835 ஆம் ஆண்டிற்குப் பின் வந்த பதிப்பாசிரியர்கள், சதுரகராதியில் மேலும் சில சொற்களைச் சேர்த்து வெளியிட்டதாகக் கருத்து நிலவுகிறது. மற்றும் பின்னாளில் பதிப்பித்தோர், வீரமாமுனிவரால் ஒரு சொல்லுக்குப் பொருள்கள் கொடுக்கப்பட்டிருக்கும் சொற்களை வண்ணமாலை வரிசைப்படுத்தியுள்ளனர் என்பதும் குறிப்பிடத் தக்கது.

(எ.டு.) சான்றாகச் சதுரகராதியிலிருந்து, தாரம், ஊர்தி என்னும் இரண்டு சொற்கட்குரிய பொருள் விளக்கம் வருமாறு..–

I தாரம் = 1. அரும்பண்டம், 2. நாக்கு, 3. மனைவி, 4. உச்சவிசை, 5. பொன், 6. மூக்காற் பாடுமிசை, 7. யாழ் நரம்பிலொன்று, 8. விண்மீன், 9. வெள்ளி, 10. வெண்கலம், 11. நல்ல பணியாரம், 12. வில், 13. ஓசை, 14. கண்.

II ஊர்தி = 1. எருது, 2. குதிரை, 3. பல்லக்கு (சிவிகை), 4. தேர், 5. யானை, 6. பண்டி முதலிய வாகனங்கள், 7. வினைமுற்று.

## வீரமாமுனிவரின் புதுமைப் பணி

வீரமாமுனிவர், தமது நூலில் அமைத்துள்ள தொடையகராதியில், "குறிற்கீழ் எதுகை", "நெடிற்கீழ் எதுகை" என இரண்டாகப் பகுத்துள்ளார். குற்றெழுத்தை முதற்கண் அமைத்த எதுகைச் சொற்களெல்லாம், குறிற்கீழ் எதுகையிலும், நெட்டெழுத்தை முதலிலே உடைய எதுகைச் சொற்கள் எல்லாம் நெடிற் கீழ் எதுகையிலும் அடக்கப்பட்டுள்ளன. அகம், நகம், மகம் என்பன குறிற்கீழ் எதுகைச் சொற்களாம்.

ஆகம், நாகம், மாகம் என்பன நெடிற்கீழ் எதுகைச் சொற்களாம். "இவ்வாறு பல்வகை எதுகைச் சொற்களையும் தேடிப்பிடித்து அகரவரிசைப்படுத்திப் பொருள் எழுதியிருப்பது, "தமிழகரமுதலி வரலாற்றில் கி.பி.18 ஆம் நூற்றாண்டில் சதுரகராதி மிகச்சிறந்த அன்றைய அகராதியாகவும், பிற்காலத்தே அகரமுதலி தொகுப்போர்க்கு வழிகாட்டியாகவும் திகழ்கிறது" எனலாம்.

சதுரகராதியின், ஈடிணையில்லாச் சிறப்புகளால், இத்தாலியில் தோன்றிய பெஸ்கி தமிழகம் வந்து, தமிழ் கற்றுத் தவமுனிவராய் வாழ்ந்து வீரமாமுனிவர் என்னும் வீறு கொண்ட பெயரில், அகரமுதலிப் பணியாற்றி, செந்தமிழ் அந்தணராய்ச் செம்மாந்து திகழ்கிறார்.

## தமிழ் – இலத்தீன் அகராதி (கி.பி. 1715–16)

தமிழ்ச் சொல்லுக்கு இலத்தீன் மொழியிற் பொருள் விளக்கும் இந்த அகராதியின் தொகுப்பாசிரியர் "சீகன் பால்க்" என்னும் செருமானியராவார். இவர்

இவ்வகராதியைத் தரங்கம்பாடியில் தங்கியிருந்த போது கி.பி.1715–16 இல் வெளியிட்டார். இவர் தரங்கம்பாடியில் தான் ஆலையும் அச்சுக்கூடமும் நடத்திப் புகழ்பெற்றவராக வரலாற்றில் குறிக்கப்படுகிறார். அகரமுதலி வரலாற்றில், தமது பங்களிப்பாகச் செருமானியரான "சீகன் பால்க்", தமிழ் – இலத்தீன் அகராதியினைத் தொகுத்து தமது அச்சுக்கூடத்திலேயே பதிப்பித்த பெருமைக்குரியவராகிறார்.

## பெஸ்கி – தமிழ் – இலத்தீன் அகராதி (கி.பி.1742)

அனைவராலும் விரும்பிக் கற்கபபடுவதும், பல சுவடிப் படிகளையுடையதுமான புகழ்பெற்ற சதுரகராதிக்கு அடுத்து, கி.பி.1742 இல் வீரமாமுனிவரால், "பெஸ்கி – தமிழ் – இலத்தீன் – அகராதி இயற்றப்பட்டது. வீரமாமுனிவரால் இயற்றப்பட்ட பிற அகராதிகள் சதுரகராதி போல் புகழ் பெறவில்லை; பிறரால் விரும்பிக் கற்கப்படவுமில்லை. இவ்வகராதி ஒன்பதாயிரம் தமிழ்ச் சொற்களுக்கு, இலத்தீன் மொழியிற் பொருள் செய்குவதாம்.

### தமிழ் – பிரெஞ்சு அகராதி (கி.பி.1744)

தமிழ்ச்சொற்குப் பிரெஞ்சுமொழியிற் பொருள் கூறும் இவ்வகராதியைத் தொகுத்தவரும், வீரமா முனிவரேயாவார். காலம் கி.பி.1744. "இந்த அகராதி மிகவும் அழகாகக் கையால் எழுதப்பட்டு 1806 ஆம் ஆண்டில் உருட்டச்சு (Cyclostyle) வாயிலாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. மிக நீளமாகவும், அகலமாகவும், உயரமாகவும் உள்ள உருட்டச்சுப் (cyclostyle) பதிப்பு மிகவும் நேர்த்தியாயிருக்கிறது" (சுந்தர சண்முகனார். 1971, பக்.308).

### வீரமாமுனிவரால் தொகுக்கப்பட்டு கிடைக்காத அகராதிகள் (கி.பி.1744)

தாம் அறிந்த மொழிகளுக்கெல்லாம், தமிழ்ப் பொருண்மையை நடுவாகக் கொண்டு வீரமாமுனிவரால் தொகுக்கப்பட்ட அகராதிகள் சதுரகராதிபோல் நிலைத்து நிற்கவில்லை.

(எ.டு.) i) இலத்தீன் – தமிழ் அகராதி – கி.பி.1744.

ii) போர்ச்சுகீசிய – இலத்தீன் தமிழகராதி – போர்ச்சுகீசியம், இலத்தீனச் சொற்களுக்குத் தமிழ்ச் சொல்லில் பொருள் கூறுவது (கி.பி.1744).

iii) கொடுந்தமிழகராதி – கி.பி.1744.

iv) தமிழ் – ஆங்கில அகராதி. கி.பி.1744 – தமிழ்ச்சொற்கு ஆங்கிலத்திற் பொருள் கூறுவது.

இவ்வகராதிகளைப் பற்றிய முழுமையான குறிப்புகள் கிடைக்கவில்லை.

## வட்டார வழக்குத் தமிழ் அகராதி (கி.பி.1744)

கி.பி.1744–இல் வீரமாமுனிவர் ஆங்காங்கே பொதுமக்கள் பேசும் வழக்குச் சொற்களைத் தொகுத்து இவ்வகராதியை உருவாக்கியுள்ளார்.

## தமிழ் – ஆங்கில அகராதி (கி.பி.1779)

வணிகத்தின் பொருட்டு, தமிழகத்திற்குள் நுழைந்த ஐரோப்பிய வணிகருடைய செயல்பாடுகளும், கிறித்துவப் பாதிரிமாரின் மதம் பரப்பும் மேலாண்மையும், தமிழகத்தில் அச்சுக் கூடங்களை உருவாக்கின. வீரமாமுனிவர் போன்றோரால், அகரமுதலி வளர்ச்சியில் தமிழுக்கு ஆக்கம் விளைந்த ஞான்றும், காலப்போக்கில் மேனாட்டர்தம் செல்வாக்கு மொழியிலும் – பண்பாட்டிலும் இரண்டறக் கலந்தது. இச்சூழலில், ஆங்கிலம் தம்மை நிலைநிறுத்திக் கொள்ளும் வண்ணம் அமைந்த முதல் 'தமிழ்–ஆங்கில அகராதியை' கி.பி.1779 இல், சாம்பிலிப் பெப்ரீசியசும் (Joham - Philip - Fabricius); சான் கிறித்தியான் பெரெய்தாப்டும் (John christian Berithaupt) இணைந்து உருவாக்கினர். "தென்னகத்தில் கிறித்துவ மதம் பரப்ப வந்த திருச்சபையினர்க்கும், வணிகர்க்கும் உதவும்" (தா.வே.வீராசாமி. 1991, பக்.73) எனக் கருதி 1779 இல், இதனை வெளியிட்டனர். எழுதிய ஆண்டிலேயே வெளியிட்ட பெருமையினை யுடையது இவ்வகராதி.

தமிழகத்தின் வடபுலத்தில் வழங்கிய கிரந்தச் சொற்களைத் தனியாகத் தெரிதற்பொருட்டு, உடுக்குறி(*)யினை, இத்தமிழ் – ஆங்கில அகராதியில் அமைத்திருந்தனர். பல மரபுத்தொடர்கள் அடங்கிய 9000 சொற்கள், இதில் இருந்தன. அக்காலத்தில், தமிழை மலபார் மொழியெனக் குறிப்பிட்டதை, இதன் முகப்புப் பக்கம் கூறும். இது சிறிய அகராதி யெனினும் பல அறிஞர்களை அகராதித் துறையில் ஈடுபடச் செய்தது" (தா.வே.வீராசாமி. 1991, பக்.73) என்று அகராதி வல்லுநர் குறிப்பிடுவார்.

"ஐரோப்பியக் கிறித்துவத் தூதர்களும், வாணிகர்களும் தமிழ் அறிந்து கொள்ளுவதற்காக உருவாக்கிய இவ்வகராதியில், இலக்கியச் சொற்களோடு, அன்றாட வழங்கும் வழக்குச் சொற்களும், மரபுத் தொடர்களும் இடம் பெற்றுள்ளன. "வரிகிறது", "வரிந்து போடுகிறது" என்பன போன்ற வினையுருவங்களும் கொடுக்கப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கது" (சுந்தர சண்முகனார். 1971, பக்.311).

இதன் முதற் பதிப்பும், இரண்டாம் பதிப்பும் சென்னை வேப்பேரியில் அச்சிடப்பட்டது. முதல் பதிப்பு 1779 ஆம் ஆண்டிலும், இரண்டாம் பதிப்பு 1809 ஆம் ஆண்டிலும் அச்சிடப்பட்டது. இரண்டாம் பதிப்பினை, "ரெவரன்ட் பொயசால்டு" (Rev.Mr.Poezold) என்பவரும், "வில்லியம் சிம்சனும்" (Mr. William Simpson) இணைந்து ஒழுங்குபடுத்திப் பதிப்பித்தனர்.

## A Dictionary of the English and Malabar Languages (கி.பி.1786)

ஆங்கிலச் சொற்கட்குத் தமிழில் பொருள் விளக்கும் இவ்வகராதி, கி.பி.1786 இல் சென்னை வேப்பேரியில் பதிப்பிக்கப்பட்டது. இவ்வகராதியைத் தொகுத்தவர் பெயர் தெரியவில்லை. தமிழ் மொழிக்கு "மலபார்" என்னும் பெயர், இந்த அகராதியில் சூட்டப்பட்டிருப்பது எண்ணத்தக்கது.

## தமிழ் – ஆங்கில அகராதி கி.பி.1833

இத் தமிழ் – ஆங்கில அகராதி, கி.பி.1833 இல், யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த அமெரிக்கத் திருச்சபை யினரால் உருவாக்கத் திட்டமிட்டும் திட்டம் நிறைவு பெறவில்லை. நைட் (Knight); காபிரியேல் திசேரா (Gabriel Tissera); பெர்சிவல் (Percival) முதலான மூவரும் முதற்கண் சொற்களைத் திரட்டினர். அகராதி வடிவம் பெறக்கூடாமல் சொற்றொகுப்பு நிலையிலேயே நின்றுவிட்டது.

## பைபிள் – இறையியல் அகராதி (கி.பி.1841)

என்றி பவர் (Henry Power) என்னும் அமெரிக்கத் திருச்சபையைச் சார்ந்தவர் பைபிள் – இறையியல் அகராதியை கி.பி.1841 இல் வெளியிட்டார்.

## அகரமுதலி வரலாற்றில் 19 ஆம் நூற்றாண்டில் தோன்றிய அகராதிகள் (A Vocabulary English & Tamil) (கி.பி.1807)

அகரமுதலி வரலாற்றில், காலக்கணிப்பினைக் கருத்திற்கொண்டு நோக்குங்கால், 19 ஆம் நூற்றாண்டில் தோன்றிய அகராதிகளுள், முதற்கண் பதிப்பிக்கப்பட்ட அகராதி, ஆங்கிலச் சொற்களுக்கு இணையான, தமிழ்ப் பொருளைத் தரும் – "A Vocabulary English & Tamil" என்னும் அகரமுதலியாகும். இவ்வகராதி, கி.பி.1807 ஆம் ஆண்டு, முதற்பதிப்பும் அதைத் தொடர்ந்து வரிசையாக ஆறு பதிப்புகள் – ஆறாம் பதிப்பு கி.பி.1845 இல் வெளியிடப்பட்டது. "கிடைத்திருக்கும், மக்கி மடிந்துள்ள ஆறாம் பதிப்பில், முகப்புப் பக்கம் இல்லாமையால், ஆசிரியர் பெயர், வெளியான இடம், ஆண்டு முதலானவை தெரியவில்லை" (சுந்தர சண்முகனார். 1965, பக்.311).

## அகராதித் தமிழ் (கி.பி.1831) Dictionnaire Francais - Tamoul., Tamoul-Francais

"அகராதித் தமிழ்" என்னும் இவ்வகரமுதலியின் ஆசிரியர் பிளின் (A-Blin) என்பவராவார். கி.பி.1831 இல் இயற்றப்பட்டது; அழகிய கையெழுத்துப் படியினை உடைய இவ்வகராதி உருட்டச்சு (Cyclostyle) வாயிலாகப் படி எடுக்கப்பட்டுக் கட்டடம் செய்யப்பட்டுள்ளது.

நான்கு வரிகளில் பெயரமைக்கப்பட்ட அகராதி இதுவேயாகும். இரண்டு பகுதிகள் அமைந்துள்ள இவ்வகராதியின் முதற் பகுதியில் பிரெஞ்சுச் சொல்லுக்குத் தமிழ்ப் பொருளும், இரண்டாம் பகுதியில் தமிழ்ச்சொல்லுக்குப் பிரெஞ்சுச் சொல்லால் பொருளும் குறிக்கப்பட்டிருப்பது, தமிழ் மக்கள் பிரெஞ்சு அறிந்து கொள்ளவும், பிரெஞ்சு மொழி பேசுவோர் தமிழ் கற்றுக் கொள்ளவும், உறுதுணை புரியும் வகையில் உள்ளது. "அகராதித் தமிழ்" என்னும் அழகிய பெயர் கொடுக்கப் பட்டிருப்பது, புதுமையாகவும், எழிலாகவும் உள்ளது.

இவ்வகராதியின் தொடக்கத்தில், "தமிழ் எழுத்துகளைப் பிரெஞ்சுக்காரர் ஒலிப்பதற்குதவும் வகையில், ஒவ்வொரு தமிழ் எழுத்துக்கும் – நேரே, ஒலியொற்றுமையுள்ள, பிரெஞ்சு எழுத்துகள் கொடுக்கப் பட்டிருப்பதும், ஒரு புதுமையே" (சுந்தர சண்முகனார். தமிழகராதிக். 1965, பக்.311).

தமிழ்ச் சொற்களில் எழுத்துப் பிழைகள் பரவலாகக் காணப்படுவதாயினும் ஆசிரியர் பிரெஞ்சுக் காரர் என்பதால், இக்குறை களைந்து, இவ்வகராதியை மொழி பழக விழைவாரனைவரும் பயன்கொள்ளலாம்.

i) தமிழ் – ஆங்கில அகராதி
ii) ஆங்கிலம் – தமிழ் அகராதி
iii) தமிழ் – தமிழ் அகராதி (கி.பி. 1833)

மேற்குறித்த மூன்று அகராதிகளும், யாழ்ப்பாணத்துக் கிறித்துவ தமிழ்ச் சங்கத்தைச் சேர்ந்த "ரெவரன்ட் ஜே. நைட்" (Rev. J. Knight); கபிரியல் திசரா (Gabriel Tissera); ரெவரன்ட் பீட்டர் பெர்சிவல் (Rev. Peter Percival) போன்றோரால் பணி தொடங்கப்பட்டது. கி.பி.1833 இல் உருவாக்கத் திட்டமிட்ட தமிழ் – ஆங்கிலம்; ஆங்கிலம் – தமிழ்; தமிழுக்குத் தமிழ் ஆகிய இம்மூன்று அகராதிகளும், ரெவரன்ட் ஜே.நைட் இறந்தமையினால் கைவிடப்பட்டது.

## இராட்லெர் தமிழ் – ஆங்கில அகராதி (கி.பி.1830)

முனைவர் இராட்டிலர் (Dr.J.P.Rottler) என்பவரால் கி.பி.1830 ஆம் ஆண்டு தொகுக்கப்பட்ட இவ்வகராதி, இராட்டிலெரின் தமிழ் – ஆங்கில அகராதியென அழைக்கப் படுகிறது.

### அமைப்பும் சிறப்பும் :

சதுரகராதி போல் நான்கு தொகுதிகளை யுடையது. "வீரமாமுனிவரின் மற்ற அகராதிகளும், டிபோர்கசின் (De Bourges) தமிழ்–பிரெஞ்சு அகராதியும், இதற்கு நன்கு பயன்பட்டன. கணியம் (சோதிடம்), தொன்மம் (புராணம்), அறிவியல் ஆகிய துறைச்சொற்கள் இதில் இல்லையென, வின்சுலோ அகராதி முன்னுரை கூறும்" (தா.வே.வீராசாமி. 1991, பக்.73). புலவர் சுந்தர சண்முகனாரின் இராட்டிலர் அகராதி குறித்த குறிப்பு வருமாறு:– "சதுர் அகராதியிலிருந்து, மிகுந்த அளவில் சொற்பொருள்களை இவ்வகராதி எடுத்துக் கொண்டுள்ளது. இவ்வகராதியில், வரிகிறது, வரிந்தேன், வரிவேன், வரிய, வரிதல், வரிக்கிறது, வரித்தேன், வரிப்பேன், வரிக்க என வினைச் சொல்லின் பல்வகை உருவங்களும் கொடுக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது" (சுந்தர சண்முகனார். 1965, பக்.311).

தமிழ்ச் சொல்லுக்கு ஆங்கிலச் சொல்லாற் பொருள் கூறும் இவ்வகராதியில் தமிழ்ச் சொல்லாலும் பொருள் விளக்கப்பட்டுள்ளதால், மக்களிடையே செல்வாக்குப் பெற்றுள்ளது. 1830 ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட இவ்வகராதியின் முதல் தொகுதி 1834 ஆம் ஆண்டு வேப்பேரியில் வெளியிடப்பட்டது. இதற்கிடையே இராட்லர் மறைந்தார். இவ்வகராதியின் நான்கு தொகுதிகளையும் முழுமையாகப் பதிப்பிக்க முழுமுயற்சி எடுத்துக் கொண்ட பெருமை, தாய்லர் (Rev. W. Taylar), வேங்கடாசலர் ஆகிய இருவரையுமே சாரும். இவ்வகராதியின் இரண்டாந் தொகுதி 1837 ஆம் ஆண்டிலும், மூன்றாந் தொகுதி 1839 ஆம் ஆண்டிலும், நான்காம் தொகுதி 1841 ஆம் ஆண்டிலும் முறையே வேப்பேரியில் பதிப்பிக்கப்பட்டன. இந்நான்கு பதிப்பு களுக்கும், நற்றுணை நல்கிய பெருமை தாய்லரையும், வேங்கடாசல முதலியாரையுமே சாரும்.

## வின்சுலோ (ஆங்கிலம் – தமிழ்) அகராதி (கி.பி.1842 பதிப்பு 1862)

வின்சுலோ (Rev. M. Winslow) என்பவரால் ஆங்கிலச் சொல்லுக்கு இணையான தமிழ்ச் சொல்லால் பொருள் அமைக்கப்பட்ட இவ்வகராதி கி.பி.1842 ஆம் ஆண்டு இயற்றப்பட்டது. இராமானுசக் கவிராயர், விசாகப் பெருமாள், வீராசாமி போன்றோர் இவ்வகராதி பெரிதாக வருவதற்குப் பெருந்துணை புரிந்து, கி.பி.1862–இல் வெளிவர உதவினர். சொல்லெண்ணிக்கையில், கூடுதலாயமைந்த, இவ்வகராதியில் இலக்கிய வழக்குச்சொற்களும் அறிவியல், தொன்மம், கணியம் போன்ற பல்துறைச் சொற்களும் நிறைந்துள்ளன. ஆசிரியர், கவிஞர், வீரர் முதலானோர்தம் பெயர்களென ஏறத்தாழ 67,000 சொற்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இவ்வகராதியிலுள்ள வடசொற்களின் எண்ணிக்கை 8000 ஆகும். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகராதி, செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலி போன்றவை. வின்சுலோவை மிகவும் பயன்படுத்திய திறம், அகரமுதலி வரலாற்றில் குறிப்பிடத்தக்கது.

இவ்வகராதி வினையின், வேர்ச்சொல் வடிவை முதன்முதலில் தருகிறது. "வின்சுலோ அகராதி மீவிளக்க அகராதி வகையைச் சேர்ந்தது என்பார்" (வ.செயதேவன். 1985, பக்.93).

(எ.கா.) அரிபெட்டி Asieve or cullender. சல்லடை. "தமிழ்ச் சொற்களிலிருந்து, வடசொற்களை உடுக்குறி (*) தந்து பிரித்துக் காட்டும். வேண்டுமிடத்து வில்சனின் வடமொழி அகராதி மேற்கோளைத் தரும். முதன்மைச் சொற்களுக்கு விளக்கம் கூறும்போது

எடுத்துக்காட்டுகளையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தந்துள்ளது. இது பல வழிகளில், மக்களுக்கு நன்கு பயன்பட்டுப் பரவியது" (தா.வே.வீராசாமி. 1991, பக்.73) என்ற குறிப்பொன்றே, வின்சுலோ அகராதியின் பயன்பாட்டுத் திறம் தெரியப் போதுவதாம்.

## பழமொழி அகராதிகள் – கி.பி.1842–43

### பெர்சிவலின் – "பழமொழியகராதி" – (திருட்டாந்த சங்கிரகம்)

அகரமுதலி வரலாற்றில் பழமொழியகராதிகளின் தோற்றம் கி.பி.1842–43 முதல் பெர்சிவல் இயற்றிய பழமொழியகராதியினின்று உருவாகிறது. பழமொழி அகராதிகளை, மரபுச் சேர்க்கை அகராதிப் பிரிவினதாகக் கூறுவர். இவ்வகராதி பற்றி முனைவர் வ.செயதேவன் விளக்கியுள்ளது வருமாறு :–

"பெர்சிவல் 1842 இல் வெளியிட்ட பழமொழி யகராதி இவ்வகையில் முதலாவதாகும்" தமிழ்ப் பழமொழிகளை ஆங்கில மொழிபெயர்ப்புடன் அகர வரிசையில் கூறுவது. இவ்வகராதி "திருட்டாந்த சங்கிரகம்" என்னும் பெயரில் 1873 இல், சற்று விரிவாக வந்துள்ளது" (வ.செயதேவன். 1985, பக்.97). "திருட்டாந்த சங்கிரகம், கி.பி.1843 இல் "Collection of Proverbs in Tamil" யாழ்ப்பாணப் பதிப்பாக வெளிவந்தது. "1873 தமிழ்ப் பழமொழிகள் அகரவரிசையில் ஆங்கில மொழி பெயர்ப்புடன் உள்ளன".

(எ.டு) "அளவிற்கு மிஞ்சினால் அமுதமு நஞ்சு" (If taken to excess even nectar is poison)".

முதற்கண் பெர்சிவல் வெளியிட்ட "Tamil Proverbs, with their Translation in English" என்னும் நூலின் முதற்பதிப்பு, 1842 ஆம் ஆண்டில் 1900 பழமொழிகள் ஆங்கில மொழி பெயர்ப்புடன் வெளியிடப்பட்டது. ஏற்கனவே வெளியிடப்பட்ட 1900 பழமொழிகளுடன் பெர்சிவல் வெளியிட்டார். இதில், "அகங்கையிற் போட்டுப் புறங்கையை நக்கலாமா", (Having Placed the thing on the Palm, why lick back of the hand) என்பது முதலாக, "வெளவிய கருமம் எண்ணித் துணி", (Carefully Perservere in what you undertake) என்பதீறாக, 6156 பழமொழிகள் இடம் பெற்றுள்ளன. "இவ்வகராதி, சென்னையில் வெளியிடப்பட்டது என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்".

### தமிழகரமுதலி வரலாற்றில், பெர்சிவலுக்குப் பின்பு வெளிவந்த பழமொழியகராதிகள்

i) கி.பி.1858 இல் தமிழ் – பிரெஞ்சு பழமொழி அகராதி, ஏகென் (Haeghen) என்பவரால், தொகுத்து வெளியிடப்பட்டுள்ளது.

ii) கி.பி.1872 இல் சுப்பராயலு என்பவரால், "உவமைச் சொல் அகராதி" என்னும் பெயரில், பழமொழியகராதி யொன்று வெளியிடப்பட்டது.

iii) சென்சென் 1887 இல் வெளியிடப்பட்ட பழமொழி அகராதியில், 3644 பழமொழிகளுக்குரிய விளக்கமும் மொழிபெயர்ப்பும் அடைவு செய்யப்பட்டுள்ளன.

iv) கி.பி.1894 இல் இலாசரஸ் வெளியிட்ட பழமொழி அகராதி பழமொழியகராதி வரலாற்றில், அடுத்துச் சிறப்பிடம் பெறத்தக்கது. சிறப்பு மிக்க இவ்வகராதியில் குறிப்புரையும், மொழிபெயர்ப்பும் இடம் பெற்றுள்ளன. அனவரத விநாயகம், கோலார் பெருமாள், திருமதி. செயா. மீனாட்சி சுந்தரம், நீலாம்பிகை அம்மையார் போன்ற பலரும் பல பதிப்புகளாக இவ்வகராதியினை வெளியிட்டுள்ளனர். மக்களிடையே மட்டுமின்றி, அகரமுதலி வரலாற்றிலும் இவ்வகராதி யினை வழக்கூன்றச் செய்து, நிலைநிறுத்தியுள்ளனர். இப்பழமொழியகராதியில், தமிழ் மக்களின் பண்பாடு குறித்த வாழ்வியல் கூறுகள், பழக்க வழக்கங்கள் தெளிவுறுத்தப்பட்டுள்ளன.

V) 20 ஆம் நூற்றாண்டுப் பழமொழியகராதி களைப் பொறுத்த மட்டில், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்ட பழமொழி யகராதிகளும், தமிழகர முதலி வரலாற்றில் சிறப்புடன் திகழ்ந்தன எனலாம்.

Vi) 1962 ஆம் ஆண்டு மாசுகோவிலிருந்து, ஒரு பழமொழியகராதி வெளிவந்துள்ளது.

Vii) சென்னையில் 1988 ஆம் ஆண்டு கி.வ.சகந்நாதன் தொகுத்து வெளியிட்ட தமிழ்ப் பழமொழிகள் இருபதாம் நூற்றாண்டுப் பழமொழி அகராதிகளுள் சிறப்பிடம் பெற்றுள்ளது.

பழமொழிகள், அகரமுதலி வரலாற்றில், எந்தெந்தக் காலத்தே தோன்றின என்பது பற்றி, சேம்ஸ் குறிப்பிட்டுள்ளது வருமாறு:

1) பழமொழித் திரட்டு:– வெளியிட்ட ஆண்டு 1902, சென்னை ஆசிரியர் பார்த்தசாரதி.

2) பழமொழி அகராதி அனவரத விநாயகம் வெளியிட்ட ஆண்டு, 1912, சென்னை.

3) பழமொழித் தீபிகை – சிதம்பரம் – யாழ்ப்பாணம் – 1916.

4) "தமிழ்நாட்டுப் பழமொழி அகரவரிசை" – 1938.

5) நீலாம்பிகையாரின் "தமிழ்நாட்டுப் பழமொழி அகரவரிசைச் சுருக்கம்" – சென்னை – 1939.

6) கழகப் பழமொழி அகரவரிசை – சென்னை – 1952.

7) "தமிழகப் பழமொழிகள்" – இலக்குமணன். காரைக்குடி – 1959.

8) வேடிக்கைப் பழமொழிகள் – இலக்குமணன். காரைக்குடி – 1964.

9) வாழ்வியல் பழமொழிகள் – இலக்குமணன். காரைக்குடி – 1967.

10) உயிரினங்களும் பழமொழிகளும் – இலக்குமணன், அண்ணாமலை – சிதம்பரம். 1964.

11) தமிழ் நாட்டுப் பழமொழிகள் – சுவாமி துர்க்காதாசு – சென்னை – 1965.

12) இராசனின் பழமொழிகள்.

13) பகுத்தறிவுப் பழமொழிகள் – காரைக்குடி – 1967.

மேலும், பழமொழியகராதிகள் பற்றி கிரிகொரி சேம்சு (Gregory James) என்பார் 282 ஆம் பக்கத்தில் சற்றொப்ப 32 பழமொழி அகராதிகள் பற்றிக் குறித்துள்ளாரென்பதும், அகரமுதலி வரலாற்றில், பழமொழியகராதிகள் குறித்த சிறப்புச் செய்தியாகும்.

## யாழ்ப்பாணத் தமிழகராதி கி.பி.1832

தமிழ்ச் சொல்லுக்குத் தமிழ்ச் சொல்லாலேயே பொருள் கூறும், "யாழ்ப்பாணத் தமிழகராதி கி.பி.1832 ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்துத் தமிழறிஞர் சந்திரசேகர பண்டிதரால் தொகுக்கப்பட்டது. அகரமுதலி வரலாற்றில், 'ரெவரன்ட் லெவி ஸ்பால்டிங்' (Rev. Levi Spaulding) என்பவரால் 1842 ஆம் ஆண்டில் இது பதிப்பிக்கப் பட்டது" (சுந்தர சண்முகனார். 1965. பக்.314). இவ்வகராதி "The manual Dictionary of the Tamil Language" என்றும், மானிப்பாய் அகராதி (Manippay - A garathi) என்றும் அழைக்கப்படுகிறது.

### அமைப்பும் சிறப்பும்

சதுரகராதியினும் நான்கு மடங்கு பெரிய இவ்வகரமுதலியில் 58,500 சொற்கள் அகரவரிசையுடன் அமைத்துப் பொருள் கூறப்பட்டுள்ளன. சதுரகராதி போன்று நான்கு தொகுதிகளையுடைய இவ்வகராதியில், சொற்களேயன்றி, அவற்றின் பொருள்களும் அகர வரிசைப்படுத்தப்பட்டிருப்பது, குறிப்பிடத்தக்க வொன்றாகும். இவ்வகராதியில் "தமிழ் மக்களின் பேச்சுவழக்கு, நாட்டுவழக்கு என்பவை மிகக் குறைவாகக் காணப்படும். வில்சன் (Wilson) வடமொழி அகராதியிலிருந்து, சொற்களை இதில் சேர்த்தனர்" என்பார் அகராதி வல்லுநர் தா.வே.வீராசாமி.

### தாதுமாலை

தமிழ்ச் சொற்களால் பொருள் விளக்கப்படும் இவ்வகராதியை, நீர்வேலிச் சங்கர பண்டிதர், கலியப்தம் 5009 இல் கிரந்தச் சொற்களால் அகரவரிசைப்படுத்தி அமைத்துள்ளார். யாழ்ப்பாணப் பதிப்பாகிய இவ்வகராதி யில், "தாதுக்களின் பொருள் வேறுபாடுகள், தமிழ்ச் சொல் – சொற்றொடர்களால் விளக்கப்பட்டுள்ளன" (தா.வே.வீராசாமி. 1991, பக்.73).

## ஸ்பால்டிங் ஆங்கிலம் – தமிழ் அகராதி (கி.பி.1844)

அகரமுதலி வரலாற்றில் கி.பி.1844 இல் ஸ்பால்டிங் (Rev L. Spaulding) என்பவரால் இயற்றப்பட்ட, இவ்வகராதியில் ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழ்ச் சொல்லால் பொருள் விளக்கப்பட்டுள்ளது.

## "DICTIONARIUM LATINO - GALLICO - TAMULICUM" "DICTIONAIRE LATIN - FRANCAIS - TAMOUL"

## "இலத்தீன் – பிராஞ்சு – தமிழ் அகராதி" கி.பி. 1846

இலத்தீனம் – பிரெஞ்சு – தமிழ் என்ற இம்மும்மொழி பெயரகராதி, 1846 ஆம் ஆண்டில், புதுச்சேரி மாதாகோயில் அச்சகத்தாரால், பதிப்பிக்கப் பெற்றது. இவ்வகரமுதலியை, 'முசே' (L. Mousset), 'துய்புய்' (L. Dupus) – என்னும் அறிஞரிருவர், இணைந்து

இயற்றியதாக, நூலின் முகப்புப்பகுதி தெரிவிக்கிறது. மூன்று மொழியலமைந்துள்ள மூன்று பெயர்களும், ஒரே பொருளையுணர்த்துவனவாகும். மூன்றுமே ஒரே அகராதியைத் தான் குறிக்கின்றன. இம்மூன்றனுள் முதல் பெயர் இலத்தீன மொழியையும், இரண்டாவது பெயர் பிரெஞ்சு மொழியையும் குறிப்பனவாகும். இவ்வகராதியின் தலைப்புப் பெயரில் – தமிழ்மொழி என்னும் சொல், 'Tamulicum' என்று இலத்தீனத்திலும், "Tamoul–"என்று பிரெஞ்சிலும் எழுதப்பட்டுள்ளது.

இவ்வகரமுதலி மேனாட்டார்க்கு, இலத்தீன், பிரெஞ்சு வாயிலாகத் தமிழைக் கற்பதற்கு மிகுதியாகப் பயன்பட்டது. சான்றாக, இவ்வகராதியிலுள்ள ஒரு சொற்பொருள் வருமாறு:–

Abba = Pere = அப்பன், பிதா.

Abba என்பது இலத்தீனச் சொல்; Pere என்பது பிரெஞ்சுச் சொல்: அப்பன் என்பது தமிழ்ச்சொல்லென்பது அனைவரும் அறிந்ததே: "Abba"–என்றாலும், Pere- என்றாலும் தமிழில் 'தகப்பன்' என்னும் பொருளையே சுட்டும். தமிழிலுள்ள 'அப்பா' என்னும் சொல்லும் இலத்தீனத்திலுள்ள "Abba"- என்னும் வடிவமும், ஒத்த நிலையிலுள்ளதால், ஐரோப்பிய மொழிகளில், தமிழின் ஊடாட்டம் புலனாகிறது.

## குரி தமிழ் – இலத்தீன் அகராதி (கி.பி. 1867)

தமிழ்ச்சொல்லுக்கு, இலத்தீனச் சொல்லால் பொருள் விளக்கும், இவ்வகரமுதலி கி.பி. 1867 இல் இயற்றப்பட்டது. இதன் ஆசிரியர் ஆர்.பி. குரிபாதிரியார்.

## CLASSICAL TAMIL - ENGLISH (கி.பி. 1870) DICTIONARY

## கிளாசிகல் தமிழ் – ஆங்கில அகராதி

தமிழ்ச் சொல்லிற்கு, ஆங்கிலப் பொருள் விளக்கும், இவ்வகராதி சென்னை மாநிலக் கல்வித்துறைத் தலைவரின் கண்காணிப்பால், கி.பி. 1870 இல், வெளிவந்தது.

### சுருக்க அகராதிகள் (கி.பி. 1859)

இவ்வகை அகரமுதலிகள் கையடக்கமாக அமைந்திருப்பதால் மக்களிடையே பெரிதும் விரும்பிக் கையாளப்பட்டன. 1859 இல் தோன்றிய கையடக்கத் தமிழ் – ஆங்கில அகரமுதலி, அகரமுதலி வரலாற்றில் குறிப்பிடத்தக்கது. இக்காலக்கட்டத்தில் போப் வெளியிட்ட, "தமிழ்க் கையேட்டில், தமிழ்–ஆங்கிலம், ஆங்கிலம்–தமிழ்ச் சொல்லடைவுகள், இன்றும், மக்களால் பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன.

கி.பி. 1859 இல் போப் வெளியிட்ட தமிழ்ச் சொல்லடைவுகளைப் புதுக்கி, "தமிழ்–ஆங்கிலச் சுருக்க அகராதி வெளிவந்தது. இது வடமொழி, அரபிச் சொற்களைத் தனியே எடுத்துக்காட்டுகிறது. வினையின் வேர்ச் சொல்லையும், இவ்வகரமுதலி தனியே அமைத்துள்ளது. அதன்பின், கி.பி. 1870 இல் கல்வித்துறையினரால், செவ்விய, "தமிழ் – ஆங்கிலச் சுருக்க அகராதி" – வெளியிடப்பட்டது. இதனைத் திருத்தம் செய்து, விரிவாக்கி கி.பி. 1888 இல், விசுவநாதபிள்ளை தொகுத்தார்.

## அகராதிச் சுருக்கம் (TAMIL POCKET DICTIONARY)

கி.பி. 1883 இல், யாழ்ப்பாண அகராதியைத் தொடர்ந்து "அகராதிச் சுருக்கம்" அல்லது, "தமிழ்க்கையகராதி'யை, விசயரங்க முதலியாரும், இராசகோபால பிள்ளையும் தொகுத்தனர். இவ்வகர முதலியின் சிறப்பு யாதெனில், மேல்சட்டைப் பையில் வைக்குமளவிற்குச் சுருக்கமாக அமைக்கப்பட் டிருப்பதேயாகும்." இதில் 3000 சொற்கள் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு பக்கத்தின் தலைப்பிலும், ஒவ்வொரு குறள் அமைக்கப்பட்டிருப்பது, இவ் வகராதிப் பதிப்பில் உள்ள ஒரு சிறப்பாகும்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.326). "வினையாகப் பயன்படும் சொற்கள், இவ்வகராதியின் பின்னிணைப்பில் உள்ளன. இவ்வகராதி மாணவர் நலத்திற்குப் பெரிதும் உதவியது" (தா.வே.வீராசாமி. 1991, பக்.74).

## தரங்கம்பாடி அகராதி கி.பி. 1897

கையடக்கமான சுருக்க அகரமுதலிகளின் தேவையானது தமிழ் மக்களிடம் குறிப்பாக மாணவர்களிடம் பெரிதும் வரவேற்பைப் பெற்றதால், கி.பி. 1897 ஆம் ஆண்டு, தரங்கம்பாடி சங்கத்தாரால், மேலும் ஒரு சுருக்க அகராதி உருவாக்கப்பட்டது.

## தரங்கம்பாடிச் சுருக்க அகராதியின் அமைப்பும் - சிறப்பும்

தரங்கம்பாடிச் சுருக்க அகராதியில் 33,000 சொற்கள் இடம் பெற்றுள்ளன. வின்சுலோ அகரமுதலி போல், வினைப்பகுதியும் அதிலிருந்து உருவாகும் வினையுருவங்களும், அமைக்கப்பட்டுள்ளன. "வினைச் சொல்லின் கீழ் அதன் ஆக்கச் சொற்களும், தொடர்களும் அமைந்துள்ளன. வழக்கு வீழ்ந்த அருஞ்சொற்கள், இவ்வகராதியில் இடம்பெறவில்லை" (சுந்தர சண்முகனார். 1971, பக்.327).

இவ்வகரமுதலி பாபிரிசியசு அகராதியை அடிப்படையாகக் கொண்டது. இவ்வகர முதலியின் முதற்பதிப்பு கி.பி. 1897 இல் தரங்கம்பாடி தமிழ்ச் சங்கத்தாராலும், இரண்டாம் பதிப்பு, பெய்செனெர்சு (Rev. H. Beisenherz) என்பவரால், 1910 ஆம் ஆண்டிலும், மூன்றாம் பதிப்பு 1933 ஆம் ஆண்டில், பெக்செல் என்பவராலும், பதிப்பிக்கப்பட்டது.

### இவ்வகரமுதலியின் சிறப்பு அமைப்பாவது:

டாக்டர் கிரால் என்பவர், ஐரோப்பிய மொழிகளில் வினைச்சொற்கள், வகைப்படுத்தப்பட்டு, புடைபெயர்ச்சி (Conjugation) கொடுக்கப்பட்டிருப்பது போன்று, தமிழ் வினைச்சொற்களின் புடைபெயர்ப்பு களையும், முக்காலங்கட்கேற்ப ஆராய்ந்து வினைப் பகுதிகளைப் பதின்மூன்று வகையாகக் கணக்கிட்டிருக் கிறார். அதைப் பின்பற்றி, ஒவ்வொரு வினைப்பகுதியும், பதின்மூன்று வகைகளில், இவ்வகையைச் சார்ந்தது எனக் கூறுகிறது இவ்வகராதி.

இவ்வகரமுதலி, தமிழுக்கு ஆங்கிலப் பொருள் கூறும் நோக்கில், 19 ஆம் நூற்றாண்டில் வெளியான அகராதிகளுள், மாறுபட்ட அமைப்பினைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

## தமிழ்ப்பழமொழி அகராதி - கி.பி. 1894

### A DICTIONARY OF TAMIL PROVERBS

### சான்லாசரசு (JOHN LAZARUS)

சான்லாசரசு என்பவர், கி.பி. 1894 இல், ஆங்கில விளக்கக் குறிப்புகளுடன், தமிழ்ப் பழமொழிகளை அகரவரிசையில் அமைத்து, இப்பழமொழி அகராதி யினைத் தொகுத்தார். 1894 ஆம் ஆண்டே, இவ்வகராதி, சென்னையில் பதிப்பிக்கப்பட்டது. மக்கி மடிந்து போயுள்ள, இந்நூலில் 9000-க்கும் மேற்பட்ட பழமொழிகள் உள்ளன. முதல் பழமொழி, "அஃகம் சுருக்கேல்". One of Avvaiyar's Saying, against raising prices. இவ்வகராதியை நிறைவுறுத்தும் '8991 ஆவது பழமொழி,' - வேடிக்கைக்கு விலை உண்டா?" - No payment for a fun." என்பதாகும்.

முன்னும், பின்னுமாக இவ்வகர முதலியின் ஏடுகள் காணக்கூடவில்லை.

## A CLASSIFIED COLLECTION OF TAMIL PROVERBS

### சென்னைப் பதிப்பு - 1897

தமிழ்ப் பழமொழிகளை, ஆங்கில மொழி பெயர்ப்புடன், கி.பி. 1897 இல், "எர்மன் சென்சன்"- (Rev. Herman Jensen) - என்பவரால் தொகுத்து உருவாக்கப் பட்ட இந்நூல், சென்னையில் பதிப்பிக்கப்பட்டது. இந் நூலில், 'கடவுள்' எனும் தலைப்பு தொடக்கம் 3644 தமிழ்ப் பழமொழிகள் ஆங்கில மொழி பெயர்ப்புடன் அமைக்கப் பட்டுள்ளன. இந்நூலின் முதல், பழமொழி, "அன்புக்கு ஒருவனே" - God is love (Upanishad)-என்பதாகும்.

## நா. கதிரைவேல் அகராதி - கி.பி. 1899

### "தமிழ் பேரகராதி எனும் அல்லது தமிழ்மொழியகராதி"

தமிழ் பேரகராதி எனும் "தமிழ்மொழி யகராதி"யை நா. கதிரைவேல் அவர்கள்-, 19-ஆம் நூற்றாண்டின் முடிவில் அல்லது இருபதாம் நூற் றாண்டின் தொடக்கத்தில் உருவாக்கினார். தமிழ்ச் சொல்லிற்குத் தமிழ்ப்பொருள் கூறும் இவ்வகரமுதலி, 1904-இல் வெளியிட்ட கு. கதிரைவேற்பிள்ளையின், அகரமுதலிக்கு அடிப்படையாக இருந்தது.

## சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகராதி - 1924-1939

இதுகாறும் வெளிவந்துள்ள தமிழகரமுதலி களுள் அளவிற் பெரியது; மொத்தம் 1,24,405 சொற்பதிவுகளை இவ்வகராதி கொண்டுள்ளது. இவ்வகர முதலியின் முதல் தொகுதியின் முதற்பகுதி 1924 இல், வெளியிடப்பட்டது. "தமிழ்-ஆங்கிலம்-தமிழ் அகராதி களுள், இது அளவாலும் தரத்தாலும் சிறந்து

விளங்குகிறது. இதனினும் மேம்பட்ட நிலையில் தமிழ் அகராதி ஏதும் வெளிவரவில்லை. பின்னிணைப்புத் தொகுதியுட்பட ஏழு தொகுதிகளை உடையது. பின்னிணைப்புத் தொகுதி 1939 இல் வெளிவந்தது. வையாபுரிப்பிள்ளை, இவ்வகராதியின் பதிப்பாசிரியர் ஆவார். இதன் சுருக்கம். ஒன்று 1955 இல் வெளியிடப்பட்டுள்ளது. (வ.செயதேவன். 1985, பக்.28).

## சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலியின் குறைநிறை

சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலியின் சீர்கேடு மற்றும் சிறப்பு, பயன்பாடு, குறித்துச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியில் அகரமுதலியின், முதன்மடல முற்பகுதி முன்னுரையில், "இன்றுள்ள ஏறத்தாழ இருபது தமிழகரமுதலிகளுள், இச்சொற்பிறப்பியல் பேரகர முதலிக்குப் பெரிதும் பயன்படுவது சென்னைப் பல்கலைக்கழகத் தமிழகராதியே (Lexicon). அது பல்வேறு வகையிற் குறைபாடுள்ளதாயினும், மூவர்முதற் பதினைவர் வரை, பல்வேறு தொகையினர் பல்வேறு காலப்பகுதிகளில் அமர்ந்து, இருவகை வழக்கினின்றும், இருபத்தாறாண்டாக இடைவிடாது தொகுத்த பல்லாயிரக்கணக்கான சொற்களும், அவற்றின் பெரும் பாற்பொருள்களும், அவற்றிற்குரிய மேற்கோள்களும், அம்மேற்கோள்களின் இடங்களும், ஏற்கனவே குறிக்கப் பட்டிருப்பது, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலிப் பணியாளராகிய எமக்குக் 'காலவகையிலும், உழைப்பு வகையிலும் மறக்கொணா மாபேருதியமாகும்" (செ.சொ. அ. முதன்மடலம் – முதற்பகுதி. முன்னுரைப் பகுதி. பக்.5) எனப் பதிவுசெய்வார் பாவாணர்.

## சென்னைப் பல்கலைக் கழக அகரமுதலியின் சீர்கேடு பற்றிய பாவாணர் கருத்துகள் வருமாறு:

"சென்னைப் ப.க. தமிழ் அகரமுதலி, சில வகையிற் சிறந்ததும், பிற்றை யகரமுதலித் தொகுப்பிற்குப் பெரிதும், பயன்படுவதுமாயிருப்பினும் அடிப்படைக் கொள்கையிலும், பல சொற்களின் மூலமும் பொருளும் பற்றியும், பல பொருள்களின் இயல்வரையறையிலும், மிகமிக வழுவி உலக முதல் உயர்தனிச் செம்மொழியும், திரவிடத்திற்குத் தாயும், ஆரியத்திற்கு மூலமாகவிருக்கும் தமிழை, பன்மொழிக் கலவைப் புன்சிறு புதுமொழியாகக் காட்டியிருப்பதால், தமிழுக்கு மாபெருங்கேட்டை விளைப்பதாகும்".

ஏறத்தாழ நாலரையிலக்கம் உருபா செலவிட்டு 29 ஆண்டு, நீடிய காலத்தில் தொகுக்கப்பட்ட அகரமுதலி, இங்ஙனம் குறைபாடுள்ளதாயிருப்பதற்கு, அதன் தலைமைத் தொகுப்பாளரின் தமிழ்ப் பற்றின்மையும், அதற்குத் துணைநின்ற வையாபுரிப் பிள்ளையின் காட்டிக்கொடுப்புமே கரணியமாம்.

அடிப்படைத் தமிழ்ச் சொற்களெல்லாம், ஆரியமாகக் காட்டியிருப்பது. கட்டாயமாகக் குறிப்பிட்டாக வேண்டிய செய்தியாகும்.

(எ.டு.) "ஐயன், குடும்பம், சிவன், தானம், நாடகம், பள்ளி, முகம்"

சாயுங்காலம் என்பது வேண்டுமென்றே, 'சாயங் காலம்' எனச் சொல் வடிவம் மாற்றிக் குறிக்கப்பட்டுள்ளது.

இதன் விரிவையும், விளக்கத்தையும், தேவநேயப் பாவாணர்தம் 'சென்னைப் பல்கலைக் கழக தமிழகராதி யின் சீர்க்கேடுகள்' என்னும் சுவடியிற் காண்க.

இவ்வகரமுதலி பயன்படுத்துவோருக்கு எளிதில் புரியும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டு வருமாறு:

அஃகு-தல் akku-, 5 செ.கு.வி. (v.i.)

1. அளவிற்குறுகுதல் (நன், 60); to be shortened, as a vowel.

2. சுருங்குதல்; to be reduced, to shrink. "கற்பக்கழிமடம் அஃகும்" (நான்மணி. 29).

3. மனங்குன்றுதல்; to be dejected. 4. நுண்ணிதாதல்; to be acute, refined. "அஃகியகன்ற அறிவு" (திருக் குறள், 175). 5. கழிந்து போதல்; to pass away "அல்லாயிரமாயிரம் அஃகினவால்" (கம்பரா. அயோத். 69.) 6. குவிதல், to become closed, compressed, as a flower. "ஆம்பல்..... மீட்டஃகுதலும்" (காஞ்சிப்பு. திருக்கண். 104.)

## சென்னைப் பல்கலைக் கழக (1911–1926) அகராதியின் உருவான வரலாறும் சிறப்பும்

வின்சுலோ தரங்கம்பாடி தமிழ்ச்சங்கம் அகரமுதலி விதிமுறைகளில் பொருள் கூறி, சொற்பிறப் பிற்குரிய இடம் நல்கி, தக்கமேற்கோள்களுடன் – உருவாகிய, இவ்வகரமுதலி பற்றிய கருத்துரு 1911–ஆம் ஆண்டில்–, பிரடரிக் நிக்கல்சனால் (Frederik Nicholsen)

உருப்பெற்றது. வின்சுலோ, அகரமுதலியைப் புதுக்கி, போப் திரட்டிய சொற்செல்வத்துடன். சென்னைப் பல்கலைக்கழகமும், இணைந்து ஒரு முதல்தர அகர முதலியை உருவாக்கத் திட்டமிட்டன. நாடறிந்த நல்லதமிழறிஞர்களின் உதவிகிடைத்த ஞான்றும், போப், வெளிநாட்டில். இவ்வகரமுதலியைப் பதிப்பிக்க மேற்கொண்ட முயற்சி தோல்வியுற்றது. முதற்கண் மதுரையில் தொடங்கிய இப்பணி 1913–சனவரித் திங்களில் சென்னையில், சாண்டலரை (Rev. Chandlor) முதன்மைப் பதிப்பாசிரியராகக் கொண்டு, நடைபெற்றது.

"இதன் முதன்மாதிரி படிவத்தை வெளிநாட்டறிஞர்களுக்கு அனுப்பி, அவர்களின் அறிவுரையைப் பெற்றனர். வின்சுலோ, போப், உ.வே. சாமிநாதர் ஆகியோர் திரட்டிய சொற்களுடன், மற்ற அறிஞர்கள் பல நூல்களிலிருந்து திரட்டிய சொற்களையும் சேர்த்தனர். பொதுமக்களின் உதவியையும் இதற்கெனப் பெற்றனர். அகராதி அமைப்பைச் சென்னைப் பல்கலைக்கழகம் ஏற்று, விரைந்து பணியை முடிக்க எண்ணியது" (தா.வே.வீராசாமி. 1991, பக்.75). இதற்கிடையே முதன்மைப் பதிப்பாசிரியர் பதவியிலிருந்து சாண்டலர் விலகியதால், 1922 இல் சு. அனவரத விநாயகம் அவ்விடத்திற்கு அமர்த்தப்பட்டார். பின்பு அவரும் விலகியதால்–, 1924 இல், சி.பி. வேங்கடராமர் அமர்த்தப்பட்டார். பின்னர் அவரும் விலகியதால் 1926 இல் வையாபுரி. முதன்மையாசிரியர் பொறுப்பில் – இறுதிவரை நிலையாக இருந்து அகராதிப் பணியை முடித்து வைத்தார். முதன்மையாசிரியர்க்குத் துணை யாசிரியர்களாக நன்கு கற்றுத் தேர்ந்த அறிஞர் பலர் அமர்த்தப்பட்டுப் பணி புரிந்தனர்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.338). பல அறிஞர்களின் கருத்துரைகளுடன், செம்மையாகப் பொருள்விளக்கம் செய்யப்பட்டு ஏழு தொகுதிகளாக அகரமுதலி வெளிவந்தது.

தமிழ்ச் சொற்களுக்கு ஆங்கில எழுத்துப் பெயர்ப்புடன், இருமொழியிற் (தமிழ், ஆங்கிலம்) பொருள் கூறும் இவ்வகராதி, ஆங்கிலம் மட்டும் அறிந்த அயல்நாட்டினரும், கற்றுப் பயன்படும் பான்மையில் அமைக்கப்பட்டுள்ளது. பிறமொழியிலிருந்து தமிழுக்கு வந்த சொற்கள் உடுக்குறியிட்டுக் (*) காட்டப்பட்டுள்ளன. ஒப்பியல் மொழி ஆராய்ச்சியாளர்க்கு உறுதுணை புரியும் பாங்கினில், தேவையான இடங்களில் இனச்சொற்களும், உலகியல் வழக்குச் சொற்களும், இவ்வகராதியில் இடம் பெற்றுள்ளன.

## தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி (1925)

ச. பவானந்தர்கள் தம் காலத்தில் புதிதாய் வழக்கத்துக்கு வந்த, பல்வகைக் கலைச் சொற்களைப் பொருளுடன் தொகுத்து, 1925 இல் மாக்மில்லன் நிறுவனத்தார் வாயிலாக வெளியிட்டார். 1925 ஆம் ஆண்டிற்கும், 2005 ஆம் ஆண்டிற்கும், இடைப்பட்ட காலத்தே பல்லாயிரக்கணக்கான சொற்கள் பதிவுற்ற தற்காலத் தமிழ்ச் சொல்லகராதிகள், இந்நூற்றாண்டில் தோன்றியுள்ளன. அனைத்து அகராதிகளின் பெயர்களைப்பற்றி, அகரமுதலி–பட்டியல் கட்டுரையில் காண்க.

## சென்னை சைவசித்தாந்த மகா சமாசம் 1940

சென்னை சைவ சித்தாந்த மகா சமாசத்தினர் 1940 ஆம் ஆண்டில், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு போன்ற சங்க கால மேற்கணக்கு நூல்கள் பதினெட்டினைச் சேர்த்துச் "சங்க இலக்கியம்" என்னும் தலைப்பில் அரிய நூலினை உருவாக்கியுள்ளனர். இந்நூலின் பின்னிணைப்பில் சிறப்புப்பெயர் அகராதி, புலவர்கள் அகராதி, அரசர்கள் அகராதி போன்ற அகரமுதலிச் செய்திகளை வண்ணமாலையில் வரிசைப்படுத்தி–, உரைத்துள்ளதோடு மட்டும் அமையாது–, சங்க இலக்கியத்திலுள்ள 2381 பாடல்களையும் அகரநிரலில் அமைத்துச் சிறப்புத் தமிழை, இளங்கலை, முதுகலை வகுப்புகளிற் பாடமாகக் கற்கும் மாணவர்கட்கும், தமிழ்ப்பேராசிரியர்கட்கும், அகரமுதலி வல்லுநர்கட்கும் பயன்படும் நோக்கில், அமைத்துள்ள அகராதிக் கூறு, அகரமுதலிவரலாற்றில் சிறப்பாகக் குறிக்கத்தக்க செய்தியாகும்.

2381–கழகச் செய்யுட்களையும், நூல் வாரியாக அமைக்காது, அவற்றைப் பாடியுள்ள புலவர்வாரியாகவே அகரவரிசைப்படுத்தியுள்ள பாங்கு. ஆய்வாளர்கட்குப் பயன்படும் வகையில் அமைத்துள்ளது. "அஃதாவது, ஒரு புலவரின் பாடல்களே பல நூல்களிலும் உள்ளனவாதலால், ஐந்நூறுக்கு மேற்பட்ட புலவர்களின் பெயர்களை, அகரவரிசையில் அமைத்து–, ஒவ்வொருவர் பெயரின் கீழும், அவரவர் பாடிய பாடல்களைப் பல நூல்களிலிருந்தும் கொண்டுவந்து நிரல் செய்துள்ளனர்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.385) குறிப்பிட்ட ஒரு புலவர் எந்தெந்த நூலில், என்னென்ன செய்யுள் இயற்றியுள்ளார் என்பதைச் சுட்டும் இவ்வரிய பதிப்பு, இது

தொடர்பிலான ஆய்வறிஞர்கட்கு அருந்துணை புரிவதாகும். மற்றும், இலக்கியச் சொல்லகராதி, புலவரகராதி படைப்போர்க்கும், இந்நூல் பயன் பாடுடையதாகலாம்.

அரிய பணியாற்றி, அகராதி வரலாற்றை அணிசெய்துள்ள ஒரு சிலர் பற்றிய குறிப்பு வருமாறு:

i) அண்ணாமலைப் பல்கலைக்கழக ஆசிரியர்களுள் ஆர். பிச்சைக் கண்ணன் அவர்களின் குமரகுருபரர் (நூல்கள்) அகராதியும்–

ii) ச. தண்டபாணி அவர்களின் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு இலக்கிய அருஞ்சொல் அகரவரிசையும்,

iii) ஈரோடு வாசவி கல்லூரி மு. சதாசிவம் அவர்களின் பல்வேறு அகராதிகளும்–

iv) புதுச்சேரி பிரெஞ்சு கலைக்கழகத்தின் தொகை யகராதி முயற்சியும், இன்ன பிறவும் – தமிழகரமுதலி வரலாற்றில் குறிப்பிடத்தக்க அகரமுதலிக் குறிப்புகளாகும்.

## இருபதாம் நூற்றாண்டு தமிழகரமுதலி வரலாற்றில் உ.வே. சாமிநாதர்

தமிழ் அகரமுதலி வரலாற்றில், பண்டைத்தமிழ் இலக்கியங்களைப் பதிப்பித்த, உ.வே. சாமிநாதரின் பங்களிப்பும், குறிப்பிடத்தக்க ஒன்றாகும். 'தமிழ்த்தாத்தா', என்று அனைவராலும் சிறப்பிக்கப்படும் உ.வே.சா அவர்கள், தாம் பதிப்பித்த புறநானூறு, குறுந்தொகை, மணிமேகலை முதலிய இலக்கியங்களின் இறுதியில், அவ்வந் நூலிற் பயின்று வந்துள்ள அருஞ்சொற்களையும், சிறப்புப் பெயர்களையும் திரட்டி, வண்ணமாலை வரிசைப்படுத்தியதோடு மட்டும் அமையாது, அவ்வச் சொற்கட்குரிய எண்களையும் குறிப்பிட்டுள்ளார்.

மற்றும் "ஐயரவர்கள், குறுந்தொகையின் தொடக்கத்தில் பாடினோர் வரலாற்றையும், புறநானூற்றின் தொடக்கத்தில் பாடினோர் வரலாறு, பாடப்பட்டோர் வரலாறு, சிறப்புச் செய்திகள் முதலியவற்றையும், அகரவரிசையில் தந்துள்ளார்கள்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.384).

உ.வே.சா அவர்களின் இவ்வரிய முயற்சியானது, பிற்காலத்தே பண்டைத் தமிழிலக்கியங்கட்கு உரைவரைந்தோர்க்கு உறுதுணை புரிந்தது எனலாம். சிறப்பாகச் சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தின் புலவர்கள் கழக இலக்கியங்கட்கு உரைவரையுங்கால், ஐயரவர்களைப் போலவே, நூலிறுதியில், அருஞ்சொல் அகரவரிசை, சிறப்புப்பெயர் அகரவரிசை போன்றவற்றை உரிய எண்ணுடன் குறிப்பிட்டு வருவதும், தமிழகர முதலி வரலாற்றில் குறிக்கத்தக்க செய்தியாகும்.

## நாலாயிரத் திவ்யப் பிரபந்த அகராதி – 1963

பன்னிரு ஆழ்வார்கள்தம் அருளிச் செயல்களின் தொகுப்பான நாலாயிரத் தெய்வப் பனுவல்களிற் காணப்படும் அருஞ்சொற்கள் அனைத்தும் "அஃகம்" முதல், "வையம்"–ஈறாக, வண்ணமாலை வரிசையில் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வகராதியின் தொகுப் பாசிரியர், சீரங்கத்தைச் சார்ந்த தேவத்தான இதழின் ஆசிரியர், பார்த்தசாரதி அய்யங்கார் ஆவார்.

## ஆட்சித்துறை தமிழ் (அகரவரிசை)

ஆட்சித்துறை தொடர்பான ஆங்கிலச் சொற்களுக்குக் கீ. இராமலிங்கனாரால் தமிழில் பொருள்விளக்கப்பட்டுள்ள இவ்வகரமுதலி, ஆட்சிப் பணியாளர்க்கு அருந்துணை புரிவது. 1968 இல், கழக வெளியீடாக வந்துள்ளது.

## சட்டச் சொல்லகராதி (LAW LEXICON)

சட்டத்துறை தொடர்பான ஆங்கிலச் சொற்கள், சொற்றொடர்கட்குத் தமிழில் பொருள்விளக்கம் தரும் இவ்வகரமுதலியைத் தமிழ்நாட்டரசு 1968 ஆம் ஆண்டில் வெளியிட்டது. தமிழகச் சட்டத்துறை ஆட்சிமொழி ஆணைக்குழுவினரால் சென்னையில் பதிப்பிக்கப்பட்டது.

## சட்டத்தமிழ் அகரவரிசை – 1969

"சட்டத்தமிழ்"–என்னும் இந்நூலில், சட்டத்துறை தொடர்பான ஆங்கிலச் சொற்களுக்கு தமிழ்ப்பொருள் குறிக்கப்பட்டுள்ளது.

ஆசிரியர் மா.சண்முக சுப்பிரமணியம் வெளியிட்ட சட்டச்சொல் அகராதியை அடிப்படையாகக் கொண்டு அமைந்தது. வழக்குரைஞர்கட்கும், சட்டவல்லுநர்கட்கும் உறுதுணை புரியும் வண்ணம் வெளியிடப்பெற்ற இவ்வகராதியில், சட்டச்சொற்களும் சொற்றொடர்கட்கான தமிழ்ப்பொருளும் குறிக்கப்பட்

டுள்ளது. சட்டநூல்கள் தமிழில் வெளிவருவதற்குக் களம் அமைத்துத் தந்துள்ளது இவ்வகராதி எனலாம். இது போன்ற அகராதிகள் பல–, ஆங்கிலம்–தமிழறிந்த சட்டவல்லுநர்களால், இயற்றப்படுமாயின் – எதிர்வரும் காலத்தே முறைமன்றங்கள் அனைத்திலும் அனைத்துத் தரப்பினரும் வழக்குத் தொடுக்க – வழக்காட வாய்ப்பாகவிருக்கும்.

## ஆங்கிலம் – தமிழ்ச் சொற்களஞ்சியம் (1965)

தலைசிறந்த தமிழ்ப்பேரறிஞர்களுள் ஒருவரான முனைவர் அ. சிதம்பரநாதன் தலைமைப்பதிப்பாசிரியராகக் கொண்டு மாணவர்கட்கும், ஆய்வாளர்கட்கும், அனைத்து அகரமுதலி வல்லுநர்கட்கும் பயன்படும் பாங்கினில் 1965 இல், சென்னைப் பல்கலைக் கழகத்தாரால், பதிப்பிக்கப்பெற்ற இவ்வகராதி, இதுகாறும் வெளிவந்த ஆங்கிலம்–தமிழ்ச் சொற்களஞ்சியங்களில், அளவிலும் – இயல்வரையறையிலும் மிகச் சிறந்ததாக விளங்குகிறது. ஆங்கில அகர வரிசையிற் சொற்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வகராதிக்கு முன்பு வெளியான நூல்களிற் சேர்க்கப்படாத பல ஆங்கிலச் சொற்களும், பொருள்களும் இவ்வகராதியில் இடம் பெற்றுள்ளன.

## ஆங்கிலம் – தமிழ்ச் சொற்களஞ்சியத்தின் அமைப்பும் – சிறப்பும்

i) ஆங்கில எழுத்துகளால், ஒரே வடிவமுடைய சொல் வெவ்வேறு உறுப்பிலக்கணம் உடையதாயினும், ஒரே சொல்லாக எடுத்துக்கொள்ளப்பட்டுப் பொருள் தரப்பட்டுள்ளது. ஒரே சொல் பெயராகவும், வினையாகவும், இருந்தால், அச்சொல்லுக்குரிய பத்தியில் n. பெயர்ச்சொல் என்றும், v. வினைச்சொல் என்றும் காட்டப்பட்டுப் பொருள்கள் தரப்பட்டுள்ளன.

(எ.கா.) double, n இருமடங்கு; a இரட்டிப்பான; v. இரட்டிப்பாக்கு; adv. இருமடங்காக

ii) ஆங்கிலச் சொல் ஒரே எழுத்துவடிவம் உடையதாயினும், வெவ்வேறு தோற்றுவாய்கள் அமைந்திருப்பின், வெவ்வேறு சொற்களாக மதிக்கப்பட்டு சொன்மேல் எண்கள் கொடுக்கப்பட்டுப் பொருண்மை குறிக்கப்பட்டுள்ளன.

(எ.கா.) coil$^1$, n. கயிற்றுச் சுருள்; coil$^2$, n. குழப்பம்

iii) ஆங்கிலச் சொல் அசையழுத்த வகையான் வேறுபடும்போது, அச்சொல் 1, 2, 3, முதலான எண்களுடன் விளக்கப்பட்டுள்ளது இவ்வகரமுதலியின் சிறப்பாகும்.

(எ.கா.) es'cort$^1$n escort'$^2$; v.

iv) எருதந்துறை ஆங்கில அகராதி போன்ற சொற்களஞ்சியங்களின் துணையுடன், அசையழுத்தங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவ் வகராதியின் சிறப்புமிகு அமைப்புகளுள் ஒன்றாகும்.

v) இருமொழி அகராதிகளில் அடிவேர்களினுடைய தொடர்புகள் சுட்டப்பெறுவது வழக்கமில்லையாயினும், தமிழ் முதலிய இந்தியமொழிகளிலிருந்தும், ஏனைய கீழ்த்திசை மொழிகளிலிருந்தும், மொழியாய்வாளர்கள் பயன்கொள்ளும்வண்ணம், ஆங்கிலம் கடன் வாங்கியுள்ளமை குறியீடுகள் வழிக்காட்டப் பெற்றுள்ளன. தமிழ் என்பதைக் காட்ட (த)–வும், சமற்கிருதம் என்பதைச் சுட்ட (ச.)–வும் அராபி என்பதைக் குறிக்க (அரா.) போன்ற, அவ்வம் மொழிகட்கான பெயர்க் குறுக்கங்கள் குறிக்கப்பட்டுள்ளன.

vi) கலைச்சொற்கள் எவ்வெக் கலைத்துறைக்குச் சிறப்பாகப் பொருந்தியன என்பது அவ்வவ்விடத்து சுருக்கக் குறியீடுகளாற் சுட்டப்பட்டுள்ளன.

(எ.கா.) Cell, மின் = மின்சாரம் (Electricity)
gemmule, உயி. = உயிர்நூல் (Biology)
affirm, சட். = சட்டம் (Legal)
crypt, வில. = விலங்குநூல் (Zoology)

இலக்கியச்சிறப்பான ஆங்கிலச் சொற்கட்கும், பெருக வழங்கும் வழக்குச் சொற்றொடர்கட்டும் தூயசெந்தமிழ் சொற்களால், இயல் வரையறை செய்யப்பட்டுள்ளது இச்சொற்களஞ்சியத்தின் தனிச்சிறப்புகளுள் ஒன்றாகும்.

(எ.கா) 'arch' – என்னும் ஆங்கிலச் சொல், பெயர்ச்சொல்(n = noun.)லாகவும் குறிப்புப் பெயரெச்சமாகவும்–(a = adjective), வினைச்சொல் (v = verb) லாகவும் இயல்வரையறை செய்துள்ளமை வருமாறு :

arch, n. மேல் வளைவு, வில் வளைவு, கவான், பாலம், தளம் முதலியவற்றைத் தாங்கும் வளைவுக் கட்டுக்கோப்பு; வில்வளைவைப் போன்ற வடிவமுள்ள பொருள்; வில்வளைவுள்ள கூரை; மேலே கவான் அமைந்த நடைவழி

a. முதன்மையான; விளங்கித் தோன்றுகிற; தந்திரமுள்ள; சதுரப்பாடுடைய; வேடிக்கைக்காகக் குறும்பு செய்கிற.

v. வில்வளைவு அமை; கவான் ஆக்கு; மேல்வளைவு கட்டு; கரைக்குக்கரை கவான் நீட்டிக்கட்டு; வில் போல் வளை.

## அகரமுதலிவரலாற்றில் சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் – தென்னிந்தியத் தமிழச்சங்கம் முதலானவற்றின் பங்களிப்பு:

இருபதாம் நூற்றாண்டின் அகரமுதலி வரலாற்றில் தென்னிந்தியத் தமிழ்ச்சங்கமும், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமும் இணைந்து. இருமொழியகராதிகளையும், ஒருமொழியகராதிகளையும், மாணவர் குமுகாயத்திற்கும், பேராசிரியர்கட்கும் பெரும்பயன் அளிக்கும் வகையில், அகரமுதலி தொகுத்தலை ஒரு சிறப்புப் பணியாகக் கருதி பல அகராதிகளைப் பதிப்பித்துள்ளன. அவற்றில் குறிப்பிடத்தக்கன வருமாறு:

i) தொகையகராதி அ.அ. இராமசாமிப்புலவர் – 1969

ii) கழக ஆங்கிலத் தமிழகராதி

iii) பல்பொருள் ஆங்கிலத் தமிழகரவரிசை

iv) ஆராய்ந்தெடுத்த அறுநூறு பழமொழிகளும் அவற்றிற்கேற்ற ஆங்கிலப் பழமொழிகளும் – 1968

v) பழமொழி அகரவரிசை

vi) சிலேடை அகரவரிசை

vii) வடசொல் தமிழ் அகரவரிசை

viii) ஆட்சித்துறைத் தமிழ் அகரவரிசை (1968)

ix) சட்டத்தமிழ் அகரவரிசை (1968)

x) தமிழ்ப்புலவர் அகரவரிசை – 1595 தமிழ்ப்புலவர்கள் பற்றிய குறிப்புகளுடன், சு.அ. இராசாமிப்புலவரால் 1959–1960 ஆம் ஆண்டுகளில் சை.சி.நூ.ப. கழகத்தில் பதிப்பிக்கப்பட்டது.

xi) கழகச் சிற்றகராதி – 1962 (ஆங்கிலம் – தமிழ்)

xii) சிறிய கழகத் தமிழகராதி – கழகப்புலவர் குழுவினர் (1964)

xiii) திருவாசக ஒளிநெறி – கழகவெளியீடு – 1967

xiv) திருக்கோவையார் ஒளிநெறி – மணிவாசகரியற்றிய திருக்கோவையாரில் ஆதன் – இறைவன் குறித்த செய்திகள். அருஞ்சொற்கள் – அகரவரிசையில் 1970 இல் கழகவெளியீடாக மலர்ந்துள்ளது. ஆசிரியர். வ.சு. செங்கல்வராய பிள்ளை.

xv) திருக்குறள் சொற்பொருள் அகரவரிசை – கழகவெளீயீடு – 1969 ஆசிரியர் சு.அ. இராமசாமிப்புலவர்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினரும் – தமிழ் பாதுகாப்புக்கழகத்தினரும் இணைந்து. அகரமுதலி வரலாற்றில் குறிப்பிடத்தக்க சிறந்த நூல்களைப் பதிப்பித்துள்ளனர். அவற்றுள் சிறப்பிடம் பெறுவன:

i) மக்கட்பெயர் அகரவரிசை

ii) இல்லப்பெயர் அகரவரிசை முதலானவையாகும்.

மேலும், சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், 'செந்தமிழ்செல்வி' எனும் இலக்கியத் திங்களிதழ் வாயிலாக. சொல்லாய்வு வளர்ச்சிக்கும், வேர்ச் சொற்கட்டுரைகள் என்னும் பாவாணர் நூல் வெளிவருதற்கும் உறுதுணைபுரிந்தது. இதுபோல் கடலூரி லிருந்து வெளிவந்த 'தென்மொழி' – திங்களிதழும், கரந்தையிலிருந்து வெளிவந்த, 'தமிழ்ப்பொழில்' மற்றும் ''தமிழ்ப்பாவை'' போன்ற இதழ்களும் அகரமுதலி வரலாற்றில் சிறப்பிடம் பெறுவன எனலாம்.

## INDEX DES MOTS DE LA LITTERATURE TAMOULE ANCIENNE

### பழந்தமிழ் நூற்சொல்லடைவு (1967–1970)

அகராதியியல் வல்லுநர்கட்கும் கல்வியாளர் கட்கும் அருந்துணை புரியும் இந்நூல், ''பழந்தமிழ் நூற்சொல்லடைவு'' – எனுந் தமிழ்ப் பெயரில் புதுச்சேரியைச் சார்ந்த பிரெஞ்சு இந்தியக் கலைக் கழகத்தாரால் (Institute Francais D'Indologie, Pondichery) வெளியிடப்பட்டது. மூன்று பகுதிகளாக அச்சிடப்பெற்ற இந்நூலின், முதற்பகுதி, 'அ' – முதல் 'ஔ'–வரையிலுள்ள உயிர்முதற் சொற்களைப்பற்றியது. இது 1967 இல் வெளியிடப்பட்டது. இரண்டாம் பகுதி, 1968 இல் வெளியிடப்பட்டது. க–முதல் தௌ–வரையுள்ள உயிர்மெய்ம் முதற்சொற்களில் தொடங்குவது. 'ந' முதல் 'ன' வரையான உயிர்மெய்ம்முதற் சொற்களைக் கொண்ட மூன்றாம் பகுதி 1970 இல் வெளியாயிற்று.

## சொல்லடைவு நூலின் சிறப்பு:

பண்டைத் தமிழ் இலக்கிய இலக்கண நூல்களில் அமைந்துள்ள அனைத்துச் சொற்களும் வண்ணமாலை வரிசையில் பாடல் எண்களுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளன. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு முதலான கழக இலக்கியங்களைக் கற்போருக்கும், கற்பிக்கும் வல்லுநர்கட்கும், இந்நூல் உறுதுணை புரியும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளது. திருக்குறள், தொல்காப்பியம் இறையனார் களவியல், சிலப்பதிகாரம், மணிமேகலை, முத்தொள்ளாயிரம் இன்னபிற இலக்கண இலக்கிய நூல்களும், சொல்லடைவு செய்யப்பட்டுள்ளது இந்நூலின் தனிச்சிறப்பாகும்.

இப்பழந்தமிழ்நூற் சொல்லடைவில் சொற்கட்கான பொருள் குறிப்பிடாத குறைவினை, நிறைவாக்குதற் பொருட்டு-" குறிப்பிட்ட ஒரு சொல் பழந்தமிழ் நூல்களுள், எதில் ஆளப்பட்டுள்ளது என்பதை, இந்த அகராதியைக் கொண்டு அறிந்து கொள்ளலாம். இதன் தொகுப்பாசிரியர் குழுத் தலைவர் கரந்தைத் தமிழறிஞர் நீ. கந்தசாமிப்பிள்ளை" (சுந்தர சண்முகனார். 1971, பக்.378) ஆவார்.

## உரையாசிரியர் – 1968

கருத்துச் செறிவுள்ள அரும்பெருஞ் சொற்களுக்குப் பொருள் கூறும், உரையாசிரியர்தம் உரைகள், சொற்பொருள் புகலும் அகரமுதலியின் நாற்றங்காலாகத் திகழ்கின்றன என்பது அகராதி வல்லுநர்தம் கொண்முடிபாகும். தமிழ்மொழியின் பரந்துபட்ட சொல் வளச்சிறப்பினையும் பொருளாழத்தினையும் மணிவாசகர் பதிப்பகத்தார் 1968 இல் வெளியிட்ட "உரையாசிரியர்" என்னும் நூல் மெய்ப்பிப்பனவாம்.

சொற்பொருள் விளக்கும் அகராதித்துறைக்கு மணிவாசகர் பதிப்பகத்தாரின் அரும்பணியினைக் எடுத்துரைக்கும் உரை நூல்கள் வருமாறு:

1) உரையாசிரிர்கள்
2) உரைமரபுகள்
3) உரைச் சொற்களஞ்சியம்

முதலான நூல்களையும், அகரமுதலித்துறைக்கு மணிவாசகப் பதிப்பகத்தாரின் நன்கொடையாக,

1) மானிடவியல் கலைச் சொல்லகராதி
2) மொழியியல் கலைச் சொல்லகராதி
3) மூலிகை அகராதி
4) எதிர்ப்பத அகராதி
5) ஐம்பொறி அகராதி

போன்ற நூல்களை வெளியிட்டுள்ளனர். இருபதாம் நூற்றாண்டின் அகரமுதலிவரலாற்றில், மணிவாசகர் பதிப்பகத்தார் வெளியிட்ட மேற்குறித்த நூல்கள், சிறப்பிடம் பெறுபவையெனலாம்.

### உரையாசிரியர் (1968) நூலிலிருந்து சில சான்றுகள் வருமாறு:

1. தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்குச் சிறப்பாக உரையியற்றிய சேனாவரையர்தம் உரைப்பகுதி

(எ.கா.) "அடிசில் என்பது, உண்பன, தின்பன, பருகுவன, நக்குவன என்னும் நால்வகைக்கும்", .... பொதுவாகலின் அடிசில் அயின்றார் மிசைந்தார் எனவும்...

2. பேராசிரியர் உரைப்பகுதி:

i) வனப்பு: பெரும்பான்மையும் பல உறுப்புத் திரண்டவழிப் பெறுவதோர் அழகு (தொல்.செய்.235)

ii) கொலை: அறிவும் புகழும் முதலாயினவற்றைக் கொன்று உரைத்தல் (மெய். 10)

3. நச்சினார்க்கினியர் உரைப்பகுதி: (கலித். உரை)

i) நல்கூர்ந்தார் செல்வ மகள் : பிள்ளையான் மிடிப்பட்டாருடைய செல்வத்தை உடைய மகள்.

ii) "கட்குத்திக் கள்வன்" என்றது விழித்திருக்க மிண்டையைக் கொள்வான் என்னும் பழமொழி.

iii) கண்ணி: தலைமாலை.

4. பரிமேலழகர் – உரைப்பகுதி:

தானம்: அறநெறியான் வந்த பொருளைத் தக்கார்க்கு உவகையோடும் கொடுத்தல்.

## அகரமுதலி வரலாற்றில் உரையாசிரியர்கள்

பண்டைத் தமிழிலக்கியங்களிற் பயின்று வரும் கி.பி. 11 முதல் 13 ஆம் நூற்றாண்டுவரை அருஞ்

சொற்களின் உண்மைப் பொருளை, நுணித் தாய்ந்து, உரையாசிரியரர்கள் தமது உரைகளில் ஆங்காங்கே, பொதித்து வைத்துள்ளனர். இலக்கிய இலக்கணச் சொல்லாட்சிகளை, உரையாசிரியர்கள் பாங்குற ஆய்ந்து கூறுவதன்மூலம் சொற்பொருள் கூறும் அகரமுதலி வரலாற்றில் நிலைத்து நிற்கின்றனர். வருவதுணரும் பெற்றியே வெற்றியின் அறிகுறி என்னும் வாழ்வியல் நெறியினை, உரையாசிரியர்தம் அருஞ் சொல்லுரை தெளிவுறுத்துவதோடுமட்டும் அமையாது. மூல நூல்களைக் காத்தோம்பும் மூல பண்டாரங்களாகவும் விளங்குகின்றன.

அகரமுதலி வரலாற்றில் கி.பி. 11 ஆம் நூற்றாண்டு முதல் 13 ஆம் நூற்றாண்டு வரை வாழ்ந்த அடியார்க்கு நல்லார், (கி.பி. 12) இளம்பூரணர், (கி.பி. 11) சேனாவரையர் போன்ற உரையாசிரியர்கள்தம் தெரித்த சொல்லானும் தேர்ந்த பொருளானுமாய உரைப்பகுதிகள் வருமாறு:

1. **அடியார்க்கு நல்லார் உரைப்பகுதி:** கி.பி. 12 ஆம் நூற்றாண்டு

**துய்த்தல்:** விளையப்பட்ட பொருளை அறுத்துப் போரிட்டு, கடாவிட்டுத் தூற்றிப் பொலிசெய்து, கொண்டுபோய், உண்டு மகிழ்வது போல்வது

2. **இளம்பூரணர்:** கி.பி. 11 ஆம் நூற்றாண்டு

**துள்ளலோசை:** துள்ளுதலாவது ஒழுகு நடைத்தன்றி இடையிடை உயர்ந்து வருதல். கன்று துள்ளிற்றென்றாற் போலக் கொள்க. (தொல். செய். 79 இளம்.)

3. **சேனாவரையர்:** கி.பி. 13 ஆம் நூற்றாண்டு

அணி என்பது, கவிப்பன, கட்டுவன, செறிப்பன, பூண்பன என்னும் தொடக்கத்தனவற்றிற்கும் பொதுவாகலின்,.... .... அணி அணிந்தார் மெய்ப்படுத்தினார் எனவும்....

பேராசிரியர்

**தத்தை:** பெருங்கிளி

**கிளி:** சிறுகிளி (மரபி. 98)

**அரற்று:** அழுகையன்றிப் பலவும் சொல்லித் தன்குறை கூறுதல்; அது காடுகெழு செல்விக்குப் பேய்கூறும் அல்லல் போல வழக்கினுள்ளோர் கூறுவன (மெய். 12.)

## தமிழ்–ஆங்கில–அகரமுதலி – 1976

### தொகுப்பாசிரியர் – இரா. பாலகிருட்டிணர்

தென்னிந்திய தமிழ்ச்சங்கத்தின் மூன்றாவது வெளியீடு.

தமிழ்சொற்களுக்கு, பொருட்பொருத்தப்பாடு சற்றும் பிறழாவண்ணம், நேரியமுறையில் பொருள் கூறும் முறை, இவ்வகரமுதலியின் தனிச்சிறப்பு எனலாம். இலக்கணக் குறிப்புடன் ஏற்புடை இயல்வரையறை செய்துள்ள இவ்வகரமுதலி 1976 ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டது. கல்வி நிலையங்களிலும், பொது நூலகங்களிலும் காணக்கூடும் இவ்வகரமுதலி, தென்னிந்திய தமிழ்ச்சங்க அறிஞர் குழுவினர்தம் திருத்தங்கட்குப் பின்னரே பதிப்பிக்கப்பட்டதென்பதை, இதன் முன்னுரைப் பகுதியால் அறியலாம்.

## உரைச்சொற்களஞ்சியம் – 1985

கலைக்களஞ்சியம், வாழ்வியற் களஞ்சியம், மருத்துவக்களஞ்சியங்களின் வரிசையில் பண்டைய இலக்கியங்களிலுள்ள சொற்களின், உண்மைப் பொருள்களையும் நுண்பொருள்களையும் தெரிவுசெய்து விளக்குவதே உரைச்சொற்களஞ்சியம். உரைச் சொற் களஞ்சியம் என்னும், இத்தொகை நூல் இளங்கலை, முதுகலைத் தமிழ் பயிலும் மாணவர்கட்கும், ஆய்வாளர்க்கும் அரிய கருவி நூலாகும். கலைச் சொல்லகராதி, இலக்கியச் சொல்லகராதி, மரபுச் சொல்லகராதி ஆகிய மூன்று அகரமுதலிகளின் பொருண்மைகளைத் தம்முள் பொதித்துவைத்துக் கொண்ட சிறப்பினையுடையது இந்நூல். தமிழுலற்கு இவ்வரிய நூலை 1985 இல் தொகுத்துதவியர் முனைவர். சா. கிருட்டின மூர்த்தியாவார். இக்களஞ்சியம் மணிவாசகர் பதிப்பகத்தின் வெள்ளிவிழா ஆண்டில் (1985–இல்) பேராசிரியர் ச. மெய்யப்பன் எம்.ஏ. அவர்களால் பதிப்பிக்கப் பெற்றது.

ஒரு சொல்லுக்குப் பல்வேறு உரையாசிரியர்கள் தரும் விளக்கங்கள், ஒரே இடத்தில் வகைப்படுத்தியுள்ள பாங்கு, ஆய்வாளர்க்கு அருந்துணை புரியும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளது.

(எ.கா.) நாண் (பக்கம். 160)
தொகை (பக்கம். 153)
நோக்கு (பக்கம். 169)

ஒரே உரையாசிரியர் வெவ்வேறு பொருள்களைத் தருவதையும், இந்நூல் விளக்குகிறது. சான்றாக 'அங்கதம்' என்ற சொல்லுக்குப் பேராசிரியர், மூன்றிடங்களில் தரும் விளக்கங்களை, நூலாசிரியர் ஒரே இடத்தில் அமைத்துள்ளார்.

"அசைநிலை" – என்பதற்கு உரையாசிரியர்கள் அறுவர் மூலம், ஏழு விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

"கற்பு" என்பதற்கு ஏழு விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. இவற்றுள் ஓர் உரையாசிரியரே இருவகை விளக்கமும், மூவகை விளக்கமும் தருவதை அறிந்து கொள்வதற்கு, அரிய வாய்ப்பாக, இந்நூல் அமைந்துள்ளது.

"சொல்" – என்பதற்கு அமைந்துள்ள விளக்கங்கள் ஏழு எனினும், அவையெல்லாம், ஒருவர் தந்த ஒரு பொருளைத் தழுவி வருவது. ஆய்வு வளர்ச்சிக்கு உறுதுணை நல்கும் பாங்கினில், இந்நூல் அமைந்துள்ளது. 20 ஆம் நூற்றாண்டுத் தமிழகரமுதலி வரலாற்றில், உரைச்சொற்களஞ்சியம் போன்ற நூல்கள் தமிழுக்கு வளம்சேர்க்கும் பாங்கினில் அமைந்த போதும் – ஆசிரியர் இந்நூலினுள். அநபிகித கருத்தா, 'அபிகித கருத்தா', அவதிஞான வரணீயம், 'அவதி தரிசனா வரணீயம் முதலான வடசொல் விளத்தங்களைத் விலக்கி யிருக்கலாம். மேலும் ஆசிரியர்', 'எண்வகை மணங்களை அறநிலை, ஒப்பு, முதலாகக் களவியல் தருவனவற்றை இணைத்து', பரமம், 'பிரசாபத்தியம்'–முதலியவற்றை விலக்கியோ, அடைப்புக் குறிக்குள் தந்தோ தமிழ் வளமாக்கி இருக்கலாம்" (இளங்குமரனார் ஆய்வுரை. உரைச்சொற்களஞ்சியம், பக்.13).

## "தமிழ்ச் சொல்லகராதி"

–கு. கதிரைவேல் – கி.பி. 1904 – சனவரி 1.

### தமிழ்ச்சங்க அகராதி

இவ்வகரமுதலி, யாழ்ப்பாணத் தமிழறிஞரும், நயன்மை (நீதி) அரசருமான கு. கதிரைவேற்பிள்ளை அவர்களால், அரும்பாடாற்றி, இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் உருவாக்கப்பட்டது.

நயன்மையரசராகப் பணியாற்றிய ஞான்று, தொடங்கிய அகரமுதலிப் பணியை, ஓய்வகவைக்குப் பின்பே உழைப்பெடுத்து நிறைவு செய்தமை குறித்து, 1904–சனவரி 1 ஆம் பக்கல், அவரெழுதியுள்ள முன்னுரை மூலம் அறியலாம். ஆசிரியர் இவ்வகரமுதலிக்குச் சூட்டியபெயர் "தமிழ்சொல்லகராதி" என்பதாகும். மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவர்கள் ஆய்வுசெய்து, இவ்வகராதியை வெளியிட்டமையால், அகரமுதலி வரலாற்றில் "தமிழ்ச்சங்க அகராதி" எனப் பெயர் பெற்றது, சதுரகராதிக்குப் பின்பு, வெளிவந்த அகராதிகளில் அளவிற் பெரியது.

## அகரமுதலியின் அமைப்பும் சிறப்பும்

தமிழ்–தமிழ் அகரமுதலிகளுள், மிகவும் பெரியது. மூன்று பெருந்தொகுதிகளை உள்ளடக்கியது. சொற்பொருள் விளக்கம் தவிரப் பொருள், தொகை, தொடை அகராதி என்னும் சிறப்புச் சேர்க்கை, இந்த அகராதியில் இல்லை. இவ்வகர முதலியின் பதிப்பு வரலாறு குறித்து, முன்னாள் தமிழ் ஆட்சி மொழி – பண்பாட்டுத்துறை அமைச்சர் முனைவர் தமிழ்க்குடி மகனார், இவ்வகரமுதலியின் இரண்டாம் பதிப்பு அணிந்துரையில் – சண்முகம்பிள்ளை நூலில் குறிப்பிட்டுள்ளதாகக் கூறப்படும் செய்தி வருமாறு:

"இவர் சதுரகராதி, மானிப்பாய் அகராதி, சென்னை அகராதி வின்சுலோ அகராதி, வைத்திய அகராதி என்னும் இவற்றில் தொகுக்கப்படாத சொற்களைத் திரட்டி விளக்கம் தந்துள்ளார். இதனை முற்றுமாய் வெளியிடும் முன்னர் இவர் காலமானார்.

பின்னர் அப்பொழுது மதுரைத் தமிழ்ச்சங்கத் தலைவராக விளங்கிய பொன். பாண்டித்துரைத் தேவரவர்கள், அகராதிப் படிவங்களைக் கதிரைவேற் பிள்ளையின் திருமகன் பாலசிங்கம் என்பவரிடமிருந்து பெற்றார். மதுரைத் தமிழ்ச் சங்க வித்துவான்களைக் கொண்டு பரிசோதித்து அச்சிட்டு வெளியிடப் பணித்தார். சே.ரா. சுப்பிரமணிக் கவிராயர் உள்ளிட்டார் பல்லாண்டுகள் உழைத்து, இந்த அகராதியை மூன்று பகுதிகளாக 1910, 1912, 1923 ஆம் ஆண்டுகளில் வெளியிட்டு முற்றுவித்தனர்.

ஒரு சொற் பல்பொருள்களுக்கு விளக்கம் தரும்போது, பொருள்களை 1,2 என எண் குறியிட்டுக் காட்டியிருப்பது புதுமை. இதனால் ஒரு சொல்லுக்கு எத்தனைப் பொருள் உண்டு என்பதும் தெளிவுபடுகிறது. மேலும், சொற்பொருளுக்கு அடிப்படை ஆதாரமான நூற்சான்றுகளையும் உதாரணம் என எடுத்துக் காட்டியது புது முயற்சி. சொற்பொருளுக்கு இலக்கிய இலக்கணங்களிலிருந்து மேற்கோள் தந்த, முதல் தமிழ்–தமிழ் அகராதி இதுவே.

இவர் 344-நூல்களிலிருந்து மேற்கோள்களை எடுத்தாண்டுள்ளார். சொன் மூலங்களைக் காட்டியதோடு, வட சொற்கள், இந்துத்(ஸ்)தானிச் சொற்கள், தெலுங்குச் சொற்கள் முதலியவற்றையும் இனஞ்சுட்டிக்காட்டியுள்ளார். இந்த அகரமுதலியில் முந்திய அகரமுதலிகளில் இல்லாத பல சொற்களும், திருந்திய விளக்கங்களும் காணப் படுகின்றன. தமிழ்-தமிழ் அகரமுதலிகளுள் காலஅடைவில் விரிவுபெற்ற பேரகராதி இதுவே" (தமிழ்ச் சொல்லகராதி. 29.03.1998. இரண்டாம் பதிப்பு அணிந்துரை. பக்.6).

பன்னூற் புலமையைத் தன்னகத்தே கொண்ட யாழ். அறிஞர் கதிரைவேற்பிள்ளையின் அகரமுதலியை, அகரமுதலிவல்லுநர்கள் பலவாறாகப் பாராட்டியுள்ள மைக்கான சான்று வருமாறு. இதுகாறும் வெளி வந்துள்ளன. "அகரமுதலிகளுள், மேற்கோள்காட்டி விளக்கிய முதல் நூல் என்ற பெருமை பெறுகிறது. இதனை அறிஞர்கள் பாராட்டினர். சாத்திரங்களில் காணும் எல்லாச் சொற்களையும் தொகுத்தளித்ததால், மற்ற அகராதி களிலுள்ள சொற்களை விட மிகுதியாகத் தர இயலும் என்று எண்ணியதன் விளைவாக இது நேர்ந்தது. இதனால் வட சொற்களை வரையறையின்றி, இவர் தமிழகராதியில் சேர்த்தார். மருத்துவம், நிலைத்திணைச் சொற்களும், இதில் உள்ளன. பிற்காலத்தில் வெளிவந்த அகராதிகள்". சொல் லெண்ணிக்கையைப் பெருக்குதற் பொருட்டு, வடமொழிச் சொற்களை அளவிற்கதிமாக எடுத்தாள்வதற்கு சி.டபிள்யூ. கதிரைவேற்பிள்ளை களமமைத்துத் தந்தார். மேலும் ஆசிரியர் தமிழிலக்கியங்களைச் சிறப்பாகக் கற்று, ஏனைய அகராதிகளில் இடம்பெறாத சொற்களை யெல்லாம் தொகுத்தளித்து அகராதி வெளிவருமுன் மறைந்தார். இப்பணியை மதுரைத் தமிழ்ச் சங்கம் தொடர்ந்து மேற்கொண்டது. இது சங்கத்தகராதியாக வெளிவந்தது. முதல் தொகுதி வெளியாகிப் (1910) பதின்மூன்றாண்டுகள் கழித்து இரு தொகுதிகள் வந்தன. இம்மூன்று தொகுதிகளில், ஏறத்தாழ 63,900 சொற்கள் உள்ளன" (தா.வே.வீராசாமி. 1991, பக்.74).

88-ஆண்டுகளுக்கு முன்னர் மதுரைத் தமிழ்ச் சங்கம் வெளியிட்ட "தமிழ்ச் சொல்லகராதி"யை, இரண்டாம் பதிப்பாக 1998 ஆம் ஆண்டு, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் புதுப்பொலிவுடன் வெளியிட்டது. இப்பதிப்பில் நூலாசிரியர் 1904 ஆம் ஆண்டு சனவரி 1 ஆம் நாள் எழுதிய முன்னுரையில், குறிப்பிடத்தக்கதும், அகரமுதலி வரலாற்றில் குறிக்கத்தக்க கருத்துக்களைக் கொண்ட சில வரிகள் வருமாறு:

"நாம் முக்கியமாகத் தேடியெடுத்திவ் வகராதியிற் சேர்த்தவைகள், தமிழில் முன் எழுதப்பட்டிருக்கும் நூல்களிலுள்ள அரும்பதங்களே."

சொற்களின் பொருள் வரம்புபட விளங்குமாறு காலம் இடந்தந்த அளவு, முன்னைய அகராதிச் சொற்கள் பலவற்றிற்கும், நாம் புதியனவாகச் சேர்த்துக்கொண்ட சொற்களெவற்றிற்கும், உதாரணங்களுங் காணப்பட்ட இடங்களும் குறிக்கப்பட்டன (தமிழ்ச் சொல்லகராதி. நூலாசிரியர் முகவுரை - 1998 - ஆண்டுப்பதிப்பு).

## குறைபாடு:

அகரமுதலியைப் பெரிதாக்குவதற்காகச் சொற்கலெண்ணிக்கையை மிகுவித்து அளவிற்கதிகமாக வடசொற்களைச் (1904-இல்) சேர்த்து, அகரமுதலி வரலாற்றில் தோன்றிய பிற அகராதிகளின் வடசொற் சேர்க்கைக்குச் சிறப்பாக வழிகாட்டியதெனலாம். பல இடங்களில் தூய தென்சொற்களுக்கு, வடசொல்லில் பொருள் குறிக்கப்பட்டுள்ளது.

(எ.கா.)

**இன்னிலை:** கிருகத்தாச்சிரமநிலை. (உ.ம்.) "இன்னிலையொழுக்கும்" (திருவிளை. தடாதகை. 59)

இனிப்பு: சிநேகம்.

இனிமை: சந்தோஷம்

தமிழ்ச் சொற்களுக்கு, வடசொற் கலந்தநிலையில், பொருள் புகன்றிருக்கும் பாங்கு இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வடமொழி வழக்கூன்றியிருந்த நிலையைக் காட்டுவதாயுள்ளது.

## சேந்தன் செந்தமிழ் - 1906 பாம்பனார் அடிகள்

1906 இல் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் வெளியிட்ட 'சேந்தன் செந்தமிழ்' என்னும் நூலில் சொற்பொருள் கூறும் அகரமுதலிப் பகுதி அமைந்துள்ளது. வடசொல் கலக்காமல், பாம்பனாரால் பாடப்பட்ட சேந்தன் செந்தமிழில், "அகரமுதல்" என்னும் சொல் இடம் பெற்றுள்ளது குறிக்கத்தக்கது. எனினும் "அகரமுதலி" என்னும் சொல்லை, இருவகை வழக்கினும், வழக்கூன்றச் செய்த பெருமை, பாவாணரொருவரையே சாரும்.

## பதினெண்சித்தர் அகராதிகள்

(கி.பி. 1902–முதல்–1949 வரை)

1. பதினெண்சித்தர் வைத்திய மூலிகையகராதி (கி.பி. 1902)
2. பதினெண்சித்தர் மூலிகை விரிவகராதி (கி.பி. 1949)
3. பதினெண்சித்தர் வைத்திய மலையகராதி (கி.பி. 1908)

மேற்குறித்த மூன்று அகராதிகளும், சித்தர் பாடல்களிலுள்ள மூலிகைகள், ஓகங்கள் பற்றிய செய்திகளை அகரவரிசைப்படுத்தி, அகராதி வல்லுநர் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அகராதிகளாகப் படைத்துள்ளனர். பிற்காலச் சித்தர்தம் மருத்துவ நிகண்டுகளிற் காணப்படும் மருத்துவம் பற்றிய மூலிகைச் செய்திகளை அகரவரிசைப்படுத்தி கி.பி. 1902 இல், சென்னை வித்யாரத்நாகர அச்சுக் கூடத்தார், "வைத்திய மூலிகை விரிவகராதி"யினைப் பதிப்பித்தனர்.

வைத்திய மலையகராதி என்னும் நூல், சென்னை பத்மநாப விலாச அச்சுக்கூடத்தில் 1908 இல் பதிப்பிக்கப்பட்டது. 1949 இல் மறுபதிப்பான "வைத்திய மூலிகை விரிவகராதி"யைத் தொடர்ந்து. பதினெண் சித்தர் பெயரில்,

### "அரும் பெயர் அனுபந்த அகராதி"

"தொகையகராதி" போன்ற அகராதிகளும் வெளிவந்தன. சான்றாக ஒவ்வொன்றிலும் ஒரு சொல் வருமாறு:

வைத்தியமூலிகை யகராதி:
அகத்தி – சிறு மரவகை

அரும்பெயர் அனுபந்த அகராதி :
அக்காரப்பட்டை – மாமரப்பட்டை

தொகையகராதி:

அகிற்கூட்டு 5 = சந்தனம், கற்பூரம், எரிகாசு, தேன், ஏலம், மேற்கூறிய அகராதிகளேயன்றி, ஊர், பேர் பற்றிய குறிப்பு புலப்படாத அகராதிகள் பற்றிய பெயர்கள் வருமாறு:

1. பச்சிலை மூலிகை அகராதி
2. பரிபாஷை அகராதி
3. கருப்பொருள் அகராதி
4. மறைப்பு வெளிப்படை அகராதி இருபதாம் நூற்றாண்டு அகராதி வரலாற்றில் மேற்சுட்டிய அகராதிகளின் பெயர்கள், மருத்துவம், கலைச்சொல் முதலானவற்றின் பொருண்மையை விளக்குவனவாம்.

## அபிதான சிந்தாமணி – 1910

1910 ஆம் ஆண்டில், சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராக விருந்த, ஆ. சிங்கார வேலு அவர்களால், தமிழ்மொழியில் முதற்கண் படைக்கப்பட்ட முதற் கலைக்களஞ்சியமாகும். மாணிக்கக்கல், ஒளிர்வதைப் போன்று, தேவையான அனைத்துப் பெயர்களைப் பற்றிய செய்திகளை, அகரவரிசைப்படுத்தி அமைத்துள்ள நூலே அபிதான சிந்தாமணி. இந்நூல் தனித்தனிச் சொல்லுக்குத் தனித்தனிச் சொல்லால் பொருள் கூறும் மற்ற அகராதிகளைப் போன்றதன்று. கடவுள்கள், முனிவர்கள், அரசர்கள், புலவர்கள், நூல்கள், பறவை – விலங்குகள் முதலான பல்வகைப் பெயர்களை அகரவரிசைப்படுத்தி, விரிவாக விளக்கம் கொடுத்திருக்கும் இதனை அகரமுதலிவல்லுநர்கள், கலைக்களஞ்சியத்தின் முன்னோடியாகக் கருதுகின்றனர். சில பெயர்களைப் பற்றி பல பத்திகளும், சில பெயர்களைப் பற்றிக் கட்டுரை அமைப்பில் பல பக்கங்களுங்கூட எழுதப்பட்டுள்ளன. சிறப்புடைய யாராவது, ஒருவரைப்பற்றியோ, அல்லது ஏதாவது ஒன்றைப்பற்றியோ, விரிவாகத் தெரிந்து கொள்ள வேண்டுமானால், இந்நூலின் துணையை நாடலாம்" (சுந்தர சண்முகனார். 1971, பக்.333).

இந்நூலின் முதற்பதிப்பு, 1910 ஆம் ஆண்டில் மதுரைத் தமிழ்ச்சங்கத்தாரால் நீள–அகலமுடைய 1050 பக்கங்களில், வெளியிடப்பட்டது. பின்னர் பேராசிரியர் ஆ. சிங்காரவேலு முதலியார், மேலும் பல செய்திகளை சேர்த்து 1934 பக்கங்களுடன், 1936 ஆம் ஆண்டு வெளியிட்டார்.

அகத்திய முனிவர் முதலாக, வௌவால் ஈறாகப் பல பெயர்கள், இந்நூலுள் விளக்கப்பட்டுள்ளன. அபிதான சிந்தாமணியின் பிற்சேர்க்கையில் சைவ, வைணவத் திருப்பதிகள், அரசமரபுகள் குறித்த செய்திகள், விரிவாக விளக்கம் பெற்றுள்ளன. தமிழாசிரியர்களுக்கும், சொற்பொழிவாளர்(களு)க்கும், எழுத்தாளர்(களு)க்கும், ஆராய்ச்சியாளர்(களு)க்கும், எப்பினில் வைப்பே போல், பெருந்துணை புரிந்துவரும், முதல் கலைக்களஞ்சிய நூல், அபிதான சிந்தாமணியெனில், மிகையாகாது.

## சாம்பசிவம் தமிழ்–ஆங்கில மருத்துவ அகரமுதலி (கி.பி. 1931)

இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய மருத்துவ அகரமுதலிகளுள், வரலாற்றுச் சிறப்புமிக்கதோர் தலையாய இடத்தைப் பெற்று மிகச்சிறந்த இந்திய மருத்துவக் கலைக்களஞ்சியமாக, சாம்பசிவம் தொகுத்த, "சாம்பசிவம் தமிழ்–ஆங்கில அகரமுதலி" திகழ்கிறது. ஈடிணையற்ற இவ்வகர முதலியின் சிறப்புப் பற்றி, "மருத்துவத் துறையில் அது நல்கும் அறிவு மதிப்பிடுந் தரத்ததன்று" (செ.சொ.பி.பேரகரமுதலி. முதன்மடல முதற்பகுதி – முன்னுரை. பக்.6) என்று மொழிஞாயிறு குறிப்பிட்டுள்ளார். இம்மருத்துவ அகரமுதலி ஐந்து பகுதிகளாக வெளிவந்துள்ளது. முதற்பகுதி சென்னையிலுள்ள சித்தர் அறிவியல் ஆய்வு நிறுவனத்தாரால், 1931 இல் வெளியிடப்பட்டது. முதலிரு பகுதிகளும் சித்தர் அறிவியல் ஆய்வு நிறுவனத்தாரால் வெளியிடப்பட்ட ஞான்றும், அச்சிட்டுச் செலவு முழுவதையும், சாம்பசிவம் ஏற்று, பெரும்பொருளிழப்பிற்கு உள்ளானார். மூன்றாம் பகுதியும், இவர்தம் காலத்திலேயே, பதிப்பிக்கப்பட்டாலும், பணி முற்றுப் பெறாமல், இறுதியில் தமிழகஅரசின் பொருளுதவியுடன் இப்பகுதி வெளிவந்தது."

நான்காம் பகுதியும், ஐந்தாம் பகுதியும் அறிவியல் அறிஞர் கோ. துரைசாமி (நாயுடு)வின் திருமகன், ஜி.டி. கோபால் அவர்களின் உறுதுணையால், அச்சிடப்பெற்றது. இத்தகைய பெருமுயற்சிகளின் விளைவாக இம் மருத்துவ அகரமுதலியின் ஐந்து பகுதிகளும் பதிப்பிக்கப்பட்டன.

### சிறப்புகள்:

20 ஆம் நூற்றாண்டில் தோன்றிய மருத்துவ அகராதிகளுள், தமிழ்–ஆங்கிலக் கலைக்களஞ்சியம் போன்ற அமைப்பினையுடைய சாம்பசிவம் மருத்துவ அகரமுதலி, சிறுசிறு மருத்துவ அகரமுதலிகளின் தோற்றத்திற்கு அடிப்படையாக அமைந்துள்ளது. சித்தமருத்துவக் குறிப்புகள் செறிந்தது. உடம்பினுள் உருவாகும் நோய்கள், நோய்தீர்க்கும் மூலிகைகள், சூரணம், இளகியம் செய்முறைகள் நிறைந்தது. தமிழ்மருத்துவக் குறிப்புகள், ஆயுள்வேதம், யுனானி மருத்துவச் செய்திகள் அனைத்தும் அகர வரிசைப்படுத்தி அமைத்துள்ள ஆசிரியரின் புகழ் தமிழ் கூறு நல்லுலகிலும், மருத்துவ உலகிலும் எஞ்ஞான்றும் நின்று நிலவும். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் பெரும் பகுதிகட்கான மருத்துவச் சொற்கள் அனைத்தும், சாம்பசிவனார் அரும்பாடுபட்டுக் களப்பணி செய்து தொகுத்துக் காத்தளித்த ஐந்து பகுதிகளிலிருந்தே எடுத்தாளப் பெற்றுள்ளன. "தமது அகரமுதலி உருவாக்கத்திற்குச் சென்னைப் பல்கலைக் கழக அகராதிக்கு அடுத்த நிலையில், சாம்பசிவம் மருத்துவ அகரமுதலியே பெரிதும் பயன்பட்டது" (செ.சொ.பி. பேரகரமுதலி. முதன்மடல முதற்பகுதி – முன்னுரை. பக்.6) என்று தேவநேயப் பாவாணர் நன்றி பாராட்டியுள்ளார்.

வாழ்வியலுக்குத் தேவையான அனைத்து மருந்துச்சரக்குகள் பற்றியும் செய்முறைகள் குறித்தும், ஒகநிலைகள் பற்றியும், உரைத்ததோடு அமையாது, சித்தர்கள் பற்றிய குறிப்புகளையும், சாம்பசிவம்பிள்ளை தொகுத்துக் கொடுத்துள்ளார். வெளிநாட்டாரும் அறிந்துகொள்ளும் வகையில், தமிழ்ப்பொருளுக்கான ஆங்கிலக் குறிப்புகளையும் கொடுத்துள்ளார். சித்தர்களியற்றிய பாடல் குறிப்புகளுடன், ஆங்கிலக் கலைக்களஞ்சிய அமைப்பில் சாம்பசிவம் பிள்ளையின் மருத்துவ அகரமுதலி அமைக்கப்பட்டுள்ளது.

இம்மருத்துவக் கலைக்களஞ்சியத்தில், மருத்துவ வேதியல் குறிப்புகளும், நிலைத்திணையியல் செய்திகளும்–, பல்வேறு பயன்பாட்டு மூலிகைகளும், அவற்றின் வேதிமத் தன்மைகளும், மருந்தாளும் முறைகளும், ஒருங்கே காணக்கிடக்கின்றன. இம் மருத்துவ அகரமுதலி தமிழ் மருத்துவ உலகிற்கு வாய்த்த மறக்கவொணா மாபெரு வைப்பு நிதியமாகும்.

## திருவாசக ஒளிநெறி – 1967

தேவார ஒளிநெறியினைத் தொகுத்த, வ.சு. செங்கல்வராயர் அவர்கள், மாணிக்கவாசகரின் திருவாசகத்திலுள்ள பல்வேறு அரிய செய்திகளையும்–, அருளியல் உணர்வுகளையும் இறைவன் தாமே முன்வந்து தம்மை ஆட்கொண்ட அருட்கொடையினைப் பற்றிய குறிப்புகளையும் – மகளிர்விளையாட்டுகளிற் பொதிந்துள்ள வாழ்வியற் கருத்துகளையும், பல்வேறு தலைப்புகளின் கீழ் அகரவரிசை செய்து அளித்துள்ள இந்நூல் இறையியற் கலைக் களஞ்சியம் போன்றுள்ளது. இந்நூலைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர், 1967 இல் வெளியிட்டுள்ளனர்.

## ஆராய்ந்தெடுத்த அறுநூறு பழமொழிகளும் அவற்றிற்கேற்ற ஆங்கிலப் பழமொழிகளும் – 1968

தெரிவு செய்த 600 பழமொழிகளை ஆங்கில மொழிபெயர்ப்புடன் திருவரங்க நீலாம்பிகையம்மையார் அவர்கள், 1968 ஆம் ஆண்டு, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் வாயிலாக வெளியிட்டுள்ளார்.

## கலைச்சொல்லகராதி – 1938

தமிழில் கலைச்சொற்கள் இல்லையெனும் குறையைப் போக்குதற் பொருட்டு, 1938–ஆம் ஆண்டில் திருநெல்வேலி – சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தால் பதிப்பிக்கப்பட்ட இவ்வகராதியில், ஆங்கிலத்தில் உள்ள கலைச்சொற்களுக்குத் தமிழ்ச் சொற்களால் பொருள் கூறப்பட்டுள்ளது. இவ்வகராதியின் கண்ணே

1) கணிதம் (Mathematics)
2) இயற்பியல் (Physics)
3) வேதியல் (Chemistry)
4) பயிர்நூல் (நிலைத்திணையியல்) (Botany)
5) விலங்கியல் (Zoology)
6) உடலியலும் நலவழியும் (Physiology and Hygiene)
7) நிலவியல் (Geography)
8) வரலாறு முதலியன (History, etc.,)
9) வேளாண்மை முதலான ஒன்பானியல்களிலுள்ள ஆங்கிலக்கலைச் சொற்கள், தமிழில் பொருள் விளக்கம் பெற்றுள்ளன.

## திருக்குறள் சொல்லடைவு (கி.பி. 1952)

திருக்குறள் சொல்லடைவு என்னும் இந்நூல் சாமி. வேலாயுதம் பிள்ளை அவர்களால் தொகுக்கப் பட்டது. திருக்குறள் முழுவதிலும் உள்ள பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் ஆகிய அனைத்துச் சொற்களும், வண்ணமாலை வரிசைப்படுத்தப் பட்டு 1952 ஆம் ஆண்டில், மொழியரசிப் பதிப்பகத்தின் வாயிலாக வெளியிடப்பட்டது.

இந்நூலில், திருக்குறளிலுள்ள அனைத்துச் சொற்களும், அகரவரிசைப்படுத்தப் பட்டிருப்பதோடு மட்டுமன்றி, எந்தெந்தச் சொல் எந்தெந்தப் பொருளில் எடுத்தாளப்பட்டுள்ளது என்ற விளத்தங்களும், கொடுக்கப்பட்டுள்ளன. குறிப்பிட்டதொரு சொல் பயின்றுவரும் அந்தக் குறளின் எண், பொருள், அனைத்தும் சீராகக் குறிக்கப்பட்டுள்ளது. ஆசிரியர் சுருக்கக் குறியீடுகள் பலவும் தந்து, நூலினைச் செம்மையான முறையில் விளக்கியுள்ளார்.

உலகப் பொதுமறையாகிய திருக்குறளில் குறிப்பிட்டதொரு சொல் பயின்றுள்ளதா எனக் கண்டறியவும், அவ்வாறு ஆளப்பட்டிருப்பின், அச்சொல் வள்ளுவர் காலத்தே, செய்யுள்வழக்கில் உள்ளதாவெனத் தெரிந்துகொள்ளுதற்கும், குறளில் அச்சொல்லாட்சி, எந்தெந்தப் பொருளில் ஆளப்பட்டுள்ளது என்பதை வரையறுக்கவும், இச்சொல்லடைவு உறுதுணை புரியும். எனவே இச்சொல்லடைவு நூல், “திருக்குறள் ஆராய்ச்சியாளர்க்கும், மொழியாராய்ச்சியாளர்க்கும், கால ஆராய்ச்சியாளருக்கும் ஒருசேரப் பயனளிப்பது இந்நூலென்று துணிந்து கூறலாம்” (சுந்தர சண்முகனார். 1971, பக்.354) சான்றாக, “அகம்” என்னும் சொல்லுக்குக் கொடுக்கப்பட்டுள்ள குறிப்புகள் வருமாறு:

“அகம் (ஒன்.பொ.பெ.) = நெஞ்சம் 277, 298, 708, 787, 830. [அகப்பட்டி= (தன்னிற்) சுருங்கிய பட்டி.] (ப.தொ.) 1074, [வையகம், வானகம்] (ஒன். இட.) = இடம் 101, 547, 1055”.

சுருக்கக் குறியீட்டு விளத்தங்களை, நூலிற்கண்டு கொள்க.

## பிற சிறப்பகராதிகள்

20 ஆம் நூற்றாண்டில் அனைத்து நிலைகளிலும், வகைகளிலும், மக்கள் வாழ்வியலில் தொடர்புடைய எதிர்ச்சொல், ஒலிக்குறிப்புச்சொல், அடுக்குமொழி முதலானவற்றை விளக்கும் பல்வேறு அகராதிகள் தோன்றின. அகராதி தொடர்பிலான பெயர்கள் குறித்த விளத்தங்களை, அகரமுதலிப்பட்டியல் கட்டுரையில் காண்க. இக்காலக் கட்டத்தில் கடவுளர்தம் சிறப்புப் பெயர்கள் – மங்கையர்தம் பெயர்கள், குறித்த – அகராதிகளை, மு. சதாசிவம் தொகுத்துள்ளதும் அகரமுதலி வரலாற்றில், குறிக்கத்தக்க செய்தியாகும்.

## தமிழுரிச் சொற்பனுவல் (கி.பி. 20, 1984)

இருபதாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதும், செந்தமிழுக்கு மேன்மேலும் அணிசெய்யும் பொருட்டு,

தமிழ்ச் சொற்களை மட்டுமே தெரிவுசெய்து தொகுத்துத் தமிழ் வளர்ந்துள்ள நிலையில், ஆக்கப்பெற்றதுமான இப்பெருநூல், கவிராச பண்டித இராமசுப்பிரமணிய நாவலரால் இயற்றப்பட்டது. செந்தமிழ்நயம் உணர்வார் மகிழும் வண்ணம் அமைத்த இந்நூல், செய்யுள் வழக்குச்சொற்களை மட்டுமே விளக்குவது; உலகியல் வழக்குச் சொற்கள், விரிக்கின் பெருகுமென்பதால் அவற்றைத் தவிர்த்து, ஆசிரியர் செய்யுள் வழக்கில் செந்தமிழ் சொற்களையே, தம்முடைய நூலுள் தந்துள்ளார். இக்காலத் தமிழ் வழக்கினை, இன்றைய இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப்புலமையாளர்க்கு நினைவூட்டும் வண்ணம், வடமொழிச் சார்பாய் வந்த சொல்வடிவங்களை முற்றிலும் தவிர்த்து, "தமிழுரிச்சொற் பனுவல்" என்னும் பழம்பெயரை ஆசிரியர் சூட்டியுள்ளார்.

தமிழ்ச்சொற்களின் இயல்பை, ஆசிரியர் பாயிரப்பகுதியின் கண்ணே, வரையறுத்துள்ளது வருமாறு:

"பயன்மிகு முரிச்சொல் பகர்நூல் பலவு
நயமுறத் தேர்ந்து நல்வகை நாடிப்
பிறமொழிச் சொற்களை நெறிப்பட நீக்கித்
தமிழுரிச் சொற்களின் றகுபொருள் விளங்கப்
பைந்தமிலுரிச்சொற் பனுவல் தந்தனன்
முதிர்புல மொளிர்மான் முருகநா வலனே"

"தக்க அடிப்படை நியமங்களுடன் ஆக்கப்பெற்ற இந்தத் தமிழுரிச் சொற்பனுவல், செந்தமிழ் அழகில் திளைப்பவருக்கு இன்பம் பயப்பதாய் உள்ளது" (மு. சண்முகம் பிள்ளை, பக்.93) செய்யுள் வழக்குச் சொற்களை மட்டுமே பாடற்பொருளாக எடுத்தாண்ட திறத்தினை "உலகியல் மொழிகளளவில வாகலின் செய்யுட்குரிய செப்புமிந்நூலே" - என்னும் பாயிரப்பகுதியில் ஆசிரியர் விளக்கியுள்ளார்.

## நூலமைப்பும், ஆசிரியர் சிறப்பும்

இந்தத் தமிழுரிச் சொற்பனுவல், திவாகரம், பிங்கலம் போல், நூற்பா நடையில் அமைந்தது. ஆயினும், பொது அமைப்பு மற்றும் தொகுதிப் பெயர்கள், திவாகரத்தை ஒத்த பல்பொருட் பெயர், செயற்கை வடிவப்பெயர் என இருபகுதிகளில் அமைக்கப்பட்ட பிங்கலந்தையின் அமைப்பு, தமிழுரிச் சொற்பனுவலில், பல்பொருட் பெயரில் அடக்கப் பட்டுள்ளன. கற்றறிந்தார் அனைவரும் பயன்கொள்ளும் பொருட்டு, ஒரு சொல் பல்பொருள் விளக்கம், அகராதி நிகண்டில் அமைக்கப்பட்டிருப்பதுபோல், ஆசிரியர் தந்திருப்பது, தமிழார்வலர்தம் நெஞ்சில் பதியுமாறு, எளிதாயுள்ளது.

இருபதாம் நூற்றாண்டில் சொற்கள் பல்லாற்றானும் பெருகித் தழைத்துள்ளதற்கு ஏற்றவாறு திவாகரம், பிங்கல நிகண்டுகளைக் காட்டிலும், கூடுதல் நூற்பா இத்தமிழுரிச் சொற்பனுவலில் இடம்பெற்றுள்ளது. தமிழ்மொழி தழைத்தோங்கிய நிலையில் ஆக்கப்பெற்ற "இப்பெருநூல், உரிச்சொற்பனுவல்களுள் சிறப்பிடத்தைப் பெற்றுத் திகழ்வதாகும்" (மு. சண்முகம் பிள்ளை, பக்.94).

இந்நூலாசிரியரான, கவிராசபண்டித, இராம சுப்பிரமணிய நாவலர், இன்தமிழ் மீதுள்ள ஆராக்காதலால், "மான்முருகனார்" என்னுஞ் செந்தமிழ்ப் புனைபெயர் கொண்டார். இவர்தம் தமிழுரிச் சொற்பனுவல் மனப்பாடம் செய்யும் நோக்கைக் காட்டிலும், ஒப்புநோக்கு முறையில் முதலிடம் பெற்றது" (மு. சண்முகம் பிள்ளை, பக்.94).

மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் பண்டிதர் பட்டம் பெற்ற இவர் செய்யுள் வடிவிலும் உரைநடையிலும் உருவாக்கிய படைப்புகள் பலவாகும். மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் உறுப்பினராய்த் திகழ்ந்த இவர், "தமிழ்விளக்கு" என்னும் தாளிகையையும் நடத்திவந்துள்ளார். தமிழ் மருத்துவத்துறையில் வல்லவராய்த் திகழ்ந்த இவர் இயற்றி வெளியிட்டுள்ள, உடற்கூற்றுப் படலம், நோயாராய்ச்சிப் படலம், மருந்துப்படலம், நோய் நீக்கற்படலம் முதலிடம் பெறத்தகும், சிறப்புமிகு நூல்கள் எனலாம்.

"செந்தமிழ் நிலையம்" என்னும் புத்தக வெளியீட்டுத் துறைவாயிலாகத் தம் நூல்கள் பலவற்றையும், வெளியிட்டுள்ளார். இறுதி மூச்சுவரைத் தமிழ்மொழி வளர்ச்சிக்காகப் பல்லாற்றானும், பாடாற்றிய இப்பெரியார், அச்சிட்டுவந்த தமிழுரிச்சொற் பனுவல்" நிறைவுறு முன்பே, மறைவுற நேர்ந்தமை தமிழுலகிற்கு ஆற்றவொண்ணாப் பேரிழப்பாகும். இவர் 1981 ஆம் ஆண்டு அக்தோபர் திங்கள் இயற்கையெய்தினார். தமது தந்தையார் ஆற்றிய அரும்பெருந்தமிழ்ப் பணியை, அன்னாரின் அருமை மகனாரான, இராசமோகன் என்பார், இடையறவுபடாமல் ஆற்றிவருகிறார். இவரது அரும்பணியின் விளைவாகத் தமிழுரிச் சொற்பனுவல் பதிப்புப் பணி - 1984 ஆம் ஆண்டு, முற்றுப் பெற்றது.

## சமயச் சொல்லகராதி – 1987
## முனைவர். சீ சசிவல்லி

சமயச்சொல்லகராதி சைவம், வைணவம், சமணம், பௌத்தம், கிறித்துவம், இசுலாம் முதலான சமயவழக்குத் தொடர்பில், சற்றொப்ப 7000 சொற்களைக் கலைக்களஞ்சியம், கல்வெட்டுகள், பல்வேறு அகராதிகள், பேச்சுவழக்கு ஆகியவற்றின் மூலமாகத் தொகுத்து உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வாயிலாகப் 1987 இல் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

ஒவ்வொரு சொல்லிலும் சமயம் பற்றிய குறிப்பும் எடுத்தாண்ட நூல் பற்றிய செய்தியும், அடைப்புக் குறிக்குள் அமைக்கப்பட்டுள்ளன. இச்சமயச் சொல்லகராதியில். வடசொற்கள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. இவ்வக ராதியில், பெரும்பாலான சொற்களைச் சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலி யினின்றும், மதுரைத் தமிழ்ச் சொல்லகராதி, இலக்கியச் சொல்லகராதிகள் மற்றும் பிற சமயச் சொல்லகராதி களினின்றும், எடுத்தாண்டுள்ளதாக நூலின் ஆசிரியர் பதிப்புரையிற் சுட்டியுள்ளார்.

காலங்காலமாகப் போற்றப் பெற்றுவரும் சமயங்கள் என்றும் அழியாமல், மறக்கப்படாமல் இருக்க, அவ்வச் சமயத்திலுள்ள கருத்துகளையும், குறிப்பட்ட சமயத்தார்தம் உணவுமுறை பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை இச்சமயச் சொல்லகராதி உணர்த்த முன்வந்துள்ளது சமயத் தொடர்புடைச் சொற்களுள், காட்டாக வருமாறு:

பெருந்திருப்பாவாடை = கடவுட்குப் படைக்கும் திருவமுது (பெரிய நிவேதனம்). (S I I. V. 365)

பெருந்தேவன் = தலைமைத் தெய்வம் (திவ். திருவாய். 4.6:4.)

பெருநாள் = ஒரு முகமதியப் பண்டிகை

பெருமடை = தெய்வங்களுக்கிடும் சோற்றுப்பலி. ''தெய்வப் பெருமடை கொடுத்து'' (பெரியபு. கண்ணப்ப. 19).

## திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலி
## A DRAVIDIAN ETYMOLOGICAL DICTIONARY
## பேரா. டி. பரோ
## பேரா. எம்.பி. – எமனோ 1961

ஆழங்கால்பட்ட ஆங்கிலப்புலமையும், பரந்துபட்ட திராவிட மொழிகளறிவும் நிரம்பிய எருதந்துறைப் பேராசிரியர் டி. பரோவும், கலிபோர்னியாப் பல்கலைக் கழகப் பேராசிரியர், எம்.பி. எமனோவும் ஒருங்கிணைந்து, 1961 இல் ''திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலி'' யை எருதந்துறை [ஆக்சுபோர்டு] நகரில், பதிப்பித்தனர். (Burrow and Emeneau) இவ்வகர முதலியில், தமிழ், தெலுங்கு, கன்னடம் முதலான பத்தொன்பது திராவிட மொழிகளிலுள்ள ஒத்த இனச் சொற்கள் மற்றும் அச்சொற்களுக்குரிய பொருள்கள் யாவும், ஆங்கிலத்தில் குறிக்கப் பட்டுள்ளன. திராவிட மொழிகளுக்குள், தமிழின் முதன்மை, சிறப்பாகக் குறிக்கப்பட்டுள்ளது.

## அமைப்பும் சிறப்பும்

மேனாட்டார் வெளியிட்ட சொற்பிறப்பியல் அகரமுதலிகளுள், தமிழை முதன்மைப்படுத்தி, அனைத்துத் திராவிடமொழி இனச்சொற்களை எடுத்துக்காட்டி விளக்கியுள்ள அகரமுதலிகளுள், இவ் அகரமுதலி – தலையாய இடத்தைப் பெறுகின்றதென்று, மொழிஞாயிறு தமது நூல்களுள் பலபடப்பாராட்டியுள்ளார். இவ்வகரமுதலியின் முதன்மைச் சிறப்பு, ''பல சொற்கட்கு இனச்சொல் (Cognates) காட்டுவதே'' (செ.சொ. அகரமுதலி முதன்மடலம். முன்னுரைப் பகுதி. பக்.6) யாகும். இச்சொற்பிறப்பியல் அகரமுதலி யில், 4572– சொற்களுக்கு, இனச்சொற்கள் இடம் பெற்றுள்ளன.

இவ்வகர முதலியில், முதலில் ஒரு தமிழ்ச்சொல் நிறுத்தப்பட்டுப் பொருள் கூறப்பட்டுள்ளது. அதனையடுத்து அதே பத்தியில், அந்தத் தமிழ்ச் சொல்லோடு, சற்றொப்ப ஒரே தோற்றமுள்ள வேறுசில திராவிட மொழிகளின் சொற்கள் அமைக்கப்பட்டு, பொருள் கூறப்பட்டுள்ளன. சில சொற்கட்குப் பொருள் விளக்குங்கால், திராவிட மொழிகளிலுள்ள, ஒத்த அமைப்புடைய சொற்களேயன்றி, இந்தோ–ஆரிய மொழிகளிலும், ஐரோப்பிய மொழிகளிலும், வழங்கும் சொற்களும் உடன்சேர்த்துப் பொருள்விளக்கம் செய்துள்ள பாங்கு, பரோ, எமனோ ஆகியோரின் மொழிப்புலமையைத் தெளிவுறுத்தும் எனலாம்.

இவ்வகரமுதலியில், 4572–தமிழ்ச்சொற்களும்–, 19–திராவிட மொழிகளிலுள்ள இனச்சொற்களும்–, தமிழிலிருந்து பிரிந்த தென்னிந்திய மொழிச் சொற்களும்–, தமிழிலிருந்து சென்று கலந்த வடமொழிச்சொற்களும்–, பதினைந்து இந்தோ–ஆரிய மொழிகளின் சொற்களும்– ஆங்கிலம் போன்ற,

ஐரோப்பிய மொழிச்சொற்களும்–, இடம் பெறச்செய்த பேரா. பரோ–எமனோவரைத் தமிழுலகம் என்றும் மறவாதெனலாம்.

இத்திராவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலியில், 2812 ஆம் சொல்லாகப் பதிவுபெற்றுள்ள "தெப்பம்" – என்னும் தமிழ்ச்சொல், திராவிட மொழிகளில் ஊடுருவி நிற்கும் திறனும்,–, வடஇந்திய மொழிகளிலும், ஐரோப்பிய மொழிகளிலும் – வழங்கும் சொல்லாட்சியும்–, மாட்சியும் வருமாறு:

Ta. teppam, teppal raft, float.

Ka. teppa id. Tu. teppa id. Te. teppa. tēpa-id.,

catamaran. cf. Skt. tarpa-, talpa-,

Pkt. tappa-. Mar. tāphā. tarāphā. cf. Periplus

இத்திராவிடச் சொற்பிறப்பியல் அகராதி, ஒப்பியல் அகரமுதலியாகத் திகழ்ந்த ஞான்றும், உலகமொழிகளில் தமிழ் ஊடாடிய சிறப்பினைத் தெளிவுறுத்தும் திறத்தினில் உயர்ந்து நிற்கின்றதென்பது, திராவிட மொழி வல்லுநர்தம் ஒப்பமுடிந்த கொண்முடிபாகும்.

## கிரியாவின் தற்காலத் தமிழகராதி தமிழ்–தமிழ்–ஆங்கிலம் 1992

முனைவர் இ. அண்ணாமலையைத் தலைவராகக் கொண்டு, முதன்மை ஆசிரியர் முனைவர். பா.ரா. சுப்பிரமணியன் மற்றும் நிருவாக ஆசிரியர் எசு. இராம கிருட்டிணன் முதலானோர் மேற்பார்வையில் இயங்கிய பதிப்புக்குழு மற்றும் அகராதிப் பணி உதவியாளர், கல்வியாளர்கள், பதினால்வர்தம் பேருதவியுடன்–, 1992 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டதே கிரியாவின் தற்காலத் தமிழகரமுதலி.

கிரியாவின் சிறப்பு மக்கள் வழக்கிலுள்ள தற்காலத் தமிழ்ச்சொற்களுக்குப் பொருள் வரையறைப்படுத்தியமையேயாகும். இவ்வகரமுதலி, மக்களின் பல்வகைத் துறைசார் சொற்களுக்கும் பேச்சுவழக்கு–, கொச்சை வழக்குச் சொற்களுக்கும்–, பொருள்கூறும் முயற்சியில் வெற்றி பெற்றுள்ளதற்கு எடுத்துக்காட்டாக, ஆறுபதிப்புகளைக் கண்டுள்ளது. இன்றைய மக்களிடையே வழக்கூன்றியுள்ள பேச்சுவழக்குச் சொற்கள், கிரியா அகரமுதலியில் மிகையாகச் சேர்க்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டு வருமாறு:

உம்மணாமூஞ்சி *ummaṇā-mūñji*, பெ. (n)

1. கலகலப்பாக இல்லாத ஆள்; a person who looks cheerless. 2. சிரித்த முகத்துடன் இல்லாதவர் (பே.வ.); morose - looking person.

2. உர்–என்று; *ur-eṉṟu* (பே.வ.) (adj) முறைப்பாக, இயல்புக்கு மாறாக, unfriendly, sullen. எப்பொழுதும் உர்ரென்று இருந்தால், உன்னிடம் யார் பேசுவார்கள். நான் என்ன சொல்லிவிட்டேன் என்று முகத்தை இப்படி உர்ரென்று வைத்துக்கொள்கிறாய் (பே.வ.)

மேற்குறித்த இரண்டு சான்றுகள், பேச்சுவழக்குத் தமிழில், சொல்லிலும் பொருளிலும் ஏற்பட்ட மாற்றங்களைத் தெளிவாக்கியுள்ளன. இன்றைய மொழி மாற்றங்களைப் பதிவுசெய்வதன் வாயிலாகத் தமிழ்ச்சொற்களை, மக்களிடையே நிலைபெறச் செய்யும் முயற்சியில், ஓரளவு வெற்றிபெற்ற தன்மையை, இவ்வகர முதலியின் ஆறு பதிப்புகள் உறுதிசெய்கின்றன.

### தமிழ்–தமிழ்–அகரமுதலி:

தமிழை இரண்டாவது மொழியாகப் பயில்வோருக்கு உதவும் பான்மையில், ஆங்கிலப் பொருள் தரப்பட்டுள்ளது.

### சிறப்புகள்

1. இக்காலத் தமிழுக்கென்றே உருவாக்கப்பட்ட முதல் அகரமுதலி.

2. இக்காலத் தமிழ்ச் சொல்லிலும், பொருளிலும் – நிகழ்ந்துவரும் மாற்றங்களை, முதன்முதலில் தக்க சான்றுகளுடன் நிறுவிய சிறப்பு, இவ்வகரமுதலிக்கே யுரியது.

3. இக்காலத் தமிழில் மக்கள் பயன்பாட்டிலுள்ள சொல் வழக்குகளையும், சொற்றொடர்களையும், பொருள் பொருத்தப்பாட்டுடன் இணைத்து நடைமுறைத் தமிழையும் படம்பிடித்துக் காட்டுவது, இதன் சிறப்பாகும்.

4. இக்காலத் தமிழ்ச்சொற்களுக் கிணையான ஆங்கிலச்சொல், ஆங்கிலப்பொருள் விளக்கம் தந்திருக்கும் முதல் அகரமுதலி.

5. இந்திய மொழிகளில் கணியச்சு செய்து உருவாக்கப்பட்ட முதல் அகரமுதலி

6. 15875–தலைப்புச்சொற்கள், வழக்குகள் முதலானவற்றுடன்,

7. 23,883 சொல்லாட்சிகள், சொற்றொடர்களுடன் இணைத்துக் காட்டப்பெற்றுள்ளதும், இவ்வகரமுதலியின் மற்றொரு சிறப்பாகும்.

8. இவ்வகரமுதலியில் உள்ள 209 சொல்விளக்கப் படங்களும், தமிழர்தம் நாகரிகம் பண்பாடு போன்றவற்றிற்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றன.

9. இக்காலத் தமிழின் சிக்கல்களைத் தீர்ப்பதற்கு இவ்வகரமுதலி ஓரளவு முயற்சி செய்துள்ளது.

### குறைபாடுகள்

1. அருஞ்சொற்களுக்குப் பொருள் கூறவில்லை.

2. கடுங்கொச்சை வழக்குகள் அளவிற்கதிகமாகக் குறிக்கப்பட்டுள்ளன.

3. வடசொற்கள் – உருதுமொழிச் சொற்கள் மிகுதியாக விரவியுள்ளன.

## மருத்துவக் கலைச்சொற்கள்

### மருத்துவர் (டாக்டர்) சாமிசண்முகம், முதல்பதிப்பு – திசம்பர் – 1996

பதினேழாயிரம் ஆங்கில மருத்துவக்கலைச் சொற்களுக்குத் தமிழ்ப் பொருள்கூறும் இம்மருத்துவக் கலைச் சொல்லகரமுதலி, பூங்கா பதிப்பகத்தில், 1996 ஆம் ஆண்டு, மருத்துவர் சாமி சண்முகம் அவர்களால் உரு வாக்கப்பட்டது. பொருண்மை நோக்கில் மிக அதிகமான ஆங்கிலச் சொற்களுக்கு, அனைவருக்கும் புலப்படும் வண்ணம், தமிழ்ப்பொருள் கூறும், முத னூலாகும். தமிழில் மருத்துவ நூல்களை உருவாக்கு வோர்க்கு, உறுதுணை புரியும் பான்மையில், இந்நூல் உருவாக்கப் பட்டுள்ளது. திருக்குறளில் உள்ள மருத்துவச் சொற்கள், இந்நூலில் இடம் பெற்றுள்ளன. சில ஆங்கில மருத்துவச் சொற்களுக்கு இணையான, ஒன்றுக்கு மேற்பட்ட தமிழ்ச் சொற்கள் கொடுக்கப்பட்டிருப்பது, ஆசிரியரின் ஆழங்கால்பட்ட தமிழறிவிற்கும் சான்று பகர்கிறது.

lalo 1) மழலைச்சொல், 2. மழலைப்பேச்சு, 3. மழலைமொழி.

(எ.கா.) ejection = 1. வெளியேற்றல், 2. பீய்ச்சல், 3. கழித்தல்.

efferent 1. விடுப்பி, 2. விடுப்பிழை, 3. புறநோக்கு, 4. வெளிவரும் விடுப்புநரம்பு.

இவ்வகராதியில் இயன்ற அளவு ஒலிபெயர்ச்சிச் சொற்களைச் சேர்க்காமல், பெரிதும் தமிழ்சொற்களையே சேர்த்திருப்பதும், குறிப்பிடத்தக்க சிறப்புகளில் ஒன்றாகும்.

மேலே குறிக்கப்பட்ட ஆங்கிலச் சொற்களுக்கு, சொல்லின் அடிப்படை இயல்பு குன்றாது மூன்று அல்லது நான்கு தமிழ்ப்பொருள்கள் கொடுக்கப்பட்டிருப்பதால், எதிர்காலத்தில் பொருண்மை குன்றாமல், சரியான சொற்கள் உருவாவதற்கு இந்நூல் களம் அமைத்துத் தருகிறது. பொதுமக்களிடையே வழக்கூன்றியுள்ள சொற்கள், முதன்மைப்படுத்தப்பட்டுள்ளன.

அறிவியற் சொற்களில் இழிசொல் என்ற பாகுபாடின்றி, கல்லாதார் நாவில் பயிலும் உறுப்புச் சொற்களும் – கொச்சைசொற்களும் பொருண்மை சிதையாவண்ணம் இந்நூலில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்நூலில் சிலவிடத்தில் சிற்றூர் மக்கள்தம் பயன்பாட்டிலுள்ள இயல்பான, பிறமொழிக் கலப்பில்லாத தெளிதமிழ்ச் சொற்கள் இடம் பெற்றுள்ளன.

தமிழ் தன் செயற்பாட்டுப் பரப்பினை, அறிவியல் தமிழில் காலூன்றி, வளமாக வளர்ந்து வருவதற்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாக, இம்மருத்துவக் கலைச் சொல்லகராதியை, மருத்துவர் சாமி சண்முகம் தமிழ்நாட்டு மருத்துவ உலகிற்கு அளித்துள்ளார்.

## 21 ஆம் நூற்றாண்டு அகராதிகள்
## வாழ்வியற் சொல் அகரமுதலி

### புலவர் இறைக்குருவனார் – முதற்பதிப்பு: 2004 (செப்டம்பர்) செபுதம்பர்

வாழ்வியலில் நாம் அன்றாடம் பயன்படுத்தும் துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு, நேரிணைத் தமிழ்ச் சொற்களை முறைப்படுத்தித் தொகுத்து, புலவர் இறைக்குருவனார் அவர்கள், தமிழ்நிலம் பதிப்பகத்தில் பதிப்பித்து, தமிழ்ப்பாசறையின் வாயிலாக, 2004–செபுதம்பரில் வெளியிட்டுள்ளார். உயர்தனிச் செம்மொழியாகிய தமிழ், வாழும் மொழியாக நாளும் வழங்க வழங்கும் மொழியாகத் திகழ்வதற்கு, மக்கள் பயன்படுத்தும் வாழ்வியல் துறைச்சொற்களின் இன்றியமையாத் தேவையினை, இவ்வகரமுதலி,

துறைதோறும் துறைதோறும் எடுத்துகாட்டி விளக்கியுள்ளது. மக்கள் பயன்பாட்டிலுள்ள பிறமொழிச் சொற்கள் தமிழ் வடிவிலேயே குறிக்கப்பட்டிருக்கின்றன. இருப்பினும், மயக்கத்திற்கு இடந்தராவண்ணம், அவற்றின் இயல்பான ஆங்கில வரிவடிவங்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

(எ.கா.) அலாரம் – (alarm) - மணி/எச்சரிக்கை ஒலி

ஆப்பிள் – (apple) - அரத்தி

உயில் – (will) - விருப்ப ஆவணம்

20 ஆம் நூற்றாண்டில் குறிப்பிடத்தக்க வகையில், தமிழகரமுதலி வரலாற்றில் மக்கள் பயன்பாட்டிலுள்ள அனைத்துத் துறைகளிலும் வழக்கிலுமுள்ள இன்றியமையாச் சொற்களை, ஆசிரியர் தொகுத்தளித்துள்ள திறம், இது போன்ற நூல்கள் மென்மேலும் பெருகி வளர்ந்து, தமிழ்மொழி செம்மையான முறையில் மக்களிடையே நிலைநிறுத்துதற்கு அடிகோலுகிறது.

## மருத்துவக் களஞ்சியப் பேரகராதி – 2006

ஆசிரியர் இன்றையத் தேவையைக் கருத்திற் கொண்டு, மருத்துவம் பயிலும் மாணவர்களுக்கும், மருத்துவர்க்கும் பயன்படும் நோக்கில், 1200–பக்கங்களில், பல்வகை நோய்கள், உடலுறுப்புகள் மற்றும் மருத்துவம் தொடர்பான ஆங்கிலச் சொற்களுக்குத் தமிழில் பொருள் கூறியுள்ளார். மருத்துவத்துறை தொடர்புடையாரனைவரும் பயன்கொள்ளும் வகையில், இவ்வகரமுதலி அமைந்துள்ளது.

## வட்டாரவழக்குச் சொல்லகராதி – 2004

வழக்கும் செய்யுளும் என்னும் இரண்டனுள் முற்பட்டதாம் வழக்கு – என்னும் தொல்காப்பியரின் இலக்கணக் கூற்றுக் கேற்ப, மக்கள்வழக்கே மொழியின் உயிர்ப்பிடம் ஆகும். கல்லாதார் வழங்கி வரும் நல்ல தமிழ்ச்சொற்கள் இலக்கண வளப்பமுடையது என்பதைத் தக்கச் சான்றுகளுடன் விளக்கி, இலக்கியங்களில் எவ்வாறெல்லாம் பயின்று வந்துள்ளது என்பதை இவ்வகராதி நன்கு தெளிவுடன் தெரிவித்திருப்பது மொழிநூல் ஆய்வாளர்களுக்கும், வேர்ச் சொல் காணும் வித்தகர்களுக்கும் கிடைத்த நற்பேறு எனலாம்.

தமிழ் நிகண்டு, அகரமுதலி, படைப்பிலக்கியம் முதலானவற்றில் இதுகாறும் இடம்பெறாத வட்டாரவழக்குச் சொற்கள் ஓரளவு, இவ்வகராதியில் செந்தமிழ் அந்தணர் இரா. இளங்குமரனாரால் எடுத்து விளக்கப்பட்டுள்ளது. மணிமுடியில் பதித்த மாணிக்கக்கற்கள் போன்று, இந்நூலின் கண் அமைந்துள்ள சொற்கள் வருமாறு:

**அண்ணாக்கு** : அண் என்பது மேல் என்னும் பொருளது. நாக்கின் மேலே ஒரு குறுநாக்கு இருப்பது எவரும் அறிந்தது. அது, அண்ணாக்கு எனப்படும். அதில் நீர் அல்லது குடிப்புப் படுமாறு தூக்கிக் குடித்தல் அண்ணாக்கக் குடித்தல் என வழங்கும். நாக்கைப் போல் மேல்நாக்கு வெளிப்படவராமையாலும் தெரியாமையாலும் உண்ணாக்கு (உள்நாக்கு) எனவும் படும். இது தென்மாவட்ட வழக்கு.

**அரியாடு** : அர், அரத்தம், அரி, அரு, என்னும் அடிச்சொற்களின் வழியாக வரும் சொற்கள் செவ்வண்ணத்தைக் குறித்து வரும். இம்முறையே அரியாடு என்பது சிவப்பு நிற ஆட்டைக்குறித்து, இடையர் வழங்கும் இலக்கிய வளமுடைய சொல்லாகும்.

**இழைவாங்கி** : நூலிழையைத் தன் காதில் வாங்கித் தையற்பணிக்கு உதவும் தையலூசியை இழை வாங்கி என்பது காரியாபட்டி வட்டாரவழக்கு. இழை = நூலிழை, இழை = இழுத்து ஆக்கப்படும் நூல். "பனுவல் இழையாக" என்பது நன்னூல். "இழை நக்கி நூல் நெருடும்" என்னும் திருவள்ளுவமாலைச் செய்யுள் வழக்கு இங்கு ஒப்பு நோக்கிற்குரியது.

**கவுளி**: கைப்பிடி யளவாம் வெற்றிலை "கவவுக்கை" என்பது சிலப்பதிகாரச் சொல்லாட்சி..

**குறியெதிர்ப்பு**: கொடுத்த பொருள் அளவுக்கு மீளக் கைம்மாற்றாகக் கொடுப்பது குறிஎதிர்ப்பு எனப்படுவது பழம்வழக்கு. புறநானூற்றுக் கால ஆட்சியது. அச்சொல் அப்பொருளில் அச்சுமாறாமல் கொங்குநாட்டு வழக்காக உள்ளமை, பயில வழங்கினால் மக்கள் வழக்கு இலக்கிய வழக்கு என இரண்டு இல்லை, ஒன்றே என்பதை மெய்ப்பிக்கும் "குறியெதிர்ப்பை நீரது" என்பது வள்ளுவம்.

**கோந்தை**: உள்ளீடு இல்லாத பனங்கொட்டையைக் கோந்தை என்பது பரமக்குடி வட்டார வழக்காகும். கோது என்பது பயனற்றது. "கோதென்று கொள்ளாதாம் கூற்று" என்பது. நாலடி உள்ளீடு இல்லாதது பயனற்றது. கோது → கோத்து → கோத்தை → கோந்தை.

**சீரை:** சிறப்புத் தரும் உடையைச் சீரை என்றன. 'சீரை சுற்றித் திருமகள் பின்செல' என்பது கம்பர் வாக்கு. சீரை, சீலை என வழக்கில் ஊன்றிவிட்டது. ஆனால் குமரி மக்கள் வழக்கில் சீரை என்பது அச்சுமாறாமல் சீரை யென்றே இன்றும் வழங்கக் காணலாம். மக்கள் வழக்கு, மாறா இலக்கிய வழக்காக நிலைத்ததற்குச் சான்று இன்னவை. மொழித்தூய்மை, மொழிவளம், பண்பாட்டுச் சீர்மை; வரலாற்றுப் பெருமை இலக்கணக் கொழுமை; இலக்கியநயம்; அணிநேர்த்தி; படைப்பாற்றல்; எளிமையில் அருமை; சுருக்கத்தில் பெருக்கம்; சுவைத் தேர்ச்சி; அறிவியல் ஆழம்; பட்டறிவுச் செழுமை முதலான பதின் மூன்று தலைப்புகளில், ஆசிரியர் வட்டாரவழக்குச் சொல் லகராதியை அமைத்துள்ளார். இவ்வகராதி தமிழ்மண் பதிப்பகத்தாரால் 2004 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கணிப்பொறிச் சொல்லகராதி

மாணவர்தம் பல்துறைக் கல்வி வளர்ச்சிக்கும் வாழ்வியல் வளர்ச்சிக்கும், மக்களின் முன்னேற்றத்திற்கும் பயன்படுவதும். தகவல் தொடர்பு ஊடகமாகத் திகழ் வதுமான கணிப்பொறி குறித்த சொற்கள், சொற் பொருண்மைகளை 328 பக்கங்களில், அகராதி அமைப்பில் ஆசிரியர் டி. வெங்கட்ராவ்பாலு என்பவர் உருவாக்கி யுள்ளார். 21 ஆம் நூற்றாண்டு தமிழகரமுதலி வரலாற்றில், இக்கணிக்பொறி அகராதி, மக்களிடையே செல்வாக்குப் பெற முயன்றுள்ளது எனலாம்.

### அகராதியின் சிறப்பு:

இக்காலப் பயன்பாட்டினையும் தேவையையும், ஆசிரியர் கருத்திற்கொண்டு, இவ்வகராதியை அமைத்துள்ளார். கணிப்பொறி கற்பவரும், கற்பிப்பவரும், கணிப்பொறியின் பயன்பாட்டிலுள்ள சொற்களை, எளிதில் அறிந்துகொள்ளும் வகையில் இவ்வகராதி உருவாக்கப் பட்டுள்ளது.

மக்களிடையே கணிப்பொறி மிகவும் பயன் பாட்டிலுள்ளதால், 21 ஆம் நூற்றாண்டில், கணிப்பொறி தொடர்பான ஆங்கிலச் சொற்களுக்குத் தமிழ்ப் பொருண்மைகளைக் கருத்திற்கொண்டு, வேறுபல கணிப்பொறியகராதிகளும் உருவாக்கப்பட்டுள்ளன.

## கலைக்களஞ்சியம் (Encyclopaedias)

ஒரு துறைபற்றியோ அல்லது பல துறைகள் பற்றியோ செய்திகளை, பல கட்டுரைத் தலைப்புகளில் அகரவரிசையில் உள்ளடக்கிய நூற்றொகுதியே கலைக்களஞ்சியம் எனப்பெறும். அனைத்துக் கலைகளைப் பற்றிய செய்திகளையும் ஒரிடத்தே, அனைவரும் பார்த்து அறிந்துகொள்ளும் வண்ணம் அமைக்கப் பெறுவதாகும். நெல்லைத் திரட்டி வைக்குமிடம் நெற்களஞ்சியம் போல் கலைகள் தொடர்பான செய்திகளைத் தொகுத்துத்தரும் நூலே, கலைக்களஞ்சியம் எனலாம்.

மனிதனின் அறிவு வளர்ச்சியைப் படம் பிடிக்கும் மொழியில் கருவியாகக் கலைகளஞ்சியங்கள் அமைந்துள்ளன. மனிதனின் வியத்தகு ஆற்றலையும் செயல்தன்மை உருவாக்கிய விரிந்த அறிவின் பரப்பையும் கோடிட்டுக் காட்டுவதையே, கலைக்களஞ்சியங்கள் குறிக்கோளாகக் கொண்டுள்ளன. மனிதனின் அறிவுவளர்ச்சி, பொருள் வளத்தாலோ இடத்தாலோ, காலத்தாலோ, கட்டு படுத்தக்கூடியதன்று. அனைத்திற்கும் அப்பாற்பட்டுத் திகழும் மனிதனின் அறிவுச்செல்வத்தை, எஞ்ஞான்றும், எக்காலத்தும், எல்லோரும் பெற்றுச்சிறந்து வாழ்வதற்குரிய, ஒப்பற்ற வழிகாட்டிகளாகப் பல்துறைக் கலைக்களஞ்சியங்கள் திகழ்கின்றன. மனிதகுல வரலாற்றில், அங்கிங் கெனாதபடி, எங்கும் பரந்துபட்டு ஒளிரும் அறிவின் பரப்பை அனைவரும் அறிந்து, வளர்ந்தோங்கி வாழ்வதற்கு, உறுதுணைபுரிபவையே இக்கலைக் களஞ்சியங்கள் எனில் மிகையன்று.

தமிழ்மொழியின் ஆய்வுக்கும், வளர்ச்சிக்கும், அறிவூக்கத்திற்கும், கலைக்களஞ்சியங்கள் அருந் தொண்டாற்றுகின்றன.

## கலைக்களஞ்சியங்களின் தோற்றமும் சிறப்பியல்புகளும்

தொல்காப்பிய உரியியல், நூற்பாவடிவில் சொற்பொருளுரைக்கும் நிகண்டுகட்டு மூலமா யிருந்ததுபோல், நிகண்டுகள் பிற்காலத்தில் தோன்றிய அகரமுதலிகட்கும், பொருளை (thing) விளக்கிக் காட்டும் அறிவின் பெட்டகங்களாகத் திகழும், கலைக் களஞ்சியங்களின் தோற்றத்திற்கும் அடிகோலின என்று, அகரமுதலி வல்லுநர் கருதுவர். தமிழகரமுதலி வரலாற்றில் கி.பி. 8 ஆம் நூற்றாண்டில் தோன்றிய திவாகரநிகண்டு, பிற்காலத்தில் தோன்றிய ஏனைய நிகண்டுகட்கும், பிற அகரமுதலிகட்கும், 19 ஆம்

நூற்றாண்டின் பிற்பகுதியில் முகிழ்த்த கலைக்களஞ்சியங் கட்கும், களம் அமைத்துத் தந்தது. திவாகர நிகண்டில் அகரமுதலிப் பண்பும், சொல்லால் விளக்கப்பெறும் பொருண்மைக் கூறும், பொலிந்து திகழ்ந்ததற்கு எடுத்துக்காட்டாகத் திவாகரர் கூறுவது :

"பொருளின் பொலிவும் சொல்லின் செல்வமும்
தொடையுந் தொடைக்கண் விகற்பமும் துதைந்து
உருவக முதலாம் அலங்காரம் உட்கொண்டு
ஓசை பொலிவுற் றுணர்வோ ருளங்கட்கும்
மாகட லமிழ்தம்போற் பாடுதல் மதுரகவி"

இந்நிகண்டு நூற்பாவின் வாயிலாக, அறிவின் ஊற்றமாகத் திகழும் கலைக்களஞ்சியங்கள் 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உருவாதற்குப் "பொருளின் பொலிவும் சொல்லின் செல்வமும்" என்ற திவாகர நூற்பா வித்திட்டதாகலாம்.

பொதுவாக, நிகண்டுச்செய்யுட் கூண்டில் சிறையிருந்த சொற்குயில்கள், பின்னாளில், அகரமுதலிக் காவில் சிறகு விரித்து உலாவந்தன. 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து, கலைக் களஞ்சியங்கள் என்னும் சொற்களஞ்சியங்களைச் சொந்தமாக்கிக் கொண்டன எனலாம். தமிழிற் சிறப்பிடம் பெறும் கலைக்களஞ்சியங்களின் தோற்றம் பற்றி, "நிகண்டுகளில் காணப்பெறும் சொற்பொருள் கூறும் பண்பும், கலைக்களஞ்சியப் பண்பும் முறையே, அகராதிகள், கலைக்களஞ்சியங்கள் எழ அடிகோலின" என்று, அகரமுதலி வல்லுநர் வ.செயதேவன் குறிப்பிட்டுள்ளார். பொதுவாகக் கலைக்களஞ்சியங்கள், மக்களின் வாழ்க்கைக்கு இன்றியமையாத அறிவுச் செய்திகளையும், வாழ்வியற் கூறுகளையும் உள்ளடக்கிய கருவூலங்கள் எனில் மிகையன்று.

## கலைக்களஞ்சியங்களின் தேவை :

நிகண்டுகளின் வாயிலாகச் சொற்கட்குரிய தெளிபொருளைத் தெரிந்துகொண்ட பழங்காலத்து மாணவர்கள் இலக்கியங்களில் சொல்லப்பட்ட பெயர்கள், கதைகள், வரலாறுகள் பழக்க வழக்கங்கள் முதலான வற்றையும், வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப் படும், ஏனைய அறிவுச் செய்திகளையும், தத்தமக்குப் பாடஞ்சொல்லும் ஆசிரியர் வாயிலாக அறிந்து கொண்டனர். தொன்றுதொட்டு, பலகாலமாக உலகின் பல பகுதிகளில் நிலவிய இந்தக் கல்விமுறை, அண்மைக் காலத்தில் பெரிய மாறுதல்களுக்கு உட்பட்டது. இப்புதிய கல்விமுறையின் கண்ணே காணப்படும் செய்திகளை, மக்கள் தத்தமக்கு ஏற்றவண்ணம், வேண்டியவற்றை உடனடியாக எளிதில் அறிந்து கொள்ளுதற்கு, ஒரு வழி காணவேண்டிய கடப்பாடும், நெருக்கடியும் ஏற்பட்டது. வெவ்வேறு நாடுகளில், வெவ்வேறு காலக்கட்டங்களில் விளைந்த, இந்த நெருக்கடியைக் களைய வேண்டிய தேவை, 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், தமிழகத் தமிழ்ப் பயிற்சியைப் பொறுத்தவரை மிகுதியாக உணரப்பட்டது. இந்த உணர்ச்சியின் விளைவாக, மாணவர்தம் தேவையை நிறைவு செய்தற்பொருட்டு, முகிழ்த்தவையே கலைக்களஞ்சியங்கள் எனலாம்.

## தமிழில் கலைக்களஞ்சியங்கள்

தமிழ்க்கலைக் களஞ்சியங்களின் முன்னோடி யாகத் திகழ்வது, 1902 ஆம் ஆண்டு இயற்றப்பட்ட அபிதான கோசம் ஆகும். இக்கலைக்களஞ்சியம் அன்றைய மாணவர்தம் இலக்கியப் பயிற்சிக்கு, உறுதுணை புரிந்தது. தொன்மம், தொல்வரலாறு, இலக்கியச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்ட இந்நூல், இலக்கியக் களஞ்சியமாக இலங்குவதாம் தமிழ் இலக்கியங்களோடு தொடர்புடைய பொருளை மட்டும் விளக்கும் 'சிறப்புப் பெயரகராதி' 1906 இல் உருவாக்கப்பட்டது. அடுத்து, ஓரளவு முழுமை யானதும் முதன்மையானதுமாய்த் திகழ்ந்த அபிதான சிந்தாமணி, இலக்கியம் தொடர்பான தொன்மச் செய்திகளையும், அறிவியல் துறைப்பொருள்களையும் தன்னகத்தே கொண்டு, தமிழின் முதல் கலைக்களஞ்சிய முயற்சியாக 1910 இல், ஆ. சிங்காரவேலு அவர்களால் தொகுக்கப் பட்டது. இதைத் தொடர்ந்து தோன்றிய, இலக்கிய அகராதி, தொகையகராதி, சிறப்புப்பெயரகராதி, புலவரகராதி போன்றவை, கலைக்களஞ்சியப் பண்புகள் மிளிரும் பாங்கினில் உருவாக்கம் பெற்றன.

இந்திய நாடு விடுதலை பெற்ற பிறகு தமிழறிஞர்களின் நாட்டம் கலைக்களஞ்சியம் உருவாக்கத்தில் மிகுதியாகச் சென்றது. ம.ப. பெரியசாமி அவர்களைத் தலைமைப் பதிப்பாசிரியராகக் கொண்டு, முன்னைச் சென்னை மாநிலத்தின் கல்வியமைச்சராய்த் திகழ்ந்த தி.சு. அவினாசிலிங்கம் அவர்களது பெருமுயற்சியால் உருவாக்கப்பட்ட தமிழ்வளர்ச்சிக் கழக அறிஞர் குழுவினரால் 1954 இல், தமிழ்க்கலைக் களஞ்சியத்தின் முதல் தொகுதி வெளியிடப்பட்டது.

பத்தாம் தொகுதியினை, 1968 இல், தமிழ் வளர்ச்சிக்கழகம் வெளியிட்டு, நிறைவு செய்தது.

## குழந்தைகள் கலைக்களஞ்சியம்

தமிழகரமுதலி வரலாற்றில், கலைக்களஞ்சியத்தின் ஒரு பிரிவாகக் குழந்தைகள் கலைக்களஞ்சியங்கள் 1968–க்குப் பின்பு ஒரு சில ஆண்டுகளில் வெளியிடப்பட்டன. தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரே, இவ்வரும் பணியினையும் மேற்கொண்டனர். இக் குழந்தைகள் கலைக்களஞ்சியம் பத்துத் தொகுதிகளை உள்ளடக்கியது.

பிற இந்திய மொழிக் கலைக்களஞ்சியங்களை விடத் தமிழில் தோன்றிய குழந்தைகள் கலைக்களஞ்சியத் தொகுதிகள் பொருளமைப்பு, படங்கள், செய்தித்தொகுப்பு முதலான பல்வகைக் கூறுபாடுகளுடன் விளங்குகின்றன. படிக்கும் குழந்தைகளின் அகவை, ஆர்வம், மொழித்திறன், தேவை, ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு, பொதுமை, எளிமை கொண்ட செய்திகளைப் படங்களுடன் கூடிய விளக்கம், தனிப்பெருஞ்சிறப்புகள் அனைத்தும் 20 ஆம் நூற்றாண்டில் தமிழ்வளர்ச்சிக் கழகம் வெளியிட்ட பத்துக்கலைக் களஞ்சியத் தொகுப்புகளில் மிளிர்ந்தன எனலாம்.

## வாழ்வியற்களஞ்சியம் – 1991

கடந்த கால் நூற்றாண்டுகளில் மன்பதை வாழ்வியலில் மலர்ந்துள்ள பல்வேறு அறிவுவளர்ச்சித் துறைகளில், அன்னைத்தமிழ் பெற்ற அளப்பரும், அறிவுச் செல்வத்தை, அனைவரும் துய்த்தற் பொருட்டு தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தாரால் உருவாக்கப்பட்ட களஞ்சிய மய்யத்தின், வெளியீடே வாழ்வியற் களஞ்சியமாகும். இக்களஞ்சியம் 14 தொகுதிகளை உள்ளடக்கியது. 1991 ஆம் ஆண்டு முதல் இத்தொகுதிகள், வெளிவர தொடங்கின. இப்பதினான்கு தொகுதிகளிலும், 15,000–தலைப்புகளிற் காணப்படும் கட்டுரைகள், சிறுகட்டுரைகள், குறிப்புகள் முதலானவற்றில் வாழ்வியற் கூறுகள் விளக்கப்பட்டுள்ளன. பல்வகையான வாழ்வியல் செய்திகளைத் தன்னகத்தே கொண்ட 15,000 – தரவுகளும், சற்றொப்ப 700 தமிழறிஞர்களாலும், வல்லுநர்களாலும், எழுத்தாளர்களாலும், ஆய்விற்குட் படுத்தப் பட்டவையாகும். தமிழகரமுதலி வரலாற்றில், தமிழ்வளர்ச்சிக் கழகத்தின் சார்பில் வெளியிடப்பெற்ற கலைக்களஞ்சியம், ஏறத்தாழ 7500 பக்கங்களில் 10 தொகுதிகளாக வெளிவந்துள்ளது. அவற்றுள், முதல் தொகுதி 1947 இல் தொடங்கப்பெற்று, 7 ஆண்டுகள் கழித்து, 1954 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. ஏனைய ஒன்பது தொகுதிகளும், 1968 வரையுள்ள இடைப்பட்ட ஆண்டுகளில் வெளிவந்தன. இவை 1968–வரையுள்ள செய்திகளை, உள்ளடக்கமாகக் கொண்டுள்ளன.

இவ்வாழ்வியற் களஞ்சியம் இன்றுவரை வளர்ந்துள்ள கோட்பாடுகள், கொள்கைகள், கருத்துகள், செய்திகள் ஆகியவற்றை, தன்னகத்தே கொண்டுள்ளது. வாழ்வியற் களஞ்சியத்தின் 14 தொகுதிகளும் தரத்திலும், திறத்திலும், பொருளாலும், சொல்லாலும், அரிய வாழ்வியற் கருவூலமாகத் திகழ்கின்றன. மொழி, மொழியியல், கல்வியியல், மெய்ப்பொருளியல் வரலாறு, தொல்லியல், கல்வெட்டியல், உளவியல், சமூகவியல், மேலாண்மையியல், பொருளியல், வணிகவியல், வங்கியியல். மக்கள்தொகையியல், மானிடவியல், அரசியல், சட்டவியல், புவியியல், கவின்கலையியல், நாட்டுப்புறவியல், விளையாட்டியல் முதலான பல்வகைத் துறைகளிலும் தொகுக்கப்பட்ட அனைத்துக் கட்டுரைகளும், ஆழமாகவும், அகலமாகவும், நுட்பமாகவும், திட்பமாகவும் திகழ்கின்றன.

சென்னைத் தமிழ்வளர்ச்சிக் கழகத்தாரால் வெளியிடப்பெற்ற முதல் தொகுதியிலுள்ள வாழ்வியல் தலைப்புகள் அனைத்தும், எடுத்துக் கொள்ளப்பட்டு, அவை இக்கால வளர்ச்சியைத் தெளிவுறுத்தும் பாங்கினில், விரிவுபடுத்தப்பட்டுள்ளன. அன்றியும், ஏறத்தாழ இருமடங்கு புதிய தலைப்புகள் சேர்க்கப் பட்டுள்ளன.

கட்டுரைகளில் கூடியமட்டில் கிரந்தஎழுத்துகள் தவிர்க்கப்பட்டுள்ளன. வேற்றொலிச் சொற்கள் வருமிடங்களில் தமிழ் மரபுக்கேற்ப, ஒலிமாற்றம் செய்யப்பட்டுள்ளன. அதனை விளங்கிக் கொள்ளும் வகையில், ஆங்காங்கு உரிய ஆங்கிலச்சொற்கள் தரப்பட்டுள்ளன.

(எ.கா.) ஸ்பெயின் – இசுபெயின் (Spain)
பாகிஸ்தான் – பாகிசுத்தான் (Pakistan)

பிறமொழிச்சொற்கள் வரும்போது, தமிழிலக்கண மரபுப்படி, சொல்லுக்கு முதலிலும், ஈற்றிலும் வரும் தமிழ்எழுத்துகள் ஆளப்பட்டுள்ளன.

(எ.கா.) டாலர் – தாலர் (Dollar)
ரூபா – உரூபா
டென்மார்க் – தென்மார்க் (Denmark)

பதினான்கு தொகுதிகளிலும் ஆளப்பட்டுள்ள தமிழ்க்கலைச் சொற்களுக்குப் பொருத்தமான, ஆங்கிலக் கலைச்சொற்கள், ஒவ்வொரு தொகுதியின் இறுதியில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

(எ.கா) அகக்கட்டுமானம் = infrastructure
அகச்சீராய்வு = internal check
அடிக்கருத்து = theme
தடையிலா வாணிகம் = free trade
வளப்பங்கீடு = allocation of resources

"பெரும்பாலும், கட்டுரைகளில் சுட்டப்பெற்றுள்ள புள்ளிவிவரங்கள், 1984 ஆம் ஆண்டுவரை கிடைத்தவையாகும்" (நா. பாலுசாமி, வாழ்வியிற் களஞ்சியம் தொகுதி – ஒன்று. முன்னுரைப்பகுதி பக். vii ).

## அறிவியல் களஞ்சியம் – 1986

திருவள்ளுவராண்டு – 2017 – ஆடித்திங்கள் (சூலை 1986) முதல், தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழகத்தின் சார்பாகப் பத்துத் துறைகளில், 10,000 கட்டுரைத் தலைப்புகளுடன், 20–தொகுதிகள், பி.எல். சாமி அவர்களை முதன்மைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளியிடப்பட்டன. இத்தொகுதிகளில் அண்மைக்காலத்து அறிவியற் கண்டுபிடிப்புகளும், அறிவியல் நிகழ்வுகளும் திறம்படச் சுட்டப்பட்டுள்ளன. விண்வெளித் தரவுகள், செவ்வாய்க்கோள் குறித்த செய்திகள், செயற்கைக் கோள்கள் பற்றிய செய்திகள், எதிர்கால விண்வெளிக் கலப்பொறிகளாகக் காந்தப்பாய்ம மின் எந்திரங்கள் பற்றிய தரவுகள், விண்வெளி ஆராய்ச்சிகள் குறித்த செய்திகள் முதலானவை அறிவியல் களஞ்சியங்களில் இடம்பெற்றுள்ளன. கணிப்பொறித்துறை வளர்ச்சி, துருவவெளி ஆய்வுகள், ஆழ்கடல் தேட்டங்கள், சூரியஆற்றல், எரிபொருள் ஆகியவற்றின் பரவலான பயன்பாடுகள் குறித்த செய்திகளும், இக்களஞ்சியத் தொகுதிகளை அணிசெய்கின்றன.

பொதுவாக, உலகின் புறத்தே நிகழும் அனைத்து வகை இயக்கங்களும், சிறப்பாக வான்பொருள்களின் இயக்கம், நிலக்கோளப் பொருள்களின் இயக்கம் முதலானவற்றில் வெளிவந்துள்ள தரவுகளும், செய்திகளும், அறிவியல்களஞ்சியத்தை வலம் வருகின்றன. வேதியல், இயற்பியல், பொறியியல், மருத்துவம் போன்ற பல்துறைச் செய்திகளும், இக்களஞ்சியப் பகுதிகளை அழகுபடுத்துகின்றன எனலாம்.

உலகோர்தம் அறிவு வளர்ச்சிக்காகப் பல்துறைச் செய்திகளையும் அறியவேண்டியது இன்றியமையாத வாழ்க்கைத் தேவையாக இன்று ஆகிவிட்டது. இத்தேவையை நிறைவேற்றும் பான்மையில் அனைத்துத்துறைச் செய்திகளையும் பிழிந்து, நிரல்படக் கொடுக்கும், அரிய கருவிநூல்களாக அறிவியல் களஞ்சியங்கள் அமைந்துள்ளன. ஓரளவு கல்வியறிவுள்ள மனிதனும், அடிப்படைச் சான்றுகளுடன் கூடிய அறிவியலறிவை வளர்த்துக் கொள்வதற்கு பெரிதும் துணைபுரியும் பெட்டகங்களாகவும், இக்களஞ்சியப் பகுதிகள் அமைந்துள்ளன. கல்வியாளர்களின் நிலையான, தொய்வுபடாத அறிவுத்திறனுக்கும், மாணாக்கர்தம் படிப்படியான அறிவு வளர்ச்சிக்கும் உறுதுணைபுரியும் பான்மையில் அனைவரும் குறுகிய காலத்தில், பல்துறை அறிவினைத் தேடி அலையாது பெருமுயற்சியின்றி, இருந்த இடத்திலிருந்துகொண்டே தெரிந்துகொண்டு, அறிவுவளர்க்கும் மூலபண்டாரங் களாக அறிவியற் களஞ்சியங்கள் அமைந்துள்ளன.

அறிவியல் முன்னேற்றம் கடந்த முப்பது ஆண்டுகளில். வியக்கத்தக்க வகையில் வளர்ந்துள்ளதை அனைவருக்கும் விளக்கும் திறத்தினில், புதிய அறிவியல் முன்னேற்றங்களைத்திரட்டி, தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழகம் அறிவியல் களஞ்சியங்களைத் தொகுத்துள்ளது.

தமிழ்மொழியின் வாயிலாக அறிவியலின் பல்துறைப் படிப்பினை மேற்கொள்வோருக்கு அறிவியல் கலைக்களஞ்சியப் பகுதிகள், அரும்பெருந்துணையாய் அமைந்துள்ளன. கீழ்க்காணும் பத்துத் துறைகளை அடிப்படையாகக் கொண்டு, அறிவியல் களஞ்சியங்கள் உருவாக்கப்பட்டன. அவை வருமாறு:

1. பொதுப் பொறியியல்
2. மின், எந்திரப்பொறியியல்
3. பொது மருத்துவம்
4. அறுவை மருத்துவம்

5. கணிதம், புள்ளியியல், மக்கள் தொகையியல்
6. இயற்பியல்
7. வேதியியல்
8. உயிரியல், வேளாண்மை, சூழ்நிலையியல்கள்
9. கடலியல், கப்பல் கட்டுதல்
10. ஆற்றல், அறிவியல்

அறிவியல் களஞ்சியத்தில், அறிவியல் கோட்பாடும், இயற்பியல், வேதியல், வானியல், கணிதம், புள்ளியியல், மக்கள் தொகையியல், நிலவியல், நிலவரையியல், வானிலையியல், கடலியல், பொறியியல், தொழில்நுட்பத்துறைகள், நிலைத்திணையியல் (தாவர வியல்), வேளாண்மையியல், கானியல், தோட்டக்கலை, சூழலியல், விலங்கியல், உடல் இயங்கியல், உயிர்வேதியல், மருத்துவம், கால்நடை மருத்துவம், சித்தமருத்துவம், முதலான இயற்கை அறிவியல் சார்ந்த அறிவுத் துறைகளும் உள்ளடங்குகின்றன.

### அறிவியல் களஞ்சியச்செய்தி மூலங்கள் :

ஆங்கிலத்தில் அமைந்த 'மெக்ராஉறில்' அறிவியல் தொழில்நுட்பக் களஞ்சியத்தின் அமைப்பைப் பின்பற்றி, அறிவியல் களஞ்சியப் பகுதிகள் அமைக்கப்பட்டுள்ளன. அறிவியல் தொழில்நுட்பக் களஞ்சியம் மேலும் பல அறிவியல் சிறப்புத்துறைக் களஞ்சியங்களையும், பல்வேறு மேற்கோள் நூல்களையும், பார்வை நூல்களையும், மூலப்பாட நூல்களையும், உலகளாவிய செய்திகளையும், இந்திய, தமிழகச் செய்திகளையும் உள்ளடக்கி, இக்களஞ்சியப் பகுதிகள் வடிவமைக்கப்பட்டுள்ளன.

### கலைச்சொற்கள்

அறிவியல் களஞ்சியத்தின் ஒவ்வொரு தொகுதியின் இறுதியிலும், கொடுக்கப்பட்டுள்ள கலைச்சொற்கள் மாணவர்கட்கும், ஆய்வாளர்கட்கும் பயன்படும் பாங்கினில் அமைந்துள்ளது.

(எ.கா)

| | | |
|---|---|---|
| | அகஆற்றல் | : Internal energy |
| | அக ஒட்டுண்ணி | : enotoparasites |
| | சுருளி | : spiral |
| | உணர்கொம்பு | : antenna |

## தமிழில் வெளிவந்துள்ள கலைக்களஞ்சியங்களின் சிறப்புக் கூறுகளும்

### அறிவியல் கலைக்களஞ்சியம் :- 1993

இக்களஞ்சியத்தின் ஆசிரியர் மணவை முத்தபா ஆவார். மீரா பதிப்பகத்தாரால் 1993 ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட இக்கலைக்களஞ்சியத்தில் பல சிறப்புக்கூறுகள் இடம் பெற்றுள்ளன. இதன் அமைப்பு முறையில் ஆங்கில கலைச்சொற்களுக்கு இணையாகத் தூய தமிழில் பொருள் கூறுவதோடு மட்டுமின்றி, அதற்கு விளக்கமும் கொடுக்கப்பட்டுள்ளது.

பல சொற்களுக்குப் பொருள் விளக்கம் கூறப்பட்டுள்ளமையால், பாராட்டப்பட வேண்டிய கலைக்களஞ்சியமாக இவ்வறிவியல் கலைக்களஞ்சியம் அமைந்துள்ளது.

### அறிவியல் தகவல்களஞ்சியம் : 1996

இக்களஞ்சியம் ஆங்கில, நூலாகிய 'Illustrated Encyclopaedia of facts and figures' என்பதன் தமிழாக்கமாகும். இந்நூலை ஓரியண்ட் லாங்மன் லிமிடெட் என்ற பதிப்பகம் வெளியிட்டுள்ளது. முதற்பதிப்பு 1996 ஆம் ஆண்டும்; மறுபதிப்பு 1998 ஆம் ஆண்டும் வெளியிட்டுள்ளது. இந்நூலில் அறிவியல், மானிடவியல், வான்வெளியியல் போன்றவை, விளக்கப்படங்களுடன் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. சிறுத்தையின் அதிக வேகம் மணிக்கு 101 கி.மீ. என்பது" போன்ற பொதுஅறிவு சார்ந்த விடைகளையும், இக்களஞ்சியம் உள்ளடக்கியிருப்பது சிறப்பாகும்.

இத்தகு சிறப்புமிகு கலைக்களஞ்சியங்கள் பல இக்காலக்கட்டத்தில் தோன்றியுள்ளன. அவற்றில் குறிப்பிடத்தக்க கலைக்களஞ்சியமாக இது திகழ்கிறது.

### இலக்கணக்கலைக் களஞ்சியம் - 1985

முனைவர். பொற்கோ இயற்றியது. தமிழ் நூலகத்தாரால் 1985 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### கலைசொற்களஞ்சிய அகராதி - 1994

மணவை முத்தபா இயற்றிய இவ்வகராதி, மணவை பப்ளிகேசன் மூலம் 1994 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

### சோதிடக்கலைக் களஞ்சியம் – 1994

எசு.பி. சுப்பிரமணியன் என்பவரால் இயற்றப்பட்டது. நர்மதா பதிப்பகத்தால், 1994 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### தமிழ்ப்புலவர் வரலாற்றுக்களஞ்சியம் – 1989

முனைவர் வெ. பழநியப்பன், உ. பழநி என்பவர்களால் எழுதப்பட்டது. 1989 ஆம் ஆண்டு நான்கு தொகுதிகளாக அண்ணாமலைப் பல்கலைக்கழக வைரவிழாவின் போது வெளியிடப்பட்டது.

### மருத்துவக்களஞ்சியம் – 1994

இக்களஞ்சியம், மருத்துவர். அ. கதிரேசன், எம். நடராசன், ஜே.ஜி.கண்ணப்பன், எம்.எம். வெங்கடராமன், மு.குமரேசன், சாமி சண்முகம், சு. நரேந்திரன், வா.செ.நடராசன், லலிதா கமேசுவரன் போன்ற மருத்துவர்களால் தொகுக்கப்பட்டு, தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரால் 1994 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### மூலிகைக் கலைக்களஞ்சியம் – 1989

இக்களஞ்சியத்தை, என்.கே. சண்முகம் என்பவர் தொகுத்துள்ளார். நக்கீரன் பதிப்பகத்தாரால் 1989 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### வங்கியியல் கலைச்சொற்களஞ்சியம் – 1984

பாரத மாநில வங்கியினரால் தொகுக்கப்பட்டு, 1984 ஆம் ஆண்டு முதற்பதிப்பு வெளியிடப்பட்டுள்ளது.

### இசுலாமியர் கலைக்களஞ்சியம் – 1976

அப்துல் ரகீம் என்பவர் இக்களஞ்சியத்தை தொகுத்துள்ளார். சென்னை யுனிவர்சல் வெளியீட்டகத்தால் முதற் தொகுதி 1976 ஆம் ஆண்டும், இரண்டாம் தொகுதி 1977 ஆம் ஆண்டும் வெளியிடப்பட்டது.

### சங்க இலக்கியச் சொற்களஞ்சியம் (உயிரெழுத்து) – 1965

ச. தண்டபாணி தேசிகர் தொடுத்த இக்களஞ்சியம் திருவாடுதுறை ஆதினத்தால், 1965 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

இவைபோன்று பல்வேறு கலைக்களஞ்சியங்கள் வெளிவந்து தமிழின் மேன்மையை உலகெங்கும் அறியச்செய்ய அறிஞர்களும், ஆய்வாளர்களும் உறுதுணை புரியவேண்டும்.

## அகரமுதலி வரலாற்றில் 20 ஆம் நூற்றாண்டுத் தொழிற் சொல்லகராதிகள்

மாந்தரின் நாகரிக வரலாற்றின் நிலைக்களனாக அமைந்துள்ள இடம், ஆற்றுப்படுகையும் மருதநிலமும் ஆகும். இப் பகுதிகளே, இன்றைய நாகரிக வளர்ச்சியின் தோற்றுவாய் எனலாம். மக்கள் ஆற்றுப்படுகையில் மீன்பிடித்தும், மருதநிலப் பகுதியில், வேளாண்மை செய்தும் வாழத் தலைப்பட்டனர். அவ்வவ் நிலங்களில் மக்கள் பயன்படுத்திய சொற்களே, மொழியின் தோற்றுவாய் எனலாம். அன்று தொடங்கி இன்று வரை தொழில் சார்ந்த சொற்கள் இலக்கியங்களிலும் பதிவு பெற்றுள்ளன. இத்தகைய தொழிற்சொற்கள் தமிழின் தாய்மை, மேன்மை ஆகியவற்றை அறிந்து கொள்ள தகுசான்றாய் மிளிர்கின்றன. மனிதனின் உயிர் வாழ்க்கைக்கு உயிர்நாடியாகக் கருதப்படுவன, தொழில்களே ஆகும். அதுபோல வளர்ச்சியடைந்த ஒரு மொழியில் அறிவியல் சொற்கள், தொழில்நுட்பத் துறைச்சொற்கள், இலக்கியச் சொற்கள், பேச்சுவழக்குச் சொற்கள் போன்றவை அம்மொழியிலுள்ள அகராதிகளிலும் இடம் பெற்றிருக்கும், அவற்றுடன் வளர்ந்து வரும் அறிவியல் சொற்களும், தொழில் நுட்பச்சொற்களும் உருவாக்கப்பட்டு, அகராதியில் இடம் பெற்றிருக்கும். இவையெல்லாம் இருந்தும், ஒரு மொழியின் வளப்பத்தை உய்த்துணர முடியாது. கல்லாதார் நாவில் பயின்று வரும் நல்ல தமிழ்ச்சொற்களே இவற்றிற்கெல்லாம் அடித்தளமாக அமையும். ஏனெனில் வேற்றுமொழியின் தாக்கங்கள் இல்லாமல், மொழிக் கலப்பின்றி பேசும் திறனுடையவர்களே, சிற்றூர்மக்கள் என்றால் மிகையாகாது. ஆகவே அகராதிப்பணி மேற்கொள்ளும் அறிஞர்களும், ஆய்வாளர்களும் நகரத்தை விடுத்துச் சிற்றூர்ப் புறங்களுக்குச் சென்று மொழியாய்வு மேற்கொள்ளல் வேண்டும். ஊரகங்களே இந்தியாவின் உயிர் நாடியாக விளங்குகின்றன என்ற காந்தியாரின் வாக்கு,

பொருளியியலில் மட்டுமன்றி, மொழியியலிலும் உயிர்நாடி என்று எண்ண வேண்டும். மொழி என்னும் கோபுரம் வானளாவ உயர வேண்டுமெனில், வழக்குச்சொற்களும், தொழிற்சொற்களும் அடித்தளமாக அமைய வேண்டும். இக்கருத்தினையே சுனித்குமார் சட்டர்ஜி என்பவரும் கூறியுள்ளார். "சென்னைப் பல்கலைக்கழகம் சில ஆண்டுகளுக்கு முன் வெளியிட்ட பெரிய தமிழ்அகராதி மிகவும் நன்றாயுள்ளது. ஆனால் இம்முயற்சியில், அந்நூல் பல்வேறு கைத்தொழில் மற்றும் வாழ்க்கைத் தொழில் செய்யும் மக்களிடை வழங்கும் தொழிற் சார்புடைய சொற்களின் சேர்ப்பு இன்றித் தொகுக்கப்பட்டிருத்தலால், பேச்சுத்தமிழ் சார்ந்த அனைத்துச் சொற்களுமுடையதாய் விளங்கி முழுமை பெற்றுள்ளது என்று சொல்லவியலாது". (Hydrabad, Andhrapradesh, Sathitya Akademi, 1974 page. 2) தமிழில் அகராதிப் பணி செய்யும் அறிஞர்களின், நாட்டுப்புற மக்களின் தொழிற் சொற்றொகுப்புப் பணி, குறிப்பிடத்தக்க அளவில் இல்லை என்றே, கூறலாம். இந்நிலைமாறி வருங்காலத்தில் சிற்றூர்களைத் தங்களின் ஆய்வுக்களமாக எடுத்துக் கொண்டு ஆய்வுசெய்யின், தமிழன்னையின் நெற்றியில் வயிரக்கல் பதிப்பதற்கு ஒப்பாகும்.

## நிறைவு

### தொகுப்புரை

தமிழகரமுதலி வரலாற்றில், தொல்காப்பியம் முதல், கி.பி. 21 ஆம் நூற்றாண்டு வரை தோன்றிய நிகண்டுகள், அகரமுதலிகளில் அமைந்த சிறப்பு மிக்க, காலக்கட்டங்களைச் சுட்டும் தொகுப்பு வருமாறு.

தொல்காப்பியம் கிறித்துவிற்கு முன்பு தோன்றியது. பின்னர்த் தோன்றிய நிகண்டு, அகரமுதலி தொடர்பான நூல்கட்குக் களம் அமைத்துத் தந்தவர் தொல்காப்பியர்.

1. "நிகண்டுகளின் தோற்றத்திற்குத் தொல்காப்பியமே மூலம்.

### கி.பி. 8–ஆம் நூற்றாண்டு

2. நிகண்டுகள்: தமிழகரமுதலி வரலாற்றில் கி.பி. 8 ஆம் நூற்றாண்டில் தோன்றியது திவாகரம்.

முப்பெருந்தொகுதிகளை உள்ளடக்கிய, முதல் முழுமையான நிகண்டாகவும், நூற்பாநடையினைக் கொண்டும், திவாகரர் இதனை யாத்துள்ளார்.

3. "பிங்கலரால் இயற்றப்பட்ட பிங்கல நிகண்டும் கி.பி. 8 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது" முழுமையான நிகண்டுகளில் இஃதும் ஒன்று.

4. கி.பி. 13 ஆம் நூற்றாண்டு பவணந்தி முனிவரால் நன்னூல், கி.பி. 13 இல், இயற்றப்பட்டது.

5. நன்னூல் இடையியல் உரியியலில் நிகண்டுக்கூறுகள் உள்ளன.

### கி.பி. 14 ஆம் நூற்றாண்டு

6. கி.பி. 14 ஆம் நூற்றாண்டில் தோன்றிய உரிச்சொல்நிகண்டு, காங்கேயரால் இயற்றப்பட்டது. இந்நூல் வெண்பாயாப்பில், 3200 சொற்களுடன் கூடிய பத்துத் தொகுதிகளை உள்ளடக்கியது.

### கி.பி. 15 ஆம் நூற்றாண்டு

7. இராமேச்சுரத்தில் பிறந்த கயாதரரால், கட்டளைக் கலித்துறை யாப்பில் 10,500 சொற்களுடன் அமைக்கப்பட்ட கயாதர நிகண்டு பதினொரு தொகுதிகளை உள்ளடக்கியது.

### கி.பி. 16 ஆம் நூற்றாண்டு

8. i) புலியூர்ச் சிதம்பர இரேவண சித்தர் இயற்றிய அகராதி நிகண்டு, தமிழகரமுதலி வரலாற்றில் அகர முதலாக வண்ணமாலை வரிசையில் அமைக்கப்பட்ட முதல் நிகண்டு. இதன் காலம் கி.பி. 1594.

ii) முதன்முதலாக எல்லோரும் எளிதில் மனனம் செய்வதற்கு ஏற்றவண்ணம் அமைந்ததும், விருத்தப்பாவினாலாகியதுமான, சூடாமணிநிகண்டு மண்டலபுருடரால் இயற்றப்பட்டது.

iii) முதலெழுத்தளவில் அகரவரிசையில் அமைந்ததும், பொருட்டொகை அடிப்படையில் பாகுபாட்டுடன் இயற்றப்பட்டதுமான அகராதிநிகண்டு எழுந்தது.

### கி.பி. 17 ஆம் நூற்றாண்டு

9. i) நிகண்டு வரலாற்றில் முதற்கண் வெண்பா யாப்பில் வடிவமைக்கப்பட்ட உரிச்சொல் நிகண்டு உருவானது.

ii) 17 ஆம் நூற்றாண்டில் இரண்டாவதாகக் கலித்துறை யாப்பில், அந்தாதித் தொடையுடன் அமைக்கப்பட்ட கயாதரநிகண்டு எழுந்தது. இவர், கி.பி.15 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்றும் கருதுவர்.

iii) மூன்றாவதாகப் பல்பொருள் சூடாமணி நிகண்டு, வடமொழி நிகண்டாகிய அமரகோசத்தைப் பின்பற்றி இயற்றப்பட்டது.

iv) சொற்பொருளுக்கு அடுத்தநிலையில், பொருட்டொகையின் எண்ணிக்கையைச் சிறப்பாகக் காட்டும், ஆசிரியநிகண்டு 17 ஆம் நூற்றாண்டில், அகரமுதலி வரலாற்றில், நான்காவதாகத் தோன்றியது.

v) அடுத்து, முதலிரு எழுத்துகள் மட்டும் அகரநிரலில் அமைந்த, பொதிகைநிகண்டு உருவானது.

## கி.பி. 19 ஆம் நூற்றாண்டு

10. i) மேற்கோள்களைக் கொண்டு நிகண்டுப் பாடல்களை விளக்கும், நயநப்பரின் "ஒருசொற் பலபொருட்டொகுதி உரைபாடம்" என்னும் நிகண்டு, 19 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது.

ii) ஒரு பொருளுடைய சொற்களுக்கு மட்டுமே பொருள் விளத்தம் செய்யும், சிந்தாமணி நிகண்டும் இக்காலத்தில் இயற்றப்பட்டது.

இத்துடன் நிகண்டுகள் குறித்த, சிறப்புமிகு வரலாற்றுக் குறிப்புகள், அகரமுதலி வரலாற்றில் நிறைவுற்றன.

## கி.பி. 17 ஆம் நூற்றாண்டு

11. அகராதிகள்:

i) முதலிரு எழுத்துகள் மட்டுமே அகர நிரலில் அமைக்கப்பட்டு உரைநடையில் உருவாக்கிய, "அகராதி மோனைக்ககராதி எதுகை" தோன்றியது.

இவ்வகரமுதலி அருஞ்சொற்கட்டு மட்டுமே சிறப்பாகப் பொருள்கூறும் பாங்கினில் அமைக்கப் பட்டதாகும்.

ii) 17 ஆம் நூற்றாண்டில் இரண்டாவதாகச் சொற்களின் எழுத்து எண்ணிக்கையை அடிப்படைப் பாகுபாடாகக் கொண்டு அமைக்கப்பட்ட பத்துச் சொல்லகராதி தோன்றியது.

iii) கி.பி. 1679 இல் பதிப்பிக்கப்பட்ட முதலகர முதலியான, "புரோயன்சாவின்"– தமிழ் – போர்ச்சுக்கீசிய அகராதி–, தோன்றியது.

## கி.பி. 1732

i) வண்ணமாலை வரிசையில் முழுமையாக அமைக்கப்பட்டதும், எளிய சொற்களின் வாயிலாக, உரைநடையில் பொருளை விளக்கும் திறத்துடன், பிற்கால அகராதிகட்குச் சிறந்ததோர் வழிகாட்டியாகத் திகழ்ந்ததும்–, அகராதி என்னும் சொல்லைக் குறிப்பு நோக்கீட்டுக் கருவிநூலுக்கு–, முதன்முதலில் வழங்கி யதுமான, வீரமாமுனிவரின் சதுரகராதி தோன்றியது.

## கி.பி. 1779

முதல் தமிழ் – ஆங்கில அகரமுதலியான, பெப்ரீசியசின் அகராதி, 1779 ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டது.

## 19 ஆம் நூற்றாண்டு

i) பெரிதும் செல்வாக்குப் பெற்றதும், கல்வியாளர்மாட்டு வழக்கூன்றியதுமான–, இராட்லர், மானிப்பாய், வின்சுலோ முதலான சிறப்புமிகு அகரமுதலிகள், 19 ஆம் நூற்றாண்டில் வெளிவந்தன.

## கி.பி. 1842

ii) முதல் தமிழ்ப் பழமொழியகராதி– பெர்சிவலின் அகராதி முதலானவை–, வெளிநாட்டவரும் பயன்கொள்ளும், பாங்கினில்–, ஆங்கிலமொழி பெயர்ப்புடன் 1872 இல் இயற்றப்பட்டன.

## 20 ஆம் நூற்றாண்டு

i) கி.பி. 1902 இல் கலைக்களஞ்சியப் பண்பு கொண்ட முதல்அகராதியான – அபிதான கோசம் – உருவாக்கப்பட்டது.

ii) 1909 இல், படங்களுடன் பொருள் விளக்கப்பட்டுள்ள முதல் தமிழ் அகரமுதலியான, இராமநாதன் தொகுத்த அகராதி–. (The Twentieth Century Tamil Dictionary)– இயற்றப்பட்டது.

iii) 1910 இல், கலைக்களஞ்சியத்திற்கு முன்னோடியாக அமைந்ததும்–, அனைத்துப் பொதுச் சிறப்புப் பெயர்களைக் குறித்துள்ளதுமான–, அபிதான சிந்தாமணி தோன்றியது.

iv) இன்றுள்ள அகராதிகளுள் பார்வைநூலாகவும் - அனைத்து அகரமுதலி வல்லுநர்களும் சிறப்பிக்குந் தன்மை பெற்றதும் - மேலை நாட்டினர் பயன்கொள்ளும் பாங்கினில் எழுத்துப் பெயர்ப்புடன் அமைக்கப்பட்டது மான, சென்னைப் பல்கலைக் கழகப் பேரகரமுதலி, கி.பி. 1924-1939 ஆம் ஆண்டுகட்கிடையில் உருவாக்கப்பெற்றது.

v) கி.பி. 1938-1946 இல், ஞானப்பிரகாசரது, முதல் தமிழ்ச் சொற்பிறப்பியல் - ஒப்பியல் அகரமுதலி - உருவாக்கப்பட்டது.

vi) கி.பி. 1954-1956 இல், முறையான முதல் தமிழ்க் கலைக்களஞ்சியம் இயற்றப்பட்டது.

vii) 1985 ஆம் ஆண்டு, தமிழகக் கல்வியாளர் ஆவலுடன் எதிர்நோக்கியதும், மொழிஞாயிறு. தேவநேயப்பாவாணரின் 50 ஆண்டுக் கால உழைப்பின் சின்னமாகத் திகழ்வதுமான, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் முதன் மடல முதற்பகுதி வெளிவந்தது.

தமிழகரமுதலி வரலாற்றில் காணப்படும் அகராதிகளின் சிறப்புக் குறித்த தொகுப்புரை வருமாறு:

1. நிகண்டுகளில் நிறைந்துள்ள சொற்பொருள் விளக்கும் பண்பும், கலைக்களஞ்சியப் பண்பும் முறையே, அகராதிகள், கலைக் களஞ்சியங்கள் எழ அடிகோலின.

2. தமிழ் மொழியில் அகரமுதலி வல்லுநர்கள் குறித்துள்ள அகராதி வகைகள் பற்றிய விளத்தம் வருமாறு :-

1) சொற்பிறப்பியல், ஒப்பியல் அகராதிகள்; 2) தகுமொழிவிளக்க அகராதிகள்; 3) மீவிளக்க அகராதிகள்; 4) ஒருமொழி பன்மொழி அகராதிகள்; 5) கிளைமொழி அகராதிகள்; 6) கலைச் சொல்லகராதிகள்; 7) நூல் அகராதிகள்; 8) மரபுத்தொடர் அகராதிகள்; 9) பழமொழி அகராதிகள்; 10) மேற்கோள் அகராதிகள்; 11) ஒருபொருட் பன்மொழி அகராதிகள்; 12) எதிர்ச்சொல் ஒலிக்குறிப்பு அகராதிகள்; 13) அடுக்குமொழி அகராதிகள்; 14) பொருட்புல அகராதிகள்; 15) எழுத்து வேறுபாட்டு அகராதிகள்; 16) சிலேடை அகராதிகள்; 17) எதுகை மோனை அகராதிகள்.

3. வரலாற்றுமுறைப் பொருளகராதி, பயிற்றுமுறை, வரிவடிவ அகராதி தமிழில் அருகியே காணப்படுகின்றன.

4. அகராதிகளைப் பொறுத்தமட்டில், வினைச் சொற்கள், தொழிற்பெயராகவும், ஏவலாகவும் பயின்று வருகின்றன. புடைபெயர்பு பகுப்பு அகராதியில் உள்ளது.

5. கலைக்களஞ்சியப் பணி இதழ் வாயிலாகவும், தமிழில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

6. தமிழில் பல்வகைப் பொது, சிறப்புக் கலைக்களஞ்சியங்கள் இருந்த போழ்தும், தமிழ்வளர்ச்சிக் கழகமே முறையான முதல் தமிழ்க்கலைக்களஞ்சியத்தை வெளியிட்டது.

7. தமிழில் சொற்பொருள் கூறும் பாங்கு, கிறித்துவிற்கு முன்பே தொல்காப்பியத்தில் காணப்பட்ட போதும், கி.பி. 16 ஆம் நூற்றாண்டு வரை செய்யுள் வடிவிலேயே அமைந்திருந்தது.

8. கருத்தாழஞ்செறிந்த அரிய சொற்கள் மட்டுமே, பொருள் விளக்கத்திற்குரியனவாகத் தெரிவு செய்யப்பட்டன.

9. கி.பி. 17 ஆம் நூற்றாண்டில்தான், எளிய சொற்களும் அகரமுதலியில் இடம்பெறத் தொடங்கின. இருந்தபோதும். 17 ஆம் நூற்றாண்டில் எழுந்த அகராதிகளில் பெரும்பாலானவை நிகண்டு நடையிலேயே (style) அமைந்துள்ளன.

10. 18 ஆம் நூற்றாண்டு, அகரமுதலி வரலாற்றில் திருப்புமுனையாகும். இந்நூற்றாண்டில் தோன்றிய வீரமாமுனிவரின் சதுரகராதி. அனைத்துநிலையிலும், அகரமுதலி வரலாற்றில் சிறப்பிடம் பெற்றதோடு மட்டுமன்றி, ஏனைய அகராதிகளின் வளர்ச்சிக்கும் உறுதுணை புரிந்தது.

11. 19 ஆம் நூற்றாண்டில், 18 ஆம் நூற்றாண்டைக் காட்டிலும், மிகுதியாக ஒரு மொழி, பன்மொழி, அகரமுதலிகள் தோன்றின. அகரமுதலிகள் பல தோன்றிய காலமாக, 19 ஆம் நூற்றாண்டு, அகரமுதலி வரலாற்றில் நிலைத்து நிற்கின்றது.

12. இருபதாம் நூற்றாண்டில் பல வகை சிறப்பு, பொதுஅகராதிகள் இயற்றப்பட்டன. கலைக்களஞ்சிய அமைப்பில் தோன்றிய அபிதான சிந்தாமணியையடுத்து, தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரால் தொகுத்த முறையான கலைக்களஞ்சியமும், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தாரால், வாழ்வியற்களஞ்சியத் தொகுதிகளும், அறிவியல்களஞ்சியத் தொகுதிகளும் வெளிவந்ததன் விளைவாக, அகராதி வரலாற்றில் குறிப்பிடத்தக்க இடத்தை 20 ஆம் நூற்றாண்டு பெற்றுள்ளது.

13. இருபதாம் நூற்றாண்டினுறுதியில் தமிழ்நாட்டரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்ககத்தின் வாயிலாக, முதன் மடலத்தில் மூன்று பகுதிகளை வெளியிட்டது.

## 21 ஆம் நூற்றாண்டு

14. 2000 ஆம் ஆண்டு முதல், 2005 ஆம் ஆண்டு வரை, இரண்டாம் மடலம் முதல் – ஆறாம் மடலம் வரையுள்ள, 15 பகுதிகளும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தாரால், வெளியிடப் பட்டன. 2007 ஆம் ஆண்டில், ஏழு, எட்டாம் மடலங் கட்கான ஆறு பகுதிகளும், தமிழகரமுதலி வரலாற்று நூலும் வெளிவரவுள்ளன.

இதுகாறும் குறிப்பிடப்பெற்ற அகரமுதலி வரலாற்று வெளியீடுகளைக் கூர்ந்துநோக்கின், தமிழகராதிகள் தொகை (Quantity)யாலும், வகையாலும் பரந்துபட்ட நிலை நன்கு தெளிவுறும்.

21 ஆம் நூற்றாண்டில், தமிழகம் தன்னிறைவு பெற்றுவருவதால், தொழிற்சொல்லகராதிகள், பழமொழி மற்றும் வட்டாரவழக்கு அகராதிகள் என நாளும் புதுவதாய்த் தோன்றிய வண்ணம் உள்ளன. பொதுவாகத் தகவல் தொடர்புத் துறையில் கணினி தொடர்பான அகராதிகள், காலத்தின் கட்டாயத் தேவையாம். எதிர்வரும் நாளில் வெளிவரும் அகராதிகள், குமுகாயமாந்தர்தம் வளர்ச்சிக்குப் பயன்படுவதோடு, வளர்ந்து வரும் இளைய தலைமுறையினர்க்கும், கல்வியாளர்க்கும் உறுதுணையாக இருக்கும் வகையில் மொழிநூல் வல்லுநர்களும், அகராதிக் கலை வல்லுநர்களும் முனைந்து செயலாற்றுதல் நன்றாம்.



# தமிழ் அகரமுதலிப் பட்டியல்

## அகராதி நிகண்டு - 1

அகராதி நிகண்டின் ஆசிரியர் புலியூர்ச் சிதம்பர ரேவண சித்தர் ஆவர். இந்நிகண்டின் காலம் கி.பி. 1594. ஒருசொற் பல்பொருள் விளக்கும் நிகண்டுகளுள் இஃதொன்றாம். இதற்கு முன் வெளிவந்த திவாகரம் பிங்கலம் போன்ற நிகண்டு களையும் எடுத்தாராய்ந்து திரட்டப்பட்டது இந்நூல்.

இந்நூல் நூற்பாவால் (சூத்திரம்) ஆக்கப்பெற்றது. முதலெழுத்தை அகர வரிசையில் அமைத்துப் பொருள் கூறுவதால் இந்நூல் 'அகராதி நிகண்டு' எனப் பெயர்பெற்றது. மேலும் சூத்திர நடையால் அமைக்கப்பட்டதால் 'இரேவண சூத்திரம்' எனவும் 'இரேவணாத்திரியார் சூத்திரம்' எனவும் 'சூத்திரவகராதி' எனவும் இதற்கு வேறு பெயர்கள் உண்டு.

தமிழ் அகர முதலியியலுக்கு முதன் முதல் அகர வரிசையை அறிமுகப்படுத்தியது இந்நிகண்டேயாகும். அகர வருக்கம் முதலாக வகர வருக்கம் ஈறாகப் பத்துத் தொகுதிகளாக இந்நூல் அமைந்துள்ளது.

இதில் அ-ஔ, க-கௌ, ச-சௌ, ஞ-ஞௌ, த-தௌ, ந-நௌ, ப-பௌ, ம-மௌ, ய-யௌ, வ-வௌ என்ற பத்துத் தொகுதிகளில் முதலெழுத்தளவில் அகர வரிசையால் சொற்கள் அமைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு தொகுதியின் தொடக்கம் மற்றும் முடிவில் அதன் தொடக்கத்தையும் முடிவில் அத்தொகுதியில் உள்ள நூற்பாக்களின் எண் தொகையையும் காட்டும் வரலாற்று நூற்பாக்களை அமைத்துள்ளார்.

அகரம் தொடங்கி வகரம் ஈறாய் அகராதி அமையும் இயல்பினைக் கண்டு போற்றி 'அகராதி' என்னும் ஒருதனிப் பெயரைத் தமிழுலகிற்கு அறிமுகப்படுத்தியவர் இவரே. பெயருக்கேற்ப இந்நூலில் முதலெழுத்தளவில் அகராதி முறை தழுவப் பெற்றிருக்கிறது. ஆனால் இரண்டாவது, மூன்றாவது எழுத்துகள் கவனிக்கப்படவில்லை. இந்நிகண்டில் ஒரு பொருளுடைய சொல், இருபொருளுடைய சொல், மூன்று பொருளுடைய சொல் என 46 பொருளுடைய சொல் வரை பொருள் தொகை அடிப்படையில் பகுத்து 3368 நூற்பாக்களில் பொருள் விளக்கியுள்ளார். மதுரைத் தமிழ்ச்சங்கம் 1921 இல் இந்நூலை வெளியிட்டது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் செந்தமிழ் இதழாசிரியராய் (பத்திராதிபராய்) விளங்கிய தி. நாராயண அய்யங்கார் அவர்கள் இந்நூலைப் பதிப்பித்துத் தமிழுலகத்திற்கு வழங்கியவர் ஆவர்.

## அகராதி நிகண்டு - 2

இந்நூல் புலியூர்ச் சிதம்பர ரேவணசித்தர் எழுதிய அகராதிநிகண்டினின்றும் வேறானது. இந்நூலை டாக்டர் இரா.நாகசாமி 1983 இல் வெளியிட்டார். இது டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலைய வெளியீடாக வந்துள்ளது. இந்நூலின் முன்னுரையில் பதிப்பாசிரியர் நாகசாமி அவர்கள் கொடுத்துள்ள செய்திகள் இந்நூலைப் பற்றி அறிந்து கொள்ள உதவுகின்றன.

## அகராதி நிகண்டு

முன்னுரை:

பெரும்பேராசிரியர் டாக்டர் உ.வே.சாமிநாதையர் தொகுத்த பல அருந்தமிழ்ச் சுவடிகளில், 'அகராதி நிகண்டு' என்னும் பெயரில் உள்ள இச்சுவடி ஆழ்வார் திருநகரியிலிருந்து பெறப்பட்டதாகும். ஐயரவர்களது குறிப்பு "ஆழ்வார் திருநகரி தாயவலம் தீர்த்த கவிராயர் அவர்களது வீட்டு ஏட்டுப் புத்தகம் இது" என்று எழுதப்பட்டுள்ளது. இச்சுவடியில் 101 ஏடுகள் உள்ளன. ஓரிரண்டு ஏடுகள் ஒடிந்தும் இராமபாணப் பூச்சியினால் துளைக்கப்பட்டும் காணப்படுகின்றன. சுவடி முழுவதும் இருக்கிறது. ஆயினும் ஆசிரியர் "பல சொற்களை விசாரித்து எழுத வேண்டும்" என்று "இந்த அகராதி இதொரு பேதமாகச் சேர்த்திருந்ததை எழுதி வச்சிருக்குது உ நீடூழி வாழ்க உ ஏடுகள் குறையாக இருப்பது விசாரித்து எழுதவேணும்" என்று குறித்துள்ளார். ஆதலால் இந்நூலை மேலும் விரிவாக்க ஆசிரியர் கருதியிருந்தார் என்பது தெளிவு. சுவடியில் சில சொற்களுக்குப் பொருள் எழுதப்படாமல் விடப்பட்டுள்ளது. சில சொல் வர்க்கங்கள் இல்லை. பின்னர் சுவடியை வாசித்தவர் நகர வர்க்கம் இல்லை. "பகரவருக்கத்திலும்

ககரம் முதலாக டகர வருக்கம் வரையிலும் இல்லை'' என்று குறித்துள்ளார். இந்நிகண்டில் சுமார் 7500 மூலச் சொற்களும் மொத்தம் 22,500 க்கு மேற்பட்ட சொற்களும் இடம்பெற்றுள்ளன.

எழுத்தின் தொடக்கத்தில் ''ககரம்'', ''உகரம்'' எனத் தனித்தலைப்பும் கொடுக்கப்பட்டுள்ளது. சொற்கள் தனித்தனியாக எழுதப்பட்டுப் பொருள்கள் கொடுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு ஏட்டின் பக்கத்தையும் பல பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு சொற்கள் எழுதப்பட்டுள்ளன. இந்நிகண்டில் குற்றெழுத்து அகராதி முடிவுற்றபின் நெட்டெழுத்து அகராதி எழுதப்பட்டுள்ளது ஒரு தனிச் சிறப்பாகும்.

பொருளெழுதும்பொழுது பொருள் முடிவுற்றது எனக் குறிக்க இறுதி எழுத்துப் பிரித்து எழுதப்பட்டுள்ளது. நெட்டெழுத்துப் பகுதியில் சில இடங்களில் இறுதி எழுத்தைப் பிரித்தும், சில இடங்களில் சுழியிட்டும் பொருள் முடிவுற்றதெனக் காட்டப்பட்டுள்ளது. நெட்டெழுத்து அகராதியில் சொல்லையும் பொருளையும் வேறுபடுத்த இடையில் கோடிடப்பட்டுள்ளது. சொற்களை எழுதும்போது முதல் எழுத்து மட்டுமல்ல, இரண்டாம் எழுத்திலும் அகர வரிசையை ஆசிரியர் பின்பற்றியுள்ளார்.

நான்காம் நெட்டுயிர் (ஈகாரம்) இகரத்தில் சுழியிட்டு இ(ஈ) என எழுதப்பட்டுள்ளது. எகர ஏகாரத்துக்கும் ஒகர ஓகாரத்துக்கும் வடிவில் வேறுபாடு இல்லை. உயிர்மெய் வடிவில் இரட்டைக் கொம்பு இடப்படவில்லை. சில எழுத்துகள் ஒன்றுக்கு பிறிதொன்றாகப் பிறழ்ந்து காணப்படுகின்றன.

| | |
|---|---|
| ன–ந (உ.ம்) | சென்னாய் – செந்நாய் |
| ன–ண | துன்னு– துண்ணு |
| ற – ர | சக்கிறாயுதம் – சக்கிராயுதம் |
| ழ – ள | பிழிறல் – பிளிறல் |
| ல – ள | துலக்கம் – துளக்கம் |

முதலியன இவ்வாறு காணப்படுகின்றன. இவை அவ்வட்டார எழுத்து மரபாக இருக்கலாம். சில சொற்கள் திரிந்தும் காணப்படுகின்றன. (எ–டு.) பிறாத்தி– பிராப்தி. எழுதும் பிழையால் ஓரிரு எழுத்துகள் விடப்பட்டுள்ளன. குடி–மருத நிலத்தூர்க் கொடிகள் – மருதநிலத்தூர் குடிகள். இங்குக் குடிகள் என்னும் சொல் கொடிகள் எனத் திரிந்து வந்தது. இப்படி வருவது இந்நூலாசிரியரின் காலப் பேச்சு வழக்கைக் குறிக்கலாம். இது போன்று பிறழ்ந்துள்ள சொற்களும் அவற்றின் திருந்திய வடிவமும் வருமாறு

| சுவடியில் உள்ளது. | | செஞ்சொல் | | பொருள் |
|---|---|---|---|---|
| குப்பாவம் | – | குப்பாயம் | – | சட்டை |
| கொலம் | – | கோலம் | – | நீரோட்டம் |
| கொறன் | – | கோற்றேன் | – | தேன்கூடு |
| சல்லி | – | சில்லி | – | வடம், கீரை, தேருருள்,கீழ் வீடு |
| சலிகம் | – | சலீகம் | – | பூசல் |

சொற்களின் தொடக்கத்தில் ஒரு எழுத்து விடப்பட்டுப் பொருள் எழுதப்பட்டுள்ள சொற்களுக்கு எ–டு :–

| | | | | |
|---|---|---|---|---|
| தீசி | – | உதீசி | – | வடதிசை |
| துகம் | – | மதுகம் | – | தரா |
| தும்பரம் | – | உதும்பரம் | – | செம்பு |

சி என்னும் எழுத்து தி என்று மாறி வந்ததற்கு எ–டு.

தேசி – தேதி – நாய்

குறில் நெடிலாக மாற்றம் பெற்றதற்கு எ–டு.

தொகம் – தோகம் – அற்பம்

தெறுக்கால் – தேறுக்கால் – தேள்

நெடில் குறிலாக மாறியதற்கு உதாரணம்

மோத்தை – மொத்தை – வெள்ளாட்டேறு

ஆங்காரம் – மகிதை. இங்கு மமதை என்னும் பொருள் மகிதை எனத் திரிந்தது. நாமதீப நிகண்டில் காணப்படும் வீதா என்னும் சொல் இவ்வகராதி நிகண்டில் பிதா என்று வந்துள்ளது.

வகர – பகர பேதங்களுக்கு எ–டு.

விதி – பிதி – குணம்

விருச்சிகன் – பிருச்சிகன் – ஆதித்தன்

அனங்கம் – இருவாட்சி. இச்சொல்லில் 'அ' என்னும் எழுத்து மகர அகரமாக மனங்கம் – இருவாட்சி என்று வந்துள்ளது.

பகர இகரம் மகர இகரமாகப் பிழைபடத் திரிந்ததற்கு எ–டு.

பின்னம் – மின்னம் – வேறுபாடு. சிவன் என்ற சொல்லுக்கு விட்டுணு எனப் பொருள் தந்துள்ளார் இந் நூலாசிரியர். புத்தன் என்ற சொல்லுக்கு நெடுமால் எனப்பொருள் கொண்டுள்ளார் ஆசிரியர். திருமாலின் பத்து கால வழக்கையும் வட்டார வழக்கையும் அறிந்து கொள்ளப் பெரும்பாலும் சொற்களும் பொருள்களும் சுவடியில் உள்ளவாறே இங்குப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. தெளிவு பெறும் வகையில் அடைப்புக் குறியீடுகள் கீழ்வருமாறு பயன்படுத்தியுள்ளேன்.

[ ] செல்லரிக்கப்பட்ட இடங்களில் எழுத்துக்கள் சேர்க்கப்பட்டவை.

[ * ] எழுதும்போது விடப்பட்டுப் பதிப்பாசிரியரால் சேர்க்கப்பட்டவை

( ) சுவடியில் உள்ளன. ஆனால் நீக்கப்பட வேண்டியவை.

இந்நிகண்டைத் தொகுத்த ஆசிரியர் பெயர் தெரியவில்லை. சதுரகராதி போன்ற நூல்கள் தோன்றியபிறகு இவ்வகராதியை ஆசிரியர் தொகுத்திருக்க வேண்டும். ஏனெனில் சொல்லின் முதல் எழுத்து மட்டுமல்ல, இரண்டாவது எழுத்தையும் அகர வரிசைப் படுத்தி எழுதியுள்ளமை இதைச் சுட்டும். ஆதலின் இது, 19 ஆம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்ட நூல் எனலாம். அகராதி தொகுக்கும் பணி தொடர்ந்து நம் ஆன்றோர்களால் பின்பற்றப்பட்டது என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டு எனலாம். இதுகாறும், இது அச்சிடப்படவில்லை. 1958 ஆம் ஆண்டு சாமிநாதையர் நூலகத்தாரால் படி யெடுக்கப்பட்டுள்ளது. படியெடுத்தவர் இந்நூலகத்தில் பணியாற்றிய எம். வரதன் என்பவர் ஆவார்.

ஐயரவர்கள் நூல் நிலைய வெளியீடான 'சுவடிகளின் விளக்கம்' முதல் தொகுதியில், இச்சுவடியின் தொடர் எண் 368 என்று அச்சிடப்பட்டுள்ளது. இந்நூல் சிதம்பரம் ரேவணசித்தர் எழுதிய அகராதி நிகண்டினின்றும் வேறானது.

தோற்றரவுகளில் (அவதாரங்களில்) புத்தாவதாரம் ஒன்று எனப் பாகவதம் கூறுகிறது. நான் என்னும் சொல் ஆங்காரம் என்ற பொருளில் இந்நிகண்டில் வந்துள்ளது. நான் என்னும் சொல்லுக்குத் தன்மை ஒருமைப் பெயர் என்று இலக்கண வழக்கில் தமிழ் அகராதி தொகுதி 4 இல் பொருள் தரப்பட்டுள்ளது. இந்த அகராதி நிகண்டின் ஆசிரி-ர் 'நான் – ஆங்காரம்' என்று தத்துவ வழக்கில் பொருள் தந்துள்ளார். கோசம் என்ற சொல் உறை என்று பொருள் தரும். இதில் "உ" என்ற எழுத்தை மகர உகரமாக்கி முறை என்று பொருள் தந்துள்ளார் இந்நூலாசிரியர். கோசிகம் என்ற சொல் சாம வேதம் என்ற பொருளைத் தருகிறது. இச்சொல்லுக்கு ஏட்டுச் சுவடியில் காம நூல் எனப் பொருள் எழுதப்பட்டுள்ளது. இப்பொருள் பிழையுடையது. சாமநூல் என்று வருவதற்கு மாறாகக் காமநூல் என்று தவறாக எழுதப்பட்டுள்ளதோ என்று தோன்றுகிறது. ககர ஓகார வருக்கத்தில் 'கோமாயு' என்ற சொல்லுக்கு 'நரி' எனப்பொருள் எழுதப்பட்டுள்ளது. மகர ஆகார வருக்கத்தில் மாயு என்ற சொல் நரி என்ற பொருளில் வந்துள்ளது. மடு–குளம், பசுவின் முலை எனப் பொருள் தரப்பட்டுள்ளது. மடி என்ற சொல்லின் பொருள் பசுவின் முலையாகும். சக்கரம் என்ற சொல்லுக்குத் துயிலொழிதல் என்று பொருள் தரப்பட்டுள்ளது. சாக்கிரம் என்ற சொல்லே துயிலொழிதல் என்ற பொருள் தருவதாகும். தமனியம் என்ற சொல்லுக்குப் பொன் என்பது பொருளாகும். இப்பொருளுடன் பிரமா என்ற பொருளும் இச்சொல்லுக்குத் தரப்பட்டுள்ளது. இது குணத்தையும் குணத்தையுடைய குணியையும் ஒன்றாகப் பொருள் கொண்டுள்ளமைக்கு எடுத்துக்காட்டாகும். தேகம் என்ற சொல்லுக்கு உடம்பு என்ற பொருளுடன் ஐயம் என்ற பொருளும் இந்நிகண்டில் காணப்படுகிறது. சந்தேகம் என்ற சொல்லுக்குரிய 'ஐயம்' என்ற பொருளையே தேகம் என்ற சொல்லுக்கு இந்நூலாசிரியர் கொண்டுள்ளார் என்று தோன்றுகிறது. மித்திரர் என்ற சொல்லுக்கு எதிர்ச்சொல்லாகிய சத்துரு என்ற சொல்லே பொருளாக இந்நூலிற் கொடுக்கப்பட்டுள்ளது. பந்து என்ற சொல் பெந்து என்று வருவது போன்று தமரம் என்ற சொல் தெமரம் என்று இந்நிகண்டில் எழுதப்பட்டுள்ளது.

## அகராதியின் வரவும் வளர்ச்சியும்

வை.தட்சிணாமூர்த்தி என்பவர் எழுதியது. செந்தமிழ் (மே 1963 ஆம் ஆண்டு) இதழில் வெளிவந்த கட்டுரை.

## அடிப்படைத் தமிழ்ச் சொல் அகரமுதலி (நிகண்டு)

இந்நிகண்டை ஐவர் தொகுத்தளித்துள்ளனர். இலக்கணப் பெரும்புலவர் த.ச.தமிழனார் அவர்கள் மேற்பார்வையில் திருவாரூர் தமிழன் பதிப்பகத்தால் 1997 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## அடுக்கு மொழி அகராதி

இவ்வகரமுதலி மு. சதாசிவம் என்பவரால் இயற்றப்பட்டது. சென்னை பாரி நிலையத்தாரால் 1965 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

## அபிதான கோசம்

இதன் ஆசிரியர் ஏ. முத்துத்தம்பி பிள்ளை ஆவார். யாழ்ப்பாணம் ஆசிரியரால் 1902 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## அபிதான மணிமாலை

இம்மணிமாலையை பதிப்பாசிரியர் வித்துவான் சு.பாலசாரநாதன் என்பவரால் பதிப்பிக்கப்பட்டது. டாக்டர்.உ.வே.சாமிநாதையர் நூல் நிலையத்தால் 1988 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## அபிதான சிந்தாமணி

இந்நூலின் ஆசிரியர் ஏ. சிங்காரவேலு முதலியார். 2 ஆம் பதிப்பு சென்னை சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்சு என்ற நிறுவனத்தாரால் 1934 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. தொன்மக் கதைகள் மிகுந்துள்ள இதனை ஒரு பெயர் அகரமுதலி எனலாம். தொன்மக் கதை மாந்தர்கள் பலர் இதில் இடம் பெற்றுள்ளனர். மக்கள் மட்டுமின்றி விலங்குகளும் இதில் இடம் பெற்றுள்ளன. சிவன் கோயில் கொண்டுள்ள இடங்கள் திருமால் தலங்கள் முதலியனவும், பாண்டிய நாட்டில் இருந்த திருப்பதிகளும் சோழ, சேர நாட்டுத் திருப்பதிகளும் இடம் பெற்றுள்ளன. கணியம் பற்றிய குறிப்புகளும் தொகை அகராதியும் இதில் இடம் பெற்றுள்ளன.

## அபிதானத் தனிச்செய்யுள் நிகண்டு (தெய்வப் பெயர்த் தொகுதி)

இந்நிகண்டின் ஆசிரியர் கோபாலசாமி நாயகர். 1878 இல் நாகப்பட்டினத்தில் இந்நூல் வெளியிடப்பட்டது.

## அபிதான மணிமாலை

திருச்சிற்றம்பலம் இன்னமுதம் பிள்ளை என்பவர் இந்நூலின் ஆசிரியர். இந்நூல் சுவடி வடிவிலேயே திருவான்மியூர் டாக்டர் உ.வே.சா. நூலகத்தில் உள்ளது.

## அம்பிகா இங்கிலீசு தமிழ் அகராதி

இவ்வகர முதலியில் 20,000 ஆங்கிலச் சொற்கட்குத் தமிழில் பொருள் கூறப்பட்டிருக்கிறது. இவ்வகர முதலியை அம்பிகா பிரதர்சு 1971 இல் சென்னையில் வெளியிட்டனர்.

## அம்பிகா இந்தி – தமிழ் அகராதி

அம்பிகா பிரதர்சு இவ்வகராதியை 1962 இல் வெளியிட்டனர்.

## அமரகோசம்

நான்கு மொழிகளில் (ஆங்கிலம், கன்னடம், தெலுங்கு, தமிழ் –தெலுங்கு வரிவடிவில்) வெளிவந்த அகரமுதலி.

இந்நூலின் ஆசிரியர் அமரசிம்மர் இந்நூலினை எம்.பி. சீனிவாச ஐயங்கார் சென்னையில் 1903 இல் பதிப்பித்து வெளியிட்டார்.

## அமரகோசம் பகுதி 1 (தமிழ், ஆங்கில விளக்கம்)

இதன் ஆசிரியர் கே.ஆர். அனந்தராமையா சாத்திரி. இந்நூல் திருவரங்கத்தில் 1905 இல் வெளியிடப்பட்டது.

## அமரகோசம்

(தமிழ் விளக்கம் அமரபாத கல்பதரு நடையில்)

இச்சொற்றொகுதியின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. கே.வெங்கடராம சாத்திரி என்பவர் 1915 இல் சென்னையில் இந்நூலைப் பதிப்பித்து வெளியிட்டார்.

## அரபுத்தமிழ் அகராதி – 1

இவ்வகராதியை குலாம் காதிர் நாவலர், வி. காசி மொகிதீன் ராவுத்தர் என்பவர்கள் 1902 இல் காரைக்காலில் வெளியிட்டனர்.

## அரபுத்தமிழ் அகராதி – 2

இவ்வகரமுதலி முகம்மது அப்துல்லா, கக்கீம் என்பவரால் முசுலீம் அபிமானி அச்சகத்தில் 1905 இல் சென்னையில் வெளியிடப்பட்டது.

## அரும்பொருள் அகராதி

இவ்வகர முதலியின் ஆசிரியர் சே. தம்பியப்பன். பெங்களூர் விடிவெள்ளி (மார்னிங் ஸ்டார்) அச்சகம் 1894 இல் இதனை வெளியிட்டது.

## அரும்பொருள் விளக்க நிகண்டு

இதன் ஆசிரியர் திருச்செந்தூரைச் சேர்ந்த அருமருந்தைய தேசிகர். கி.பி.1763 இல் சிதம்பரம் திருக்கோயிலில் இந்நிகண்டு அரங்கேற்றம்

செய்யப்பட்டது. இந்நூலில் 700 பாக்கள் உள்ளன. ஏறக்குறைய 3200 சொற்கள் விளக்கம் பெறுகின்றன.

இந்நிகண்டு 18 தொகுதிகளையுடையது. ஒரு சொல் பல்பொருட் பெயர்த்தொகுதி கூறும் விரிவான விளக்கமே இந்நிகண்டு.

## அறிவியல் அகராதி

இவ்வகராதி அ.கி.மூர்த்தி என்பவரால் இயற்றப்பட்டது. பதிப்பாசிரியர் ச.மெய்யப்பரால் பதிப்பித்து 1994 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## அறிவியல் கலைச்சொல் களஞ்சியம்

இக்களஞ்சியத்தின் ஆசிரியர் மணவை முத்தபா ஆவார். மீரா பதிப்பகத்தால் 1993 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## அறிவியல் களஞ்சியம்

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தால் வெளியிடப்பட்டது. 20 மடலங்களாக வெளிவந்துள்ளது. இதன் பதிப்பாசிரியர் பி.எல்.சாமி ஆவார். நெறிப்படுத்துங் குழு, கருத்தறி குழு, பதிப்புக் குழு, வல்லுநர் குழு, கட்டுரையாளர் குழுவெனப் பல்வேறு குழுவினர்களின் கூட்டு முயற்சியால் வெளிவந்துள்ளது.

## அறிவியல் தகவல் களஞ்சியம்

இக்களஞ்சியம் Illustrated Encyclopaedia of Facts and figures என்ற புத்தகத்தின் தமிழாக்கமாகும். ஓரியண்ட் லாங்மன் லிமிடெட் என்ற நிறுவனத்தால் 1996 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. மறுபதிப்பு 1998 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

## அறிவுத்திரள்

குமரேசன் என்பவரால் எழுதப்பட்ட இந்நூல் மதுரை சுப்பராயலு நாயுடு அச்சகத்தால் 1950 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## ஆங்கில தமிழ் அகராதி

இவ்வகர முதலியின் ஆசிரியர் டி.ஏ.சுவாமிநாத ஐயர். இந்நூல் 1926 இல் சென்னையில் வெளியிடப்பட்டது.

## ஆங்கிலம் – ஆங்கிலம் – தமிழ் அகராதி

இவ்வகரமுதலி The School Dictionary English - English - Tamil என்னும் பெயரில் வழங்கப்படுகிறது. ஆங்கிலச் சொல்லுக்கு ஆங்கிலத்தாலும் தமிழாலும் பொருள் கூறப்பட்டிருக்கிறது. இவ்வகரமுதலியினைத் தொகுத்தவர் ஏ.சுவாமிநாதன். காலம் 1909.

## ஆங்கிலம் – தமிழ் – ஆங்கில அகராதி

Junior School Dictionary (English - Tamil - English) என்னும் பெயருடைய் இவ்வகரமுதலியை பி.என்.சங்கர நாராயணப் பிள்ளை என்பவர் 1914 ஆம் ஆண்டு வெளியிட்டார்.

## ஆங்கிலம் – தமிழ்ச் சொற்களஞ்சியம்

இவ்வகரமுதலி சென்னைப் பல்கலைக் கழகத்தால் வெளியிடப்பட்டது. இதன் தலைமைப் பதிப்பாசிரியர் முனைவர் அ.சிதம்பரநாதன் செட்டியார். இது மூன்று பாகங்களைக் கொண்டது.

## ஆசிரிய நிகண்டு

ஆசிரிய நிகண்டு முழுமையுங்கொண்ட நிறைவான நூல் இதுவரைக் கிடைக்கப் பெறவில்லை. கிடைத்தவரையில் இந்நிகண்டு கி.பி.17 ஆம் நூற்றாண்டில் ஆண்டிப்புலவரால் தொகுக்கப்பட்டது. ஆசிரிய மண்டிலம் (விருத்தம்) என்னும் யாப்பில் அமைந்துள்ள இந்நிகண்டு பதினொரு தொகுதிகளை யுடையது. மொத்தம் 263 பாடல்கள் காணப்படுகின்றன. முதல் பத்துத் தொகுதிகளில் மட்டும் 12000 சொற்கள் இடம் பெற்றுள்ளன (தமிழ்அகராதிக்கலை புலவர் சுந்தர சண்முகனார் – பக்.253). பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி இதில் இடம் பெறவில்லை. 1975 இல் வீ. சொக்கலிங்கம் என்பவர் இந்நிகண்டைச் சரசுவதி மகால் நூல்நிலைய வெளியீடாக வெளியிட்டார். இந்நூலில் எட்டுத் தொகுதிகள் காணப்படுகின்றன. 199 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. பதிப்பாசிரியர் இந்நிகண்டினைச் சேந்தன் திவாகரம், பிங்கல நிகண்டு, சூடாமணி நிகண்டு, கயாதர நிகண்டு ஆகியவற்றுடன் ஒப்புமை காட்டியிருப்பது தனிச்சிறப்புடையது.

## ஆசிரியர் கல்லூரிகளுக்குத் தமிழ்க் கலைச்சொற்கள்

இந்நூலின் ஆசிரியர் நெ.து. சுந்தர வடிவேலு. திருநெல்வேலி, சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தாரால், 1958 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## ஆட்சிச்சொல் அகரவரிசை

இந்நூலைச் சென்னையிலுள்ள தமிழ்ப் பாதுகாப்புக் கழகம் 1941 இல் வெளியிட்டது. இதன் இரண்டாம் பதிப்பு 1948 இல் வெளிவந்தது.

## ஆட்சிச் சொல் அகராதி (ஆங்கிலம் – தமிழ்)

இவ்வகராதி தமிழ் நாட்டரசால் உருவாக்கப்பட்டது. முதற்பதிப்பு 1962 ஆம் ஆண்டிலும், இரண்டாம் பதிப்பு 1968 ஆம் ஆண்டிலும், எழுதுபொருள் அச்சகத்துறை ஆணையரால், சென்னையில் பதிப்பித்து வெளியிடப் பட்டுள்ளது.

## ஆட்சித்துறைத் தமிழ்

இதன் ஆசிரியர் கீ. இராமலிங்கம். 1968 இல் சென்னை சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், இவ்வகர முதலியை வெளியிட்டது. இது தமிழ்– தமிழ் அகரமுதலியாகும்.

## ஆராய்ந்தெடுத்த ஐந்நூறு பழமொழிகளும் அவற்றிற்கேற்ற ஆங்கிலப் பழமொழிகளும்[1]

மோசூர், வேங்கடசுவாமி ஐயர் அவர்களால் இயற்றப்பட்டு, சென்னை ஆர். வெங்கடாசலம் அண்டு கோ அச்சகத்தால், 1917 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## ஆராய்ந்தெடுத்த அறுநூறு பழமொழிகளும் அவற்றிற்கேற்ற ஆங்கிலப் பழமொழிகளும்[2]

தி.நீலாம்பிகை அம்மையாரால் இயற்றப்பட்டு, இந்நூல் சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால், 1931 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## ஆரிய நிகண்டு

நீர்வேலச் சங்கர பண்டிதர் அவர்களின் குறிப்பு.

வையாபுரிப் பிள்ளை.

## ஆறு மொழிகளின் சொற்றொகுதி (பாஷைகளின் ஒக்காபிலேரி)

இந்நூலின் ஆசிரியர் ஈ. இரத்தினவேலு முதலியார். சென்னை ஆதிமூலம் அச்சகம் 1961 இல், இந்நூலை வெளியிட்டது.

## ஆனந்த விகடன் (சித்திரப்போட்டி) அகராதி

ஆனந்த விகடன் அச்சகத்தில், 1935 இல் ஆனந்த விகடன் அகரமுதலி வெளியானது. இது கதிர்வேல் பிள்ளையின் அகரமுதலிபோல், தமிழ் – தமிழ் அகர முதலியாகும்.

## ஆனந்த விகடன் போட்டி ஆசான்

பி.என். சிம்மம் அண்டு கோ 1940 இல், இவ்வகரமுதலியை வெளியிட்டது.

## இங்கிலீசு – தமிழ் சொற்றொகுதி (ஒக்காபிலேரி)

இந்நூல் அ.ம. சவரிநாத நாயகர் என்பவரால் இயற்றப்பட்டது. சென்னை ஆல்பியன் அச்சுக் கூடத்தி லிருந்து, 1876 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## இங்கிலீசுந் தமிழுமாகிய ஒக்காபிலேரி டயிலாக்சு என்னும் புத்தகம்[1]

இந்நூலினைச் சுப்பராய முதலியார் பதிப்பித்தார். 1874 ஆம் ஆண்டு, ஆதி வித்துவ மனோரஞ்சனி அச்சுக் கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளது.

## இங்கிலீசுந் தமிழுமாகிய ஒக்காபிலேரி டயலாக்சு என்னும் புத்தகம்[2]

இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. திருவாவடுதுறை சண்முக தேசிகர் இந்நூலைப் பதிப்பித்தார். 1863 இல், சண்முக விலாச அச்சுக் கூடத்தில், இந்நூல் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

## இங்கிலீசுந் தமிழுமாகிய ஒக்காபிலேரி டயலாக்சு என்னும் புத்தகம்[3]

இந்நூல் இலட்சுமண முதலியார் என்பவரால் இயற்றப்பட்டது. 1886 ஆம் ஆண்டு சென்னை சுந்தர விலாச அச்சுக் கூடத்தில் அச்சிடப்பட்டு வெளியிடப் பட்டுள்ளது.

## இங்கிலீசு – தெலுங்கு – தமிழ் வார்த்தைகள்

இவ்வகரமுதலியின் தொகுப்பாசிரியர் இலெவிசு (Mr. Lewis) என்பவரின் மாணவர். பெயர் தெரியவில்லை. இதன் இரண்டாம் பதிப்பு 1862 இல் சென்னையில் வெளியிடப்பட்டது. முதற்பதிப்பின் காலம் தெரியவில்லை.

## இசுலாமியர் கலைக் களஞ்சியம்

அப்துல்ரகிம் என்பவர் இக்களஞ்சியத்தை இயற்றியுள்ளார். சென்னை யுனிவர்சல் வெளியீட்டகம் இதன் முதல் தொகுதியை 1976 ஆம் ஆண்டும், இரண்டாம் தொகுதியை 1977 ஆம் ஆண்டும் வெளியிட்டது.

## இந்தி – தமிழ் அகராதி

இவ்வகர முதலியைத் தட்சிண பாரத இந்தி பிரசார சபையினர் வெளியிட்டுள்ளனர். இந்நூல் இந்திச் சொல்லுக்குத் தமிழ்ச் சொல்லால் பொருள் கூறுவதாக அமைந்திருக்கிறது.

## இந்தி – தமிழ் – ஆங்கில அகராதி

இவ்வகராதி மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழுவால் உருவாக்கப்பட்டது. லேனா தமிழ்வாணன் பதிப்பாசிரியராக இருந்து 1988 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## இந்தி – மராத்தி – தெலுங்கு – தமிழ் அகராதி

இவ்வகரமுதலி மிகவும் இன்றியமையாத சில சொற்களைக் கொண்ட தொரு சிறு வெளியீடாகும். இது 1964 இல் சென்னையில் வெளியிடப்பட்டது.

## இந்துத்தானி தமிழ் ஒக்காபிலரி

இச்சொற்றொகுதியை பி. கவுசுகன் சாயுபு என்பவர் இயற்றினார். 1880 ஆம் ஆண்டு சென்னை ( ஸ்ரீ) நிலைய முத்திராச்சாலை என்னும் அச்சுக் கூடத்தின் மூலம் வெளியிடப்பட்டது.

## இந்துத்தானி மொழி (பாஷா) மஞ்சரி

கோபால கிருட்டிண அய்யர் இந்நூலை இயற்றியுள்ளார். 1898 ஆம் ஆண்டில் மதுரையில் வெளியிடப்பட்டது.

## இந்துத்தானியும் தமிழுமானசொன்மாலை

இச் சொன்மாலையின் ஆசிரியர் தோமசு அந்தோணி பிள்ளை. இதை ஞா. சமாதானம் தானியல் பிள்ளை என்பவர் பதிப்பித்தார். சென்னை ஆக்ரா அச்சகத்தில் 1878 இல் வெளியிடப்பட்டது.

## இராட்லர் தமிழ் – ஆங்கில அகராதி

இவ்வகரமுதலியைத் தொகுத்தவர் 'இராட்லர்' (Dr. J.P Rottler) என்பவர். இதன் முதல் தொகுதி சென்னையிலுள்ள வேப்பேரியில் 1834 ஆம் ஆண்டிலும் இரண்டாம் தொகுதி 1837 ஆம் ஆண்டிலும், மூன்றாம் தொகுதி 1839 ஆம் ஆண்டிலும் நான்காம் தொகுதி 1841 ஆம் ஆண்டிலும் பதிப்பிக்கப் பட்டது. இது தமிழ்ச் சொல்லுக்கு ஆங்கிலச் சொல்லால் பொருள் கூறும் அகரமுதலியாகும்.

## இராமநாதன் ஆங்கிலத் தமிழகராதி

இது ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழால் பொருள் கூறும் அகரமுதலியாகும். இதன் ஆசிரியர் பி.இராமநாதன், எம்.ஏ. இது 1936 இல் வெளியிடப்பட்டது.

## இராமநாதன் தமிழ் அகராதி

The Twentieth Century Tamil Dictionary என்னும் பெயருடைய இவ்வகரமுதலியின் ஆசிரியர் இராமநாதன் பி.ஏ. இதன் காலம் 1909.

## இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி

இவ்வகராதியை, பி.இராமநாதன் என்பவர் இயற்றியுள்ளார். டி.கோபால் அண்டு கோ என்ற நிறுவனத்தால், 1909 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## இல்லப்பெயர் அகரவரிசை

இந்நூல் தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தால் தொகுக்கப்பட்டது. முதற் பதிப்பு 1948 ஆம் ஆண்டும், இரண்டாம் பதிப்பு 1968 ஆம் ஆண்டும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் சென்னையில் வெளியிடப்பட்டன.

## இலக்கண அகராதி சுவடி

சுந்தர சண்முகனாரால் இயற்றப்பட்ட இவ்வகரமுதலி, பாண்டிச்சேரியிலிருந்து 1948 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இதனைப் பற்றிய குறிப்புகள் சுந்தர சண்முகனார் எழுதிய தமிழ் அகராதிக்கலை என்னும் நூலில் (பக்கம் 346 இல்) குறிப்பிடப்பட்டுள்ளது.

## இலக்கணக் கலைக்களஞ்சியம்

இக்களஞ்சியத்தை முனைவர் பொற்கோ இயற்றியுள்ளார். தமிழ் நூலகத்தால், 1985 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## இலக்கணச் சொல் அகராதி

இவ்வகரமுதலி சென்னை சி.வி.இ. சொசைட்டி நிறுவனத்தாரால், 1881 ஆம் ஆண்டு வெளியிடப் பட்டுள்ளது.

## இலக்கணச் சொற்பொருள் விளக்க அகரவரிசை

(எழுத்தும் சொல்லும்) பகுதி. அ

இந்நூலாசிரியர் இரா. இளங்குமரன். சென்னை சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால், 1973 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

## இலக்கியச் சிந்தனைகள் – தமிழ் அகராதி

ஆசிரியர் வையாபுரிப்பிள்ளை. சென்னை பாரி நிலையத்தால், முதற்பதிப்பு 1939 ஆம் ஆண்டும், இரண்டாம் பதிப்பு 1959 ஆம் ஆண்டும் வெளியிடப்பட்டன.

## இலக்கியச் சிந்தனைகள் (தமிழும் அகராதியும்)

வையாபுரிப் பிள்ளையால் எழுதப்பட்டது. சென்னை பாரி நிலையத்தால், 2 ஆம் பதிப்பு 1956 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## இலக்கியச் சொல்லகராதி

இலங்கை சுன்னாகம் அ. குமாரசுவாமிப்பிள்ளை என்பவர், இவ்வகரமுதலியை 1914 இல் சென்னை வித்தியா பாலன யந்திர சாலை மூலம் வெளியிட்டார். இது இலக்கியங்களில் இடம் பெறும் சொற்களுக்குப் பொருள் கூறுவதாக அமைந்துள்ளது.

## இலக்கியத்தில் ஊர்ப் பெயர்கள்

முனைவர் கே.பகவதி என்பவரால் எழுதப்பட்ட இந்நூல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தால் இரண்டு பாகங்களாக 1984 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## இலக்கியப் பேரகராதி

இவ்வகர முதலியின் ஆசிரியர் மு.சதாசிவம். இரண்டாயிரம் நூல்களிலிருந்து மேற்கோள் காட்டிச் சொற்கள் வரலாற்று முறைப்படி தொகுக்கப் பெற்றது இவ்வகரமுதலி.

## இலக்கிய மணிமாலை நிகண்டுகள்

வையாபுரிப்பிள்ளையால் எழுதப்பட்டது. சென்னை, தமிழ்ப் புத்தகாலயத்தால், முதற்பதிப்பு 1954 ஆம் ஆண்டும், 2 ஆம் பதிப்பு 1957 ஆம் ஆண்டும், வெளியிடப்பட்டது.

## இலக்கிய வரலாற்றுப் பொருட்குறிப்பு அகராதி

மே.வீ. வேணுகோபாலப்பிள்ளை என்பவரால் இயற்றப்பட்ட இவ்வகரமுதலி, சென்னைஆசிரியர்

நூற்பதிப்புக் கழகத்தால் 1956 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## இறையியற் பயிற்சித் தோழன்

ஞான. இராபின்சன் என்பவரால் இயற்றப்பட்டு, சென்னை கிறித்தவ இலக்கியச் சங்கத்தால் 1971 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## ஈழநாட்டின் தமிழ்ச் சுடர்மணிகள்

இந்நூலின் ஆசிரியர் தென்புலோலியூர். மு. கணபதிப்பிள்ளை. சென்னை பாரி நிலையத்தாரால், இந்நூல் 1967 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## உசித சூடாமணி நிகண்டு[1]

இந்நிகண்டின் ஆசிரியர் சிதம்பரக் கவிராயர். கிருட்டிணசாமி நாயக்கர் என்பவர் இந்நிகண்டை 1903 இல் கோயம்புத்தூரில் பதிப்பித்து வெளியிட்டார்.

## உசித சூடாமணி நிகண்டு[2]

இந்நிகண்டின் ஆசிரியர் சிதம்பரம் பிள்ளை. பதிப்பாசிரியர் வி. சொக்கலிங்கம், என்பவர் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். (ஆசிரிய நிகண்டு பக். 6)

## உயிரினங்களும் பழமொழிகளும்

கே.எசு. லெட்சுமணன் என்பவரால் எழுதப்பட்ட இந்நூல், சிதம்பரம் பூம்புகார் பதிப்பகத்தால் 1964 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## உரிச்சொல் நிகண்டு

தமிழில் முதலில் தோன்றிய திவாகரம், பிங்கலம் என்ற நிகண்டுகள் நூற்பா யாப்பில் அமைந்தன. இதற்குப்பின் செய்யப்பட்ட உரிச்சொல் நிகண்டு வெண்பா யாப்பில் அமைந்தது.

உரிச்சொல் நிகண்டு என்னும் இந்நூல் பதினான்காம் நூற்றாண்டில் தோன்றியது என்று சிலரும், பதினாறாம் நூற்றாண்டில் தோன்றியது எனச் சிலரும் கூறுவர். தமிழறிஞர் மு. அருணாசலம் அவர்கள் தம்முடைய "தமிழ் இலக்கிய வரலாறு" என்னும் நூலில் 14 ஆம் நூற்றாண்டு பற்றிய தொகுதியில் உரிச்சொல் நிகண்டின் காலம் கி.பி. 14ஆம் நூற்றாண்டு என்று வரையறுக்கின்றார்.

உரிச்சொல் நிகண்டின் ஆசிரியர் காங்கேயர். கடவுள் வணக்கப் பாடலால் இவரின் சமயம் சிவனியம் என்று அறிய முடிகிறது. இவர் பற்றிய வரலாறு கிடைக்கவில்லை. கொங்கு மண்டல சதகம் இவரைக் கொங்கு நாட்டு மோரூரைச் சார்ந்தவராகத் தெரிவிக்கிறது.

"அலைகடல் சூழும் அவனியில் செந்தமிழ் ஆய்பவர்கள்
நலனுறத் தக்க வகையாக உள்ளம் நனி மகிழ்ந்தே
இலகும் உரிச்சொல் நிகண்டு வெண்பாவின் இசைத்தகலை
வலஎழில் காங்கேயன் வாழும் மோரூர் கொங்கு மண்டலமே (91)"

இவர் தொண்டை நாட்டவர் என்று ஒரு சிலர் கூறுவர். மனப்பாடஞ் செய்பவர் நலன் கருதி வெண்பா யாப்பில் இந்நூலை இயற்றினார்.

இந்நூல்,

1. தேவப் பெயர்த் தொகுதி (42)
2. மக்கட் பெயர்த் தொகுதி (21)
3. விலங்கின் பெயர்த் தொகுதி (26)
4. மரப்பெயர்த் தொகுதி (22)
5. இடப்பெயர்த் தொகுதி (22)
6. பல்பொருட் பெயர்த் தொகுதி (7)
7. செயற்கை வடிவின் பெயர்த் தொகுதி (11)
8. பண்புப்பெயர்த் தொகுதி (23)
9. செயல் பற்றிய பெயர்த்தொகுதி (15)
10. ஒலி பற்றிய பெயர்த்தொகுதி (23)
11. ஒருசொல் பல்பொருட் பெயர்த்தொகுதி (36)
12. பல்பெயர்க் கொரு பெயர்த்தொகுதி (37)

இவற்றுடன் கடவுள் வணக்கப்பாடல் இரண்டுட்பட 287 வெண்பாக்களில் 3200 சொற்களுக்கு விளக்கம் காணப்படுகின்றன.

உரிச்சொல் நிகண்டில் இக்காலப் பதிப்புகளில் 12 தொகுதிகள் காணப்பட்ட போது, முந்திய பதிப்புகளில் 10 தொகுதிகள் மட்டுமே காணப்படுகின்றன.

இந்நூலின் முதற்பதிப்பு 1840 இல் வெளியானது. பதிப்பித்தவர் துத்தன் துரை. அச்சகம் குவர்னமா அச்சுக்கூடம், புதுச்சேரி. இதில் 10 தொகுதிகள் மட்டுமே உண்டு. அடுத்து 1858 இல், யாழ்ப்பாணம் சதாசிவம் பிள்ளை 10 தொகுதிகள் அடங்கிய உரிச்சொல் நிகண்டைப் பதிப்பித்தார்.

1890 இல் சிவன் பிள்ளை என்பவரும், டி.கே. சுப்பிரமணிய செட்டியார் என்பவரும், சென்னை ஆதி-கலாநிதி அச்சுக் கூடத்தில் இந்நிகண்டைப் பதிப்பித்து வெளியிட்டனர். 1905 இல் சுன்னாகம் குமாரசுவாமிப் புலவர் இந்நூலை, 12 தொகுதிகளாகப் பதிப்பித்தார்.

அடுத்து, 1971 இல் திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், இந்நிகண்டைப் பதிப்பித்து வெளியிட்டது.

## உரிச்சொல் நிகண்டுரை

இதன் ஆசிரியர் காங்கேயர். இந்நூல் பத்துத் தொகுதிகளையுடையது. இதன் பதிப்பாசிரியர் பேராசிரியர் சிற்றம்பலம். 1840 இல் பாண்டிச்சேரி அரசு அச்சகத்தில் அச்சிடப்பட்டது.

## உருசிய – தமிழ் அகராதி

மி.செ.அந்திரோனவ் மற்றும் பலர் இவ்வகர முதலியைத் தொகுத்து, 1965 இல் மாசுகோ, சோவியத் என்சைக்ளோமீடியா பதிப்பகம் மூலம் வெளியிட்டனர்.

## உரைமணி மாலை – தமிழ் அகராதி

வையாபுரிப்பிள்ளையால் எழுதப்பட்டது. திருவனந்தபுரம் செயின்ட் சோசெப் அச்சகத்தால் 1951 ஆம் ஆண்டு, வெளியிடப்பட்டது.

## உழவு, நெசவு கலைச் சொற்கள் (செங்கை மாவட்டம்)

முனைவர் சிவ. சண்முக சுந்தரம் என்பவர் இயற்றியுள்ள இந்நூல் திலகவதி பதிப்பகத்தால், 1993 ஆண்டு வெளியிடப்பட்டது.

## உவமை அகர வரிசை

தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தால் உருவாக்கப்பட்டு, சென்னையில் 1939 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## உவமைச்சொல் அகராதி

இவ்வகரமுதலி தரங்கை மாநகரம் சுப்புராயலு நாயகர் என்பவரால் இயற்றப்பட்டது. சென்னை காட்டிசு அச்சுக் கூடத்தால், 1872 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## எதிர்ப்பத அகராதி

மு. சதாசிவம் என்பவரால் இயற்றப்பட்ட இவ்வகரமுதலி, சென்னை பாரி நிலையத்தால் 1965 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## எதுகை அகராதி[1]

பி.ஆர். அப்பாவு செட்டியார் என்பவர் இயற்றியுள்ள இவ்வகராதி, தர்மபுரி (ஸ்ரீ) ராமலிங்கர் அச்சுக் கூடத்தில் (பிரிண்டிங் ஒர்க்ஸ்) 1938 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## எதுகை அகராதி[2]

இவ்வகராதியை கவிஞர் குயிலன் இயற்றியுள்ளார். இதன் பதிப்பாசிரியர் லேனா தமிழ்வாணன் ஆவார். மணிமேகலைப் பிரசுரத்தால் வெளியிடப்பட்டது.

## ஒருசொற் பலபொருட்டொகுதியாகிய பதினோராவது நிகண்டு (மூலமும் உரையும்)

இந்நிகண்டின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. பதிப்பாசிரியர் தி. கந்தசாமிப்பிள்ளை. 1855 இல் மெய்ஞ்ஞான விளக்க அச்சுக் கூடத்தாரால், பாரிப்பாக்கத்தில் வெளியிடப்பட்டது.

## ஒருசொற் பலபொருட்டொகுதி – உரை பாடம்

புதுவையைச் சார்ந்த நயநப்ப முதலியார் இத் தொகுதியின் ஆசிரியர். வேங்கடாசல முதலியார் என்பவர், சென்னை சரசுவதி அச்சுக் கூடத்தில் 1836 இல் பதிப்பித்து வெளியிட்டார்.

## ஒருசொற் பல்பொருள் விளக்கம்

அண்ணாசாமிப்பிள்ளை என்பார், சூடாமணி நிகண்டின் 11 ஆம் தொகுதி மூலத்தை நூலின் இறுதியில் இணைத்து, அதில் விளக்கம் பெற்ற சொற்பொருள்களை அகர வரிசையில் எடுத்து விளக்கியுள்ளார்.

சொல் – பொருள் – விளக்கம் என மூன்று பகுதியையுடைய இது, ஒருசொற் பல்பொருள் விளக்கம் என்று பெயர் பெறும். இந்நூல் 1850 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## உரையாசிரியர்கள் கண்ட சொற்பொருள் நுண்மை (அகர வரிசை)

இரா. இளங்குமரன் எழுதியது. சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால், 1971 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## ஒலிக்குறிப்பகராதி

மு. சதாசிவம் என்பவர் இயற்றியுள்ள இவ்வகரமுதலி சென்னை பாரி நிலையத்தால் 1966 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## என் கூட வா (ஆங்கிலம் தமிழ் ஒக்காபிலேரி)

ஆர்.டி.எல்.டி. கெண்டர்சன் என்பவர் இந்நூலின் ஆசிரியர். 1924 இல் கோலாலம்பூர் கர்லே பால்மர் நிறுவனம், இந்நூலை வெளியிட்டது.

## ஐந்து மொழி அகராதி (தமிழ், ஆங்கிலம், பிரெஞ்சு, செர்மன், இத்தாலி)

பேராசிரியர் சக்திப்புயல் என்பவரால் இயற்றப்பட்டது. மணிமேகலைப் பிரசுரத்தால் 1997 ஆம் ஆண்டு, வெளியிடப்பட்டது.

## ஐம்பொறி அகராதி

மு.ச.சிவம் என்பவரால் தொகுக்கப்பட்ட இத் தமிழ் அகராதி ஆராய்ச்சிக் கழகத்தால் 1980 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## ஒக்காபிலேரி அண்டு டயலாக்சு

இராமானுசசாமி என்பவர் இவ்வகரமுதலியின் ஆசிரியர். சென்னை பரபிரம அச்சியந்திர சாலையில் 1880 இல் இந்நூல் வெளியிடப்பட்டது.

## ஒரிசினல் ஒக்காபிலேரி தமிழ் – பர்மா

இந்நூலின் ஆசிரியர் பி.வி. இரத்தின முதலியார். 1929 இல் இந்நூல் இரங்கூன் இராமகோட்டி அச்சுக் கூடத்தில் அச்சாகி வெளிவந்தது.

## ஒளிநெறி

தேவார ஒளிநெறி – சம்பந்தர் 1946
தேவார ஒளிநெறி – அப்பர் 1962
தேவார ஒளிநெறி – சுந்தரர் 1963
திருவாசக ஒளி நெறி – 1967
திருக்கோவையார் ஒளிநெறி – 1970
திருவிசைப்பா ஒளிநெறி – 1972

இந்நூல்கள் வ.சு செங்கல்வராய பிள்ளை அவர்களால் இயற்றப்பட்டுச் சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் பதிப்பித்து வெளியிடப்பட்டது.

## ஔவை நிகண்டு

ஔவை என்னும் பெயருடைய ஒருவரால் இயற்றப்பட்ட இந்நிகண்டு பற்றிய குறிப்பு வேதகிரி முதலியார் எழுதிய இலக்கியக் களஞ்சியம் என்னும் நூலில் காணப்படுகிறது. (தமிழ் அகராதிக்கலை, சுந்தர சண்முகனார். பக்கம் 285.)

## கடற்கரைப் பரதவர் கலைச்சொல்லகராதி

இவ்வகராதி ச.முருகானந்தம் என்பவரால் இயற்றப்பட்டது. தேன்மழைப் பதிப்பகத்தால் சென்னையில் 1990 ஆம் ஆண்டு, வெளியிடப்பட்டது.

## கணிப்பொறி அகராதி

இவ்வகராதி இராம்குமார் என்பவரால் இயற்றப்பட்டது. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் 1991 ஆம் ஆண்டு, வெளியிடப்பட்டது.

## கணிப்பொறிக் கலைச்சொல் அகராதி

இவ்வகரமுதலி வளர்தமிழ் மன்றம், அண்ணா பல்கலைக் கழகத்தால் தொகுக்கப்பட்டு, 1998 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கதிரைவேற்பிள்ளை யகராதி

நா.கதிரைவேற் பிள்ளையவர்களால் தொகுக்கப்பட்ட இது, தமிழ்ச் சொல்லுக்குத் தமிழில் பொருள் தரும் அகரமுதலியாகும்.

## கந்தசுவாமியம்

இந்நூலைக் கீழ்வேளூர் சுப்பிரமணிய தேசிகர் 1844 இல் வெளியிட்டார்.

## கம்பர் காட்டும் பெண்ணோவியம் (முதல் பாகம் சீதை)

இதன் ஆசிரியர் மு.சதாசிவம். வெளியீடு பாரி நிலையம், ஆண்டு 1970. சீதையைக் குறிக்கப் பயன்படுத்திய தொடர்களைக் கொண்டது இந்நூல்.

## கம்பர் தமிழ் அகராதி

வே. இராமச்சந்திர சர்மா என்பவர், இவ்வகர முதலியை 1951 இல் (சென்னை பி.எசு.எப். மார்ட்) வெளியிட்டார்.

## கம்பர் தரும் இராமன் அருட்செல்வம்

இவ் அகரமுதலியின் ஆசிரியர் மு.சதாசிவம். இந்நூல் பாரி நிலையத்தால் 1969 இல் வெளியிடப்பட்டது. கம்பர் தாம் இயற்றிய இராமாயணத்தில் இராமனைக் குறிக்கப் பயன்படுத்திய தொடர்களை, இந்நூலில் குறிப்பிடுகின்றார்.

## கம்பராமாயண அகராதி

ஏ.எசு. சுந்தரராசன் என்பவரால் எழுதப்பட்டது. பாண்டிச்சேரியில் ஆசிரியர் பதிப்பாக 1971 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கயாதர நிகண்டு

கயாதர நிகண்டை இயற்றியவர் கயாதரர். 566 கட்டளைக் கலித்துறைச் செய்யுளைக் கொண்டு, 11,350 சொற்களுக்கு விளக்கம் தருகிறார். 11 தொகுதிகளைக் கொண்ட இந்நூல் முழுமையும், அந்தாதித் தொடையில் இயற்றப்பட்டுள்ளது.

இந்நூல் கி.பி. 17 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்றும் 15 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்றும் கூறுவர். இதன் முதற்பதிப்பு கி.பி. 1939 இல் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையால் சிறந்த முறையில் பதிப்பித்துச் சென்னைப் பல்கலைக் கழகம் வாயிலாக வெளியிடப் பெற்றது. இந்நூலில் ஆய்வாளர்களுக்குப் பயன்படும் நோக்கில், பாட வேறுபாடுகளை அந்தந்தப் பக்கங்களில் அடிக்குறிப்பாகச் சேர்த்திருப்பதும், செய்யுள் முதற்குறிப்பகராதி, முதற் பத்துத் தொகுதிகளின் பொருளடக்கம் ஆகியவையும் சேர்க்கப்பட்டுள்ளன.

## கயிலாய உரிச்சொல்

இந்நிகண்டின் ஆசிரியர் தேவூர்க் கஞ்சமலைக் கவிராயர். இந்நிகண்டின் சுவடி திருவான்மியூர் டாக்டர் உ.வே.சா. நூல் நிலையத்தில் உள்ளது.

## கல்விநூல் கலைச்சொற்கள் (பகுதி - 1)

இவ்வகராதியை நவாலியூர். கோ. நடராசன் என்பவர் இயற்றியுள்ளார். யாழ்ப்பாணத்திலிருந்து 1956 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கல்வெட்டுக் கலைச்சொல் அகரமுதலி

இவ்வகரமுதலி சி.கோவிந்தராசன் என்பவரால் இயற்றப்பட்டது. மதுரை காமராசர் பல்கலைக் கழக பதிப்புத் துறையால் 1987 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைக்களஞ்சியம்

மா.ப. பெரியசாமித்தூரன் பதிப்பாசிரியரா யிருந்து 10 தொகுதிகள் பதிப்பித்து, சென்னை தமிழ் வளர்ச்சிக் கழகத்தால் 1954 - 68 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைக்களஞ்சியம் - அகராதி

இவ்வகராதியின் ஆசிரியர் வையாபுரிப்பிள்ளை. சென்னை, தமிழ்வளர்ச்சிக் கழகத்தால் முதல் தொகுதி 1954 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைக்களஞ்சியம் "நிகண்டு"

மு. சண்முகம் பிள்ளை என்பாரால் இயற்றப்பட்டு சென்னை தமிழ் வளர்ச்சிக் கழகத்தால் 1959 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைச்சொல் அகராதி. அரசியல் பொதுத்துறை ஆட்சியியல் ஆங்கிலம் – தமிழ்

தமிழ்நாடு அரசு வெளியீடு, எழுது பொருள் அச்சகத்துறை ஆணையரால், 1960 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைச்சொல் அகராதி. உயிர் நூல் பொது அறிவு

ஆங்கிலம் – தமிழ்

தமிழ்நாட்டரசால் கோயம்புத்தூர் கலைக்கதிர் அச்சகத்தில், 1960 ஆம் ஆண்டு இவ்வகராதி வெளியிடப்பட்டது.

## கலைச்சொல் அகராதி – உளவியல்

இந்நூல் சென்னை ஆணையர் எழுதுபொருள் அச்சகத்துறையினரால் 1960 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைச்சொல் அகராதி, ஐரோப்பிய தத்துவ சாத்திரம் கி.பி. 1500 முதல்

இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இவ்வகர முதலி ஆங்கிலம் – தமிழ் அகரமுதலியாகும். 1960 இல் சென்னையில் வெளியிடப்பட்டது.

## கலைச்சொல் அகராதிகள் வரலாறு

3 பகுதிகள் ஆங்கிலம் – தமிழ்

சென்னை எழுதுபொருள் அச்சகத்துறையின் ஆணையரால், 1960 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைச்சொல் அகராதி. புவியியல்

ஆங்கிலம் – தமிழ

தமிழ் நாட்டரசால் இயற்றப்பட்டுள்ளது. கோயம்புத்தூர் கலைக்கதிர் அச்சகத்தால், 1960 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைச்சொல் அகராதி புள்ளியியல்

ஆங்கிலம் – தமிழ்

தமிழ்நாடு அரசால் உருவாக்கப்பட்டு, கோயம்புத்தூர் கலைக்கதிர் அச்சகத்தால், 1960 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைச்சொல் அகராதி இயற்பியல் – பொதுஅறிவு

தமிழ்நாடு அரசு வெளியீடு. கோயம்புத்தூர் கலைக்கதிர் அச்சகத்தால், 1960 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைச்சொல் அகராதி – வணிகவியல்

தமிழ்நாட்டரசால் உருவாக்கப்பட்டது. சென்னை எழுதுபொருள் அச்சகத்துறை ஆணையரால், 1960 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைச்சொல் அகராதி வான நூல் பொது அறிவு ஆங்கிலம் – தமிழ்

தமிழ்நாடு அரசால் உருவாக்கப்பட்டு, கோயம்புத்தூர் கலைக்கதிர் அச்சகத்தால் 1960 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைச்சொல் அகராதி வேதியல் பொது அறிவு ஆங்கிலம் – தமிழ்

தமிழ்நாட்டரசால் கோயம்புத்தூர் கலைக்கதிர் அச்சகத்தில், 1960 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைச்சொல் களஞ்சிய அகராதி

இவ்வகரமுதலி மணவை முத்தபா என்பாரால் இயற்றப்பட்டது. மணவை பப்ளிகேசன் என்ற நிறுவனத்தால் 1994 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைச்சொற்கள்

திருநெல்வேலி, சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் 1936, 1938 இல் இந்நூலை வெளியிட்டது.

## கலைச்சொற்கள்

ஆங்கிலம் – தமிழ் திருத்திய பதிப்பு.

தமிழ்நாட்டரசு வெளியீடு, சென்னை எழுதுபொருள் அச்சகத்துறையால் 1947 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

## கலைச்சொற்கள் பொதுவியல்

சாமி. வேலாயுதனார் இயற்றியது. தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகத்தாரால் 1940 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைச்சொற்கள் – இயற்பியல்

இவ்வகராதியை, தாமோதரன் என்பவர் பதிப்பாசிரியராக இருந்து பதிப்பித்துள்ளார். கோயம்புத்தூர் பூ.சா.கோ அறநிலையத்தாரால், 1968 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைச்சொற்கள் – வேதியியல்

ஆங்கிலம் – தமிழ்

இந்நூல் தாமோதரன் என்பவரால் பதிப்பிக்கப்பட்டு, கோயம்புத்தூர் பூ.சா.கோ. அறநிலையத் தாரால் 1968 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## கலைமகள் அருட்செல்வம்

இவ்வகர முதலியின் ஆசிரியர் மு.சதாசிவம். சென்னை பாரி நிலையம் இந்நூலை 1966 இல் வெளியிட்டது.

## கழக ஆங்கிலத் தமிழ்க் கையகராதி

இவ் அகரமுதலியின் ஆசிரியர் கா.அப்பாதுரை, M.A., L.T. இது சென்னை சைவ சித்தாந்த நாற்பதிப்புக் கழகத்தால், 1952 இல் பதிப்பிக்கப்பட்டது.

## கழகத் தமிழ் அகராதி

தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1964 இல் 'தமிழ் – தமிழ் அகராதி' யொன்று வெளியிட்டது. தொகுத்தவர் கழகப் புலவர் குழுவினர். இதில் பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

இந்நூலில் தமிழ் இலக்கியச் சொற்களும், தமிழ் நாட்டில் வழங்கும் வழக்குச் சொற்களும் இடம் பெற்றுள்ளன.

## கழகத் தமிழ் கையகராதி

இவ்வகர முதலி கையடக்கப் பதிப்பாக 1940 இல் வெளிவந்தது. இன்றுவரை பல பதிப்புகள் வெளிவந்துள்ளன. இது தமிழ்–தமிழ் அகர முதலியாகும். தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் இந்நூலை வெளியிட்டது.

## கழகப் பழமொழி அகர வரிசை

சென்னை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால், 1961 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## காரணப் பெயர் அகராதி

இவ்வகரமுதலியின் ஆசிரியர் மு.சதாசிவம். இவ்வகரமுதலியில் 1500 சொற்களைத் தொகுத்து, அச்சொற்கள் தோன்றியதன் காரணத்தையும் காரணங்களுக்கு ஏற்ற சான்றுகளையும் காட்டியுள்ளார்.

## கார்த்திகேயன் புதுமுறை அகராதி

இவ்வகரமுதலி நடராசன் என்பவரால் எழுதப்பட்டது. இராமச்சந்திரபுரம் (புதுக்கோட்டை) எனும் ஊரிலிருந்து, கார்த்திகேயினி அச்சகத்தில் 1949 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## காலக்குறிப்பு அகராதி

பி.சி. கந்தையாபிள்ளை என்பவரால் இயற்றப்பட்டுள்ள இவ்வகராதி, சென்னை ஆசிரியர் நூற்பதிப்புக் கழகத்தாரால் 1960 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

## கிரந்தம் – தமிழ் அகராதி

இவ்வகரமுதலியின் ஆசிரியர் தோட்ணாவூர் பார்த்தசாரதி ஐயங்கார். இந்நூல் கிரந்த சொல்லுக்குத் தமிழில் பொருள் கூறுவதாக அமைந்துள்ளது.

### கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி

இவ்வகரமுதலி டாக்டர். இ.அண்ணாமலையைத் தலைவராகக் கொண்டு. பல்வேறு மொழியறிஞர்களால் உருவாக்கப்பட்டது. திருவான்மியூரிலிருந்து 1992 ஆம் ஆண்டு முதற்பதிப்பு வெளியிடப்பட்டுள்ளது.

### கிளாசிகல் தமிழ்–ஆங்கில அகராதி

இவ்வகரமுதலி 1870 இல், சென்னை மாநிலக் கல்வித்துறைத் தலைவரின் மேற்பார்வையின்கீழ் வெளிவந்தது.

### குரி தமிழ் – இலத்தீன் அகராதி

இவ்வகரமுதலியின் ஆசிரியர் ஆர்.பி.குரிபாதிரியாரவர்கள். கி.பி.1867 இல் வெளிவந்த இது, தமிழ்ச் சொல்லுக்கு இலத்தீன் சொல்லால் பொருள் கூறுவதாம்.

### குழந்தைகள் கலைக்களஞ்சியம்

மா.ப.பெரியசாமித்தூரன் பதிப்பாசிரியராக இருந்து பதிப்பித்த இந்நூலை, பத்துத் தொகுதிகளாகத் தமிழ் வளர்ச்சிக் கழகம் 1968 ஆம் ஆண்டு வெளியிட்டது.

### குழவி உள்ளம், குழவி உள்ளக் கலைக் களஞ்சியம்

இக் கலைக்களஞ்சியம் ஈ.த. இராசேசுவரி என்பவரால் இயற்றப்பட்டது. சென்னைத் தமிழ்ச் சங்கத்தாரால், 1950 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### கைலாச நிகண்டு சூடாமணி

இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. நூலின் பெயரைக் கொண்டு ஆசிரியர் பெயர் கைலாசம் என்றிருக்கலாம் எனக் கருதலாம். இந்நூல் பிங்கலந்தையின் அமைப்பு முறையைத் தழுவியது என்கிறார், பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை. இந்நிகண்டு ஏறத்தாழ 350 ஆண்டுகளுக்குமுன் – 17 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டிருக்கலாம் என்பர் ஆராய்ச்சியாளர்கள்.

56 தொகுதிகளுடன் நூற்பா நடையில் அமைந்துள்ள இந்நிகண்டு தொகுதிப்பிரிவில் பிங்கல நிகண்டை ஒத்துள்ளது. இதில் உள்ள 56 தொகுதிகளில், முதல் 49 தொகுதிகளில் 15000 பெயர்கள் இடம் பெற்றுள்ளன.

### கோனார் தமிழ்க் கையகராதி

இவ்வகராதி ஐயன் பெருமாள் கோனார் இயற்றியது.

பழனியப்பா பிரதர்சு பதிப்பகத்தால் முதற்பதிப்பு – 1955 – ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

திருந்திய பதிப்பு – 1965, 1972 ஆகிய ஆண்டுகளில், வெளியிடப்பட்டது.

இவ்வகராதி தமிழ் – தமிழ், அதாவது தமிழ்ச் சொல்லுக்குத் தமிழ் பொருள்கூறுவதாக அமைகிறது.

### சங்க இலக்கியச் சொற்களஞ்சியம் (உயிரெழுத்துக்கு)

ச. தண்டபாணி தேசிகர் என்பவரால் இயற்றப்பட்டு, திருவாவடுதுறை ஆதீனத்தால் 1965 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

### சங்க காலச் சிறப்புப் பெயர்கள் (இலக்கியச் சிறப்புப் பெயர்களும், குடி பற்றிய சிறப்புப் பெயர்களும்)

இந்நூல் முனைவர் மொ.அ.துரை அரங்கசாமி அவர்களால் இயற்றப்பட்டது. பாரி நிலையத்தால் முதற் பதிப்பு 1960 ஆம் ஆண்டும் இரண்டாம் பதிப்பு 1980 ஆம் ஆண்டு வெளிவந்துள்ளன.

### சங்க காலப் புலவர்கள்

இந்நூல் டாக்டர். உ.வே.சாமிநாதையர் நூல் நிலைய வெளியீடாக, 1986 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இதன் பதிப்பாசிரியர் வித்துவான் சு.பால சாரநாதன் ஆவார்.

### சங்க நூற் புலவர்கள் பெயர் அகராதி

எம். பாலசுப்பிரமணிய முதலியார் இந்நூலை எழுதியுள்ளார். சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால், 1934 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

## சங்கர் ஆங்கிலம் – ஆங்கிலம் – தமிழகராதி

"The Shankar Dictionary" என்று வழங்கப்படுகிறது. ஆங்கிலத்துக்கு ஆங்கிலத்தாலும் தமிழாலும் பொருள் கூறப்படுகிறது. இதன் ஆசிரியர் A.M.S. ராகவன், B.A., L.T. இது 1952 ஆம் ஆண்டு வெளிவந்தது.

## சட்டச்சொல் அகராதி

தமிழகச் சட்டத்துறை ஆட்சி மொழிக்குழுவால் தொகுத்தளிக்கப்பட்ட இவ்வகர முதலியை, 1968 இல் தமிழ்நாடு அரசு வெளியிட்டது.

## சட்டச் சொற்பொருட் களஞ்சியம்
(முதற்பகுதி ஏ – எச்)

சென்னை, தமிழ்நாடு ஆட்சி மொழிச் சட்டச் சொல்லாக்க ஆணைக்குழு, 1967 இல் இக்களஞ்சியத்தை வெளியிட்டது.

## சட்டத்தமிழ் (அகரவரிசை)

இந்நூலின் ஆசிரியர் மா.சண்முக சுப்பிரமணியம். இந்நூலைத் திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1969இல் வெளியிட்டது.

## சதாங்கம் – ஆயிரம் விசயங்கள்

குமுதினி என்பவரால் தொகுக்கப்பட்டது. சென்னை அல்லயன் கம்பெனி மூலம், 1956 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## சதுரகராதி

இந்நூலின் ஆசிரியர் வீரமாமுனிவர் என்னும் பெசுகி (Father Beschi). இவ்வகரமுதலியின் காலம் 1732. இக்காலத்தில் காணப்படும் தமிழ் அகரமுதலி களுக்கெல்லாம் முன்மாதிரியாக, இந்நூல் விளங்குகிறது. தமிழுக்குத் தமிழ்ச் சொல்லிலேயே பொருள் கூறும் முதல் அகரமுதலி இதுவே. இவ்வகரமுதலி பெயரகராதி, பொருளகராதி, தொடையகராதி, தொகையகராதி என நான்கு பிரிவுகளை உடையது.

## சம்பிரதாய அகராதி

இவ்வகர முதலியை பி.ஐ. வேங்கடாச்சாரி, திருவேங்கடாச்சாரி ஆகிய இருவரும் இயற்றியுள்ளனர். காஞ்சிபுரம் வைணவ கிரந்த முத்ராப்க சபையால், 1912 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## சம்சுகிருதம் – தமிழ் அகராதி

இவ்வகரமுதலியின் ஆசிரியர் நே.ஈ.வேங்கடேச சர்மா. இது 1937 இல் வெளிவந்தது. சமற்கிருத எழுத்தாலேயே எழுதப்பட்ட சமற்கிருதச் சொல்லுக்குத் தமிழ்ச் சொல்லால் பொருள் கூறுவதாகும்.

## சமயச் சொல்லகராதி

முனைவர் சீ.சசிவல்லி என்பவரால் இயற்றப்பட்ட இவ்வகராதி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தால் 1987 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## சமற்கிருதம் – தமிழ் அகராதி

இவ்வகரமுதலியின் ஆசிரியர் பாபநாசம் சிவன். காலம் 1962. சமற்கிருத எழுத்தால் எழுதப்பட்ட சமற்கிருதச் சொற்களுக்குத் தமிழ்ச் சொல்லால் பொருள் கூறும் அகரமுதலி.

## சித்த வைத்திய மூலிகை அகராதி

டாக்டர். டி.எம்.சித்தார்த்தன் என்பவரால் இயற்றப்பட்டது. தேவகோட்டை பஞ்சநாதன் என்பவரால், சென்னை ஆப்செட் அச்சகத்தால் வெளியிடப்பட்டது.

## சிந்தனைக் களஞ்சியம்

சீதாலட்சுமி அவர்களைத் தொகுப்பாசிரியராகக் கொண்டு தொகுக்கப்பட்ட இந்நூல், சென்னை இராமன் பதிப்பகத்தால் 1978 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## சிந்தாமணி நிகண்டு

இந்நிகண்டு கா. வைத்தியலிங்கம் பிள்ளையால் 1876 இல் சென்னை இலக்குமி விலாச அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

## சில தமிழ்ச் சொல் ஆராய்ச்சி

இந்நூலின் ஆசிரியர் கே.என். சிவராச பிள்ளை. 1968 இல் சிவராசப்பிள்ளை நினைவு மன்ற வெளியீடாக வெளியிடப்பட்டது.

## சிலம்புச் செல்வம்

மு.சுப்பிரமணியன் என்பவர் இந்நூலை இயற்றியுள்ளார். விசயமங்கலம் ஆசிரியர் பதிப்பாக 1975 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## சிலேடையகர வரிசை

இந்நூல் சு.அ. இராமசாமிப்புலவர் இயற்றியது. சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1960 ஆம் ஆண்டில், இந்நூலை வெளியிட்டது.

## சிறப்புச் சொற்கள் துணை அகராதி[1]

(ஆங்கிலம்–தமிழ்)

அரசினர் போக்குவரத்துத்துறை, உள்ளாட்சித் துறை, கூட்டுறவுத்துறை, சிறைத்துறை போன்ற பல்வேறுதுறைகளுக்கான சிறப்புச் சொற்கள் துணை அகராதி தமிழ்நாடு அரசால் வெளியிடப்பட்டது. இதனை எழுதுபொருள் அச்சகத்துறை, 1962 ஆம் ஆண்டு சென்னையில் வெளியிட்டது.

## சிறப்புச் சொற்கள் துணை அகராதி[2]

(கால்நடைத் துறை ஆங்கிலம் – தமிழ்)

தமிழ்நாடு அரசு வெளியீடு. சென்னை ஆட்சி மொழிக் குழுவினரால், 1961 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## சிறப்புப் பெயரகராதி[1]

இவ்வகர முதலி ஈக்காடு இரத்தினவேலு முதலியார் என்பவரால் எழுதப்பட்டது. சென்னை பண்டித மித்திர யந்திர சாலையிலிருந்து, 1906 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## சிறப்புப் பெயரகராதி[2]

இவ்வகர முதலியின் ஆசிரியர் சு.அ. இராமசாமிப்புலவர். சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால், 1970 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## சிற்றிலக்கிய அகராதி

முனைவர் ந.வீ.செயராமனால் இயற்றப்பட்டது. நறுமலர்ப் பதிப்பகத்தாரால், 1983 ஆம் ஆண்டு வெளியிட்டது.

## சிற்றிலக்கியப் புலவர் அகராதி

முனைவர் ந.வீ.செயராமன் இயற்றியது. நறுமலர்ப் பதிப்பகத்தால், 1983 ஆம் ஆண்டு வெளியிட்டது.

## சிறிய கழகத் தமிழகராதி

இவ்வகரமுதலியைச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகப் புலவர் குழுவினர் தொகுத்தனர். இதனைக் கழகம் 1964 இல், சென்னையில் வெளியிட்டது.

## சீவ சிவ குண விளக்கம்

உ.வேம்புலிப் பண்டிதர் என்பவரால் இயற்றப் பட்டுள்ளது. சென்னை ஆதி வைதிர மனோரஞ்சினி அச்சுக் கூடத்தால், 1874 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## சொல்லடைவு அகராதி

இவ்வகர முதலியின் ஆசிரியர் வி.ஐ. சுப்பிரமணியம். கலைக்கதிர். மார்ச்சு 1963 இல் வெளிவந்தது.

## சுப்பையர் ஆங்கிலம் – ஆங்கிலம் – தமிழகராதி

The Excelsior Senicr School Dictionary English-English-Tamil என்னும் பெயருடைய இவ்வகரமுதலியின் ஆசிரியர் கே.வி. சுப்பையர். முதற்பதிப்பு 1932 இல் வெளிவந்தது.

## சுருக்கத் தமிழ் அகராதி

Concise Tamil Lexicon என அழைக்கப்படும் இவ்வகரமுதலி 1955 இல் சென்னை – மயிலாப்பூர் –

மதராசு லாசெனரல் அச்சுக் கூடத்தால் வெளியிடப்பட்டது. இது தமிழுக்கு ஆங்கிலத்தாலும், தமிழாலும் பொருள் கூறுவது. சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்ட தமிழ்ப் பேரகரமுதலியின் சுருக்கமே இவ்வகரமுதலி.

## சூடாமணி

நிகண்டு நூல்களுக்கெல்லாம் தலைமணியாய் போற்றப்படுகிறஇந்நூல் புழக்கத்திற்கு வந்தபின் திவாகரம், பிங்கலம் போன்ற நிகண்டுகளின் பயிற்சி குறையலாயிற்று. சொற்பொருள்களை எளிதாய்ப் பதிய வைக்கும் முறையிலும், எளிதிற் கண்டுகொள்ளும் வகையிலும், சூடாமணியின் அமைப்பு சிறப்பாகவுள்ளது.

இந்நூல் ஆசிரிய மண்டில (விருத்த)ப்பாவால் அமைந்தது. இதன் ஆசிரியர் மண்டல புருடர். பிறந்த ஊர் தொண்டை நாட்டிலுள்ள வீரை என்னும் வீராபுரம். இவ்வூர், இப்பொழுது பெருமண்டூர் என வழங்கப்படுகிறது.

இவர் சூடாமணி நிகண்டு தவிர, 'திருப்புகழ் புராணம்' என்னும் நூலையும் எழுதியுள்ளார். இவர் தாம் எழுதிய நிகண்டு நூலுக்கு வைத்த பெயர் 'நிகண்டு சூடாமணி' என்பதாகும். நிகண்டு என்னும் சொல்லை முதன்முதலில், தமிழில் வழக்கத்தில் கொண்டு வந்தவர் இவரே.

திவாகரத்தைப்போல் சூடாமணி நிகண்டு 12 தொகுதிகளை – 1197 பாடல்களைக் கொண்டது. இதன் காலம் 16 ஆம் நூற்றாண்டு. இதில் அமைந்த 12 தொகுதிகளில், 11 ஆம் தொகுதியாகிய ஒரு சொல் பல்பொருள் தொகுதி, இக்காலத்து அகர முதலி போன்று பயன்படுகிறது. ககர எதுகை முதலாக னகர எதுகை ஈறாகப் 18 தொகுதிகளில், பொருள் விளக்கப் பட்டுள்ளது. இத்தொகுதியை மட்டும் பதினோராவது நிகண்டு என்ற பெயருடன் தனி நூலாகவே உரையுடன் பலர் பதிப்பித்துள்ளனர். இத் தொகுதியில் 310 பாடல்கள் உள்ளன. இப்பாடல்களால் பொருள் விளக்கம் பெற்ற சொற்கள் 1575.

சூடாமணி நிகண்டு நூற்றுக்குமேற்பட்ட பதிப்புக்களைக் கொண்டது.

## செங்கை மாவட்ட ஊர்ப் பெயர்கள்

இந்நூலை முனைவர் கரு. நாகராசன் என்பவர் இயற்றியுள்ளார். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தால் 1985 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## செந்தமிழ் அகராதி

1950 இல் சென்னையில் ந.சி. கந்தையா பிள்ளை, ஆசிரியர் நூற்பதிப்புக் கழக வாயிலாக இவ்வகர முதலியை வெளியிட்டார்.

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலி

ஞா. தேவநேயப் பாவாணரை இயக்குநராக அமர்த்தி, 1974 ஆம் ஆண்டு மே மாதம் 8 ஆம் நாள், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித்திட்ட இயக்ககத்தை, தமிழக அரசு தோற்றுவித்தது.

இவ்வகர முதலி 12 மடலங்களில் 31 பகுதிகளைக் கொண்டது. 8 மடலங்களின் 24 பகுதிகள் வெளிவந்து விட்டன. எஞ்சிய 7 பகுதிகளின்தொகுப்பு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

## சொ்மன் – தமிழ் அகராதி (Word Book)

இவ்வகரமுதலி 1852 க்கு முன் தொகுக்கப்பட்டது.

## சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி (Tamil Lexicon)

இவ்வகரமுதலி சென்னைப் பல்கலைக் கழகத்தால் வெளியிடப்பட்டது. இது தமிழ் சொல்லுக்கு ஆங்கிலத்தாலும் தமிழாலும் பொருள் கூறும் சிறந்த அகரமுதலியாகும். இவ்வகரமுதலி ஆறு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பெரும் பிரிவுகளிலும் பல உட்பிரிவுகள் உண்டு. மொத்தம் ஆறு பெரும் பிரிவுகளிலும், இருபத்தைந்து உட்பிரிவுகள் உள்ளன. இவ்வகரமுதலி 1923 இல் தொடங்கி 1936 இல் நிறைவுறுத்தப் பெற்று வெளியானது. இவ்வகரமுதலியில் 1,04,405 சொற்கள் இடம் பெற்றுள்ளன.

ஆறு பெரும் பிரிவுகளிலும் அடங்காமல் விடுபட்ட 20,000 சொற்கள் பிற்சேர்க்கை (Supplement) யாக (மூன்று பாகங்களாக) 1938 இல் வெளியிடப்பட்டது.

இப்பேரகரமுதலியைத் தோற்றுவிக்கும் திட்டம் 1911 இல் சென்னை அரசின் கவனத்திற்குக் கொண்டு வரப்பெற்று, அதனை உருவாக்கும் பொறுப்பு சென்னைப் பல்கலைக் கழகத்திடம் ஒப்படைக்கப்பட்டது.

1926 இல் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை முதன்மை ஆசிரியர் பொறுப்பில் அமர்த்தப்பட்டு அவர் தலைமையில் அகரமுதலி உருவாகியது.

## சொற்களின் சரிதம்

ஆசிரியர் : வையாபுரிப் பிள்ளை, எஸ். சென்னை, பாரி நிலையத்தாரால் 1956 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## சொற்பொருள் களஞ்சியம், இந்துத்தானி

இக்களஞ்சியத்தின் ஆசிரியர் தேவராசு வேங்கராவ் பந்துலு. இது 1887 இல் சென்னை வர்த்தமான தரங்கனி அச்சுக் கூடத்தில் வெளியிடப்பட்டது.

## சொற்பொருள் விளக்கம் என்னும் தமிழகராதி

இவ்வகரமுதலி தமிழ்ச் சொற்கட்குச் சொற்களாலும் சொற்றொடர்களாலும் பொருளை விளக்குகிறது. இதன் ஆசிரியர் யாழ்ப்பாணம் ச.சுப்பிரமணிய சாத்தியார். இது யாழ்ப்பாணத்தில் 1924 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## சோதிடக் கலைக் களஞ்சியம்[1]

இக்களஞ்சியம் எசு.பி.சுப்பிரமணியன் என்பவரால் எழுதப்பட்டது. நர்மதா பதிப்பகத்தாரால் 1994 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## சோதிடக் கலைக் களஞ்சியம்[2]

இக்களஞ்சியம் மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழுவால் உருவாக்கப்பட்டது. இதன் பதிப்பாசிரியர் லேனா தமிழ்வாணன் ஆவார். மணிமேகலைப் பிரசுரத்தால் 1983 ஆம் ஆண்டு முதற்பதிப்பும்; 1989, 1997 ஆம் ஆண்டுகளில் மறுபதிப்புகளும் வெளியாகியுள்ளன.

## சோதிடக் கலைச்சொல் பொருள் விளக்க அகராதி

இவ்வகரமுதலி பி.ஆர். கிருட்டிணன் என்பவரால் இயற்றப்பட்டது. ஜகதம்பா சேரிட்டபிள் டிரஸ்டு நிறுவனத்தால் 1993 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## சோதிடக் கடலகராதி

இவ்வகரமுதலியின் ஆசிரியர் டி.என். அரங்கசாமி பிள்ளை. இது தமிழ்-தமிழ் அகரமுதலி. 1900 இல் திண்டுக்கல் நேட்டிவ் ராயல் அச்சகம் இந்நூலை வெளியிட்டது.

## சொற்பொருள் விளக்கம் என்னும் சோதிடப் பேரகராதி

இதன் ஆசிரியர் கூடலிங்கம் பிள்ளை. இவ்வகர முதலி தமிழுக்குத் தமிழ்ப் பொருள் கூறுவது. 1924 ஆம் ஆண்டில், மதுரை மீனலோசினி அச்சகம், இதனை வெளியிட்டது.

## தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகளிலுள்ள அருஞ்சொற் பொருட்குறிப்பு

சா. கணேசன் என்பவரால் இயற்றப்பட்ட இந்நூல், தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையினரால், 1970 ஆம் ஆண்டு சென்னையில் வெளியிடப்பட்டுள்ளது.

## தஞ்சை மாவட்ட ஊர்ப் பெயர்கள்

இந்நூலின் ஆசிரியர் மெய்.சந்திரசேகரன் ஆவார். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தால், 1983 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ் அகராதி

இவ்வகரமுதலி மாருதிதாசன், கே.மாணிக்க முதலியார், என். அங்கமுத்து, என்.கலைவாணி, எசு. பதுமாவதி ஆகியோரால் தொகுக்கப்பட்டது. நர்மதா பதிப்பகத்தால் 2000 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ் அகராதிக்கலை

சுந்தர சண்முகனார் இயற்றியுள்ளார். புதுவைப் பைந்தமிழ்ப் பதிப்பகம் பதிப்பித்து, 1965 ஆம் ஆண்டு வெளியிட்டது. இரண்டாம் பதிப்பு சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் 1971 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ் அகராதியியல்

இதன் ஆசிரியர் வ. செயதேவன். சென்னை அன்பு நூலகத்தால் 1977 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ் அகராதி வரலாறு[1]

இக்கட்டுரையின் ஆசிரியர் து.சேதுப்பிள்ளை ஆவார். ஆனந்த போதினியில் டிசம்பர் 1931 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ் அகராதி வரலாறு[2]

சோமலெ எழுதியது. மஞ்சரி, 1962 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ் அறிஞர் அகராதி

இந்நூலாசிரியர் கிருட்டிணசாமிப்பிள்ளை ஆவார். சென்னையில் 1939 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ் ஆங்கில அகராதி[1]

இந்நூலை இயற்றியவர் இர.பாலகிருட்டிண முதலியார். தென்னிந்தியத் தமிழ்ச் சங்கத்தால் சென்னையில், 1976 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ் – ஆங்கில அகராதி[2]

இவ்வகரமுதலியின் ஆசிரியர் வீரமாமுனிவர் (பெஸ்கி). இது தமிழ்ச் சொல்லுக்கு நேரே ஆங்கிலச் சொல்லால் பொருள் கூறுவது.

## தமிழ் ஆங்கிலச் சொற்களஞ்சியம்

இக்களஞ்சியம் கருணானந்த சுவாமி என்பவரால் இயற்றப்பட்டது. பிரபாகர அச்சுக்கூடத்தால், 1869 இல் சென்னையில் வெளியிடப்பட்டது.

## தமிழ் ஆட்சிச் சொற்கள் (அகரமுதலியும் – விளக்கமும்)

இந்நூலில் பெரும்பாலும், ஆட்சி நடத்துவதற்குத் தேவையான சொற்கள் இடம்பெறுகின்றன. அகரவரிசையில் ஆங்கிலச் சொற்கட்கு நேரான தமிழ்ச் சொற்கள் இதில் கொடுக்கப்பட்டுள்ளன. இதன் ஆசிரியர் கீ.இராமலிங்கனார். மதுரை விசாலாட்சி பதிப்பகம் 1960 இல் இந்நூலை வெளியிட்டது.

## தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி

இந்நூலின் ஆசிரியர் ஏ.வி. சுப்பிரமணிய அய்யர். சென்னை பாரி நிலையத்தால் 3 ஆம் பதிப்பு 1977 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. முதலிரு பதிப்புக்களின் ஆண்டுகளை அறிய முடியவில்லை.

## தமிழ் இங்கிலீசு அகராதி

இவ்வகரமுதலியைத் தொகுத்தவர் எச்சு. பெயசெனெனர்சு (H.Beison-herz). இது 1897 இல் தரங்கம்பாடியில் வெளியிடப்பட்டது.

## தமிழ் இந்தி கோசு (ஷ)

இவ்வகரமுதலி தமிழ்ச் சொல்லுக்கு இந்திச் சொல்லால் பொருள் கூறுவது. கோசு (ஷ்) என்பது கோசம். கோசம் என்றால் தொகுதி என்று பொருள். இதன் தொகுப்பாசிரியர் பண்டித அரிகர சர்மா. தட்சிண பாரத இந்தி பிரச்சார சபா, இவ்வகரமுதலியைச் சென்னையில் 1926 இல் வெளியிட்டது.

## தமிழ் இலக்கிய அகராதி

இவ்வகரமுதலியின் ஆசிரியர் வித்துவான் பாலூர்க் கண்ணப்ப முதலியார். இந்நூலை 1957 இல் சென்னை சென்ட்ரல் புக் டிப்போ வெளியிட்டது. இவ்வகரமுதலி சொல்லுக்குச் சொல் பொருள் தருவதில்லை. பத்தி பத்தியாகப் பல சொற்றொடர்களால் விளக்கம் தருவது. இது சொல் அகராதி, தொகையகராதி, பிரபந்த அகராதி, நூல் அகராதி, புலவர் அகராதி, பிற்சேர்க்கை என்னும் பிரிவுகளையுடையது.

## தமிழ் இலக்கிய அகராதி – இலக்கிய அகர வரிசை

ந.சி. கந்தையாபிள்ளையால் இந்நூல் எழுதப்பட்டது. சென்னை ஆசிரியர் நூற்பதிப்புக் கழகத்தால் 1952 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ் இலக்கியக் கலைச்சொல் அகராதி

இவ்வகராதியை முனைவர் ப.கோபாலன் என்பவர் இயற்றியுள்ளார். ஐந்திணைப் பதிப்பகத்தால் 1989 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ் – இலத்தீன் அகராதி (சீகன் பால்கு)

இவ்வகரமுதலியின் ஆசிரியர் சீகன் பால்கு என்னும் செர்மானியர். 1715–16 இல் இவ்வகரமுதலி வெளியிடப்பட்டது. தமிழ்ச் சொல்லுக்கு இலத்தீன் சொல்லால் பொருள் தருவது.

## தமிழ் – இலத்தீன் பாலம்

இதன் ஆசிரியர் சுந்தர சண்முகனார். புதுவைப் பைந்தமிழ்ப் பதிப்பகத்தால், 1970 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ் உரிச்சொற்பனுவல்

இராம சுப்பிரமணிய நாவலர், கவிராச பண்டிதர் எனும் இருவரால் இயற்றப்பட்ட இப்பனுவல், நாகர்கோயில் செந்தமிழ் நிலையத்தாரால், 1984 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ்ச் செல்வம்

இவ்வகர முதலியின் ஆசிரியர் மு.சதாசிவம். இது ஒருபொருட் பன்மொழி அகரமுதலியாகும்.

## தமிழ்ச் சொல்லகராதி[1]

இவ்வகராதியை யாழ்பாணத்தைச் சேர்ந்த கதிரைவேற்பிள்ளையவர்கள் இயற்றியுள்ளார். மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர்களால் ஆய்வு செய்யப் பெற்ற இது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தாரால், 1998 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இவ்வகராதி மூன்று பாகங்களாக வெளிவந்துள்ளது.

## தமிழ்ச் சொல்லகராதி[2]

சுப்பிரமணியக் கவிராயரால் பதிப்பிக்கப்பட்டு, மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடாக, 1910 இல் வெளிவந்தது.

## தமிழ் சமற்கிருத அகராதி

இவ்வகராதி வெங்கடேச சர்மா என்பவரால் இயற்றப்பட்டது. நே.ஈ. பிரம்ம சாயுச்சிய புத்தகாலயப்பிரசுரத்தால், சென்னையில் 1937 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ் சிங்களம் ஒக்காபிலரி

இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இதைக் கொழும்பு சரசுவதி புத்தக சாலை, 1954 இல் வெளியிட்டது.

## தமிழ் சிங்கள மா அகராதி

இவ்வகரமுதலியின் தொகுப்பாளர் பண்டித இசெல்லே தமரத்தின தேரோ (Pandit Hisselle Dhammaratna Thero) என்பவர். இது 1948 இல் இலங்கையில் வெளியிடப்பட்ட இவ்வகரமுதலி, தமிழுக்குச் சிங்கள மொழியில் பொருள் கூறுகிறது.

## தமிழ் – தமிழ் ஆங்கில அகராதி

சென்னை மணிமேகலைப்பிரசுரம், 1983 இல் இந்நூலை உருவாக்கி வெளியிட்டுள்ளது.

## தமிழ் – தமிழ் ஆங்கில அகராதி லிப்கோ

சென்னை தி லிட்டில் பிளவர் கம்பெனி, 1966 இல் இந்நூலை உருவாக்கி வெளியிட்டுள்ளது.

## தமிழ்நாட்டு ஆட்சிச் சொற்கள்

ஆங்கிலம் – தமிழ்

அண்ணா தமிழ்ச் சுருக்கெழுத்துக் கல்லூரியால் உருவாக்கப்பட்டு, 1968 ஆம் ஆண்டு சென்னையில் வெளியிடப்பட்டது.

## தமிழ்நாட்டுப் பழமொழி அகரவரிசை

சென்னை செங்குந்தமித்திரன் அச்சகத்தால், 1938 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ்நாட்டுப் பழமொழி அகர வரிசைச் சுருக்கம்

தி. நீலாம்பிகை அம்மையாரால் இயற்றப்பட்ட இந்நூல் சென்னை தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தால், 1939 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ் நாட்டுப் பழமொழிகள்

இந்நூலை துர்காதாசு – எசு.கே.சாமி ஆகியோர் தொகுத்துள்ளனர். கங்கை புத்தக நிலையத்தாரால், 1998 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ்ப் பாதுகாப்புக் கழகம், ஆட்சிமுறைச் சொல் அகராதி ஆங்கிலம் – தமிழ்

தமிழ்நாட்டரசால் உருவாக்கப்பட்டது. முதற்பதிப்பு 1941 ஆம் ஆண்டும், நான்காம் பதிப்பு 1950 ஆம் ஆண்டும், சென்னையிலிருந்து வெளியிடப்பட்டது.

## தமிழ்ப் புலவர் அகர வரிசை

சு.அ. இராமசாமிப்புலவரால் இயற்றப்பட்டது. சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால், 1959 – 62 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது.

## தமிழ்ப் புலவர் அகராதி, புலவர் அகர வரிசை

ந.சி. கந்தையாபிள்ளை இயற்றிய இந்நூல் சென்னை ஆசிரியர் நூற்பதிப்புக் கழகத்தால், 1952 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ்ப்புலவர் வரலாற்றுக் களஞ்சியம் பகுதி 1

முனைவர் வ.சுப மாணிக்கம் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு, இந்நூலை அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1974 ஆம் ஆண்டு வெளியிட்டது.

## தமிழ்ப்புலவர் வரலாற்றுக் களஞ்சியம்

முனைவர் வெ. பழநியப்பன், உ. பழநி என்பவர்களால் இயற்றப்பட்ட இக்களஞ்சியம் நான்கு தொகுதிகளைக் கொண்டது. அண்ணாமலைப் பல்கலைக் கழக வயிரவிழா வெளியீடாக, 1989 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ்ப் பேரகராதி[1]

இவ்வகராதி நா. கதிரைவேற் பிள்ளையால் 4 பாகங்களாக இயற்றப்பட்டது. சென்னை வித்யாரத்நாகரம் எனும் அச்சுக்கூடத்தாரால், 1899 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ்ப் பேரகராதி[2]

இவ்வகராதியை த.குப்புசாமி நாயுடு என்பவர் இயற்றியுள்ளார். சிறீ கோபால விலாச அச்சியந்திர சாலையால், சென்னையில் 1966 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ் – ருசிய அகராதி

பியாதிகோர்சுகி, அ,மொ. உரூதீன், எண்கெ.

பிறமொழி, இனமொழி அகராதிகளின் அரசு பதிப்பகம். மாசுகோ 1960.

## தமிழ் – பர்மா அகராதி

கு. புள்ளப்பச் செட்டியார் என்பவரால் இயற்றப்பட்ட இவ்வகராதி, பிறையர் அச்சுக் கூடத்தாரால் இரங்கூனிலிருந்து 1905 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## தமிழ் – பர்மா– இந்துத்தானி ஒக்காபிலேரி

இதன் ஆசிரியர் சி. நாகையா செட்டி, இரங்கூன் நவீன கதா புத்தகசாலை 1927 இல் இந்நூலை வெளியிட்டது. தமிழ் – பர்மா – இந்துத்தானி என்ற அமைப்பில் சொற்பொருள் கூறப்பட்டுள்ளது.

## தமிழ் – பர்மா ஒக்காபிலேரி

இந்நூலின் ஆசிரியர் சி. நாகையா. இரங்கூன் நவீன கதா புத்தகசாலை. 1928 இல் இந்நூலை வெளியிட்டது. தமிழ்ச்சொற்களுக்கு ஏற்ற பர்மியச் சொற்களைக் காட்டுவதாக, இந்நூல் அமைந்துள்ளது.

## தமிழ் – பிரெஞ்சு அகராதி[1] (word Book)

இவ்வகரமுதலியின் ஆசிரியர் வீரமாமுனிவர் (பெசுகி). கி.பி.1744 இல் வெளியிடப்பட்டது. தமிழ்ச் சொல்லுக்குப் பிரெஞ்சுச் சொல்லால் பொருள் கூறுவது.

## தமிழ் – பிரெஞ்சு அகராதி[2]

இவ்வகரமுதலி புதுவை மாதா கோயில் அச்சகத்தாரால் வெளியிடப்பட்டது.

### தமிழ் – பிரெஞ்சு அகராதி[3]

இவ்வகரமுதலியின் ஆசிரியர் இருவர் "முசே" (L.Mousset) மற்றும் "துய்புய்" (L. Dupus). தமிழ்ச் சொல்லுக்குப் பிரெஞ்சுச் சொல்லால் பொருள் கூறும் இவ்வகரமுதலி, புதுச்சேரி மாதா கோயில் அச்சகத்தால் கி.பி.1855 இல் வெளியிடப்பட்டது.

### தமிழ் – போர்ச்சுகீசிய அகராதி

இவ்வகரமுதலியின் ஆசிரியர் "ஆந்தம் தெப்பரோயன்சா" (Fr. Antem de Proenca) என்னும் மேனாட்டுத் துறவியார். இவ்வகராதி கி.பி. 1679 யில் மலையாள அம்பலக்காடு என்னும் இடத்தில் பதிப்பித்து வெளியிடப்பட்டது. இது தமிழ்ச் சொற்களை அகரவரிசையில் முதலில் நிறுத்தி, அவற்றிற்கு நேரான போர்ச்சுகீசியச் சொற்களை எதிர்ப்பக்கத்தில் கொடுத்திருக்கும் அகரமுதலியாகும்.

### தமிழ் முகம்மதிய மொழி விளக்க ஒக்காபிலேரி

இந்நூல் செ. சந்துலாலா என்பவரால் எழுதப்பட்டு 1874 ஆம் ஆண்டு சென்னை சிறீதர முத்திராசரசாலை என்னும் அச்சுக் கூடத்திலிருந்து வெளியிடப்பட்டது.

### தமிழ்மொழி இலக்கியக் கட்டுரைகள் தமிழில் அகராதிகள்

சரவண. ஆறுமுக முதலியார் அவர்கள் இயற்றியுள்ளார். சென்னை பழனியப்பா பிரதர்சு 1971 ஆம் ஆண்டு வெளியிட்டது.

### தமிழ்மொழி யகராதி

இவ்வகரமுதலியின் ஆசிரியர் கா.நமச்சிவாய முதலியார். இது 1918 இல் வெளியானது. தமிழ்ச் சொல்லுக்குத் தமிழில் பொருள் கூறுவதாய் இது அமைந்துள்ளது.

### தமிழ் வேதாகம ஒட்ட வாக்கிய அகராதி

இவ்வகரமுதலியை டி.ஏ. துரோவர், எல்.டி. பெஞ்சமின் ஆகிய இருவரும் இயற்றியுள்ளனர். சென்னை கிறித்துவ இலக்கியச் சங்கத்தாரால் 1943–51 ஆம் ஆண்டு 2 தொகுதிகளாக வெளியிடப்பட்டது.

### தமிழக ஊர்களின் பெயர்க்காரணங்களும் சிறப்புகளும்

மணிமேகலை பிரசுர ஆசிரியர் குழுவால் உருவாக்கப்பட்டது. இதன் பதிப்பாசிரியர் லேனா தமிழ்வாணன் ஆவார். மணிமேகலை பிரசுரத்தால் 1988 ஆம் ஆண்டு இரண்டு பாகங்களாக வெளியிடப்பட்டுள்ளது.

### தமிழகம் ஊரும் பேரும்

இந்நூல் இரா.பி.சேதுப்பிள்ளையால் இயற்றப்பட்டது. பழனியப்பா பிரதர்சு என்ற பதிப்பகத்தால் முதற்பதிப்பு 1946 ஆம் ஆண்டும், ஆறாம் பதிப்பு 1987 ஆம் ஆண்டும் வெளியிடப்பட்டது.

### தமிழமிழ்த அகராதி

சென்னை சி. குமாரசாமி நாயுடு சன்சு வெளியீடாக 1940 இல் வெளியிடப்பட்டது.

### தமிழில் கலந்துவிட்ட பிறமொழிச் சொற்களுக்கான அகராதி

இந்நூல் மணிமேகலை பதிப்பக ஆசிரியர் குழுவால் உருவாக்கப்பட்டது. மணிமேகலைப் பதிப்பகத்தில், லேனா தமிழ்வாணனைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 1991 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### தமிழிலக்கிய அரபுச் சொல் அகராதி

அறிஞர் ம.மு.உவைசு என்பவரால் இயற்றப்பட்ட இவ்வகராதி மதுரை காமராசர் பல்கலைக் கழக பதிப்புத் துறையால் 1983 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### தமிழும் சிங்களமும்

இந்நூலின் ஆசிரியர் எம். ஆர். வேலாயுத செட்டியார். கொழும்பு சிவகாமி பிரசு இந்நூலை 1903 இல் வெளியிட்டது.

## தரங்கம்பாடி அகராதி

இவ்வகரமுதலி தமிழ்ச் சொல்லுக்கு ஆங்கிலப் பொருள் கூறுவதாகும். கி.பி.1897 இல் இவ்வகரமுதலி தோன்றியது. இது வின்சுலோ அகரமுதலி வடிவத்தில் அமைந்தது. இதில் 33,000 சொற்கள் உள்ளன. இதன் இரண்டாம் பதிப்பு 'பெய் செனொர்சு' (Rev. H. Beisenherz) என்பவரால் 1910 இலும், மூன்றாம் பதிப்பு 'பெக்செல்' (Rev. D. Bexell) என்பவரால் 1933 இலும் வெளிவந்தன.

## தற்காலத் தமிழ்ச்சொல் அகராதி

இவ்வகரமுதலியின் ஆசிரியர் ச. பவானந்தம் பிள்ளை. இது 1925 இல் வெளியிடப்பட்டது. ஆசிரியர் தம் காலத்தில் புதிதாய் வழக்கத்துக்கு வந்த பல்வகைக் கலைச் சொற்களைத் தொகுத்துப் பொருளுடன் வெளியிட்டார்.

## தாட்சான்யனர் வைத்திய அட்டவணை

இவ்வகராதியின் ஆசிரியர் தாட்சான்யனர் ஆவார். ஆங்கில முன்னுரையுடன் ஆர். திராயகராசன் என்பவர் பதிப்பித்துள்ளார். சென்னை அரசினர் ஓரியண்டல் சீரியல் எனும் அச்சகத்திலிருந்து 1951 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

## தாதுமாலை

நீர்வேலி சங்கர பண்டிதர் இயற்றிய இந்நூல் 1908 ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்தில் வெளியிடப்பட்டுள்ளது.

## தி எலிட் ஆங்கில – ஆங்கிலத் தமிழ் அகராதி (The Elite English - English - Tamil Dictionary)

இவ்வகரமுதலி ஆங்கிலச் சொல்லுக்கு ஆங்கிலத்திலும் தமிழிலும் பொருள் கூறுவது.

## திக்சியனரியம் தமுலிசம் (Dictionarium Tamulieum)

பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றிய முதல் அகரமுதலி இதுவாகும். இதன் ஆசிரியர் 'பர்தோல்மாசு சீகன் பால்கு' (Bartholmaeus Ziegenbalg) என்னும் மேனாட்டவர். இது 1712 இல் வெளிவந்தது.

## திருக்குறள் அகராதி

ந.சி. கந்தையாபிள்ளை என்பவரால் இயற்றப்பட்டது. சென்னை ஆசிரியர் நூற் பதிப்புக் கழகத்தால் 1961 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## திருக்குறள் சொல்லடைவு

சாமி. வேலாயுதம் பிள்ளையால் இயற்றப்பட்டுச் சென்னை மொழியரசிப் பதிப்பகத்தால் 1952 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## திருக்குறள் சொற்குறிப்பு அகராதி

வி. மார்க்கசகாயஞ் செட்டியார் என்பவர் இயற்றியுள்ளார். சென்னை நோபிள் அச்சகத்தால் 1921 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## திருக்குறள் சொற்பொருள் அகர வரிசை

வி. மார்க்கசகாயஞ்செட்டியார், சு.அ. இராமசாமிப் புலவர் ஆகிய இருவராலும் இந்நூல் சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் 1969 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## திருக்குறள் பொருளகராதி

மு. கோவிந்தசாமியால் எழுதப்பட்ட இவ்வகராதி அண்ணாமலை பல்கலைக் கழகத்தால் 1972 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## திருக்குறள் மேற்கோள் விளக்கம்

அ. தாமோதரன் என்பவர் இயற்றியுள்ள இந்நூல் கைடல்பர்க்கு பல்கலைக் கழகத்தால் 1970 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## திருக்கோவையார் ஒளிநெறி

இவ்வொளிநெறி 1970 இல் கழக வெளியீடாக வெளிவந்தது. இதன் ஆசிரியர் வ.சு.செங்கல்வராய பிள்ளை ஆவார். மணிவாசகரின் திருக்கோவையாரி லுள்ள சிறந்த பல செய்திகளைப் பல தலைப்புகளின்கீழ் அகரவரிசைப்படுத்தித் தந்துள்ளார்.

## திருட்டாந்த சங்கிரகம் (Collection of Proverb in Tamil)

இந்நூலின் தொகுப்பாசிரியர் பி. பெர்சிவல் (P. Percival). இது 1843 இல் யாழ்ப்பாணத்தில் பதிப்பிக்கப்பட்டது. இதில் 1873 தமிழ்ப் பழமொழிகள் ஆங்கில மொழி பெயர்ப்புடன் அகரவரிசையில் அமைந்துள்ளன.

## திருத்தலங்கள் வரலாறு (இரண்டு பாகம்)

இந்நூல் பண்டிதன் (வித்துவான்) சு.பாலசாரநாதன் என்பாரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு டாக்டர்.உ.வே.சாமிநாதையர் நூல் நிலையத்தாரால் 1997 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## திருமகள் அருட்செல்வம்

இந்நூலின் ஆசிரியர் மு. சதாசிவம். இந்நூல் பாரி நிலையத்தால் 1966 ல் வெளியிடப்பட்டது.

## திவ்யப் பிரபந்த அகராதி

இந்நூலின் பதிப்பாசிரியர்கள் இராமகிருட்டிண ஐயங்கார் மற்றும் திருமலை நல்லான் ஆவர். சென்னை அரசினர் சுவடி நூலகத்தால் 1961 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## திவாகர நிகண்டு

கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் திவாகர முனிவரால் நூற்பாவகையில் எழுதப்பட்ட இந் நிகண்டு திவாகரம் எனவும் வழங்கப்படுகிறது. திவாகர நிகண்டின் காலம் கி.பி. 9 ஆம் நூற்றாண்டு என்று அறிஞர் மு. அருணாசலம் கூறுகிறார். (தமிழ் இலக்கிய வரலாறு – 9 ம் நூற்றாண்டு). பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையோ கி.பி. 8 ஆம் நூற்றாண்டென்று நாம தீப நிகண்டின் முன்னுரையில் தக்க ஏதுக்கள் காட்டி நிறுவுகின்றார். திவாகரரைப் பேணிக் காத்த வள்ளல் சேந்தனைப் பற்றிப் பல இடங்களில் குறித்துள்ளார். சேந்தன் சோழநாட்டில் அம்பர் என்னும் ஊரினன். இவ்வள்ளலைப் போற்றிப் புகழும் நோக்கில் 'சேந்தன் திவாகரம்' என்ற பெயரும் இந்நூலுக்கு உண்டு. திவாகரர் சமண சமயத்தைச் சார்ந்தவர் என்று பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையும், மு. இராகவ ஐயங்காரும் கூறுகின்றனர். (பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை, தமிழிலக்கிய சரித்திரம், காவிய காலம், பக்.164) அறிஞர்.மு . அருணாசலம் திவாகரர் சிவனியத்தைச் சார்ந்தவர் என்று கூறுகின்றார். (தமிழ் இலக்கிய வரலாறு 9 ஆம் நூற்றாண்டு. பக்.135–138)

தொல்காப்பியம்போல் 2518 நூற்பாக்களைக் கொண்ட இந்நூல் 1. தெய்வப் பெயர்த் தொகுதி, 2. மக்கட் பெயர்த் தொகுதி. 3. விலங்கின் பெயர்த் தொகுதி, 4. மரப்பெயர்த் தொகுதி, 5. இடப்பெயர்த் தொகுதி, 6. பல்பொருட் பெயர்த் தொகுதி, 7. செயற்கை வடிவின் பெயர்த் தொகுதி, 8. பண்பு பற்றிய பெயர்த் தொகுதி, 9. செயல் பற்றிய பெயர்த் தொகுதி, 10.ஒலிபற்றிய பெயர்த் தொகுதி, 11. ஒரு சொற் பல்பொருட் பெயர்த் தொகுதி, 12. பல்பொருட் கூட்டத் தொருபெயர்த்தொகுதி யென பன்னிரு பிரிவாக பகுக்கப்பட்டுள்ளதோடு ஒவ்வொரு தொகுதியும் ஆசிரியர் வரலாறு, நூல் வரலாறு சுட்டும் நூற்பாவுடன் நிறைவுறுகிறது.

இந்நிகண்டு எடுத்துக்கொண்ட பொருள்களை 1. ஒருபொருள் பல்பெயர்த் தொகுதி, 2. ஒருசொல் பல்பொருட் பெயர்த்தொகுதி, 3. பல்பொருட் கூட்டத்தொரு பெயர்த்தொகுதியென மூவகையாகத் தொகுத்துக் கூறுகின்றது.

இந்நூலை முதன்முதலில் தொகுத்து வெளியிட்டவர் தாண்டவராய முதலியார். இவர் கி.பி. 1839 இல் முதல் 10 தொகுதிகளை மட்டுமே தொகுத்து சேந்தன் திவாகரம் என்ற பெயரில் வெளியிட்டார். இவரையடுத்து ஆறு பேர் இந்நூலை முழுமையாக 12 தொகுதிகளையும் தொகுத்து வெளியிட்டனர்.

திவாகரத்தின் முதற் பிரிவாம் தெய்வப் பெயர்த் தொகுதியொன்றை மட்டும் 13 பேர் பதிப்பித்தார்கள்.

## திவாகரப் பதிப்பு வரலாறு

மு. சண்முகம் பிள்ளை என்பவரால் இயற்றப்பட்டுள்ளது. தமிழாய்வு–6 இல் 1977 ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது.

## தொகை நிகண்டு

இந்நிகண்டை சாமிக் கவிராயர் என்பவர் இயற்றியுள்ளார். இதனை வீ.சொக்கலிங்கம் என்பவர் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்.

## தொகைப் பெயர் விளக்கம்

1849 இல் சென்னை முத்துசுவாமி முதலியாரால் வெளியிடப்பட்டது.

## தொகைப் பொருள் நிகண்டு

கிருட்டிணசாமி சேனை நாட்டார் என்பவரால் இயற்றப்பட்ட இந்நிகண்டு வீ. சொக்கலிங்கம் என்பவரால் பதிப்பிக்கப்பெற்றது.

## தொகையகராதி

சு.அ. இராமசாமிப்புலவர் செய்தளித்த இவ்வகராதி சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் 1969 இல் வெளியிடப்பட்டது.

## தொல்காப்பியப் பொருளதிகார மேற்கோள் விளக்க அகராதி

ம.ஆ. நாகமணி என்பவரால் எழுதப்பட்டு, சென்னை சாது அச்சுக்கூடத்தால் 1935 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## நகர– நாட்டாண்மைக் கழக ஆட்சி முறைச் சொல் அகராதி ஆங்கிலம்– தமிழ்

தமிழ்நாடு அரசு வெளியீடு. சென்னையிலிருந்து 1941 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

## நவமணிக் காரிகை நிகண்டு

அரசஞ் சண்முகனார் அவர்களால் இந்நிகண்டு இயற்றப்பட்டது.

## நவீன தமிழ் அகராதி

கிருஷ்ணசாமிப்பிள்ளை, சி. சி. குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை – 1935

## நாடகக் கலைக் களஞ்சியம்

ஏ. பாபநாசம் என்பவர் இதன் ஆசிரியர். இது திருநெல்வேலி, நாடகப் பதிப்பகத்தால் 1964 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## நாட்டுப்புறப் பழமொழித் தொகுப்பு

இந்நூல் கமலா கந்தசாமி என்பவர் இயற்றியது. நர்மதா பதிப்பகத்தால் வெளியிடப்பட்டது. ஆண்டு குறிக்கப்படவில்லை.

## நாநார்த்த தீபிகை

இதன் ஆசிரியர் : முத்துசாமி பிள்ளை. பதிப்பாசிரியர் : அனவரத விநாயகம் பிள்ளை. சென்னைப் பல்கலைக் கழகம் 1936 இல் வெளியிட்டுள்ளது.

## நாமதீப நிகண்டு

ஆசிரியர் : சிவசுப்பிரமணியக் கவிராயர். எஸ். வையாபுரிப்பிள்ளையால் சென்னை 1930 இல் வெளியிடப்பட்டுள்ளது.

## நாமலிங்கானு சாசனம்

இச்சொற்றொகுதியின் ஆசிரியர் அமரசிம்மர். இந்நூல் தஞ்சாவூர் வாணி அச்சகத்தில் 1803 இல் வெளியிடப்பட்டது.

## நாமலிங்கானு சாசனம் தமிழ் உரையுடன்

இச்சொற்றொகுதியின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இது சென்னை இந்து பாசா சஞ்சிவினி அச்சகத்தில் 1870 இல் வெளியிடப்பட்டது.

## நாலாயிரத் திவ்வியப் பிரபந்த அகராதி

தமிழ் – தமிழ்

இவ்வகரமுதலியை 1963 ஆம் ஆண்டில் சீரங்கம் தேவத்தானப் பத்திரிகை ஆசிரியரான பார்த்தசாரதி ஐயங்கார் தொகுத்து வெளியிட்டார். இதில் நாலாயிரத் தெய்வப் பனுவலில் உள்ள இன்றியமையாத சொற்கள் அகரவரிசைப் படுத்திப் பொருள் கூறப்பட்டுள்ளன. ''அஃகம்'' முதல் ''வைம்'' ஈறாகப் பலசொற்கள் இடம் பெறுகின்றன.

## நாலு பாசை ஒக்காபிலரி

தமிழ் – தெலுங்கு – ஆங்கிலம் – இந்துத்தானி என்ற அமைப்பில் பொருள் கூறும் இந்நூலின் ஆசிரியர்

பி. தங்கவேல் முதலியார். இது 1905 இல் சென்னை டி. சடகோப நாயுடு அவர்களால் வெளியிடப்பட்டது.

## நாலு பாசை ஒக்காபிலேரி

இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இந்நூல் தமிழ் – தெலுங்கு – ஆங்கிலம் – இந்துத்தானி என்ற நான்கு மொழிகளில் சொற்களுக்கு விளக்கம் தருகிறது. 1931 இல் சென்னை பி. இரத்தின நாயகர் சன்சு இந்நூலை வெளியிட்டது.

## நான்கு பாசை ஒக்காபிலேரி

இந்நூலை கொழும்பு, சரசுவதி புத்தக சாலை 1954 இல் வெளியிட்டது. தமிழ் – சிங்களம் – ஆங்கிலம் – இந்துத்தானி என்ற நான்கு மொழிகளில் சொற்களுக்கு இது விளக்கம் தருகிறது.

## நுட்பச் சொற்கள் : மின் ஆய்வாளர் அலுவலகம் 1966

ஆக்கம்: தமிழ்நாடு அரசு. வெளியீடு: எழுதுபொருள் அச்சகத்துறை ஆணையர், சென்னை – 1966.

## நூலகத் தமிழ்ச் சுவடிகள் விவர அட்டவணை

தொகுதி 26 (ஆர்.எண்.7787–8066) இதன் பதிப்பாசிரியர் முனைவர் பூ.சுப்பிரமணியம் ஆவார். பொதுப்பதிப்பாசிரியர் நடன காசிநாதன் ஆவார். அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தால் 1994 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## நூற்பொருட் குறிப்பு

மு. இராகவையங்கார் எழுதிய இந்நூல் சென்னை பி.என். அச்சகத்தால் 1932 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## நேர்ச்சொல் நிகண்டு

புலோலி சதாசிவம் பிள்ளை என்பவரால் இயற்றப்பட்ட இந்நிகண்டு யாழ்ப்பாணத்திலிருந்து 1889 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## பகுத்தறிவுப் பழமொழிகள்

இதன் ஆசிரியர் பூவை ஆறுமுகம். காரைக்குடி அழகுப் பதிப்பகத்தால் 1967 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

## பச்சிலை மருந்து முதலியவைகளின் விலைப்பட்டி அகராதி

இந்நூலின் ஆசிரியர் பெயரோ, வெளியிட்ட அச்சகப் பெயரோ தெரியவில்லை. 1915 இல் மதுரையில் வெளியிடப்பட்டது என்ற குறிப்பு மட்டுமே உள்ளது.

## பச்சிலை வராக பசுமுல்லை அகராதி

தேவேந்திர நாத பண்டிதர் என்பவரால் இயற்றப்பட்டது. சென்னையில் இராசரத்தின முதலியார் முதற் பதிப்பை 1916 ஆம் ஆண்டும், இரண்டாம் பதிப்பை 1958 ஆம் ஆண்டும் வெளியிட்டார்.

## பண்டித நிகண்டு

வி.டி. பண்டிதர் என்பவர் இயற்றியுள்ள இந்நிகண்டு பெங்களூர் காட்டன் அச்சகத்தால் 1913 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## பத்துச் சொல் அகராதி

திவாகரம் சூடாமணி முதலிய நிகண்டுகளில் உள்ள சொற்கள் அகரவரிசைப் படுத்தப்பட்டுப் பொருள் கூறப்பட்டுள்ள இவ்வகராதி பத்துத் தொகுதிகளை உடையது. முதல் தொகுதியில் ஓரெழுத்துச் சொற்களும் இரண்டாம் தொகுதியில் இரண்டெழுத்துகளாலான சொற்களுமாக இப்படியே பத்தாந் தொகுதியில் பத்தெழுத்துகளாலான சொற்களும் இடம் பெற்றுள்ளன.

## பதார்த்த குண விளக்கம்

இதன் ஆசிரியர் கண்ணுசாமி பிள்ளை. இந்நூல் இரண்டு பகுதிகளைக் கொண்டது. சென்னை பி. இரத்தின நாயக்கர் அண்டு சன்சு இந்நூலை வெளியிட்டது. ஆண்டு தெரியவில்லை.

## பதார்த்த பாசுகரம்

டி.கே.நாராயண ஐயங்காரால் இயற்றப்பட்ட இந்நூல் சீரீதர் அச்சுக் கூடத்தால் சென்னையிலிருந்து 1878 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## பர்மா தமிழ் ஒக்காபிலேரி

இந்நூலின் ஆ சிரியர் அ.சா. கௌது. இதைப் பதிப்பித்தவர் ஜே.எ. பிரான்சிசு. 1876 இல் இரங்கூன் ஆல்பியன் அச்சுக் கூடம் இந்நூலை வெளியிட்டது.

## பல்சாசக் கல்பம்

இவ்வகர முதலியின் ஆசிரியர் சகநாத முதலியார். தமிழ் – ஆங்கிலம், அதாவது தமிழ்ச் சொல்லுக்கு ஆங்கிலப் பொருள் தருவது. சென்னை, மினர்வா அச்சகம் 1906 இல் இதனை வெளியிட்டது.

## பல்பொருள் ஆங்கிலத் தமிழ் அகரவரிசை

மு. சதாசிவம், சி. சிவராமலிங்கம் ஆகியோர் தொகுத்த இந்நூலை 1962 இல் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டது.

## பல்பொருள் சூளாமணி நிகண்டு

ஈசுரப் பாரதியார் கி.பி. 1700 இல் இந்நிகண்டினை இயற்றினார். இவர் நெல்லை மாவட்டம் மடகை என்னும் ஊரினர்.

இந்நிகண்டு ஒரு சொல் ஒரு பெயர்க் காண்டம், ஒரு சொல் பல்பொருட் காண்டம், பல்பெயர்க் கூட்டத்து ஒரு பெயர்க்காண்டம் என மூன்று காண்டங்களைக் கொண்டது. இவற்றுள் முதல் காண்டத்தில் ஒரே பொருள் கூறும் 2800 சொற்களும், இரண்டாம் காண்டத்தில் பல்பொருள் கூறும் 1465 சொற்களும் இடம் பெற்றுள்ளன.

## பழந்தமிழ் நூற் சொல்லடைவு (Index Des Mots De La Litterature Tamoule Ancienne)

இச்சொல்லடைவை பிரெஞ்சு இந்தியக் கலைக்கழகம் புதுச்சேரியில் வெளியிட்டது. இதன் தொகுப்பாசிரியர் குழுத் தலைவர் கரந்தைத் தமிழறிஞர் நீ.கந்தசாமிப் பிள்ளையாவர். இந்நூல் மூன்று தொகுதிகளாக அச்சிடப்பட்டு முதல் தொகுதி 1967இலும், இரண்டாம் தொகுதி 1968இலும், மூன்றாம் தொகுதி 1970இலும் வெளிவந்தன. இவ்வகர முதலியில் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு முதலிய பதினெண் மேற்கணக்கு நூல்கள், திருக்குறள் முதலிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், தொல்காப்பியம், இறையனார் களவியல், சிலப்பதிகாரம், மணிமேகலை, முத்தொள்ளாயிரம் முதலிய நூல்களில் இடம் பெற்றுள்ள குறிப்பிட்ட தொரு சொல் பழந்தமிழ் நூல்களுள் எதில் இடம் பெற்றுள்ளது என்பதை இவ்வகரமுதலி கொண்டு அறியலாம்.

## பழமொழி அகராதி[1]

அனவரத விநாயகம் பிள்ளை இயற்றிய இந்நூல் சென்னை ரிப்பன் அச்சகத்தால் 1912 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## பழமொழி அகராதி[2]

இவ்வகராதி சு. அனவரத விநாயகம் பிள்ளையால் தொகுக்கப்பட்டது. இது ஒளிக்கோவை மறுதோன்றி அச்சுக் கூடத்தால் 1998 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## பழமொழி அகராதி[3]

இவ்வகரமுதலி சென்னை ரிப்பன் அச்சியந்திர சாலையில் 1913 இல் அச்சிட்டு வெளியிடப்பட்டது. இதன் ஆசிரியர் சு.அனவரத விநாயகம் பிள்ளையவர்கள். இவ்வகர முதலியில் அகரவரிசையில் தமிழ்ப் பழமொழிகளைத் தொகுத்துத் தந்துள்ளனர்.

## பழமொழித் திரட்டு

பி.ஆ. பார்த்தசாரதி பிள்ளையால் தொகுக்கப்பட்ட இந்நூல் சென்னை நற்றமிழ் விலாச அச்சுக் கூடத்தால் 1902 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## பழமொழித் தீபிகை

வே.ஆ. சிதம்பரம் பிள்ளை இயற்றியுள்ள இந்நூல் யாழ்ப்பாணம் நாவலர் அச்சுக் கூடத்தாரால் 1916 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## பாசிய ஒக்காபிலரி

இந்நூலை இயற்றியவர் பெயர் தெரியவில்லை. சென்னை மெமோரியல் அச்சுக்கூடத்திலிருந்து 1874 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

## பாட்டும் தொகையும்

இவ்வகரமுதலி மர்ரே அண்டு கம்பெனியின் பதிப்பாக சென்னையில் 1958 இல் வெளிவந்தது. இது பதினெண் மேற்கணக்கு நூல்களான பத்துப்பாட்டு எட்டுத்தொகை எனப்படும் இலக்கியங்களைச் சார்ந்தது. இதில் புலவர்கள் அகரமுதலி, பாடப்பட்டோர் பெயர் வரிசை, சொல் – தொடர் விளக்கம், உவமைகள், வண்ணனை முதலிய பகுதிகள் இடம் பெற்றுள்ளன.

## பாட மஞ்சரி – பகுதி 2

போவார் கென்றி என்பவர் இயற்றிய இந்நூல் சென்னை கிறிட்டியன் நாலட்ச் சொசைட்டி அச்சகத்தால் 1852 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## பாரதி தீபம்

பாரதி தீப நிகண்டின் ஆசிரியர் திருவேங்கட பாரதி. கடம்பை என்னும் திருக்கடம்பூரில் பிறந்த இவர் கொடை வள்ளலாகவும் இருந்தார். இந்நிகண்டு நூலைச் செய்யுங்காலத்து ஒரு துறவியாகத் திகழ்ந்தவர். இந்நூலில் 665 செய்யுட்கள் காணப்படுகின்றன. ஆனால், யாழ்ப்பாணம் மானிப்பாய் சதாசிவம் பிள்ளை 737 செய்யுள் கொண்டது என்கின்றார். இந்த வேறுபாட்டைப் பார்க்கும்போது இந்நூல் இலங்கையில் சிற்சில ஏற்றங்கள் மாற்றங்கள் பெற்றுச் செய்யுள் எண்ணிக்கைக் கூடியிருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை இதன் காலத்தை கி.பி. 15 ஆம் நூற்றாண்டு என வரையறுக்கின்றார். இந்நூல் கி.பி. 1980 இல் சென்னைப் பல்கலைக் கழக வெளியீடாகத் திரு.மு. சண்முகம் பிள்ளையால் வெளியிடப்பட்டது.

## பால்டிங் (ஸ்பால்டிங்) ஆங்கிலம் – தமிழ் அகராதி

பால்டிங் (Rev. L. Spaulding) என்பவரால் 1844 இல் வெளியிடப்பட்ட இவ்வகரமுதலி ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழ்ச் சொல்லால் பொருள் கூறுவது.

## பிங்கல நிகண்டு

பிங்கல முனிவர் கி.பி. 9 அல்லது கி.பி. 10 ஆம் நூற்றாண்டில் திவாகரத்தைப் போலவே நூற்பா யாப்பில் இந்நிகண்டை எழுதினார். ஆசிரியர் பெயரால் பெயர் பெற்ற இதற்குப் பிங்கலந்தை என்ற பிறிதொரு பெயரும் உண்டு. பிங்கலர் திவாகரம் இயற்றிய திவாகரரின் மகன் என்றும் கூறுவர்.

இந்நூல் 1. வான்வகை, 2. வானவர் வகை, 3. ஐயவகை, 4. அவனி வகை, 5. ஆடவர் வகை, 6. அநுபோக வகை, 7. பண்பிற் செயலின் பகுதி வகை, 8. மாப்பெயர் வகை, 9. மரப்பெயர் வகை, 10. ஒருசொற் பல்பொருள் வகை எனப் பத்து வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

இதில் வான்வகை முதல் ஆடவர் வகை வரையுள்ள ஐந்து பகுதிகள் மற்றும் ஒன்பதாம் பிரிவாகிய மரப்பெயர் வகைகளில் உட்பிரிவுகள் காணப்படவில்லை. மற்றைய நான்கு பகுதிகளிலும் உட்பிரிவுகள் காணப்படுகின்றன.

ஆறாம் பிரிவாகிய அநுபோக வகை (நுகர்ச்சி வகை)யில் 1. உணவின் வகை, 2. பூணின் வகை, 3. இரத்தின வகை, 4. உலோக (மாழை) வகை, 5. ஆடை வகை, 6. பூச்சு வகை, 7. சூட்டு வகை, 8. இயல் வகை, 9. இசை வகை, 10. நாடக வகை, 11. மண்டில வகை, 12. படை வகை, 13. காலாள் வகை, 14. தோற்கருவி வகை, 15. குடை வகை, 16. ஆயுத வகை, 17. செயற்கை வகை, 18. அக்குரோணி வகை, 19. வெள்ள வகை, 20. இல்லணி வகை என்ற உட்பிரிவுகளும்,

அடுத்து ஏழாம் பிரிவாகிய பண்பிற் செயலின் பகுதியில் 1. உள்ள நல்வகை, 2. உள்ளத்தின் தீயவகை, 3. மெய் வகை, 4. வாய்வகை, 5. கண்வகை, 6. மூக்கின் வகை, 7. செவி வகை, 8. கை வகை, 9. கால் வகை, 10. முறைமை வகை, 11. அளவின் வகை, 12. காரண வகை, 13. பல்பொருள் வகை என உட் பிரிவுகளும், எட்டாவது வகையாகிய மாப்பெயர் வகையில் 1. புள்வகை, 2. விலங்கின் வகை, 3. பாம்பின் வகை, 4. சலசர வகை என்னும் நான்கு உட்பிரிவு வகைகளும் பத்தாவது வகையாகிய ஒரு சொற் பல்பொருள் வகையில் 1. அகர வருக்கம், 2. ககர வருக்கம், 3. சகர வருக்கம், 4. ஒகர வருக்கம், 5. தகர வருக்கம், 6. நகர வருக்கம், 7. பகர வருக்கம், 8. மகர வருக்கம், 9. யகர வருக்கம், 10. வகர வருக்கம் என்ற உட்பிரிவுகளும் காணப்படுகின்றன.

மேலும் இப்பத்து வகைகளில் ஒன்று முதல் ஒன்பது வகைகள் ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதி என்றும், பத்தாவது வகை ஒரு சொல் பல்பொருட் பெயர்த் தொகுதி என்றும் பகுக்கப்பட்டுள்ளது. திவாகரர் பன்னிருவகையிற் சொல்லியதை பிங்கலர் 10 வகையில் அடக்கியுள்ளார்.

4121 நூற்பாக்களில் 15,800 சொற்களுக்கு விளக்கம் தரும். இந்நூலின் முதற்பதிப்பு கி.பி.1890–ல் சிவன்பிள்ளை என்பவரால் வெளியிடப்பட்டது.

## பிரெஞ்சு – தமிழ் அகராதி

பிரெஞ்சுச் சொல்லுக்குத் தமிழ்ச் சொல்லால் பொருள் கூறும் இவ்வகர முதலியின் மூன்றாம் பதிப்பு 1952 இல் புதுச்சேரி மாதாகோயில் அச்சகத்தாரால் வெளியிடப்பட்டது. இதன் ஆசிரியர் “மு சே”, “துய்புய்” என்னும் இருவர்.

## பில்டர் ஆங்கிலத் தமிழகராதி (A Builder's Vocabulary in English and Tamil)

இவ்வகரமுதலியின் ஆசிரியர் T.S. வீராசாமி முதலியார். வெளியிட்ட ஆண்டு 1880. இது ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழால் பொருள் கூறும் அகரமுதலியாகும்.

## பிற்காலப் புலவர்கள்

இதன் பதிப்பாசிரியர் எச். வைத்தியநாதன் ஆவார். டாக்டர்.உ.வே.சாமிநாதையர் நூல் நிலையத்தாரால் 1986 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## புதிய கணிதக் கையகராதி (நியூ ஸ்டார்)

மத்தியாய, எம். என்பவரால் இயற்றப்பட்டு நாகர்கோயில் (நியூ ஸ்டார்) அச்சகத்தினரால் 1979 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

## புலவர் அகராதி

கோபாலன், பா. வே. என்பவரால் எழுதப்பட்ட இவ்வகராதி சென்னை எம். துரைசாமி முதலியார் நிறுவனத்தால் 1957 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

## பெசுகி தமிழ் – இலத்தீன் அகராதி

இவ்வகர முதலியின் ஆசிரியர் வீரமாமுனிவர் என்னும் பெசுகி. சதுரகராதியைச் செய்தவரும் இவரே. 1742 ஆம் ஆண்டில் 9000 சொற்களுடன் வெளியான இவ்வகரமுதலி தமிழ்ச் சொல்லுக்கு நேரே இலத்தீன் சொல்லால் பொருள் கூறுவதாகும்.

## பெண்ணின் பெயர்கள்

மு. சதாசிவம் என்பவர் இயற்றிய இந்நூல் ஈரோடு மீரா நிலையத்தால் 1972 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## பெண்ணோவியம்

இவ்வகரமுதலி மு.சதாசிவம் அவர்களால் தொகுத்து வெளியிடப்பட்டது. 1002 நூல்களிலிருந்து தொகுக்கப்பட்ட பெண்ணைக் குறிக்கும் 25,000 சொற்களும் தொடர்களும் இதில் இடம் பெற்றுள்ளன.

## பெயர் அகராதி

இவ்வகரமுதலி திருமழபாடி மகாலிங்கையரால் தொகுக்கப்பட்டுச் சென்னையில் வெளியிடப்பட்டது. ஆண்டு தெரியவில்லை. இதன் இறுதியில் ‘முதலாவது பெயர் அகராதி முற்றும் முற்றிற்று’ எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

## பெர்சிவல் ஆங்கிலம் – தமிழ் அகராதி (An English - Tamil Dictionary)

இவ்வகரமுதலி ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழ்ச் சொல்லால் பொருள் கூறுவதாகும். இதன் ஆசிரியர் பெர்சிவல் (Rev. Peter Percival).

## பேரகராதி

தொகுப்பாசிரியர் : இராமசாமி நாயுடு, காஞ்சிபுரம். ஆறுமுக விலாச அச்சுக் கூடம் சென்னை – 1886. திருத்திய விரிவான 2ஆம் பதிப்பு – 1893.

## பைபிள் அகராதி (The Tamil Bible Dictionary)

இவ்வகரமுதலி சென்னையில் C.L.S. அச்சகத்தில் 1923 இல் வெளியானது. இதன் ஆசிரியர் கிலேற்றன் ஏ.சி. (Clayton. A.C.) என்பவர். இதில் பைபிள் செய்திகள் அகரவரிசையில் கொடுக்கப்பட்டுள்ளன.

## பொதிகை நிகண்டு

சாமிநாதக் கவிராயர் என்பவரால் இயற்றப்பட்டது. பதிப்பாசிரியர். எஸ். வையாபுரிப் பிள்ளை ஆவார். சென்னையிலிருந்து 1934 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## பொருட்டொகை நிகண்டு

வை. சுப்பிரமணிய பாரதி என்பவரால் இயற்றப்பட்டது. பதிப்பாசிரியர். சே.ரா. சுப்பிரமணியக் கவிராயர். மதுரை தமிழ்ச் சங்கத்தாரால் 1920 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## பொருள் அகராதி

எப். டபுள்யூ. எல்லீசு அவர்கள் திருச்சிற்றம்பல அய்யர் உதவியுடன் சென்னையில் 1819 இல் இவ்வகராதியைப் பதிப்பித்தார்.

## பொருள் விளக்க நிகண்டு

ஆனைகட்டி முனிசாமி முதலியார் என்பவரால் இயற்றப்பட்ட இந்நிகண்டு சொக்கலிங்கம் என்பவரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளியிடப்பட்டது.

## பொறியியல் தொழில் நுட்பவியல் கலைச்சொற்கள்

இந்நூல் தமிழ்ப் பல்கலைக் கழகம் உருவாக்கியது. இராம. சுந்தரம் என்பவரால் பதிப்பிக்கப்பட்டு 1997 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## போப் தமிழ் – ஆங்கில அகராதி

இவ்வகரமுதலி 1859 இல் G.U.போப் அவர்களால் தொகுக்கப்பட்டது. இது தமிழ்ச் சொல்லுக்கு ஆங்கிலச் சொல்லால் பொருள் கூறுவதாகும்.

## போர்ச்சுகீசியம் – இலத்தீன – தமிழ் அகராதி

இவ்வகரமுதலியை 1744 இல் வீரமாமுனிவர் வெளியிட்டார். இது போர்ச்சுகீசியச் சொல்லுக்கு நேரே இலத்தீன் சொல்லாலும், தமிழ்ச்சொல்லாலும் பொருள் கூறுகிறது.

## மக்கட்பெயர் அகரவரிசை

இவ்வகரமுதலி தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தாரால் இயற்றப்பட்டு சென்னையிலிருந்து 1938 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## மணி அகராதி

சுவாமி அய்யர் இவ்வகர முதலியை இயற்றியுள்ளார். கும்பகோணம் இலட்சுமி மில்ஸ் ஸ்டோரால் 1934 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## மணிமேகலைத் தமிழ் – தமிழ் அகராதி

இவ்வகராதி மணிமேகலை பிரசுரக் குழுவால் உருவாக்கப்பட்டது. இதன் பதிப்பாசிரியர் லேனா. தமிழ்வாணன் ஆவார். மணிமேகலை பிரசுரத்தால் முதற்பதிப்பு 1979 ஆம் ஆண்டும், இரண்டு மற்றும் மூன்றாம் பதிப்புகள் முறையே 1992, 1998 ஆகிய ஆண்டுகளிலும் வெளிவந்துள்ளன.

## மதுரைத் தமிழ்ப் பேரகராதி

இவ்வகரமுதலி 1937 இல் மதுரை இ.மா.கோபால கிருட்டிணக்கோன் அவர்களால் வெளியிடப்பட்டுள்ளது. இது நான்கு தொகுதிகளுடன் இரண்டு பாகங்களாக வெளியிடப்பட்டுள்ளது.

## மரபுத் தொடர் அகரவரிசை

தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தால் உருவாக்கப்பட்டு சென்னை 1953 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

## மரபுத் தொடர்களும் சொற்றொடர்களும்

புலவர். பூந்துறையான் என்பவர் இயற்றியுள்ளார். சென்னை அசோகன் பதிப்பகத்தால் 1977 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

## மருத்துவ அகராதி

தி.வி.சாம்பசிவம் பிள்ளை அவர்களால் எழுதப்பட்ட இவ்வகராதி சித்த மருத்துவ ஆராய்ச்சி மையப் பதிப்பகத்தால் 1931 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## மருத்துவக் கலைச் சொற்கள்

மருத்துவர் சாமி.சண்முகம் இயற்றிய இந்நூல் பூங்கா பதிப்பகத்தாரால் 1996 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### மருத்துவக் களஞ்சியம்

டாக்டர் இராஜம்மாள் தேவதாசு, டாக்டர்.சுதாசேசய்யன், டாக்டர்.அ.கதிரேசன் ஆகியோரால் தொகுக்கப்பட்ட இக்களஞ்சியம், தமிழ் வளர்ச்சிக் கழகத்தால் 1994 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### மலாய் ஆசான்

இச் சொற்றொகுதி கே.சதாசிவம் பிள்ளை என்பவரால் எழுதப்பெற்று சென்னையில் 1938 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### மலாய் எப்படி பேசுவது

இச்சொற்றொகுதி சண்முகம் என்பவரால் இயற்றப்பட்டது. கோலாலம்பூர் மனோன்மணி விலாச புத்தக சாலையிலிருந்து வெளியிடப்பட்டது. பதிப்பித்த ஆண்டு அறியப்பெறவில்லை.

### மலாய் – தமிழ் அகராதி

எம். ஆரோக்கியசாமி என்பவரால் இயற்றப்பட்ட இவ்வகராதி சென்னையிலிருந்து 1962 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### மலை அகராதி

சைமன், காசிசிட்டி என்பவர் இவ்வகர முதலியின் ஆசிரியராவர். 1844 இல் சென்னையில் இது வெளியிடப்பட்டது.

அகத்தியர் வெளியிட்ட மலை அகராதி என்பது இதனின் வேறாம். அது இவ்வகர முதலி வெளியிட்டபின் 1882 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது.

### மலை அகராதி 3ஆம் பதிப்பு (அ) வைத்திய மாலை அகராதி

இதன் ஆசிரியர் அகத்தியர். 1882 இல் சென்னை பரப்பிரும்ம அச்சியந்திர சாலை இந்நூலை வெளியிட்டது.

### மன அகராதி

இது மு.சதாசிவத்தால் தொகுக்கப்பட்டது. மனத்தைக் குறிக்கும் ஐந்தாயிரத்திற்கு (5000) மேற்பட்ட தொடர்களையும் கூட்டுச் சொற்களையும் கொண்டது.

### மாக்மில்லன் சிறுவர் சிறுமியர் கலைக்களஞ்சியம்

நுன். ஸ்ட்ராவுட் என்னும் மேனாட்டார் இதன் ஆசிரியர். இது தமிழ்–தமிழ் கலைக்களஞ்சியம். இதன் தமிழ்ப் பதிப்பு சென்னை வாசனி மாக்மில்லன் கம்பெனியால் 1976 ஆம் ஆண்டும், முதல் ஆங்கிலப் பதிப்பு 1973 ஆம் ஆண்டும் வெளியிடப்பட்டன.

### மாடர்ன் ஆங்கில – ஆங்கிலத் தமிழகராதி
### Modern Srimagar Pocket Dictionary (English - English - Tamil)

இவ்வகரமுதலியின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. 1955 இல் வெளியிடப்பட்ட இவ்வகராதி இது ஆங்கிலத்துக்கு ஆங்கிலத்தாலும் தமிழாலும் பொருள் கூறுகிறது.

### மாணவர் அகராதி (ஆங்கிலம் – தமிழ்)

இதன் ஆசிரியர் எசு.எம்.இராமசாமி. இந்நூலை 1965 இல் சேலம் செல்லப்பன் பதிப்பகம் வெளியிட்டது. இதன் இரண்டாம் பதிப்பு 1966 இல் வெளியிடப்பட்டது.

### மாணவர்க்கு உதவும் ஆங்கிலம் – தமிழ் அகராதி

இவ்வகரமுதலியைத் தொகுத்தவர்கள் அருள்திரு தங்கையா, திரு.கே.எஸ்.சாமிநாதன் ஆகியோர். இது 1964 இல் வெளியிடப்பட்டது. 5000 சொற்கள் உள்ள இவ்வகரமுதலி ஆங்கிலச் சொல்லுக்கு ஆங்கிலச் சொல்லாலும், தமிழ்ச் சொல்லாலும் பொருள் கூறுகிறது.

### மாணவர் களஞ்சியம்

இக்களஞ்சியத்தின் ஆசிரியர் சீத்தாராமகாருலு. வடமொழி – தெலுங்கு – தமிழ் – ஆங்கிலம் என்ற அமைப்பில் சொற்களுக்குப் பொருள் கூறப்பட்டுள்ளது. சென்னை திருநிதி அச்சகத்தில் 1879 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### மாணவர் சொற்பொருட் களஞ்சியம்

இந்நூலின் ஆசிரியர் சீத்தா ராமகாருலு. இது வடமொழி – தமிழ் – ஆங்கிலம் – தெலுங்கு சொற்பொருட் களஞ்சியம். 1874 இல் சென்னை கலாரத்தினகாரம் அச்சுக் கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

### மாணவர்க்கான சொற்களஞ்சியம்

சென்னை திருநிதி அச்சகம் 1879 இல் இந்நூலை வெளியிட்டது.

### மாணவர் தமிழ் அகராதி

எஸ். அனவரத விநாயகம் பிள்ளை என்பவரால் இயற்றப்பட்டது. சென்னை – 1921 ஆம் ஆண்டு சி. குமரசாமி நாயுடு அண்டு சன் என்ற நிறுவனத்தாரால் வெளியிடப்பட்டது.

### மாணவர் மலாய் தமிழ் ஆங்கில அகராதி

எஸ். வேலுசாமி என்பவரால் இயற்றப்பட்டது. தமிழ்க் கலைப் பதிப்பகத்தால் மலேசியாவிலிருந்து 1964 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### மாணவர், மாணவியர் ஆங்கிலம் – தமிழ் அகராதி & பொது அறிவுக் களஞ்சியம்

இவ்வகரமுதலியின் ஆசிரியர் பி.எல்.முத்தையா, முல்லை. சென்னையில் உள்ள "நியூ செஞ்சுரி" புத்தக நிலையம் இதனை 1982 இல் வெளியிட்டது.

### மானிடவியல் கலைச் செல்லகராதி

இவ்வகர முதலியின் ஆசிரியர் சத்திவேல். 1972 இல் சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இந்நூலை வெளியிட்டது.

### மின்னியல் மின்னணுவியல் கலைச்சொல் விளக்க அகராதி

இவ்வகராதியைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியிட்டது. இதன் பதிப்பாசிரியர் முனைவர் இரா.சபேசன் ஆவார். 1997 ஆம் ஆண்டு முதற்பதிப்பு வெளியிடப்பட்டது.

### முசுலிம் பெயர் அகராதி

முக்தர் என்பவரால் இயற்றப்பட்டது. சென்னை சிராச வெளியீட்டகம் 1968 ஆம் ஆண்டு இவ்வகரமுதலியை வெளியிட்டது.

### முல்லைப்பாட்டு ஆராய்ச்சி அகராதி

தி.சு. பாலசுந்தரம் பிள்ளை இயற்றியுள்ளார். வாலாசாபாத். ஐ.எல்.ஐ. அச்சகத்தால் 1935 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### மூலிகைக் கலைக் களஞ்சியம்

டாக்டர். என்.கே. சண்முகம் என்பவரால் இயற்றப்பட்டது. நக்கீரன் பதிப்பகத்தாரால் 1989 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### மூன்று பாசை ஒக்காபிலரி

இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இந்நூலை 1922 இல் இரங்கூன் ஆ.க.நா. அண்டு பிரதர் என்ற நிறுவனம் வெளியிட்டது. இது தமிழ்–பர்மா–துலுக்கு என்ற மூன்று மொழிகளில் சொற்களுக்கு விளக்கம் தருகிறது.

### மேலை இலக்கியச்சொல் அகராதி

வை. சச்சிதானந்தன் என்பவரால் எழுதப்பட்டது. சென்னை மாக்மில்லன் நிறுவனத்தால் 1983 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### மேற்கோள் விளக்கக் கதை அகரவரிசை
(தமிழ் – தமிழ்) 2 பகுதிகள்

சு.அ. இராமசாமிப் புலவரால் இயற்றப்பட்டுள்ள இந்நூல் சென்னை சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம் 1963 ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளது. இதில் 1255 கதைகள் அகரவரிசையில் கூறப்பட்டுள்ளன.

### மொழியியற் கலைச்சொற்கள்
(ஆங்கிலம் – தமிழ்)

இராம. சண்முகம், கோ.விசயவேணுகோபாலன், செ. நீதிவாணன், தி.சு. நடராசன், செ. இரவீந்திரன்

ஆகியோர் இந்நூலைத் தொகுத்தனர். மதுரைப் பல்கலைக் கழகம் 1971ல் இதை வெளியிட்டது.

### யாழ்ப்பாணத் தமிழ் அகராதி

இவ்வகரமுதலி யாழ்ப்பாணத்துச் சந்திரசேகர பண்டிதரால் தொகுக்கப்பட்டது. தமிழ்ச் சொல்லுக்குத் தமிழில் பொருள் கூறும் அகரமுதலி இது. இதற்கு மானுவல் தமிழ் அகராதி (The Manual Dictionary of the Tamil Language), யாழ்ப்பாண அகராதி, மானிப்பாய் அகராதி (Manippay - Akarathi) என்ற வேறு பெயர்களும் உண்டு. இது 1842 இல் 'ரெவரண்ட் லெவி சுபால்டிங்' (Rev. Levi Spaulding) என்பவரால் வெளியிடப்பட்டது.

### ரகர றகர அகராதி

சுந்தர சண்முகம் என்பவரால் இயற்றப்பட்டது. சுவடி – (சுந்தர சண்முகனார் தமிழ் அகராதிக் கலை, ப.349) பாண்டிச் சேரியிலிருந்து 1948 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### லிப்கோ – ஆங்கிலம் – ஆங்கிலம் – தமிழகராதி (The Little Lifco Dictionary : English - English - Tamil)

இவ்வகரமுதலி 1950 இல் சென்னை லிட்டில் பிளவர் கம்பெனியால் வெளியிடப்பட்டது. இவ்வகரமுதலி ஆங்கிலச் சொல்லுக்கு ஆங்கிலத்தாலும் தமிழாலும் பொருள் கூறுவதாக உள்ளது.

### லிப்கோ தமிழ் – தமிழ் அகராதி

தமிழ்ச் சொல்லுக்குத் தமிழால் பொருள் கூறும் அகரமுதலி இது. இது லிட்டில் பிளவர் கம்பெனியின் வெளியீடு.

### லிப்கோ தமிழ் – தமிழ் – ஆங்கில அகராதி

தமிழ்ச் சொல்லுக்குத் தமிழாலும் ஆங்கிலத்தாலும் பொருள் கூறும் அகரமுதலி.

### வங்கியியற் கலைச்சொற் களஞ்சியம்

ஏர்வாடி இராதா கிருட்டிணனும் அவரது குழுவினரும் தொகுத்த இச்சொற்களஞ்சியத்தில் 15,000 கலைச் சொற்கள் அடங்கியுள்ளன. ஆங்கிலம் – தமிழ் அமைப்பில் அமைந்துள்ளது. இந்நூல் மாநில வைப்பகத்தால் (State Bank) 1984 இல் வெளியிடப்பட்டது.

### வட்டார வழக்குத் தமிழ் அகராதி

இவ்வகரமுதலியின் ஆசிரியர் வீரமாமுனிவர். பொதுமக்கள் பேசும் வழக்குச் சொற்களுக்கு வழக்குத் தமிழிலேயே பொருள் கூறும் அகரமுதலி இது.

### வடசொல் தமிழ் அகரவரிசை

இவ்வகரமுதலியின் ஆசிரியர் மறைமலையடிகளின் மகளான தி. நீலாம்பிகை அம்மையார். 5000 வடசொற்கட்கு மேல் இந்நூலில் பொருள் கூறப்பட்டுள்ளன. சென்னையில் 1937 ஆம் ஆண்டில் இதன் முதற்பதிப்பு வெளியானது.

### வடசொல் தமிழ் அகரவரிசைச் சுருக்கம்

வடசொல் தமிழ் அகரவரிசை என்னும் அகரமுதலியின் சுருக்கமே இவ்வகரமுதலி. இது தி.நீலாம்பிகையம்மையாரால் இயற்றப்பட்டது. குறிப்பிட்ட சில வடசொற்கள் மட்டும் இதில் இடம் பெறுகின்றன. இதன் இரண்டாம் பதிப்பு 1938 இல் தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தால் வெளியிடப்பட்டுள்ளது.

### வடசொற்றமிழகராதி

இக்கட்டுரை செந்தமிழ்ச் செல்வி இதழில் 1927–28 ஆம் ஆண்டு வெளிவந்தது.

### வடமலை நிகண்டு

சி. ஈசுர பாரதி என்பவரால் இயற்றப்பட்டது. பதிப்பாசிரியர். இரா. நாகசாமி என்பவரால் பதிப்பிக்கப்பட்டு சென்னை, டாக்டர். உ.வே.சா. நூலகத்தால் 1983 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### வணிகவியல் அகராதி

இவ்வகரமுதலியை அ.கி.மூர்த்தி என்பவர் இயற்றியுள்ளார். எட்டாவது உலகத் தமிழ் மாநாட்டுச் சிறப்பு வெளியீடாக மணிவாசகர் பதிப்பகத்தால் 1994 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### வருண சிந்தாமணி (நிகண்டு)

இந்நூலின் ஆசிரியர் கூடலூர் கனகசபைப் பிள்ளை. சென்னை தனியாம்பாள் விலாசம் அச்சியந்திர சாலையில் முதற்பதிப்பு 1901 ஆம் ஆண்டும், 2ஆம் பதிப்பு 1925 ஆம் ஆண்டும் வெளியிடப்பட்டன.

### வளரும் தமிழ் - அகராதி

சோமலெ எழுதியது. சென்னை பாரி நிலையத்தால் மூன்றாம் பதிப்பு, 1968 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

### வாழ்வியற் களஞ்சியம்

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் பல்வேறு அறிவு வளர்ச்சித் துறைகளையும் உள்ளடக்கியதொரு புதிய கலைக்களஞ்சியத்தை உருவாக்க எண்ணியது. (இக்களஞ்சியம் உருவாக்கத்திற்குத் துணைவேந்தரும், நிதிக் குழுவும் 1982 ஆம் ஆண்டு இசைவினை வழங்கியது). இக்களஞ்சியத்தை வாழ்வியற் களஞ்சியம், அறிவியற் களஞ்சியம் என, இரு பிரிவுகளில் வெளியிடத் திட்டமிடப்பட்டது. திட்டம் நிறைவேற்றும் வகையில் சென்னையில் 1983 ஆம் ஆண்டு செயற்படத் தொடங்கியது. வாழ்வியற் களஞ்சியம் 14 மடலங்களாக வெளிவரத் திட்டமிடப்பட்டது. இவ்வாழ்வியற் களஞ்சியத்தின் முதன்மைப் பதிப்பாசிரியராக திரு.அ.வெ. சுப்பிரமணியம் நியமிக்கப்பட்டார். அதன்பிறகு திரு.நா.பாலுசாமி நியமிக்கப்பட்டார். 20-8-84 ஆம் நாளன்று இக்களஞ்சிய மையம் தஞ்சைக்கு மாற்றப்பட்டு வாழ்வியற் களஞ்சியத்தின் 14 மடலங்களும் வெளிவந்துள்ளன.

### வாழ்வியல் பழமொழிகள்

கே. எஸ். லெட்சுமணன் என்பவரால் எழுதப்பட்டது. காரைக்குடி செல்வி பதிப்பகத்தால் 1967 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### வானொலி (ரேடியோ) அகராதி

இவ்வகர முதலியின் ஆசிரியர் எம். கான்மொகம்மது. இவ்வகர முதலி 1961 இல் வெளியிடப்பட்டது.

### விக்டோரியா தமிழ் அகராதி

எஸ். குப்புசாமி என்பவரால் எழுதப்பட்டது. பிக்டோரியல் கம்பெனி என்ற நிறுவனத்தால் சென்னை, 1934 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### விசாகப் பெருமாள் தமிழகராதி

தமிழுக்குத் தமிழால் பொருள் கூறும் அகரமுதலி. இதன் ஆசிரியர் விசாகப் பெருமாள் ஐயர்.

### விசுவநாத பிள்ளை தமிழ் - ஆங்கில அகராதி (A Dictionary Tamil and English)

இவ்வகரமுதலியைத் தொகுத்தவர் வி. விசுவநாதப்பிள்ளை என்பவர். The Madras school book and Literature society, Madras கி.பி.1888 இல் இவ்வகரமுதலியை வெளியிட்டது.

### விந்தை நுண்தொழில் விஞ்ஞானக் கலைச்சொல் (ஆங்கிலம் - தமிழ்)

இந்நூலின் ஆசிரியர் எஸ். நடராசா. இலங்கையிலிருந்து 1952 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### விநாயகர் அருட்செல்வம்

இந்நூல் மு. சதாசிவம் என்பவரால் எழுதப்பட்டு, 1966 இல் பாரிநிலையத்தால் வெளியிடப்பட்டது.

### விநாயகரின் ஆயிரம் திருநாமங்கள்

இந்நூலின் ஆசிரியர் மு. சதாசிவம். 1967 இல் பாரி நிலையத்தால் வெளியிடப்பட்டது.

### விரிவு நிகண்டு

நா. அருணாசலநாவலர் இயற்றியுள்ளார். பதிப்பு, ஆண்டு இவைகள் கிடைக்கப் பெறவில்லை.

### வின்சுலோ ஆங்கிலம் - தமிழ் அகராதி

இவ்வகரமுதலி ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழால் பொருள் கூறுவது. இதன் ஆசிரியர் வின்சுலோ (Rev. M. Winslow). இது 1842 இல் வெளியிடப்பட்டது.

## வின்சுலோ தமிழ் – ஆங்கில அகராதி

இவ்வகரமுதலியின் ஆசிரியர் வின்சுலோ (Rev. M. Winslow). இது 1862 இல் வெளியிடப்பட்டது. 67,452 தமிழ்ச் சொல்லுக்கு ஆங்கிலத்தால் பொருள் கூறப்பட்டுள்ளது.

## வேதகிரியார் சூடாமணி நிகண்டு

களத்தூர் வேதகிரியார். சூடாமணி நிகண்டின் பதினொன்றாந் தொகுதியைக் காலத்துக்கேற்ப விரிவுபடுத்தினார். பல புதிய சொற்பொருள்கள் பற்றிய 310 பாடல்களைச் சேர்த்து 583 பாடல்கள் கொண்டதொரு தனி நூலாக விரிவாக்கினார். இந்நூலை யாழ்ப்பாணத்துத் தமிழ்ச் சங்கத்தார் 1843 இல் 'நிகண்டு' என்னும் பெயரில் வெளியிட்டனர். இந்நூலுக்கு 'வேதகிரியார் சூடாமணி' எனவும் பெயருண்டு.

## வேதபுத்தக நிகண்டு (ஆங்கிலம் – தமிழ்)

கிளேட்டன், ஆல்பெர்ட், சி. என்பவரால் எழுதப்பட்டது. சென்னைக் கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் மூலம் 1950 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## வேலா பிறமொழி – தமிழ் அகரமுதலி (தமிழ் கற்போம்)

வி.பொ. பழனிவேலனார் என்பவரால் எழுதப்பட்டது. சிவலிங்க நூற்பதிப்புக் கழகத்தால் ஈரோட்டிலிருந்து வெளியிடப்பட்டது.

## வேளாண்மையியல் மண்ணியல் கலைச் சொற்கள்

இந்நூலின் பதிப்பாசிரியர் முனைவர் இரா. சுந்தரம் ஆவார். தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தால் 1997 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## வைணவ விளக்கவுரை அருஞ்சொல் அகராதி

திருவாய் மொழி போன்ற மாலியப் பாடல்களுக்கு மணிப்பவள நடையில் எழுதப்பட்ட உரையில் உள்ள அருஞ்சொற்களுக்குப் பொருள் கூறுவது இவ்வகரமுதலி.

## வைத்திய அகராதி – 1

இவ்வகர முதலியின் ஆசிரியர் கந்தசாமி அவர்கள். 1880 இல் சென்னை, பரப்பிரம்மா அச்சியந்திர சாலை இந்நூலை வெளியிட்டது.

## வைத்திய அகராதி – 2

இவ்வகர முதலியின் ஆசிரியர் காசி விசுவநாதர். 1971 இல் சென்னை, ஸ்டார் ஆப் இந்தியா அச்சகம் இவ்வகரமுதலியை வெளியிட்டது. இதே பெயரில் 1880 இல் பிறிதொரு அகரமுதலியும் வெளிவந்தது.

## வைத்தியக் குரல் பழமொழி விளக்கம்

சித்தர்களால் இயற்றப்பட்ட இந்நூல் சென்னை இராசரத்தினர் அச்சகத்தின் மூலம் 1959 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

## வைத்தியச் சாலை சங்கீரகம்

சித்தர்களால் இயற்றப்பட்ட இந்நூல் 3ஆம் பதிப்பைச் சென்னை, தமிழ்ச்சங்கம் 1906 ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளது.

## வைத்திய மலை அகராதி

இவ்வகரமுதலி 1908 இல் சென்னை பத்மநாப விலாச அச்சுக் கூடத்தில் வெளியிடப்பட்டது.

## வைத்திய மூலிகை அகராதி – 1

சித்தர்கள் இயற்றிய இந்நூல் 1915 ஆம் ஆண்டு மதுரையிலிருந்து வெளியிடப்பட்டது.

## வைத்திய மூலிகை அகராதி – 2

இதன் ஆசிரியர் கந்தசாமி. சென்னை, பி. இரத்தினர் அண்டு சன்சு 1932 இல் இவ்வகர முதலியை வெளியிட்டது.

## (சித்தர்கள்) வைத்திய மூலிகை விரிவகராதி

இவ்வகரமுதலி கதிர்வேல் அவர்களால் பதிப்பிக்கப்பட்டது. சென்னை, வைத்திய இரத்தினகார

அச்சுக்கூடம் இந்நூலை 1902 இல் அச்சிட்டு வெளியிட்டது.

### "ஜூபிலி" தமிழ்ப் பேரகராதி

நெல்லை எஸ். சங்கரலிங்கனார் என்பவரால் இயற்றப்பட்டு சென்னையிலிருந்து 1935 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### ஸ்ரீமகள் தமிழ் அகராதி

ஈக்காடு சபாபதி என்பவரால் இயற்றப்பட்டது. சென்னை, 1957 ஆம் ஆண்டு 2ஆம் பதிப்பு வெளியிடப்பட்டுள்ளது.

### ஜப்பான் – தமிழ் அகராதி

மா.க. நடராஜன் என்பவரால் இயற்றப்பட்டது. மலேயன் அச்சுக்கூடத்தால் கோலாலம்பூரிலிருந்து 1942 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### ஸமஸ்க்ருத தமிழ் அகராதி

இவ்வகராதி ஸ்ரீநிவாஸ ராமானுஜாசாரியார், பாலவேடு பரவஸ்து ஆகியோரால் இயற்றப்பட்டது. வி.இராமசுவாமி சாஸ்த்ருலு & சன்சு என்ற நிறுவனத்தினரால் சென்னையிலிருந்து 1957 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

### ஸம்ஸ்க்ருத – தமிழ் அகராதி

நேமம் வெங்கடேச சர்மா என்பவரால் இயற்றப்பட்டது. பிரம்ம ஸாயுஜ்ய லைப்ரரி என்ற நிறுவனத்தால் 1930 ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட இது கிரந்த வடிவத்தில் அமைந்துள்ளது.


1. A Brief Study of Tamil Lexicography
   N. Joseph
   Aayvukkoovai-9, 1978, pp.357-362.

2. A Case for a Learner's Tamil-English Dictionary - Annals of Oriental Research-28:2, 1979. pp.1-15.
   A.A. Manavalan and E. Sundaramoorthy.

3. A Classified glossary of Tamil words with explanatory meanings. (Tamil-English-Tamil)
   C. Sivaramaya.
   Madras : Progressive Press, 1908. IV, 192 pp.

4. A Companian to the punchatuntram. comprising explanations and meanings of the most difficult words in the book both in Tamil and in English.
   Y. Amirthanayagam
   Madras : Scottish Press, 1875. 2nd edition.

5. A Comparative Vocabulary of Tamil and Hindi.
   V.R. Jagannathan.
   Agra : Central Hindi Institute - 1969.

6. A Comprehensive Tamil and English Dictionary of High and Low Tamil.
   Winslow, Miron.
   Madras : P.R. Hunt, 1862.

7. A Concise dictionary of Malay-Tamil.
   Samy. M.A.
   Madras : M.Duraiswamy Mudaliar, 1962.

8. A Critical Survey of the Madras University Tamil Lexicon, Being an open Report to the Syndicate of the Madras University.
   G. Devanesan.
   Salem : Salem Co-operative Printing Works, 1955.

9. A Dictionary English and Tamil
   Fabricius, John Philip and Breithaupt, John Chr.
   Madras : Christian Knowledge Society's Press, 1852. 2 parts. Revised by L.P.Haubroe, Sperschneider and T.Brotherton.

10. A Dictionary English and Tamil
    Oodooville. L.S.
    Madras : 1852.

→ ஆதி எனத் திரிந்து, முதன்மை சுட்டிய சொல்லாக வடநாட்டு மொழிகளில் வழங்கி, பிறகு வடமொழியிலும் பெருக ஆட்சி பெற்றிருக்கிறது என அறியலாம். மிகு என்னும் வினையும் மிகுதி என்னும் பெயரும் தமிழில் பண்டுதொட்டு ஆட்சி பெற்றிருப்பதுபோல், அகு என்னும் வினையும், அகுதி என்னும் பெயரும் தமிழ்ச்சொற்க ளாயினும் தமிழில் பெருகிய ஆட்சி பெறவில்லை. ஆதலின் அதன் திரிபான ஆதி என்னும் சொல்லைத் தமிழில் தோன்றி வளர்ந்த தனித்தமிழ்ச் சொல்லாகக் கொள்ளவியலாது. மிகுதி என்பதை நோக்க மீதி என்பது திரிபு வடிவமே; செந்தமிழ் வடிவமன்று. ஆதி என்பது வடநாட்டில் தோன்றி வளர்ந்து பெற்ற வடிவத்தைத் தமிழ்நாட்டிலேயே தோன்றி வளர்ந்து பெற்றிருப்பினும் அதனைத் திரிபு வடிவம் என்பதல்லது செந்தமிழ் வடிவம் எனக் கொள்ளலாகாது.

இனி, சூராதி சூரன், தேவாதி தேவன் என்னும் தொடர்களில் ஆதி என்னும் சொல், (அதி = மிகுதி) சூரன் + அதி + சூரன் = சூராதி சூரன் எனத் திரிந்த திரிபாதலின் அது வினாவன்று. ஆதி என்பது தமிழ்ச் சொல்லேயென வற்புறுத்திய தமிழன்பர்கள் பலரும் முன்மை சுட்டிய 'ஆ' என்னும் இடைச் சொல்லையே சான்று காட்டினர். வினையடியாகத் தோன்றிய பெயர்ச்சொல் வடிவத்தை அவர்கள் வரையறுக்கவில்லை. அவர்கள் கூற்றின் வண்ணம், போகு → போது எனத் திரிவது போல் ஆகு → ஆது எனத் திரிந்ததாயின், ஆது என்னும் வினையின் முக்காலப் புடைபெயர்ச்சி தமிழில் யாண்டும் காணப்படவில்லை. ஆயின், ஆதி என்னுஞ்சொல் மிகப் பழைய காலத்தையும், மிக முந்தைய நிலையையும் குறித்த பெயர்ச்சொல்லாகப் பெருக ஆளப்பட்டுள்ளது. இப் பெயர்ச்சொல் வடிவமே முந்தைய எனப் பொருள்படும் பெயரெச்சப் பொருளையும், இச்சொல்லுக்குத் தந்தது. ஆதலின் பெயர்ச்சொல் பொருளே இதன் முழுமையான பொருள். ஆதி, செந்தமிழ்ச் சொல்லாயின் தலைமையையும் முதன்மை யையும் ஆகிய பொருள்களைச் சுட்ட வேண்டுமேயன்றி, காலத்தால் முற்பட்ட பழமையைச் சுட்டுவது காலத்தின் கோலத்தால் ஏற்பட்ட வழிநிலைப் பொருளேயன்றி முதற்பொருள் ஆகாது. பழையது என்னும் சொல் பழைமையைக் குறிக்குமேயன்றி தலைமையையும், முதன்மையையும் குறிக்காது. தொன்மை என்னும் சொல்லும் இவ்வாறே. முதன்மை என்று பொருள்படும் சொல் மட்டும் காலத்தால் முற்பட்ட நிலைமையையும் அகவையால் மூத்த தலைமையையும் குறிக்கும். முன்னவன் என்னும் சொல்லை ஒப்பு நோக்குக. எனவே, ஆதி என்பது முதன்மை சுட்டிய பிறகே பழைமையைச் சுட்டியிருக்கிறது என்பது போதரும்.

தமிழில் முதன்மை சுட்டிய பொருளே ஆட்சியில் பெருகி வழங்கியிருக்கிறது. பழைமை சுட்டிய பொருள் வடநாட்டு மொழிகளில் இச்சொல்லுக்கு ஏற்றப்பட்டிருக் கிறது. ஆதலின், முன்மை சுட்டிய பிறகு முதன்மையையும் தலைமையையும் சுட்டிய ஆதி என்னும் தனிச்சொல் வடநாட்டிற்குச் சென்று வடநாட்டில் பழமைப் பொருளில் திரிந்ததால் அதனை (பிராகிருத முதலிய வடதமிழ்) வடநாட்டுச் சொல்லென்று பாவாணர் வரையறுத்தார்.

தமிழிலுள்ள பெயரெச்சங்கள் அனைத்தும் அகர வீறு கொண்டவை. எளிய, வலிய, நல்ல என்பவற்றை ஒப்பு நோக்குக. 'ஆதி' தமிழிலக்கணக் கட்டுக்கோப்புக்குள் தோன்றி வளர்ந்த சொல்லாயின், ஆதிய என்றாற்போல் அகரவீற்றுப் பெயரச்சமாயிருத்தல் வேண்டும். இகரவீற்றுப் பெயரெச்சம் தமிழில் யாண்டும் ஆளப்படவில்லை. இகரவீற்றுப் பெயர்கள் பெயரச்சம் போல் முன்னுறுப்பாகிக் கூட்டுச் சொல்லாகுமிடத்து கோடி + கரை = கோடிக்கரை. மீதி + பணம் = மீதிப்பணம் என்றாற்போல் வல்லெழுத்து மிகுதல் வேண்டும். ஆதி பகவன் என்னும் கூட்டுச் சொல்லில் வல்லெழுத்து மிகாமை அறிக. இஃதொன்றே அதனை வடபுலச் சொல்லெனக் காட்டவல்லது.

வடமொழியில் ādi - beginning, commencement, first எனப் பொருள்படுகிறது. இந்திராதி தேவர் என்றவிடத்து இந்திரன் முதலாகிய தேவர் எனப் பொருள்படும். தமிழிலும் ஆகிய என்னும் சொல் முதலிய என்னும் பொருளில் ஆளப்படுகிறது. வளர்தல், மேம்படல், ஆகுதல் எனப் பொருள்படும் அகு → ஆகு வினை வடிவே ஆதி என்னும் வடசொல்லின் மூலம் என்பதும் பெயர் வடிவம் வடபுல மொழி வழித்தென்பதும் இதனாலும் போதரும்.

வடமொழி தவிர்ந்த மேலையாரிய மொழிகளில் ஆதி என்னும் சொல்லாட்சி காணப்படவில்லை. வடதமிழ்ச் சொல் மூலமே வடமொழியில் ஆதி என வடிவு கொண்டுள்ளது. இது முன்னால் அல்லது முதலிலிருப் பதைக் குறித்த அஃறிணையொருமைச் சொல்லாக வழக் கூன்றியதால், காரி = கருத்த காளையைக் குறித்தது போல், ஆதி = மேலிருக்கும் பொருள்; முன்னால் அல்லது முதலிலிருக்கும் பொருளை அல்லது உயிரியைச் சுட்டியதாதல் வேண்டும்.

காரி, குறிப்பிட்ட கரிய காளையை அல்லது கரிய வேறு பொருளைச் சுட்டும்போது மட்டும் அவ்வடிவு

கொள்ளும், காரிப்புள், காரிக்கிழார் என்பவற்றை ஒப்புநோக்குக. கன்னங்கரேலென்றிருக்கும் தன்மையை முழுமையாக விளக்க, காரிபெயர் வடிவு பெற்றது. இனி, பல்வகை நிறவேறு பாடுகளிலிருந்து கரிய நிறத்துப் பொருளைப் பிரித்துக் கூறவேண்டிய விடத்துக் கருஞ்சீரகம், கருமணி, கரியவிழி எனப் பண்பீறும், குறிப்புப் பெயரெச்ச வீறும் கொள்ளும். அங்ஙனம் பொதுப்பொருளில் ஆதி என்னும் சொல் கரிய என்றாற் போல், தமிழில் ஆதிய எனக் குறிப்புப் பெயரெச்ச மாகாததால் அது வடபுலச் சொல்லே எனத் தெளிக.

ஆதி என்னுஞ்சொல் முதல், முதலிய, முதலில் என்னும் பொருளில் கல்லாத மக்களின் பேச்சு வழக்கில் இடம்பெறவில்லை. மண்ணுக்குரிய சொல்லாயின் மக்களிடையன்றோ வழங்கியிருக்க வேண்டும்.

சொல், வடிவத்தால் முற்றும் தமிழாயும் பொருளாட்சியில் தமிழகத்தில் தோன்றிய பொருளாயு மில்லாமல், ஏனைய திரவிட நாடுகளிலோ அல்லது வேற்று மொழிச் சூழல்களிலோ வளர்ந்து பொருள் கொண்ட சொல்லைத் தமிழ்ச் சொல்லாக ஏற்றுக் கொள்வதில்லை. சொல்லும் பொருளும் ஒத்திருந்து தமிழில் வழங்குமாறு பிற திரவிட மொழிகளில் வளர்ந்திருந்தால் அவற்றையும் தமிழ்ச் சொல் என்று ஏற்றுக் கொள்கிறோம். இல், மனை, வீடு ஆகியவை தமிழிலும் திரவிட மொழிகளிலும் ஒத்து வழங்குகின்றன. இல் என்பதைத் தெலுங்குச் சொல் என்றும், மனை என்பதைக் கன்னடச்சொல் என்றும் நாம் சொல்வதில்லை. ஆயின், உறை என்பது தங்கியிருக்கின்ற வீட்டைக் குறித்த சொல்லாயினும் தமிழில் வீடு என்னும் பொருளில் பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலும் பரவலாக இடம் பெறவில்லை. உறை என்பது இல், மனை போன்ற சொற்களைப் போன்றே மனைவியையும் குறிக்கலாம். பிராகுவி மொழியில் உறை என்பது வீட்டையும், பாசுகு மொழியில் உறை என்பது மனைவியையும் குறிக்கும் சொல்லென ஒப்ப முடிந்தாலும், தமிழ் உலக வழக்கிலும் இலக்கிய வழக்கிலும் உறை என்னும் சொல் மனைவி என்னும் பொருளில் பாசுகு மொழிக்குச் சென்ற தமிழ்ச்சொல் என்று சொல்வதல்லது செந்தமிழ் நாட்டுச் சொல்லென்று எவரும் கூறார்.

ஆதி என்பது வேரளவில் தமிழுக்குத் தன் சொல்லாயினும், தென்சொல்லன்று என்பதைப் பாவாணர் உறுதிப்படுத்தினார்.

சொற்பொருள் கூறத்தொடங்கிய அகரமுதலி, பிற்றை நாளில் பெருவளர்ச்சியுற்று பல்துறைகளாய்ப் பிரிந்தது. அவற்றுள் சில :–

## தமிழ் அகராதிக் கலை வரலாறு

சொல்லுக்குப் பொருள் கூறத் தொடங்கிய அகராதி நாளடைவில் பல துறைகளாகப் பிரிந்து பல உருவங்கள் எடுத்தது. அவற்றுட் சில வருமாறு :–

(1) சொல்லுக்குப் பொருள் கூறுவதோடு, அச்சொல் எந்த வேரிலிருந்து எப்படிப் பிறந்து உருவாயிற்று என்ற விளக்கமும், அது பேச்சு வழக்கிலோ அல்லது செய்யுள் வழக்கிலோ வந்துள்ள தொடரும், அஃது எடுத்தாளப்பட்டுள்ள நூலின் பெயரும், நூலில் அது வந்துள்ள உட்பிரிவின் பெயரும், இத்தனையாவது பாடல் எனப் பாடல் எண்ணும் இன்ன பிறவும் கொடுக்கப்பட்டிருக்கும் அகராதிகள்.

(2) மின்சாரம், பொறிகள் (இயந்திரங்கள்) என்பன போன்ற குறிப்பிட்ட பொருள்களைப் பற்றியும், உழவு, நெசவு போன்ற குறிப்பிட்ட தொழில்களைப் பற்றியும் உள்ள சொற்கள் மட்டும் அவற்றின் தோற்றத்துடன் பொருள் கூறப்பட்டிருக்கும் தனித்துறை யகராதிகள்.

(3) சரியான இலக்கிய வழக்கிலிருந்தும் பொருத்தமான பலுக்கலிருந்தும் (உச்சரிப்பிலிருந்தும்) வேறுபட்டு, நாட்டின் பல பகுதிகளிலும் பலவாறு வழங்கப்படும் வட்டார வழக்குச் சொற்கள் மட்டும் அகரவரிசையில் பொருள் கூறப்பட்டிருக்கும் வழக்கு அகராதிகள் (Dialects).

(4) ஒரு நூலின் இறுதியில் அல்லது முதலில், அந் நூலிலுள்ள செய்யுட்களின் முதலிலுள்ள சொற்களையெல்லாம் திரட்டி அகர வரிசையில் கொடுக்கும் செய்யுள் முதற்குறிப்பகராதி; நூலின் உள் தலைப்புகளைக் கூறும் பொருளடக்க அகராதி.

(5) ஒரு நூலிலுள்ள அருஞ்சொற்களை மட்டும் பொருளுடன் அந்நூலிறுதியில் தந்திருக்கும் அருஞ்சொல்லகராதி.

(6) ஒரு நூலிலுள்ள சொற்கள் அனைத்தையும் நூலில் வந்துள்ள இடஞ்சுட்டிக் கொடுக்கும் தனிநூல் அகராதி.

(7) ஒரு நூலிலுள்ள இன்றியமையாச் சொற்களை மட்டுமோ அல்லது பொருள்களை (செய்திகளை) மட்டுமோ நூலில் வந்துள்ள அடி–இடம் சுட்டிக் கொடுத்துள்ள சிறப்பு அகராதி (Concordance). இவ்விருவகையுள் சொற்கள் கொடுக்கப்பட்டிருப்பது 'சொற் கோவை அகராதி' (Verbal Concordance) எனவும்,

பொருட்கள் கொடுக்கப்பட்டிருப்பது 'பொருட்கோவை அகராதி' (Real Concordance) எனவும் அழைக்கப்படும்.

(8) பல்வகைக் கலைத்துறை – அறிவுத்துறை பற்றிய படங்களுடன் கூடிய அருஞ்சொல் விளக்க அகராதிகள் (Glossary).

(9) உலகச் செய்திகள் – பொருள்கள் அனைத்தும் விரிவாக விளக்கப்பட்டுள்ள கலைக் களஞ்சியம் (Encyclopaedia).

(10) ஒரு மொழிச் சொல்லுக்கு நேரான வேறு ஒரு மொழிச் சொல்லோ – அல்லது – பலமொழிச் சொற்களோ கொடுக்கப்படும் மொழியகராதி வகைகள்.

(11) மேலுள்ளவையே யன்றி, ஒரு மொழியிலே வழங்கும் பழமொழிகளை யெல்லாம் அகர வரிசையில் தொகுத்த பழமொழி யகராதி.

(12) ஒரு மொழி வல்ல புலவர்களின் (அறிஞர்களின்) வாழ்க்கைக் குறிப்புகளை அகர வரிசையில் தரும் புலவர் அகராதி.

(13) இருசுடர், முக்குணம், ஐம்பொறி எனத் தொகையெண்களால் சுட்டப்படுவனவற்றை விளக்கும் தொகையகராதி.

(14) அகம், மகம், முகம்; இன்னல், கன்னல், தின்னல் என்பன போன்ற செய்யுட்கேற்ற எதுகைத் தொடைச் சொற்கள் தரப்படும் தொடையகராதி.

(15) அரம் – அறம்; குலம் – குளம்; மணம் – மனம் என்பன போல ஒப்புமையுடைய ஓரெழுத்து வேறுபாடுடைய சொற்கள் தரப்பட்டுள்ள எழுத்து வேறுபாட்டகராதி.

இப்படி யின்னும் பலவகை அகராதிகள் உருவெடுத்து வளர்ந்து வருகின்றன.

முதலில் சொற்கட்குப் பொருள் கூறுதல் மட்டும் செய்து வந்த அகராதி, மேலே கொடுக்கப்பட்டுள்ளபடி பலவகை உருவங்கள் என்றைக்கு எடுக்கத் தொடங்கியதோ அன்றைக்கே அகராதியும் ஒரு 'கலை' யாகிவிட்டது. பொதுவாக ஓர் அறிவியலோ அல்லது ஒரு தொழிலியலோ அது தோன்றிய காலத்து இருந்த நிலையினும் மேலாகக் கற்பனையால் புதுப்புது நிலையை அடையத் தொடங்குகிற போதே 'கலை' பிறந்து விடுகிறது. ஓர் இயல் கலையாகி வளர வளர, மக்கள் அதனால் கவரப்பட்டு, அதனைப் பல வகையில் பயன்படுத்திக் கொள்கின்றனர். இந்தப் பொது நெறிக்கு அகராதிக் கலையும் உட்பட்டதே.

ஒரு கலையாக வளர்ச்சி பெற்ற தமிழ் அகராதித் துறை மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பே தோற்றம் எடுத்தது. இப்பொழுது கிடைத்திருக்கும் தமிழ் நூல்களுள் முற்பட்டதாகவும் மூவாயிரம் ஆண்டுக்கு முன் தோன்றியதாகவும் கருதப்படும் தொல்காப்பியம் என்னும் பெரிய இலக்கண நூலில் சொற்களுக்குப் பொருள் கூறும் பகுதிகள் உள்ளன.

## முதல் தமிழ் அகராதி :

தொல்காப்பியம், 'மொழி அறிவியலும்', 'குமுக வாழ்க்கை அறிவியலும்' அடங்கிய ஒரு தலைநூலாகும். அதன் முதல் பிரிவாகிய எழுத்ததிகாரத்தில் எழுத்திலக்கணமும் இரண்டாவது பிரிவாகிய சொல்லதிகாரத்தில் சொல்லிலக்கணமும், இறுதிப் பிரிவாகிய பொருளதிகாரத்தில் செய்யுளிலக்கணமும் அணியிலக்கணமும் இலக்கியப் படைப்புக்கான வாழ்வியற் பொருளிலக்கணமும் கூறப்பட்டுள்ளன. இவற்றுள் சொல்லதிகாரத்திலுள்ள 'உரியியல்' என்னும் பிரிவில் 120 சொற்கட்குப் பொருள் கூறியுள்ளார் ஆசிரியர் தொல்காப்பியனார். அதே அதிகாரத்திலுள்ள 'இடையியல்' என்னும் பகுதியிலும் ஒருசார் சொற்கட்கு உரிய பொருள்கள் தரப்பட்டுள்ளன. பொருளதிகாரத்தி லுள்ள மரபியல் என்னும் பகுதியிலும் சொற்பொருள் அறிவிக்கும் கூறு அமைந்துள்ளது. இம்மூன்று இயல்களுக்குள்ளேயே உரியியலில்தான் முழு அளவில் அகராதிக் கூறு அமைந்துள்ளது. எனவே இதனை 'முதல் தமிழ் அகராதி' எனலாம். ஆனால், தொல்காப்பியத்தில் பொருள் கூறப்பட்டுள்ள சொற்கள் இக்கால அகராதிபோல் அகரவரிசையில் இல்லை என்பது ஈண்டு நினைவில் வைக்கற்பாலது.

தமிழிலக்கணத்தில் பெயர்ச்சொல், வினைச் சொல், இடைச்சொல், உரிச்சொல் எனச் சொற்கள் நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. முருகன், மாடு, வீடு எனப் பொருள்களின் பெயரைக் குறிக்குஞ் சொற்கள் பெயர்ச் சொற்கள். வா, போ என வினையை (செயலை)க் குறிக்குஞ் சொற்கள் வினைச் சொற்கள். தனித்துப் பொருள் தராமல் அவனே, செய்தானோ எனப் பெயர்ச்சொல்லோடும் வினைச்சொல்லோடும் சேர்ந்து பொருள் தரும் ஏ,ஓ போன்ற பெயரும் அல்லாத – வினையும் அல்லாத – இரண்டுக்கும் இடைப்பட்ட சொற்கள் இடைச் சொற்களாம். கறுப்பு, சிவப்பு, முழுமை போன்ற பண்புச் சொற்கள் உரிச் சொற்களாம்.

கறுப்பு, சிவப்பு, முழுமை எனத் தனியே பொருட்கள் இல்லை; எனவே இவை, பொருளின் பெயரைக் குறிக்கும் பெயர்ச் சொற்களும் அல்ல; இவை செயல்களும் அல்லவாதலின் வினைச் சொற்களும் அல்ல. உள்ளத்தாலும் ஐம்பொறிகளாலும் உய்த்து உணரப்படும் பண்புகளே (abstract) இவைகள். அஃதாவது, கறுப்பு என ஏதாவது ஒரு பொருளைத் தனியே பிரித்துப் பார்க்க முடியாது; ஒரு பொருளில் கறுப்பு நிறம் என ஒன்று தெரியும் – அவ்வளவு தான். மற்றைய பண்புகளும் இப்படியே. இவ்வகையாக, நிறம், அளவு, தன்மை, உணர்வு முதலிய பண்புகளைக் குறிக்குஞ் சொற்கள் உரிச் சொற்கள் எனப்பட்டன.

இந்தப் பெயர், வினை, இடை, உரி ஆகிய நான்கு சொற்களையும் பற்றித் தனித்தனியே பெயரியல், வினையியல், இடையியல், உரியியல் என்னும் நான்கு இயல்களில் பேசியுள்ளார் தொல்காப்பியனார். நான்கு சொற்கட்கும் நான்கு இயல்களில் இலக்கணங் கூற வந்த ஆசிரியர், பெயரியலிலும் வினையியலிலும் பெயர் – வினை வகைகளும் அவற்றின் இலக்கணங்களும் கூறினாரே யன்றி, பெயர்ச் சொற்கள் பலவற்றையும் வினைச் சொற்கள் பலவற்றையும் திரட்டி நிறுத்திப் பொருள் கூறினாரிலர்; ஆனால் இடையியலில் இடைச் சொற்கள் சிலவும், உரியியலில் உரிச் சொற்கள் பலவும் அமைத்து அவற்றிற்குப் பொருளும் கூறியுள்ளார். பெயர்ச் சொல்லையும் வினைச் சொல்லையும் மக்கள் தெளிவாக அறிவார்கள் எனக் கருதி அவற்றிற்குப் பொருள் கூறும் வேலையை ஆசிரியர் விட்டுவிட்டார் போலும். அதே நேரத்தில், இடைச் சொற்களும் உரிச் சொற்களும் பொருள் கடினமானவையாதலின் அவற்றிற்கு மட்டும் பொருள் கூறினார் போலும். அவற்றுள்ளும், வெளிப்படையாக எளிதில் பொருள் தெரியும் சொற்களை விட்டுவிட்டு அரிய சொற்கட்கு மட்டுமே ஆசிரியர் பொருள் கூறியுள்ளார். இதனைத் தொல்காப்பிய உரியியலிலுள்ள

"வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா உரிச்சொல் மேன."

என்னும் நூற்பாவால் அறியலாம். மேலும் ஆசிரியர், 'அரிய சொற்கள் எனினுங்கூட எல்லாச் சொற்களையும் இங்கே கூற முடியாது; சொற்களுக்கு உரிய எல்லாப் பொருள்களையுங்கூட சொல்ல முடியாது; விடுபட்ட சொற்களையும் பொருள்களையும் வந்தவிடத்துக் கண்டுகொள்க' என்றும் முடிவில் அறிவித்துள்ளார். இச் செய்திகளை இடையியலின் இறுதியிலுள்ள

"கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே."

என்னும் நூற்பாவானும், உரியியலின் இறுதியிலுள்ள

"கூறிய கிளவிப் பொருள்நிலை அல்ல
வேறுபிற தோன்றினும் அவற்றொடுங் கொளலே."

"அன்ன பிறவும் கிளந்த அல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉம்
உரிச்சொல் லெல்லாம் பொருட்குறை கூட்ட
இயன்ற மருங்கின் இனைத்தென அறியும்
வரம்புதமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்து
ஓம்படை ஆணையிற் கிளந்தவற் றியலான்
பாங்குற உணர்தல் என்மனார் புலவர்."

என்னும் நூற்பாக்களானும் அறியலாம். மேலே அன்ன பிறவும் என்னும் நூற்பாவில் உள்ள 'பன் முறையானும் பரந்தன வரூஉம் உரிச்சொல்', 'இனைத்தென அறியும் வரம்பு தமக்கின்மையின் – ஆகிய தொடர்களை நோக்கின், சொல்லி முடியாவாதலின் எவ்வளவோ உரிச்சொற்கள் விடுபட்டன என்பது புலனாகும். மற்றும், அந்நூற்பாவின் இறுதியிலுள்ள 'என்மனார் புலவர்' என்னும் தொடரை நோக்கின், ஓர் அரிய உண்மை புலப்படும். 'என்மனார் புலவர்' என்றால், 'என்று புலவர்கள் சொல்லியுள்ளனர்' என்று பொருளாம். 'என்று புலவர்கள் சொல்லியுள்ளனர்' என்று தொல்காப்பியர் சொல்லியிருக்கிறார் என்றால், அவருக்கும் முன்னே எத்தனையோ புலவர்கள் எத்தனையோ இலக்கண நூல்கள் இயற்றியுள்ளனர் என்பது புலனாகிறது. அச்செல்வங்கள் எல்லாம் நமக்குக் கிடைக்கவில்லை. கிடைத்திருந்தால் அவற்றில் கூறப்பட்ட சொற் பொருள்களையும் நாம் அறிய முடியும். எனவே, இவ்வுண்மையைக் கொண்டு நோக்குங்கால், மூவாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தொல்காப்பியத்திற்கும் முன்னமேயே – அஃதாவது வரலாற்றுக் காலத்திற்கும் அப்பாற்பட்ட மிகப் பழங்காலத்திலேயே சொல்லுக்குப் பொருள் கூறும் அகராதித் துறை தமிழ்மொழியில் தோன்றிவிட்டது என்னும் பேருண்மை தெரியவரும்.

சொல்லுக்குப் பொருள் கூறும் உரியியலில், ஒரே பொருள் உடைய சொற்களும் உள்ளன; பல பொருள்கள் தரும் சொற்களும் இடம்பெற்றுள்ளன; ஒரே பொருளைத் தரும் பல சொற்களும் கொடுக்கப் பட்டுள்ளன, இவையெல்லாம் எடுத்துக்காட்டுகளுடன் தனித் தலைப்பில் பின்னர் விளக்கப்படும்.

தொல்காப்பியத்தின் சொல்லதிகாரமே சொல்லிலக்கணமாம் சொற்பிறப்பியல் கூறும் கூறுபாட்டைக் கொண்டதெனின் அது மிகையன்று. அவ்வியலிற் சொல்லின் பல்வேறு இயல்புகளும் நிலைகளும் கூறப்பட்டிருப்பதோடு இடையியலிலும், உரியியலிலும் சொல்லுக்குப் பொருள் கூறுந் தன்மையும் கொண்டிலங்குகிறதென்க.

இங்ஙனம் சொல்லிலக்கணத்தின் ஓருறுப்பா யிருந்த அகரமுதலித்துறை, நாளடைவில் அதிலிருந்து பிரிந்து தனிக் கலையாய் ஆயிற்று. எல்லாக் கலைகளிலும் இத்தகைய மாற்றம் நிகழ்வது இயற்கையே. மக்களின் உள்ளத்து இயல்புகளைக் கூறவெழுந்த உளவியல் (Psychology) கலையிலிருந்து குழந்தை உளவியலும் (child psychology) கல்வி உளவியலும் (educational psychology) பிரிந்தாற்போன்று சொல்லிலக்கணத்தினின்று (etymology) அகராதிக் கலை (Lexicography) பிரிந்ததென்க.

அகரமுதலித் துறையில் தொல்காப்பிய உரியியலுக்குப் பின் முழுமையாய்க் கிடைத்துள்ள நூல்களுள் சேந்தன் திவாகரம், பிங்கலம் ஆகிய இரண்டும் காலத்தாற் முற்பட்டவை. இவற்றின் காலத்தைக் கி.பி.எட்டாம் நூற்றாண்டென்பர். இவை 'நிகண்டு' எனும் பொதுப் பெயரேற்றுத் திவாகர நிகண்டு, பிங்கல நிகண்டு என வழங்கப்படுகின்றன. இவற்றையடுத்துச் சூடாமணி நிகண்டு, கயாதர நிகண்டு, உரிச்சொல் நிகண்டு என நூற்றுக்கணக்கில் நிகண்டு நூல்கள் தோன்றின.

இவற்றிற்கு நிகண்டெனும் பெயரேற்பட்ட தெங்ஙனமெனின், விளக்குவம்.

வடமொழியிலுள்ள வேதத்தின் ஆறு அங்கங்களுள் நிருத்தம் என்பதும் ஒன்று; அதில் 'நிகண்டு' என ஒரு பகுதி உள்ளது; அப்பகுதியில் சொற்பொருள் விளக்கஞ் செய்யப்பட்டுள்ளது. இதையொட்டி, சொல்லுக்குப் பொருள் கூறும் தனி நூல்களும் நிகண்டு என வடமொழியில் அழைக்கப் பட்டன. புராணம், பிரபந்தம் முதலிய பெயர்களைப் போல இந்த நிகண்டு என்னும் பெயரும் தமிழ் மொழியில் தொற்றிக் கொண்டது. சொற்பொருள் கூறத் தொடங்கிய தமிழ் நூல்களெல்லாம் நிகண்டு என்னும் பொதுப்பெயரால் அழைக்கப்பட்டன. இஃது ஒரு சாரார் கொள்கை.

நிகண்டு என்னும் வட சொல்லுக்குத் தொகுதி – கூட்டம் என்று பொருளாம். சொற்கள் தொகுதியாக – கூட்டமாக அமைக்கப்பட்டுப் பொருள் விளக்கப்பட் டிருத்தலால் நிகண்டு என்னும் பெயர் தரப்பட்டதாம்.

நிகண்டு என்பது வடமொழிச் சொல் என்று சொல்பவர் ஒருபுறமிருக்க, அது தமிழ்ச் சொல்தான் என்று சொல்பவரும் உளர். நிகண்டு என்னும் சொல்லுக்கு உண்மை என்பது பொருள் எனவும், 'நிகழ்ந்தது' என்னும் சொல்தான் 'நிகண்டு' என மருவி விட்டதெனவும் தமிழ்க் கொள்கையினர் ஒருசாரார் கூறுகின்றனர். இதற்கு இன்னொரு வகையாகவும் பொருட்டுக் (காரணம்) கூறலாம்.

நீளம் என்பதை நிகளம் எனவும் நீண்டது என்பதை நிகண்டது எனவும் பேச்சு வழக்கில் மக்கள் சிலர் சொல்வதைக் கேட்கலாம். நிகளம் என ஒருசார் செய்யுள் வழக்கும் உண்டு. இந்த வழக்குகளை யொட்டிப் பார்க்குங்கால், நிகண்டு என்னும் சொல்லுக்கு, நீண்டது என்று பொருள் கொள்ளலாம். சொற்களின் பட்டியல் நீளமாகத் தரப்பட்டிருத்தலில் – அஃதாவது – சொற்களின் பட்டியல் நிகண்டு (நீண்டு) கொண்டுபோதலின் 'நிகண்டு' என்னும் பெயர் கொடுக்கப்பட்டிருக்கலாம். நிகளுவது நிகண்டு. எளிய மக்களின் பேச்சு வழக்கிலும் நிகண்டு என்னும் சொலலாட்சியைக் காணலாம்; அது வருமாறு :–

"எனக்கு இந்த வேலை ஒரு நெகுண்டு இல்லே", "அவன் அந்த வேலையை ஒரே நெகுண்டா முடிச்சு விட்டான்"; "நான் வழியில் எங்கும் நிற்காமல் ஒரே நெகுண்டா போய்ச் சேர்ந்தேன்" இதுபோன்ற வழக்காறுகள் தென்னார்க்காடு மாவட்டத்திலுண்டு. மற்ற மாவட்டங்களிலுங் கூட இருக்கலாம். இந்த வழக்காறுகளில் 'நிகண்டு' என்னும் சொல்தான் 'நெகுண்டு' எனக் கொச்சையான உருவத்தில் காணப்படுகிறது. 'இந்த வேலை ஒரு நெகுண்டு இல்லை' என்றால் தொடர்ந்து செய்யமுடியாத அளவுக்கு நீண்டு கொண்டு போகும் ஒரு பெரிய வேலையன்று என்பது கருத்து. வேலையை 'ஒரே நெகுண்டா முடித்துவிட்டான்' என்றால், இடையீடின்றி நீண்ட நேரம் தொடர்ந்து செய்து வேலையை முடித்துவிட்டான் என்பது கருத்து. 'ஒரே நெகுண்டா போய்ச்சேர்ந்தேன்' என்றால், 'நீண்ட தொலைவைத் தொடர்ந்து கடந்து சென்றேன்' என்பது கருத்து. 'ஒரே நெட்டாய்ப் போய்ச் சேர்ந்தேன்' என்றும் சிலர் சொல்வதுண்டு. நெட்டாய் என்பதற்கும் நெகுண்டாய் என்பதற்கும் பொருள் ஒன்றே; இவ்விரண்டிற்கும் அடிப்படை களாகிய நெடுமை (நெட்டாய்), நிகளம் (நெகுண்டாய்) என்னும் இரண்டும் ஒரே பொருளுடையனவன்றோ?

எனவே, சொற்கள் நீளத் தொடர்ந்து கொடுக்கப்பட்டிருக்கும் நூல் 'நிகண்டு' எனப்பட்டது. இப்படிப் பொருள் கொள்ளின், நிகண்டு என்னும் சொல் தமிழ்ச் சொல்லே என்பது பெறப்படும். நிகண்டு என்பதை வடசொல்லெனக் கொண்டு பார்த்தால், தொகுதி – கூட்டம் என்பது அதன் பொருளாகும்; எனவே, சொற்கள் தொகுதியாக – கூட்டமாகக் கொடுக்கப்பட்டிருக்கும் நூல் நிகண்டு என்பது பெறப்படும்; இந்தப் பெயர்க் காரணம் பொருந்து மென்றால், நிகண்டு என்பதைத் தமிழ்ச் சொல்லாகக் கொண்டு, சொற்கள் ஒரு பட்டியல் போல நீளத் தொடர்ந்து கொடுக்கப்பட்டிருக்கும் நூல் நிகண்டு எனக் கூறும் பெயர்க்காரணம் மட்டும் ஏன் பொருந்த முடியாது? எனவே, நிகளுவது நிகண்டு என்னும் முடிவுக்கு வரலாம்.

திவாகர நிகண்டு, பிங்கல நிகண்டு, சூடாமணி நிகண்டு, கயாதர நிகண்டு முதலிய நூல்கள் 'நிகண்டு' என்னும் பொதுப் பெயரிட்டழைக்கப்பட்டது பிற்காலத் தென்க. முற்காலத்தில் இவை 'உரிச்சொல்' எனும் பொதுப் பெயராற்றானழைக்கப்பட்டன. சொல்லுக்குப் பொருள் கூறும் தனி நூலை இன்று நாம் 'அகரமுதலி' யென அழைத்தற் போன்று பண்டு உரிச்சொல் பனுவலென்றழைத்தனர். காலவோட்டத்தில் உரிச்சொல் லென்னும் பெயர் மறைந்து போக, நிகண்டென்னும் பெயரே நிலைத்துவிட்டது.

சிந்தனையின் தந்தையே சொல் என்பர். The word, the father of the thought, through its phonic elements produces the sonorousness of verse and subdues the accompanying secondary words to a state of tonic vassalage (Becq de Fouquieres" - J Vendryes, Language (A linguistics Introduction to History, P. 184)

"செய்தியை அறிவிக்கவும், உணர்வுகளை வெளிப்படுத்தவும், உணர்வுகளைத் தூண்டிவிடவும், கட்டளையிடவும் மொழி பயன்படுகிறது. ஒரு மொழியின் சொல்வளத்தைக் கொண்டு அம்மொழியின் சாய்காலையும், அது மொழிப் பயன்பாட்டில் பெற்றுள்ள திறனையும் ஓரளவுக்கு நன்கு அறிந்து கொள்ள முடியும்". – (முனைவர் கி. கருணாகரன், மொழிவளர்ச்சி – பக்.85–86)

"மொழியைப் பயன்படுத்துவோரது சிந்தனை கூர்மையடைவதனால், துல்லியமான பொருளையுடைய சொற்கள் உருவாகின்றன. 'தேவையே கண்டுபிடிப்பின் அன்னை' என்னும் முதுமொழி அறிவியலுக்கு மட்டுமின்றி மொழியியலுக்கும் பொருந்துவதாகும். மொழி வாங்கும் கூட்டத்தாரின் தேவைக்கேற்பப் புதிய சொற்கள் உருவாக்கப்படுகின்றன; வழக்கிழந்த சொற்கள் புதிய பொருள் புணர்த்தப் பெற்றுப் புதிய வழக்குச் சொற்களாக மறுமலர்ச்சியடைகின்றன. காலத்தின் போக்கிற்கும் குமுகாயத்தின் தேவைக்கும் ஏற்ப ஒரு மொழியின் சொற்கோவையை விரிவுபடுத்தும் முயற்சிகள் மேற்கொள்ளப்படாவிடில் அம்மொழி ஒரு தேக்கநிலையை அடைந்து விடுகிறது".

– சொல்லாக்கம் 1.

சொல்லின் அடிப்படையை விளக்கும் கோட்பாட்டை வரையறுத்துச் சொல்வது கடினம் என்பதனால் சொல் கற்பனையின் அடிப்படையில் தோன்றியது என்று பொருளல்ல என்பர். "It is true that it is by no means easy to define what a word really is But the difficulty of defining a concept does not prove that it is something imaginary. How many people, for instance would be able to define the concept 'House'"

- Rudolf Magnusson, studies in the theory of the parts of speech, Lund studies in English XXIV professor df Arangart (Ed) Chapter XVIII, The word.

மரபு வழியில் ஒழுங்குபடுத்தப்பட்ட, பேச்சொலிகளின் தொகுதியே சொல் என்றும் சொல் என்பது சிந்தனைக்கும் பொருளுக்கும் அடிப்படையான தனித்தியங்கும் கூறு என்றும் உருபனியலுக்கும் தொடரியலுக்கும் இடையே அமையும் வேறுபாட்டிற்கு அடிப்படையாக விளங்குவது சொல் என்றும் சொல் என்பது பிரிக்கப்படக் கூடாத ஒன்று என்றும் A word is evidently "something that is not to be broken up' of Dwight Bolinger, Morphems and words. part 5. என்றும் சொல்லைப் பற்றிய கருத்துகளும் வரையறைகளும் பலவாயுள்ளன. அச்சொல் தோன்றி வளர்ந்த வகைப்பாட்டினைத் தெளிவுற விளக்குவதே சொற்பிறப்பியலின் அடிப்படை நோக்கமாகும். அவ்வடிப்படை நோக்கத்தைச் செப்பமுற வரையறுத்துத் தெளிவுபடுத்தியவர் தேவநேயப் பாவாணர்.

பாவாணரின் சொற்பிறப்பியல் நெறிமுறைக்கான அடிப்படைகள் :

தமிழைத் திராவிட மொழிகளுக்குத் தாயெனவும் ஆரிய மொழிக்கு மூலமெனவும் நிறுவுவதைத் தம் வாணாட் பணியாய் வரைந்து கொண்டுழைத்த வரம்பிலா

கூர்த்த மதியும், சீர்த்தப் புலமையுங் கொண்ட செந்தமிழ் ஞாயிறு, வேர்ச்சொல் வேந்தராகிய பாவாணர் செந்தமிழின் மொத்த வேர்கள் எத்தனை என்பதை வரையறுத்துக் கூறவில்லை; ஆயினும் அவரது படைப்புகளைக் கொண்டு ஆய்வு செய்யுங்கால் அவை (54) ஐம்பத்து நான்கு என்று அறியப்படுகிறது.

பாவாணர் கண்டு விளக்கிய வேர்களையும் அவற்றின் பொருள்களையும் பின்வருமாறு அமைக்கலாமெனத் தோன்றுகிறது.

| | | | |
|---|---|---|---|
| 1. | அம் | – | பொருந்தற்கருத்துவேர் |
| 2. | அர் | – | அறுத்தற் கருத்துவேர் |
| 3. | இல் | – | இளமைக் கருத்துவேர் |
| 4. | இள் | – | இணைதற் கருத்துவேர் |
| 5. | உ | – | முதன்மைக் கருத்துவேர் |
| 6. | உம் | – | கூடுதல் கருத்துவேர் |
| 7. | உய் | – | செல்லுதல் கருத்துவேர் |
| 8. | உல் | – | எரிதல் கருத்துவேர் |
| 9. | உல் | – | வளைதல் கருத்துவேர் |
| 10. | உல் | – | உள்ளொடுங்கல் கருத்துவேர் |
| 11. | உள் | – | துளைத்தல் கருத்துவேர் |
| 12. | ஊது | – | ஒலிக்குறிப்பு |
| 13. | ஏ | – | தன்மைப் பெயரடி |
| 14. | ஒல் | – | பொருந்தல் கருத்துவேர். |
| 15. | ஓ | – | ஒலிக்குறிப்பு |
| 16. | கல் | – | கருமைக் கருத்துவேர் |
| 17. | குல் | – | கூடல் கருத்துவேர் |
| 18. | குல் | – | வளைதல் கருத்துவேர் |
| 19. | குல் | – | தோன்றல் கருத்துவேர் |
| 20. | குல் | – | குத்தல் கருத்துவேர் |
| 21. | குல் | – | எரிதல் கருத்துவேர் |
| 22. | குல் | – | துளைத்தல் கருத்துவேர் |
| 23. | சுல் | – | குத்தல் கருத்துவேர் |
| 24. | சுல் | – | சுடுதல் கருத்துவேர் |
| 25. | சுல் | – | சிவத்தல் கருத்துவேர் |
| 26. | சுல் | – | வளைதல் கருத்துவேர் |
| 27. | சுல் | – | துளைத்தல் கருத்துவேர் |
| 28. | துல் | – | பொருந்தல் கருத்துவேர் |
| 29. | துல் | – | வளைதல் கருத்துவேர் |
| 30. | துல் | – | துளைத்தல் கருத்துவேர் |
| 31. | துல் | – | தெளிவுக் கருத்துவேர் |
| 32. | நுல் | – | தோன்றல் கருத்துவேர் |
| 33. | நுல் | – | துளைத்தல் கருத்துவேர் |
| 34. | நுல் | – | நெகிழ்ச்சிக் கருத்துவேர் |
| 35. | நுல் | – | நோதல் கருத்துவேர் |
| 36. | நுல் | – | நீட்சிக் கருத்துவேர் |
| 37. | நுல் | – | பொருந்தல் கருத்துவேர் |
| 38. | புல் | – | பொருந்தல் கருத்துவேர் |
| 39. | புல் | – | பருத்தல் கருத்துவேர் |
| 40. | புல் | – | திரட்டல் கருத்துவேர் |
| 41. | புல் | – | விரும்பல் கருத்துவேர் |
| 42. | புல் | – | வளைதல் கருத்துவேர் |
| 43. | புல் | – | துளைத்தல் கருத்துவேர் |
| 44. | முல் | – | இளமைக் கருத்துவேர் |
| 45. | முல் | – | முன்மைக் கருத்துவேர் |
| 46. | முல் | – | மென்மைக் கருத்துவேர் |
| 47. | முல் | – | பொருந்தல் கருத்துவேர் |
| 48. | முல் | – | வளைதல் கருத்துவேர் |
| 49. | முல் | – | துளைத்தல் கருத்துவேர் |
| 50. | வல் | – | வளைவுக் கருத்துவேர் |
| 51. | வா | – | ஒரு வினை |
| 52. | வள் | – | விரும்பல் கருத்துவேர் |
| 53. | வள் | – | வெம்மை, ஒண்மை, வெறுமை வெண்மைக் கருத்துவேர் |
| 54. | வள் | – | பிளவுக் கருத்துவேர் |

பொருள்நிலையில் வேறுபாடுடைமை கரணியமாகத் தனித்தனி வேர்களாகக் கணக்கிடப்பட்ட இவ் வைம்பத்து நான்கு வேர்களுட் வடிவொற்றுமை யடிப்படையில் இருபத்து மூன்றாக்கலாமென்பது இவ்விடத்திற் கருதற்பாலது. அவை : அம், அர், இல், இள், உ, உம், உய், உல், உள், ஊது, ஏ, ஒல், ஓ, கல், குல், சுல், துல், நுல், புல், முல், வள், வா, விள் என்பன.

மொழிநூலறிஞர் பாவாணர் கண்டு விளக்கிய ஐம்பத்து நான்கு வேர்களையும் அவர் விளக்கிய வழியில் நின்று மூவகையாய்ப் பாகுபடுத்தலாம். அவை,

1. ஒரு வேருக்கு ஒரு பொருள்
2. ஒரு வேருக்குப் பல பொருள்
3. ஒரு பொருளுக்குப் பல வேர்கள்

ஒரு வேருக்கொரு பொருள் :

பாவாணர் கண்டு காட்டிய வேர்கள் ஐம்பத்து நான்கனுள் ஒரு கருத்திற்கு ஒரு வேர் என்ற வகையில் எட்டு வேர்ச் சொற்களைக் கூறலாம். அவை

| | | | |
|---|---|---|---|
| 1. | அல் | – | அறுத்தற் கருத்துவேர் |
| 2. | இள் | – | இணைதற் கருத்துவேர் |
| 3. | உய் | – | செல்லுதல் கருத்துவேர் |
| 4. | ஏ | – | தன்மைப் பெயரடி |
| 5. | கல் | – | கருமைக் கருத்துவேர் |

6. சுல் – சிவத்தல் கருத்துவேர்
7. துல் – தெளிவுக் கருத்துவேர்
8. வா – ஒரு வினை

## ஒரு வேருக்குப் பல பொருள்கள் :

பாவாணர் கண்டுவிளக்கிய மொத்த வேர்கள் ஐம்பத்து நான்கனுள் சில வேர்கள் ஒன்றிற்கும் மேம்பட்ட பொருள்களைக் குறிக்க வருகின்றன. அவை எட்டெனலாம்.

அவ் எட்டு வேர்களும் விளக்கும் பொருள்கள் முப்பத்தேழு. அவை :

1. உல் – எரிதல், வளைதல், உள்ளொடுங்கல்.
2. குல் – தோன்றல், வளைதல், குத்தல், எரிதல், துளைத்தல்.
3. சுல் – குத்தல், சுடுதல், சிவத்தல், வளைதல், துளைத்தல்.
4. நுல் – பொருந்தல், வளைதல், துளைத்தல், தெளிவு.
5. நுல் – தோன்றல், துளைத்தல், நெகிழ்தல், நோதல், நீட்சி, பொருந்தல்.
6. புல் – பொருந்தல், பருத்தல், திரட்டல், விரும்பல், வளைதல், துளைத்தல்.
7. முல் – இளமை, முன்மை, மென்மை, பொருந்தல், வளைதல், துளைத்தல்.
8. வள் – விரும்பல், வெம்மை, ஒண்மை, வெறுமை, வெண்மை, பிளவு.

## ஒரு பொருள் பல வேர்கள் :

பாவாணரால் கண்டறிந்து துலக்கம் பெற்ற வேர்கள் ஐம்பத்து நான்கனுள் ஒரே பொருளைப் பல வேர்கள் உணர்த்துகின்றன. அவ்வகையிலான வேர்கள் மொத்தம் முப்பத்தெட்டு. இவையுணர்த்தும் பொருள்கள் பத்து. அவை வருமாறு :

1. பொருந்தற் கருத்து – அம், ஒல், துல், நுல், புல், முல்.
2. இளமைக் கருத்து – இல், முல்.
3. முன்மைக் கருத்து – உ, முல்.
4. கூடுதற் கருத்து – உம், குல்.
5. எரிதல் கருத்தும் சுடுதல் கருத்தும் – உல், குல், சுல்.
6. வளைதற் கருத்து – உல், குல், சுல், துல், புல், முல், வல்.
7. துளைத்தற் கருத்து – உள், குல், சுல், துல், நுல், புல், முல்.
8. ஒலிக்குறிப்பு – ஊது, ஒ.
9. பொருந்தற் கருத்து – ஒல், துல், நுல், புல், முல்.
10. குத்தற் கருத்து – குல், சுல்.

## மாந்தச் சிந்தனையின் அடிப்படைகள் :

வாணாளெல்லாம் மொழிநூலாய்ந்த வேழமாம் பாவாணர் தமிழுக்குரிய மொத்த வேர்களையெல்லாம் விண்டுரைக்கவில்லை யென்றாலும், தமிழின் பல்துறைச் சொற்களையும், இலக்கண இலக்கியப் பரப்புகளில் தோய்ந்த ஆட்சிகளையும், மக்கள் வழக்காறுகளையும் கூர்ந்து நோக்கி ஆய்ந்து தெளிந்து பல்லாயிரம் சொற்களுக்கு வேர் கண்டுள்ளாரென்றாலும் தமிழிலுள்ள எல்லாச் சொற்களுக்கும் வேர்கண்டு வரையறுத்து விடவில்லை. தான் கண்டுதெளிந்த எல்லாச் சொற்களையும் அகரநிரல் படுத்தி அகரமுதலி யொழுங்கில் அமைத்துத்தரவில்லை; ஆயினும், பாவாணர் வேர்ச்சொற்களாகக் காட்டியவற்றையும் அவ்வேர்ச் சொற்களிலிருந்து கிளைத்த சொற்களாகக் காட்டியவற்றையும் அடிமனையாகக் கொண்டு, இன்று தமிழில் வழங்கும் எல்லாச் சொற்களுக்கும் வேர்மூலங் கண்டு தெளியலாமென்பது ஒருதலை.

பாவாணர் கண்டுதெளிந்த ஐம்பத்து நான்கு வேர்ச் சொற்களன்றி இன்னுஞ் சில இருக்கவுங் கூடுமெனினும் இவர் கண்டுரைத்தவையே தமிழுக்கு மூலமென்பதில் தவறிருக்காது.

பாவாணர் காட்டிய ஐம்பத்து நான்கு வேர்களுங் கூட ஐம்பத்து நான்கு அடிப்படைப் பொருள்களைக் கொண்டிருக்கவில்லை. இவ்வைம்பத்து நான்கும் இருபத்தொன்பது பொருள்களை மட்டுமே விளக்குவதாயுள்ளது. அவை

1. அறுத்தற் பொருள் – அர்
2. இணைதற் பொருள் – இள்
3. இளமைப் பொருள் – இல், முல்.
4. உள்ளொடுங்கல் – உல்.
5. எரிதற் பொருள் – உல், குல்.
6. ஒலிக்குறிப்பு – ஊது, ஒ
7. கருமை – கல்
8. குத்தல் – குல், சுல்.
9. கூடல் – உம், குல்.
10. சிவத்தல் – சுல்.
11. சுடுதல் – சுல்
12. செல்லுதல் – உய்
13. தன்மைப் பெயரடி – ஏ
14. திரட்டல் – புல்
15. துளைத்தல் – உள், குல், சுல், துல், நுல், புல், முல்.
16. தெளிவு – துல்

| | | | |
|---|---|---|---|
| 17. | தோன்றல் | – | நுல், குல் |
| 18. | நீட்சி | – | நுல் |
| 19. | நெகிழ்ச்சி | – | நுல் |
| 20. | நோதல் | – | நுல் |
| 21. | பருத்தல் | – | புல் |
| 22. | பிளவு | – | விள் |
| 23. | பொருந்தல் | – | முல், அம், புல், நுல், துல், ஒல். |
| 24. | முன்மை | – | உ, முல். |
| 25. | மென்மை | – | முல் |
| 26. | வளைவு | – | வல், முல், புல், துல், சுல், குல், உல். |
| 27. | வா | – | ஒரு வினை |
| 28. | விரும்பல் | – | புல், விள். |
| 29. | வெம்மை | – | விள். |

வானமளந்த தனைத்து மறிந்திட்ட வன்மொழியாந் தமிழ் ஐம்பத்து நான்கு வேர்களில் இருபத்தொன்பது பொருட்களில் அடங்கி விடுகிறதெனலாம். பாவாணரின் ஐம்பத்து நான்கு வேர்ச் சொற்களையும் அவையுணர்த்தும் இருபத்தொன்பது வேர்ப்பொருளோடு உறவுபடுத்தி வகுத்தும் தொகுத்தும் பின்வரும் வகையில் காட்டலாம்.

## 1. அறுத்தற் பொருள் :

முழுமையொன்றிலிருந்து தனித்துத் துணிபட்டுக் காட்சியளிக்கும் பொருளே அறுபொருள். நீளமாய் நெய்து பிறகு துணிக்கப்படும் ஆடை 'அறுவை' யெனப்பட்டதை ஈண்டு சான்றாகக் கொள்ளலாம்.

இருபத்தொன்பது வேர்ப்பொருள்களு ளொன்றான 'அறுத்தல்' பொருளை யுணர்த்தும் வேராக ஐம்பத்து நான்கு வேர்களுள் 'அர்' எனுமொன்றையே குறித்துள்ளார் பாவாணர்.

| | | |
|---|---|---|
| அரம் | – | அராவும் இருப்புக் கருவி |
| அராவுதல் | – | அரத்தால் அறுத்துத் தேய்த்தல் |
| அரம்பம் | – | மரமறுக்கும் ஈர்வாள் |
| அரம்பம் | – | வெற்றிலை நறுக்குங் கருவி |
| அரவு | – | அரம்போல் கூரிய பல்லையுடைய பாம்பு |
| அரங்குதல் | – | அறுபடுதல் |
| அரங்கு | – | அறுக்கப்பட்ட கட்டிடப் பகுதியாகிய அரங்கு, ஆற்றிடைக் குறை. |

போன்ற சொற்களைக் காட்டும் பாவாணர், அறுத்தல் வினையை யொட்டி நிகழும் பொருள் மாறுபாடுகளையெல்லாம் தம் மனத்தாலோர்ந்து அவ்வவற்றையும் அவ்வவற்றிற்குரிய சொற்களையும் எடுத்துக் காட்டியுள்ளார்.

அரக்குதல் = தேய்த்தல், சிதைத்தல், அழுத்துதல், வருத்துதல், கிளைதறித்தல், வெட்டுதல், குறைத்தல், முழுதுமுண்ணுதல்.

அரப்பு = அழுக்குத் தேய்குங் கட்டி அல்லது தூள்

அரமகள் = வருத்தும் பெண்தெய்வம், தேவமகள்

அரளுதல் = அஞ்சுதல்

அரட்டன் = துன்புறுத்துவோன்

அரற்றுதல் = துன்பத்திற் கதறுதல்

அரிதல் = பொடியாய் நறுக்குதல்

அரிவாள் = சிறிதாய் அறுக்கும் வாள்வகை

அரிமா = பிற உயிரினங்களை அழிக்கும் விலங்கு

அரி = அறுக்கப்பட்டது, அறுக்கப்பட்ட சிறு துண்டு, சிறியது, நுண்மை, மென்மை.

அர் – அரு – அருவுதல் = மெல்லெனச் செல்லுதல், அறுத்தொழுகுதல்

அரு – அருவி = மலையுச்சியினின்று மரஞ்செடி கல் மண்ணை அரித்தொழுகும் நீர் வீழ்ச்சி

அரு – அருவு – அருகு

அருகுதல் → குறைதல்

அருமை = பொருள்முடை

அரை = அரைத்தல், தேய்த்தல்

அரை = அருகிய அல்லது சிறுத்த இடை

அர் – அற் – அறை

அறை = அரங்கு

அறை = அறுத்தது, அற்றது.

(எ–டு.) உறுப்பறை, கண்ணறை, மூக்கறை

அறை = அறுத்தது, வரம்பிட்டது

(எ–டு) வரையறை

அறு – அறுவு = தீர்ந்து போதல்.

அறு – அறுவு = அறுவடை

அறு – அறுப்பு = கதிரறுப்பு, தாலியறுப்பு

அறு – அறுவை = அறுக்கப்பட்ட ஆடை

அறு – அறுகு = அகலப்படர்ந்து ஆழ வேரூன்றிப் பயிரையழிக்கும் புல்

அறுகை ← அறுகம்புல்

அறுவாள் ← அறுக்கும் வாள்

## 2. இணைதற் பொருள் : வேர் – இள்

இரண்டோ இரண்டுக்கு மேற்பட்ட பொருள்களோ ஒன்றோடொன்று சேர்ந்து கொள்வதே

இணைதலாகும். இந்த இணைதற் பொருளை விளக்கும் வேராக 'இள்' என்பதொன்றையே பாவாணர் காட்டுவார்.

இள் – இளை – இழை

இழைதல் = நெருங்கிப் பழகுதல், கூடுதல், மனம் பொருந்துதல், பதித்தல், திரட்டி வைத்தல், செய்தல், அமைத்தல், கூறுதல்.

இள் – இண் – இணர் :

இணர் = பூங்கொத்து, காய்க்குழை, வழிமரபு.

இண் – இணகு = உவமை

இணங்கு = இணக்கம், ஒப்பு, நட்பின–ன்–ள், மை, மனம் பொருந்து.

இணங்கல் = உடன்பாடு

இணங்கன் = நண்பன்

இணங்கி = தோழி

இணங்கர் = ஒப்பு

இணங்கலர் = பகைவர்

இணங்கார் = பகைவர்

இணக்கு = இசைவி

இணக்கோலை = உடன்படிக்கைமுறி

இள் – (இய்) – இயை.

இயைதல் = பொருந்துதல், இணங்குதல்

இயை – இசை

இசைதல் = பொருந்துதல், ஒத்துச் சேர்தல், உடன்படுதல், இயலுதல்.

இசைத்தல் = கட்டுதல்

இசைவு = பொருந்துகை.

இயை – (எய்) – ஏய்

ஏய்தல் = பொருந்துதல், தகுதல், எதிர்ப்படுதல்

ஏய்த்தல் = பொருந்தச் சொல்லுதல், ஒத்தல், ஏமாற்றுதல்

ஏய = ஓர் உவம உருபு

ஏய்ப்ப = ஓர் உவம உருபு

ஏய்வு = உவமை (திவா.)

### 3. இளமைப் பொருள் : வேர் – இல், முல்

இல், முல் என்னுமிரண்டு வேர்களும் 'இளமை'ப் பொருளைக் குறித்து வருவதாகக் காட்டுகிறார்.

இல்

இல் – இல – இலவு

இலவு = நொய்ய பஞ்சுள்ளது.

இலவம் = இலவு, சிறிது (அற்பம்)

இல் – இலை = இலை வகைகளுள் மென்மையானது

இல் – இலம் = வறுமை

இலம்படுதல் = வறுமையடைதல்

இலம்படு – இலம்படை = வறுமை.

இல் – இள் – இள – இளத்தல்

இளத்தல் = மெல்லிதாதல்

இளமை = மென்மை, இளம்பருவம், அறிவு முதிராமை.

இளகுதல் = மெல்குதல், நெகிழ்தல், உருகுதல்.

இளக்கரித்தல் = தளர்தல், வேகந் தணிதல், கருமத்தில் விழிப்பின்றியிருத்தல்.

இளக்கரி – இளக்காரம் = கழிகண்ணோட்டம், மன நெகிழ்ச்சி, மதிப்பின்மை.

இளப்பம் = மதிப்புக் குறைவு

இளவல் = தம்பி, இளைஞன், முற்றாதது

இளங்கிளை = தங்கை

இளந்தை = இளைமை

இளமட்டம் = இளைஞன்

இளங்கோ = இளவரசன்

இளைச்சி = தங்கை

இளவேனில் = வெப்பம் முதிராக் கோடை

இள – இளை.

இளைமை = அகவை முதிராப் பருவம்

இளைத்தல் = மெலிதாதல்

இளைப்பு = சோர்வு, களைப்பு

இளைது = முதிராதது

இளையன் = தம்பி

இளையவள் = திருமகள்

இள் – எள்

எள்ளல் = குறைவாய் மதித்தல், இகழ்தல்

எள் = மிகச் சிறு கூலவகை

எள் – எண் – எண்மை = எளிமை

எள் – எள்கு – எள்குதல் = இகழ்தல்

எள் – எள்கு – எஃகு

எஃகுதல் = நெகிழ்தல்

எஃகு = உருக்கு, உருக்கினாற் செய்யப்படும் படைக்கலப் பொது

எஃகுபடுதல் = இளகின நிலையடைதல்

எள் – எளி – எளிதல் = எளிமையடைதல்

எளியவிலை = குறைந்தவிலை

எளிவு = எளிய தன்மை

எள் – எய்

எய்த்தல் = இளைத்தல்

எய்ப்பு = இளைப்பு, வறுமைக்காலம்

ஏய்ப்பில் வைப்பு = இளைத்த காலத்தில் உதவுவதற்கு ஈட்டி வைக்கப்படும் ஏமப்பொருள் (Provident fund)

எள்–ஏள்

ஏளனம் = இகழ்ச்சி

ஏளிதம் = இகழ்ச்சி

ஏள் – ஏசு

ஏசுதல் = இகழ்தல்

ஏள் – ஏழ்

ஏழை = வறியவன்

ஏள் – ஏட்டை

ஏட்டை = வறுமை

**முல்**

முல் – முன்

முனி = யானைக் கன்று

முன்னி = முல்லை நிலத்தில் இயற்கையாய் விளையும் சிறுபயறு

முல் – முள்

முளை = வித்தினின்று முளைத்த சிறு வெளிப்பாடு

முளைத்தல் = முளை தோன்றுதல்

முளையான் = சிறு குழந்தை

முள் – முறு – முசு – மூசு

மூசு = பிஞ்சு, (எ–டு.) பலாமூ

முள் – முட்டு

முட்டுக்குரும்மை = சிறு தென்னம் பிஞ்சு, சிறு பனம்பிஞ்சு

முட்டு – மொட்டு

மொட்டு = அரும்பு

மொட்டை = மணங்கழியா இளைஞன்

முள் – முளு – முழு – முகு – முகிழ்

முகிழ்த்தல் = அரும்புதல்

முகிழ் = அரும்பு

முகிழம் = மலரும் பருவத்துப் பேரரும்பு (சது.)

முகிள் – முகுள் – முகுளம் = அரும்பு

முகுளம் – முகுடம் = மணிமுடி

முகுடம் – மகுடம்

முகு – முகுள் – முகுளி

முகுளித்தல் = குவிதல்

முகு – முகை

முகை = அரும்பு

முகைதல் = அரும்புதல்

முகு – மொகு – மொக்கு

மொக்கு = பூமொட்டு

மொக்குள் = மலரும் பருவத்துப் பேரரும்பு, நீர்க்குமிழி

முன் – முண் – முண

முணமுணத்தல் = வாய்க்குள் மெல்லப் பேசுதல்

முள் – முண் – முணு

முணுமுணுத்தல் = வாய்க்குள் மெல்லப் பேசுதல்

முணுக்குமுணுக்கெனல் = குழவி தாய்ப்பாலைச் சிறிது சிறிதாக உறிஞ்சுதல்

முண் – மண் – மணி = சிறியது

முண் – முணுக்கு – முடுக்கு = சிறு சந்து

முடுக்கர் = குறுந்தெரு

முடுக்கு – முக்கு = சிறு சந்து

முகு – முகம்

முகம் = தோற்றம்

முகம் செய்தல் = தோன்றுதல்

முகமை = முன்மை

முகன் – முகம் (போலி)

முகனை = முன்புறம்

முகனைக்கல் = கோயில் முதலியவற்றின் வாசற்கால் மேலுள்ள உத்தரக்கல்

முகனை – மோனை = முதன்மை, செய்யுளடியிற் சீர்தொறும் முதலெழுத்து ஒன்றிவரத்தொடுப்பது.

முகம் – முகர் – முகர்தல் = மணமறிதல்

முகர் – மோர் – மோர்தல் – மோத்தல் = மணமறிதல்

முகர் – மோர் – மோ

மோப்பு – மோப்பம் = மணமுகர்வு

முகர் – முகரை = பழிக்கப்படும் முகம்

முகரை – மோரை = பழிக்கப்படும் முகம்

முகவாய் – மோவாய் = முகத்தில் வாய்க்குக் கீழுள்ள பகுதி

முகு – முகப்பு = முற்பகுதி

முள் – மள் – மள்ளன் = இளைஞன், மறவன்

மள் – மள – மழ

மழ = இளமை

மழவன் = இளைஞன்

மழலை = இளமை.

மழலை – மதலை = குழந்தை

மழ – மழம் – மடம்

மடம் = இளமை

மடப்பம் = மென்மை, இணக்கம்

மடவன் = அறிவிலான்

மடவி – பெண்

மடம் – மடந்தை = பெண்

மடமை = அறியாமை

மழ – மக.

மக = இளமை

மகவு = குழந்தை

மகன் = குழந்தை

மகள் = பெண்

மகடு = பெண், மனைவி

மகன் – மான் = ஆண்பாலீறு

மகள் – மாள் = பெண்பாலீறு (எ–டு) வேண்மாள்

மகர் – மார் = பலர் பாலீறு

முள் – முரு – முருகு

முருகு = இளமை

முருகன் = கட்டிளைஞன், குறிஞ்சித் தெய்வம்

முரு – முறு – முறி = தளிர்

முறி – மறி

மறி = குதிரை, மான் முதலிய விலங்கின் இளமை.

### 4. உள்ளொடுங்கல் :வேர் – உல்

ஒரு பொருள் இருப்பு நிலையிலிருந்து உள்ளேயொடுங்கி மெலிதாதலே உள்ளொடுங்கலாகும். இவ்வுள்ளொடுங்கற் பொருளுக்கு 'உல்' எனு மொரேயொரு வேர்ச் சொல்லை மட்டுமே அடிப்படையாய்க் கொள்வார் பாவாணர்.

உல் – உல்கு

உல்குதல் = உள் வளைதல், ஒடுங்குதல், சிறுத்தல்

உல் – உல்லி – ஒல்லி

ஒல்லி = மெலிந்த ஆள்

ஒல்லொல்லி = மிக மெலிந்த ஆள்

உல் – உல்லாடி – ஒல்லாடி

ஒல்லாடி = மெல்லிய ஆள்

உல் –உள் – உள்கு

உள்குதல் = உள்ளழிதல், ஒடுங்குதல்

உள்கு – உளுக்கு – உளுக்கா

உளுக்காத்தல் = சுவர் கீழிறங்குதல், கீழிருத்தல்

உளுக்கார் – உட்கார்

உட்கார்தல் = கீழ் அல்லது இருக்கையில் இருத்தல்

உட்கு – உட்குதல் = அஞ்சுதல்

உட்கு – உக்கு

உக்கின மரம் = ஒடுங்கிய மரம்

உக்கு – உக்கம் = ஒடுங்கிய இடை

உக்கு – ஒக்கு

ஒக்கல் = இடுப்பு

ஒக்கலை = இடுப்பு

உள் – உடு – உடுக்கு

உடுக்கு = இடையொடுங்கு பறை

உடுக்கை = இடையொடுங்கு பறை

உடு – இடு

இடுகுதல் = சிறுத்தல்

இடுக்கு = ஒடுங்கிய இடைவெளி

இடுக்கி = நெருக்கிப் பிடிக்கும் கருவி

இடு – இட்டு

இட்டுறுதி = இக்கட்டான சமையம், வறுமை

இட்டிடை = சிறுத்த இடை

இட்டிது = சிறிது

இட்டிமை = வறுமை, ஒடுக்கம்

இட்டி = சிறுசெங்கல்

இட்டிகை = மிகச் சிறிய செங்கல்

இடுக்கண் = துன்பம், இரக்கம்

இடுகுதல் = ஒடுங்குதல்

இடுங்குதல் = உள்ளொடுங்குதல்

இடுவல் = இடுக்கு

இள் – இண் – இண்டு

இண்டு = மிகச்சிறிய இடைவெளி அல்லது துளை

உல் – உற் – உறு – உறுத்தல்

உறுத்தல் = மிகச் சிறிதாதல்

உற – உறகு

உறகு = ஒடுங்கித் தூங்குதல்

உறங்கு = ஒருங்குதல்

உறங்குதல் = தூங்குதல்

உறங்காப்புளி = இரவில் இலை குவியாப் புளியமரம்

உற – உறண்டு

உறண்டுதல் = மெலிதல், தேய்தல்

உறண்டு – உறட்டு

உறட்டலன் = மெலிந்தவன்

உல் – ஒல் – ஒல்லட்டை = ஒல்லியானவன்

உல் – ஒல் – ஒல்கு.

ஒல்குதல் = மெலிதல்

ஒல்கு – ஒஃகு

ஒஃகுதல் = பின்வாங்குதல் , தோற்றல்

ஒல்கு – ஒற்கு

ஒற்குதல் = குறைதல்

ஒற்கம் = குறைவு

ஒல்கு – ஒஞ்சு

ஒஞ்சுதல் = நாணுதல்

ஒஞ்சு – ஒச்சம்

ஒச்சம் = குறை, குறைவு

உல் – உள் – உண் – உண்ணம்

உண்ணம் = வெப்பம்

உண் – உண – உணத்தல்

உணத்தல் = காய்தல்

உணத்து = காயவை

உணங்கு = காய்தல்

உணங்கு (தன்வினை) = உணக்கு (பிறவினை)

உல் – உர் – உரு

உருத்தல் = அழலுதல்

உரு = நெருப்பு

உருகுதல் = வெப்பத்தால் இளகுதல், மன நெகிழ்தல், மெலிதல்

உருகு (தன்வினை) – உருக்கு (பிறவினை)

உருமித்தல் = வெப்பமாதல், புழுங்குதல்

உரும், உருமம் = வெப்பம், வெப்பமிக்க நண்பகல்.

உரு – உருப்பு

உருப்பு = வெப்பம்

உருப்பம் = வெப்பம்.

உல் – ஒல் – ஒள் – ஒண் – ஒண்மை.

ஒண்மை = விளக்கம்

ஒள் – ஒளி

ஒளி = வெளிச்சம்

ஒளியவன் = கதிரவன்

ஒளி – ஒளிர் – ஒளிறு

ஒளிறுதல் = விளங்குதல்

ஒளிர்தல் = விளங்குதல்

## குல் :

குல் என்னும் வேர் உணர்த்தும் எரிதற் கருத்தினின்று சுடுதல், ஒளிர்தல், சிவத்தல், காந்தல், உறைத்தல், நோதல், சினத்தல், விரைதல் முதலிய கருத்துகள் பிறக்குமெனக் கொண்டார் பாவாணர்.

குல் – குலவு

குலவு = விளங்கு

குலவுதல் = விளங்குதல்

குலப்பம் = செம்பு மணல் (வின்)

குல் – குர் – குரு

குருத்தல் = சினத்தல்

குரு = ஒளி

குருவெறும்பு = செவ்வெறும்பு

குருதி = சிவப்பு, அரத்தம்

குருதிக்காந்தல் = செங்காந்தல்

குருதிவாரம் = செவ்வாய்க்கிழமை

குருந்து = மாணிக்க வகையுளொன்று (வின்.)

குல் – குது. ஒப்புநோக்கு மெல் – மெது.

குது – குதம் = வெங்காயம்

குதம்பு = கொதித்தல்

குதம் – கதம்

கதம் = சினம்

கதகதப்பு = வெம்மை

கதவுதல் = சினத்தல்

கத – கதழ் – கதழ்வு

கதழ்வு = சினத்தல்

கதழ்வு = கடுமை

குல் – குன் – கன் – கனல்

கனல் = நெருப்பு

கனலுதல் = எரிதல்

கனலி = நெருப்பு

கனலோன் = கதிரவன்

குல் – குள் – கள் – காள் – காளம்

காளம் = சுடுகை

காளவாய் = சுண்ணாம்புக்கல்

காள் – காழ்

காழ் = ஒளி (திவா.) பளிங்கு (பிங்.), முத்து

காழ்த்தல் = உறைத்தல்

காழ் – காசு

காசு = மணி

காசம் = பளிங்கு, பொன்.

காள் – கார்

கார்த்தல் = உறைத்தல்

காள் – காய்

காய்தல் = சுடுதல்

காய்ச்சல் = வெம்மை

காய்ச்சுதல் = குழம்பு சமைத்தல்

காயம் = வெந்த கறித்துண்டு

காய் – காய்ந்து – காந்து

காந்துதல் = வெம்மை கொள்ளுதல்

காந்தல் = எரிகை

காந்தள் = செங்கோடல்

காந்தி = வெம்மை

காய் – காய்ங்கு – காங்கு – காங்கை

காங்கை – வெப்பம்

குண் – கண் – கண – கணம்

கணநோய் = சூட்டுநோய்

கள் – கடு – கடுத்தல்

கடுத்தல் = உறைத்தல்

கடுப்பு = தேட் கொட்டுப் போன்ற நோவு

கடு – கடுகு : காரமுள்ளது
கடுகம் : கார்ப்பு
கடு – கட்டம்
கட்டம் : கடுமை
கட்டம் – காட்டம்
காட்டம் : எரிநோவு
கடு – கடி
கடி : விளக்கம்
கடி – கரி
கரித்தல் : மிகுதல்
கரிப்பு : காரம்
கரி – காரம்
காரம் : உறைப்பு, மிகுதி
காரச்சீலை : வேகமும் உறைப்பும் உடைய துணி
காரம் : மிகுதி, கடுமை, வலிமை, உரிமை, பொறுப்புரிமை, வினையுரிமை, உறவுரிமை, உடைமை.
காரம் – காரன் : வலியன், உரியன்

## 6. ஒலிக்குறிப்பு : வேர் – ஊது, ஓ.

மொழியானது இந்நாட்டிற் பொதுவாய்க் கருதப்படுகிறபடி, இறைவனாற் படைக்கப்பட்டதுமன்று; இயற்கையாய் உள்ளதுமன்று; மாந்தனால் ஆக்கப்பெற்றதே. ஆயின், ஒருவனால் மட்டுமன்று; கழிபல வூழிகளாகக் கணக்கற்ற தலைமுறையாளரால் சிறிது சிறிதாய் ஆக்கப் பெற்றதாகும். அம்மொழிகள் இயற்கைமொழி (Natural languages) செயற்கைமொழி (Artificial language) என இருவகைப்படும்.

சுட்டுச் சொற்களுக்கு முந்தையது இயற்கைமொழியென்றும் பிந்தையது செயற்கை மொழியென்றும் பாவாணர் குறிப்பார்.

இயற்கைமொழியைச் சேர்ந்த ஒலிகளுள் ஊ – ஊது என்பதும் ஒன்றாகும். மூச்சுக்காற்று வாய் வழியாக வாயைக் குவித்து வெளிவரும்போது தோன்றும் ஒலியே ஊ – ஊது என்பதாகும்.

ஊதுதல்: நெருப்பெரிக்க ஊதுதல்
விளக்கவிக்க ஊதுதல்
நோவு தீர ஊதுதல்
துகள் நீக்க ஊதுதல்
ஊதிப்போடுதல் : எளிதில் வெல்லுதல்
ஊதல் : ஊது கருவிகள்
ஊத்து – ஊத்தம்
ஊத்தம் : வீக்கம்
ஊதல் : வீக்கம்
ஊதை : வளிநோய்
ஊத்து : வளிநோய்
ஊதுகணை : ஊதுநோய் வகைகள்
ஊத்தப்பம் : எழும்பும் சிற்றுண்டி வகை
ஊதியம் : செலவிற்குமேல் மிகுந்த வரவு
ஊதாரி : துகளை ஊதிப் போக்குவது போல் செல்வத்தையெல்லாம் வீண் செலவு செய்தழிப்பவர்.
ஊது – பூது – பூத்து : ஊதுதல்
ஊது – ஓது
ஓதுதல் காதிற்குள் ஊதுவதுபோல் சமயக்குரவன் அருமறை மந்திரத்தைச் சமைந்த மாணவனுக்குச் சொல்லுதல்.

ஓ :

உரத்த ஓசையைக் குறிக்கும் எழுத்தொலி அல்லது ஒலிக்குறிப்பு 'ஓ' என்பதாகும் என்பார் பாவாணர்.

ஓ–கோ
கோ வென்றலறினான்
ஓ–சோ
சோ வென்று பெய்தது
ஓய் – வேய் – வே
விளியொலிகள்
ஓ – ஓலுறுதல்
ஒலி பெறுதல்
ஓல் – ஓலம்
ஓலம் : ஓசை, அடைக்கலம் வேண்டும் கூக்குரல்.
ஓலோலம் – ஆலோலம்
ஓ வெனக்கத்திப் பறவைகளைத் துரத்தும் குறிப்புச் சொல்
ஓப்பு – சோப்பு
சோப்புதல் : ஈயோட்டுதல்
ஈச்சோப்பி : ஈ யோட்டும் கருவி
ஓல் – ஓது
ஓதுதல் : படித்தல்
ஓது – ஓதை
ஓதை : பேரோசை
ஓதை – ஓசை
ஓசை : ஒலி
ஓசை – ஓசனி
ஓசனித்தல் : பறவை சிறகடித்தல்

ஒல் – ஒல்
ஓர் ஒலிக்குறிப்பு
ஒல் – ஒலி
ஒலித்தல் = ஓசையிடுதல்
ஒல் – ஒல்லென
ஒல்லென்று சொல்லும் அளவில் விரைவாக, சுருக்காக, சட்டென.
ஒல் – ஒல்லே
சுருக்காக, விரைவில்
ஒல் – ஒல்லை = சுருக்காய் (திவா.)
ஒல் –வல் = விரைவு (சூடா.)
ஒல்லே – வல்லே = விரைவாக
ஒல்லை – வல்லை = விரைவாக
ஒ – ஒ – ஒய்
ஒய்யென = விரைவாக
ஒல் – கொல் = ஓர் ஒலிக்குறிப்பு
கொல் – கல்
கல்லெனல் = பேரோசைக் குறிப்பு
கல் – கல
கலகலவெனல் = கலகலெனல்
கல் – கலி
கலித்தல் = ஒலித்தல்
ஆர்கலி = ஒஓசை நிறைந்த கடல்
ஒல் – சொல்
சொல் = ஒலி வடிவான பேச்சு, மொழியுறுப்பான கிளவி.

## 7. கருமைப் பொருள் : வேர் – கல்

கல் + து – கஃறு = கருமைக் குறிப்புச் சொல்
கல் – கன் – கன்னல் = கரிய வகையான கரும்பு
கல் – கால் = கருநிறம்
கல் – கள் – கள்வு – கள்வன்
கள்வன் = கரிய யானை, கரியவன், கரிய நண்டு, நண்டு வடிவான கடகவோரை
கள்வன் – களவன் – கருநண்டு
கள் – கள – களா = கரிய கனிவகை, அதையுடைய செடி.
களவம் = கரிய பெருச்சாலி, காரோதிமம்
கள் – களம் = கருமை, முகில்
களம் – களர் = கறுப்பு
களவு – களகு – களங்கு
களங்கு = கருப்பு, கரும்புள்ளி, கறை
களங்கம் = கறுப்பு.
கள் – காள் – காளி = கரிய, பாலைநிலத் தெய்வம்
காள் + ஆம்பி = காளாம்பி
காளாம்பி = கருங்காளான்
காள் + ஆன் = காளான்
காளான் = கருங்காளான்.
காளம் = கருமை
காளிமை = கறுப்பு
காளிகம் = கரிய மணித்தக்காளி
காளிக்கம் = கருஞ்சாயம்
காள் – காழ்
காழ் = கருமை
காழகம் = கருமை
கள் – கர் – கர – கரந்தை = நீலநிறமுள்ள பூவகை, சதையுடைய பூடு
கர் – கரம் – கரம்பு
கரம்பு = கரிசல்
கரம்பை = கரிய பழமுள்ள சிறு களா, வறண்ட களிமண்
கர் – கரி
கரி = கரிந்தது, அடுப்புக்கரி, யானை
கரியன் = திருமால்.
கர் – கரி – கரிசு
கரிசு = கருமையானது, குற்றம்.
கரி – கரிச்சான் = கரிக்குருவி
கர் – கரு
கருத்தல் = கறுப்பாதல்
கருகுதல் = நிறங்கருத்தல்
கருகல் = தீய்ந்து போகை
கருக்கு = காரிருள்
கர் – கருப்பு = கருமை
கருப்பு – கருப்பை = காரெலி
கரு – கரும்பு = முதர்ச்சியால் இருண்ட செங்கரும்பு
கர் – கறு
கறுத்தல் = கருநிறமாதல்
கறுகறுத்தல் = மிகக் கருத்தல்
கறுமை = கருமை
கறு – கறை = கருநிறம்
கறு – கறள் = கறை
கரு – கார் = கருமை
கார் – காரி = கருமை
கள் – கண் – கண்டு – கங்கு = கருந்திணை.
கங்கு – கங்குல் = கரிய இரவு
கள் – கய் – கயம் = கரிக்குருவி
கயம் – கசம் = காரிருள்
காள் – காய் – காயம் = கரியவானம்
காய் – காயா

காயாம்பூ = காயாமலர்

காய் – காயல் = கரிய உப்பங்கழி

## 8. குத்தற் பொருள் : வேர் – குல், சுல்.

குத்துதல் வினைக்குக் குல், சுல் எனுமிரண்டு வேர்களைக் கொண்டார் பாவாணர்.

### குல்

குல் – குள்

குள்ளுதல் = கிள்ளுதல்

குள் – குளவி = கொட்டுந் தேனீ

குள் – கள்

கள் = முள்

கள்ளி = முட்செடி

கள் – கடு = முள், முள்ளி

கடு – கடி = கூர்மை

கள் – கண்டு = முள்ளுள்ள கண்டங்கத்திரி

கண்டு – கண்டி

கண்டி = முள்ளுள்ள அக்கமணி (உருத்திராக்கம்)

கண்டிகை = அக்கமணி மாலை

கண்டு – கண்டம் = கண்ணி

கண்டு – கண்டல்

கண்டல் = முள்ளி, நீர்முள்ளி

கண்டகசங்கு = முட்சங்கு

குள் – கிள்

கிள்ளுதல் = முள்ளுதல்

கிள் – கிளி

கிளி = கூரிய அலகினாற் கொத்தும் அல்லது கடிக்கும் பறவை

குள் – கொள் – கொய்

கொய்தல் = உகிராற் கிள்ளி யெடுத்தல்

குள் – குட்டு

குட்டுதல் = கை முட்டியால் தலையிற் குத்துதல்

குட்டு – குத்து

குத்துதல் = முட்டியாற் குத்துதல்

குத்து – குதி

குதி = நிலத்திற் குத்தும் குதிங்கால்

குதித்தல் = மேலெழும்பிக் குதிங்கால் அல்லது பாதம் நிலத்திற் குத்துமாறு ஊன்றி நிற்றல்.

குதி – குத்து – கூத்து = காலூன்றி ஆடுதல்

குதி – கொதி.

கொதித்தல் = நீர், நெய் முதலியன பொங்கி யெழுதல்

குதி – குதிரை = குதித்துத் தாண்டும் விலங்கினம்

குதி – குதிர்

குதிர்தல் = படிதல், குடியமர்தல், ஒழுங்காதல்

குதிர் – கதிர்

கதிர் = நேராகச் செல்லும் ஒளியிழை

குதி – குதை

குதை = குதிங்கால் போன்ற விலங்கின் அடி

குதைத்தல் = விற்குதையில் நாண் பூணுதல்

குத்து – குத்தி – கத்தி

கத்தி = குத்தி வெட்டும் அல்லது அறுக்கும் கருவி

கத்து + அரி = கத்தரி = சிறிது சிறிதாக வெட்டியறுத்தல்

குத்து – குத்தி – கத்தி – கதி

கதித்தல் = நேராதல்

குத்து – குந்து

குந்துதல் = புட்டம் நிலத்திற் குத்த உட்கார்தல்.

குந்து – குந்தம் = குத்துக்கோல்

குந்தம் – குந்தாலம் – குந்தாலி = குத்தித் தோண்டுங் கருவி

குந்து – குந்தனம் = மணி பதிக்கும் இடம்

குந்து + அணை = குந்தணை

குந்தணை = எண்ணெய் காய்ச்சுங் கலம் சிதையுமாயின் எண்ணெய் வீணாகாதவாறு அடியில் வைக்கம் இருப்பானைக் குவளை

குந்து – கிந்து

கிந்துதல் = ஒற்றைக் காலால் நடத்தல்.

குந்து – கொந்து = நொண்டி விளையாட்டு வகை

குந்து – குந்தளம் = குழற் கொத்து

குந்தளம் – கூந்தனம் = ஒரு வகைப் பூ

கூந்தளம் – கூந்தல் = கொத்தான பெண்டிர் தலைமயிர்

குந்தளம் – கொந்தளம் = பெண்டிர் தலைமயிர்

குத்து – கொத்து

கொத்து = மண்வெட்டியால் கொத்துதல்

கொத்தன் = கொத்துக் கரண்டியால் வேலை செய்யும் அல்லது செங்கலைக் கொத்தும் கட்டிட வேலைக்காரன்.

கொத்து – கொந்து

கொந்துதல் = குத்துதல்

குத்து – கொத்து

கொத்து = கைப்பிடியளவு

கொத்து – கொந்து

கொந்து = திரள்

குட்டு – கொட்டு

கொட்டு = குளவி தேள் முதலியன கொட்டுதல்

கொட்டு = பறைப்பொது

குத்து – குற்று = நெல் முதலியன குற்றுதல்

குல் – குறு

குறுதல் = கிள்ளிப் பறித்தல்

குறுகுறுத்தல் = மனச்சான்று குத்துதல்

குறு – குறண் – குறண்டு

குறண்டுதல் = முட்போல் குத்துதல்

குறண்டு – குறண்டி = முட்செடிவகை, தூண்டில் முள்.

குறண்டு – கறண்டு

கறண்டுதல் = வறண்டுதல்

கறண்டி = (பாதாள) வறண்டி

சுல் :

சுல் – சூல்

சூல் = குத்தும் கூரிய படைக்கலம்

சூலம் = முக்கவர் வேல்

சூலை = ஒரு நோய்

சூலி = சூலப்படை தாங்கிய சிவன்

சுல் – சுள்

சுள் = சுள்ளென்று குத்துதல்

சுள்ளாணி = முள் போன்ற சிறிய ஆணி.

சுள்ளெறும்பு = சுள்ளென்று கடிக்கும் செவ்வெறும்பு

சுளிக்கு = கூர்மையான முனையுள்ள கைக்கோல்

சுளுகு = நுண்ணறிவு

சுளுகன் = சதுரப்பாட்டுப் பேச்சாளன்

சுள் – சுண் – சுணை

சுணை = இலை காய் முதலியவற்றிலுள்ள சிறுமுள்

சுணை கெட்டவன் = மானவுணர்ச்சியில்லாதவன்

சுணைத்தல் = தினவெடுத்தல்

சுள் – சுர் – சுர.

சுரசுரப்பு = முள்முள்ளாய் அல்லது கரடுமுரடாய் இருத்தல்

சுர் – சுரி

சுரித்தல் = குத்துதல்

சுர் – சுரி

சுரிகை = கத்தி

சுரி – சூரி = சூரிக்கத்தி

சுர் – சூர் – சூரை = ஒருவகை முட்செடி

சுரி + அணை = சுரணை = குத்தும் மானவுணர்ச்சி

சுர் – சுறுக்கு

சுறுக்கெனல் = குத்துதல் குறிப்பு

சுறுக்கு = விரைவு

சுறுதி = விரைவு

சுறா = கத்தி போல் வெட்டும் செதிலுள்ள கடல் மீன்

சுறு – செறி = முட்போன்ற சிரங்குப் புண்

சுறு – சுத்து – சுத்தி = குத்துவது போல் தட்டும் சிறு சம்மட்டி.

## 9. கூடற் பொருள் : வேர் – உம், குல்

கூடுதல், இணைதல், உடனிருத்தல், பொருந்துதல், ஒட்டுதல், ஒத்தல் ஆகிய அனைத்தும் கூடற்பொருள் சார்ந்தன என்பார் பாவாணர்.

உம் – உமி = கூலங்களால் அரிசி பருப்பொடு கூடியிருக்கும் கூடு போன்ற மெல்லிய தொலி

உமிதல் = இதழ் கூட்டித் துப்புதல்

உம் – உவ – உவ – உவமை

உவமை = ஒப்பு

உவத்தல் = உள்ளத்தால் பொருந்துதல், விரும்புதல்

உம் – உன் – உன்னு

உன்னுதல் = பேச இதழ் கூட்டுதல்

உன்னியம் = சொந்தம்

உன்னியன் = சொந்தக்காரன்

உன்னியர் = உறவினர்

உவ – உக.

உகத்தல் = விரும்புதல்

உன் – உல் – உர்

உர் – ஊர் = கூட்டமான மக்கள் குடியிருப்பு

ஊர்தல் = நிலத்தொடு அல்லது உடம்பொடு பொருந்தி நகர்தல்.

உல் – உர் – உரம்

உரம் = பொருந்தித் தழுவும் மார்பு.

உரசு = பொருந்தித் தேய்த்தல்

உரைஞ்சுதல் = பொருந்தித் தேய்த்தல்

உர் – உரை

உரைதல் = உரசுதல்

உரை – உராய்

உராய்தல் = பொருந்தித் தேய்த்தல்

உர் – உரி – உரிஞ்

உரிஞ் = உராய்தல்

உர் – உரி

உரி = உடம்பொடு பொருந்தியுள்ள தோல், மரப்பட்டை

உரிவை = தோல்

உரித்தல் = தோலைப் பெயர்த்தல்

உரிமை = பொருந்திய உறவு அல்லது உடைமை

உர் ← உரு – உருத்தல் = ஒத்தல்

**உர் – உறு**

உறுதல் = பொருந்துதல்

உறுப்பு = பொருந்திய பாகம் அல்லது பகுதி

உற்றுக்கேட்டல் = பொருந்திக் கேட்டல்

உறவு = உறவினர், பொருந்தியவர்

உறார் = சேராத பகைவர்

உறுத்துதல் = அழுத்துதல்

உறை = ஓரிடத்தில் பொருந்தியது

உறை = கத்தியிருக்கும் கூடு

உறு – உறழ்

உறழ்தல் = ஒத்து மாறுபடுதல்

உறழ = ஓர் உவம உருபு

உறுநன் = சேர்ந்தவன்

உற்றுழி = பொருந்தியவிடத்து

உறவி = உடலில் தங்கியிருக்கும் உயிர், ஆதன் (ஆன்மா).

உறு – உற

உறப்பு = செரிவு

உறு = மிக்க

உறுதி = கெட்டி

உறைதல் = கட்டியாதல்

உறைமோர் = பாலை உறையச் செய்யும் மோர்

உறைபனி = இறுகிய பனி

உல் – உள் = பொருந்தியுள்ளது, உள்ளது

உள் – உண்மை = உள்ளதாயிருக்குந் தன்மை

உள் – உளி – உழி = பொருந்திய இடம்

உள் – உடு – உடன்

உடன் = கூட

உடனே = கூடிய அதே நேரத்தில்

உடன் – உடந்தை

உடந்தை = கூட்டு, கூட்டாளி

உடன்படு = உடன்படிக்கை

உடு – ஒடு = கூட (மூன்றாம் வேற்றுமையுருபு)

ஒடு – ஓடு = கூட (மூன்றாம் வேற்றுமையுருபு)

உடு – உடை – உடையான்

உடையான் = நெருக்கமானவர்

உடைமை = உடன் கொண்டிருப்பது

உடுத்தல் = உடம்போடு அணிதல்

உடு = உடைபோல் கோட்டை மதிலைச் சுற்றியிருக்கும் அகழி

உடுவை = அகழி

உடும்பு = உடன் சேரச் சுவரைப் பற்றும் ஊருயிரி

உடு – உடல் = உடனிருக்கும் கூடு

உல் – உ

உத்தல் = பொருந்துதல்

உத்தம் = பொருத்தம்

உத்தி = விளையாட்டில் கட்சி பிரித்தற்கு இவ்விருவராய்ச் சேர்தல்

உ – உக்கம்

உக்கம் = பொருந்திய பக்கம்

உக்கல் = பக்கம்

உக்கலை = மருங்கின் பக்கம் (Hips)

**குல்**

குல் – குலம்

குலம் = கூட்டம்

குலை = காய்த்திரள்

குலவுதல் = கூடுதல்

குலாவுதல் = கூடிமகிழ்தல்

குல் – கல் – கல

கலத்தல் = கூடுதல்

கலவை = பல்பொருட் குழம்பு

கலவுதல் = கலத்தல்

கலவினார் = உற்றாருறவினர்

கலாவுதல் = கலத்தல்

கல – கலம்பு – கதம்பு

கதம்பம் = கூட்டம்

கலம்பு – கலம்பகம்

கலம்பகம் = பூக்கலவை; பல்வகைச் செய்யுளும் பதினெண்தலைப்பும் கலந்த பனுவல் வகை

கல் – கலுழ்

கலுழ்தல் = பொருந்துதல்

கலுழன் = வெண்ணிறமும் செந்நிறமும் கலந்த பறவையினம்.

கல் – கள்

கள்ளுதல் = கூடுதல்

களம் = கூட்டம் ; கூடுமிடம்

களமர் = மருதநில மக்கள்

களமம் = மருதநிலத்து நெல்

களன் = அவை

களரி = அவை

கள் – களன் – களனி – கழனி = மருதநிலம்

களகம் = நெற்கதிர்

களபம் = கலவை, சுண்ணச் சத்து

களகு – கழகு – கழகம் = பேரவை; கூடுமிடம்

கள் – கட்சி = போர்க்களம்; ஒரு கொள்கை பற்றிய கூட்டம்.

கள் – கண்

கண்ணுதல் = பொருந்துதல்

கண் – கண

கணத்தல் = கூடுதல்

கணம் = கூட்டம்

கணவர் = கூட்டத்தார்

கணன் = தொகுதி

கணந்துள் = கூட்டமாக வாழும் பறவையினம்.

கள் – கட்டு

கட்டுதல் = சேர்த்தல்

கட்டு = பிணிப்பு

கட்டம் = கவறாட்டத்திற்கு வரையும் அறைகள்

கட்டடம் = வீடு கட்டுதல்

கட்டணம் = பாடை; செலுத்தும் பணம்

கட்டளை = செங்கல் முதலியவற்றின் அச்சு

கட்டாயம் = தப்பாமற் செய்ய வேண்டிய நிலைமை

குள் – குய் – குயில்

குயிலுதல் = செறிதல்

குல் – குர் – குரல் = சேர்க்கை, கதிர்

குர் – கர் – கரு – கருவி = தொகுதி

குல் – குள் – குளு – குழு

குழு = கூட்டம்

குழும்பு = திரள்

குழும்பு – குடும்பு

குடும்பு = காய்கனிக் குலை

குடும்பம் = பொற்றோரும் பிள்ளைகளும் சேர்ந்த கூட்டம்

குழுவு – குழுமு

குழுமுதல் = கூடுதல்

குழுமல் = கூட்டம்

குழாம் = கூட்டம்

குழம்பு = பல்வகைப் பொருள்களின் கூட்டம்

குழுமு – கழுமு

கழுமுதல் = சேர்தல்

குழு – கெழு

கெழுதகை = நட்புரிமை

கெழுவு = நட்பு

குள் – கூள் – கூளுதல்

கூளுதல் = திரளுதல்

கூளம் = பலவகைத் தாளும் வைக்கோலும் கலந்த மாட்டுணவு

கூளப்படை = பலவகையினர் கலந்த கூட்டுப்படை

கூளி = கூட்டம்

கூளியன் = கூட்டாளி

கூள் – கூடு

கூடுதல் = ஒன்று சேர்தல்

கூட = உடன்

கூட்டம் = திரள்

கூடல் = கூடுதல்

குள் – கொள்

கொள்ளுதல் = பொருந்துதல்

கொள்ளை = கூட்டம்

கொள்ள = நிரம்ப

கொள் – கோள் – கோட்டி = கூடியிருக்கை

கோள் – கோடு

கோடகம் = பல தெருக்கள் கூடுமிடம்

10. சிவத்தற் பொருள் : வேர் – சுல்

சுல் – சுல்லி

சுல்லி = அடுப்பு; மடைப்பள்ளி

சுல் – சுல்லம்

சுல்லம் = செம்பு

சுல்வம் = செம்பு

சுல் – செல் – சேல் = செந்நிறக் கெண்டை மீன்

செல் – செள் – செட்டு – செட்டி = சிவந்த அடியையுடைய வெட்சிச் செடி

செட்டு – செச்சு – செச்சை = சிவப்பு

செச்சு – செஞ்சு = செம்மை

செஞ்சம் = நேர்மை

செள் – செய் – செய்ம்மை

செம்மை = சிவப்பு

செய்யவள் = சிவந்த திருமகள்

செயலை = சிவந்த அடியையுடைய அசோகமரம்

செய் – செய்தல் = கை சிவக்குமாறு வினை செய்தல்

செய்ம்மை – செம்மை

செம்மை = சிவப்பு

செம்மல் = வாடிச் சிவந்த பழம்பூ

செம்மாத்தல் = வீறு பெறுதல்

செம் – செம்பு

செம்பு = தாம்பரம்

செம்பை = ஒருவகைச் செடி

செம்பு – செப்பு = ஒருவகை மாழை

செப்பு – செப்பம்

செப்பம் = செம்மை

செப்பல் = செந்நிறம்

செப்பனிடுதல் = செவ்வை செய்தல்

செப்பல் = செந்நிறமுள்ள கடல்மீன் வகை

செம் – செவ்

செஞ்செவ்வே = நேராக

செவ – செவ்வல்

செவ்வல் = செந்நிறம்

செவ்வன் = செவ்வையாக

செவ்வி = தகுந்த சமயம்

செவ் – செவல்

செவல் = செம்மண் நிலம்

செவேர் எனல் = செந்நிறமாயிருத்தல்

செவ் – சிவ

சிவத்தல் = செந்நிறமாதல்

சிவத்தை = சிவப்பு

சிவப்பு = செந்நிறம்

சிவம் = செம்பொருள், சிவன்

சிவை = சிவன் தேவியாக உருவகிக்கப்பட்ட திருவருள்

சிவ – சிவல்

சிவல் = செம்மண் நிலம்

சிவலை = செந்நிறக்காளை

சிவீர் எனல் = சிவந்திருத்தல்

சிவேர் எனல் = சிவந்திருத்தல்

செவ் – செவு – செகு – செக்கு – செக்கம்

செக்கம் = சிவப்பு

செக்கச் சிவத்தல் = மிகச் சிவந்திருத்தல்

செக்கர் = சிவப்பு

செகு – செகில்

செகில் = சிவப்பு

செகிள் = மீனின் சிவந்த மூச்சுறுப்பு

செகிள் – செவிள் = செவியொட்டிய கன்னம்.

செய் – சேய்

சேய் = சிவப்பு; செவ்வாய்; செந்நிறமுருகன்

சேயன் = செந்நிறத்தான்

சேயவன் = செவ்வாய்

சேயது – சேய்து – சேது = சிவப்பு

சேது – கேது = சிவந்த சாயைக் கோள் (The descending node)

சேது + ஆம்பல் → சேதாம்பல் = செவ்வாம்பல்

சே – சேத்தல் = சிவப்பாதல்

சே – சேந்து = சிவப்பு

சேந்து – சேந்தன் = முருகன்

சேந்து + இல் = சேந்தில் – செந்தில் = முருகன் குடியிருக்கும் கோயில்

சேந்து + ஊர் = சேந்தூர் – செந்தூர் = திருச்செந்தூர்

சேகு – சேகை = சிவப்பு

## 11. சுடுதற் பொருள் : வேர் – சுல்

சுல் – சுல்லி = அடுப்பு

சுல் – சுள்

சுள்ளெனல் = கடுமையாகச் சுடுதல்

சுள்ளாப்பு = கடுவெயில்

சுள்ளி = வெயிலிற் காய்ந்த சிறு கொம்பு

சுள்ளை = மட்கலஞ்சுடும் சூளை.

சுள் – சூள்

சூளை = செங்கல் சுடும் காளவாய்

சுளுந்து = சுள்ளியான தீப்பந்தம்

சுள் – சுடு,

சுடுதல் = பொசுக்குதல்

சுடு – சுடல் = விளக்கிலிருந்து விழும் எண்ணெய்த் துளி

சுடு – சுடர் = ஒளி

சுடரோன் = கதிரவன்

சுடு – சூடு = வெப்பம்

சுள் – சுண்டு

சுண்டுதல் = உலைநீர் வற்றுதல்

சுண்டல் = நீர் முற்றும் வற்ற வேகவைத்த பயறு

சுள் – சுண் – சுண்ணம் = நீறு

சுண்ணாம்பு = சுட்ட சுண்ணாம்புக்கல்

சுண்ணம் – சுணம் = சுண்ணப் பொடி

சுண் – சுணங்கு = பூந்தாது

சுள் – சுள்கு – சுக்கு = காய்ந்த இஞ்சி

சுக்கு – சுக்கான் = சுண்ணாம்புக்கல்

சுல் – சுர் – சுரம் = தீப்போற் சுடும் பாலை நிலம்.

சுள் – சள் – சண்டு = காய்ந்த புற்றாள், சூலம்

சள் – சர் – சருகு = காய்ந்த இலை

சர் – சரகு – சரக்கு = காய்ந்த பண்டம்

## 12. செல்லுதற் பொருள் : வேர் – உய்

செல்லுதலாவது முன்னோக்கிச் செல்லுதலே.

உ–உய்

உய்தல் = முற்செல்லுதல், செல்லுதல்

உய்ய கொண்டான்

உய்ய வந்த தேவநாயனார் எனுமிப் பெயர்களில் உய்தல் ஈடேற்றம் உணர்த்துவன

உய்தடி = தளிர்த்து வளரும் வேலிக்கொம்பு.

உய் – உயல் = தப்புதல்

உய் – உய – உய்வு = செல்லுகை

உயவுநெய் = வண்டிச் சக்கரத்திற்கிடும் 'மசகு'

உய் – உய – உயவை = செல்லும் வழி

உயா = அசைவால் அல்லது வழிச் செலவால் உண்டாகும் வருத்தம்

உயங்குதல் = வருந்துதல்
உய் – ஒய் – ஒய்யல் = செலுத்துகை
ஒய் – ஓய் – ஓய்சு – ஓசு.
ஓசுநன் = மீகாமன் (மரக்கலர் செலுத்துவோன்).
உய் – இய் – இயவு
இயவு = செலவு
இயவுள் = நடத்தும் தலைமை, எப் பொருட்கும் இறைவன்
இயவை = வழி
இயல் = செலவு
இயல் + து = இயற்று
இயற்றுதல் = நடத்துதல்
இயல்பு = தன்மை, ஒழுக்கம்
இயற்கை = இயல்பு, தன்மை.
இய – இயங்கு
இயங்குதல் = அசைதல், போதல், உலாவுதல்
இயக்குதல் = செலுத்துதல்
இயக்கம் = அசைவு
இய் – எய்
எய்தல் = அம்பு விடுதல்
எய் = எய்யப்படும் அம்பு, அம்புபோல் கூரிய முள்ளுள்ள பன்றி.
எய்நன் – எயினன்
எயினன் = அம்பெய்யும் வேடன்
எயில் = ஏவறையுள்ள மதில்
எயிறு = அம்புபோல் கூரிய பல்
எய் – எய்து
எய்துதல் = நீங்குதல்
ஏய் – ஏ
ஏ = அம்பு
ஏவு = அம்பு
ஏவுதல் = செலுத்துதல்
ஏ – ஏகு
ஏகுதல் = செல்லுதல்
ஏ – ஏது = ஒரு கருமம் அல்லது முடிபு செய்யத் தூண்டுவது

## 13. தன்மைப் பெயரடி : வேர் – ஏ

ஏன் = தன்மை யொருமை வந்து + ஏன் = வந்தேன்.
ஏம் = தன்மைப் பன்மை வந்து + ஏம் = வந்தேம்.
ஏன் – என் – அன் – அல் = வந்தென், வந்தனென், வருவன், வருவல்
ஏம் – எம் = வந்தெம், வந்தனெம்
ஏன் – யான் – என்
ஏம் – யாம் – எம்
ஏங்கள் – யாங்கள் – எங்கள்
யான் – நான் – நன் (வழக்கிறந்தது)
யாம் – நாம் – நம்
யாங்கல் – நாங்கள் – நங்கள்

ஏ – எ

எந்த எ–டு. ஏவூர் = எந்த வூர் = ஈற்று வினாவெழுத்து
எ–டு . வந்தானே = வந்தானா
ஏது = எது
ஏ – ஏவன், ஏவள், ஏவர், ஏது, ஏவை. ஏன் = என்ன காரணம் பற்றி

ஏ – யா

யா = யாவன், யாவள், யாவர், யாவது, யாவை.
யா = யாண்டு, யாங்கு
யாங்கு = எங்கு
யாங்கு – யாங்கன்
யாங்கு – யாங்கனம், யாங்ஙனம் – யாங்ஙன்

ஏ – எ

எ – எந்த எ–டு : எக்காலம், எப்படி
எ – எம்மை = எவ்வுலகம்
எ – எவ்வது = எவ்வாறு
எ – எந்த
எ – எங்கு
எ – எங்கன்
எ – எம்பர் = எங்கு
எ – எவ் – எவன் – எவள் – எவர் – எது – எவை
எவ் – எவை
எவ் – எவன் = என்னது, என்ன.
எங்கு – எங்குற்றை = எவ்விடம்
எங்குற்றை – எங்குத்தை – எங்கித்தை
என்னது – எந்து = என்ன
என்ன – என்னவோ – என்னமோ
என் – என்றூழி = என்றைக்கும்
என் – எனை = என்ன, எந்த, எத்தகைய
எனையவன் = எனையன், எனைவன் = யாவன்

## 14. திரட்டல் பொருள் : வேர் – புல்

திரட்டற் பொருள் என்பது பருத்தற் கருத்தினின்று பிறக்குமாதலின் இவ்வேர்ப் பொருள் விரிவைப் பருத்தற் கருத்து வேராகவும் விளங்கும் 'புல்' வேர் விளக்கத்துடனிணைத்தமைத்துக் கொண்டார் பாவாணர்.

புல் – புள் – பிள் – பிழம்பு = திரட்சி
பிள் – பிண்டு = திரட்சி

பிண்டு – பிண்டம்
பிண்டம் = திரளை, சோற்றுத் திரளை
பிண்டம்பிடித்தல் = உண்டைத்திரட்டுதல்
பிண்டவுரை = பொழிப்புரை
பிண்டி = வடிவம்
பிண்டித்தல் = திரளையாக்குதல்.
பிண்டி – பிடி.
பிடித்தல் = கையாலிறுக்கிப் பிடித்தல்
பிடித்தம் = குறைப்பு, சம்பளப் பிடித்தம்
பிடித்து = ஒரு கைப்பிடிப் பொருள்
பிடிப்பு = பற்றுகை

**15. துளைத்தற் பொருள் :** வேர் – உள், குல், சுல், துல், நுல், புல், முல்.

உள் :
உ – உல் – உள்
உல் = தேங்காயுரிக்குங் கருவி
உல் – இல் – இல்லி
இல்லி = துளை, சிறு துளை
இல் = துளை போன்ற சிறு வீடு, வீடு
இல்லம் = பெருவீடு
உல் – உர் – உரல்
உரல் = உலக்கையால் குத்துதற்கேற்ற குழியுள்ள கல்
உல் – உள் – உளி = கூரிய பல்வேறு கருவி
உல் – உள் – அள் = கூர்மை
அளி = குத்தும் உறுப்புள்ள தேனீ, குளவி, வண்டு.
உளி – உசி – ஊசி = கூரிய தையற்கருவி, எழுத்தாணி.
உளி – உளியம் = உளிபோற் கூரிய உகிர்களையுடை கரடி
உளி – உகிர் = கூரிய விரல் நுனி உறுப்பு (நகம்)
உள் – உறு = மரத்தைத் துளைக்கும் புழு
உள் = உள்ளிடம், இடம், ஏழாம் வேற்றுமை யுருபு.
உள் – உள்ளம் = உள்ளிருக்கும் மனம்.
உள் – உளம் = உள்ளம்
உள் – உள்ளுதல் = நினைத்தல்
உள் – உள்குதல் = நினைத்தல்
உள் – உள்ளாளம் = உடம்பசையாமல் உள்ளடக்கமாய்ப் பாடும் பாட்டு.
உள் – உள்ளி = நிலத்திற்குள்ளிருக்கும் பூண்டு வகை
உள் – உளவு = உள்ளிருந்து துப்பறிதல்
உளவன் = துப்பாள்.
உளவு – உளகு = உட்டுளையுள்ள யாழின் தண்டு
உள் – உளர்
உளர்தல் = உட்கிளைத்தல், குடைதல்
உள் – உளம்பு
உளம்புதல் = புதரைத் தட்டி வேட்டை விலங்கைக் கிளப்புதல்
உள் – உளை
உளைதல் = உட்குடைதல்
உளைச்சல் = மனம் உள்முகமாய் வருந்துதல்
உள் – உள – உழு
உழுதல் = நிலத்தை மேனோக்காகத் துளைத்தல்
உளு – உகு
உகுதல் = உள்ளிருந்தொழுகுதல்
உகு – உகை
உகைத்தல் = உள்ளழுத்துதல்
உகு – அகு – அகள் – அகழ்
அகழ்தல் = தோண்டுதல்
அகழி = அகழப்பட்ட கோட்டையிடம்
அகள் – அகடு = உள், வயிறு
அகள் – அகண்
அகணி = உட்புறம்
அகள் – அகழ்ப்பை – அகப்பை
அகப்பை = உள் நுழைந்து மொள்ளுதல்
அகள் – அகம் = உள், உள்ளிடம், வீடு, அகப்பொருள்
அகம் – அகரம் = மருத நிலத்து ஊர்
உகு – உகல் – உவல் – அவல் = பள்ளம்
உவல் – உவன்றி
உவன்றி = நீர்நிலை
உவனித்தல் = ஈரமாதல்
உவறுற்றுதல் = சுரக்கச்செய்தல்
உவறு – ஊறு
ஊறுதல் = சுரத்தல்
ஊறு – ஊற்று
ஊற்றுதல் = ஒழுகச் செய்தல்
உவல் – உவன்று – ஊன்று
ஊன்றுதல் = பள்ளத்தில் அல்லது குழியில் நடுதல்
ஊன்று – ஊற்று
ஊற்றம் = நிலைபேறு
உவல் – உவள் – உவளகம் = அரண்மனையின் உட்புறம்
உள் – உண்
உண்ணுதல் = உட்கொள்ளுதல்
உண் – உணா – உணவு = உள்ளே கொள்ளுதல்
உண் – ஊட்டு = உள்ளே உணவைச் செலுத்து
உள் – உளை – உடை
உடைதல் = உட்குலைதல், விரிதல், பிளத்தல்
உள் – ஊள்
ஊளை = தொள்வு, தொய்வு, பதனழிந்த மோர்
ஊளைச்சதை = ஊழற் சதை

ஊள் – ஊழ்

ஊழுறுதல் = குடைதல்

ஊழ்த்தல் = உட்குலைதல்

ஊழல் = குலைவு, தாறுமாறு

ஊழில் = அருவருப்பான சேறு

உள் – ஒள் – ஒழுகு

ஒழுகுதல் = துளைவழியாய்ச் சிந்துதல்

ஒள் – ஓள் – ஓளை

ஓளைவாய் = சாளைவாய்

ஓள் – ஓட்டு

ஓட்டுதல் = கையைத் துளைக்குள் இடுதல்

ஓட்டு – ஓட்டை = துளை

ஒழுகு = நிலம் கோயில் முதலியவற்றின் ஒழுங்கான வரலாறு அல்லது கணக்கு.

ஒழுகு – ஒழுங்கு

ஒழுங்கை = நீண்ட இடைகழி

ஒள் – ஒளி

ஒளிதல் = துளைக்குள் அல்லது பள்ளத்துள் மறைதல்

ஒளி – ஒழி

ஒழிதல் = மறைதல்

ஒழி – ஓய்

ஓய்தல் = வேலையொழிதல்

ஓய் – ஓவு – ஓ

ஓ = ஒளிவு, சென்று தங்குகை, ஒழிவு

உள் – உடு

உடு = அகழி

உடுவை = அகழி

உடு – ஊடு

ஊடு = துளைவழி, வழி

ஊடை = நெசவின் குறுக்கிழை

உள் – உரு – உருவு

உருவுதல் = துளையூடு செல்லுதல்

குல் :

குல் – குலை

குலைத்தல் = கிளறிக் கலைத்தல்

குலை – கலை

கலைதல் = பிரிதல்

குல் – குர் – குரல்

குரல் = தொண்டைக் குழி (குரல் வளை)

குல் – கல் – கலம் = தோண்டப்பட்ட அல்லது குழிந்த ஏனம்

கல் – கண் = குழிந்த துலைத்தட்டு

கன் – கன்னான் = செப்புக்கலம் செய்பவன்

கன் – கன்னம் = திருடர் செய்த சுவர்த்துளை

கன் – கன்னல் = நீர்க்கலம்

கன் – கனி = பொன், இரும்பு முதலிய மாழை தோண்டியெடுக்கும் சுரங்கம்

குல் – குள் – குளம் = நீரைத் துளைப்பது போல் முழுகிக் குளிக்கும் நீர்நிலை

குள் – குளி

குளித்தல் = நீருள் முழுகுதல்

குளி – குழி

குழி = பள்ளம்

குழிதாழி = குழிந்த பெருந்தொட்டி

குழி – குழிவல் – கூவல் = கிணறு

குழி – குழிப்பம் – கொப்பம் = யானை பிடிக்க வெட்டும் பெருங்குழி

குழி – குழிம்பு – குழும்பு = குழி

குள் – குழ – குழல் = உட்டுளை

குழல் – குடல் = குழல் போன்ற உட்டுளையுள்ள உறுப்பு

குழி – குழை = துளை

குழை – குகை = மலைக்குகை

குகை – குவை = பொன்னுருக்குங் கலம்

குழை – குடை

குடைதல் = கிண்டுதல்

குளி – குடி

குடித்தல் = நீரை உட்புகுத்துதல்

குள் – குண்டு = பள்ளம், கிடங்கு

குண்டு – குண்டம் = பள்ளம், குழி, பானை

குண்டு – குட்டு – குட்டம் = மடு, ஆழம், ஏரி

குட்டு – குட்டை = சிறுகுளம்

குல் – கில்

கில்லுதல் = தோண்டுதல்

கில் – கீல்

கீலுதல் = கிழித்தல்

கீல் – கீன்றல் = கீறுகை

கில் – கெல்

கெல்லுதல் = தோண்டுதல்

கில் – கிள் – கிளறு

கிளறுதல் = கிண்டுதல்

கிள் – கிளை

கிளைத்தல் = கிளறுதல்

கிளை = கவை, பிரிவு, சுற்றம்

கிளைஞர் = உறவினர்

கிள் – கிண் – கிணறு = கேணி

கிண் – கிண்ணம் = சிறு வட்டில்

கிண்ணி : கிண்ணம்

கிண் – கெண் – கேணி

கேணி : கிணறு

கிள் – கிண் – கிண்டு

கிண்டுதல் : கிளறுதல்

கிண்டு – கெண்டு

கெண்டுதல் : கிண்டுதல்

கிள் – கிழி

கிழித்தல் : கீறுதல்

கிழி : கிழிந்த துணி

கிள் – கீள்

கீளுதல் : கிழித்தல்

கீள் : கூறு

கீளுடை : கிழிந்த உடை; நீர்ச்சீலை (கோவணம்).

கீள் – கீழ் – கீழ்க்கு – கிழக்கு : பள்ளம்

கிழக்கு – கிழங்கு : நிலத்தின் கீழ் விளைவது

கிழங்கு – கிடங்கு : பள்ளம், குழி, அகழி

கிடங்கர் : அகழி

கீள் – கீறு

கீறுதல் : கிழித்தல்

கீறல் : கிழிகை

கீற்று : கூரை வேயும் கிடுகு.

குள் – கொள் – கொழுது

கொழுதல் : குடைதல்

கொழுது – கோது

கோதுதல் : குடைதல்

குள் – கும் – குயில் : துளைத்தல்

குள் – குர் – குரு – கோர்

கோர்த்தல் : நூலை அல்லது நாணைத் துளைவழி துருவச் செய்தல்

கோர் – கோர்வை – கோவை – கோ

கோத்தல் : மணியூடு நூலைத் துருவச் செய்தல்

குழி – குறி

குறித்தல் : கோடு கீறுதல்

சுல் :

சுல் – சூல்

சூலுதல் : தோண்டுதல்

சுல் – சுன் – சுனை : உட்டுளையினின்று நீர்வருவது போன்ற நீரூற்று

சுன் – சூன் : இருவீட்டுச் சுவர்களின் இடைச்சந்து

சுனை – சோனை : வானத்தினின்று நீரூற்றுச் சொரிவது போன்ற விடாப் பெரும் பெயல்

சோனை – சோனம் : முகில்

சோனைமேகம் – சோனாமேகம் : பெருமழை முகில்

சுல் – சுர் – சுர

சுரத்தல் : உட்டுளையினின்று ஊறுதல் போல் வாய் சுரத்தல்

சுர – சுரப்பு

சுரப்பு : ஊறுகை

சுரப்பி : ஊறுவது

சுர – சுரம் : உட்டுளை

சுர – சுரங்கு – சுரங்கம் : நிலவறை

சுர் – சுரி

சுரித்தல் : துளையிடுதல்

சுரி : துளை

சுரியூசி : ஏட்டில் துளையிடுங் கருவி

சுர் – சுருங்கு : சாய்கடை

சுருங்கை : நுழைவாயில்

சுர் – சுருவம் : அகப்பை வகை

சுரு – சுருவை : நெய்த் துடுப்பு

சுர் – சுரை : குழிந்த இடம்

சுள் – சுளி – சுகி – சுகிர்

சுகிர்தல் : கிழித்தல்

சுர் – சூர் – சூறு : எருவாய்

சூறு – சூற்று – சூத்து : எருவாய்

சுல் – சொல் – சொலி

சொலித்தல் : தோண்டுதல்

சொலி : உரி, தொலி, பட்டை

சொல் – சொள் – சொள்ளை : துளை

சொள் – சொள்ளல் : குற்றம்

சொள் – சொண்டு : சொத்தை மிளகாய்

சொண்டு – சொட்டு : குற்றம்

சொட்டு – சொட்டை : சொத்தை, குற்றம்

சொட்டை – சொத்தை : குற்றம்

சொள் – சொறு

சொறு சொறுத்தல் : எளிதாய்த் துளையிடுமாறு கூழ்போல் குழைதல்

சொள் : சாளை வாயினின்று வடியும் நீர்

சொறுசொறு – சொதுசொது

சொதுசொதுவெனல் சோறுபோல் குழைந்திருத்தல்

சொது – சுது – சுதை : சேறு போன்ற சுண்ணாம்பு

சுது – சது – சதுப்பு : சேற்றுநிலம்

சொள் – சோள் – சோளி : இரப்போன் பெரும்பை

சோளிகை : இரப்போன் பெரும்பை

சொள் – சொர் – சொருகு

சொருகுதல் : துளைக்குள் இடுதல், உள்ளிடுதல்.

சொள் – சொர் – சொரிதல் = உள்ளிருந்து விழுதல்
சொள் – சோள் – சோர்
சோர்தல் = குழைதல், தளர்தல்
சோர் – சோர்வு = சொரிகை
சோர் – சோரி = சிந்தும் குருதி

துல் :
துன் = துளை, வளை
எலித்துன் = எலி வளை
துண்ணெலி = வளை தோண்டும் எலி
துன் – துன்னூசி = கலப்பைக் குத்தி
துன் – துன்னம் = உழவு, ஊசித்துளை
துன் – துன்னல் = துளை
துன் – தொன் – தொன்னை = துளையுள்ளது போன்ற இலைக்கலம்
தொன்னைக்காது – தொன்னை போல் மடங்கிய காது
துள் – துள – துளவை = தொளை
துள் – துளை
துளைதல் = நீரில் விளையாடுதல்
துளை = ஓட்டை, குழி
துளைக்கருவி = துளையுள்ள இசைக்கருவி
துளையம் = நீரிற் குடைந்து விளையாடுகை
துள் – துள – துழ
துழத்தல் = துளைத்துக் கிண்டுதல்
துழ – துழதி = துன்பம்
துழவுதல் = கிண்டுதல்
துழைதல் = துழாதல்
துள் – துளு – துளுப்பு
துளுப்படுதல் = கலக்குதல்
துளு – துடு – துடுவை = நெய்த் துடுப்பு
துழை – துடை
துடைத்தல் = தடவி நீக்குதல்
துழவு – துடவு = ஒரு முகத்தலளவு
துல் – துர் – துர
துரத்தல் = துளைத்தல்
துரவு = பாசனத்திற்குதவும் பெருங்கிணறு
துரப்பு = மலையிற் குடையப்பட்ட பாதை
துரப்புதல் = துருவித் தேடுதல்
துரப்பணம் = துளையிடுங் கருவி
துர – துற
துறத்தல் = துளைத்தல்
துறவு = மருமம், மறைபொருள்
துறப்பு = துளைத்துத் திறத்தல்
துறப்புக்குச்சு = திறவுகோல்
துறப்பணம் = துரப்பணம்
துற – திற
திறத்தல் = கதவு திறத்தல்
திறந்த மடம் – நாற்புறமும் அடைப்பில்லாக் கூடம்
திறந்த மனம் = மறைவாக உள்ளொன்றுமில்லாத உள்ளம்.
திறந்தவெளி = கட்டிடம் மரம் குன்று முதலியன இல்லாத வெட்டவெளி
திற – திறப்பு = பிளப்பு
துள் – துளை
துன்னுதல் = துளை போன்ற வாய்க்குள் செலுத்துதல்
துல் – துற்று
துற்று = உணவு
துற்றர் = உண்பவர்
துற்றி = உணவு
துன் – தின்
தின்னுதல் = உண்ணுதல்
தின் – தின்றி = தின்பண்டம்
தின் – தின்னி = அடிக்கடி உண்பவன்
தின் – தீன் – தீனி = சிற்றுண்டி
தின் – திற்று – தீற்று
தீற்றுதல் = ஊட்டுதல்
துல் – துண் – துண்பு – தும்பு
தும்பு = உட்டுளை, துளையுள்ள உறுப்பு
தும்பா = உட்டுளையுள்ள சுரைக்குடுக்கை
தும்பலை = சுரைக்காய், சுரைக்குடுக்கை
தும்பு – தும்பி – சுரை, தேனுறிஞ்சும் உறுப்புள்ள வண்டு, துளைக்கை யானை
தும்பு – தூம்பு – உட்டுளை
தும்பு – தொம்பு – தொம்பை = மூங்கிலாலான நெற்குதிர்
தொம்பை – தொப்பை = தொந்தி
துள் – துய்
துய்த்தல் = உண்ணுதல்
துய் = உணவு
து = உணவு
துப்பு = உணவு
து – துவ்வு
துவ்வுதல் = உண்ணுதல், நுகர்தல்
துவ்வு = உணவு
துள் – துண் – தூண் – தூணி = அம்புக்கூடு
துள் – தொள் – தொள்கு
தொள்கு = பள்ளம்
தொள்ளல் = துளை

தொள்ளைக்காது = துளைக்காது
தொள் – தொளை = துளை
தொள் – தொறு – தொழு
தொழு = சிறு குற்றவாளிகட்குத் தண்டனையாகக் கால்களை மாட்டி வைக்கும் குட்டையென்னும் மரச்சட்டம்.
தொழு – தொழில் = பயிர்த்தொழில், செயல்
தொழு – தொழுவன் = தொழிலாளி, பயிரிடுவோன்
தொழு – தொழுவர் = தொழில் செய்வோர்
தொள் – தொய்
தொய்தல் = உழுதல்
தொள் – தொண்டு
தொண்டு = துளை
தொண்டி = துளை
தொண்டலம் = நீண்ட துளையுள்ள யானைத் துதிக்கை
தொள் – தொள
தொளதொளத்தல் = துளையுண்டது போல் நெகிழ்தல்
தொள – தள – தளர்
தளர்தல் = நெகிழ்தல்
தொள் – தொய்
தொய்தல் = தளர்தல்
துல் – துன் – துன்பு = துளைத்தாற்போல் வருத்தும் நிலைமை
துல் – தொல் – தொல்லை = துன்பம், இடர்ப்பாடு
தொள் – தொண்டு = தொழில், பணிவிடை, அடிமைவேலை.

நுல் :
நுல் – நொல் – நொலை = உட்டுளையுள்ள அப்ப வகை
நுல் – நொல் – நெல் – நெலி
நெலிதல் = கடைதல்
நெலி – ஞெலி
ஞெலிதல் = தீக்கடைதல்
ஞெலி = உரசித் தீப்பற்றும் மூங்கில்
நெல் – நெர் – நெரு – நெருப்பு = மூங்கில் ஒன்றோடொன்று உரசிப் பற்றும் தீ.
நொல் – நோல் – நோலி – நோனி = பிறப்புறுப்பு
நுல் – நல் – நல்லி = உட்டுளையுள்ள மூளை யெலும்பு
நல் – நால் – நாலி – நாலிகை = உட்டுளையுள்ள மூங்கில்
நுல் – நுள் – நுளை – நுளையன் = நீருட் புகுந்து அல்லது முழுகி மீன் பிடிப்பவன்.

நுள் – நள்
நள் = உள், நடு
நள்ளிடை = நடுவிடம்
நடு – நாடு = முல்லைக்கும் நெய்தற்குமிடைப்பட்ட மருதநிலம்.
நள் – நாள் – நாளம் = உட்டுளை
நாளம் – நாளி – நாழி = உட்டுளைப் பொருள், வட்டில்.
நாழி – நாழிகை = வட்டிலால் அறியப்படும் நேர அளவு.
நாழி – நாடி = குருதிக் குழாய்
நாடி – நாடா = நெசவுக் குழல்
நாளம் – நாணல் = உட்டுளையுள்ள தட்டை வகை
நுல் – நுழு – நுகு – நுங்கு
நுங்குதல் = விழுங்குதல்
நுங்கு – நொங்கு
நொங்குதல் = விழுங்குதல்
நுகு – நுகர்
நுகர்தல் – விழுங்குதல்
நுகு – நுகர்
நுகர்தல் = உண்ணுதல்
நுகு – நொகு – நொக்கு = வெடிப்பு
நுழு – நூழ் – நூழில் = குழி
நூழிலார் = செக்கார், வாணியர்
நூழிலாட்டு = செக்காட்டுவது போன்று கொன்று குவிப்பு
நுள் – நொள் – நொள்ளுதல் = மொள்ளுதல்
நுள் – நொள் – நொள்ளை = கண் குழிந்த குருடு
நொள் – நெள்
நெள்ளல் = பள்ளம், குழிவு
நெள்ளல் – ஞெள்ளல் = பள்ளம், பள்ளம் விழுந்த தெரு
நொள் – நொடு – நொடி = வண்டிப் பாதையிலேற்பட்ட குழிப்பள்ளம்
நொள் – நொண்டு.
நொண்டுதல் = நுகர்தல்
நொண்டு – நண்டு
நண்டுதல் = கிண்டுதல்
நண்டல் = கிண்டிக் குழைத்த உண்டி
நண்டு = வண்டலிலும், மணலிலும் கிண்டினாற் போல் கீறிச் செல்லும் நீருயிரி.
நெண்டு – ஞெண்டு
ஞெண்டுதல் – கிண்டுதல்
ஞெண்டு – நண்டு
நொள் – நோள் – நோண்டு
நோண்டுதல் = தோண்டுதல்

புல் :

புல் = உட்டுளையுள்ள நிலைத்திணை வகை
புல் – புல்லுதல் = துளைத்தல்
புல் – பொல்
பொல்லுதல் = துளைத்தல்
பொல்லம் = துளை, ஒட்டை
புல் – புர் – புரை
புரை = உட்டுளை
புரைசல் = துளை, குற்றம்
புரைப்பு = குற்றம்
புரைப்படுதல் = மரம் பொந்து படுதல்
பொல் – பொள்
பொள்ளுதல் = துளைத்தல்
பொள்ளல் = துளைக்கை
பொன் – பொண்டான் = எலி தப்பிக்கத் தோண்டும் மறைவான பக்கவளை.
பொல் – பொள் – பொத்தல் = துளைத்தல், துளை
பொத்தை = துளை
பொத்து – பொந்து = துளை
பொள் – பொள்ளை = துளை
பொளிதல் = துளைத்தல்
பொளித்தல் = துளை செய்தல்
பொளி = உளியாலிட்ட துளை
புல் – புள் – புழு = துளைத்தரிக்கும் சிற்றுயிரி
புழு – புகு
புகுதல் = துளைத்தல் போல் உட்செல்லுதல்
புகா = உணவு
புகலி = புகலடைந்தவர்; ஒரு பெருவெள்ளக் காலத்தில் புகலிடமாயிருந்த சீகாழி
புகு – புகார் = ஆறு கடலொடு கலக்குமிடம்
புகு – புகுது = உட் செல்லுதல்
புகுது – புகுரு
புகுருதல் = புகுதல்
புகுரு – புகுர் – பூர்
பூர்தல் = புகுதல்
பூர் – பூரான் = கண்ணிற்குள் விரைந்து புகும் நச்சுப் பூச்சி
புகவொட்டு – புகட்டு
புகட்டுதல் = நீர்ப்பொருளைக் கலத்தில் ஊட்டுதல்
புகட்டு – போட்டு. போட்டுதல் = புகட்டுதல்
புகவிடு – புகடு
புகடுதல் = வீசி யெறிதல்
புகு – போ
போதல் = புகுதல்

போ – போக்கு = செல்கை
போகவிடு – போக்கு – போடு
போடுதல் = வலிதாய்க் கீழிடுதல்
போ – போகு
போகுதல் = போதல்
புழு – புழல் = உட்டுளை
புழல் – போல் = உள்ளீடல்லாதது
புழல் – புகல்.
புகல் = புரையுள்ளது
புகல்வேலை = அணிகலன்களில் உட்டளையமையச் செய்த வேலை
புழல் – புடல் = உட்டுளையுள்ள காய்
புள் – புளு – புடு – புடி
புடித்தல் = பொய் சொல்லுதல்
புடி – பிடி – பிசி
பிசி = பொய், உவமக் கூற்று வாயிலாக உண்மை நிகழ்ச்சியை அறிவித்தல்
புளு – புளகு
புளுகுதல் = பொய் சொல்லுதல்
புல் – புற்று = உட்டுளையுள்ள கறையான் மண்கூடு
புற்று – புற்றம் = புற்று
புற்றுவெடிப்பு = பாதத்தில் தோன்றும் பித்த வெடிப்பு.
புழு – புழை = துளை
புழைக்கை = தும்பிக்கை, யானை
புழைக்கை, பூழ்க்கை – பூட்கை = யானை
புழை – புடை = துளை
புடை – புடம் = பொன்னைக் காய்ச்சித் தூய்மைப்படுத்தும் சிறு கலம்.
புழை – பூழ் = துளை
பூழை = துளை
புள் – பூள் – பூறு
பூறுதல் = துளைத்தல், கிழித்தல்
பூறு – பீறு.
பீறுதல் = கிழித்தல்
பீறல் = கிழித்தல்
பூறு = மலவாய்
மூக்குப்பூறி = மூன்றாம் பிள்ளையாகப் பிறந்து மூக்குக் குத்தப் பெற்ற ஆண்பிள்ளை.
மூக்குப்பூறி = மூக்குப்பீறி.
புல் – பிள்
பிள்ளுதல் = பிளத்தல்.
பிள் – பிள
பிளத்தல் = வெடித்தல், இரண்டாக உடைத்தல்
பிளவு = வெடிப்பு

பிளவை = பிளக்கப்பட்ட துண்டு; வெடிக்கும் சிலந்தி வகை.

பிளா – பிளாச்சு = கிழித்த மூங்கிற்பட்டி

பிளாச்சி = மூங்கிற்பட்டி

பிளா = வாய் விரிந்த இறைகூடை

பிளா – பிழா = வாய் விரிந்த ஓலைத்தட்டுக் குட்டான்.

பிழா – பிழார் = இறைகூடை

பிழா – பிடா – பிடவு – பிடகு – பிடகம் = வாய் விரிந்த பூந்தட்டு, பூக்கடை.

பிள் – பெள் – பெட்டி = அகன்ற வாயுள்ள பனைநார்க்கூடை

பெட்டி – பெட்டகம் = மரப்பெட்டி

பெள் – பேள் – பேழ்.

பேழ் = அகலம், பெருமை

பேழ்வாய் = பெரியவாய்

பேழை = பெருமை, பெட்டி

பின் – பிடு

பிடுதல் = இரண்டாக அல்லது துண்டு துண்டாகப் பிளத்தல்

பிடு – பிடுகு = வானம் வெடிப்பது போன்ற இடி

பிடுகு – பிடுங்கு

பிடுங்குதல் = உடைதல், அடைப்பு விலகுதல்

பிடுங்கு – பிடாங்கு = குழாய் வெடி (வேட்டு)

பிடு – பிது – பிதிர்

பிதிர்தல் = சிறு சிறு துணிக்கையாகப் பிரிதல்

பிதிர் = பூஞ்சுண்ணம்

பிதிர் – புதிர் = விடுகதை

பிது – பிதுங்கு

பிதுங்குதல் = உள்ளீடு வெளிப்படுதல்

பிது – பிசு – பிசிர்

பிசிர்தல் = துளியாகச் சிதறல்

பிசிர் = நீர்த்துளி

பிசு – பிசுகு

பிசுகுதல் = கடையிற் பண்டம் வாங்கிய பின் மேலும் ஒரு சிறிது விலையின்றிக் கேட்டல்; கஞ்சத்தனம் பண்ணல்

பிசுக்கு = சிற்றளவுப் பொருள்

பிசுக்கர் = புல்லர்

பிசுக்கி = புல்லர்

பிசுக்கு – விசுக்கு

விசுக்கு = சிறு துணிக்கை

விசுக்காணி = மிகச் சிறியது

விசுக்காணிப்பயல் = மிகச் சிறியவள்

பிள் – பிர் – பிரி

பிரிதல் = கட்டவிழ்தல்

பிரிவு = விலகல்

பிரி – பிரியல் – பிரிசல் = பாகப் பிரிவு

பிள் – பிட்டு = உதிரியான சிற்றுண்டி வகை

பிள் – பிண்டி = நுண்பொடி

பிள் – பிள்நாக்கு – பிண்ணாக்கு

பிண்ணாக்கு = எள், இலுப்பை, வேம்பு முதலியவற்றின் விதைகளை எண்ணெயாட்டியபின் எஞ்சிய சக்கை பிளவுபட்ட நாக்குப் போலிருப்பதால் பிண்ணாக்கு எனப்பட்டது

பிள் – பிண் – பிணம் = கட்டுவிட்ட சவம்

பிள் – பிண் – பிணகு – பிணங்கு

பிணங்குதல் = மாறுபடுதல்

பிணக்கு = மாறுபாடு

புள் – புய் – புய்தல் = பறிக்கப்படுதல்

புய் – பிய்.

பிய்தல் = பின்னுதல், பிரிதல்

பிய்த்தல் = பிடுதல், கிழித்தல்.

பிய் – பியர்

பியர்தல் – பெயர்தல்

பியர் – பெயர்

பெயர்தல் = இடம்விட்டு நீங்குதல், பிரிதல்

பெயர்த்தல் = பெயரச் செய்தல்

பெயர் – பேர்

பேர்தல் = பெயர்தல்

பேர்த்தல் = பெயர்த்தல்

பொள் – பள் – பள்ளம்

பள்ளம் = குழி

பள்ளன் = பள்ளமான மருதநிலத்தில் வாழும் உழவர் வகுப்பான்

பள்ளன் – மள்ளன் – மருத நில உழவன்

பள் – பள்ளி – பிரிக்கப்பட்ட வீடு, படுக்கையறை

பள்ளியிடம் = படுக்குமிடம்

பள்ளம் என்பது நிலமட்டத்தினும் தாழ்வான இடம். நிற்கும் நிலையினும் படுக்கும் நிலை தாழ்வாயிருப்பதால் படுக்கை அல்லது படுக்குமிடம் பள்ளியென்றும் படுத்துத் தூங்குதல் பள்ளி கொள்ளுதல் என்றும் சொல்லப்பட்டன.

பள்ளி – பாளி – பாழி = மக்கள் துயிலிடம்

பள் – பள்ளை

பள்ளை = குள்ளம் = குள்ளமான பள்ளையாடு

பள்ளையம் = பள்ளமான உண்கலம்; சிறு தெய்வப் படையல்.

பள் – பள்கு

பள்குதல் = பதுங்குதல்

பன் – பண் = நீர்நிலை

பண் = நீர்நிலை போன்ற வயல், வயலிற் செய்யும் வேலை, தொழில்

பண்ணை = மருத நிலம்

பண்ணையம் = பெருநிலக்கிழார்

பண்ணையாளி – பண்ணாடி

பண்ணாடி = வாரக்குடி வைத்துப் பயிர் செய்யும் பெருநிலக்கிழார்

பண் – பண்ணை = விலங்கு துயிலிடம்

பண் – பணை = விலங்கு துயிலிடம்

பண் – பணை = மருத நிலம்

பண் – பணி

பணிதல் = தாழ்தல்

பணித்தல் = தாழ்த்துதல்

பணி – படி

படிதல் = அடியில் தங்குதல்

பணி – பாணி

பாணித்தல் = காலம் தாழ்த்துதல்

பாணி = பள்ளமான இடத்தில் தங்கும் அல்லது பள்ளம் நோக்கியோடும் நீர்

பண் – பண்ணல்

பண்ணல் = வயலைத் திருத்துதல், பயிர் செய்தல்

பண்ணுதல் = பயிர் செய்தல்

பண் – பணி = கைத்தொழில்.

பணி – பணிக்கு

பணிக்கு = வினைத் திறமை

பணிக்கம் = வினைத் திருத்தம்

பணிக்கன் = வினைத் திறவோன்

பண் – பண்ணல்

பண்ணல் = பாட நினைந்த பண்ணுக்கு இணை, கிளை பகை நட்பான நரம்புகள் பெயரும் தன்மை மாத்திரையறிந்து வீக்குதல் (சீவக. 657. நச். உரை)

பண் = இசைவகை

பண் – பாண் = பாட்டு

பாண் – பாணன் = இசையும் இசைத்தமிழும் வளர்த்த பண்டைத் தமிழ் வகுப்பினன்

பாண் – பாணு = பாட்டு

பாண் – பாணி = பாணன் மனைவி, பாணர் குலப் பெண்.

பாண் – பாடு

பாடுதல் = பாடுகை

பாடு – பாடகன்

பாடகன் = பாடுவோன்

பாடகி = பாடுபவள்

பாடினி = பாணர் குலமகள்

பாடு – பாடி = பாடுபவன்

எ–டு. வலன்பாடி, வானம்பாடி

பொள் – பொய்

பொய்தல் = துளைக்கப்படுதல்

பொய் – பொய்கை = ஏரி அல்லது குளம்

பொய் = உட்டுளை

பொய் – பொய்தல் = மணற்சிற்றில்

பொய் – பொய்ச்சு – பொய்ச்சாத்தல் = மறத்தல்

பொய்ச்சாத்தல் – பொச்சாத்தல் = மறத்தல்

பொச்சாப்பு = மறதி.

ஒன்றை மறந்த மனம் ஓரளவு உள்ளீடற்ற கூடு போலிருத்தலால் மறதி பொச்சாப்பு எனப்பட்டது.

பொய் – பய் – பை

பை = துணி, தோல் முதலியவற்றாலான உள்ளீடற்ற உறை.

பய் – பயம்பு – பள்ளம்

பய் – பயல் = பள்ளம்

பொன் – பொறு

பொறுபொறுவெனல் = ஓட்டை வழி ஒழுகுதற் குறிப்பு

பொறு – பொழு – போழ்

போழ்தல் = பிளவுபடுதல்

போழ்முகம் = பிளந்தாற் போன்ற முகத்தை அல்லது வாயையுடைய பன்றி

போழம் = பொய்

பொழு – பொழுது = இருளைத் துணிக்கும் கதிரவன்

பொழுது – போழ்து – போது = கதிரவன்

பொய் – பெய்

பெய்தல் = துளைவழி நீரொழுகுதல் போல முகிலினின்று மழை விழுதல்

பெய் – பெயர்

பெயர் = இடுகுறிச் சொல்

பெயரன் = முதற்காலத்தில் பாட்டன் பெயரைப் பெற்று வந்த மகன்–ள் மகன்

பெயர் – பேர் = பெயர்க் குறியீடு

பெயரன் – பேரன் = பெயரன்

பெய் – பேய்

பேய்தல் = மழை பெய்தல்

பேய் – பேயு – பேசு

பேசுதல் = மழை பெய்வது போலச் சொற்களைச் சொரிதல்

பொழு – பொகு

பொகுத்தல் = துளைத்தல்

பொகு – பொக்கு = மரப்பொந்து

பொக்கு – பொக்கம் = பொய்
பொக்கு – பொக்கல் = பொக்கை
பொக்கு – பொக்கணம் = சோழியப்பை
பொக்கணம் – பொக்கணி = நெற்குத்தும் உரல்
பொக்கணி – மொக்கணி
மொக்கணி = குதிரைக்குக் கொள் கோதுமை முதலிய உணவு கட்டும் பை
பொக்கு – பொக்கணை
பொக்கணை = கல்மரம் முதலியவற்றிலுள்ள பொந்து
பொகு – பகு
பகுதல் = பிளவுபடுதல்; பங்கிடுதல்
பகு – வகு
வகுத்தல் = பிளவுபடுத்தல், கூறுபடுத்தல்
வகு – வகுந்து = வழி
வகு – வகம் = வழி
வகு – வக்கு = வழி
வகு – வகை = கூறுபாடு
பகு – பக்கு
பக்கு = பிளப்பு
பக்கிடுதல் = வெடித்தல்
பக்கிசைத்தல் = விட்டிசைத்தல்
பக்கு – பக்கம் = மருங்கு
பக்கு – பங்கு = பாகம்
பங்கு – பங்கம் = கேடு
பகு – வகு – வகுப்பு = கூறுபடுத்துகை
பகு – பகுதி = பகுப்பு
பகுதி – பாதி = சரியாய்ப் பகுக்கப்பட்ட பொருட்பகுதி யிரண்டனுளொன்று.
வகு – வகுதி = வகுப்பு
பகு – பகவு = பிளவு
பகவு – பகவன் = எல்லாவுயிர்கட்கும் உணவைப் பகிர்ந்தளிக்கும் இறைவன்
பகு – பகல் = பகுக்கை
பகல் – பால் = பிரித்துக் கொடுக்கை
பால் – பான்மை = பகுதி
பகு – பகிர்
பகிர்தல் = பிளத்தல்
பகிர் = பங்கு
பகிர் – வகிர் = பிளவு, உச்சியெடுப்பு
பகு – பகை = வெறுப்பு, எதிர்ப்பு
பகு – பாகு = பகுதி
பாகு – வாகு = பக்கம்
பாகு – பாகம் = பகுக்கை
பாகித்தல் = பங்கிடுதல்

பாகு – பாகன் = பக்கத்திலிருந்து பேணுபவன்; ஒரு பாகமாகக் கொண்டவன்
பாகு – பாக்கு = பகுதி அல்லது பக்கம்
பாக்கு – வாக்கு = பக்கம். எ–டு: கைவாக்கு, காற்றுவாக்கு
பாக்கு – பாக்கம் = நெய்தல் நகரப்பகுதி
பாக்கம் – வாக்கம் = நெய்தல் நிலத்தூர்
பாக்கு – பாங்கு = பக்கம்
பாகு – பாகை = பகுதி
பாகு – பா
பாதல் = பிளவுபடுதல்
பா – பாத்து
பாத்தல் = பகுத்தல்
பாத்தூண் = பகுத்துண்கை
பாத்தி = பகுதி
பாத்தி – பத்தி = பிரிவு, வரிசை
பாது – பாதிடு
பாதிடுதல் = பங்கிடுதல்
பாதிடு – பாதீடு = பங்கிடுகை
பாதுகாத்தல் = வெட்சி மறவர் தம் ஆநிரைப் பங்கைக் காத்தல்; ஆநிரையைப் போல் அரவணைத்துக் காத்தல்.
பன் – பண் – பணி – படி
கீழ்ப்படிதல் = அடங்கி நடத்தல்; பணிவாயிருத்தல்.
படி – பதி
பதிதல் = பள்ளமாயிருத்தல்
பதித்தல் = தாழ்த்துதல்
பதி – பதம் = நிலத்தில் பதியும் உறுப்பாகிய கால்
பதம்பார்த்தல் = வேகும் உணவின் நிலைமையை அறிதல்
பதி – பதனம் = இறக்கம், தாழ்மை
பதம் – பாதம் = காலின் அடிப்பகுதி
படு – பது – பதுங்கு
பதுங்குதல் = பதிவிருத்தல்
பதுக்குதல் = ஒளித்தல்
பதுக்கு – பதுக்கை
பதுக்கை = போரிற்பட்ட மறவரை அல்லது காட்டு விலங்கால் கொல்லப்பட்டவரை மறைக்குங் கற்குவியல்.
பள் – படு – படுதல்
படுதல் = விழுதல்
படு – படுக்கை = படுத்துக் கிடக்கை
படு – படுகர் = பள்ளம் (திவா.)
படு – படுகை = ஆற்றோரத்துத் தாழ்நிலம்.
படு – படை

படைத்தல் = மக்கட்கு முன் அல்லது தெய்வப் படிமைக்குமுன் உணவிடுதல். இடுதலென்பது கீழ்வைத்தல்.

படு – பாடு

பாடு = விழுகை

பாடுகிடத்தல் = தெய்வத்திற்கு முன் நெடுஞ்சாண் கிடையாய் விழுந்து வரங்கிடத்தல்.

பாடுபடுதல் = வருந்தியுழைத்தல்

பாடு – பாடி

பாடி = மிகத் தாழ்மட்டமான கூரை வீடுகள் சேர்ந்த முல்லை நிலத்தூர்

பாடிகாவல் = ஊர்காவல்

பாடிவீடு = பாசறை

பாடி – வாடி

வாடி = முல்லை நிலத்தூர்

பாடு – பாடை

பாடை = காலில்லாத மிகத் தாழ்வான பிணக்கட்டில்

பது – பாது – பாந்து

பாந்துதல் = பதுங்குதல்

பாந்து – பாந்தன் = புள்ளுள்ளும் செடிகளுள்ளும் பதுங்கியிருக்கும் பாம்பு

பள் – பள்ளம்

பள்ளம் = இக்காலத்தை நோக்க முற்காலம் பள்ளம் போன்றிருந்தலால், பள்ளக் கருத்தினின்று பழமைக் கருத்துத் தோன்றிற்று.

பள் – பண்டு = பழமை, தொன்மை

பழம் – பழனம் = பண்டை நாளிலே பண்படுத்தப்பட்ட வயல்; மருதநிலம்.

பழமை – வழமை = வழக்கம்

பள் – பய் – பயில் – பயில்தல் = பழகுதல்

பயில் – பயிற்சி = தொழில் பழகுதல்

பழம் – பழவு – பழகு

பழகுதல் = நெடுங்காலமாக வழங்கி வருதல்

பழங்கு – புழங்கு

புழங்குதல் = பழகுதல்

பழங்கு – வழங்கு

வழங்கு = தொன்று தொட்டு நடைபெற்று வருதல்

வழக்கம் = நாள்தோறும் செய்வது

பழ – பாழ்

பாழ்த்தல் = அழிவடைதல். பழம் பொருள்கள் பொதுவாகப் பழுதுபடுமாதலால் பழமைக் கருத்தினின்று பழுதுக் கருத்துத் தோன்றும்.

பாழ்க்கோட்டம் = சுடுகாடு

பாழ் – பாழிமை = வெறுமை

பாழ் – பழுது = சிதைவு

பள் – பழி

பழித்தல் = இகழ்ந்து அல்லது இழித்துக் கூறுதல். ஒருவரைப் பழிப்பது தாழ்வுபடுத்துதலால் தாழ்மட்டத்தைக் குறிக்கும் பள்ளக் கருத்தினின்று பழிப்பு அல்லது இழிப்புக் கருத்துந் தோன்றும்.

பழி – பழிசை = இகழ்ச்சி

பண்டு – வண்டை = கொச்சைமொழி

வண்டு – வடு = குற்றம்

பள் – பழு

பழுத்தல் = முதிர்தல். பழமை முதிர்ச்சியாதலால் பழைமைக் கருத்தினின்று முதிர்ச்சிக் கருத்துத் தோன்றும்

பழு – பழம்.

பழம் = கனி

பழு – பழுநு

பழுநுதல் = கனிதல்

பழம் – பயம் = பயன்

பயம் – பயத்தல் = விளைதல்

பய – பயப்பு = பயன்

## முல் :

முல் – மூல் – மூலம்

மூலம் = துளைவழி, வழி, வாயில்

மூலம் – மூலியம்

மூலியம் = வாயில். எ–டு : யார் மூலியமாய்ச் செய்தி தெரிவித்தாய்?

முல் – முள் – முள்கு

முள்குதல் = உட்செல்லுதல்

முள் – முண் – மண்

மண்ணுதல் = முழுகுதல்

மண்ணுறுத்தல் = மஞ்சனமாட்டுதல்

முள் – மூள் – மூளி

மூளி = துளையுள்ளது

மூளிக்குடம் = ஒரு மருங்கு வாயுடைந்த குடம்

மூளி – மூழி = உட்குழிந்த அகப்பை

மூள் – மூளை = எலும்பின் உள்ளீடு; மண்டையின் உள்ளீடு.

மள் – முழு – முழுகு

முழுகுதல் = குளித்தல்

முழுகு – முழுசு

முழுசுதல் = உட்புகுதல்

முழுசு – முழுது – முழுத்து

முழுத்துதல் = அமிழ்த்துதல்

முழுகு – முழுசு = முழுவதும்

முழு – மூழ்

மூழ்த்தல் = மூழ்கச் செய்தல்

முழுகு – மூழ்கு

மூழ்குதல் = புகுதல்

முழுத்து – மூழ்த்து

மூழ்த்துதல் = ஆழ்த்துதல்

முழுகு – முழுங்குதல் = முழுகுதல்

முழுங்கு – விழுங்கு

விழுங்குதல் = பெரும்பாலும் மெல்லாமலும் வாய்க்குள் வைத்திராமலும் அல்லது பல்லிற்படாமலும் வயிற்றிற்குள் ஒரேயடியாய்ப் புகுத்திவிடுதல்.

முழுங்கு – முங்கு

முங்குதல் = நீருள் முழுகுதல்

முங்கு – முங்குளிப்பான் – முங்கிக் குளிப்பான் = நீரில் மூழ்கி இரை தேடும் உள்ளான் என்னும் பறவை

முழுகு – முழுக்கு = குளிப்பு

முழுக்காடுதல் = எண்ணெய்த் தேய்த்துக் குளித்தல்

முழுக்காளி = முத்துக்குளிப்போன்

முழுக்கு – முக்கு

முக்குதல் = நீருள் முழுகுவித்தல்

முக்குவன் = நுளையன், முத்துக் குளிப்பவன்

முழு – முகு – முக

முகத்தல் = நீரைக் குழித்தல் அல்லது துளைத்தல் போல மொள்ளுதல்

முக – மோ

மோத்தல் = மொள்ளுதல்

முக – முகவை = மொண்டு கொள்ளுதல்

முக – முகில் = கடல் நீரை முகந்து கொள்ளுவதாகக் கருதப்பட்ட மழைவான்.

முழு – முழை

முழைத்தல் = துளைத்தல்

முழைதல் = நுழைதல்

முழை = குகை

முள் – மள் – மடு = ஆற்றிடைப் பள்ளம்.

மடுத்தல் = வாயில் வைத்தல், உண்ணுதல்

மடுப்படுத்தல் = ஆழ்ந்திருத்தல்.

மடு – மடம் = கோழிகளை உள்ளடைக்கும் சுடுமண் குடாப்பு.

மடம் = இரப்போர்க்கு உணவளிக்குமிடம் அல்லது இரப்போர் உண்டுறையுமிடம்.

மடு – மடை = தொளை, வாய்

மடைத்தொழில் = சமையல் வேலை

மடு – மடம் – மாடம் = சுவரிற் பொத்தகம் முதலியன வைக்க உதவும் புரை அல்லது புரைவரிசை (shelf).

மாடக்குழி = சுவரில் எண்ணெய் விளக்கு வைக்கும் சிறுபுரை.

மாடப்புறா = மாளிகை, கோயில், கோபுரம், பள்ளி வாசல் முதலியவற்றின் சுவர்ப்புரைகளில் வளர்க்கப்படும் பெரும் புறா வகை.

முள் – மொள் – மொண்டான் = நீர் மொள்ளுங் கலவகை.

மொள் – மொண்டை – மொந்தை = மொள்கலம்.

மொண்டை – மண்டை = நீர் மொள்ளும் மட்கலம்.

மொள் – மோள் – மோளுதல் = துளையினின்று சிறுநீர் பாய்ச்சுதல் அல்லது கழித்தல்.

மோண்டுகொளி = அடக்கும் ஆற்றலின்றிப் படுக்கும் பாயிலும் உடுக்கும் உடையிலும் மோண்டுகொள்ளும் பையன் அல்லது பெண்பிள்ளை.

மோள் – மோட்டிரம் – மோத்திரம் = மூத்திரம்

## 16. தெளிவுப் பொருள் : வேர் – துல்

துல் – துலங்கு

துலங்குதல் = ஒளிர்தல்

துலக்கு – துலக்கம் = ஒளிர்வு

துல் – துல்லியம் = தூய்மை

துல் – தெல் – தென் – தென்பு = தெளிவு

தெல் – தெள் – தென் – தேன் = பிழிந்தெடுத்துத் தெளிந்த மது.

தேன் – தேம் = தேன்

தேம் – தீம் = இனிமை

தீம் – தீவு = இனிமை

தீவு – தீவிய = இனிய

தீம்தீம் – தீந்தீம் – தீந்தீ – திந்தி – தித்தி – தித்திப்பு = இனிமை

தேன் – தென் = இனிமை

தென் – தின் – இன் = இனிமை

இன் – இனி – இனிமை = தித்திப்பு

தெல் – தெர் – தெரி

தெரிதல் = கண் காணுதல்

தெரி – தெரித்தல் = வெளிப்படுத்துதல்

தெரி – தெரிக்கல் = விளத்தமாய்ச் சொல்லுதல்

தெரி – தெரியல் = தெரிந்தெடுத்தல்

தெர் – தெருள்

தெருள்தல் = தெளிதல்

தெரு – தேர்
தேர்தல் = உள்குதல், ஆராய்தல்
தேர் – தேர்ச்சி = ஆராய்ச்சி
தெள் – தெள்ளியர் = தெளிந்த அறிவினர்
தெள் – தெட்பம் = தெளிவு
தெள் – தெட்ட = தெளிவான
தெட்ட – தெட்டவர் = தெளிந்த அறிவினர்
தெள் – தெளி – தெளிவு
தெளிதல் = ஒளிர்தல்
தெள் – தெறு – தெற்று
தெற்று – தேற்றம்
தெற்றென – தெளிவாக
தெறு – தேறு
தேறுதல் = நீர் தெளிதல்
தேறுதலை = ஊக்குவிப்பு
தேறு – தேறல் = தெளிந்த கள்
தேறு – தேற்றம் = தெளிவு
தேற்றன் = மெய்யறிஞன்
தெள் – தெடு
தெடுதெடுவெனல் (தெளிந்து) நீர்ப்பதமாயிருத்தல் (நெல்லை வழக்கு)
தெடு – தெடாரி = தெளிந்த கண்ணையுடைய பறை வகை
தெடாரி – தடாரி = தெளிந்த கண்ணையுடைய பறை வகை

## 17. தோன்றற் பொருள் : துல், குல்

நுல் – நல் – நன் – நனை
நனைதல் = தோன்றுதல்
நனை = அரும்பு
நுல் – நுரு = இளம்பிஞ்சு
நுரு – நொரு = சிறு பிஞ்சு
நுல் – நல் – நறு – நாறு
நாறுதல் = தோன்றுதல்.
நாறு = முளை
நாறு – நாற்று = இளம் பயிர்
நுல் – நுன் – நுன்னி – நன்னி
நன்னி = மிகச் சிறியது
நன்னிப்பயல் = சிறுபையன்
நுன் – நுனி
நுனி – நுனை. உச்சி
நுனித்தல் = கூராக்குதல்
நுனிப்பு = கூர்ந்தறிகை
நுனி – நுதி = நுனி
நுனி – நுனை – நுனி – முனை
நுல் – நொல் – நொற்பம் = நுட்பம்

நுல் – நூல் (எள்) – நோல் – நோலை = எள்ளுருண்டை
நூல் – நூ = எள்
நூ – நூவு = எள்
நூவு நெய் = எள் நெய்
நூவு – நுவ்வு – நுவு – நுவல்
நுவலுதல் = நுண்ணிய அறிவுச் செய்தியைச் சொல்லுதல்.
நுவல் – நூல் = ஒரு பொருள் பற்றிய அறிவுத் திரட்டு
நுவல் – நுவள் – நுவண் – நுவணம்
நுவணம் = இடித்தமா
நுவணை = நுட்பம்
நுவணை – நுணவை = எள்ளுருண்டை
நுவல் – நுவறு
நுவறுதல் = பொடியாக அராவுதல்
நுவ்வு – நவ்வு – நவ்வி = மான்குட்டி
நுவல் – நவல் – நவர் – நவரை = சிறுகாய் வாழை வகை
நுல் – நூல் = நுண்ணிய இழை
நூல் – நூற்றல் = பஞ்சிழை உருவாக்குதல்
நுல் – நுள் – நுள்ளுதல் = கூரிய உகிரால் கிள்ளுதல்
நுள் – நுள்ளல் = சிறிய உலங்கு
நுள்ளான் = கடிக்குஞ் சிற்றெறும்பு
நுள்ளல் – நொள்ளல் = சிறிய உலங்கு
நுள் – நொள்ளை = சிறிய கைக்குழந்தை
நுள் – நுளம்பு = சிறிய உலங்கு
நுல் – நொள் – நொளுவல் = முற்றாநிலை
நுள் – நுழு – நுகு – நுகும்பு = பனங்குருத்து
நுகு – நுங்கு = இளம் பனங்காய்
நுகு – நகு – நாகு = இளமை
நுழு – நுழை
நுழைதல் = நுண்மையாதல்
நுள் – நுண் – நுண்மை = சிறியது
நுள் – நுட்பு – நுட்பம் = நுண்மை
நுண் – நுணங்கு = நுண்மை
நுண் – நுணாவு
நுணாவுதல் = நுனிநாவால் தடவியுணர்தல்
நுண் – நுணித்தல் = பொடியாக்குதல்
நுண் – நுணுகு – நுணுங்கு = பொடி
நுள் – நுறு – நுசு
நுசுப்பு = மகளிர் சிற்றிடை
நுசு – நுசி – நொசி – நொசிவு = நுண்மை
நுள் – நுறு – நூறு. நூறுதல் = தூளாக்குதல்
நூறு – நீறு = துகள்
நுறு – நுறுங்கு
நுறுங்குதல் = பொடியாதல்

நுறுங்கு – நறுங்கு

நறுங்குதல் = நொறுங்குதல்

நறுங்கு – நறுக்கு

நறுக்குதல் = நொறுக்குதல்

நுறு – நொறு – நொறுங்கு

நொறுங்குதல் = பொடியாதல்

நொறுங்கு = பொடி

நொறு – நொறுவை = பல்லால் நொறுக்கியுண்ணும் சிற்றுண்டி

நுள் – நொள் – நொய் = அரிசி நொறுக்கு

நொய் – நொய்மை – நொய்ம்மை = சிறுமை

நொய் – நொய்ய = நுட்பமான

நொள் – நோள் – நோட்கு – நோக்கு = கூர்த்த பார்வை

நோள் – நோடு – நோடுதல்

நோடுதல் = ஆய்ந்து பார்த்தல்.

நோடு – நோட்டம் = பொன் வெள்ளிக் காசுப் பண ஆய்வு; நிலைமை அறிதல்

நோடு – நாடு

நாடுதல் = ஆராய்தல்

நாடு – நாட்டம் = ஆராய்ச்சி

குல் :

தோன்றற் கருத்தினின்று இளமை, மென்மை, சிறுமை, குறுமை முதலிய கருத்துகள் கிளைக்குமென்பது பாவாணர் கொள்கையின் அடிப்படை

குல் – குன் – குன்னி = சிறு பிள்ளை, சிற்றுயிரி, சிறு பொருள்

குல் – குள் – குளகு = இளந்தழை

குளகு – குளகன் = இளைஞன்

குள – குழ = இளமையான

குழ – குழவு = இளமை

குழவு – குழவி = இளஞ்சேய்

குழ – குழந்து – குழந்தை = கைப்பிள்ளை

குழ – குழகன் = இளைஞன்

குழமகன் = இளம் பருவத் தலைவன்

குழ – குழை = இளந்தளிர்

குழ – குழலை – குதலை = மழலைச் சொல்

குழ – குழந்து – கொழுந்து = இளந்தளிர்

கொழுந்து – கொழுந்தாடை = கரும்பின் நுனித்தாழை

குழ – குத – கத – கதலி – கசளி = கெண்டைக் குஞ்சு

குல் – குர் – குருகு

குருத்தல் = தோன்றுதல்

குரு – குருத்து = இளந்தாள், இளந்தோகை

குருத்து – குருந்து = குழந்தை

குருந்து – கருந்து = மரக்கன்று

குரு – குருகு = பனங்குருத்து

குருகுக் கிழங்கு = இளங் கிழங்கு

குரு – குரும்மை = தென்னை பனைகளின் இளங்காய்

குரு – குருள் – குருளை = குழந்தை; நாய், பன்றி, புலி முதலியவற்றின் குட்டி.

குரு – குருமன் = ஒரு சார் விலங்கின் இளமைப் பெயர்

குரு – கரு = சூல்

குள் – குட்டு – குட்டம்

குட்டம் = குரங்குக்குட்டி

குட்டன் = சிறுபிள்ளை

குட்டி = நாய், பன்றி, புலி, முயல், நரி ஆகியவற்றின் குட்டி.

குள் – குய் – குய்ஞ்சு – குஞ்சு = பறவையின் இளமைப் பெயர்

குஞ்சு – குஞ்சான் = குழந்தை அல்லது சிறுவன் ஆண்குறி

குஞ்சு – குச்சு – கொச்சு = சிறியது

கொச்சு – கொச்சன் = சிறுவன்

குய் – குயம் = இளமை

குயம் – கயம் = இளமை, மென்மை

குய் – கொய் – கொசு = மிகச்சிறிய ஈவகை

குள் – குண் – குணில் = குறுந்தடி

குதலி – கதலி = சிறுகாய் வாழை. மொந்தன் வாழைக்கு எதிரானது

குரு – குருவி = சிறு பறவை வகை

குள் – குள்ளம் = குட்டம், குறள்

குள் – குள்ளல் = குள்ளம்

குள்ளை = குட்டை

குள் – குள்கு – குடகு – குக்கு

குக்குதல் = உடம்பைக் குறுக்கி வைத்தல்

குக்கல் = சிறுநாய்வகை

குக்கு – குக்கர் = நாய்போல் இழிந்தோர்

குள் – குட்டம்

குட்டம் = குறுமை

குட்டான் = சிறுபடப்பு

குட்டான் – கொட்டான்

கொட்டான் = சிறுநார்ப்பெட்டி அல்லது ஓலைப்பெட்டி

கொட்டான் + காய் + சில்

கொட்டாங்காய்ச்சி = கொட்டாங்கச்சி

குட்டு – குட்டை = குறுகிய உருவம்

குட்டை – கட்டை = உயரக் குறைவு

குரு – குறு = சிறு

குறு – குற்றி = சிறுகுச்சு

குறு + இல் = குற்றில் – குச்சில் = குச்சு

குச்சுவீடு = சிறுவீடு

குறு – குற்று – குற்றம் = குறைவு, தவறு
குறு – குறை – குறைவு = சிறிது
குறு – குறுமகன் – குறுமான் = சிறுவன்
குறு – குறள் = குறுமை
குறள் – குறளி = சிறியவள்
குறள் – குறளை = குள்ளம்; சிறுசொல்
குறு – குறில் = குற்றுயிரெழுத்து
குறு – குறுணி = பதக்கினும் குறைந்த முகத்தலளவு
குறு – குறும்பு = சிறு துணுக்கு, சிறுமலை
குறும்பாடு = குறும்பர் மேய்க்கும் ஆடு
குறும்பன் = குறும்புத்தனமுள்ளவன்
குறு – குறுகு
குறுகுதல் = குட்டையாதல்
குறு – குறுமை = குட்டை
குறு – குறுக்கம் = குறுமை
குறு – குறுவை = குறுகிய காலத்தில் விளையும் நெல்
குறு – குறுமல் = பொடி
குல் – குன் – குன்று
குன்றுதல் = குறைதல்
குன்று = சிறுமலை
குல் – குன் – குன்னு
குன்னுதல் = குக்குதல், உடம்பு சுருங்குதல்
குல் – குன்னா
குன்னாத்தல் = உடம்பு குளிரால் ஒடுங்குதல்

## 18. நீட்சிப் பொருள் : வேர் – நுல்.

நீட்சிக் கருத்து நெகிழ்ச்சிக் கருத்தின் வழிநிலையென்பதும் இதன் வகைப்பட்டனவே நிற்றற்கருத்தும், நடத்தற் கருத்துமென்பதும் பாவாணரின் அடிக்கொள்கை.

நுல் – நெல் – நெள் – நெடு – நெகிழ் – (நெகிள்) – நீள்
நீள் = ஈயமும் மெழுகும் போல்வன உருகியும் களியும், களிமண்ணும் போல்வன நீர் கலந்தும் நெகிழும்போது நீளுதல் காண்க.
நீள் – நீடல் = நீளுதல்
நீள் – நீளம் = நெடியது
நீள் – நீளி = நெடியது
நீள் – நீளை = காற்று (நீண்டு இயங்குவது)
நீள் – நீளல் – நீழல் = காற்று
நீள் – நீட்சி – நீட்சிமை = நீட்டம்
நீள் – நீட்பு – நீட்பம் = நீளம்
நீள் – நீண்டவன் = திருமால்
நீள் – நீண்
நீணுதல் = நெடுந்தொலைவு செல்லுதல்
நீள் – நீட்டு
நீட்டுதல் = நீளச் செய்தல்
நீள் – நீட்டல் = நீளச் செய்தல்
நீள் – நீட்டு
நீட்டுதல் = நீளச் செய்தல்
நீட்டு – நீட்டம் = நீட்டுகை
நீள் – நீட்டு = நீளவாட்டு
நீள் – நீட்டி
நீட்டித்தல் = நீளச் செய்தல்
நீள் – நீடு
நீடுதல் = நீளுதல்
நீடு – நீடி
நீடித்தல் = நீளுதல்
நெள் – நெடு
நெடு = நீண்ட
நெடு – நெடுமை = நீளம்
நெடு – நெடுமன் = நீண்டது
நெடு – நெடுவல் = நெடிய ஆள்
நெடு – நெடுகு.
நெடுகுதல் = நீளுதல்
நெடு – நெடுக்கு
நெடுக்கு = நீட்சி
நெடுக்கம் = நெடுமை
நெடு – நெடுப்பு – நெடுப்பம் = நீட்சி
நெடுநெடுத்தல் = மிக நீண்டிருத்தல்
நெடி – நெடிப்பு = நெடுநேரம்
நெடி – நெடிது = காலத்தாழ்த்து
நெடி – நெடியோன் = நெட்டையன்; திருமால்
நெடு – நெடில் = நீளம்
நெடு – நெட்டு = நெடுமை
நெட்டு – நெட்டம் = நெடுமை
நெட்டு – நெட்டங்கம் = செருக்கு
நெட்டு – நெட்டாங்கு = நீளவாட்டு
நெட்டு – நெட்டில் = மூங்கில்
நெடு – நடு
நடுதல் = மோனோக்கிய நீளவாட்டில் ஊன்றுதல்
நடு – நடவு = நாற்றைப் பிடுங்கி நடுகை
நீள் – நீர் = நீண்டு செல்லும் புனல்
நீர் – நீரம் = புனல்
நீர் – நீர்மை = நீரின் தன்மை
நீர் – நீல்
நீலம் = நீர்நிறம், கருமை நிறம்.
நீலம் – நீலன் = காரி (சனி)

நீல் – நீலி = காளி

நீள் – நிள் – நில்

நிற்றல் = உடம்பு முழுதும் நெடிதாக நிமிர்ந்திருத்தல்

நில் = பொறுத்து நிற்றல்.

நில் – நில – நிலவு

நிலவுதல் = நிலைத்திருத்தல்

நில் – நிலை = நிற்கை

நிலை – நிலையம் = தங்குமிடம்

நிலை – நிலைத்தல் = ஆற்றல்

நிலை – நினை

நினைத்தல் = ஒன்றை மனத்தில் நிலைக்கச் செய்தல்

நில் – நிற்பு = நிற்றல்

நிற்பு – நிற்பாட்டுதல் = நிறுத்தி வைத்தல்

நில் – நிற்றம் = நிலைப்பு

நிற்றம் – நிச்சம் = என்றும், எப்போதும்

நிச்சம் – நித்தம் = என்றும்

நித்தம் – நித்தன் = கடவுள்

நில் – நிலு – நிலுவை = தங்குகை

நிலு – நிறு

நிறுத்தல் = நிற்கச் செய்தல்

நில் – நிறு – நிறுத்தல் = எடை நிற்கச் செய்தல், தீர்மானித்தல்

நிறு – நிறை

நிறைவை = எடை பார்ப்பு, எடை

நிறு – நிறுவனம் = தொழிற்சாலை, கல்விச்சாலை, ஆய்வுக்கூடம் முதலியவற்றின் தோற்றுவிப்பு.

நெடு – நெட – நட

நடத்தல் = நிற்கும் இடத்தை விட்டு நீளுதல் போல் காலடி வைத்துச் செல்லுதல்.

நட – நடக்கை = செய்கை

நட – நடத்தை = ஒழுக்கம்

நட – நடை = நடந்து செல்கை

நட – நடத்து

நடத்துதல் = நடக்கச் செய்தல்

நட – நடாத்து = நடத்துதல்

நட – நடைபடி = நடத்தை

நடைபடிகள் = செயல்கள்

நடபடி – நடபடிக்கை = அறமன்றச் செயல்

நடபடி – நடவடி

நடவடி = நடபடிக்கை

நடவடிக்கை = நடத்தை, செயல்

## 19. நெகிழ்ச்சிப் பொருள் : வேர் – நுல்

துளைபடும் பொருள்கள் நெகிழ்விற்குரியன வாதாகையால் நெகிழ்ச்சிப் பொருள் துளைப் பொருளொடு உறவுடையதென்பது பாவாணரின் கொள்கை.

துள் – தொள் – தொள – தொளர் – தளர் என்பதைத் துளைக் கருத்திற்கும் நெகிழ்ச்சிக் கருத்திற்கும் உள்ள உறவிற்குப் பாவாணர் ஒப்புநோக்காய்க் காட்டுவார்.

நல் – நலிதல் = மெலிதல், சரிதல், தோற்றல், அழிதல்

நல் – நால்

நாலுதல் = சரிந்து அல்லது தளர்ந்து தொங்குதல்

நுல் – நுள் – நொள் – நொள்கு

நொள்குதல் = சுருங்குதல்

நொள்கு – ஞொள்கு

ஞொள்குதல் = மெலிதல்

நொள் – நெள் – ஞெள்

ஞெள்ளல் = சோர்வு

நொள் – நொள

நொளநொளத்தல் = குழைதல்

நுள் – நள்

நளுநொளுத்தல் = குழைதல்

நொள் – நொளில் = சேறு

நொள் – நொளில் – நொறில் = நுடக்கம்

நொள் – நொளுப்பு = வேலை குழப்புகை

நொள் – நொடு – நொடி

நொடித்தல் = கட்டுக்குலைதல்

நொடு – நொது

நொதுத்தல் = தளர்தல்

நொது – நொந்து

நொந்துதல் = அழிதல்

நொந்து – நந்து

நந்துதல் = கெடுதல்

நந்து = மெல்லிய சதையுள்ள நீருயிரி

நந்து – நத்து – நத்தை = மெல்லிய சதையுள்ள ஊமைச்சி, அது இருக்கும் கூடு

நொது – நொதி = சேறு

நந்து – நத்தம் = சங்கு

நெள் – நெழு = நெகு

நெகுதல் = கழலுதல்

நெகு – நெக்கு

நெக்குவிடுதல் = பொருத்துவாய் விடுதல்

நெகு – நெகிழ்

நெகிழ்தல் = பிணிப்புத் தளர்தல்

நெகு – நகு – நங்கு – நாங்கு

நாங்குதல் = திடங்குன்னுதல்
நாங்குளு – நாங்குழு = தளர்ந்து நீண்டு இயங்கும் புழு
நாங்குழு – நாங்கூழ் = நாக்குப் பூச்சி
நால் – நால்கு – நாகு – நாக்கு
நாக்கு = வாய்க்குள் தொங்கும் உறுப்பு
நாகு – நாவு = நாக்கு
நாவு – நா = நாக்கு
நொள் – நொய்
நொய்ய = மென்மையான
நொய்யவன் = புல்லன்
நொய் – நொசு
நொசநொசத்தல் = சோறுங் கஞ்சியும் கட்டுவிட்டு நொந்து போதல்
நொய் – நோ
நொதல் = சோறு நொந்து போதல்
நொசு – நசு
நசுநசுத்தல் = குழைதல்
நசுநசெனல் = மழை விடாது தூறல்
நொசு – நொசி
நொசிதல் = நைதல்
நசு – நச்சு
நச்சுமழை – விடாத சிறு தூறல்
நொய் – நை
நைதல் = நசுங்குதல்
நையப்புடை = உடம்பு தளர அடித்தல்
நைவருதல் = இரங்குதல்
நை – நயி – நசி
நசிதல் = நசுங்குதல்
நசி – நசுங்கு
நசுங்குதல் = நைந்து போதல்
நை – நைஞ்சு
நைஞ்சுபோதல் = நைந்து போதல்
நைஞ்சு – நஞ்சு = உட்கொண்ட வுயிரிகளை நைவிக்கும் அல்லது கொல்லும் பொருள்.
நஞ்சு – நஞ்சன் = தீயவன்
நைந்தான் – நைந்தவன் = மெலிந்தவன்
நைந்து = மனமிரங்கி

## 20. நோதற் பொருள் : வேர் – நுல்

நோதற்கருத்தைத் தளர்ச்சிக் கருத்தோடு உறவுபடுத்தித் தளர்ச்சிக் கருத்தில் கட்டுக் குலைவுக் கருத்தும், கட்டுக் குலைவுக் கருத்தில் வலுக்குறைவுக் கருத்தும், வலுக்குறைவுக் கருத்தில் வருந்தற்கருத்தும் வருந்தற் கருத்தினின்று நோயுறுதற் கருத்தும் கிளைக்குமென்பது பாவாணர் கொள்கை. இவ்வனைத்துக் கருத்தினின்றும் அழிவுக் கருத்து பிறக்குமென்பார்.

நுல் – நல் – நலி
நலிதல் = வருந்துதல்
நலிவு = துன்பம்
நுல் – நுள் – நொள்
நொள்ளாப்பு = வருத்தம்
நொள் – நொய்
நொய்தல் = வருந்துதல்
நொய் – நய் – நை
நைதல் = வருந்துதல்
நய் – நை
நைகரம் = துன்பம்
நைநை
நைநையெனல் = குழந்தை விடாது அழுது தொந்தரவு செய்தல்
நை – நய் – நசு – நசல் = நோய்
நசலாளி = நோயாளி
நசிறாண்டி = தொந்தரவு செய்பவன்
நசு – நச்சு = தொந்தரவு
நொய் – நொசி – நொசிதல் = வருந்துதல்
நொள் – நெள் – (நெழு) – நெகு – நெகுதல் = வருந்துதல்
நொள் – நொது – நொந்து – நந்து – நத்தம் = அழிந்து போன ஊரிடம்; பாலை நிலத்தூர்.
நொள் – நோள் – நோளை = நோய்நிலை
நோள் – நோய் = நோவு
நோய்முகன் = துன்பம் செய்யும் காரி.
நோய் – நோ
நோதல் = நோவுண்டாதல்
நோ – நோதிறம் = முல்லை, பாலைத் திணைகட்குரிய துயரப் பண்வகை
நோ – நோக்காடு = நோவு
நோ – நோப்பு – நோப்பாளம் = வருத்தம்
நோ – நொ
நொதல் = துன்புறுதல்
நொ – நொம்பு – நொம்பலம் = துன்பம்
நொ – நொவ்வு – நொவ்வுதல் = நோதல்; துன்பம்

## 21. பருத்தற் பொருள் : வேர் – புல்

பொருந்தற் கருத்தினின்றே பருத்தற் கருத்துப் பிறக்குமென்பது பாவாணரின் வரையறை.

புல் – பல் = பல
பல்காற் பறவை = வண்டு

புல் – பல் – பல்கால் = பல சமையம்.
பல் – பன்மை = ஒன்றிற்கு மேற்பட்ட தொகைப் பருமை.
பல் – பல்லம் = ஒரு பேரெண் (திவா)
பல் – பல்லவம் – பல்லவி = திரும்பத் திரும்பப் பலமுறை பாடப்படும் கீர்த்தனை, முதலறுப்பு.
பல் – பல்லக்கு = சிவிகையினும் பெரிய (தூக்கிச் செல்லும்) ஊர்தி.
பல் – பல = ஒன்றுக்கு மேற்பட்டவை
பல – பலவு = பலா
பல் – பர் – பரு = பெரிய
பர் – பரு – பருக்கை = பெரியது; சோறு
பரு – பருப்பு = அரிசியினும் பெரிய கூலப்
பரு – பருமை = பெரியது
பெரு – பெருகு
பெருகுதல் = மிகுதல்
பெருகு – பெருக்கு
பெருக்கல் = ஆக்கமடையச் செய்தல்
பெருக்கு – பெருக்கான் = பெருச்சாளி
பரு – பருமி – பருமிதம் – பெருமிதம் = மேன்மை
புல் – புது – புதல் = செறிந்த தூறு
புதல் – புதர் = தூறு
புது – புதா = பெருநாரை
புதா – புதை = அம்புக்கட்டு
புது – பூது – பூதம் = பருத்தது
பூதம் – பூதவம் = மிகப் பெரியதாய்ப் படரும் அல்லது பூதம் குடியிருக்கும் ஆலமரம்
பூதன் – பூதல்
பூதலித்தல் = உடல் பருத்தல்
புதை – புடை
புடைத்தல் = பருத்தல்
புடை – புடைவி – புடவி = பருத்த ஞாலம்
புடை – புடைவை = சுற்றிக்கட்டும் ஆடை
புடை – புடம் – புட்டம் = புடைத்த பின்புறம்
புட்டம் – புட்டி = பருமை
புடை – புணை – பணை = பருத்தது; பெருமை.
புது – பொது = பலர் கூடிய கூட்டம், மன்று
பொது – பொதுள்
பொதுளுதல் = நெருங்குதல்
பொது – பொதும்பு = சோலை
பொதும்பு – பொதும்பர் = மரச்செறிவு
பொது – பொதி = தொகுதி
பொதி – பொதிகை = பொதியமலை
பொதி + இல் = பொதியில் = அம்பலம்
பொதி – பொதிர் – பொதிர்தல் = வீங்குதல்
பொது – பொத்து – பொத்தை = பருமை.
பொத்து – பொந்து
பொந்து பொந்தெனல் = தடித்திருத்தற் குறிப்பு
பொந்தன் – போந்தன் – போந்தான் = பெருங்கோழி
பொந்து – பொந்தி = பருமை
பொந்தி – போந்தி = வீக்கம்
பொது – பொதை = செடியடர்த்தி
பொது – போதா = பெருநாரை
பொதி – போதி = மலை
புல் – பொல் – பொலி
பொலிதல் = பெருகுதல்
பொலி – பொலிகை = ஊதியம்
பொலிகை – பலிகை = ஊதியம்
பொலி – பொளி – பொழி
பொழிதல் = திரண்டு பொழிதல்
பொல் – பொல்கு – பொலுகு – பொலுகுதல் = அதிகப்படுதல்

## 22. பிளவுப் பொருள் வேர் : விள்

பிளவுக் கருத்தின் கிளைப் பொருள்களாகப் பிரிவு, விரிவு, திறப்பு, வெடிப்பு, நீங்கல், செலவு, வெளிவரல், உள்ளீடின்மை, வெறுமை, வறுமை, பயனின்மை முதலியவற்றைக் கொள்வார் பாவாணர்.
விள்(ளு)தல் = உடைதல். அந்தக் குடம் கீழே விழுந்ததனால் விண்டு போயிற்று
விள் – விள்கை = விட்டகலுகை
விள் – விள்ளல் = பிரிகை
விள் – விள்ளோடன்.
விள்ளோடன் தேங்காய் = சிரட்டையினின்று எளிதாகப் பெயருந் தேங்காய் (யாழ்ப்.)
விள் – விளம்பு
விளம்புதல் = வாய்விட்டுச் சொல்லுதல்
விளம்பு – விளம்பரம் = எல்லார்க்கும் அறிவிக்கை; பறை சாற்றுகை
விளம்பு – விளம்பி = கள்
விள் – விளி – விழி = கண் திறத்தல்
விழிப்பு = கருமத்திற் கவனம்
விள் – விர் – விரி
விரிதல் = பிளத்தல்
விரி – விரிசல் = பிளவு
விரி – விரியல் = மலர்ச்சி
விரி – விரிவுரை = நூலின் விரிவான வுரை
விர் – விரு = நிலவெடிப்பு
விரி – விரல் = அகங்கை பிளந்து விரிந்தாற் போன்ற

வுறுப்பு
விர் – விறு – வீறு
வீறுதல் = பிளத்தல்
வீறு – வீறல் = வெடிப்பு
வீறு – வீற்று = வேறுபடுகை
விறு – வெறு
வெறுத்தல் = பற்று விடுதல்
வெறு – வெறுக்கை = பகைக்கை, அருவருக்கை
வெறு – வெறுப்பு = பகைப்பு
வெறு – வேறு = பிரிந்தது
வேறு – வேற்று = அயலாள்
வேறு – வேற்றுமை = வேறுபாடு
விள் – விய் – வியல் = அகலம்
வியல் – வியலிகை = பெருமை
வியலம் = வியாழம் = பெருங்கோள்
வியல் – வியன் = அகலம்
விள் – விடு – விடர் = நிலப்பிளவு
விடர் – விடரகம் = மலைக்குகை
விடர் – விடரளை = மலைப்பிளப்பிடம்
விடர் – விடரவன் = பகலிற்கண்பிளவுள்ள பூனை
விடு – விடுத்தம் = தடவை
விடுத்து – விடுத்து = அடிக்கடி
விடு – விடுதி = தங்குமிடம்
விடு – விடை = அனுப்புதல், வெளிப்படுத்துதல்
விடு – வீடு = விடுகை; விடுதலை
விடு – விடுவி
விடுவித்தல் = விடுகதையழித்தல்
விள் – விடு – விடுச்சி – விரிச்சி = தெய்வக்குறி
விள் – விடு – வெடி
வெடித்தல் = பிளத்தல்
விள் – வெள் – வேள் – வேட்டு = வெடி
வெள் – வெளி – வெளிச்சி = காதிற்குள் வெடிக்குங் கட்டி
வெடி – வெடில் = வேட்டு, தீநாற்றம்
வெடில் + உப்பு = வெடிலுப்பு = வெடியுப்பு
விள் – வெள் – வெட்டு
வெட்டுதல் = ஓசைபட ஒரே அறையில் வாளால் அல்லது கத்தியால் பிளத்தல்.
வெட்டு – வெட்டுவான் = பாக்கு வெட்டி
வெட்டு – வெட்டுக்கிளி = செடி கொடிகளில் இலை காய்களை வெட்டும் பெருவெட்டியென்னும் உயிரி.
வெட்டி – விட்டி = சிறுவிட்டி
விட்டி – விட்டில் = மிகச்சிறுவிட்டி
வெட்டு – வெட்டெனல் = கடுமையாதல்

விள் – வெள் – வெளி = திறந்த இடம், புறம், விசும்பு, வானம் (ஒரு பொருள் பிளந்தவுடன் இடையில் வெளியுண்டாகின்றது)
வெளி – வெளித்தல் = மறை வெளிப்படுதல்
வெளி – இடைவெளி = இரு சொல்லிற்கு அல்லது பொருளிற்கு இடைப்பட்ட வெற்றிடம்
வெள் – வெட்ட = வெளியான
வெள் – வெளியாதல் = வெளிப்படுதல்
வெளி – வெளிவு = வெளிப்படை
வெளி – வெளிப்படு – வெளிப்பாடு = வெளிப்படுகை
வெளி – வெளிப்பு = வெளிப்புறம்
வெளி – வெளிவாங்குதல் = மழை பெய்து அல்லது முகில் கலைந்து வானந் திறத்தல்
வெள் – வெள்ளிமை = ஒன்றுமில்லாத திறந்த வெளி.
வெள்ளிடைமலை = திறந்த வெளியிலுள்ள மலை போல மிக விளக்கமாகத் தோன்றும் உண்மை.
வெள்ளிலை – வெற்றிலை = பூ, காய் கனியில்லாத வெறுங் கொடியின் இலை
வெள்ளுழவு = ஒன்றும் விதைக்காது வெறுமையாக உழும் உழவு
வெள்ளோட்டம் = விழாவல்லாத ஒத்திகை; தேரோட்டம்.
வெள் – வேள் – வேளம் – வேழம் = காய்களை உள்ளீடில்லாதவாறு செய்யும் ஒருவகை நோய் அல்லது பூச்சி
வேழமுண்ட விளங்கனி = வேழ (வெறுமை) நோய்ப்பட்ட விளங்கனி
வெள் – வெண்ணோவு = பிள்ளைப் பேற்றிற்கு முன்னுண்டாகும் வெறுநோவு
வெள் – வெண்பாட்டம் = முன்பணமின்றி விடுங் குத்தகை
வெள் – வெறு – வெறுங்கழுத்து = அணியற்ற கழுத்து
வெள் – வெறு – வெறிது = ஒன்றுமின்மை
வெறு – வெற்று – வெற்றாள் = உள்ளீடற்றவன்
வெற்றெனல் = வெறுமையாதற் குறிப்பு
வெறு – வெறி
வெறித்தல் = ஆட்களின்றி வெறுமையாதல்
வெறிச்செனல் = ஆட்களின்றி வெறுமையாயிருத்தற் குறிப்பு
வெறு – வறு
வறுநகை = உள்ளீடற்ற நகை
வெள் – வெள்கு – வெங்கு – வெங்கம் = மிக்க வறுமை
வெங்கன் = வறியன்
விள் – வீள் – வீண் = பயனின்மை
வீண் – வீணன் = பயனற்றவன்

வீண் – வீண்பு – வீம்பு = வீண் புகழ்ச்சி
விள் – விழல் = பயனின்மை
விழலன் = பயனற்றவன்
விழலுக்கிறைத்தல் = வீண் பாடுபடுதல்
விள் – வெள் – வெட்டி = பயனின்மை
வெட்டிப்பயல் = பயனற்றவன்

## 23. பொருந்தற் பொருள் : அம், ஒல், துல், நுல், புல், முல்

பொருந்தற் கருத்தினின்று ஒத்தல், முட்டுதல், சேர்தல், கூடுதல், மணத்தல், கலத்தல், பொருதல் முதலிய கருத்துகளும்; ஒத்தற் கருத்தினின்று அளவிடுதல், மதித்தல், செருக்குதல் முதலிய கருத்துகளும்; முட்டுதற் கருத்தினின்று தடை, முடை, முடிவு முதலிய கருத்துகளும்; சேர்தற் கருத்தினின்று திரளுதல், பருத்தல், விரிதல், மிகுதல், செழித்தல், அழகாதல் முதலிய கருத்துகளும்; பருத்தற் கருத்தினின்று மொத்தமாதல், வலுத்தல் முதலிய கருத்துகளும்; மயக்கக் கருத்தினின்று இருட்சி, கருமை முதலிய கருத்துகளும் கிளைக்குமென்பது பாவாணரியம்.

### அம்

அம் – அம்முதல் = நெருங்குதல்
அம் – அமல்
அமல்தல் = நெருங்குதல்
அம் – அமை = நெருக்கம்
அம் – அமல் = நிறைவு
அம் – அமைவு = பொருந்திகை
அம் – அமர்தல் = பொருந்துதல்
அம் – அம்பு – அம்பர் = ஒருவகைப்பிசின்
அம் – அமைதி = பொருந்திய தன்மை, இலக்கணம்
அம் – அமல் – அமலை = சோற்றுத் திரளை
அம் – அமலை = மிகுதி
அம் – அமள் – அமளி = மிகுதி
அம் – அமை = கெட்டி மூங்கில்
அம் அமலை = படைமறவர் திரண்டு ஆராவாரித்தாடும் ஆட்டம்.
அம் – அம்பு = நிலத்தொடு பொருந்திய நீர்
அம் – அம்மை = அழகு
அம் – ஆம் = அழகு
அம் – அமரல் = பொலிவு
அம் – அம்முதல் = கூடுதல்
அம் – அம்பு – அம்பல் = குவிந்த மொட்டு
அம் – அம்பு – அம்பல் – அம்பலம் = கூட்டம்; கூடுமிடம்
அம்பல் – ஆம்பல் = ஆம்பல் மலர்
அம் – அமை – சமை
சமைதல் = சோறாதல், பெண் பூப்படைதல்
சமையம் = ஆதன் இறைவனை அடையத் தகுதியாகும் ஒழுக்கம் அல்லது நெறி
அம் – அமர் = போர்
அமர்த்தல் = போரிடுதல்
அமர் – சமர் – சமம் = ஒப்பு, போர்
அம் – அம்மி = நெருக்கியரைக்குங்கல்
அம் – அம்முக்கள்ளன் = ஒன்றுமறியாதவன் போல் நடிக்குங் கள்வன்
அம் – அமுக்கடி = நெருக்கடி
அம் – அமுக்கலான் = சிலந்திப் புண்ணை அமுக்கி நலமாக்குந் தழை
அம் – அமிழ்
அமிழ்தல் = நீரில் அமிழ்தல்
அமிழ் – ஆழ் – ஆழம் = மூழ்கும் நிலையதாயிருத்தல்
ஆழ் – அழுந்து – அழுத்து – அழுத்தம் = மூழ்கும் நிலை

### ஒல்

ஒல் – ஒல்லுதல் = பொருந்துதல்
ஒல்லுநர் = நண்பர்
ஒல் – ஒர் – ஒரு – ஓர் – ஓராங்கு = ஒரோவழி
ஒர் – ஒரி
ஒரித்தல் = ஒற்றுமையாயிருத்தல்
ஒர் – ஒரு
ஒருக்குதல் = ஒன்று சேர்த்தல்
ஒரு – ஒருக்க = ஒருமுறை
ஒரு + அந்தம் = ஒருவந்தம் = ஒருதலை
ஒரு + தலை = ஒருதலை = உறுதி; தேற்றம்
ஒரு – ஒருமை = ஒன்று
ஒரு – ஓர் – ஓர்தல் = உற்று நோக்குதல்
ஓர் – ஓரட்டும் = எல்லாம்
ஓர் – ஓர்மை = ஒற்றுமை; துணிவு
ஓர் – ஓரம் = பொருந்திய பக்கம்
ஓர் – ஓரை = விண்மீன் கூட்டம்
ஒல் – ஒன்
ஒன்னுதல் = பொருந்துதல்
ஒன்றுதல் = பொருந்துதல்
ஒல் – ஒன்று = முதலெண்
ஒன்றித்தல் = பொருந்துதல்
ஒல் – ஒன்றி = தனிமை
ஒன்று + மை = ஒற்றுமை = ஒருமையாதல்
ஒன்று – ஒற்று – ஒற்றுதல் = பொருந்தச் சேர்த்தல்

அல்லது தாக்குதல் அல்லது பார்த்தல்.

ஒற்று – ஒற்றடம் = ஒத்தடம்

ஒற்று – ஒத்து = ஊமைக் குழல்

ஒற்று – ஒற்றித்தல் = ஒற்றையாயிருத்தல்

ஒல் – ஒள் – அள் – அள்ளுதல் = செறிதல்

அள்ளல் = நெருக்கம்

அள்ளை = பக்கம்

அள் – அளவு – அளவுதல் = கலத்தல்

அள் – அளவி = கலந்து

அள் – (அய்) – அயல் = அருகு, பக்கம்

அள் – அளை

அளைதல் = கலத்தல், கூடியிருத்தல்

அள் – அளி

அளிதல் = கலத்தல்

அள் – அண்

அண்ணுதல் = கிட்டுதல்

அண் – அண்மை – அண்ணிமை – அணிமை = பக்கம்

அண் – அணன் = பொருந்தியவன்

அண் – அணவு

அணவுதல் = அணுகுதல்

அண் – அணுகு – அணுக்கம் = நெருக்கம்

அண் – அணை

அணைதல் = சேர்தல்

அணைத்தல் = தழுவுதல்

அண் – அணை = அணைக்கட்டு

அண் – அண்டு

அண்டுதல் = நெருங்குதல்

அண் – அடு

அடுத்தல் = நெருங்குதல்

அடு – அடுக்கம் = வரிசை

அடு – அடுக்கல் = பக்கமலை

அடு – அடர் – அடர்த்தி = நெருக்கம்

அடு – அடர் – அடவி = மரஞ்செறிந்த காடு

துல்

துல் – துல்லியம் = ஒப்பு

துல் – துலம் = ஒப்பு

துல் – துலா = நிறைகோல்

துல் – துலை = ஒப்பு

துல் – துன் – துன்னு

துன்னுதல் = பொருந்துதல்

துன் – துன்னியர் = உறவினர்

துன் – துன்னார் = பகைவர்

துன் – துன்னு = உடம்பிற் பொருந்திய தசை

துன் – துன்று

துன்றுதல் = பொருந்துதல்

துன் – தும் – துமல் – துவல்

துவலுதல் = நிறைதல்

துல் – துறு

துறுதல் = நெருங்குதல்

துறு – துறுமு

துறுமுதல் = நெருங்குதல்

துறு – துறை = பலர் கூடுமிடம்

துறு – துறுகல் = திரண்ட கல், பாறை

துறு – துறுத்து

துறுத்தல் = திணித்தல்

துல் – துள் – துண் – துணர் = கொத்து

துண் – துணை = ஒப்பு

துண் – துணங்கை = முடக்கிய இரு கைகளையும் விலாப் புடைகளில் ஒற்றியடித்துக் கொண்டு அசைந்தாடும் கூத்து

துண் – தூண் = கம்பம்.

தூண் – தூணம் = பெருந்தூண்

தூண் – தீண் – தீண்டு

தீண்டுதல் = தொடுதல்

தீண்டு – தீட்டு = தாழ்ந்தவன் உயர்ந்தவனைத் தொடுவதாலேற்படுவதாகக் கருதப் படும் தூய்மைக் குலைச்சல்

துண் – துடு – துடவை = தோட்டம்

துள் – தொள் – தோள் = திரண்ட மேற்கை

தொள் – தொழு = மாட்டு மந்தை

தொழு – தொழுகு = மாட்டுத்தொழு

தொகு – தொழுதி = கூட்டம்

தொழு – தொகு

தொகுதல் = கூடுதல்

தொகு – தொகை = சேர்க்கை

தொள் – தொண் – தொண்ணை = பருமன்

தொடல் – தொடலை = மாலை

தொடு – தொடர்

தொடர்தல் = பின்பற்றுதல்

தொடர் – தொடர்பு = நட்பு

தொடு – தொடங்கு = தொடங்குதல்

தொடு – தொடுக்கு

தொடுக்குதல் = எளிதாக விலகுமாறு தொட்டுக் கொண்டிருத்தல்.

தொடக்கு – துடக்கு – துயக்கு

துயக்குதல் = கட்டுதல்

தொள் – தொழு – தோழன் = கூட்டாளி

தொழு – தொடு – தோடு = திரட்சி
தோடு – தோட்டம் = வளர்ப்புச் செடிகளின் தொகுதி
தோள் – தோய்
தோய்தல் = படுதல்
துறு – தொறு = கூட்டம்
தொறு – தொறுவு = ஆநிரை
தொறு – தொற்று.
தொற்றுதல் = கைகால்களால் பற்றுதல்
தொற்று – தொத்து
தொத்துதல் = பற்றுதல்
தொத்து – தொந்து – தொந்தம் = தொடர்பு
துறு – துற்று – துற்றுதல் = நெருங்குதல்
துற்று – துத்து – துது – துதை
துதைதல் = செறிதல்
துதை – ததை
ததைதல் = நெருங்குதல்
துது – தொது – தோது = தொடர்பு
தும் – திம் – திம்மை = பருமன்
திம் – திமி = பெருமீன்
திமி – திமிசு = தளத்தைக் கெட்டியாக்குங் கட்டை
திமி – திமில் = எருத்தின் திரண்ட முரிப்பு
திம் – திமு.
திமுதிமுவெனல் = மக்கள் திரளாக வந்து கூடுதற் குறிப்பு
துல் – தில் – திர் – திரள்
திரளுதல் = கூடுதல்
திரளை – திரணை = திண்ணை.
திரள் – திரட்சி = கூட்டம்
திரள் – திரட்டு = கூட்டம்
திரள் – திரடு = மேடு (நெல்லை வழக்கு)
திரள் – திரம் = உரம், வலிமை
திரம் – திறம் = உறுதி
தில் – திர் – திரு = திரண்ட செல்வம்
தில் – திண் – திணி
திணிவு = செறிவு
திண் – திண்பு = செறிவு
திண்டு – திண்டி = பருமன்
திண்டு – திட்டு = மேட்டுநிலம், மண் வெட்டிய இடத்தில் வெட்டாது விடப்பட்ட சிறு துண்டு.
திட்டு – திட்டம் = நிலைபேறு
திட்டு – திட்டை = திண்ணை
திடல் – திடர் – மேட்டு நிலம்
திடர் – திடறு – திடாரி = அஞ்சா மனத்தன்.
திடாரி – திடாரிக்கம் = நெஞ்சுரம்
துல் – தெல் – தெறு – தெற்று
தெற்றுதல் = செரிதல்
தெற்று – தெற்றி = திண்ணை

**நுல்**

நுல் – நல் – நள்
நள்ளுதல் = சேர்தல்
நள் – நள்ளி = உறவு
நள்ளுநர் = நண்பர்
நளி = செறிவு, ஓர் உவம உருபு.
நள் – நட்பு = நேயம்; காதல்; உறவு
நள் – நண்
நண்ணுதல் = கிட்டுதல்
நண்ணுநர் = நட்பினர்
நண்மை = அண்மை
நள் – நண் – நணுகு
நணுகுதல் = கிட்டுதல்
நணுகார் = பகைவர்
நளி – நடி
நடித்தல் = ஒத்து நடத்தல்
நடி = ஆட்டம்
நடி – நடம் = தாண்டவம்
நடம் – நடன் = கூத்தன்
நடம் – நட்டம் = நடனம்
நட்டம் – நட்டவம் = நடம் பயிற்றுந் தொழில்
நட்டவம் – நட்டுவம் = நடம் பயிற்றுந் தொழில்
நடி + அனம் = நடனம் = கவின் கூத்து
நடி + அகம் = நாடகம் = நடம்; கதை தழுவி வருங் கூத்து.
நளி – நளினம் = நயச் சொல்
நள் – நய் – நய
நயத்தல் = விரும்புதல்
நயம் = விருப்பம்
நயன் = நன்மை
நயப்பு = விருப்பு
நய – நச – நசை
நசைதல் = விரும்புதல்
நசை = ஈரம்.
நச – நசு – நச்சு
நச்சுதல் = விரும்புதல்
நச்சு – நத்து
நத்துதல் = விரும்புதல்
நுள் – நிள் – நிர் – நிர
நிரத்தல் = நெருங்குதல்
நிர – நிரல் = வரிசை

நிர – நிரை = நிரைதல்
நிரை – நிரைசல் = ஓலை முதலியவற்றால் அடைக்கும் அடைப்பு
நிர – நிரம்புதல் = நிறைதல்
நிரம்பு – நிரப்பு = நிறைவு
நிரப்பு – நிரப்பம் = ஒப்புமை

நிரை – நிறை
நிறைதல் = நிரம்புதல்

நிர் – நெர் – நெரு
நெருநாள் = நெருங்கிய நாள்
நெருநாள் – நெருநல் = நேற்று
நெருநல் – நெருநை = நேற்று

நெருநல் – நெள்ளல் = நேற்று

நெர் – நெரி – நெரிதல் = நெருங்குதல்

நெர் – நெரி – நெரியல் – நெரிசல் = நெருக்கமான கூட்டம்

நெர் – நெரு – நெருங்கு
நெருங்குதல் = கிட்டுதல்

நெரு – நெருள்
நெருள் = திணுங்கிய மக்கள் திரள்

நெர் – நேர்
நேர்தல் = நெருங்குதல்

நேர் – நேர்ச்சி
நேர்ச்சி = நிகழ்ச்சி
நேர்த்தம் = நட்பு
நேர்த்தி = நேரான நிலை
நேர் = ஒப்பு
நேர் – நேரம் = வினை நேருங்காலப் பகுதி.

நெள் – நெய்
நெய்த்தல் = ஒட்டுதல்
நெய் = ஒட்டும் நீர்மப் பொருள்

நெய் – நேய் – நேயம் = நெய் (பிங்.), எண்ணெய்

நேயம் – நேசம் = அன்பு

நேயம் – நேம் – நே
நே = அன்பு, ஈரம்

நெய் – நெய்ஞ்சு – நெஞ்சு = அன்பு செய்யும் மனம்
நெஞ்சம் = மனம்

நெய் – நெய்தல் = நூலை ஆடையாக இணைத்தல்
நெயவு – நெசவு = ஆடை நெய்தல்
நெய்தல் = வறண்ட கோடைக் காலத்தும் குள நிலத்தோடொட்டியிருக்கும் கொடி வகை; அக்கொடி வளருங் கடற்கரை.

## புல்

புல் = புணர்ச்சி

புல் – புல்லி – புலி = முன்னங் கால்களால் தழுவிப் பற்றும் வேங்கை அல்லது சிறுத்தை

புல் – புல்கு
புல்குதல் = அணைதல்
புல் – புலம் = ஐம்பொறிகள் பொருள்களோடு பொருந்தி அறியும் அறிவு.
புலம் – புலன் = பொறியறிவு
புலம் – புலம்பு = நிலம்
புலம்பு – புலம்பன் = அறிவுடைய ஆதன் (ஆன்மா)
புலம் – புலமை = அறிவு
புலம் – புலவு = நிலம், வயல்.
புலம் – புலவன் = அறிஞன்
புல் – புல்ல = பொருந்த

புலம் – புலர்
புலர்தல் = தெளிதல்
புலரி = விடியல்

புல் – புர் – புரை
புரைதல் = பொருந்துதல்
புரை = ஒப்பு
புரைய = ஓர் உவம உருபு

புல் – புள் – புண் – புணர்
புணர்தல் = பொருந்துதல்
புணர்ச்சி = சேர்க்கை
புணர்ப்பு = பனுவல்
புணர்வு = சேர்க்கை
புணரி = கலந்தெழும் பேரலை
புணர்வு = சேர்க்கை

புண் – புணி
புணித்தல் = கட்டுதல்

புணி – பிணி
பிணித்தல் = சேர்த்துக்கட்டுதல்
பிணி = கட்டு
பிணியகம் = காவலிடம்
பிணிகை = கச்சு

புண் – புணை
புணைத்தல் = கட்டுதல்
புணை = கட்டு; தெப்பம்
புணையர் = மாட்டுப் பிணைப்பு

புணை – பிணை
பிணைதல் = சேர்தல்
பிணை = பொருத்து
பிணைச்சு = புணர்ச்சி
பிணையர் = ஒன்று சேர்க்கை

புண் – பூண்

பூணுதல் = நுகத்திற் கட்டப்படுதல்
பூண் = உலக்கை தடி முதலியவற்றின் முனையிற் செறித்த தொடி அல்லது வளையம்
பூணி = நுகம் பூணும் எருது
பூணித்தல் = பொருத்துவித்தல்
பூண் – பூட்கை = மேற்கோள் (பிரதிக்ஞை); கொள்கை
பூண் – பூண்டு = பற்போன்ற பருப்புகள் அல்லது சுளைகள் நெருங்கிப் பொருந்திய பூடுவகை.
பூண்டு – பூடு = வெங்காயம் அல்லது வெள்ளுள்ளி
பூண் – பூட்சி = பொருந்துகை
பூண் – பூட்டு
பூட்டுதல் = பொருத்துதல்
புல் – பொல் – பொரு
பொருதல் = பொருந்துதல்
பொரு = ஒப்பு
பொருமுக எழினி = பொருந்திவரும் இரட்டைத் திரை
பொரு – பொருவுதல் = பொருந்துதல்
பொரு – பொருந்
பொருநுதல் = பொருந்துதல்
பொருந் – பொருந்து = பொருந்துதல்
பொருந்து – பொருத்து
பொருத்து = இணைப்பு; மூட்டு
பொருத்தம் = பொருந்துகை
பொருத்து – பொத்து
பொத்துதல் = பொருத்துதல்,
பொத்து – பொத்தகம் = சுவடி, ஏடுகளின் சேர்க்கை
பொத்து – பொட்டு
பொட்டு = நெற்றிமூலை மண்டையோட்டுப் பொருத்து;
பொட்டுதல் = பொருந்துதல்.
பொட்டு – பொட்டணம் = சேர்த்துக் கட்டுதல்
பொரு – பொருநன்
பொருநன் = உவமிக்கப்படுவோன்
பொரு – பொருநை = பாறையொடு பொருது (மோதி) இறங்கியோடும் (தாமிரபரணி) ஆறு.
பொரு – பொருள்
பொருள் = பொருந்திய உடைமை
பொருள் – பொருட்டு = கரணியம், மதிப்பிற்குரியது
பொரு – போர்
போர் = பொருந்துகை
போர்த்துதல் = மூடுதல்
போர்க்கதவு = பல பலகைகளை இணைத்த கதவு
பொல் – போல்
போலுதல் = ஒத்தல்
போல = உவம உருபு
போல் – போலி = ஒத்தது

முல்

முல் – முல்லை = குத்தகை
முல்லைக்காரன் = குத்தகைக்காரன்
முல்லை – மொல்லை = மேழம்; பருத்த செம்மறியாட்டுக் கடா.
முல் – மல்
மல் = பருமை
மல்லல் = வளம்
மலைதல் = ஒத்தல்
மலைத்தல் = மாறுபடுதல்
மல் – மல்கு
மல்குதல் = பெருகுதல்
மல் – மல்லாத்தல் = மலர்ந்தாற்போல் முகம் மேனோக்கிக் கிடத்தல்.
மல் – மல்காத்து
மல்காத்துதல் = கொடி முதலியவற்றைப் படரவிடுதல்
மல் – மல்லார்
மல்லார்தல் = பரத்தல், விரிதல்
மல்லாரி = பரந்த பறை வகை
மல்லார் – மலர்
மலர்தல் = மிகுதல்
மலர்த்தல் = மொட்டு விரியச் செய்தல்
மல் – மல்லம் = அகன்ற தட்டம்
மல் – மலி
மலிதல் = விம்முதல், பருத்தல்
மல் – மால் = பெருமை
மால் – மாள் – மாளிகை = மாடமுள்ள பெரு வீடு
மாள் – மாண்
மாணுதல் = மிகுதல்
மாண் – மாட்சி = மகமை
மாண் – மாணம் = மாட்சிமை
மாணம் – மாடம் = வானளாவிய பன்னிலை மாளிகை
மாள் – மாழை = திரட்சி
மல் – மன் – மன்னுதல் = பொருந்துதல்
மன் – மன்று = அவை, அம்பலம், கூடுமிடம்.
மன்றல் = திருமணம்.
மன்று – மந்து
மந்து = ஆன்கணம், ஆன்தொழு, எருமைநிரை, நீலமலைத் துதவர் குடியிருப்பு.
மன் – மனை = பலர் கூடி அல்லது நிலைத்து வதியும் வீடு

மனை – மனைவி = மனையுறையும் வாழ்க்கைத் துணைவி
மன் + திரம் = மந்திரம்
மந்திரம் = வீடு
மன் – மான்
மானுதல் = ஒத்தல்
மான = உவம உருபு
மான் – மானம் = ஒப்புமை, அளவு
மான் – மானித்தல் = நாணுதல்

## 24. முன்மைப் பொருள் : வேர் – முல்

முன்மையென்பது காலமுன் இடமுன் என இருதிறப்படும். காலமுன்மை முதன்மையையும் முதுமையையும் குறிக்கும். முதுமை முதிர்ச்சியில் முற்றும் என்பது பாவாணரின் கொள்கை.

### முல்

முல் – மூலம் = விதையினின்று முன் தோன்றும் முளை
மூல் – மூலி = மருந்தாக உதவும் வேருடைய புல் பூண்டு செடிகொடி;
மூலிகை = மருந்துவேர்
முல் – முன் = முதல் (பிங்.) காலமுன், இடமுன்
முன் – முன்னம் = முன்னர்; முன் – முன்னை = பழைமை
முன்னன் = அண்ணன்
முன்னவன் = தேவன்
முன்னவள் = அக்கை
முன்னோன் = கடவுள்
முன் – முன்னு
முன்னுதல் = எதிர்ப்படுதல்;
முன்தானை – முன்றானை = சேலைக் கடைமுனை.
முன் – முன்பு = முன்னிடம், பழங்காலம்
முன் – முனை = முன், நுனி, கூர்மை, முகம்
முன் – முன்று – முன்றில் = வீட்டின் முன்னிடம்.
முன்றில் – முற்றில் – முற்றம் = வீட்டு முற்றம்.
முன்று – முந்து
முந்துதல் = முற்படுதல்,
முந்து = முற்காலம்.
முந்து – முந்தன் = கடவுள்
முந்துநூல் = முன்னூல்
முந்தி = முன்னிடம், முன்றானை
முந்து – முந்தை = முற்காலம்
முந்தை – முத்தை = முன்னிடம்
முந்திசினினோர் = முன்னிடம்
முந்து + இரி = முந்திரி = 1/320 கீழ்வாயிலக்கம்
இரிதல் = விலகுதல், பிளத்தல், கெடுதல்
முன் + துரி = முந்துரி = முந்திரி
முந்திரி = முந்திரிக் கொட்டை. பழத்திற்கு வெளியே முன்தள்ளிக் கொண்டிருத்தலால், அதன் பழமும் மரமும் முந்திரியெனப்பட்டன.
முந்து – முந்தூழ் = பழவினை
முந்து – முது – முதல் = தொடக்கம்
முதல்வன் = தலைவன்
முதலி = தலைவன்
முதல் – முதன்மை = தலைமை
முதல் – முதலிமை = தலைமை
முது – முதார் – முதாரி = முன்கை வளையல்
முந்து – முது – முதுமை = பழமை
முதுகண் = முதன்மைக் களைகண்
முதுகாடு = பழங்காடு
முதுகுடி = குறிஞ்சியும் முல்லையும் இணைந்து வறளும் பாலை நிலத்தில் வாழும் மூத்த மறவர் குலம்
முதுசொல் = பழமொழி
முதுவர் = மூத்தோர்
முது – முதி – முதியன்
முதியன் = மூத்தவன்
முது – முதார்
முதார்மாடு = பால் முற்றிய ஆன்.
முதாரி = முதுமை
முது = பேரறிவு

### உ

சுட்டெழுத்துகள் மூன்று; அவை அ, இ, உ. அவற்றுள் உகரச் சுட்டு முன்மைப் பொருளுக்குரியது. உகரத்தை ஒலிக்குங்கால் இதழ்குவிந்து முன்னோக்குவதால் உகரச் சுட்டு முதற்கண் பேசுவோனின் முன்னிடத்தைக் குறித்தது என்பார் பாவாணர்.

உ – உது – உதுக்காண் = என்முன் பார்.
உதா – உதோ
உந்தா – உந்தோ = என்முன்னே
உதோள் – உதோளி = எனக்கு முன்னிடத்தில்
உது – உந்த = எனக்கு முன்னுள்ள
உ – உவன் = எனக்கு முன்நிற்பவன்
உ – ஊ – ஊங்கு = முன்பு
ஊங்கு – ஊங்கண் = முற்காலம்
ஊங்கண் – ஊங்கணோர் = முன்னோர்
உ – உக்கம் = தலை
உக – உகத்தல் = உயர்வு

உக – உகலுதல் = குதித்தல்
உ – உய் – உய்ச்சம் – உச்சம் = உயரம்
உச்சி = முடி, மீமிசை
உச்சாணி = எல்லாவற்றினும் உயரமானது
உ – உத்த – உத்தரம் = உயரத்திலுள்ள விட்டம், உயரமான வடதிசை, வடவனல்
உ –உப்பு = பொருமியெழும் உவர்மண்.
உப்பு – உம்பு – உம்பர் = மேல், மேலே;
உம்பரார் = தேவர்
உம்பர் – உம்பரம் – அம்பரம் = வானம்
உம்பு – உம்பல் = எழுச்சி, யானை
உம் – உமண் = உப்பு மண், உப்பு
உ – உய் – உயரம் = உயர்வு, உயர்த்தி, உயர்ச்சி
உ – உவ் – உவ்வி = தலை
உவண் = மேலிடம்
உவணம் = உயர்ச்சி, பருந்து, கலுழன்
உவணை = தேவருலகம்
உவ் – உவர் = மேலெழும் உப்பு, உவர் நிலம்.
உவப்பு = உயரம்
உவர் – இவர்
இவர்தல் = உயர்தல்
உவ – உவச்சன் = காளியை ஏத்தும் பூசாரி;
உ – உறி = உயரக் கட்டித்தூக்கும் தொடர்.
உ – உன்னுதல் = மேலெழுதல்
உ – ஊ – ஊர்தல் = ஏறிச் செல்லுதல்
ஊர்தி = ஏறிச் செல்லும் விலங்கு
உ – ஒ
ஒய்யாயம் = உள்ளத்துயர்ச்சி
ஒயில் = ஒய்யார நடை
உ – ஒ – ஓ
ஓங்குதல் = உயர்தல்.
ஓங்கு – ஓக்கு – ஓக்கம் = உயர்ச்சி, பெருக்கம்.
ஓ – ஓங்கு
ஓங்கல் = உயர்ச்சி, எழுச்சி, மலை, யானை
ஓ – ஓச்சு
ஓச்சுதல் = உயர்த்துதல்
ஓ – ஓவு – ஓவர் = ஒத்தாளர்

உ – அ
உம்பரம் – அம்பரம் = வானம்
அண் = மேல், மேல்வாய்
அண்ணல் = தலைவன், அரசன்
அண்ணாத்தல் = மேனோக்குதல்
அணத்தல் = தலையெடுத்தல்
அணர்தல் = மேனோக்கிச் செல்லுதல்
அணர் = மேல்வாய்ப்புறம்
அணர் – அணரி = மேல்வாய்ப்புறம்.

உ – இ
ஒநோ : புரண்டை – பிரண்டை
உவர் – இவர்
இ – எ – மோனைத்திரிபு
எ – எக்கு
எக்குதல் = வயிற்றுப் பக்கத்தை மேலெழுவித்தல்
எ – எட்டு
எட்டுதல் = உயர்ந்து தொடுதல்
எ – எடு – எடுத்தல் = தூக்குதல்
எ – எண் – எண்ணு
எண்ணுதல் = மேன்மேற் கருதுதல்
எ – எத்து
எத்துதல் = மேனோக்கி வெட்டியிழுத்தல்
எத்து – எற்று
எற்றுதல் = முன் நோக்கித் தள்ளுதல்
எ – எம்பு
எம்புதல் = மேலெழுதல்
எ – எவ்வுதல் = குதித்தெழுதல்
எ – ஏ
ஏ = உயர்ச்சி
ஏங்குதல் = நுரையீரலை எழுவித்துப் பெருமூச்சு விடுதல்
ஏண் = உயர்ச்சி
ஏணி = உயரச் செல்லும் கருவி
ஏண் – சேண் = உயர்ச்சி
ஏண் – ஏணை = தொங்கும் தொட்டில்
ஏ – ஏத்தாப்பு = மேலணியும் வல்லவாட்டு
ஏத்துதல் = உயர்த்திப் புகழ்தல்
ஏ – ஏப்பு – ஏப்பம் = வயிற்றினின்று மேலெழுங் காற்று
ஏர்தல் = எழும்புதல்
ஏ – ஏலுதல் = கையால் அல்லது மனத்தால் ஏந்துதல்
ஏறுதல் = மேற் செல்லுதல்

## 25. மென்மைப் பொருள் வேர் – முல்

மென்மைக் கருத்து இளமைக் கருத்தோடு உறவுடையது. எல்லா வுயிரினங்கட்கும் இளமையிற் பெரும்பாலும் உடல் மென்மையாயிருப்பது இயல்பே. பச்சிளமையிலும், சிற்றிளமையிலும் உடம்பும் தன்மையும் மென்மையாயிருப்பதால் இளமைக் கருத்தினின்று மென்மைக் கருத்துத் தோன்றும். மென்மை அதையுடைய

பொருளுக்கேற்றவாறு பலதிறப்படும் என்பது பாவாணர் கொள்கை.

முல் – மெல் = மெதுவான
மெல் – மென்மை = மெதுவுத்தன்மை
மெல் – மெல்ல = மெதுவாக
மெல்லடை = மெல்லிய அடை
மெல்லணை = மெத்தை
மெல்லரி = உயர்ந்த அரிசி வகை
மெல்லம்புலம்பன் = மணலால் மெல்லிய நெய்தல் நிலம்.
மெல்லி = மெல்லியலுடைய பெண்
மெல்லிது = மென்மையானது
மெல்லியர் = வலிமையில்லாதவர்
மெல் – மென்கண் = இரக்கம்
மெல் – மெல்கு
மெல்குதல் = மெதுவாதல்
மெல் – மெல்லுதல் = உணவை மென்மையாக்கி விழுங்குதல்
மெல் – மெள் – மெள்ள = மெல்ல
மெல் – மெலி – மெலிதல் = வலி குறைதல்
மெலிப்பு = மெலியச் செய்தல்
மெலிகோல் = கொடுங்கோல்
மெலு – மெது
மெதுமெதுத்தல் = மெதுவாயிருத்தல்
மெது – மெத்து – மெத்தை = மெல்லிய தன்மை கொண்ட படுக்கை.
மெதுகு – மெருகு = மெதுவான பளபளப்பு
மெல்கு – மெழுகு = மெதுத்தன்மை

## 26. வளைவுப் பொருள் – வேர் : உல், குல், சுல், துல், புல், முல், வல்.

வளைதற் கருத்து இயன் முறையில் வளைவு, சுருட்சி, வட்டம், வளையம், உருண்டை, உருளை முதலிய பண்புக் கருத்துகளையும், செயன்முறையில் வளைதல், சுருள்தல், திரிதல், சூழ்தல், சுற்றுதல், சுழலுதல், உருளுதல் முதலிய வினைக் கருத்துகளையும் தழுவுமெனக் கொண்ட பாவாணர் இப் பொருளில் ஏழு வேர்களை வரையறுத்துள்ளார்.

**உல்**

உல் – உலம் = உருண்டு திரண்ட கல்
உலம் – உலவு
உலவுதல் = சுற்றுதல்
உலவு – உரவு
உரவுதல் = உலாவுதல்
உல் – உல – உலக்கை = உரலிற் கூலம் குற்றும் உருண்டு திரண்ட கருவி
உல – உலண்டு = உருண்டு நீண்ட கோற்புழு
உல – உலவை = சுற்றி வீசுங் காற்று
உலவு – உலகு = உருண்ட ஞாலம்.
உலம்வரல் – உலமரல் = உழலுதல்
உல் – உலா
உலாவுதல் = சுற்றி வருதல்
உல் – உலுக்கு
உலுக்குதல் = அசைத்தல்
உல் – உள் – உழல்
உழலுதல் = சுழலுதல்
உழல் – உழலை = சுழன்று வரும் செக்குலக்கை
உழல் – உழற்சி = சுழற்சி
உழ் – உழி – உழிதல் = அலைதல்
உழி – உழிதருதல் = திரிதல்
உல் – உர் – உருள்
உருளுதல் – புரளுதல்
உருள் – உருளை = உருளும் சக்கரம்
உருள் – உருண்டை = உருண்டையான பொருள்
உருண்டை – உண்டை = உருள் வடிவம்
உலம் – அலம் = கவைக்கால்; கொடுக்குள்ள தேள்
அலவன் = கவைக்கால் நண்டு
அலம் = சுழற்சி
அலவு – அலகு = வளைந்த குறடு
அல் – அல்லல் = துன்பம்
அல் – அலத்தல் = துன்பம்
அலந்தை = துன்பம்
அல் – அலங்குதல் = அசைதல்
அலங்கல் = அசையும் பூமாலை
அலங்குதல் – அலக்குதல்
அலக்கழிதல் = வருத்துதல்
அல் – அலை – அலைதல் = சுழலுதல்
அல் – அலு – அலுவல் = உடல் தளரச் செய்யும் வேலை
அல் – அலை – அசை
அசைதல் = நுடங்குதல்
அசைவு = சலனம்; தளர்வு
அசை – அசங்கு
அசங்குதல் = அசைதல்
அசங்கு – அசக்கு
அசக்குதல் = அசைதல்
அசை – அயை – அயா

அயர்தல் = தளர்தல்

அயர்தி = சோர்வு

அயர்தி – அசர்தி – அசதி = சோர்தல்

அயை – அயா = தளர்ச்சி, வருத்தம்

அயை – ஆய் = வருத்தம்

ஆய்தல் = அசைதல்

அல் – ஆல்

ஆலுதல் = சுற்றுதல்

ஆல் – ஆலை = சுற்றியாடும் கரும்பாலை

ஆல் – ஆலை – ஆலைமாலை = தொந்தரவு

ஆல் – ஆலா = வட்டமிட்டுப் பறக்கும் பறவை வகை

கம் (நீர்) + ஆலை = கம்மாலை – கமலை = கிணற்று நீரிறைக்கும் காளையேற்றம். முதற் காலத்தில் கமலை சுற்றிவரும் அமைப்பாயிருந்தது.

ஆல் – ஆலத்தி = வழிபாட்டிலும் கண்ணெச்சில் கழித்தலிலும் விளக்கு, முத்து, சோறு முதலியவற்றைச் சுற்றியெடுத்தல்.

ஆலத்தி – ஆளத்தி = மெலிவு சமன் வலிவு என்னும் முந்நிலைகளிலும் இசை வட்டமிட்டுப் பாடுதல்

ஆல் – ஆள் – ஆழி = வட்டம், மோதிரம், சக்கரம்

ஆல் – ஆர் – ஆரம் = பறவைக் கழுத்து வட்டவரி

ஆள் – ஆடு

ஆடுதல் = அசைதல்

ஆடு – ஆடகன் = ஆடுவோன் (நடிகன், வினையாடி)

ஆடு – ஆட்டு – ஆட்டம் = அசைவு.

ஆட்டகம் = நீராட்டுச்சாலை

ஆடு – ஆடை = அசையும் மெல்லிய துணி.

### குல்

குல் – குலவு. குலவுதல் = வளைதல்

குலவு – குலாவு. குலாவுதல் = வளைதல்

குல் – குலுத்தம் = வளைந்த காயுள்ள கொள்

குல் – குலுக்கை = உருண்டு நீண்ட குதிர்

குல் – குள் – குளம் = வளைந்த நெற்றி

குள் – குளி. குளியம் = உருண்டை

குளியம் – குழியம் = வளைதடி

குள் – குழ் – குழலுதல் = சுருளுதல்

குள் – குய் – குயம் = வளைந்த அரிவாள்

குல் – குர் – குரங்கு

குரங்குதல் = வளைதல்

குரவை = வட்டமாக நின்று பாடியாடுங் கூத்து.

குர் – குருள் – குருளுதல் = சுருளுதல்.

குர் – குருகு = வளையல், வளைந்த கழுத்துள்ள நீர்ப்பறவைப் பொது, நாரை.

குர் – குரகம் = நீர்வாழ் பறவைப் பொது, நாரை

குரங்கு – குறங்கு = கொக்கி

குறங்கு – கறங்கு = சுழலும் காற்றாடி

குர் – குறு – குறள் – குறண்டு

குறண்டுதல் = வளைதல்

குறள் – குறடு = வளைந்த பற்றுக்கருவி

குறள் – குறழ்தல் = குனிதல்

குறு – கிறு – கிறுக்கு = தலைச்சுற்று

கிறுகிறுத்தல் = சுற்றுதல்

குல் – குன் – குனி. குனிதல் = வளைதல்

குல் – குள் – குண்டு = உருண்டை

குண்டு – குண்டான் = உருண்ட வடிவான கலம்.

குண்டு – குண்டலம் = வட்டம், வட்டமான ஆகாயம், வளைந்த காதணி.

குண்டலம் – குண்டலி = மூலநிலைக்களம்.

குண்டு – குண்டி = உருண்டு திரண்ட புட்டம்

குண்டு – கண்டு = நூற்பந்து

கண்டு – கண்டி = வட்டமான ஒரு கலம்

கண்டிகை – கடிகை = நாழிகை வட்டில்

குளம் – குணம் – குணகு

குணகுதல் = வளைதல்

குண் – குணவை = நாணத்தால் உடல் வளைகை

குண் – குணகு

குணங்கு = வளைதல்

குணம் – குடம் = உருண்ட கலம்

குடங்கர் = குடம்

குடந்தம் = குடம்

குட – குடம்பை = முட்டை

குடம்பை – குதம்பை = காதுச் சோணைத் துளையை விரிவாக்குவதற்கு இடும் ஓலைச் சுருள் அல்லது சீலைச் சுருள்.

குடம்பை – குரம்பை = பறவைக்கூடு, சிறு குடில்

குடா – குடாப்பு = கோழி

குடாரி = வளைந்த யானைத் தோட்டி

குடிகை = சிறு வீடு

குடிகை – குடிசை = குடில்

குடில் – குடிலம் = வளைவு; மல மந்திரமாகிய ஓங்காரம்.

குள் – கூன் = வளைவு

கூனல் = வளைவு

கூனி = வளைந்த சிறிய இறால் வகை

குள் – கூள். கூளுதல் = வளைதல்

கூளாங்கல் – கூழாங்கல் = தேய்ந்துருண்ட சிறுகல்.

கூள் – கூண்டு = வளைந்த வண்டி முகடு.
கூண்டு – கூடு = வட்டமான நெற்கூடு; பறவைக் கூடு
கூடு – கூடாரம் = வண்டிக் கூண்டு
கூடு – கூடை = வட்டமான மூங்கில் முடைவு.
கூன் – கூர்
கூர்தல் = வளைதல்
குள் – கொள் = வளைந்த காயுள்ள பயற்று வகை
குல் – கொல் – கோல் = உருட்சி
கோலுதல் = வளைத்தல்
கொல் – கொள் – கொட்பு = வளைவு, சுழற்சி
கொள் – கொட்டு = வட்டமான நெற்கூடு
கொட்டு – கொட்டில் = மாட்டுத் தொழுவம்
கொள் – கொள்கு – கொக்கு = வளை கழுத்துப் பறவை
கொக்கி = வளைந்த கொளுவி
கொக்கு – கொக்கரை = வளைவு
கொள் – கொண்டி = கொக்கி, கொளுவி
கொள் – கொடு – கொடுமை = வளைவு
கொடு – கொடி = வளைந்து படரும் நிலைத்திணை வகை
கொள் – கொண் – கொண்பு – கொம்பு = விலங்கின் வளைந்த தலையுறுப்பு; ஊது கொம்பு, கோல்.
கொம்பு – கொப்பு = மரக்கிளை
கொள் – கோள் = சுற்றிவரும் விண்மீன்
கோள் – கோளம் = உருண்டை
கோள் – கோண் = வளைவு
கோணை = வளைவு
கோண் – கோடு
கோடுதல் = வளைதல்
கோட்டம் = கோட்டை

சுல்

சுல் – சுலவு
சுலவுதல் = சுற்றுதல்
சுலவு – சலாவு = வளைந்து வீசும் காற்று
சல் – சில் = வட்டமான துண்டு;
சிலை = வளைந்த வில்
சிலந்தி = வட்டமான நூல் வலையமைக்கும் பூச்சி
சுல் – சுன் – சுன்னம் = சுழி
சுன் – சூன் = வளைவு
சுன் – சின் – சினை = முட்டை
சுல் – சூல் = முட்டை
சுல் – சுள் – சுளுக்கு
சுளுக்குதல் = நரம்புபிசகுதல்
சுளி – சளி
சளிதல் = ஒரு பக்கம் சரிதல்
சுள் – சுழகு – சுழங்கு
சுழங்குதல் – சுழலுதல் = வட்டமாகச் சுற்றியாடுதல்
சுள் – சுழி = சுன்னம்
சுள் – சூள் – சூழ்தல் = சுற்றுதல்
சூழி = வட்டமான நீர்நிலை
சுள் – சுட்டி = குழந்தைகளும் மகளிரும் அணிந்து கொள்ளும் வட்டமான நெற்றியணி
சுள் – சூள் – சூடு
சூடுதல் = வளைதல்
சூடகம் = வளையல்
சுடிகை – சூடிகை = மணிமுடி
சூள் – சாள் – சாளை = வட்டமான குடிசை;
சாளை = வளையம்
சாளை – சாணை = வட்டமான கதிர்ச் சூட்டு
சாள் – சாடு. சாடுதல் = சாய்தல்
சாள் – சாய் – சாய்தல் = வளைதல்
சாய்கடை = வாட்டமாகவுள்ள அங்கணம்.
சாய் – சாயு – சாயுங்காலம் = கதிரவன் சாயும் எற்பாடு
சாய் – சாயம் = சாய்தலால் வரும் சார்பு.
சாயல் = சார்பு
சாயல் மாயலாய் = சாடை மாடையாய்
சாய் – சா – சாதல் = வீழ்தல், இறத்தல்
சாள் – சார் – சார்தல் = ஒன்றோடு வீழ்தல்
சாரல் = மலைச்சரிவு
சாரல் – சாரலன் – சேரலன் = சேரன்
சார் – சேர்
சேர்தல் = சார்தல்
சுல் – சுர் – சுரி. சுரிதல் = சுழிதல்
சுரு – சுருள் – சுருணை
சுருள் – சுருட்டு – சுருட்டை
சுர் – சுரு – சரு – சருவு – சருவம் = சரிவானசட்டி
சருவு – சருகு
சருகுதல் = சரிதல்
சருக்கு – சறுக்கு
சறுக்குதல் = வழுக்குதல்
சருக்கு – சருக்கம் = வட்டம், நூற்பிரிவு
சருக்கரம் – சக்கரம் = வட்டம், உருளி
சக்கரம் – சர்க்கரை = வட்டமாக வார்க்கப்படும் வெல்லக்கட்டி
சக்கு – சக்கடம் – சகடம் = உருள் வண்டி.
சக்கு – சங்கு = வளைந்துள்ள நந்துக்கூடு
சுர் – சூர் – சூர்த்தல் = சுழலுதல்
சூர் – சூர்ப்பு – சூர்ப்பம் = முறம்

சுர் – சுறு – சுற்று
சுற்றுதல் = சுழலுதல்
சுற்று – சுற்றம் = சூழவிருக்கும் உறவினர்
சுறு – சூறு – சூறுதல் = சுழல்தல்
சூறு – சூறை = சுழல்காற்று; சுழல் காற்றுபோல் வாரிக்கொண்டு போகும் கொள்ளை

## துல்

துல் – துலம் – துளம் – துளங்கு
துளங்குதல் = சாய்தல்
துளம் – துடம் – தடம் = வளைவு
துல் – துறள் – துறடு = வளைந்த கத்தி
துறடு – துறட்டி = அங்குசம்
துல் – தில் – திர் – திரி
திரிதல் = வளைதல்
திரி – திரிவு – திரிபு = மாறுபாடு
திர் – திரு – திருகு
திருகுதல் = வளைதல்
திரு – திருப்பு = ஒரு முறை போய் வருகை
திரும்பு – திறம்பு – திறம்புதல் = மாறுபடுதல்
திரு – தெரு – தெரும்
தெரும் வரல் – தெருமரல் = மனச்சுழற்சி
தில் – தெல் – தென்
தென்னுதல் = கோணுதல்
தென் – தென்னை = பெரும்பாலும் கோணிவளரும் மரம்
தென் – தென்கு – தெங்கு = தென்னை
தென் – தென்று – தெண்டு
தெண்டுதல் = நெம்புதல், கிளப்புதல்
தென் – தெறு – தெற்று
தெற்றுதல் = மாறுபடுதல்
தெற்றுமாற்று = ஏமாற்று
தெற்றுவாய் = கொன்னை வாய்
தெல் – தென் = தென்னை மரம் வளர்ந்த தென்றிசை
தென் – தெற்கு = தென்திசை
தென் – தென்மொழி = குமரிக் கண்டத்தின் தெற்கில் தோன்றிய தமிழ்மொழி

## புல்

புல் – புர் – புரள்
புரளுதல் = உருளுதல்
புரள் – புரண்டை – பிரண்டை = திருகலான கொடிவகை
புரள் – புரட்டு. புரட்டுதல் = உருட்டுதல்
புரள் – பிறழ்
பிறழ்தல் = மாறுதல்
புர் – புரி
புரிதல் = வளைதல், விரும்புதல்
புரி = முறுக்கு
புரி – பரி
பரிதல் = (வளைந்து) முறிதல்
பரித்தல் = சூழ்தல்
பரி – பரிகலம் = வட்டில்
பரிகை = மதிலைச் சூழ்ந்த அகழி
பரிகம் = மதில்
பரிசு = வட்டமான கூடை யோடம்
பரிசல் = பரிசு
பரிசை = வட்டமான கேடகம்
பரிதி = வட்ட வடிவு, கதிரவன்
புர் – புரு – புருவு – புருவம் = கண்களின் மேலுள்ள மயிர் வளைவு
புர் – புருள் – புருளை – புருடை = முறுக்காணி
புல் – புள் – பள் – பண்டு – பண்டி = சக்கரம், வண்டி
பண்டி – பாண்டி = கூடாரப்பண்டி, காளை
பாண்டி – பாண்டியன் = காளையொத்த மறவன்.

## முல்

முல் – வில் = வளைந்த வேட்டைக் கருவி
ஒநோ : முடுக்கு – விடுக்கு
வில் – விலா = வளைந்த நெஞ்செலும்பு
முல் – முன் – முனி = வளைந்தவில்
முல் – மூல் – மூலை = கோணம்
முல் – முரு – முரி = வளைவு
முறிதல் = வளைதல்
முரு – முறு – முறுகு
முறுகுதல் = திருகுதல்
முறுகு – முறுக்கு = திரிக்கை
முறுகு – மறுகு
மறுகுதல் = சுழலுதல்
முறு – முறி. முறித்தல் = ஒடித்தல்
முறி = துண்டு
முறி – மறி
மறித்தல் = திருப்புதல்
முறு – முறை = வளைவு
முறை – மிறை = வளைவு
மறு – மாறு
மாறுபடுதல் = வேறுபடுதல்
முல் – முள் – முண் – முண – முணவு – முணங்கு
முணங்குதல் = உள் வளைதல்
முல் – முர் – முரி

முரிதல் = வளைதல்
முண் – மண் – மாண் = மடங்கு
மண் – மணி = வட்ட வடிவான பொருள்
முள் – முட்டு – முட்டை = உருண்டையான முட்டை
முண் – முணம் – முடம் = வளைவு
முடங்கு – மடங்கு
மடங்குதல் = வளைதல்
முண்டு – மண்டு – மண்டி = காலைமுடக்குதல்
மண்டு – மண்டலம் = வட்டம்
முண்டு – முண்டி – முடி
முடிதல் = வளைத்து அல்லது சுற்றிக் கட்டுதல்
முடி = பறவை பிடிக்குங் கண்ணி
முடி – மடி – மடிப்பு = வளைப்பு, திரைப்பு

## வல்

வல் – வல்லி = வளைந்த கொடி
வல் – வலத்தல் = சூழ்தல்
வல் – மல் – மலார் = வளைந்த இளம் போத்து
வல் – வலை = உயிர்களைச் சூழ்ந்து அகப்படுத்தும் கயிற்றுக் கருவி
வல் – வள் – வள்ளம் = வட்ட உண்கலம், வட்டில்.
வள் – வள்ளி = கொடி
வள் – வளவு = வீட்டுச் சுற்றுப்பரப்பு
வள் – வளர் – வளரி = பிறைபோல் வளைந்த வளரித்தடி (boomerang)
வள் – வளாவு – வளாவுதல் = சூழ்தல்
வளா – அகம் = வளாகம் = வளைக்கை, சூழ்கை
வள் – வளை – வளையம் = வட்டம்
வளையல் = வளைவுள்ளது
வள் – வண் – வண்ணம் = வளைத்தெழுதுகை
வண்ணித்தல் = ஓர் ஓவியத்தைப் பல்வேறு நிறங்களாலும் நுண்வினைகளாலும் சிறப்பிப்பது போல் விருப்பமானவற்றைப் பல்வகையால் அழகுபடுத்துதல்.
வண் – வணர். வணர்தல் = வளைதல்
வணரி = வளைதடி
வணங்கு – வங்கு = கப்பலின் விலாச் சட்டங்கள்; எலி முதலியவற்றின் வளை.
வங்கம் = வளைவு
வங்கு – வங்காரி = வளைந்த ஊதுகொம்பு
வங்கு – வாங்கு
வாங்குதல் = வளைத்தல்
வாங்கம் = வளைந்த கடல்
வாங்கறுவாள் = வளைந்த அறுவாள்

வள் – வள்கு – வட்கு
வட்குதல் = வளைதல்
வட்கார் = வணங்கார்
வட்கு – வக்கு = மூத்திரக் குண்டிக்காய்
வக்கா = வளைந்த கழுத்துள்ள நீர்ப்பறவை
வண் – வண்டு = கைவளை; தேன்மலரைச் சுற்றி வட்டமிடும் வண்டாகிய ஞிமிறு
வண்டு கட்டுதல் = பானையின் வாயைச் சுற்றிச் சீலையால் மூடிக் கட்டுதல்
வண்டு – வண்டி = சக்கரம்; சகடம்.
வண்டு – வந்து = வளைந்து வீசுங்காற்று
வட்டு – வட்டில் = பாண்டி விளையாட்டிற்குரிய வட்டச்சில்
வட்டெழுத்து = வளைந்த தமிழெழுத்துருவகை
வட்டணை = வட்டமான மெத்தையணை.
வட்டு – வட்டம் = வளைவு
வட்டமணியம் = நாட்டாண்மை
வட்டணித்தல் = வட்டமாதல்
வட்டு – வட்டித்தல் = வட்டமாதல்
வட்டி = கடகப் பெட்டி
வட்டிகை = வட்டம்; சுற்றளவு
வட்டில் = வட்டமான (வெண்கல) உண்கலம்
வட்டிற்பூ = தாமரைப்பூ
வட்டு – வடை = தேர்ச்சக்கர வடிவாகச் செய்யப்படும் உழுந்து பலகாரம்
வடையம் = நெல்லிக்கனி முதலியவற்றை அரைத்துத் தட்டிய வடை.
வட்டம் – வடம் = வட்டமாகப் படரும் ஆலமரம்
வடகம் = தாளிப்புத் துணைக் காரணமாக அரைத்த மாவுடன் கறிச் சரக்குகள் சேர்த்து வெயிலில் உலர்த்திய நறுமண வுருண்டை
வள் – வர் – வரி
வரிதல் = எழுதுதல்
வரி = கோடு
வரிசை = ஒழுங்கு
வரிச்சு = கோடுபோல் நீண்ட கட்டு
வரி + அணம் = வரணம் = சூழ்கை
வரி – வரந்து – வரந்தை = எல்லை, ஓரம்
வரி – வரம்பு = எல்லை
வரி – வரை
வரைதல் = எழுதுதல்
வரை – கோடு
வள் – வர் – வார்
வார்தல் = சாய்தல், வளைதல்
வார் – வாரி = மதிற்சுற்று

வார் – வாரணம் = வளைவு, சூழ்வு, வட்டமான கேடகம், உள் வளைந்த சங்கு, நிலஞ்சூழ்ந்த கடல்.
வாள் – வாளம் = வட்டம்
வாள் – வாளி = வளையமான மூக்கணி
வாளிகை = சிறுகாது வளையம்
வாளிபோதல் = குதிரை வட்டமாயோடுதல்
வாள் – வாடு – வாட்டம் = சாய்வு
வாளி – வாசி = அணி வளைவான திருவாசி
வாசி – வாசிகை = திருவாசி

## 27. வா – ஒரு வினை :

'வா' என்னும் இவ்வினை வளைதற் பொருள்தரும் 'வள்' என்னும் மூலத்தினின்று தோன்றிற்று என்பார் பாவாணர். ஒருவன் தன் இருப்பிடத்தினின்று அல்லது உறைவிடத்தினின்று ஓரிடத்திற்குப் போனபின், அங்கிருந்து வரைவிடத்திற்கு வருவது முன்பின்னாகத் திரும்பியே; ஆதலால் திரும்பற் கருத்தினின்றே வருகைக் கருத்துப் பிறந்தது. திரும்பற் பொருட் சொல்லினின்றே வருகைப் பொருட் சொல் தோன்றிற்று.

'வள்' என்னும் வளைதல் மூலமே வள் – வர் – வார் – வா – வ. வர் – வரு எனவும் அல்லது வள் – வாள் – வார் – வர் – வரு எனவும் வருகைப் பொருள் தரு சொற்களைத் தந்திருக்க வேண்டுமென்பது பாவாணரின் அடிப்படை.

### வார்

'வார்' என்னும் முதல்வடிவை ஒட்டியே வாரானை (வருகை) வாராமை (எதிர்மறை) வாரும் (வருக) வாராய், வாரீர், வாராதே வாரல் போன்ற வடிவுகள் வழங்கப்படுகின்றன என்பார் பாவாணர்.

### வா

'வா' என்பது ஒருமை ஏவல் வினையில் மட்டும் நிலைத்துள்ளது என்பார் பாவாணர்.

### வ

வந்தான் என்னும் இறந்தகால வினைமுற்று; வந்தவன், வந்தான் என்னும் இறந்த கால வினையாலணையும் பெயர்கள்; வந்து, வந்தாய், வந்தக்கால் என்னும் வினையெச்சங்கள் போல்வன 'வ' வடிவ வருகைக்குக் காட்டுகள் என்பார் பாவாணர்.

### வர்

வரவு, வரல், வரத்து, வராமை, வராதீர், வரன்மீன், வரின், வராமல், வராவிடின் போன்ற வடிவங்கள் 'வர்' ஒட்டியதாகும்.

### வரு

வருதல், வருகை, வருகின்றவன், வருவி, வருதல், வருதி, வருவீர் போன்ற வடிவங்கள் 'வரு' வடிவை ஒட்டியதாகும்.

## 28. விரும்புதற் பொருள். வேர்: புல், வள்.

பொருந்தற் கருத்தினின்று மனம் பொருந்துதலாகிய விரும்பற் கருத்துத் தோன்றுமாகையால் விரும்புதல் கருத்து பொருந்தற் கருத்து வழித்து என்பார் பாவாணர்.

புல் – புல்லுதல் = நட்புச் செய்தல்
புல்குதல் = நண்பராய் மருவுதல்
புல் – புர் – புரி
புரிதல் = விரும்புதல்
புரி – பரி – பரிதல் = பற்றுவைத்தல்
பரி = அன்பு
புல் – புள் – புகு – புகல்
புகலுதல் = விரும்புதல்
புள் – பிள் – பிண் – பிணி – பிடி = பெண் யானை
பிண் – பிணி = பற்று
பிண் – பிணா
பிணவு = பன்றி, புல்வாய், நாய், கரடி என்பவற்றின் பெண்.
பிள் – பெள் – பெட்டல் = விரும்புதல்
பெட்டி = விருப்பம்
பெள் – பெட்டு – பெட்டை = பெண்
பெட்டை – பெடை = பெண்
பெடை – பேடை = பேடு
பெள் – பெண் = இருதிணைப் பெண்பால்
பெண் – பெண்டு = பெண்பாலள்
பெண்டாளன் = பெண்ணை மனைவியாகக் கொண்டவன் அல்லது நுகர்பவன்.
பெண் – பேண் = விருப்பம்
பேணம் = மதிப்பு
பேண் – பேணுநர் = பாதுகாப்போர்
பேணார் = பகைவர்

## வி ள்

புல்லுதலாகிய பொருந்தற் பொருளிலிருந்தே விள்ளுதலாகிய விரும்புதற் பொருளும் அதன் வேரும் பிறந்தன.

பிள் – விள் – விளை = விருப்பம்

விளையாடுதல் = விருப்பமாய் ஆடியோடித் திரிதல் அல்லது ஒருவினை செய்தல்.

விள் – விழு

விழுதல் = விரும்புதல்

விழு – வீழ்

வீழ்தல் = விரும்புதல்

விழு – விழை

விழைதல் = விரும்புதல்

விழைச்சு = விருப்பம்

விழை – விடை

விடையன் = காமுகன்

விடை – விடாய் – விடாய்த்தல் = ஆசைப்படுதல்

விள் – விர் – விரு – விரும்பு

விரும்புதல் = ஆசைப்படுதல்

விரு – விருந்து = புதிதாய் வந்தோர்க்கு விருப்பமாய் உணவு படைத்தல்.

விள் – வெள் – வெண்டு

வெண்டுதல் = இல்லாததற்கு ஆசைப்படுதல்

வெள் – வெள்கு – வெஃகு

வெஃகுதல் = மிக விரும்புதல்

வெள் – வெய் – வெய்யன் = விருப்பமுள்ளோன்

வெய் – வெய்ம்மை – வெம்மை = விருப்பம்

வெள் –வேள் – வேட்டல் = விரும்பல்

வெள் – வேள் – வேளாளன் = புதிதாய் வந்தவரை விரும்பி விருந்தோம்பிப் பேணுபவன்.

வெள் – வேண் = விருப்பம்

வேணவா = (மீமிசைச் சொல்) பெருவிருப்பம்.

வேள் – வேட்கை = விருப்பம்

வேள் – வேண்டு

வேண்டுதல் = விரும்புதல்

வேள் – வேண் – வேடு – வேடை = வேட்கை

வேள் – வேட்டம் = விருப்பம்

வேட்டம் – வேட்டை = விலங்கு பறவைகளை விருப்பிப் பிடிக்கும் வினை.

வேடு – வேடன் – வேட்டுவன் = வேட்டைத் தொழில் புரிபவன்.

## 29. வெம்மைப் பொருள் : வேர் – விள்

விள் என்னும் வேர் வழியாகப் பிறக்கும் வெம்மைக் கருத்து ஒண்மை, வெண்மை, வெறுமை எனும் கிளைக் கருத்துகளையும் தரும்.

விள் = வெம்மை

விள் – விய் – வியர்

வியர்த்தல் = வெப்பத்தால் உடலின் மேற்புறத்தில் நீர்த்துளி தோன்றுதல்

வியர் – வெயர் – வெயர்வை = வேர்வை

வெயர் – வேர் – வேர்வை = வியர்வை

வெள் – வெய் – வெய்ய = வெப்பமான

வெய்யவன் = வெப்பமானவன், கதிரவன்.

வெய் – வெயில் = கதிரவனின் வெப்பவொளி

வெய் – வெய்து = வெப்பமானது

வெய்து – வேது = வெப்பமாக ஒத்தடங் கொடுத்தல்

வெள் – வெய் – வெய்ம்மை – வெம்மை = வெப்பம்

வெம் – வெம்பு

வெம்புதல் = சூடாதல்

வெம்பு – வெப்பு – வெப்பம் = சூடு

வெள் – வெட்டை = சூடு

வெள் – வெள்கை – வெட்கை – வெக்கை = சூடு

வெள் – வெவ் – வெவ்விது = சூடானது

வெய்து – வெது

வெதுவெதுப்பு = சூடானது

வெது – வெதுக்கு – வெதுக்கல்

வெதுக்குதல் = வெதுப்புதல்

வெய்து – வெஞ்சு – வெச்சு = வெம்மைக் குறிப்பு

வெச்சுநீர் = சுடுநீர்

வெது – வேது – வே

வேபாக்கு = சூடு

வேக்காளம் = சூடு

வே – வேம்பு = வெப்பமான காலத்தில் தழைக்கும் அல்லது பழத்தினாலும் எண்ணெயாலும் சூடுண்டாக்கும் மரம்.

வே – வேம் + கடம். வேங்கடம் = வேனிலில் வேகுங் காடாகிய பாலைநில மலை.

### விள் = சினம்

விள் – விளம் = கடுஞ்சினம்

விள் – விளி

விளிதல் = சினத்தல்

விளர் – வியர்

வியர்த்தல் = சினங் கொள்ளுதல்

வியர் – வெயர்

வெயர்ப்பு = சினங் கொள்ளல்

வெயர் – வேர்

வேர்த்தல் = சினத்தல்

வேர் = சினம்

வெள் – வெய் – வெம் – வெம்மை = சினம்

வெம் – வெப்பு = சினம்

வெம் – வேம் – வே

வேதல் = சினமுறுதல்

வே – வேகு – வேகுதல் = சினப்படுதல்

## விள் – ஒண்மைக் கருத்து

விள் – விள – விளங்கு

விளங்குதல் = ஒளி விடுதல்

விளங்கு – விளக்கு

விளக்குதல் = தெளிவாக்குதல்

விள – விளத்து – விளத்தம் = விளக்கமாகக் கூறுதல்

விள் – வெள் – வெளி

வெளிச்சம் = ஒளி

விள் – வெள் – வெட்டு – வெட்டம் = வெளிச்சம்

வெட்டவெளிச்சம் = மிகுந்த ஒளி

விள் – விளி – விடி

விடியல் = இருள் நீங்கி ஒளிவரும் காலம்.

## விள் – வெண்மைக் கருத்து

விள் – விள = வெண்டோடுடைய பழம், அப்பழ மரம்.

விள் – விள – விளவம் – விலவம் – வில்வம் = விளாவை ஒத்த கூவிளம்.

விள் – விளர் – வியர் – வேர் = நிலத்தின் கீழ் வெளுத்துள்ள மரத்தடியுறுப்பு.

விள் – வெள் – வெண்மை = ஒளிநிறம்

வெள் – வெள்ளி = வெண்மை, வெண்மாழை, உடு

வெள் – வெளில் = முதுகில் வெண்கோடுள்ள அணில்

வெள் – வெளிறு = வெண்மை

வெளுத்தல் = வெண்மையாதல்

வெள் – வெறு – வெறுப்பு = வெண்மையாதல்

வெள் – வெள்கு – வெட்டு

வெட்டுதல் = முகம் வெளிறுதல், கூச்சப்படுதல்

விள் – வெள் – வேள் – வேளம் – வேழம் = வெண்கரும்பு, பேய்க்கரும்பு, நாணல், கொறுக்காந் தட்டை, வெண்யானை, யானை.

## விள் – தூய்மைக் கருத்து

விள் – வெள்

வெள்ளம் = உண்மை. இது கள்ளமா வெள்ளமா. (உ.வ.)

வெள்ளர் – கரவற்றவர்

வெள்ளை = கள்ளங்கரவற்ற.

## விள் – விளைவின்மைக் கருத்து

முதிர்ந்து வயிரம் பாய்ந்த மரம் பொதுவாகக் கருத்தும், விளையாத மரம் வெளிறியும் இருப்பதனால், வெண்மைக் கருத்தினின்று விளைவின்மைக் கருத்துத் தோன்றிற்றென்பார் பாவாணர்.

விள் – வெள் – வெள்ளை = விளையாத மரம்; கருத்தாழமின்மை

வெள் – வெளிறு = இளமை, அறியாமை, பயனின்மை, குற்றம்.



# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி

## பகுதி 'அ'

## பாவாணர் வரலாறும் மொழியியல் கொள்கைகளும்

### 1. மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம்

நீண்டகன்ற தமிழ் வரலாற்றுப் பெரும்புகழ்ப் பரப்பில் செஞ்சுடர் விரிக்கும் ஞாயிறாய் விளங்கும் தேவநேயப் பாவாணர் அவர்கள் செந்தமிழில் பெரும் புலமையும் பன்மொழி ஆய்வும் நிரம்பப் பெற்றவர். மொழியியல் துறையில் நுண்மாண் நுழைபுலம் மிக்கவர். ஆராய்ச்சிப் பெருங்கடலில் அரை நூற்றாண்டுக் காலத்திற்கு மேல் மூழ்கி, மூச்சடக்கி முத்தெடுத்த பெருந்திறல் வித்தகர். மொழியாராய்ச்சி – சொல்லாராய்ச்சித் துறையில் ஒப்பாரும் மிக்காரும் இலராய்த் தம் அரிய ஆராய்ச்சியின் மூலம் தமிழின் நீண்டகாலத் தேவையை நிறைவு செய்த பெருமைக்கு உரியவர். பாவாணர் தமிழ் மொழியின் தனியொளியைப் பாருக்குப் பாரிக்க என்றே பிறந்த எழுசுடர் ஞாயிறு! மேலை யாரிய மொழிகள் கீழையாரிய மொழிகள், திராவிட மொழிகள் இன்னவற்றையெல்லாம் விரல் நுனியில் வைத்திருப்பார் போல் சொற்பிறப்பியல் விரிக்க வந்த விரகர்! எத்துணை எதிர்ப்புகளுக்கும், ஈடழிக்கும் தடைகளுக்கும், இடர்களுக்கும் தலைதாழ்த்தாது மலையென நிமிர்ந்து நின்று ஆக்கப்பணிகள் செய்த அரிமா! வாட்டும் வறுமையையும் தேட்டெனக் கொண்டு, திறமான பணிபுரிந்த வாட்டருஞ்சீர் வண்டமிழ்த் தொண்டர்!

"பாவாணர் பாவலர்; நற்றமிழ் நாவலர்; இலக்கியச் செல்வர்; இலக்கண வித்தகர்; உரைவேந்தர்; கட்டுரை வன்மையர்; நகைச்சுவை ஒளிர உரையாடும் நயத்தர்; நினைவின் ஏந்தல்; நுண்மாண் நுழைபுல எழிலர்; நுணங்கிய கேள்வியர்; நுண்ணிய அறிவுக்கு வணங்கிய வாயினர்; உண்மைத் தொண்டை உரையாலும் பாட்டாலும் உள்ளார்ந்த உவகை யூற்றெடுக்கப் பாராட்டும் ஒள்ளியர்; தக்காரை யூக்கித் தகவுணர்ந்து மதிக்கும் தண்ணியர்; ஆசிரியர் தொல்காப்பியனார்க்குப் பின்னே அருந்தமிழ் இலக்கணத் திணையிலாக் குரிசில் இவரே என இலங்கிய பெற்றியர்"

தூயதமிழ் வளர்ச்சியில் அக்கறை கொண்டு அயராதுழைத்து ஆக்கம் கண்டவர். அவருடைய அரிமாத் தோற்றமும் பெருமித நோக்கும் முனை மழுங்காச் செஞ்சொற்பலுக்கலும் எத்திறத்தாரையும் ஈர்ப்பவை; அவர்பால் பொது நோக்கொழிக்கும் பெற்றியவை. தமிழர் தொன்மையை உலகிற்கு அறிவித்தவர் கால்டுவெல் பெருமகனார்; *'தனித்தமிழிற்கு வித்திட்டவர் பரிதிமாற் கலைஞர்; செடியாகத் தழைக்கச் செய்தவர் நிறைதமிழ் மலையாம் மறைமலையடிகள்; நானே மரமாக வளர்த்து வருகிறேன்'* எனத் தம் கூர்த்த பணியின் சீர்த்த நிலையை நுண்ணிதின் உணர்ந்து செம்மாந்து கூறிய செந்நாவலர்; சொற்பிறப்பியற் பணிக்கு என்றே தம்மை இறைவன் படைத்தனன் என உளங் கூர்ந்துரைத்து, அப்பணிக்கே தம்மை முழுதுற ஒப்படைத்து உழைத்த உரவோர். எண்ணற்ற தமிழ் நெஞ்சங்களைப் பிணித்து ஆளுமை செலுத்தும் ஆற்றல் சான்ற அப்பெருமகனாரின் வரலாறு பல்லாயிரம் பக்கங்களாய் விரியும் திறத்தது; பெருக்கம் அஞ்சி, ஈண்டு மிகமிகச் சுருக்கமாகத் தரப்பெறுகின்றது.

#### பிறப்பும் வளர்ப்பும்

தமிழ்நாட்டில் பழம்பதியான பாண்டிய நாட்டின் ஒரு பகுதியாக விளங்கும் திருநெல்வேலி மாவட்டத்தில் புகழ்பெற்ற பேரூர்களில் ஒன்று சங்கரன்கோயில். அவ்வூரில் கி.பி. 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தொடக்கப்பள்ளி ஆசிரியராகப் பணியாற்றியவர் ஞானமுத்து. இவர்தம் முழுப்பெயர் ஞானமுத்து தோக்கசு (stokes) என்பது.

சங்கரன்கோயில் – கோயிற்பட்டிப் பகுதியில் அக்காலத்தில் சமயப்பணி (கிறித்துவம்) ஆற்றி வந்தவர் அப்பர் (பாதிரியார்) தோக்கசு. அவருடைய வளமனைக் (பங்களா) காவலராக இருந்த முத்துச்சாமியும் அவர்தம் துணைவியார் வள்ளியம்மாளும் ஞானமுத்து என்று பெயர் சூட்டப்பெற்ற தம் ஒரே ஆண்மகனைத் தவிக்கவிட்டு விட்டு அடுத்தடுத்து இறந்து போயினர். பற்றுக்கோடு இல்லாத அக் கைக்குழந்தையைத் தாமே எடுத்து

வளர்த்தார் அப்பர் தோக்கசு. தம் வளர்ப்பு மகனின் பெயரோடு தம் பெயரையும் இணைத்து வழங்கியமையால் ஞானமுத்து என்னும் பெயர் ஞானமுத்து தோக்கசு என்றாயிற்று.

ஆசிரியப் பணிபுரியும் அளவிற்கு உயர்ந்த ஞானமுத்துவிற்கு அவர்தம் உறவு வழிப் பெண்ணான சொக்கம்மாளைத் திருமணம் செய்வித்தார் தோக்கசு. கிறித்தவராக மாற்றப்பட்ட சொக்கம்மாளின் பெயர் மரியாளாயிற்று. ஆயினும் அவர் ஈழத்தில் இருந்த தம் பெற்றோரைப் பிரிந்து வாழ விரும்பாமையால் கணவனொடு கூடிவாழ மறுத்து, உறவை விலக்கிக் கொண்டவராய் ஈழத்திற்கே சென்று விட்டார்.

கோயிற்பட்டியையடுத்த பாண்டவர் மங்கலத்தில் ஓதுவாராக (உபதேசியாராக) இருந்த குருபாதம் என்பாரின் புதல்வியான பரிபூரணத்தைத் தம் மகன் ஞானமுத்துவிற்கு இரண்டாம் மணம் செய்வித்தார் தோக்கசு. மூன்றாந்தரம் (எட்டாம் வகுப்பு) படித்துத் தேறியிருந்த பரிபூரணமும் ஆசிரியப் பணி புரிந்தார்.

ஆசிரியப் பெருமக்களான ஞானமுத்து பரிபூரணத்தம்மையார் இல்லற வாழ்வு இனிதே இயன்றது. அவர்களுக்குப் பெண்மக்கள் அறுவரும் ஆண்மக்கள் நால்வருமாகப் பதின்மர் மக்கட் செல்வங்களாயினர். இப்பதின்மருள் பத்தாவதாகவும் நான்காம் மகனாகவும் பிறந்தவரே நமது தேவநேயனார் ஆவர்.

ஞானமுத்து, பரிபூரணம் வாழ்விணையர் கி.பி. 1902 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 7 ஆம் பக்கல் வெள்ளிக்கிழமை மாலை 6 மணிக்குப் பிறந்த தம் கடைக்குட்டிப் பிள்ளைக்குத் தேவநேசன் என்று பெயர் சூட்டிப் பேணி வளர்த்தனர். தம் பெற்றோர்க்கும், மூத்த உடன் பிறப்புகளுக்கும் தேவநேசன் செல்லப் பிள்ளையானார்.

1906 ஆம்ஆண்டில் ஞானமுத்து இயற்கை எய்தினார். தந்தையை இழந்த ஐந்து அகவைச் சிறுவரான தேவநேசனின் அன்னை பரிபூரணத்தம்மையாரும் அடுத்த சில நாள்களில் அவரை விட்டுப் பிரிந்து மீளாத் துயிலில் ஆழ்ந்தார்.

பெற்றோரை இழந்த தேவநேசன் தம் மூத்த உடன்பிறப்பினர் அரவணைப்பில் வளர்ந்தார்.

## கல்வியும் பணியும்

சோழபுரம் விடையூழியப் பள்ளியில் தேசநேசனின் தொடக்கநிலைக் கல்விப் பயிற்சி தொடங்கியது. அவர் அப்பள்ளியைச் சார்ந்த விடுதியில் சேர்க்கப்பட்டிருந்தார். ஆனால் அந்நிலை நீடிக்கவில்லை.

தேவநேசனின் அக்கையார் ஆம்பூரில் வாழ்ந்து வந்தார். அவர் தம்பியைத் தம்முடன் அழைத்துச் சென்றார். ஆம்பூர் மிசௌரி நல்லஞ்சல்உலுத்தரின் விடையூழிய (M.E.L.M) நடுநிலைப் பள்ளியில் எட்டாம் வகுப்பு வரை பயின்று தேவநேசன் தேர்ச்சி பெற்றார்.

மேற்கொண்டு தொடர்ந்து படித்தற்கு அங்கு வாய்ப்பில்லாது போயிற்று. நெல்லையையடுத்த பாளையங்கோட்டையில் மேற்கல்வியைத் தொடர விரும்பினார் தேவநேசனார் . ஆனால் அக்கையார் குடும்பத்தின் பொருளியியல் நிலை அதற்கு இடந் தரவில்லை.

கல்வியில் ஆரா விருப்பங்கொண்ட தேவநேசன் தாம் மேற்கல்வி பயிலுதற்குப் பொருளுதவி புரியத் தக்காரை நாடினார். அவர்க்குக் கை கொடுக்க முன்வந்தார் விடையூழியரான எங்கு (Young) என்னும் துரைமகனார். முகவை மாவட்டத்தில் சோழபுரத்தையடுத்த முறம்பு என்னும் சீயோன் மலையில் பள்ளியொன்றும் உண்டுறை விடுதியும் நடத்தி வந்த அவர் தேவநேசற்குக் கல்வியின் பொருட்டுக் கடனுதவி புரிந்தார்.

பாளையங்கோட்டைத் திருச்சவை விடையூழியக் கழக (C.M.S.) உயர்நிலைப்பள்ளியில் நான்காம் படிவத்தில் (9ம் வகுப்பில்) சேர்ந்தார் தேவநேசன். அங்கு மூன்றாண்டுக் காலம் தங்கி ஆறாம் படிவம் (11 ஆம் வகுப்பு) வரை பயின்று தேர்ச்சி பெற்றார்.

அக்காலத்துத் தம் கல்விப் பயிற்சி குறித்துப் பிற்காலத்தில் தேவநேசன் குறிப்பிடுவது வருமாறு:

"4ம் படிவத்தில் பூத நூல், உடல் நூல், நிலைத்திணை நூல் (Botony) தொகுதியையும், 5 ம் படிவத்தில் சுருக்கெழுத்து, தட்டச்சு கணக்கு வைப்பு (Book-keeping) தொகுதியையும், ஆறாம் படிவத்தில் வரலாறு தமிழ்த் தொகுதியையும் சிறப்புப் பாடமாக எடுத்துப் படித்தேன். அன்று ஆங்கிலப் பற்றாளனாகவும், பேச்சாளனாகவும் மாணவர்(ஆங்கில) இலக்கிய மன்றச் செயலாளனாகவும் இருந்ததனால் ஆங்கில இலக்கியத்தைக் கரை காணவும் ஆக்கசுப்போர்டு (OXFORD) என்னும் எருதந்துறையில் பணி கொள்ளவும் விரும்பினேன்."

பள்ளிப்படிப்பை முடித்த தேவநேசன் கல்லூரியில் புக விரும்பினும் வாழ்க்கைச் சூழல் அவ்வாய்ப்பை

அவர்க்கு அளிக்கவில்லை. உயர்நிலைப் பள்ளிப் படிப்புச் செலவுக்காகச் சீயோன் மலை எங்குதுரைக்குப் பட்ட கடனைத் தீர்க்கும் பொருட்டு அவர் சீயோன்மலை நடுநிலைப் பள்ளியிலேயே ஆசிரியராகப் பணியில் அமர்ந்தார். அப்போது தேவநேசனின் அகவை பதினேழு. அன்று முதல் அவர்தம் ஆசிரியப் பணி தொடர்ந்தது. அதன்பின் அவர் முறையான ஆசிரியப்பயிற்சியும் பெற்றார் என்று அறிகிறோம்.

உயர்நிலைப்பள்ளிக் கல்வியையும் முடித்து அதன் பொருட்டுத் தாம் பட்ட கடனையும் ஈராண்டுக்கால ஆசிரியப் பணியின் மூலம் தீர்த்துவிட்டு ஆம்பூருக்குத் திரும்பிய தேவநேசன் அங்கே தாம் பயின்ற மிசௌரி நல்லஞ்சல் உலுத்தரின் நடுநிலைப்பள்ளியிலேயே ஆசிரியப் பணியைத் தொடர்ந்தார்.

## தேவநேசக் கவிவாணன்

நடுநிலைப் பள்ளியில் 6 ஆம் வகுப்பு மாணாக்கர்க்குத் தமிழ் பயிற்றும் ஆசிரியரான தேவநேசன் அப்பள்ளி உயர்நிலைப் பள்ளியாக உயர்ந்தமையால் தாமும் தமிழாசிரியரானார்.

அப்பதவிக்கு அக்கால முறைப்படி தக்க தமிழறிஞர் ஒருவரின் சான்றிதழ் தேவைப்பட்டமையால், பாளையங்கோட்டையில் தாம் பயின்ற உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியரான பண்டிதர் மாசிலாமணியாரை அணுகினார்.

தேவநேசன் உயர்நிலைப்பள்ளி மாணவப் பருவத்திலேயே தமிழில் ஆர்வங்கொண்டு பாடல் புனைவதில் ஈடுபட்டார். தாம் எழுதிய பாடல்களைப் பண்டிதர் மாசிலாமணியாரிடம் காட்டி மகிழ்வது உண்டு. அவ்வகையில் தேவநேசனின் தமிழார்வத்தையும் அறிவு நலத்தையும் பாடல் புனையும் ஆற்றலையும் நன்கு அறிந்த மாசிலாமணியார் தேவநேசனுக்குத் தாம் அளித்த சான்றிதழில் அவர் பெயரைத் 'தேவநேசக் கவிவாணன்' என்று சிறப்புறக் குறித்திருந்தார். தேவநேசன் அப்பெயராலேயே ஆசிரியராகவும் பதியப்பெற்றார்.

ஏறத்தாழ இக்காலக் கட்டத்தில்தான் பாவாணர் உயர்நிலைப்பள்ளி மாணவப் பருவத்தில் ஆங்கிலத்தில் அவருக்கிருந்த பேரார்வம் திசைமாறியது எனலாம். ஆங்கிலத்தைக் கடைபோகக் கற்று எருதந்துறை (OXFORD) பல்கலைக்கழகத்தில் ஆங்கிலப் பேராசிரியராக அமர வேண்டும் என்று கருதியிருந்த அவர் தமிழ்ப் பெருங்கடலில் நிலை கண்டுணரும் முயற்சியில் முனைந்தார்.

இதுபற்றிப் பிற்காலத்தில் அவரே கூறியுள்ளார்.

"(ஆறாம் படிவத்தில்) தமிழ் கற்றதனாலும், இசைப்பாட்டும் செய்யுளும் இயற்றி வந்ததனாலும், இசைத்தமிழ்ப் பித்தன் ஆனதனாலும் நான் அறியாவாறு இறைவன் என் மனப்பாங்கை மாற்றியதாலும்....."

என்று கூறித் தாம் தமிழில் தோய்ந்ததாகப் பாவாணர் குறிப்பிட்டுள்ளார்.

மேற்படி 'கவிவாணன்' என்னும் சிறப்புப் பெயரே பின்னாளில் 'பாவாணன்' என்று தமிழாக்கம் பெற்றது. 'தேவநேசன்' என்னும் பெயரும் 'தேவநேயன்' என்றாயிற்று. தேவநேசக் கவிவாணன் தேவநேயப் பாவாணர் ஆனார். இன்று பாவாணர் என்னும் பெயர் புகழார்ந்த திருப்பெயராய், உலகறிந்த பெரும் பெயராய் நிலைபெற்று விட்டது.

## மதுரைப் பண்டிதர்

உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் ஆன பாவாணர் தம் தகுதியை முறையாக உயர்த்திக்கொள்ளும் பொருட்டு மதுரைத் தமிழ்ச் சங்கப் பண்டிதத் தேர்வு எழுத விழைந்தார்.

மதுரை தமிழ்ச் சங்கத் தேர்வு அக்காலத்தில் மிக விரிவான–செறிவான பாடத்திட்டங்கொண்டது. நுழைவு (பிரவேச பண்டிதம்), இளம் நிலை (பாலபண்டிதம்), இறுதிநிலை (பண்டிதம்) என்னும் படிமுறையாக முந்நிலை கொண்டது. எனினும் எவரேனும் விரும்பினால் முதலிரு நிலைகளைத் தவிர்த்து இறுதிநிலைத் தேர்வை நேரடியாக எழுதலாம்.

மதுரைத் தமிழ்ச்சங்கப் பண்டிதர் என்பது அக்காலத்தில் தமிழறிஞர்களிடையே மிகவும் மதிப்பார்ந்த பட்டமாக இருந்தது. முந்நிலைகளையும் படிப்படியாக எழுதி வெல்வதே கடினமென்றும் அதன் இறுதிநிலைத் தேர்வை நேரடியாக எழுதி வெற்றி கொள்வது மிகமிகக் கடினம் என்றும் பலரும் கூறிவந்தனர்.

இளம் பருவத்திலேயே இருமுதுகுரவரையும் இழந்த போதிலும், 'தந்தையொடு கல்விபோம்' என்னும் முதுமொழியையே பொய்யாக்கும் வகையில், தந்தையில்லாமலேயே கல்வியில் மேல்வந்த பாவாணர் பண்டிதத்தை நேரடியாக இறுதிநிலைத் தேர்வை எழுதி வெற்றி கொள்வதை ஓர் அறைகூவலாக எடுத்துக்கொண்டு பயிலலானார். அவ்வாறே 1924 ஆம் ஆண்டில் தேர்வு எழுதி வெற்றியும் பெற்றார். அவ்வாண்டில் பண்டிதம் எழுதியவர்களுள் வெற்றி

பெற்றவர் பாவாணர் ஒருவரே என்பது குறிப்பிடத்தக்கது. அது மட்டுமன்று; பாவாணர்க்கு முன் நேரடியாகப் பண்டிதம் எழுதி வெற்றிகொண்டவர் நாவலர் ந.மு. வேங்கடசாமி ஐயா ஒருவரே!

## சென்னையில் பணி வாய்ப்பு

கழகப் புலவரான (மதுரைத் தமிழ்ச்சங்கப்பட்டம் பெற்ற பண்டிதரான) பாவாணர் ஆம்பூரை விட்டுச் சென்னை சேர்ந்தார். அவ்வாண்டிலேயே (1924 கல்வியாண்டு) திருவல்லிக்கேணி கெல்லற்று உயர்நிலைப்பள்ளி அவரைத் தமழாசிரியராக ஏற்றுப் பெருமை பெற்றது.

பாடல் புனையும் ஆர்வம் பாவாணர்க்கு இயல்பானது. அதன் விளைவாகவே அவர் கவிவாணனாகிப் பாவாணர் ஆனார். ஆகவே அவர் எழுதிய பாடல் தொகுதி 'கிறித்தவக் கீர்த்தனங்கள்' என்னும் பெயரில் நூலாகியது.

அடுத்த ஆண்டில் (1925) அவர் கிறித்தவக் கல்லூரி உயர்நிலைப் பள்ளியில் பணியேற்றார். இவ்வாண்டில் பாவாணர் 'சிறுவர் பாடற்றிரட்டு' என்னும் நூலை இந்தியக் கிறித்தவ இலக்கியக் கழகம் வெளியிட்டது.

அடுத்துப் பாவாணர் பெரம்பூர்க் கலவல கண்ணன் உயர்நிலைப் பள்ளியில் பணி மேற்கொண்டார். அப்பணி பேராயக் கட்சிப் பெருமகனும், பெயர் பெற்ற அறுவையியல் மருத்துவரும் (Surgeon) பிராமணருமான மருத்துவர் மல்லையாவின் பரிந்துரையினால் கிட்டியதாகப் பாவாணர் பின்னாளிலும் நன்றியோடு குறிப்பிடுகிறார். அன்றியும் இதற்கு முன்னும் பின்னும் அவர் பணியாற்றிய பள்ளிகள் எல்லாம் கிறித்தவப் பள்ளிகளாய் இருந்தமையால் அவற்றில் தமக்கு எளிதாக வேலை கிடைத்தது என்பதையும் பாவாணர் குறிப்பிடத் தவறவில்லை. பெரம்பூர்ப் பள்ளிப் பணி ஈராண்டு தொடர்ந்தது.

## நெல்லைப்புலவர்

1926இல் திருநெல்வேலித் தென்னிந்தியத் தமிழ்ச் சங்கம் நடத்திய தனித் தமிழ்ப் புலவர் தேர்வு எழுதி வெற்றி பெற்றார் பாவாணர். அவ்வாண்டு இத்தேர்வு எழுதியவர்களுள் வெற்றி பெற்றவர் இவர் ஒருவரே என்பது குறிப்பிடத்தக்கது.

நான்கு ஆண்டுகளுக்குப் பின் சென்னையை விட்டுச்சென்ற பாவாணரின் தமிழாசிரியப் பணி மன்னார்குடி பின்லே (Finlay) உயர்நிலைப் பள்ளியில் தொடர்ந்தது. ஆறு ஆண்டுகள் அப்பணி நீடித்தது.

பழங்காலத்தில் தமிழாசிரியர்கள் எல்லாம் பெரும்பாலும் பாக்களை இயல்பாக இசையோடு பாடும் திறமுடையவர்களாகவே இருப்பர். வகுப்புகளிலும் பாக்களைப் பாடி நடத்துவதும் உண்டு. பாவாணர் அவர்களுக்கு இசையில் நாட்டம் மிகுதி என்பதை முன்னரே பார்த்தோம்.

அவர் முறையாக இசை பயிலுதற்கு மன்னார்குடி வாழ்க்கை வாய்ப்பாக அமைந்தது. இசைப்பெரும் புலவர் மன்னை இராசகோபாலரிடம் பயின்று இசைத்தமிழ்த்திறம் நிரம்பப் பெற்றார் பாவாணர்.

பின்னாளில் பாவாணர் புனைந்த இசைத் தமிழ்ப்பாக்கள் 'இசையரங்கு இன்னிசைக் கோவை', 'இசைத்தமிழ்க் கலம்பகம்' என்னும் நூல்களாக வெளிவந்துள்ளன. தம் இசைத்தமிழ்ப் புலமை குறித்து அவரே கூறுவது வருமாறு:

"சென்ற பன்னீராண்டுகளாக என்னால் இயன்றவரை இசைத் தமிழையும் ஆய்ந்து வருகிறேன் என்பதையும், நால்வகை இசைக் கருவிகளும் என்னிடம் உள்ளன என்பதையும், ஒவ்வொரு வகையிலும் ஒன்றேனும் இயக்குவேன் என்பதையும் அச்சில் முடிக்கல (கிரௌன்) அளவில் 200 பக்கம் வரும் இசைத் தமிழ்ச் சரித்திரம் என்னும் நூலையும் சென்ற ஆண்டிலேயே எழுதி முடித்தேன் என்பதையும் நம் நண்பர் அறியக் கடவர்."

இசைத் தமிழ்த் தொடர்பான மறுப்புக் கட்டுரையொன்றில் தம் இசைத் தமிழ்த் தகுதி பற்றிப் பாவாணர் குறிப்பிடும் பகுதி இதுவாம்.

மன்னார்குடியில் இருந்த இலக்கணப் பெரும் புலவர் சோமசுந்தரனாரின் தொடர்பு பாவாணர்க்கு நல்வாய்ப்பாகியது. பேரா. சுப்பிரமணியம் (சாத்திரியார்) என்பவர் தொல்காப்பிய நூற்பாக்களுக்குத் தவறாகப் பொருள் கூறிவந்ததோடு, உண்மைக்கு மாறாகவும், தமிழுக்குக் கேடாகவும் அவர் வெளிப்படுத்திய கருத்துகளையெல்லாம் சூறாவளிபோல் சுழற்றி எறிந்தவர் சோமசுந்தரனார் என்று அவரைப் பற்றிப் பெருமிதம் பொங்கக் கூறுகிறார் பாவாணர். இச்சோமசுந்தரனார் காவல் துறையில் ஆய்வாளராகப் பணியாற்றியவர் என்பது வியப்பான செய்தி. இலக்கணத்தில் பெரிதும் ஆர்வமுடைய பாவாணர்க்குச் சோமசுந்தரனார் தொடர்பு மிகவும் ஆக்கமாக அமைந்தது.

மன்னார்குடி வாழ்க்கைக் காலத்தில் பாவாணர்க்குக் கிட்டிய மற்றுமோர் நல்வாய்ப்பு, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தோடு ஏற்பட்ட தொடர்பேயாம்.

பாவாணரின் மொழியாராய்ச்சி (Comparative Philology) என்னுங் கட்டுரை கழக மாதிகையான 'செந்தமிழ்ச் செல்வி'யில் வெளிவந்தது. 'செல்வி'யில் வெளியான பாவாணரின் முதற்கட்டுரை இதுவேயாம்.

பாவாணரின் மொழியியல் துறை ஆய்வு வெளிப்பாட்டிற்கு இக்கட்டுரையே கால்கோள் ஆயிற்று எனலாம். தொடர்ந்து 'செந்தமிழ்ச் செல்வி'யில் அவர்தம் கட்டுரைகள் வெளிவரலாயின. கழகத்தின் தொடர்பு அவர்க்கு மட்டுமின்றி தமிழுக்கும் ஆக்கமாகத் தொடர்ந்தது.

மன்னார்குடியில் ஆறு ஆண்டுகளைக் கழித்த பாவாணர் அங்கிருந்து வெளியேற விரும்பினார். அவர் பணியாற்றிய கல்லூரி நிலைகுன்றிப் பணிபுரிந்தோர் பலர் வேலையிழக்கும் நிலை ஏற்பட்டது. ஏழைமை நிலையிலிருந்த கோபால கிருட்டிணன் என்பார் வேலையிழக்கும் நிலையைத் தவிர்த்துத் தாமே வேலையைக் கைவிட்டு வெளியேறினார் பாவாணர். அக்கோபால கிருட்டிணன் பார்ப்பனரேயாயினும், அவர் பாவாணர் கருத்துக்களுக்கு முற்றாக உடன்பட்டவராம்.

## திருச்சிப்பணி

மன்னார்குடியினின்றும் வேலையை விட்டுவந்த பாவாணர் திருச்சி ஈபர் கண்காணியார் உயர்நிலைப்பள்ளியில் பணியைத் தொடர்ந்தார் (1934) அப்பணி ஒன்பது ஆண்டுக்காலம் நீடித்தது.

இக்காலக் கட்டத்தில் மொழிகள், துறைகள் என்னும் இருவகை நிலையிலும் பாவாணரின் கல்விப் பரப்பு மேலும் விரிவுபட்டது; ஆராய்ச்சி ஆழங்கொண்டது. 'கட்டுரை வரைவியல்' கட்டாய இந்திக் கண்டனம் – 'செந்தமிழ்க் காஞ்சி', 'இயற்றமிழ் இலக்கணம்', 'தமிழர் சரித்திரச் சுருக்கம்' என்னும் நூல்கள் அடுத்தடுத்து வெளிவந்தன. இவற்றுக்கெல்லாம் மேலாக ஆராய்ச்சி வகையில் பாவாணரின் முதற்பெரு நூலான ஒப்பியன் மொழி நூலும் வெளிவந்தது.

19 ஆம் நூற்றாண்டுத் தமிழக வரலாற்றில் 1940க்கு முற்பட்ட சில ஆண்டுகள் மிகவும் சிறப்பு வாய்ந்தவை. கட்டாய இந்திப் பயிற்சியை எதிர்த்து மறைத்திரு மறைமலையடிகளார் தலைமையில் தமிழறிஞர்கள் கொந்தளித்து எழுந்தனர். பகுத்தறிவுத் தந்தை பெரியார் ஈ.வெ.ரா. அவர்களின் தலைமையிலான தன்மான இயக்கத்தினரும் வீறுகொண்டு எழுந்தனர். நாடெங்கும் இந்தி எதிர்ப்பு விளக்கக் கூட்டங்கள், மாநாடுகள் ஆகியன நடைபெற்றன. கண்டனங்கள், ஊர்வலங்கள், மறியல்கள் என அறப்போராட்டங்களும் தொடர்ந்தன.

தன்மானத் தமிழறிஞரான பாவாணர் ஒய்ந்து கிடப்பரோ? ஒல்லும் வகையில் கிளர்ச்சியில் ஈடுபட்டார். ஆங்காங்குச் சில கூட்டங்களுக்குச் சென்று உரையாற்றி வந்தார். கண்டன நூல் (செந்தமிழ்க் காஞ்சி) வெளியிட்டார்.

## சென்னைக்கு மீண்டும் வருகை

சென்னை மண்ணடி முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியப் பணி வாய்ப்பு அமைந்தது. ஆகவே பண்டாரகர் மா.அரசமாணிக்கனார் அவர்களும் சை.சி.கழக ஆட்சியர், திரு. வ. சுப்பையா அவர்களும் வலியுறுத்தியதை ஏற்றுப் பாவாணர் திருச்சியினின்றும் சென்னைக்குக் குடிபெயர்ந்து முத்தியாலுப்பேட்டைப் பணியை ஏற்றுக் கொண்டார்.

## ஒப்பியன் மொழி நூல்

பாவாணர் நூல்களில் ஆராய்ச்சி வகையால் முதல் நூல் என்று சொல்லத் தக்கது ஒப்பியன் மொழி நூலே ஆகும். அதற்கு முன்னரும் சில நூல்கள் வந்துள்ளனவேனும் அவையெல்லாம் பொதுவகையினவே. தமிழ்த் தொடர்பான நீண்டகால நம்பிக்கைகள் சிலவற்றைத் தகர்ப்பதாகவும், தமிழுக்கு ஆக்கமான புத்தம் புதிய கருத்துக்களைத் தாங்கியதாகவும், ஆரியத்தால் நேர்ந்த தீங்குகளைத் தெள்ளத் தெளிய விளக்குவதாகவும் இந்நூல் அமைந்தது.

இந்நூலின் விளைவுகளான பற்பல செய்திகள் உள்ளன. இச்சுருக்க வரலாற்றில் அவற்றையெல்லாம் விரித்தெழுத இயலாது. ஒன்று மட்டும் இயைபு கருதி ஈண்டு சுட்டப்பெறுகிறது.

ஒப்பியன் மொழிநூலைப் படித்த கரந்தைத் தமிழ்க் கழக நிறுவனர் தமிழவேள் உமாமகேசுவரனார் அவர்கள் அதனைப் பெரிதும் பாராட்டியதோடு உடனே சேலம் நகராண்மைக் கல்லூரியில் பாவாணரைப் பணியமர்த்திக் கொள்ளுமாறு அக்கல்லூரி முதல்வர் இராமசாமி அவர்களுக்கு வேண்டுகோள் விடுத்தார். நூலையும் அனுப்புவித்தார். பாவாணர் திறத்தை

நன்குணர்ந்த முதல்வர் இராமசாமி அவர்கள் தக்க வழிமுறைகளின்படி பாவாணரைச் சேலம் கல்லூரியில் பணியமர்த்தஞ் செய்தார்.

## கல்லூரிப் பேராசிரியர்

உயர்நிலைப்பள்ளி வாழ்க்கையைச் சென்னை முத்தியாலுப்பேட்டைப் பள்ளியோடு முடித்துக்கொண்டு சேலங் கல்லூரிப் பணியை மேற்கொண்டார் பாவாணர் (1944) அக்கல்லூரியில் அவர் பன்னீராண்டுக் காலம் பணியாற்றினார். அக்காலமே பாவாணர் வாழ்க்கையில் பசுஞ்சோலையாய் அமைந்தது. 1934 இலேயே கீழைக் கலைத் தேர்ச்சியாளன் பட்டம் பெற்றிருந்த பாவாணர் பின்னர்க் கலைத்தலைவர் பட்டமும் பெற்றார். இக்காலக் கட்டத்திலேயே, 'திராவிடத்தாய்', 'சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள்', 'உயர்தரக் கட்டுரை இலக்கணம்', 'பழந்தமிழாட்சி', 'முதற்றாய் மொழி', 'தமிழ்நாட்டு விளையாட்டுகள்', 'A criitical Survey of Madras University Lexicon' ஆகிய நூல்கள் அடுத்தடுத்து வெளிவந்தன.

சேலம் தமிழ்ப் பேரவை பாவாணருக்குப் பட்டமளித்துப் பாராட்ட முன்வந்தது. விழாத் தலைவராய் இருந்த பகுத்தறிவுப் பகலவன் பெரியார் ஈ.வெ.இரா. அவர்கள் பேரவையின் சார்பில் 'திராவிட மொழி ஞாயிறு' என்னும் பட்டத்தை அளித்துச் சிறப்பித்தார்கள் (1955).

பாவாணர் அவர்களுக்குப் பின்னாளில் பல்வேறு அமைப்புகள் 'தமிழ்ப் பெருங்காவலர்', 'மொழிநூல் மூதறிஞர்', 'செந்தமிழ்ச் செல்வர்', 'செந்தமிழ் ஞாயிறு' என்னும் பட்டங்களை வழங்கிப் பாராட்டியுள்ளன.

'தென்மொழி' பாவாணரின் பெருமைக்கேற்பப் பல்வேறு அடைமொழிகளால் அவரைச் சிறப்பித்துள்ளது. அவற்றுள் 'மொழிஞாயிறு' என்பது 'பாவாணர்' என்பதைப் போன்றே பெருவழக்குப் பெற்றுவிட்டது.

பாவாணர் சேலம் கல்லூரியில் பணியாற்றிய காலத்தில் அவரிடம் பயின்ற மாணவருள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள் அந்நாள் துரை மாணிக்கமான பாவலரேறு பெருஞ்சித்திரனார், பின்னாளில் தமிழக அமைச்சராயிருந்த க.இராசாராம், மருத்துவர் சிவராசன், எழுத்தாளர் மாரி. அறவாழி, முதலானோர் ஆவர்.

சேலங் கல்லூரிப் பணிக்காலத்தில் அவர் பணி சிறப்புறத் துணை நின்றவர்களுள் முதல்வர் இராமசாமியை அடுத்து, நகராட்சித் தலைவர் இரத்தினவேலரும், நகராட்சி ஆணையாளரும் ஆட்சிமொழிக் காவலருமான கி. இராமலிங்கனாரும் குறிப்பிடத்தக்கவர்கள். வரலாற்றுத் துறையில் பணியாற்றியவர் பேராசிரியர் சொக்கப்பனாராவர். இவர் தொடர்பு பிற்காலத்திலும் தொடர்ந்தது.

கல்லூரியில் பாவாணரிடம் பயின்ற மாணவர் பலரும் அவருக்கு மிகவும் அணுக்கராகித் தமக்கு இயல்பாக இருந்த தமிழாற்றலை வளர்த்துச் செழுமைப்படுத்திக்கொண்டனர். அவர்தம் ஆய்வுக் கருத்துக்களில் தோய்ந்து அவற்றைப் பரப்புவதிலும் அவரைப் போற்றுவதிலும் அவர்தம் புகழ் பரப்புவதிலும் தலை நின்றனர்.

## அண்ணாமலைப் பல்கலைக் கழக மொழியாராய்ச்சித்துறை வாசகர்

மொழியாராய்ச்சித் துறையில் மூழ்கித் தமிழின் பல்வகைச் சிறப்புகளையும் நன்கு உணர்ந்த பாவாணர் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுக்க வேண்டும் என்று கருதினார். அதுவே அவர்தம் வாழ்நாட் பெரும்பணி எனக் கொண்டார். இந்நிலையில் தமிழுக்கென்றே தோற்றுவிக்கப்பட்டது என்னும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழுக்குச் சொற்பிறப்பியல் அகராதி தொகுக்கும் திட்டம் பற்றிய அறிவிப்பு வெளிவந்தது. அப்பணிக்குப் பாவாணர் வேண்டுகோட் படிவம் விடுத்தார். அறிஞர் பெருமக்கள் சிலரும், பாவாணரே அப்பணிக்கு முற்றிலும் தகுதியானவர் என்று அண்ணாமலைப் பல்கலைக் கழக இணை வேந்தர் அரசவயவர் முத்தையா அவர்களிடத்தில் பரிந்துரைத்ததனால் எத்தனையோ இடையீடுகளைக் கடந்து பாவாணருக்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினின்றும் அமர்த்தோலை வந்தது. சேலங் கல்லூரிப் பணியிலிருந்து தம்மை விடுவித்துக்கொண்டு அண்ணாமலை நகர் சென்று திராவிட மொழியாராய்ச்சித் துறை வாசகராகப் பணியை ஏற்றார் பாவாணர். (12-7-1956)

மிகுந்த எதிர்ப்பார்ப்புகளோடு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்குச் சென்ற பாவாணரை ஏமாற்றமே எதிர்கொண்டது. பாவாணரின் பணிகளை மேற்பார்வையிடவும் நெறிப்படுத்தவும் தமிழுக்கு மாறான குழு ஒன்று அமர்த்தப்பட்டது. இந்திய மொழிகளுக் கெல்லாம் சமற்கிருதமே தாய் என்னும் கருத்துக்கொண்ட வங்கப் பிராமணர் சுநீதிகுமார் சட்டர்சி அக்குழுவின் தலைவராக அமர்த்தப் பெற்றார்.

பாவாணருக்குத் தேவையான ஏந்துகள் எவையும் முறையாக அமையவில்லை. அவர் ஆய்வுப்பணிக்குத் தேவையான நூல்கள் இல்லாமையால் தம் சொந்த நூலகத்தையே அலுவலகத்திற்குக் கொண்டுபோய் வைத்துக் கொள்ளவேண்டிய நிலை பாவாணருக்கு ஏற்பட்டது.

சுநீதிகுமார் தலைமையில் நடைபெற்ற துறையின் முதற்கூட்டத்திலேயே அவரோடு பாவாணர் மோத நேர்ந்தது. அடுத்தடுத்துப் பாவாணர்க்குச் சிக்கல்களே நேர்ந்தன. சுநீதிகுமார் கருத்தொடு இணங்கிப் போகுமாறு பலர் ஏடலுரைத்தனர். தமிழைக் காட்டிக்கொடுத்துத் தாம் பணியில் தொடரப் பாவாணர் விரும்பவில்லை.

பல்கலைக் கழகப் பணியிலிருந்து தாம் வெளியேற்றப்பட நேருமென்று தெரிந்தும் 'எனக்கு வறுமை உண்டு; மனைவி மக்களும் உண்டு; அதோடு மானமும் உண்டு' என்று கூறிய பாவாணர் எதிர்ப்பார்த்தது போலவே பல்கலைக் கழகப் பணியினின்றும் வெளியேற நேர்ந்தது (21–9–1961) " யான் வெளியேறினேன், தமிழும் என்னோடு வெளியேறியது" என்பது பாவாணர் குறிப்பு.

## காட்டுப்பாடி வாழ்க்கை

அண்ணாமலை நகரினின்றும் வெளியேறிய பின் முன்னமே எண்ணயிருந்தபடி புதுவையில் மனையொன்று வாங்கி வீடுகட்டும் திட்டம் ஒன்று தோன்றி மறைந்தது. பழையபடி சேலத்திற்கே செல்ல எண்ணினார். இதற்கிடையில் வேலூரைச் சேர்ந்த பெருஞ்செல்வர் ஒருவர் தாம் அச்சகம் அமைத்துத் தருவதாகவும் நூல்களை அச்சிட ஆவன செய்வதாகவும் கூறியமையால் பாவாணர் காட்டுப்பாடியில் குடியேறினார்.

எதிர்ப்பார்த்தபடி எதுவும் நடைபெறவில்லை, பாவாணர் பெரிதும் சிக்கலுக்கு ஆளானார். வறுமையின் பிடியில் குடும்பம் அல்லலுற்றது.

## இல்லற வாழ்க்கை

பாவாணர்க்கு முதல் திருமணம் எந்த ஆண்டு நடைபெற்றது என்பது தெரியவில்லை. அவருடைய அக்கையார் (அக்காள்) பார்த்து முடிவு செய்த எசுத்தர் என்னும் பெண்ணையே இரண்டாவதாக மணந்து கொண்டார் என்பதும், அவர் கரிவலம்வந்த நல்லூரையடுத்த புறக்கடையான்பட்டி என்னும் ஊரினரான உறவுப்பெண் என்பதும் மட்டுமே தெரிகின்றன.

மன்னார்குடியில் வாழ்ந்த காலத்தில் எசுத்தர் அம்மையார் மணவாளதாசன் என்று பெயர் சூட்டப்பட்ட ஓரகவை ஆண்மகவை விட்டுவிட்டுப் பெரும்பிரிவுற்றார் (மறைந்தார்).

மகப்பேறு வாய்க்கப்பெறாத பாவாணரின் இளைய தமையனார் தாயில்லாப் பிள்ளையைத் தத்து எடுத்துக்கொண்டார்.

அக்கையார் தம் அருமை இளவலுக்கு மீண்டும் பெண் தேடத் தொடங்கினார். பாவாணர் அதுபற்றி நாட்டம் செலுத்தவில்லை. நாட்கள் கடந்து கொண்டிருந்தன. தம் அக்கையாரின் மகளான நேசமணியையே மணக்க எண்ணம் கொண்டார் பாவாணர். அவ்வாறே இருவர்க்கும் திருமணம் நடந்தேறியது. "தேவநேயன்–நேயமணி" எத்துணைப் பெயர்ப்பொருத்தம்!

இல்லறவாழ்வை இனிதே நடத்திய இவ்வாழ்விணையர்க்கு (தம்பதி) நச்சினார்க்கினிய நம்பி, சிலுவையை வென்ற செல்வராயன், அருங்கலை வல்லான் அடியார்க்கு நல்லான், மடந்தவிர்த்த மங்கையர்க்கரசி, மணிமன்றவாணன் என்னும் பெயரினரான புதல்வர் நால்வரும், புதல்வியார் ஒருவருமாக ஐவர் பிறந்தனர். இவருள் ஈற்றயல் நிலையாரே புதல்வியார் என்பது வெளிப்படை. "பெயர்கள் நீண்டிருக்கும்போது இறுதிச் சொல்லைத்தான் அழைக்கவேண்டும்" என்பது பாவாணர் தரும் குறிப்பு. நடைமுறை இதற்குச் சிறிது மாற்றமாகவும் உள்ளது. புதல்வியார் பெயர் ஈற்றயற் சொல்லான மங்கை என்னும் பெயராலும், மணிமன்றவாணன் தலைச்சொல்லான மணி என்னும் பெயராலும் அழைக்கப்பெறுகின்றனர்.

மக்களுள் முதலிருவரும் கல்வி கற்று ஆசிரியர் பணியிலும், மூன்றாமவர் கிறித்துவப் பணியிலும் (சமயகுரவர்) அமர்ந்து விட்டனர். அவர்களும் அளவான வருவாயினர் ஆதலின் பெற்றோர்க்கு உதவும் நிலை இல்லை. ஆயினும் அவருள் மூன்றாமவர் மட்டுமே ஓரளவு உதவிவந்தார்.

பாவாணர் காட்டுப்பாடிக்கு வந்த நிலையில் இளந்தை நிலையினரான பின்னிருமக்களும் பெற்றோருடன் இருந்தனர். இந்நிலையில் கவலை தோய்ந்த உள்ளத்தினரான நேயமணியம்மையார் நோய்வாய்ப்பட்டார். வருவாய்க்கு வாய்ப்பில்லாத நிலையில் கையிலிருந்த ஓரளவு இருப்பும் செலவாகி விட்ட சூழலில் பாவாணர் பெரிதும் அல்லலுற்றார். வருவாய்க்குச் சிறிதே கை கொடுக்கும் என்று கருதிப் பாவாணர் தொடங்கிய புலவர் வகுப்பும் தேய்ந்து இற்றது.

## தென்மொழி

பாவாணரின் மாணவரான துரை மாணிக்கம் (பாவலரேறு பெருஞ்சித்திரனார்) கல்லூரிப் படிப்புக்குப் பின் சில மாதம் கான் துறையிலும், சிறிதுகாலம் கூட்டுறவுத் துறையிலும் பணியாற்றிவிட்டு அஞ்சல் துறையில் வேலை வாய்ப்புப் பெற்றுப் புதுவைக்குச் சென்றார். எங்கிருந்தாலும் பாவாணரோடு அவர்க்குத் தொடர்பு இருந்து கொண்டே இருந்தது.

இளமையிலிருந்தே தமிழார்வமும் பாடல் புனைவதில் நாட்டமும் கொண்டவராய் இருந்த துரை மாணிக்கம், அவற்றைப் பெருக்கிக் கொண்டார். சிறந்த பாவன்மை உடையவராக விளங்கினார். அண்ணாமலை நகரில் பாவாணர் இடர்ப்பட்டுக்கொண்டிருப்பதையறிந்து பெரிதும் வருந்தினார்.

பாவாணர் அருமை பெருமைகளை உலகிற்கு உணர்த்தவும், அவர்தம் வாழ்க்கை நிலையை மேம்படுத்தவும், தூயதமிழ்க்கு ஆக்கஞ் சேர்க்கவும் மக்கள் சீர்திருத்தம், நாட்டுரிமைக் கருத்துகளைப் பரப்பவும் ஓர் இதழ் தொடங்கவேண்டும் என்று எண்ணித் திட்டமிட்டார். அஞ்சலகத்தில் உடன் பணியாற்றிய செ.பன்னீர் செல்வம் அவர்களையும் அழைத்துக் கொண்டு அண்ணாமலை நகர் சென்று பாவாணரைக் கண்டு தம் நோக்கத்தைத் தெரிவித்தார். பாவாணர் பெரிதும் மகிழ்ந்து வரவேற்றார். இதழுக்குப் பெயர் சூட்டுவது பற்றிப் பேச்செழுந்தது. பல்வேறு பெயர்கள் எண்ணப்பட்டு முப்பெயர்களாய் நிறுத்தப்பட்டன. 'தென்மொழி', 'தென்னகம்', 'தமிழ்' என்னும் அம் முப்பெயர்களுள் எது சிறந்தது என்பதை எண்ணிப் பார்த்துத் தெரிவிப்பதாகப் பாவாணர் கூறவே இருவரும் விடைபெற்று மீண்டனர்.

பாவாணர் கடிதம் வந்தது. தென்மொழி என்று பெயரிடலாம் என்றும், இது மொழிபற்றிதாயிருப்பதுடன் திசைபற்றிய வடமொழி, தென்மொழி என்னும் பாகுபாட்டையும் திராவிட மொழிகளுக்கெல்லாம் தமிழ்தாய் என்பதையும், அது தெற்கே தோன்றியதென்பதையும் ஒருங்கே உணர்த்தும் என்றும், 'தென்னகம்' என்னும் பெயர்க்கோ 'தமிழ்' என்னும் பெயர்க்கோ இத்திறம் இல்லை என்றும் பாவாணர் எழுதியிருந்தார்.

'தென்மொழி' திங்களீரிதழாக நெல்லிக்குப்பத்தினின்றும் 1959 ஆம் ஆண்டு ஆகத்து முதல் (இயல் 1 ; இசை : 1) வெளிவரத் தொடங்கியது.

இதழின் சிறப்பாசிரியராக இருக்குமாறு பாவாணரை வேண்டிக் கொண்டதாகவும் அவரும் இசைந்திருப்பதாகவும் அவர் பணியாற்றும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தினின்றும் முறையான இசைவை எதிர்நோக்கியிருப்பதாகவும் தென்மொழியின் முதல் இதழிலேயே ஆசிரியர் குறிப்பாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

ஒவ்வோரிதழிலும் பாவாணரின் கட்டுரையும் சில இதழ்களில் அவர்தம் கேள்விச் செல்வமும் இடம் பெற்றன.16 இதழ்கள் மட்டும் வெளிவந்த நிலையில் கடுமையான இழப்பு நேர்ந்தமையால் தொடர்ந்து நடத்த முடியாத நிலையில் அது நின்றுவிட்டது. மீண்டும் தென்மொழி வெளிவரத் தொடங்கியபோது, பாவாணர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினின்றும் வெளியேறிக் காட்டுப்பாடியில் குடியேறியிருந்தார். சிறப்பாசிரியராகப் பாவாணர் பெயர் தாங்கிய தென்மொழி இதழ் (இயல்–1 இசை1) முன்னை இடையீட்டிற்குப் பின் மாதிகையாகவும் பொலிவோடும் 1963 பிப்ரவரி முதல் வீறார்ந்த நடையைத் தொடர்ந்தது.

### மனைவியார் மறைவு

இந்நிலையில் பாவாணரின் ஆருயிர்த் துணைவராகிய நேசமணி அம்மையார் நோய் முற்றிய நிலையில் தம் ஆருயிர்க் கணவரையும் அன்பு மக்களையும் விட்டுவிட்டு இயற்கை யெய்தினார். அச்செய்தியைத் தாங்கி வந்த பாவாணர் கடிதம், பாவாணர் அன்பர்களின் உள்ளத்தைப் பெரிதும் வருத்தியது.

### பாவாணர் பொருட்கொடைத் திட்டம்

களைகணின்றி இளமைப் பருவத்தினரான இரு பிள்ளைகளுடன் பாவாணர் பெரிதும் அலக்கணுற்றார். இந்நிலையில் அவருக்கு உதவும் பொருட்டுப் பாவலரேறு அவர்கள் 'பாவாணர் பொருட்கொடைத்திட்டம்' என்னும் திட்டத்தை வகுத்துச் செயற்படுத்தத் தொடங்கினார். அதுபற்றிய அறிவிப்பு தென்மொழியில் (சுவடி 1, ஓலை 11) வெளிவந்தது.

திட்டம் செயற்பட்டுத் தொடர்ந்து அன்பர்களிட மிருந்து பணம் வந்துகொண்டிருந்த நிலையில் பணம் விடுத்தோர் பட்டியலும் இதழில் வெளியாகியபோதும், யாரோ சிலர் தூண்டுதலினால், எடுப்பார் கைப்பிள்ளையான பாவாணர் தென்மொழியின் பொருட்கொடைத் திட்டத்தை உடனே நிறுத்திவிடுமாறும், வந்த பணத்தை உடனே தம்மிடம் ஒப்படைக்குமாறும் கடிதம் எழுதவே பாவாணர் பொருட் கொடைத் திட்டம் முற்றுப் பெற்றது. திட்டத்தின் வழிவந்த தொகை 2,350

உருபாவும் 14 காசும் பாவாணரிடம் ஒப்படைக்கப்பட்டன. (12.1.64) இது தொடர்பாகப் பாவலரேறு அவர்கள் எழுதியுள்ளது வருமாறு:

"இத்திட்டம்............தம் போலிப் பெருமையைப் பறை சாற்றும் நோக்கங் கொண்டார் ஒரு சிலரால் குலைக்கப்பெற்றுப் போதிய அளவு ஊக்கப்பெறாது பயன் குன்றத் தொடங்கியது. இந்நிலையில் பாவாணர் அவர்களும் நம்பால் கொண்ட ஐயுறவால் மாறுபடவே நம் பெருநோக்கின் அடித்தளமே விரிசல் படத் தொடங்கியது. இதன் முடிவாக யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப்போட்டுக்கொள்ளுதல் போலப் பாவாணர் தம் வருவாயைத் தாமே குறைத்துக்கொண்டார் என்பதைக் கூறியே ஆகல் வேண்டும்." இத்திட்டம் நின்றாலும் பாவாணரின் தென்மொழித் தொடர்பு தொடர்ந்து வந்தது.

தென்மொழி தொடங்கப்பட்டதிலிருந்து பாவாணர் கட்டுரைகளுக்கென்று ஒரு குறிப்பிட்ட தொகை மாதந்தொறும் விடுக்கப்பட்டு வந்தது. எத்துணைப் பொருள் முட்டுப்பாட்டுக் கிடையிலும் பாவாணர்க்குப் பணவிடை தவறுவதில்லை.

இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின்போது பாவாணர் 'தென்மொழி' சிறப்பாசிரியராக இருந்தார். இந்தி வல்லாண்மையை எதிர்த்துத் தென்மொழியின் பொறுப்பாசிரியர் எழுதிய கட்டுரைகளால் ஆசிரியர் குழுவினர் மீது வழக்கொன்று வந்தது. சிறப்பாசிரியரான பாவாணர்க்கும் தென்மொழியில் வந்த கட்டுரைகளுக்கும் தொடர்பில்லை எனப் பொறுப்பாசிரியர் பொறுப்பேற்றுக் கொண்டதால் பாவாணர் மீது ஏதும் வழக்கில்லாமல் ஆனது. அதன் பின்னர் பாவாணரின் விருப்பப்படி சிறப்பாசிரியர் என்ற பெயர் அவ்விதழில் இடம்பெறவில்லை. ஆயினும் மொழியாய்வுக் கட்டுரைகள் மட்டும் தொடர்ந்து தென்மொழியில் இடம் பெற்று வந்தன.

செங்காட்டுப்பட்டிப் பாவாணர் நூல் வெளியீட்டுக்குழு, புத்தனாம்பட்டி அன்பர்கள் குழு முதலானோர் திரட்டியளித்த நன்கொடையைக் கொண்டு பாவாணர் நூல்கள் அடுத்தடுத்து வெளிவரத் தொடங்கின. பாவாணர் புதுத்தெம்பு பெற்றெழுந்தார் எனலாம்.

பாவாணர் புதல்வி மங்கையர்க்கரசியின் மணவிழா 19-5-63 இல் நடைபெற்றது என்பது குறிப்பிடத்தக்கது.

மதுரைப் பாவாணர் மணி விழாக் குழுவினர் பொற்கிழி (உரு.7000) அளித்தனர். முக்கூடல் சொக்கலால் இராம் சேட்டு என்பாரின் நன்கொடையைக் கொண்டு "The Primary Classical Language of the World' என்னும் ஆங்கில நூல் வெளிவந்தது (9-4-66).

## உலகத் தமிழ்க் கழகம்

தூய தனித்தமிழ்க் கொள்கையைப் பரப்பவும் பாவாணரின் சிந்தனைகளை நூல் வடிவில் கொண்டு வரவும் ஒரு தனிக்களம் வேண்டும் என்ற எண்ணம் பாவாணர் பற்றாளர்களிடம் துளிர்த்தது. இந்நிலையில், புலவர் சேந்தமாங்குடியார் நடத்தி வந்த தனித் தமிழ்க் கழகச் சார்பில் திருச்சியில் 10.6.1968 அன்று நடைபெற்ற மாநாட்டில் உலகத்தமிழ்க் கழகம் தோற்றுவிக்கப்பட்டது. பாவாணர் அவர்கள் தலைமைப்பொறுப்பேற்றார். பேரா. பர்.மெ. அழகனார் (சுந்தரம்) துணைத் தலைவராகவும், பெருஞ்சித்திரனார் பொதுச் செயலாளராகவும் புலவர் இறைக்குருவனார் துணைப் பொதுச் செயலாளராகவும் செங்கை செந்தமிழ்க் கிழார் (நா.செல்வராசன்) பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

சேந்தமாங்குடியார், சேலம் சின்னாண்டார், ப.கு. முருகவேள் அருளன், மொழிக்கரசு, வி.பொ. பழனிவேலனார், வெங்காலூர் மாறன் முதலானோர் மாவட்ட அமைப்பாளர்களாகவும், மாநில அமைப்பாளர்களாகவும் அமர்த்தப் பெற்றனர். திரு. தமிழ்க்குடிமகன் முகவை மாவட்ட அமைப்பாளாரானார். பேராசிரியர். வளனரசு நெல்லை மாவட்ட அமைப்பாளரானார். சில மாவட்டங்களுக்குப் பொறுப்பேற்கத் தக்காரைத் தேர்ந்து தெரிவிக்கலாம் என்று அமைப்புக்கூட்டத்தில் பேசப்பட்டது.

அடுத்த ஆண்டில் கழகத்தின் முதல் மாநாட்டை முகவை மாவட்டக் கழகச் சார்பில் நடத்துவதாகக் கூறிச் சென்ற தமிழ்க்குடிமகன் தாம் கூறியவாறே 1969 இல் பரமக்குடியில் உ.த.க. ஆட்டை விழா, திருவள்ளுவர் ஈராயிரம் ஆண்டு நிறைவு விழா, பாவாணரின் திருக்குறள் தமிழ் மரபுரை வெளியீட்டு விழா, ஆகியவற்றை உள்ளடக்கிய மாநாட்டைச் சிறப்புற நடத்தினார்.

உலகத் தமிழ்க் கழகத்தின் இரண்டாம் மாநாடு மதுரையில் நடைபெற்றது.

உலகத் தமிழ்க் கழகத்தின் மூன்றாம் மாநாடு தமிழன் பிறந்தகத் தீர்மானிப்புக் கருத்தரங்கமாகத்

தஞ்சையிலும் (1972), நான்காம் மாநாடு சென்னையிலும் (1979) நடைபெற்றன.

பாவாணர் வழியில் தூய தமிழில் பலரும் பெயர் ஏற்றுச் சிறந்தனர். தம் வீட்டு வாழ்வியல் நிகழ்ச்சிகளைத் தமிழிலேயே நடத்தியும் நடத்துவித்தும் தாய்மொழிக்குப் பெருமை சேர்த்தனர். உலகத் தமிழ்க் கழக வாயிலாகத் தமிழ்ப் பெருமக்களில் சிறந்தோர்களான மறைமலை யடிகள், பாவாணர், பாரதிதாசன் முதலியோர்க்கு விழாவெடுத்துச் சிறப்பித்தனர்.

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்டம்

பாவாணர் பல்வேறு நூல்களை எழுதி வெளியிட்டாலும் அவர் வாழ்நாட் பெரும் பணியாகச் செய்ய விரும்பியது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலியேயாகும். அவ்வாய்ப்பை அண்ணாமலைப் பல்கலைக்கழகம் இழந்தது.

அதன்பின் அற்றைப் பேராயக்கட்சி அரசோ, சென்னை, மதுரைப் பல்கலைக் கழகங்களில் ஒன்றோ பாவாணரைக்கொண்டு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி உருவாக்கும் திட்டம் திருப்பத்தூர் ஆறுமுகனார் (மலேசியா) இராம. பெரியகருப்பன் (சிங்கப்பூர்) முதலானோர் பலர் உதவ முன்வந்தும் செயல் உருவம் பெறவில்லை. இந்நிலையில் பாவலரேறு பெருஞ்சித்திரனார் இம்முயற்சியில் இறங்கினார். இனி, 'என் ஆசிரியருக்கு இளமையுமில்லை, அவர் மாணவனாகிய எனக்கு முதுமையுமில்லை' என்று கூறி அகரமுதலித் திட்டம் ஒன்று வகுத்தார். இத்திட்டம் பற்றிய விளக்கமறிந்த பாவாணரின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. இது இறைவன் ஏற்பாடென்றும், வல்லான் வகுத்த வழி என்றும் கூறித் தென்மொழித் திட்டத் தேவநேயன் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி என்று பெயர் சூட்டி அறிவித்துப் பணிகளைத் தொடங்கினார்.

மேற்கூறிய திட்டப்படி 200 உறுப்பினர்கள் ஐந்தாண்டு காலத்திற்கு மாதந்தொறும் பத்து உருவா அனுப்புவதென்றும் அதில் ஐந்து உருவா அகரமுதலி உருவாக்கவும், ஐந்து உருவா அகரமுதலி வெளியிடவும் பயன்படுத்தப்படும் என்றும் இவ்வகையில் மாதந்தொறும் உரூ.2000.00 பாவாணர் கைக்குக் கிடைக்கும் என்றும் கூறப்பட்டது. 200 க்கு மேலானோர் உறுப்பினராகிப் பணமும் கட்டி வரலாயினர். ஐந்தாண்டுக்குரிய முழுத்தொகையையும் கட்டினாரும் சிலர்.

இந்நிலையில் அந்நாள் சட்டமன்ற மேலவை உறுப்பினராய் இருந்த தவத்திரு.குன்றக்குடியடிகளார் வாய்ப்பு நேரும் போதெல்லாம் பாவாணரின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிப் பணியை அரசே ஏற்க வேண்டும் என்று முதலமைச்சர் கலைஞர் அவர்களிடம் வலியுறுத்தி வந்தார். திருவாரூரில் குன்றக்குடி அடிகளார் தலைமையில் நடைபெற்றதும், பாவாணர், பெருஞ்சித்திரனார் உள்ளிட்ட பலர் பங்கேற்றதுமான விழாவில் (2.12.73), திரு.வி.க.சிலையைத் திறந்து வைத்து உரையாற்றிய முதலமைச்சர் கலைஞர் அவர்கள், பாவாணரின் அருந்தமிழ்ப் பணிக்கு – அகரமுதலிப் பணிக்குத் தமிழக அரசு உதவும் என்று அறிவித்தார். அதன்படி செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் அமைக்கப்பெற்று 8.5.74 அன்று பாவாணர் இயக்குநராகப் பணியமர்த்தம் செய்யப்பெற்றார்.

தென்மொழி தொடங்கிய முன்னைத்திட்டம் கைவிடப்பெற்றது. ஆனால் அதற்காகப் பணம் அனுப்பியோர் எல்லாம் பாவாணர்பால் வைத்திருந்த பெருமதிப்பால் அமைதியுற்றனர்.

மொழிஞாயிறு பாவாணர் அவர்கள் அகரமுதலிப் பணிகளைச் செவ்வனே தம்முடைய நுண்மாண் நூழைபுலச் செவ்வியினால் பல்வேறு வகையான நோக்கு நூல்களைக் கொண்டு அயராது உழைத்துச் செய்து வரலானார். 'அகரம்' தொடங்கி 'ஆசைமொழி' என்ற சொல் வரையில் அகரமுதலி வடிவில் அணியம் செய்திருந்தார்.

## பேரா இயற்கை

இந்நிலையில் தமிழக அரசு மதுரையில் நடத்திய ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டில் பங்கேற்றுப் பந்தயத் திடலில் நடந்த பொதுநிலைக் கருத்தரங்கில் 'மாந்தன் தோற்றமும் தமிழர் மரபும்' என்னும் தலைப்பில் ஒன்றேகால் மணிநேரம் உரையாற்றிய பாவாணர் உடல்நலங்கெட்டு அன்றிரவு 10.20 மணிக்கு மதுரை அரசினர் இராசாசி மருத்துவ மனையில் சேர்க்கப்பெற்றார்.(5.1.81)

தி.பி.2012 சுறவம் (தை) 2 ஆம் பக்கல் (15.1.81) இரவு 12.30 மணிக்கு மொழிஞாயிறு பாவாணர் அவர்கள்

அருந்தமிழ் அன்பர்களையெல்லாம் ஆறாத்துயரில் ஆழ்த்திவிட்டு பேரா இயற்கை எய்தினார்.

மொழிஞாயிறு பாவாணர் மறைவுக்குப் பின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலியின் முதல் மடலத்து முதற்பகுதி வெளியிடப்பட்டது. தொடர்ந்து இத்திட்டம் முனைவர் இரா. மதிவாணன் அவர்கள் பொறுப்பில் இயங்கியது. பாவாணர் நூல்கள் அனைத்தும் அவரின் நூற்றாண்டு நினைவாகக் கலைஞர் கருணாநிதி அவர்களால் நாட்டுடைமையாக்கப்பட்டன.

அவர் தொடங்கிய செந்தமிழ்ச்சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தில் அவர் விரும்பியவாறே பல்வேறு மடலங்களாக அகரமுதலியின் பகுதிகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

பாவாணர்க்கு அவர் எழுதிய நூல்களே 'மொழிஞாயிறாம்' முதன்மைச் சிறப்பையளித்தன. நிறைமலையாம் மறைமலையடிகள் பல்லாண்டுகளுக்கு முன்னரே பாவாணரை வியந்து பாராட்டுவதைக் கூறாமல் பாவாணர் வரலாறு சீர்மையாகாது! அது வருமாறு :

*"...தலைமைக் கண்காணியார் தவத்திரு திரஞ்சு (Trench) எழுதிய சொல்லாராய்ச்சி, பேராசிரியர் மாக்ககமுல்லர் எழுதிய 'மொழியறிவியல்', பேராசிரியர் சாய்சு எழுதிய 'ஒப்பியன் மொழிநூல்' ஆகிய ஆங்கில நூல்களை யாமே பெருவிருப்புடன் படித்துக்கொண்டிருக்கும் போது, அந்த முறையில் தமிழ்ச்சொற்களை ஆராய வேண்டுமென்று விரும்பினேம். தமிழ்ப் பேரறிஞர்களுக்கும் புலப்படாமல் மறைந்து கிடந்த, விரிவாகவும், வியப்பாகவும் உள்ள தமிழ் மொழியறிவுப் பரப்பு பண்டாரகர் கால்டுவெல் எழுதிய 'திராவிட மொழிகளின் ஒப்பியல் ஆய்வு' நூலால் புலப்படலாயிற்று.*

*எனினும் பண்டாரகர் கால்டுவெல் அறியப்படாத வட்டாரத்தில் செய்ததொரு முயற்சியாதலால் தமிழ்ச்சொற்களையெல்லாம் விடாமல் நிறைவாக எடுத்தாராய்ந்துள்ளார் என்று எதிர்ப்பார்ப்பதற்கில்லை. இதுவே மொழியியலை ஆராய வேண்டுமென்று எம்மைத் தூண்டியது. எனவே ஞானசாகரம் (அறிவுக்கடல்) என்னும் எம்முடைய இதழின் முதல் தொகுதியில் அத்துறையில் ஒன்றிரண்டு கட்டுரைகளை எழுதி வெளிட்டோம். ஆனால் அப்போது சமயம், மெய்ப்பொருளியல், இலக்கிய வரலாறு ஆகிய துறைகளில் எம்முடைய முழுக் கவனத்தையும் செலுத்த வேண்டி ஏற்பட்டமையால் மொழியாராய்ச்சித் துறையில் தொடர்ந்து ஈடுபடக்கூடவில்லை. ஆயினும் தகுதியுடைய அறிஞர் யாராவது இத்துறையில் ஆராய்வதற்கு முன்வரக் கூடுமா என்று எதிர்ப்பார்த்துக் கொண்டிருந்தேம். அப்போது யாழ்ப்பாணம் திருத்தந்தை ஞானப்பிரகாசர், தாம் எழுதிய மொழியியல் ஆராய்ச்சி நூலை எமக்கு அனுப்பி வைத்தார். அது, ஓரளவு எமக்கு மனநிறைவு அளித்தது. எனினும் மொழியியல் ஆராய்ச்சித் துறை மிகவும் விரிவும் ஆழமும் உடையதாதலால் பழந்தமிழ் இலக்கியங்களைக் கற்று அவற்றைக்கொண்டு நன்கு புரிந்து கொள்ளும் வகையில் மேலும் மொழியியல் ஆராய்ச்சி நூல்கள் வெளிவருதல் வேண்டுமென்று கருதினேம். அந்த நேரத்தில் திரு.தேவநேயனார் யாம் எதிர்ப்பார்த்ததை ஏறத்தாழ முற்றும் நிறைவேற்றியது கண்டு பெருமகிழ்வுற்றேம். அத்துறையில் அவர் மிகவும் உழைப்பெடுத்து ஆராய்ந்து எழுதியிருப்பவற்றைத் தமிழ் அறிஞர்கள் நன்றாக நம்பலாம்.*

*"சொல்லாராய்ச்சித் துறையில் திரு. தேவநேயனார் ஒப்பற்ற தனித்திறமை யுடையவர் என்றும் அவருக்கு ஒப்பாக இருப்பவர் அருமையாகும் என்றும் யாம் உண்மையாகவே கருதுகின்றேம்...." என்பது மறைமலையடிகளாரின் உரைச்சான்று ஆகும்!*

மேலும் மூதறிஞர் கா. அப்பாத்துரையார் அவர்கள் பாவாணர் அவர்களைப்பற்றிப் பேசுங்கால்,

"மொழிமலை, இலக்கியமலை, சமயமலை என மும்மலை ஏந்திய முத்தமிழ் அறிவுமலையாக இயங்கியவர் தவத்திரு மறைமலையடிகளார். இன்று மொழிமதி, மொழி முகில்கள், மொழித் தாரகைகள் என விளங்கும் எண்ணற்ற வான்படைத் துணைகளுடன் தனித்தமிழ் இயக்க வானில் ஒளிவீசும் மொழி ஞாயிறாக விளங்கியவர் பாவாணர்!

தனித்தமிழ் இயக்கம் நன்கு வளர்ந்த இயக்கம் என்பதில் ஐயமில்லை. ஏனெனில் அன்று அவ்வியக்கத்தின் ஒப்பற்ற ஒரேயொரு தலைவராக அடிகளார் திகழ்ந்தார். தாமே படையன்றி அவருக்குப் பிறிது படை இல்லை. ஆனால் இன்று துறைதுறையாகத் தலைவர்கள், இயக்குநர்கள், அறிஞர்கள், கலைஞர்கள்

எண்ணற்றவர் உள்ளனர். மேன்மேலும் பெருகி வருகின்றனர். தலைவர்களை இயக்கும் அறிவுத் தலைமை ஒளியாக மொழிஞாயிறு இலங்கினார்.

மறைமலையடிகளார் வளர்த்த தமிழைவிட மொழிஞாயிற்றின் ஒளியில் வளர்ந்த தமிழ், 'ஆற்றல் சான்ற தமிழ்' என்பதைத் தமிழகம் அறிய நெடுநாள் செல்லாது. எத்தகைய அறிவுக்கருத்தையும் அறிவியல் கருத்தையும் கலை நுட்பத்தையும் கலை நுணுக்கங்களையும் புலப்படுத்தும் திறனுடையதாய் அது ஒளிர்கின்றது. கழகத் தமிழ் என்றே அதனைக் கூறிவிடலாம். தனித்தமிழையே கருவியாகக் கொண்ட என் போன்றோரால் எட்டிப்பிடிக்க முடியாத அளவில் அது ஆழ்ந்து அகன்று உயர்ந்து வளம்பெற்று வளர்ந்து வருகிறது. மேலும் வளர இருக்கிறது!

பாவாணர், உலகில் வேறு எம்மொழிக்கும் கிட்டாது தமிழகத்துக்கு மட்டுமே கிட்டிய, அதே சமயம் தமிழகத்திற்கு மட்டுமின்றி அறிவுலகுக்கே உரிய மொழிப்புலவர் ஆவார். தனித்தமிழியக்கம் அயல்மொழிச்சொல் நீக்கும் இயக்கம் மட்டுமன்று; அது ஒன்றே உலகில் மொழிவளர்க்கும் ஒரே இயக்கம் ஆகும். இதனை நுணித்தறிந்து கண்டவர், ஆசிரியர் தொல்காப்பியனார்; ஆசிரியர் மறைமலையடிகள். ஆனால் இதனைக் கண்டவர் மட்டுமல்லர்; கண்டு மொழியை, எல்லாத்திறங்களிலும் நாம் காண எடுத்துக்காட்டும் திறமுடைய தமிழகத்தின், உலகின் ஒரே அறிஞராகத் திகழ்ந்தவரே பாவாணர்! – அப்பாத்துரையாரின் இக்கருத்தை மறுப்பாருண்டோ?

மேலும் மொழிஞாயிறு பாவாணர் அவர்களின் முதன் மாணாக்கராகத் திகழ்ந்த பாவலரேறு பெருஞ்சித்திரனார் தம் ஆசிரியப் பெருமானை அழகிய எழுத்தோவியமாக்கிக் காட்டும் திறத்தையும் நாம் அறிதல் வேண்டும்.

ஊழிப்பேரொளி பாவாணர் என்ற தமது கட்டுரையில், பளபளப்பான கருத்த முகம்; ஒளி நிரம்பி வழியும் கூரிய விழிகள்; அகன்று ஏறிய நெற்றி; அடர்த்துச் சிலிர்க்கும் அரிமா மீசை; ஏக்கழுத்து; பீடுநடை; பெருமிதமான உடை; அறிவு தெறிக்கும் கணீர் என்ற பேச்சு; குழந்தை உள்ளம்; இவற்றின் மொத்த உருவம் பாவாணர்!

தமிழ்மொழி ஆய்விலேயே ஐம்பது ஆண்டுகள் மூழ்கித் திளைத்த இப்படிப்பட்ட பேரறிஞர் ஒருவரைத் தமிழகம் இந்நாள்வரை கண்டதேயில்லை. இவர் வாயிலிருந்து சரமாரியாக வந்து விழும் தனித் தமிழ் ஆராய்ச்சிக் கருத்துக்களை இதுவரை எந்த அறிஞரும் தமிழ் மொழிக்கு வழங்கிவிடவில்லை. தமிழ்த்துறைக்கு அவர் தொண்டு புதியது. தமிழர்க்கு அவர் கருத்துக்கள் மயக்கறுப்பன. மேனாட்டார்க்கு அவர் நூல்கள் வியப்பளிப்பன. அவர் எடுத்துக்கொண்ட முயற்சி அரியது. தொல்காப்பியர் காலத்திற்குப் பின் தமிழ் தன்னை நிலைப்படுத்திக்கொள்ளும் ஒட்டுமொத்த முயற்சிக்குப் பாவாணர் என்றே பெயரிடலாம்.

அவர் கருத்துக்கள் முறிக்கப்பட்ட தமிழனின் முதுகெலும்பைத் தூக்கி நிறுத்தும் வல்லமை வாய்ந்தன; தூங்கிக் கிடக்கும் தமிழனைத் தட்டியெழுப்பும் வீறு நிரம்பியன, மங்கிக் கிடக்கும் தமிழ் மொழியின் செம்மாப்பினை உலகமெல்லாம் பறைசாற்றும் ஆற்றல் நிறைந்தன. மொழியாராய்ச்சி என்னவென்றே அறியாமற் கிடந்த தமிழனுக்கு மொழியுணர்வூட்டி, அதன்வழிப் பண்டைய வரலாறுணர்த்தி எழுச்சி பெறச் செய்வன. அவர் பேச்சும் எழுத்தும் தமிழரின் ஒவ்வொரு செவியிலும் அறிவிலும் பட்டு எதிரொலித்தல் வேண்டும் அப்பொழுதுதான் தமிழன் தன்னுணர்வு பெறுவான். தன்மானங்கொள்வான், தன்னறிவுணர்வான், மொழிப்புலங்காணாது, வழிப்புலந்தப்பிய தமிழனுக்கு அவர் ஊட்டும் விழிப்புணர்வும் அதனின்றெழும் ஒவ்வோர் ஆய்வு முடிவும் தமிழர்க்கு என்றைக்கும் ஒளி காட்டி நிற்கும் என்பதில் ஐயமே இல்லை.

பெரியாரின் குமுகாயப் போராட்டம் புறந்தெரிவது, அடிகளாரின் மொழியியல் போராட்டம் அகம் ஒடுங்கியது. அடிகளாருக்குப் பின் இப்போராட்டம் இருளில் புகைபோல் ஒளி மழுங்கியது. பாவாணரின் விடா முயற்சியோ, அதனை மீண்டும் புகையுள் தீப்போல் ஒளிசேர்த்தது.

தன்மானத் திறவுகோலைக் கொண்டுதான் அறிவுப்பூட்டைத் திறக்க முடியுமென்று கண்ட மொழி வரலாற்றுப் பேராசிரியராகிய பாவாணர், எத்தகைய போலித் தன்மைகளையும் கண்டதும் இல்லை, கேட்டதுமில்லை.

இவர் கண்டது தமிழ் கேட்டது தமிழ் ; உண்டது தமிழ் ; உயிர்ப்பது தமிழ்; கொண்டது தமிழ்; கொடுப்பது தமிழ் ; விண்டது தமிழ்; விளக்குவது தமிழ் ; என்று தமிழே என்பாகவும், தசையாகவும் குருதியாகவும் வாய்க்கப்பெற்ற தமிழின் முழு உருவம் பாவாணர் என்னில் வியப்படையவும் வேண்டா ; மிகையென்று கருதிவிடவும் வேண்டா ; இவரின் அளப்பரிய தமிழாற்றலைத் தமிழகம்

பயன்படுத்திக்கொள்ளுதல் வேண்டும். இவர் நூல்கள் அத்தனையும் தமிழ்மொழிக்கு ஏற்றம் உரைப்பன. தமிழை ஆரிய இருளிலிருந்து மீட்டுக்காக்கும் அரிய ஒளி ஞாயிறாகும். வீழ்ந்து பட் ட தமிழனுக்கு விழிப்பூட்ட வல்லன. ஆயிரமாயிரம் ஆண்டுகளாக அடிமைப்பட்டுக் கிடக்கும் தமிழ் மொழியை மீட்க வல்லன. மறைமலையடிகளால் தோற்றுவிக்கப்பெற்று, இவரால் பேணிக்காக்கப் பெற்ற தனித் தமிழ் இயக்கம் செழிப்படைய செழிப்படையத்தான் தமிழ்மொழி துலக்கமுற்று விளங்கும். அப்பொழுதுதான் தமிழ் அறிவியல் மொழியாகவும் வாழ்வியல் மொழியாகவும் வளம்பெறும். தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம் முதலிய தென்மொழி இலக்கணப் புலமையும் சமற்கிருதம், கிரேக்கம், இலத்தீனம், உருது, இந்தி, ஆங்கிலம் முதலிய வடமொழி இலக்கணப் புலமையும் ஒருங்கே கைவரப் பெற்ற மொழியியல் ஞாயிறான பாவாணர் தமிழகத்தை விளங்கிக் கொண்டுள்ள அளவுக்குத் தமிழகம் இவரை விளங்கிக் கொள்ளுமானால், பயன்படுத்திக் கொள்ளுமானால் தமிழுக்கு என்றும் அழிவில்லை; தமிழினத்திற்கு என்றும் வீழ்ச்சியில்லை!"

– இவை அவர் உயிரோடு இருந்தபோது உரைக்கப்பெற்ற உயர்மொழிகள்! அவரை அரசு பயன்படுத்தத் தலைப்பட்ட சில ஆண்டுகளிலேயே பாவாணர் பேரா இயற்கை அடைந்தது நமக்குப் பேரிழப்பே!

பாவாணரின் கருத்துகள், கொள்கைகள் என்றென்றும் தமிழ்மொழியைத் தூக்கி நிறுத்தித் தோள் கொடுக்கும் மாண்புடையன! வாழ்க பாவாணர் புகழ்!

– அடிப்படை : பாவாணர் நூற்றாண்டு விழாமலர்,
தென்மொழி வெளியீடு

## 2. தமிழனின் பிறந்தகம்

ஒரு வீட்டிற்கு ஆவணம் போன்றே ஒரு நாட்டிற்கு வரலாறு உரிமைச் சான்றாகும். ஆயின் ஓர் ஆவணத்தில் எதிரிகளால் ஏதேனும் கரவடமாகச் சேர்க்கப்படலாம். அது போன்றே ஒரு நாட்டு வரலாறும் பகைவரால் அவர்க்கேற்றவாறு மாற்றப்படலாம். ஆதலால் இவ்விரு வகையிலும், உரிமையாளர் விழிப்பாயிருந்து தம் உரிமையைப் போற்றிக் காத்துக் கொள்ளல் வேண்டும்.

தமிழக வரலாறு ஆரியர் தென்னாடு வந்ததி லிருந்து கடந்த மூவாயிரம் ஆண்டாக மறைக்கப்பட்டும் மாற்றப்பட்டும் வந்துள்ளது; இதன் உண்மையான நிலையை அறிதற்கு இந்திய வரலாற்றைத் தெற்கினின்று தொடங்கல் வேண்டும். இந்திய வரலாற்றுத் தந்தையாகக் கருதப்படும் வின்செண்ட் சிமிது (Vincent Smith) தம் 'இந்திய முந்திய வரலாறு' (Early History of India) பொத்தகத்தில் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் கூற்றைப் பின்வருமாறு எடுத்துக் கூறியுள்ளார்.

### INDIA PROPER IN THE SOUTH

The attempt to find the basic element of Hindu Civilization by a study of Sanskrit and the History of the Sanskrit in Upper India is to begin the problem at its worst and most complicated print. India, South of the Vindyas the Peninsular India still continues to be india proper. Here the bulk of the people continue distinctly to retrain their pre-Aryan features, their pre-Aryan languages, the pre-Aryan Social instituitions. Even here the process of Aryanization has gone indeed too far to leave it easy for the historian to distinguish the native warp from the foreign woof. But if there is anywhere any chance of such successful disentanglement, it is in the South and the farther South we go to the larger does the chance crow.

The scientific historian of India, then ought to begin his study with the basin of the Krishna, of the Cauvery, of the Vaigai, rather than with the Gangetic plain, as it has been now long, too long, the fashion.

-(Tamilan Artuary. No2, (1908) P.4)

இந்நெறிமுறையைக் கடைப்பிடித்துத் தமிழக வரலாறு வரைந்தவர் பி.டி. சீனிவாசையங்கார், வி.ஆர். இராமச்சந்திர தீட்சிதர் என்னும் இருவரே.

ஒரு நாட்டு வரலாறு வரைவதற்குப் பயன்படும் மூலவாய்கள் (Sources) பின்வருமாறு ஐவகைப்படும்.

1. மரபு வழக்கு (Tradition)
2. அயல் நாட்டார் குறிப்பு
3. தொல்பொருட் சான்று (Archaeological evidence)
4. நாட்டிலக்கியம்
5. நாட்டு மொழி.

பழம் பாண்டி நாடான பண்டைத் தமிழகம் கடலுள் முழுகிப் போனதாலும், ஆரியர் வருகைக்கு முற்பட்ட அனைத்திலக்கியமும் அழிக்கப்பட்டுவிட்டதினாலும் தொல்பொருட் சான்றும் பண்டை இலக்கியமும் தமிழக வரலாற்றிற்குப் பயன்படாவாறு அடியோடு இறந்துபட்டன. அதனால் இன்று வரலாற்றுச் சான்றாக உதவுவது பெரும்பாலும் மொழியே.

## இற்றை இலக்கியச் சான்றுகள்.

தமிழ் தோன்றியது தென் மாவாரியில் முழுகிப்போன குமரி நாடே. ஆதலால் தமிழன் தோன்றியதும் அந்நாடே. குமரிக் கண்டத் தென்கோடியில், பனிமலைத் தொடர் போலும் பன்மலையடுக்கத்துக் குமரிமலைத் தொடரும், அதனின்று பாய்ந்தோடிய பஃறுளியென்னும் கங்கை போலும் பேரியாறும் இருந்தன. அப்பழம் பாண்டி நாட்டையாண்ட பாண்டி வேந்தருள் ஒருவன் நெடியோன் என்பான்.

"முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"
(புறம் 9. 10–11)

அவன் காலத்திலோ, பின்போ, ஒரு பெருங்கடல்கோள் நிகழ்ந்து குமரிமலையும் பஃறுளியாறும் அதன் கரையில் கட்டப்பட்ட பாண்டியன் தலைநகராகிய (தென்) மதுரையும் உள்ளிட்ட பழம் பாண்டி நாட்டின் தென் பெரும் பகுதியை முழுங்கிவிட்டது. அதுவே தமிழிலக்கியம் கூறும் முதல் கடல்கோள். கடல்கோளுக்குத் தப்பிய அல்லது பிற்பட்ட பாண்டியன் ஒருவன் வடதிசையிலுள்ள பனிமலையையும் கங்கையாற்றையும் கைப்பற்றித் தான் இழந்த குமரிமலைக்கும் பஃறுளியாற்றிற்கும் ஈடுசெய்து கொண்டான். இதையே,

"அடியிற் றன்னள வரசர்க்குணர்த்தி
வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலையடுக்கத்துக்
குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவ வாழி"
– (சிலப். காடுகாண். 17–22)

என்று பாடினார் இளங்கோவடிகள்.

அடியிற் றன்னளவு அரசர்க்குணர்த்தி வடிவேலெறிந்து வான் பகை கொண்டவன், நெடியோனுக்கு முந்திய வடிம்பலம்ப நின்ற பாண்டியன். நெடியோன் முந்நீர்க்கு விழாக் கொண்டாடி அதனோடு நட்பு பூண்டவன்.

குமரிக் கண்டத்தின் தென்பகுதி மூழ்கிய பின் வடபகுதியில் நெய்தல் நிலத்தில் கதவம் (கபாடம்) அல்லது புதவம் அல்லது அலைவாய் என்று பெயர் பெற்ற இரண்டாம் பாண்டியத் தலைநகர் தோன்றிற்று. பின்பு அதையும் கடல் கொண்டது. அஃது இரண்டாம் கடல்கோள்.

அதற்குத் தப்பிய பாண்டியன் தன்போல் எஞ்சியிருந்த தன் குடிகளைச் சோழநாட்டிலும் சேர நாட்டிலும் ஒவ்வொரு பகுதியைக் கைப்பற்றிக் குடியிருத்தினான். இதனையே

"மலிதிரையூர்ந்து தன் மண்கடல் வெளவலின்
மெலிவின்றி மேற்சென்று நாமேவார் டிடம்படப்
புலியொடு வில்நீக்கிப் புகழ் பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்"

என்று முல்லைக்கலி (104. 1–4) கூறும்.

"சோழநாட்டெல்லையிலே முத்தூர்க் கூற்றமும் சேரமாநாட்டுக் குண்டூர்க் கூற்றமும் என்னும் இவற்றை, இழந்த நாட்டிற்காக ஆண்ட தென்னவன்" என்று அடியார்க்கு நல்லார் உரைத்தலும் இதுபற்றியதே.

இங்ஙனம் இரு கடல்கோள்களால் குமரிக்கண்டத்தின் தென் கோடியிலிருந்த பஃறுளியாற்றிற்கும் வடகோடியிலிருந்த குமரியாற்றிற்கும் இடைப்பட்ட நில நீட்சியை "எழுநூற்றுக் காவதவாறு" (ஏறத்தாழ ஈராயிரம் கல்) என்னும் அந்நிலப்பரப்புப் பகுதிகளை, "ஏழ்தெங்க நாடும் ஏழ்ம துரைநாடும், ஏழ்முன்பாலைநாடும், ஏழ் பின்பாலை நாடும், ஏழ் குறும்பாலை நாடும் என்னும் இந்த நாற்பத்தொன்பது நாடும் குமரி, கொல்லம் முதலிய பன்மலை நாடும் காடும், நதியும், பதியும்" என்றும் அடியார்க்கு நல்லார் உரைத்திருப்பது, கடுகளவும் கட்டுச் செய்தியாயிருக்க முடியாது.

அருச்சுனன் தெற்கே திருநீராட்டிற்கு (ஷேத்ராடனம்) வந்த பாரதக் காலத்திலும், அதற்குப் பிற்பட்ட தொல்காப்பியர் காலத்திலும் (கி.மு. ஏழாம் அல்லது ஆறாம் நூற்றாண்டு) பஃறுளி மதுரை நோக்கி வடமதுரையென வழங்கிய வைகை மதுரை தோன்றவில்லை. குமரியாறு ஓடிற்று. பின்னர் அதுவும் கடலுள் மூழ்கிற்று. அதன் பின்னரே 'தொடியோர் பௌவம்' என்று இளங்கோவடிகள் குறிக்கவும், "தடநீர்க் குமரி வடபெருங்கோட்டின்காறுங் கடல் கொண்டடொழிதலால்" என்று அடியார்க்கு நல்லார் உரைக்கவும் நேர்ந்தது. குமரியாற்றைக் கடல் கொண்டது மூன்றாங் கடல்கோள்.

மணிமேகலைக் காலத்தில் புகார் கடலுட் புகுந்தது நாலாங் கடல்கோள். இறையனாரகப் பொருள் உரையிலுள்ள முக்கழக வரலாறு, முதலிரு கடல் கோள்களைக் குறிக்கின்றது. இது நம்பத்தக்க செய்தியே.

பனிமலை கடலுட் பதுங்கியிருந்த தொன்முது பண்டைக்காலத்தில், நாவலந் தீவின் தென்பாகம் உயர்ந்தும், வடபாகம் தாழ்ந்தும் இருந்தன. பனிமலை கிளர்ந்து குமரிமலை நாடு மூழ்கிய பின் வடபாகம் உயர்ந்தும் தென்பாகம் தாழ்ந்தும், வடதென் திசைகள் முறையே உத்தரம், தக்கணம் எனப்பட்டன.

ஒ.நோ. கீழ் → கீழ்க்கு → கிழக்கு X மேல் – மேற்கு

உ. (மேல், உயர்) + தரம் = உத்தரம். தக்கு=தாழ்வு தக்குத் தொண்டை = தாழ்ந்த குரல் தொண்டை. தக்கு = தக்கணம் (Deccan).

வலத்தை அல்லது வல திசையைக்குறிக்கும் தக்ஷிண (L. Dexter - dexterity) என்னும் வடசொல் தக்ஷ் மூலத்தினின்று பிறந்ததாதலின், வேறு சொல்லாம். மானியர் உவில்லியம்சு சமற்கிருத ஆங்கில அகர முதலியில் உத்தர (Uttara) என்னும் சொல்லைப் பார்க்க.

தமிழ் தெற்கே தோன்றிய மொழியாதலால் தென்மொழி, தென்கலை, தென்னாடு, தென்னிலம், தென்புலம், தென்புலத்தார், தென்பாலி, தென்னகம், தென்பாண்டி, தென்மதுரை, தென்னன், தென்னவன் முதலிய சொல் வழக்கெழுந்தன.

இராமன் தன்கானக வாழ்க்கையில் அகத்தியரைக் கண்டபோது, பின்னவர் முன்னவனை அன்புடன் வரவேற்றதைக் கல்வியிற் பெரியவரும் பாவலருள் மாவலருமான கம்பர்

"நின்றவனை வந்த நெடி யோனடி பணிந்தான்
அன்றவனு மன்பொடுத ழீஇயமுத கண்ணான்
நன்றுவர வென்றுபல நல்லுரை பகர்ந்தான்
என்றுமுள தென்றமிழி யம்பியிசை கொண்டான்"
(கம்பரா அகத். 47)

என்று இனித்த தனித் தமிழ்ப் பாவாற் பாடித் தமிழின் கன்னித் தூய்மையையும், தென் குமரி நாட்டுத் தோற்றத்தையும் என்றுமழியாத் தன்மையையும், அகத்தியர் அதைக் கற்றுத் தேர்ந்ததையும் முத்தமிழிலக்கணம் இயற்றிப் புகழ் பெற்றதையும் ஒருங்கே தெள்ளத் தெரிவித்தார்.

The Tamils Indigenous To South India

"Some writers conduct the ancient Dravidians with the self confidence of a cook's guide through the North Western or North-Eastern mountain passes of India and drop them with a ready made foreign culture, on the banks of the Kaveri and Vaigai. The slender evidence on which they rely for this elaborate theorizing is the fact that Brahui. a dialect spoken in the Northern corner of India, possesses a few words allied to Tamil words. The only legitimate inference from this is that the Tamil language or a language allied to it prevailed up to the North-west province in ancient times This inference is supported by another fact that the modern dialects of Northern India now called Sanskritic or Gandian have a fundemental grammatical framework and a scheme of syntax, the same as that of the Dravidian dialects, so much so that sentencs from the one set of dialects can be translated into any one of the other set of dialects by the substitution of word for word without causing any breach idiom. These facts can only prove that people speaking dialects allied to Tamil once inhabited the whole of India and not that these people must necessarily have come into India from outside the country. No single fact has yet been adduced that compels us to believe that the ancient people of India were not autochthones. (The History of the Tamils By P.T. Srinivasa Iyenger P.2)

**WHERE THIS EVOLUTION FIRST TOOK PLACE**

The five sub-division of the habitable regions occur contiguous to each other and in a small fraction of the earth's surface in India south of the vindhyas. It is therefore easy to understand how increase of population and alterations in the natural supply of food-staffs brought about here at different periods the migration of men from region to region and the consequent development of the different stages of human culture. the hunter, the nomad, the pastoral, the castal and the agricultural, due to the different stimuli provided by the changing milieu; in other words, the geographical control of the growth of human civilization can be worked out and set forth clear as on a map. by a study of man's progress in this restricted portion of the surface of the earth. Outside India, these five natural regions occur on a vast scale, e.g. the mullai, the vast steppeland extending from the carpathians to the foot hills of the Altais. the Kurinji or the great mountain chain from the pynenees to the Himalayas and beyond forming a great girdle round the waist of mother earth, the Neydal, the coasts of the mediterranean sea, and the Indian and the Atlantic oceans. and the Palai. the great desert of Sahara and its continuation in Arabia,. Persia and Mangolia."
(Ibid, P.14)

The Myth of the importation of the South Indian languages from outside India.

"Certain investigators assume that everything Indian must have been imported at some remote times from outside India. They hold that the speakers of Primitive Tamil and other South Indian languages to whom they, give the name of the Dravidian Race must have settled in India from central Asia. These theorists drag large bodies of ancient along the map of Asia and Europe as easily as chessmen are shifted on the chess-board. and make them wander aimlessly from country to country merely to support their baseless theories. It happens that certain words of the Brahui dialect of Baluchistan resemble certain Tamil words. To explain this Solitary fact, which is susceptible of various Interpretations, they will have it that an ancient Dravidian race, evolved somewhere outside India in the Asiatic highlands, undertook a pilgrimage to India through the north-western gate, and reached the extreme south through strange and devious ways. Foote constructs an intinerary for the wandeing of these peoples, which is a specimen of perverse ingenuity without any historical evidence to support it. Surely the Neolithians of India were not dumb animals, but spoke languages of their own. The simplest hypothesis under the circumstances is, Tamil Traditional history holds, that the Tamils and other allied peoples were indigenous and their languages were evolved where they are now spoken" (Stone Age in India' by P T Srinivasa Iyengar, P.P. 46 - 47).

பேராசிரியர் வி. ஆர். இராமச்சந்திர தீட்சிதர் ஆங்கிலத்தில் எழுதிய 'வரலாற்று முன்னைத் தென்னிந்தியா' (Pre-Historic South India) 'தமிழர் தோற்றமும் பரவலும்' (Origin and spread of the Tamils) என்னும் இரு வரலாற்று நூல்கள், தமிழர் குமரி நாட்டில் தோன்றிப் பாரெங்கும் பரவியதை நடுநிலையாகவும், மறுப்பிற்கிடமின்றியும் விளக்கிக் கூறுகின்றன.

வடநூல்களும் (சதபத பிரமாணம்), ஒரு தென்திசைக் கடல்கோளுக்குத் தப்பிய பாண்டியனைத் திரவிடபதியென்று குறிக்கின்றது.

## மொழியியற் சான்றுகள்

1. தமிழும் அதன் திரிபான திரவிட மொழிகளும் இந்தியாவிற்குள்ளேயே வழங்குதலும், அவற்றுள் இலக்கியமுள்ள முதன்மையான நான்மொழியும் தென்னிந்தியாவிற்குள்ளேயே வழங்குதலும், அதன் வழக்கும் தெற்கில் சிறந்திருத்தலும், வடக்கே செல்லச் செல்ல ஏனைத் திரவிட மொழிகள் இலக்கணமின்றியும், இலக்கியமின்றியும், பண்பாடின்றியும், சொல்வளமின்றியும், கொச்சையாகி, மேன்மேலும் சிறுத்தும், சிதைந்தும் கலவையாகியும் போவதும், இந்தியாவிற்கு வெளியே சிதைந்த தமிழ் அல்லது திராவிடச் சொற்களன்றி மொழியேதும் வழங்காமையும்.

2. இந்தியின் அடிப்படைச் சொற்கள் சிதைந்த தென்சொல்லா யிருத்தல்.

## முதல் கருப்பொருள் சான்றுகள்

1. கால வேறுபாடும் இயற்கை நிலைமைகளும் உயிரின வகைகளும் விளைவுப் பொருள்களும் தொன்று தொட்டு மாறாதிருந்து வருதல்.

2. சிலப்பதிகாரத்தில் சொல்லப்பட்டுள்ள காரோதிமம் (காரன்னம்) இன்று ஆத்திரேலியாவிலும் தாசுமேனியாவிலும் மட்டும் இருத்தலும், தென்றிசைப் பெயருக்குக் காரணமான தென்னைமரம் தென்கிழக்குத் தீவுகளில் மட்டும் இயற்கையாக வளர்தலும் காண்க.

## மறுப்பிற்கு மறுப்பு

மேனாட்டு இடப்பெயரீறுகளுக்குத் தமிழிலேயே பொருளிருத்தலாலும் குமரி நாட்டிலிருந்து நண்ணிலக் கடற்கரை நாட்டிற்கு முதற்கண் சென்ற மக்கள் நீள் மண்டையராய் இருத்தலாலும், ஊர் என்னும் மருதநிலக் குடியிருப்புப் பெயர் குமரி நாட்டிலேயே தோன்றியமையாலும், பருங்கற் கட்டட அமைப்பே சிறுகற் கட்டட அமைப்பிற்கு முந்துவது இயற்கையாதலாலும், இலகோவாரி (Lahovary), பாலகிருட்டிணன் நாயர் முதலியோர் தமிழின் அல்லது தமிழரின் தொன்மையை மறுப்பது அறியாமை பற்றியதேயென்று கூறி விடுக்க.

## முடிந்த முடிவு

தமிழ் தென்னாட்டிற்கும் தெற்கில் தென்மாவாரியில் மூழ்கிக் கிடக்கும் தென் கண்டத்தின் தென்கோடி நாடான தென்பாலியில் தோன்றிய தென்மொழியே. அதனால் அதைப் போற்றி வளர்த்த தமிழன் பிறந்தகமும் அத்தென்புலமே.

இவ்வடிப்படையிலேயே தமிழின் அமைப்பும் அதன் திராவிடத் திரிவும் ஆகிய வேறுபாடும் தெளிவான விளக்கம் பெறுகின்றன. இவ்வுண்மையை அறியாதார் அல்லது உணராதார் தமிழின் இயல்பை மட்டுமின்றி ஒப்பியன் மொழிநூலையும் அறியாதவரேயாவர்.

## 3. பாவாணரின் சுட்டடிக்கொள்கை

உலக மொழியறிஞர்களிடையில் 'சொற்பிறப்பியல் கண்ட புதுமை' என்று சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது பாவாணரின் சுட்டடிக்கொள்கை. அ, இ, உ என்னும் முச்சுட்டுகளிலிருந்து மொழிவளம் பொதுளிய கருத்துகள் வேர்ச்சொற்களாக முகிழ்த்து வினையடிகளாக மொட்டவிழ்ந்து பெயர், வினை, இடை, உரி என்னும் நாற்றிறத்து நற்றமிழ்ச் சொற்களாக மலர்ந்துள்ளன என்பதே அக்கொள்கையின் விளக்கம்.

ஆ, ஈ, ஊ எனச் சுட்டுகள் தொடக்கத்தில் நெடில்களாகவே இருந்தன. அவை வினைக்கருத்தை சுமந்து வினையாக வேண்டிய சூழல் வந்த போது அ, இ, உ எனக் குறுகி லகர மெய் பெற்று அல், இல், உல் எனச் சுட்டடி ஆணிவேர்ச் சொற்களாயின. ஊ என்னும் சுட்டும் அதனடியாகப் பிறந்த 'உல்' என்னும் சுட்டடியுமே மிகப் பெரும்பான்மையான சொற்களின் தோற்றத்திற்கு அடிமூலம் என்று பாவாணர் கூறுகிறார்.

உகரம் இதழ் குவியப் பிறக்கும் எழுத்தாதலின், முன்மைக் கருத்தையும் முற்செலவு வினையையும் உள்ளடக்கியது என்று பாவாணர் கண்டுபிடித்தார். இச்சொல்லில் வாய்ச் செய்கையும் உகர ஒலியும் ஒத்தியங்கியுள்ளன. "கூடித் தொழில் செய்யும் வினைக் கருத்தே மொழியின் தொடக்கம்" என்று கூறிய பிரடெரிக்கு ஏங்கல்சு பெருமகனாரின் கருத்தை அவருக்கும் முன்பே 1940 ஆண்டிலேயே கோடிட்டுக் காட்டியவர் பாவாணர்.

வினைக் கருத்துத் தொடரி போல் (சங்கிலியைப் போல்) பல்வேறு கருத்துக் கோவைகளை உருவாக்குகிறது என்பது வேர்ச்சொல்லாய்வில் பாவாணர் கண்ட மற்றொரு பேருண்மையாகும்.

அ, இ, உ என்னும் சுட்டுச்சொற்கள் அல், இல், உல் எனத்திரிந்தும் சுட்டுப் பொருளே தரும் வரை அவற்றைச் சுட்டடிகள் என்று கூறுகிறோம். அவையே தொழிற்படும் கருத்தைக் காட்டும் வினையடிகளாக மாறும்போது வேர்ச்சொற்கள் என்று கூறுகிறோம்.

அ – அல் – அது – அவன் – அவை இவையெல்லாம் சுட்டுச்சொற்கள். அல்–சுட்டடி.

அல் – (அல்லு = நெருங்கு) – அள், எனத்திரியும் போது, வேர்ச்சொல், அல் – அலையெனத் திரியும்போது பெயராகி விடுகின்றது. வினைச் சொல்லிலிருந்து பெயர்ச்சொல் தோன்றுகிறது என்பதை எவரும் விளங்கிக் கொள்வர். ஆனால் வினைச்சொல் எதிலிருந்து பிறந்தது என்னும் வினாவிற்குப் பலரும் விடை பகரவில்லை. பாவாணர் ஒருவரே இதனை நன்கு ஆய்ந்து வினைச்சொல், வினைக்கருத்தினின்றும் சுட்டுக்கருத்தி லிருந்தும் பிறந்துள்ளன எனக் கண்டறிந்தார் அவர்.

சுட்டுக்கருத்திலிருந்து வினைக்கருத்து எப்படி உருவாகும் எனக் கேள்வி எழலாம்.

மாந்தனின் மொழியாக விளங்கும் உள்மனத்துக் கருத்துக் கோவை, காரண அடிப்படையில் ஏரண வளர்ச்சி பெற்றுள்ளது. அ, இ, உ என்னும் முச்சுட்டுகளும் சேய்மை, அண்மை, முன்மையிடங்களை உணர்த்துவன. சுட்டின் பொருள் இடத்தைச் சுட்டுவதாயினும், சுட்டுபவனின் நோக்கம் அது மட்டுமன்று. சேய்மையைச் சுட்டுபவன், அங்கிருப்பதைப்பார், அங்கிருப்பதைப் பற்று, அங்கே செல், அங்கு என்னோடு வா, அங்கே போகிறது, அங்குத்தான் போக வேண்டும் என்பவற்றில் ஏதேனும் ஒரு வினைப்பாங்கினை உள்ளடக்கிக் குறிப்பாக ஏவுவான். அந்தச் சுட்டில் ஏவல் வினை உள்ளடங்கியிருக்கிறது.

சுட்டுக்குள் உட்புதைந்து உள்ளடங்கியிருந்த வினைக்கருத்து, நாளடைவில் வெளிப்படையான வினைக்கருத்தாக வளர்ந்தபோது சுட்டடிச் சொல் வினையடி வேர்ச்சொல்லாக வளர்ந்து விட்டது. சுட்டடி வினைக்கருத்தை வெளிப்படையாகக் காட்டத் தொடங்கியதும் சுட்டுச்சொல் பெயர்க்குரிய ஈறு ஏற்று, அது, இது, உது, அவன், இவன், உவன் எனச் சுட்டுப்பெயராகவும் அ, இ, உ என முன்பிருந்த நிலைக்கே மீட்கப்பட்டுச் சுட்டெழுத்தாகவும் தன் செயற்பாட்டைச் சுருக்கி வரையறுத்துக் கொண்டது.

சுட்டடிக்கும் வினையடிக்கும் பொதுவாக இருந்த அல், இல், உல் வினையடியாக மட்டும் வளரத் தொடங்கின. ஈறு திரிந்து அள், அர் எனத்திரிந்த வேர்ச் சொற்களிலிருந்து வேறு பிரித்தறியச் சுட்டடி வினைவேரான அல், இல், உல் என்பன தலையடிகள் என்றும், ஆணிவேர்கள் என்றும் பெயர் பெற்றன. மெய்ம்முதல் சேர்ந்து, குல், புல், முல் என வடிவு கொண்ட வேர்ச்சொற்களும் ஆணிவேர்களாகக் கருதப்பட்டன.

சுட்டடிகள் மொழியை ஈன்றன. ஆயின் அவையே மொழியாக நிறைநிலை பெறவில்லை. இதற்கும் காரணம் உண்டு.

தொண்டை வாயிலாகக் காற்றை வெளியேற்றி 'உ' என ஒலியெழுப்புவது எல்லா உயிர்க்கும் இயற்கை.

காளை முக்காரமிடுவதுபோல உகர முற்கு அல்லது முக்கார ஒலிப்பு அந்த உயிரி எதனையோ சுட்டுகிறது எனக் காட்டும். எல்லாச் சொல்லும் பொருள் குறித்தன்வாயினும் சிலவற்றிற்குக் காரணம் வெளிப்படத் தோன்றாது. விலங்குகளின் சிலைப்பு ஒலி, கனைப்பு ஒலி, முற்கு ஒலி ஆகியவை கேட்போருக்குப் பொருள் விளங்காதனவாய், எதையோ சுட்டும் கருத்து மட்டும் தெளிவாகப் புலப்படுகிறது. உட்கருத்து விளங்காமல் சுட்டும் கருத்து மட்டும் தெளிவாகப் புலப்படுகிறது. உட்கருத்து விளங்காமல் சுட்டும் கருத்து மட்டும் தெளிவுறுத்தும் உகர ஒலிப்பு, சுட்டெழுத்தாகவே கருதப்பட்டது. ஆதலின் சுட்டடிகள் உள்ளக்கருத்தைப் புலப்படும் மொழியாக முடியாமல் சுட்டடிகளாகவே சுட்டும் தொழில் மட்டும் காட்டி உகந்த அளவில் தம் வளர்ச்சியை நிறுத்திக் கொண்டன. காலப்போக்கில் அவற்றுள் உறங்கிக் கொண்டிருந்த வினைக்கருத்து வெளிப்பட்ட நாள் முதல், வேர்ச்சொற்கள் ஆணி வேரூன்றி மொழியென்னும் மரபாக நெடுநெடென்று வளரத் தொடங்கிவிட்டன. பல ஆண்டுகளாக வெயிலில் உலர்ந்து கிடந்த வித்து, கீழே சிறிது மண்ணும் மேலே சில மழைத்துளியும் பெற்றவுடன் விரைந்து வளர்வது போல, சுட்டடியின் வினைக் கருத்துக்கு ஒரு வெளிப்பாடும், அதை அடுத்தடுத்துப் பேசிப் பொருள் விளக்கிக் காட்டும் மாந்தரின் கூட்டமும் பெருகியதால் ஞால முதன்மொழி தோன்றி வளர்ந்தது.

பாவாணர் வகைப்படுத்திய வண்ணம் சொல்லின் விதையும், முளையும், வேரும் ஞால முதன்மொழியின் ஆணிவேர்ச் சொற்களுக்குத் தாயாக இருந்தன.

1. விதை

உலக முதற்சுட்டுச்சொல் – உ இதுவே உலக மொழிகளின் தோற்றத்திற்கும் ஞால முதன் மொழித் தோற்றத்திற்கும் மூலமான விதைச்சொல்.

2. முளை

உலக முதல் மூலச்சொல் – உல், இதுவே எல்லா வகை வேர்ச்சொற்களுக்கும் பிறப்பு மூலம்.

3. வேர்

ஞாலத் தாய்மொழியின் அடிப்படை வினைச்சொற்கள் – குல், சுல், துல், புல், முல் . ......... ஆணி வேர்ச்சொற்கள் என்று பெயர் பெற்றவை.

ஓம் என்னும் மூலமந்திரத்திலிருந்து கோள்களெல்லாம் உருவெடுத்தன என்று சமய நூல்கள் கூறுகின்றன. உகர விதைச் சொல்லிலிருந்தும் அதன் திரிபாகிய அ, இ, உ என்னும் முச்சுட்டுகளிலிருந்தும் சுட்டடிகளிலிருந்து முகிழ்த்த ஆணி வேர்ச் சொற்களிலிருந்தும் தமிழ் என்னும் ஞாலத் தாய்மொழியும் அதன்வழி உலக மொழிகளும் தோன்றிய பாங்கை சுட்டடிக்கொள்கையில் பாவாணர் தெளிவுறுத்துகிறார்.

ஓம் மந்திரவொலியில் உலகங்கள் பிறந்தன என்பது மெய்ப்பொருள். முச்சுட்டிலிருந்து மொழி பிறந்தது என்பது மெய்யான வரலாறு.

'முச்சுட்டுக்களை ஒலிக்கும் போது வாய்ச்செய்கையும் கைச்செய்கையும் மெய்ப்பாடு காட்டின. முச்சுட்டின் பொருள் விளங்கிய காலத்தில் சைகைகள் குறைந்தன. எனினும் சிலர் பேசிக்கொண்டே தேவையில்லாமல் சைகையும் காட்டும் ஞால முதன்மொழிப் பழக்கத்தை இன்றும் விடமுடியாதவர்களாக இருக்கிறார்கள். விரல் நீட்டிச் சைகை காட்டிக்கொண்டே பேசுபவர்களைப் பார்த்தாவது உலகில் முதன்மொழி சுட்டடியாகத்தான் பிறந்தது என்பதை மக்கள் புரிந்து கொள்வார்கள் என்றார் பாவாணர்.

## வேர்ச்சொல்லாய்வு

மொழியில் பல்லாயிரம் சொற்கள் உள்ளன. சொற்களை உருவாக்கும் வினையடிகள் பன்னூற்றுக் கணக்கின. வினையடிகளின் மூலவேர் அல்லது ஆணிவேர்ச் சொற்கள் ஒரு நூற்றுக்கும் குறைவானவை. அவற்றைப் பொதுவாக வேர்ச்சொற்கள் என்கிறோம்.

எ.டு.

| | | | | |
|---|---|---|---|---|
| குல் | – | குழு | – | குழுமு, குழுவு |
| வேர்ச்சொல் | | வினையடி | | முதனிலை |
| (ஆணிவேர்) | | (பக்க வேர்) | | (சல்லி வேர்) |

வேர்ச்சொல் வெவ்வேறு வினைச் சொல்லாகப் படிப்படியாகத் திரிந்து செல்லும் நிலைகளை ஆணிவேர், பக்கவேர், சல்லி வேர் அல்லது வேர், வினையடி, வினை முதனிலை ஆகிய சொல்லாட்சிகள் விளக்குகின்றன.

தமிழினின்றும் உலக மொழிகளில் ஊடாட்டம் பெற்றுள்ள சொற்களைத் தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள் என்று பிரித்துக்காட்டியவர் பாவாணரே. அவர் காட்டிய சொற்கள் வருமாறு :

## அ· தனிச்சொற்கள்

1. உம்பர், 2. உய், 3. உருளை, 4. அரத்தம், 5. கண், 6. காந்து, 7. காலம், 8. கும்மல், 9. அந்தி, 10. எல்லா,

11. கலித்தல், 12. மகன், 13. மன், 14. தெய்வம், 15. புகா (உணா), 16. பள்ளி, 17. பாதம், 18. புரி (வளை), 19. பொறு, 20. பகு, 21. பேசு, 22. திரும்பு.

## ஆ. தொகுதிச் சொற்கள்

1. பூனை, 2. நெருப்பு.

பாவாணர், உயிர் முதல் வேர்ச்சொற்கள் உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள் என்னும் தலைப்புகளில் 54 அடிப்படை வேர்ச்சொற்களை வகைப்படுத்திச் 'செந்தமிழ்ச் செல்வி' மாத இதழில் கட்டுரை வரைந்தார். அவையாவன :

## வேர் முதல்கள்

உயிர் முதல் வேர்ச் சொற்கள்

1. அல் (பொருந்தற் கருத்துவேர்)
2. அர் (அறுத்தற் கருத்து வேர்)
3. இல் (இளமைக் கருத்து வேர்)
4. இள் (இணைதற் கருத்துவேர்)
5. உ. முன்மைக் கருத்து வேர் – விதைச்சொல்
6. உம். (கூடுதற் கருத்து வேர்)
7. உய் (செல்லுதற் கருத்து வேர்)
8. உல்[1] (எரிதற் கருத்து வேர்)
9. உல்[2] (வளைதற் கருத்துவேர்)
10. உல்[3] (உள்ளொடுங்கற் கருத்து வேர்)
11. உள் (துளைத்தற் கருத்துவேர்)
12. 'ஊது' (ஒலிக்குறிப்புச் சொல்)
13. ஏ[1] (தன்மைப் பெயரடி)
    ஏ[2] (வினாச் சொல்லடி)
14. ஒல் ( பொருந்தற் கருத்து வேர்)
15. 'ஓ' (ஒலிக்குறிப்புச் சொல்)

## உயிர் மெய்ம் முதல் வேர்ச்சொற்கள்

16. கல் (கருமைக் கருத்து வேர்)
17. குல்[1] (கூடற் கருத்து வேர்)
18. குல்[2] (தோன்றற் கருத்து வேர்)
19. குல்[3] (வளைதற் கருத்து வேர்)
20. குல்[4] (குத்தற் கருத்து வேர்)
21. குல்[5] (எரிதற் கருத்து வேர்)
22. குல்[6] (துளைத்தற் கருத்து வேர்)
23. சுல்[1] (குத்தற் கருத்து வேர்)
24. சுல்[2] ( சுடுதற் கருத்து வேர்)
25. சுல்[3] (சிவத்தற் கருத்து வேர்)
26. சுல்[4] (வளைதற் கருத்து வேர்)
27. சுல்[5] (துளைத்தற் கருத்து வேர்)
28. துல்[1] (பொருந்தற் கருத்து வேர்)
29. துல்[2] (வளைதற் கருத்து வேர்)
30. துல்[3] (துளைத்தற் கருத்து வேர்)
31. துல்[4] (தெளிவுக் கருத்து வேர்)
32. நுல்[1] (தோன்றற் கருத்து வேர்)
33. நுல்[2] (துளைத்தற் கருத்து வேர்)
34. நுல்[3] (ஒளிர்தற் கருத்து வேர்)
35. நுல்[4] (நெகிழ்ச்சிக் கருத்துவேர்)
36. நுல்[5] (நீட்சிக் கருத்து வேர்)
37. நுல்[6] (பொருந்தற் கருத்து வேர்)
38. புல்[1] (பொருந்தற் கருத்து வேர்)
39. புல்[2] (படுத்தற் கருத்து வேர்)
40. புல்[3] (திரட்டற் கருத்து வேர்)
41. புல்[4] (விரும்புதற் கருத்து வேர்)
42. புல்[5] (வளைதற் கருத்து வேர்)
43. புல்[6] (துளைத்தற் கருத்து வேர்)
44. முல்[1] (இளமைக் கருத்து வேர்)
45. முல்[2] (முன்மைக் கருத்து வேர்)
46. முல்[3] (மென்மைக் கருத்துவேர்)
47. முல்[4] (பொருந்தற் கருத்துவேர்)
48. முல்[5] (வளைதற் கருத்து வேர்)
49. முல்[6] (துளைத்தற் கருத்து வேர்)
50. வல் (வளைதற் கருத்துவேர்)
51. வா (வினை)
52. விள் (விரும்புதற் கருத்துவேர்)
53. விள்[2] (வெம்மைக் கருத்துவேர்)
    (ஒண்மைக் கருத்துவேர்)
    (வெறுமைக் கருத்துவேர்)
54. விள்[3] (பிளவுக் கருத்துவேர்)

## வேர்ச்சொற்களில் வளரும் கருத்துக்கள்

பாவாணர் வேர்ச்சொற்கட்டுரைகளில் 'முன்மை' முதல் 'துருவல்' ஈறாக எண் பெருங்கருத்துக்களையே அடிப்படை வேர்க் கருத்துகளாகக் கொண்டு ஒவ்வோர் கருத்திலிருந்தும் கிளைத்த சொற்களை வகைப்படுத்தினார்.

எனினும் எண்பெருங் கருத்துக்களுக்கு அப்பால் பற்பல கருத்துகள் வேரடிகளில் புதைந்து இருப்பதைக் கண்டார். அவையும் எண் பெருங்கருத்துகளிலிருந்து கிளைத்தவையாதலின் வேர் திரியாமல் கருத்தால் மட்டும் புடைபரந்து விரிந்த கருத்துக்களின் விரிவை விளக்கிக் காட்டுவதற்காக ஒரே வேர்ச்சொல்லுக்கு அதன் உள்ளடக்கமான கருத்துகள் அனைத்தையும் தனித்தனித் தலைப்பில் விரித்துரைக்க நேர்ந்தது.

உல்[1], உல்[2], உல்[3] வேர்ச்சொற்களில் உள்ளடங்கிய கருத்துக்கள்

| | | |
|---|---|---|
| 1. இணைதல் | 11. சுடுதல் | 21. பொருந்தல் |
| 2. இளமை | 12. செல்லுதல் | 22. முன்மை |
| 3. உள்ளொடுங்கல் | 13. திரட்டல் | 23. மென்மை |
| 4. எரிதல் | 14. துளைத்தல் | 24. வளைதல் |
| 5. ஒண்மை | 15. தெளிவு | 25. விரும்புதல் |
| 6. ஒளிர்தல் | 16. தோன்றல் | 26. வெண்மை |
| 7. கருமை | 17. நீட்சி | 27. வெம்மை |
| 8. குத்தல் | 18. நெகிழ்ச்சி | 28. வெறுமை. |
| 9. கூடுதல் | 19. பருத்தல் | |
| 10. சிவத்தல் | 20. பிளவு | |

'உல்' என்னும் ஆணிவேர்ச் சொல் எண் பெருங்கருத்துகளிலிருந்து மும்மடங்கு விரிந்து மேற்கண்ட 28 கருத்துக்களை வெளிப்படுத்துதல் காண்க.

விளைந்த தவசத்தை மக்கள் பல்வகை உண்டி வகைகளாகச் சமைத்துண்பது போல, ஒரு கருத்து அதன் தொடர்பான பல கருத்துகள் வளர இடமளிப்பதால், சொல்லின் வடிவம் மாறாமல் பொருள் பரப்பு விரிந்து செல்கிறது. சொல்லின் வடிவமும் பொருள் விரிவுக்கு ஈடு கொடுக்கும் வகையில் திரிய வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாகிறது. இதிலிருந்து கருத்து வளர்ச்சியும் பொருள் விரிவுமே சொல்லின் வடிவத்தைத் திரிக்கின்றன என்பதும் சொல் வடிவத்திற்குக் கருத்தும் பொருளுமே காரணம் என்பதும் புலப்படும்.

ஒவ்வொரு ஆணி வேரிலிருந்தும் நூற்றுக் கணக்கான சொற்கள் பிறக்க வாய்ப்புள்ளது. தெளிவுக் கருத்துக்குரிய துல்[4] வேரிலிருந்து தோன்றி வளர்ந்த பெயரும் வினையுமாகிய 71 சொற்கள் இங்கே தரப்படுகின்றன. இவையனைத்தும் தெளிவுக் கருத்தில் மட்டும் உருக்கொண்ட சொற்கள்.

துல்[4] – தெளிவுக் கருத்து வேரில் பிறந்த சொற்கள்

| | | |
|---|---|---|
| 1. துலங்கு | 25. தெரிக்கல் | 49.தெளிஞன் |
| 2. துலங்குதல் | 26. தெரித்தல் | 50.தெளிர்தல் |
| 3. துலக்கு | 27. தெரியன் | 51. தெளிர்த்தல் |
| 4. துலக்கம் | 28.தெரிவை | 52.தெற்று |
| 5. துல்லியம் | 29. தெருள்தல் | 53. தெற்றெனவு |
| 6. தென்பு | 30. தெருள் | 54. தெற்றல் |
| 7. தெம்பு | 31. தேர்தல் | 55. தேறுதல் |
| 8. தேன் | 32. தேர்ச்சி | 56. தேறு |
| 9. தேம் | 33. தேர்வு | 57. தேறுகடை |
| 10. தீம் | 34. தேறுதல் | 58. தேறுகூடு |
| 11. தீவு | 35. தெள்ளுதல் | 59. தேறுதலை |
| 12. தீவுதல் | 36. தெள்ளிமை | 60. தேறல் |
| 13. தீவிய | 37. தெண்மை | 61. தேற்று |
| 14. தித்தி | 38. தெள்ளியர் | 62. தேற்றம் |
| 15. தித்தித்தல் | 39. தெள்விளி | 63. தேற்றன் |
| 16. தித்திப்பு | 40. தெள்குதல் | 64. தேற்றரவு |
| 17. தேனித்தல் | 41. தெட்பு | 65. தேற்றரவாளன் |
| 18. தென் | 42. தெட்பம் | 66. தேற்றரவாளி |
| 19. இன் | 43. தெட்ட | 67. தேற்றா |
| 20. இன்பு | 44. தெட்டவர் | 68. தேற்றான் |
| 21. இன்பம் | 45. தெளி | 69. தெடுதெடு தெடுவெனல் |
| 22. இனித்தல் | 46. தெளிதல் | |
| 23. இனிமை | 47. தெளிவு | 70. தெடாரி |
| 24. தெரிதல் | 48. தெளிச்சல் | 71. தடாரி. |

பாவாணர் வேர்ச்சொற்களை 54 ஆகத் தொகைப்படுத்தினார். ஒவ்வொரு வேர்ச்சொல்லிலும் எண் பெருங்கருத்துகள் தவிர அவற்றோடு தொடர்புள்ள இருபது கருத்துகளாயினும் சேர்கின்றன. ஒவ்வொரு வேர்ச்சொல்லுக்கும் உள்ள உட்புதை கருத்துகள் பல.

இக்கருத்துகளை நோக்க, தமிழ் மொழி ஒட்டுநிலை எய்திய அந்தக் காலத்திலேயே ஈரிலக்கத் திற்கு மேற்பட்ட சொல்வளம் கொண்டிருக்கலாம் என்றும், தமிழ்க் கல்வியும் மொழிவளமும் குன்றி, அயன்மொழித் தாக்கம் ஏற்பட்டதால் இருண்ட இடைக்காலத்தில் இலக்கத்திற்கு மேற்பட்ட சொற்களை இழந்திருக்கலாம் என்றும் தெரிகிறது என்பர் அறிஞர்.

## 4. பாவாணரின் முதன்மொழிக் கொள்கை

உலகின் முதல் மாந்தன் எங்குத் தோன்றினான்? உலகின் முதன்மொழி எங்கு யாரால் பேசப்பட்டது? என்னும் கேள்விகள் உலக ஆராய்ச்சி அறிஞரிடையே தீர்க்கப்படாத புதிர்களாக இருந்து வந்துள்ளன. முதல் மாந்தன் தென்னாப்பிரிக்காவில் தோன்றியிருக்கக் கூடும் என்பதற்கான சான்றுள் கிடைத்திருப்பதாக மாந்தவியல் அறிஞர் கூறுவர். மரபணுவியல் ஆராய்ச்சியாளர் ஒருவர் பெண்களின் குருதியில் மட்டும் காணப்படும் (மைட்டோ காண்ட்ரியா) என்னும் கண்ணறை நிறமி உலகப் பெண்கள் அனைவர் உடம்பிலும் ஒரே சீராக இருப்பதால் உலக மக்களினம் அனைத்துக்கும் தாயாக ஒரே பெண்தான் இருந்திருக்க முடியும் என்று கண்டறிந்த செய்தி பலசெய்தித்தாள்களிலும் வந்தது.

உலக நாடுகளில் பல்வேறு அறிஞர்கள் இப்பொருள் குறித்து ஆராய்ந்தது போலவே மொழி ஞாயிறு பாவாணர் அவர்கள் தம் வாழ்நாள் முழுவதையும் முதன் மொழிக் கொள்கை குறித்த ஆராய்ச்சிக்கே செலவிட்டார் என்பர்.

பாவாணர் இந்துமாக்கடலில் மூழ்கிவிட்டதாகக் கருதப்படும் குமரிக்கண்டமே முதல் மாந்தனின் பிறந்தகம் என்பதைத் தாம் எழுதிய பல்வேறு நூல்களில் சான்றாதாரம் காட்டி விளக்குகிறார். அந்த முதல் மாந்தன் பேசியது தமிழ் என்று நிலைநாட்டத் தக்க ஏராளமான சான்றுகளைத் தம் நூல்களிலும், ஆய்வுக் கட்டுரைகளிலும் வெளிப்படுத்தியிருக்கிறார்.

இக்கருத்திற்கு மாறாக மனித இனம் பல்வேறு இடங்களில் தோன்றியிருக்கக் கூடும் என்றும் பல்வேறு இடங்களில் பல்வேறு மொழிகள் ஒன்றுக்கு ஒன்று தொடர்பில்லாமல் வளர்ந்திருக்கக் கூடும் என்றும் ஆராய்ச்சி அறிஞர்கள் சிலர் கருத்து வெளியிட்டுள்ளனர். எனினும் உலகின் ஓரிடத்தில்தான் முதல் மாந்தன் தோன்றினான் என்றும், ஓரிடத்தில் தான் முதல்மொழி தோன்றியது என்றும் கருதுவோரின் எண்ணிக்கை நாள்தோறும் பெருகி வருகிறது.

## ஞாலத் தாய்மொழிக் கொள்கைக்கான வரலாற்றுச் சான்றுகள்

கிறித்துவ மறையான விவிலியம், தொடக்கத்தில் முதல் மாந்தன் பேசியது ஒரே மொழிதான் என்றும் அதுவே பல மொழிகளாகப் பிரிந்தது என்றும் கூறுகின்றது. இந்திய நாட்டின் புகழ் பெற்ற தலைமை அமைச்சரான பண்டிதர் நேரு அவர்கள் தம் மகளார்க்கு எழுதிய கடிதத்தில் "சொற்கள் ஏறத்தாழ ஒன்று போலவே உள்ளன. இதிலிருந்து எல்லா உலக மொழிகளும் ஒரே மொழியினைத் தாய்மொழி மூலமாகக் கொண்டிருக்கலாம், கொண்டு தோன்றியிருக்கலாம் என்று கருத இடமிருக்கிறது" என்று குறிப்பிட்டிருக்கிறார்.

திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் எழுதிய கால்டுவெல் பெருமகனார் அவர்கள் சுட்டுப் பெயர்களும், நான், நீ, என்னும் முன்னிலைப் பெயர்களும் பெரும்பாலான உலக மொழிகளில் ஒன்று போலவே இருப்பதை எடுத்துக்காட்டி உலகம் முழுவதும் ஒப்பீட்டு ஆராய்ச்சி முறை பரவ வழிகாட்டினார்.

அதே வழியைப் பின்பற்றி யாழ்ப்பாணத்து மொழியாராய்ச்சி அறிஞர் திரு. ஞானப்பிரகாச அடிகளார் திராவிட மொழிகளுக்கும், இந்தோ ஐரோப்பிய மொழிகளுக்கும் உறவு இருப்பதை முதன் முதலில் எடுத்துக்காட்டினார். இந்த ஆய்வுகளையெல்லாம் பின்புலமாகக் கொண்டு பாவாணர், "ஐரோப்பிய மொழிகள் மட்டுமின்றி உலக மொழிகள் அனைத்துமே தமிழோடு உறவு கொண்டவை" என்றும், தமிழில் இருந்தே உலக மொழிகள் தோன்றியிருக்கும் என்றும் உறுதிப் படுத்துவதற்காக 'ஒப்பியன் மொழிநூல்' என்னும் அரிய ஆய்வு நூலை எழுதினார். இதனை அடியொற்றி ஆங்கிலத்திலும் "The Primary Classical Language of the world" என்னும் நூலை எழுதினார். இந்த இரண்டு நூல்களின் மூலம் தமிழ் திராவிடத்திற்குத்தாய் என்றும் ஆரியத்திற்கு மூலம் என்றும் உலகமொழிகள் அனைத்திற்கும் தாய்மொழி என்றும் சான்றுகள் காட்டி நிறுவினார்.

## பாவாணரின் ஞால முதன்மொழிக் கொள்கை விளக்கம்:

உலக மொழிகளுக்கெல்லாம் தாயான மொழி எப்படி இருந்திருக்கும் என்பதை யாராலும் வரையறுத்துக் காட்ட இயலாது என்று அனைத்து மொழி நூல் அறிஞர்களும் ஒருமித்து முடிவு கட்டினார்கள் என்றாலும் பாவாணர் தம் சுட்டடிக் கொள்கை வாயிலாக உலக முதன்மொழி எப்படிப் பிறந்தது? அதன் தன்மை என்ன? என்பதை ஏரண (Logic) அடிப்படையிலும், உளநூல் அடிப்படையிலும் நன்கு அறிந்து ஆராய்ந்து ஞால முதன்மொழியின் வேர்ச்சொற்களை வேர்ச்சொற் கட்டுரைகளின் வாயிலாகப் புலப்படுத்தியுள்ளார். 'வேர்ச்சொற் கட்டுரைகளைப் பாவாணர் தமிழில் எழுதியதால் இக்கருத்துக்கள் உலக அறிஞர்களைப் போய்ச் சேரவில்லை. தமிழ் வரலாறு, தமிழர் வரலாறு, முதல் தாய்மொழி, சுட்டு விளக்கம் ஆகிய நூல்களில் இக்கருத்துக்களைத் தெளிவாகப் புலப்படுத்தியுள்ளார்.

இன்று உலகில் 300க்கும் மேற்பட்ட மொழிகள் இருந்தாலும் அவை அனைத்தும் கிரேக்கம், இலத்தீனம்,எபிரேயம், தமிழ்,சீனம், சமற்கிருதம் ஆகிய ஆறு மொழிகளில் இருந்தே அனைத்து மொழிகளும் பிரிந்திருக்கின்றன என்பதை மொழியியல் அறிஞர்கள் ஒப்புக் கொள்கின்றனர். இந்த ஆறு மொழிகளில் இலத்தீனம், எபிரேயம், சமற்கிருதம் ஆகிய மூன்றும் வழக்கிழந்து விட்டன. தமிழ், சீனம், கிரேக்கம் ஆகிய மூன்றே எஞ்சியுள்ளன என்பதை விளக்கிக் காட்டுவதுதான் பாவாணர் கண்டறிந்த ஆராய்ச்சிகளின் இறுதி முடிவாகும்.

## 5. ஞாலமுதன் மொழியும் உலக மொழியும்

மொழியின் சொல் அமைப்புகளை மட்டும் அடிப்படையாகக் கொண்டு உலக மொழிகளில் மூன்றுவகைப் படி நிலைகளை மொழி நூலறிஞர்கள் வகுத்துள்ளனர்.

அவை 1. அசைநிலை மொழி
2. ஒட்டு நிலைமொழி
3. உட்பிணைப்பு மொழி
(Mono Syllabic, agglutinative, inflexual)

இவ்வகையில் சீனமொழி ஒன்று மட்டும் அசைநிலை மொழியாகக் கருதப்படுகிறது. திராவிட மொழிகள் எல்லாம் முதல்நிலை, இடைநிலை, ஈறு எனத் தம்முள் பிரிக்கத்தக்க இயல்புடையனவாக இருப்பதால் இவை ஒட்டுநிலை மொழிகள் எனப்படுகின்றன. காலப்போக்கில் முதல்நிலை, இடைநிலை சாரியை, ஈறு போன்றவை எல்லாம் ஒன்றுக்குள் ஒன்று மறைந்தும் திரிந்தும் உருமாறி வேர்ப்பொருள் காணவியலா வகையில் மாறிவிட்ட தன்மையில் உட்பிணைப்பு மொழிகள் எனப்படுகின்றன. இவையே இந்தோ ஐரோப்பிய மொழிகளாயின.

பாவாணர் கண்டறிந்த ஞால முதல்மொழி அசைநிலைத் (mono syllabic) தன்மை உடையது. இதனை அவரது வேர்ச்சொல் கட்டுரைகளே தெளிவாக்குகின்றன. தமிழ் அசைநிலை மொழியாக இருந்த காலத்திலேயே சீனமொழி பிரிந்து விட்டது என்பதைப் பாவாணர் உறுதிப்படுத்தியிருக்கிறார். சீன மொழியில் ஒரு சொல்லுக்கு ஒரு பட எழுத்துக் குறியீடு என்று வகுத்துக் கொண்டதால் அம் மொழியில் எழுத்துகள் தோன்றவில்லை.

சீன மொழியில் காலம் காட்டும் இடைநிலைகள் ஒருமை பன்மை ஈறுகள், தன்மை முன்னிலை ஈறுகள் போன்றவை இல்லை. அந்த வினைச்சொற்கள் அனைத்திற்கும் பொதுவானவை. எ.டு. ஞா, தா, நீ என்னும் சீனமொழித் தொடர் "நான் உன்னை அடித்தேன், அடிக்கிறேன், அடிப்பேன்" என்று சூழ்நிலைக்கு ஏற்பப் பொருள் கொள்ளத் தக்கதாக இருக்கிறது. இதில் 'ஞா' என்பது நான் என்றும் 'தா' என்பது தாக்குதல், அடித்தல் என்றும் 'நீ என்பது 'உன்னை என்றும் பொருள் தரத் தக்கனவாய் அமைந்திருப்பதைக் காணலாம். எனவே அசைநிலைச்சொற்கள் எவ்வாறெல்லாம் திரிபடையும் என்பதற்குப் பாவாணர் 'வேர்ச்சொற்கட்டுரையில் உள்ள முதல் தாய்மொழியின் சொல்லாட்சிகளையும், சீன மொழியின் முந்து வடிவச் சொற்களையும் ஒப்பிட்டு ஆராய்ச்சி செய்தால் முதல் தாய்மொழியான தமிழ் மொழியிலிருந்து சீனமொழி பிரிந்த வரலாற்றைத் தெளிவாக வரையறுக்க முடியும் என்று தெளிவு படுத்தியிருக்கிறார்.

திராவிட மொழிகளைப் போன்று ஒட்டுநிலை மொழிகளாக உலகின் பல்வேறு மொழிகள் உள்ளன. ஆத்திரேலியர் பழங்குடி மொழி, தென் அமெரிக்கப் பழங்குடிகளின் இன்காக்களின் கொகவா மொழி, சப்பானிய மொழி, கொரிய மொழி, அங்கேரி, துருக்கியம், போலந்து, ஊரல், அல்தாய்க்கு மொழிகள் எனப்படும் பின்னீசு மொழி கார்வேலியன் மொழி ஆகியவை ஒட்டுநிலை மொழிகளாகக் கண்டறியப்பட்டுள்ளன. இவை சொல்லளவிலும் பொருளளவிலும் இலக்கண அளவிலும் தமிழையொத்து இருக்கின்றன. திராவிட மொழிகளைப் போன்றே இவையும் உயிரெழுத்துக்களின் ஆளுமை பெற்ற மொழிகள் (Vowel dominated Languages) என்று அழைக்கப்படுகின்றன. ஐரோப்பிய மொழிகளை மெய்யெழுத்துக்களின் ஆளுமை பெற்ற மொழிகள் (Consonant dominated languages) என்று சொல்வார்கள். "உயிரெழுத்து ஆளுமை பெற்ற மொழிகள் தோன்றியிருக்க வேண்டும்" என்பது பாவாணரின் கொள்கை. ஆதலால்தான், திராவிட மொழிகளுக்கும் இந்தோ ஐரோப்பிய மொழிகளுக்கும் ஒப்புமை காண முடிகிறது.

## 6. ஞால முதன்மொழியைப் பற்றிய பிற ஆய்வறிஞர்களின் ஆய்வுகள் – கருத்துகள்.

கி.பி. 14 ஆம் நூற்றாண்டில் செருமானிய நாட்டில் வாழ்ந்த இலே பனீச்சு என்னும் அறிஞர் உலக மொழிகள் யாவும் ஒரு மூல மொழியிலிருந்துதான் தோன்றியிருக்க முடியும் என்றும், எழுதப்படும் மொழி களைப் பற்றிக் கவலைப்படாமல் உலகம் முழுவதும் மக்களின் பேச்சு வழக்கிலுள்ள அடிப்படைச் சொற்களை மட்டும் ஆராய்ந்துபார்த்து, அவற்றின் பழைய வடிவங்களைச் சொல் ஒப்புமைப்பொருள் கண்டு, பின் மீட்டமைத்துக் கொண்டே சென்றால் ஞால முதன் மொழியைக் கண்டறிய முடியும் என்று கருத்து தெரிவித்தார்.

ஞால முதன் மொழியைக் கண்டறிவதற்கு

அறிஞர் பலரும் காட்டிய வழிமுறைகள் அத்துணைச் செப்பமாக அமையவில்லை. சோவியத்து நாட்டு அறிஞர் பெருமக்களாகிய காரல் மார்க்கசு, ஏங்கல்சு போன்றவர்கள் பொருள்முதற் கோட்பாடு கொண்டவர்கள். ஆதலால் முதல் தொழிலாளி எப்பொழுது தோன்றினானோ அவன்தான் முதன்முதல் தன் கருத்துகளை அடுத்தவனுக்குப் புலப்படுத்த வேண்டிய கட்டாயத்திற்கு ஆளானான் என்றும், வேலை செய்வதற்காகக் கருவியை எப்போது கையில் எடுத்தானோ அப்பொழுதே அவன் பேசி ஆக வேண்டிய கட்டாயத்திற்கு ஆளானான் என்றும், தொழில் வளர்ச்சியே மொழிவளர்ச்சிக்கு அடிப்படை ஆயிற்று என்றும் தம் ஆய்வுக் கருத்துகளை வெளியிட்டனர். இந்தப் பொருள் முதற் கோட்பாட்டைப் பாவாணர் ஏற்றுக் கொள்ளவில்லை. இதற்கு மாறாகக் கருத்து முதற்கோட்பாட்டையே மொழி தோன்றியதற்கு மூலகாரணமாகப் பாவாணர் கண்டார்.

## 7. ஞால முதன்மொழி குறித்துப் பாவாணரின் கண்டுபிடிப்புகள்

ஒரு கருத்திலிருந்தது மற்றொரு கருத்துத் தோன்றும்போது ஒரு சொல்லிலிருந்து மற்றொரு சொல் தோன்றுகிறது என்பது பாவாணர் கண்டறிந்த ஞால முதன்மொழி பற்றிய சொற்பிறப்பு நெறிமுறைகளில் முதன்மையானதும் தலைமையானதும் அடிப்படையானதும் ஆகும்.

கையில் ஒரு கருவியை எடுக்காமலும் தொலைவில் காண்கின்ற ஒரு காட்சியை – நிகழ்ச்சியைப் பிறருக்கு விரித்துச் சொல்ல வேண்டிய கட்டாயம் ஏற்படுகின்றது. ஆதலால் கையில் தொழிற்கருவியை எடுத்து ஆளும் போதுதான் பேச வேண்டி வருகிறது என்னும் பொருள் முதல் கோட்பாடு முற்றிலும் பொருத்தமானதன்று. மாந்தனுடைய மனம் ஒன்றோடொன்று தொடர்புடைய கருத்துகளைத்தான் ஏரண முறையில் எண்ணும். அந்த எண்ணமே சொல்லாக வெளிப்படும். புதிய கருத்து வரும்போது பழைய கருத்துக்குரிய ஒரு சொல்லையே புதிய கருத்துக்குரிய சொல்லாகமாற்றிக் கொள்ளும்.

மெதுவாக அசைகின்ற நீரலையைப் பார்த்து ஒருவன் 'அலை' என்கின்றான். 'அலை' அசைவதைப்போலவே ஒரு இலையைக் காற்று அலைக்கும்போது 'இலை அசைகிறது' என்றான்.

அலை என்னும் கருத்திலிருந்தே 'அசை' என்னும் புதிய கருத்துக்குரிய புதிய சொல்லும் தோன்றிவிட்டது. இந்தக் கருத்துவளர் கோட்பாடே ஞால முதன்மொழி தோன்றி வளர்வதற்கு உறுதுணையாயிற்று என்று பாவாணர் மொழி ஆராய்ச்சித் துறையில் புரட்சி செய்து புதுமைக் கருவிகளைக் கண்டறிந்து வெளிப்படுத்தினார்.

### ஞால முதன்மொழி ஆய்வில் உலக அறிஞர்களின் நோக்கு :

உலக அறிஞர்களுள் சோவியத்து நாட்டு அறிஞர்கள் சொல்லின் பொருட்பாட்டு வளர்ச்சியிலும் அமெரிக்க நாட்டு அறிஞர்கள் சொற்றிரிபுகளை ஆராயும் மொழியியல் வளர்ச்சியிலும் ஐரோப்பிய அறிஞர்கள் 'Nostratic Theory' எனப்படும் ஐரோப்பிய மொழிகளின் ஒட்டுமொத்தமான முந்தைய வடிவ மீட்டமைப்பு ஆகியவற்றிலும் ஈடுபட்டு வருகின்றனர். இவர்கள் அனைவரும் சொல்லை மட்டும் ஆராய்தல் அல்லது பொருளை மட்டும் ஆராயும் பாங்கில் முந்து வடிவங்களை மீட்டமைப்பதில் முழுமையான வெற்றி காண முடியாமல் தவிக்கின்றனர்.

### பாவாணரின் நோக்கு

இன்றைய அறிஞர்களின் போக்கிலிருந்து முற்றிலும் வேறுபட்டுச் சொல்லையும் பொருளையும் ஒரு சேர ஆராய்ந்து மொழியின் முந்து வடிவங்களை மீட்டமைத்துப் போவதற்குப் படிப்படியாக வரம்புகளை மேனாட்டரால் அமைத்துக்கொள்ள முடிவதில்லை. ஞால முதல் மொழி எப்படியிருக்கும் என்பதே தெரியாத நிலையில் உலக மொழிகளின் மீட்டமைப்புகளை எதனோடு ஒப்பிடுவது என்று உலக மொழியறிஞர்கள் தெளிவற்ற நிலையில் உள்ளனர்.

கணக்கில் ஒரு விடை தெரியாதபோது அந்த விடையை 'எக்சு' (X) என்று வைத்துக்கொண்டு விடையைக் கண்டு பிடிக்க முயல்வதை உலக மொழியியல் அறிஞர்கள் மட்டுமின்றி யாவருமே ஒப்புக் கொள்கிறார்கள். "இயற்கைக்கும் ஏரணத்திற்கும் முற்றிலும் பொருந்தக் கூடிய சுட்டடிக் கொள்கையின்படி நான் மீட்டமைத்த வேர்ச்சொல் அடிகளாலான ஞால முதன்மொழியை 'எக்சு' என்று வைத்துக்கொண்டு உலக மொழிகளை ஒப்பிடும் முயற்சியை மேற்கொண்டால் தமிழே உலகமொழிகளின் தாய்மொழி – ஞால முதன்மொழி என்பதை உலக அறிஞர்கள் ஒப்புக்கொள் வார்கள் என்பதே பாவாணர் அவர்கள் ஞாலமுதன் மொழிக் கொள்கை குறித்து நிலைநாட்டிய உண்மை.

## 8. பாவாணர் கருத்தினையொத்த பிற மொழியியல் பேரறிஞர்களின் கருத்துக்கள்:

19 ஆம் நூற்றாண்டில் கால்டுவெலார் தாம் எழுதிய திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணத்தின் வழியே தமிழ்மொழியின் தொன்மையையும் அது உலக மொழிகளோடு கொண்டிருக்கும் தொடர்பையும் மேலோட்டமாகக் கோடிட்டுக் காட்டினார்.

ஜி.யு. போப் அவர்கள் 1805 இல் "திராவிட மொழிகள் இந்தோ ஐரோப்பிய மொழிகளோடு மிகப் பழங்காலத்திலிருந்து தொடர்பு கொண்டிருந்தன" என்று தெரிவித்தார். (G.U. Pope says "The South Indian group of Languages Posesses a primilive and very near relationship to the languages of the Indo European group)

1850 ஆம் ஆண்டு அளவில்' சித்தாந்த தீபிகா' என்னும் இதழில் பேராசிரியர் சவரிராயர் அவர்கள் திராவிட மொழிகளுக்கும் இந்தோ ஐரோப்பிய மொழிகளுக்கும் இடையேயுள்ள பொதுவான சொல்லாட்சிகளைக் குறிப்பிட்டுக் கட்டுரை எழுதினார். தமிழின் 'திற' என்னும் வினைச் சொல்லிலிருந்து 'door' என்னும் ஆங்கிலச் சொல்லும் 'த்வார' என்னும் சமஸ்கிருதச் சொல்லும் வந்ததாகக் காட்டினார். இரும்பு என்னும் (இரும் + பொன்) சொல்லே அயன் (iron) என்று திரிந்ததாகக் காட்டினார். அயல், அயலான் என்னும் (Alien) என்று திரிந்ததாகவும் 'அருவி' என்னும் சொல்லே river என்றும் உருள் 'roll' எனத் திரிந்ததாகவும் 'பிற' என்னும் வினைச் சொல் 'Birth' எனத் திரிந்ததாகவும் மேலும் இத்தகைய பல சொற்களையும் எடுத்துக் காட்டினார். தமிழில் 'அர் ஆர் என்பன பலர் பால் குறிக்கும் ஈறுகள். இவையே ஆங்கிலத்திலும் பலர்பால் காட்டுவதை எடுத்துக்காட்டினார்.

20 ஆம் நூற்றாண்டில் தவத்திரு ஞானப்பிரகாசர், ஞா. தேவநேயப் பாவாணர் கேசி. ஞானகிரி நாடார் ஆகியோர் தமிழுக்கும் இந்தோ ஐரோப்பிய மொழிகளுக்கும் உள்ள தொடர்புகளை மிக விரிவாக ஆராயத் தொடங்கினார்கள். இவர்களினும் இங்கிலாந்து ஆக்ககசுபோர்டு பல்கலைக் கழகப் பேராசிரியர் பரோவும், அமெரிக்கப் பேராசிரியர் எமனோவும் 30 ஆண்டுகளுக்கு மேலாக உழைத்துச் சற்றொப்ப 6000 அடிப்படைச் சொற்களுக்கு 10 திராவிட மொழிகளிலிருந்து இனச் சொற்களைத் தேடித் தொகுத்து திராவிடச் சொற்பிறப்பியல் அகராதியைத் தொகுத்தளித்தார்கள். (D.E.D. Dravidian Etymological Dictionary) இந்நூல் வெளிவந்த பிறகு திராவிட மொழிகளை ஒப்பிட்டு ஆராயும் ஆராய்ச்சி மிக வேகமாக வளரத் தொடங்கியது. திராவிடச் சொற்பிறப்பியல் அகராதியைப் படித்துப்பார்த்த சப்பானிய மொழியியல் அறிஞர் பேராசியர் ஒனா, தமிழுக்கு இணையாக 500 சப்பானிய மொழிச்சொற்களைப் பட்டியலிட்டுக் காட்டி, தமிழும் சப்பானிய மொழியும் நெருங்கிய உறவு கொண்டவை என உலகுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். இதைத் தொடர்ந்து மங்கோலியப் பேராசிரியர் வாசக்கு தமிழுக்கும் மங்கோலிய மொழிக்கும் உள்ள உறவுகளை நிலைநிறுத்தியுள்ளார். ஈழத்துப் பேராசிரியர் சதாசிவம் தமிழுக்கும் சுமேரிய மொழிக்கும் உள்ள உறவை ஒப்பிட்டுக் காட்டினார். ஆப்பிரிக்கப் பேராசிரியர் தியாயே என்பவரும் மேற்கு ஆப்பிரிக்காவில் உள்ள செனகல் நாட்டுத் தலைவர் செங்கோர் அவர்களும் தமிழுக்கும் ஆப்பிரிக்க மொழிகளுக்கும் உள்ள உறவுகளையும் நிலைநிறுத்தி இருக்கிறார்கள். ஆத்திரேலிய மொழிக்கும் தமிழுக்கும் உள்ள உறவுகளையும், கொரிய மொழிக்கும் தமிழுக்கும் உள்ள உறவுகளையும் எலாமைட்டு மொழிக்கும் தமிழுக்கும் உள்ள உறவுகளையும் பல்வேறு அறிஞர்கள் சென்ற நூற்றாண்டிலேயே நிலைநிறுத்திக் காட்டியுள்ளனர்.

## 9. பாவாணருடைய கொள்கையையேற்று ஆய்வு செய்யும் இக்கால அறிஞர்கள்

இப்புதிய நூற்றாண்டிலேயே திரு.பம்ஆர்ட், திரு.கௌரன்சு, திரு விளாதிசுலான், திரு இல்லிசு சுவட்டிசு, திரு விளாதிமிர் தைமோ ஆகியோர் திராவிட மொழிகளுக்கும் ஐரோப்பிய ஆசிய மொழிகளுக்கும் உள்ள தொடர்புகளை ஆராய்ந்து வருகிறார்கள். பாவாணர் நூல்களைப் படித்தறிந்து ஆர்வத்தோடு ஐரோப்பிய மொழிகளுக்கும் தமிழுக்கும் உள்ள தொடர்புகளை நுணுகி ஆராய்ந்து வருபவர்களுள் திரு. தீபன் இல்லர் இலெவிட்டு என்னும் அமெரிக்கப் பேராசிரியர் மிகவும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர். பாவாணர் ஆய்வுகளையும் ஞானகிரி நாடார் ஆய்வுகளையும் ஒப்பிட்டுஆய்ந்த இப்பெருமகனார் பாவாணர் கொள்கைகளில் ஞாலத் தாய்மொழிக் கொள்கையின் வெற்றி வாய்ப்பிற்குப் பச்சைக்கொடி காட்டி வருகிறார். பேராசிரியர்கள் போலாட்சி, வில்லியம்சு ஆகியோரும் தமிழுக்கும் ஐரோப்பிய மொழிக்கும் உள்ள உறவுகளை ஆய்ந்து வந்துள்ளனர்.

இந்நூற்றாண்டில் பாவாணரின் ஞால முதன்மொழிக் கொள்கையை உலக அரங்கில் நிலைநாட்டுவதற்காக அரிய ஆய்வுகளைச் செய்து வருபவர்களுள் பின்லாந்து நாட்டுப் பேராசிரியர் எச்.பி.ஏ. அக்கோலா குறிப்பிடத்தக்கவர். கால்டுவெல் பெருமகனார் திராவிட மொழிகளை ஒப்பிட்டு ஆய்ந்ததைப் போலவும், பேராசிரியர்கள் பரோவும் எமனோவும், திராவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலியைத் தொகுத்தது போலவும், பேராசிரியர் அக்கோலா உலகம் முழுவதும் பரவி, சிதறி நிற்கும் ஒட்டுநிலை மொழிகளை ஆராய்ந்து "Duraljan 1000 Etyma" என்னும் பெயரில் ஒப்பீட்டு ஆராய்ச்சிநூலை வெளியிட்டிருக்கிறார். இந்நூற்றாண்டில் வெளிவந்துள்ள இந்நூல் வழி, பாவாணரின் ஞால முதன்மொழிக் கொள்கையை ஊன்றிப் படித்த இப்பெருமகனார் தமிழே ஞால முதன்மொழி என்பதை ஒப்புக்கொள்கிறார்.

ஒட்டுநிலை மொழிகளை ஆராயும்போது தமிழை அடிப்படை மொழியாகக் கொண்டு ஆராய்ந்தால் அவரது ஆராய்ச்சியின் நோக்கு செப்பமானதாகவும் எண்ணிய இலக்கை எய்தக்கூடியதாகவும் இருக்கும் என்று அவருக்குப் பிறர் உணர்த்திய கருத்தை திரு அக்கோலா முழுமையாக ஏற்றுக்கொண்டுள்ளார். இதனை அவர்தம் நூலில் பின்வருமாறு குறிப்பிட்டு இருக்கிறார்.

........... He emphasised pivotal role of Tamil for the studies in the distant genetic relationships/ His view is correct. Tamil has one of the largest traditions among the languages of the world. Tamil as the other Dravidian languages all the descendents of the ancient cultures of the Indus river/ Also the known history of the Tamil is very long. The Indian Ocean and the other Dravidian people have efficiently protected this language against the effect of alien languages.

Also the great population of the Tamil speakers is an important factor. The minor languages as Uralic Nenets. Encts and khanty as would as the Altaic Yakut. Evenkis. Buyat and Tunguisic are prone to great changes. The examples of Livohians and notosis show that the small people can change their languages twice during few generations. The extreme conservatism of Tamil will be a good piller for the reconstruction of Proto Duraljan H.P.A. Hakola, 100 Duraljan Etyma 2000, Finland.

ஒரு மூல மொழியிலிருந்துதான் உலகின் மற்ற மொழிகள் தோன்றியிருக்க முடியும் என்பதை பேராசிரியர் திரம்பெட்டீ 1905 ஆம் ஆண்டிலேயே ஒப்புக் கொண்டிருக்கிறார். இதே கருத்தை (The first common language of mankind) 1990 இல் பேராசிரியர் செவரோசுகின் மற்றும் கிரின்பெர்க்கு ஆகியோர் ஒப்புக்கொண்டுள்ளனர். மொழிஞாயிறு பாவாணர் தம் பூத உடல் மறைந்தாலும் அவர் வகுத்த கொள்கைகள் என்றும் மறையாமல் ஒளிவீசிக் கொண்டிருக்கும். பாவாணர் அவர்களின் நூல்கள் அனைத்தும் உலக அறிஞர்களை எட்டுமானால், பாவாணரின் ஞால முதன்மொழிக் கொள்கையை நிலைநாட்டுவதற்கு மேனாட்டு அறிஞர்கள் தாமே ஈடுபாடு காட்டி வெற்றிக்கொடி நாட்டுவார்கள். அமெரிக்காவைக் கண்டுபிடித்த கொலம்பசும், வானூர்தியைக் கண்டுபிடித்த 'ரைட்' உடன் பிறந்தாரும் உலகின் அழியாப் பெரும்புகழ் பெற்றதைப் போல 'ஞால முதன்மொழி தமிழே' என்னும் பாவாணரின் கண்டுபிடிப்பானது உலகு உள்ளளவும் அவர் புகழ்பாடி நிற்கும். உலக அரங்கில் தமிழர்க்கு ஏற்றமளிப்பதோடு, தமிழ் மொழியின் மாண்பை வெளிப்படுத்திக்காட்டும் வழியாகவும் அமையும், தமிழ்த் தாய்க்கு உரிய முதன்மையும் தலைமையும் வீறுபெறும்.

## 10. பாவாணர் கூறிய சொல்வேர் காண்வழிகள்

சொற்பிறப்பியல் (Etymology) ஒரு தனி மொழிநூற்றுறை என்பதைப் பலர் உணர்வதில்லை. புலவர் தேர்வு தேறிய மட்டில் அல்லது கல்லூரி ஆசிரியப் பதவி பெற்ற மட்டில் எல்லாச் சொற்கும் வேர்காணும் ஆற்றல் தமக்கு வந்து விட்டதாகப் பலர் கருதி விடுகின்றனர்.

இனி, தமிழ்ப் பேராசிரியராக, அவருள்ளும் பல்கலைக் கழகத் தலைமைத் தமிழ்ப் பேராசிரியராக இருப்பவரோவெனின் மேலையறிஞர் எழுதியுள்ள மொழி நூலைக் கற்றவுடன், தம்மையும் மொழிநூல் ஆசிரியராக அல்லது அதிகாரிகளாகக் கருதிக்கொள்கின்றனர். கல்வி வேறு, ஆராய்ச்சி வேறு என்பதை அவர் அறிகின்றிலர்.

சொற்பிறப்பியல் என்பது சொற்களின் உண்மையான வரலாற்றைக் கூறுவதேயன்றி ஒலிமுறை தழுவியும், உன்னிப்பாகவும், குறிக்கோள் கொண்டும் கூறுவதன்று. இதை Etymology என்னும் பெயரேயுணர்த்தும்.

G. K. etumos = true. etumon = original form of a word ; Etumologia- E. etymology = account of facts relating to formation and meaning of word.

சொற்பிறப்பியல் என்பது ஒரு தனி அறிவியல் துறையாதலால், அதற்குரிய நெறிமுறையையெல்லாம் அறிந்த பிறகே சொற்கட்கு வேர்காணும் ஆராய்ச்சியில் ஈடுபடுதல் வேண்டும். அல்லாக்கால் பின்வருமாறு எழுவகை வழுமுடிபாகவே முடியும்.

1. ஒலிமுறைச் சொல்லியல்
(Sound Etymology)

எ.கா. பாராளுமன்று (Parliment (F.Parliment) பார் ஆளும் மன்று என முப்பெயர்ச்சொல் கொண்டது தமிழ்ச்சொற்றொடர். Parler (to speak) என்னும் பிரெஞ்சு வினை முதனிலையும் ment என்னும் ஈறும் கொண்டது ஆங்கிலச் சொல். ஆதலால் இரண்டும் வெவ்வேறாம்.

2. உன்னிப்புச் சொல்லியல்
(Gussing Etymology)

எ.டு. வடு – வடை (நடுவில் துளையாகிய குற்றமுள்ளது). இது சரியன்று. உழுத்தமா பிசுபிசுப்பு தன்மையுடைமையால் எளிதில் எண்ணெய் ஊடுருவி வேகுமாறு உளுந்து வடையின் நடுவில் துளையிடப் பெறும். இது வடுவன்று.

வள் – வட்டை – வடை – வ. வடா. வட்டமானது, வடை. இதுவே உண்மையான பொருள்.

3. குறிக்கோட் சொல்லியல்
(Tendentious Etymology)

எ.டு. வெறு – வெறுக்கை (வெறுக்கப்படத் தக்கது) செல்வம்.

வ.முக்தா. சிப்பியினின்று விடுதலை பெற்றது) த. முத்தம் – முத்து.

இக்கூற்றுகள் சரியல்ல. இவற்றுள் முன்னது துறவியர் கூற்று. பின்னது வடவர் கூற்று.

வெறுத்தல்= செறிதல், நிறைதல், வெறுக்கை = திரட் செல்வம்.

"விறப்பும் உறப்பும் வெறிப்புஞ் செறிவே" (தொல்.சொல்.830)

முத்து உருண்டையானது. முத்து – முத்தம் – வ.முக்தா.

இவையே உண்மையான பொருள்.

4. அடிப்பட்ட சொல்லியல்
(Popular Etymology)

எ.கா. உண்மை = உள்ளத்தொடு (கருத்தொடு) பொருந்தியது. வாய்மை = வாயொடு (சொல்லொடு) பொருந்தியது. மெய்ம்மை= உடம்பொடு (செயலோடு) பொருந்தியது. இம்முறைப் பொருட்கூற்றுச் சரியன்று.

உண்மை = உள்ளது

வாய்மை = தேற்றமாய் வாய்ப்பது (நிறைவேறுவது)

மெய்ம்மை = உடம்புபோற் கண்கூடானது. (Substantiality) இங்ஙனம் கொள்வதே பொருத்தமானது.

5. நகையாட்டுச் சொல்லியல்
(Playful Etymology)

எ–கா. தோசை = சுடும்போது இருமுறை 'சை' யென்ற ஓசை கேட்பது. இது ஒரு வேடிக்கைக் கூற்று. தோய்தல் = மாப்புளித்தல். தோய் – தோயை – தோசை என்பதே பொருத்தமானது. தோசையைத் தோயப்பம் என்னும் வழக்கை நோக்குக.

6. பொருந்தப் புகல்வுச் சொல்லியல்
(Plausible Etymology)

எ–கா. பெருச்சாளி = பெரிய பணப்பை போன்றது . இது காளமேகர் கூற்று. பெருத்த எலி = பெருச்சாளி என்பதே உண்மையோடு பொருந்தியது.

7. அறிவாரவாரச் சொல்லியல்
(Pedautic Etymology)

கீழ் = ஞாலம் உருளும்போது கிழக்குத் திசையிற் கீழ்நோக்கிச் செல்வது, மேல் = அது அங்ஙனம் உருளும்போது மேற்குத் திசையில் மேனோக்கி எழுவது.

இது கணியர் திறம்படக் கூறுவது. கீழ் = தமிழ் நிலப்பரப்புக் கீழ்க்கோடியில் கடலாற் பள்ளமாயிருப்பது. மேல் = அது மேற்கோடியில் மலைத்தொடரால் மேடாயிருப்பது. இது கால்டுவெலார் கூற்று. இதுவே உண்மையானது.

இனி உண்மைச் சொல்லியல் நெறிமுறைகளும் சொல்வேர் காணும் வழிவகைகளும் வருமாறு !

1. இலக்கண அறிவுடைமை

ஒவ்வொரு பகுசொற்கும் முதனிலை, ஈறு, இடைநிலை, சாரியை, புணர்ச்சி, திரிபு ஆகிய அறுவகை யுறுப்புகளுள் அமைந்துள்ளவற்றைப் பகுத்தறிய வேண்டும். அது தெரிதல் அதனினும் வேண்டும்.

## 2. மொழிநூலறிவும் மொழியாராய்ச்சியும்

வரலாற்று மொழிநூல் (Philology) அறிவும், சொந்த ஆராய்ச்சியும் அடுத்து வேண்டப்பெறும் இன்றியமையாத் தகுதியாகும்.

## 3. சொல்லியல் அறிவுப்பேறு

கீற்று (Skeat) எழுதியுள்ள ஆங்கிலச் சொல்லியல் நெறிமுறைகளையும் (Principles of English Etymology 2.Vols) அவரும் சேம்பராரும் (Chambers) தொகுத்த ஆங்கிலச் சொல்லியல் (Etymological) அகரமுதலிகளையும் கற்றுத்தெளிதல் வேண்டும்.

## 4. அயன்மொழி அறிவு

மலையாளம், தெலுங்கு, துளு போன்ற அகப்புற மொழிகளையும் மராட்டி, இந்தி போன்ற புறமொழிகளையும், ஆங்கிலம், இலத்தீனம், கிரேக்கம் போன்ற புறப்புறமொழிகளையும் ஓரளவு கற்றலும் வேண்டும்.

தன்சொற்போல் தமிழில் வந்து வழங்கும் வேற்றுச்சொல்லையும் வேற்றுச்சொற்போல் பிறமொழிச் சென்று வழங்கும் தன் சொல்லையும் பிரித்தறிதற்கு அயன்மொழி அறிவு இன்றியமையாதது.

## 5. பெரும்பால் தமிழ்ச் சொற்பொருளறிவு

இருவகை வழக்கிலுமுள்ள தமிழ்ச்சொற்களையும் பெரும்பாலானவற்றின் பொருளையும் அறிந்திருத்தல் வேண்டும்.

## 6. தமிழ் ஒலியியல்பறிதல்

தமிழ் முதன்முதல் குமரி நாட்டில் தோன்றிய மெல்லொலி மொழியாதலின், வல்லொலி மிக்க திராவிட மொழிகளையும் ஆரிய மொழிகளையும் அடிப்படையாக வைத்தாராயின் உண்மை காண முடியாது. தமிழின் உண்மையான ஒலியியல்பையும் சொற்றூய்மையையும் அறிய விரும்புவார் இற்றைத் தென்பாண்டி நாடாகிய நெல்லை வட்டார நாட்டுப்புற உலக வழக்கை அறிதல் இன்றியமையாததாம். தமிழின் மெல்லொலிகளே திராவிடத்திலும் ஆரியத்திலும் வல்லொலிகளாய்த் திரிந்துள்ளன.

எ.கா. செய் – ceyce (தெ) கும்பு - Gumpu - (தெ)
கல் – khal (பிரா) பாகம் – bhaga (வ)

## 7. எழுத்துக்களின் திரிபை அறிதல்

சொல்லாக்க முறையில் ஒவ்வோரெழுத்தும் சில்வேறெழுத்தும் பல்வேறெழுத்துமாகத் திரிகின்றது. அத்திரிபுகளையெல்லாம் அறியாக்கால் பல சொல்வேர்களைக் காண்டல் அரிதாம்.

எ.கா. ள – ஃ எள்கு – எஃகு, வெள்கு – வெஃகு
ள – க உளி – உகிர், தளை – தகை
ள – ச உளி – உசி, ஊசி – வ.சூசி
ள – ட நளி – நடி, மகள் – மகடூ
ள – ண பெள் – பெண், வள் – வளர் – வணர்
ள – ய தொ– தொய், மாள் – மாய்
ள – ர நீள் – நீர், வள்– வார்
ள – ல கொள் – கொல்
ள – ழ காள் – காழ் – துளசி – துழாய்
ள – ற தெள் – தெறு – தெற்று. வெள் – வெறு
ள – ன முளை – முனை. வளை – வனை.

## 8. சொற்றிரிபு அறிதல்

எ.கா. அரம் (சிவப்பு) அரத்தம் (சிவப்பு) அரத்தி – அத்தி
சிவந்த பழம், அப்பழமரம்,
அகல் – ஆல் – அகன்று படரும் மரம்.
கோநாய் – ஓநாய்.
தமப்பன் – தகப்பன். தகுர் அப்பன் என்று பிரிப்பது தவறாம்.

## 9. சொற்களின் திருந்திய வடிவு அறிதல்

இடைகழி – ரேழி (கொச்சை) மணித்தக்காளி – மணத்தக்காளி (கொச்சை) ரேழி, மணத்தக்காளி என்னும் கொச்சை வடிவங்களிலிருந்து, வேரையும் வேர்ப்பொருளையும் அறிய முடியாது.

## 10. பலபொருள் ஒருவடிவுச் சொற்களைப் பகுத்தறிதல்

சில சொற்கள் வெவ்வேறு பொருள் கொண்ட வெவ்வேறு வேரினின்று பிறந்து ஒரு வடிவு கொண்டு நிற்கும். அவற்றை வேறுபடுத்தியறிதல் வேண்டும்.

எ.கா. மணி[1] – கரியது.
மல் – மால் = கருமை, முகில், கரிய திருமால்
மால் – மாரி = முகில், மழை, கரிய காளி
மால் – மா = கருமை, மா– மாயோன் = கரிய திருமால்
மாயோள் = கரிய காளி.
மல் – மள் – மறு = களங்கம் கரும்புள்ளி

மள் – (மய்) –மை= கருமை, முகில், காராடு,

மள் – மழை – முகில், முகில் நீர்.

மள் – மண் – மணி = நீலக்கல், கரும்பாசி

மணிமிடற்றோன் = கரிய கழுத்துள்ள சிவன்,

மணிவண்ணன் = கரிய திருமால்.

மணி² – வட்டமானது.

முள் –முரு – முருகு = வளைந்த காதணி,

முரு –முரி –மூரி = வளைவு

முரி – முறி – மறி . முரு – முறு – முற்று

முறு – முறை – மிறை = வளைவு

முளி (முண்) (முணம்) – முடம் (முணம் )
முணங்கு – முடங்கு – மடங்கு

முள்(மள்) – மண்டு – மண்கலம் = வட்டம்.

மண்டு – மண்டி – மண்டியிடுதல் – காலைவளைத்தல்.

முள் – முட்டு – முட்டை = உருண்டையானது.

முள் – முண்டு – உருண்ட கட்டை

முள் – முடி – முடிச்சு

முள் (முண்) – (மண்) = ஓசை மிக்க வட்டமான வெண்கலத்தட்டு. அதைப்போல் ஒலிக்கும் நாழிமணி, வட்டமான (கடிகாரம்) கடிகையாரம்.

மணி³ = சிறியது

முல் – முன் – முனி = யானைக்கன்று (யானைக் குட்டி)

முல் – முன்னி, முன்னை = சிறு பயறு

முல் – முள் – முளை – முளையன் – சிறுவன்

முள் – முட்டு – மொட்டு – பொட்டை

முட்டுக்குரும்பை = இளங்குரும்பை

மொட்டைப்பையன் = சிறுவன், இளைஞன்

முள் – மன் – மழ– மழவு = இளமை

மள் – மண் – மணி = சிறியது, மணிக்காடை, மணிக்காக்கை, மணிக்குடல், மணிப்பயறு, மணிப்புறா முதலிய வழக்குகளை நோக்குக.

மணி – மாணி = சிறுவன், பள்ளிச்சிறுவன், மணமாகா இளைஞன்.

மணி⁴ – ஒளியுள்ளது.

மண்ணுதல் – கழுவுதல், மினுக்குதல்

"மண்ணுறு மணியின்" (புறம் 147)

மண் – மண்ணி – மணி = ஒளிக்கல்

## 11. சொற்களைச் செவ்வையாய்ப் பிரித்து அறிதல்

உடக்கெடுத்துப்போதல் – உடக்கு + எடுத்துப்போதல் (கூடாதல், தோலும் எலும்புமாதல், மிக மெலிதல், இதை உடல் கெடுத்துப்போதல் என்று செ.ப. அகர முதலி பிரித்திருப்பது தவறாம்.

உடங்கு – உடக்கு = உடம்புக் கூடு.

## 12. பொருள்களின் சிறப்பியல்பறிதல்

ஒவ்வொரு பொருளின் (பார்த்தமட்டில் கண்ணைக் கவரும்) சிறப்பியல்பையும் உற்று நோக்கியே, அததற்குரிய பெயரை இட்டிருக்கின்றனர் முன்னைத் தமிழர்.

எ.கா. காகா (காக்கா) என்று கரைவது காகம் (காக்கை). மூன்று அணிகளை (வரிகளை, முதுகில் உடையது அணில். இருமை(கருமை)யான மாட்டினம் எருமை. வழுவழுவென்றிருக்கும் மரம் வாழை.

முடிவேய்ந்த பேரரசன் வேந்தன். வேய்தல் = முடியணிதல். வேய்ந்தோன்–வேந்தன். கொன்றை வேய்ந்தானை(சிவனைக்) கொன்றை வேந்தன் என்று கூறுதல் காண்க. சேர, சோழ, பாண்டிய முக்குடியரசர்கட்கே முடியணியும் உரிமை முதற்காலத்திலிருந்தது.

## 13. பொருள் வரிசை அறிதல்

எ.கா. அருகுதல் = சிறுத்தல், ஒடுங்குதல்.

அரு–அரை – சிறுத்த அல்லது ஒடுங்கிய இடை. உடம்பின் – நடு

பாதி. கோல் – கால் = கம்பம், தூண், தூண்போல் உடம்பைத் தாங்கும் உறுப்பு. உடம்பின் காற்பகுதி, காற்பகுதி (நாலிலொன்று)

உடம்பின் பாதியளவாய் இருப்பது அரையென்றும், நாலிலொரு பகுதியாக இருப்பது கால் என்று தலைகீழாய்ப் பொருட்காரணியம் காட்டுவது உண்மைக்கு நேர்மாறாம்.

## 14. ஒப்புமையமைப்பு (Analogy) அறிதல்.

எ.கா. குழல் – குடல், புழல் – புடல் – புடலை,
க.படல. தெ.பொட்ல வ.பட்டோலிக்கா,
கடை – கடலை. விடை – விடலை
L. Vitula

மை – மயிர், தை – தயிர், தைத்தல்– குத்துதல்

முள் குத்தினால் முள் தைத்தது என்பர். பாலிற் பிரைமோர் ஊற்றுதலைப் பிரைகுத்துதல் என்பது உலக வழக்கு. பிரை தைத்தது தயிர்.. வ.ததி (Dadhi) இ. தஹீ.

## 15. வரலாற்றறிவையும் ஞால நூலறிவையும் துணைக்கோடல்

எ.கா. பாண்டவர் தோன்று முன்னரே பாண்டியர் தென்னாட்டை ஆண்டு வந்தனர். பாண்டவருள் ஒருவனான அருச்சுனன் நீராடத் தென்னாடு வந்து சித்திராங்கதன் என்று பாரதங்கூறும் ஒரு பாண்டியன் மகளை மணந்தான். ஆரியர் இந்தியாவிற்குள் அடி வைக்குமுன்னரே பாண்டியர் வரலாற்றிற் கெட்டாத தொன்மையிலிருந்து, கணக்கில் காலம் தென்றமிழ் நாட்டை ஆண்டு வந்திருக்கன்றனர். திருக்குறளுக்கு ஆரிய அடிப்படையில் உரை வரைந்த பரிமேலழகரும், பழங்குடிக்குப் 'படைப்புக் காலந்தொட்டு மேம்பட்டு வரும் சேர, சோழ, பாண்டியர் குடிகள்' என்று மூவேந்தர் குடிகளை எடுத்துக் காட்டினர். இங்ஙனமிருந்தும் பாண்டியன் என்னும் பெயர் பாண்ட்ய (Pandya) என்னும் வடசொல்லிலிருந்து திரிந்ததாகச் செ.ப. கழகத் தமிழ் அகர முதலி நெஞ்சாரப் பொய்க்கின்றது.

இதை ஊழியிறுதிச் சூறாவளிபோற் சுழற்றி எறிவது குமரிக் கண்டத் தமிழக வரலாறே. பாண்டி = காளை, மறவன். பாண்டி = பாண்டியன்.

சாமை, படைப்புக் காலந்தொட்டுத் தென்னாட்டில் விளைந்து வரும் தொண்(ஒன்பான்) கூலங்களுள் ஒன்றாகும். இன்றும் அது நாட்டுப்புற உழவர்க்கு உரிய ஒழுங்கான உணவு வகைகளுள் ஒன்றாக இருந்து வருகிறது. ஆயினும் அதன் பெயர் சியாமா என்னும் வடசொல்லின் திரிபாக, மேற்குறித்த (செ.ப.அ.) பொய்க் களஞ்சியம் துணிந்து கூறுகின்றது. இதனை வெட்டி வீழ்ப்பது ஞால நூலறிவே.

சாமைப் பயிர் போல் ஒரு புல்லும் உண்டு. அது சாமைப்புல் எனப்படும். சாமை என்னும் தென் சொல்லையே வடமொழியாளர் 'ச்யாமா' என்று திரித்துத் தமிழரை ஏமாற்றி வருகின்றனர்.

## 16. இடுகுறி தமிழில் இல்லையென்றுணர்தல்

தமிழ் தானே தோன்றிய இயன்மொழியாதலின் அதிலுள்ள எல்லாச் சொற்களும் கரணியக் குறிகளே. சிலவற்றின் வேர்ப்பொருள் பார்த்தமட்டில் தெரியும்.

எ.டு. சுடலை < சுடல் < சுடு < சுள்

சிலவற்றின் வேர்ப்பொருள் ஆழ்ந்து ஆய்ந்தாலன்றித் தோன்றா.

எ.டு. வினை < விளை. இவ்வுண்மைகளையே

''எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே ''
(தொல்.640)

'' மொழிப்பொருள் காரணம் விழிப்பத்தோன்றா''

என்று தொல்காப்பியர் குறித்தார்.

நன்னூலுரையாசிரியர் இடுகுறியாகக் காட்டியுள்ள தமிழ்ச்சொற்கள் எல்லாம் கரணியக் குறிகளே. பலா= பருத்த பழத்தையுடையது. பனை = கரிய பல்வேறு கருக்குமட்டையுள்ளது. பொன் = பொற்பு அல்லது பொலிவுள்ளது.

ஆரிய மொழிகள் திரிபுடை மொழிகளாதலின் அவற்றில் பல சொற்கள், வேர்ப்பொருள் தோன்றாவாறு திரிந்திருப்பதுடன் பல இடுகுறிச்சொற்களும், சிறப்பாகச் சமற்கிருதத்தை அடிப்படையாக வைத்தாய்ந்த மேலை மொழி நூலாசிரியர் எல்லா மொழிகளும் இடுகுறித் தொகுதிகளே என்பதை அடிப்படை நெறிமுறையாகக் கொண்ட வண்ணனை மொழி நூல் (Descriptive Linguistics) என்னும் வழுப்பட்ட மொழியியல் வகையை உலகமெல்லாம் பரப்பி வருகின்றனர்.

உண்மையான வரலாற்று மொழியாராய்ச்சியால் சமற்கிருத இழிவும், ஆரிய ஏமாற்றமும் உலகிற்கு வெளிப்பட்டு விடுமேயென்று அஞ்சும் வடமொழியாளர், புதிராய்த் தோன்றியுள்ள வண்ணனை மொழிநூல் தமக்கொரு கேடகமாகயிருப்பது கண்டு அதனை நெஞ்சார நினைத்து வாயார வாழ்த்தி வளர்த்து வருகின்றனர். அவரடியாரான கொண்டான்மாரும் தமிழைக் காட்டிக்கொடுப்பதற்கு இது தலைசிறந்த வழியாயிருப்பதறிந்து இதனைத் தலைமேல் தாங்கி நிற்கின்றனர்.

ஒரு பொருளை எங்கெங்கு தேடியும் காண முடியாதென்று முழு நம்பிக்கை கொண்டவனுக்கு எங்ஙன் தேடல் முயற்சி பிறக்கும்? எல்லாச் சொல்லும் இடுகுறிகளே யென்றும் எல்லா மொழிகளும் ஆயிரம் ஆண்டிற்கு ஒருமுறை அடியோடு மாறிவிடுகின்றன என்றும் நம்புகின்றவனுக்கு எங்ஙன் மொழியாராய்ச்சி வேட்கை எழும்? ஆதலால் வண்ணனை மொழி நூல், அறிவு வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையென்று அறவே புறக்கணிக்க.

### 17. பகுத்தறிவைப் பயன்படுத்துதல்.

எ.டு. வடவை = வடமுனையில் தோன்றும் ஒரு வகை நெருப்பு அல்லது ஒளி. வடம் – வடவை(பிங்.)= வடவனல். 'வடவைக் கனலை வைத்தூதி' (அந்தகக் கவி வீரராகவர் தனிப்பாடல்)
வடம் – வடந்தை வடகாற்று, வடவைத்தீ.
'சுடர்ந்தெரி வடந்தைத் தீயும்' (காஞ்சிப்பு. இருபத்.384)
(அக்கடலின் மீது வடவனல் நிற்க விலையோ) (தாயுமானவர்)
ஒ.நோ. Aurora Borealis = Northern Licht

இங்ஙனம் வடவை என்பது தென்சொல்லென்றும், வடமுனை நெருப்பு பெயரென்று தெளிவாயிருக்கவும் அதை வடவா என்று திரித்துப் பெண் குதிரை என்று பொருளுரைப்பர் வடவர் இத்தகைய சொல்லியல்களில் பகுத்தறிவைப் பயனபடுத்துவது இன்றியமையாதது.

### 18. அஞ்சாமை

ஆயிரக்கணக்கான தென் சொற்களை வடவர் கடன் கொண்டிருப்பதால், அவற்றையெல்லாம் தென்சொல்லென்று ஒப்புக்கொள்ளின், சமற்கிருதத்திற்குத் தமிழே மூலம் என்பது வெட்டவெளியாம். அதனால் அதை மறைத்தற்குப் பல சொற்கட்குப் பொருந்தப் புகலலாகவும், பொருந்தாப் பொய்த்தலாகவும் பொருள் கூறியும் சிலவற்றை இடுகுறியென்று முத்திரையிட்டும் வருகின்றனர். இவற்றை மறுத்து உண்மை கூறுபவர்க்குப் பதவி அல்லது அலுவல் போய்விடும் என்னும் அச்சம் தமிழர் உள்ளத்தில் குடி கொண்டிருப்பதால் வடமொழியில் வழங்கும் தமிழ்ச்சொற்களுக்கு வேர் காணத் தனிமறம், வேண்டுவது ஒரு தலை.

### 19. நடுநிலை

காய்தல் உவத்தல் அகற்றி ஒருபொருட்கண்
ஆய்தல் அறிவுடையார் கண்ணதே – காய்வதன்கன்
உற்ற குணந்தோன்றா தாகும் உவப்பதன்கண்
குற்றமும் தோன்றாக் கெடும் (அறநெறி. 22)

கவி என்பது வடசொல். பா, செய்யுள் என்பனவே தென்சொல். ஆதலால் கவிஞனைப் பாவலன் என்றும் கவியரங்கைச் செய்யுளரங்கம் அல்லது பாவரங்கு என்றுமே சொல்லுதல் வேண்டும்.

கவிந்து கொள்வது கவி என்றும் தருவது தருமம் என்றும் நாயை வைத்திருப்பவன் நாயன் என்றும், உள் தணமாயிருப்பது உட்டணம் என்றும் , இரவு கசிதல் இரகசியம் என்றும், பெரியவித்து என்று பொருள்படும் வான்வித்து என்பது வித்துவான் என்று தலைமாறியதென்றும், இவைபோன்று பிறவும் கூறுவதெல்லாம் அறிவு முறைப்பட்டன அல்லவென்று கூறிவிடுக்க.

### 20. பொறுமை.

சில சொற்கட்கு வேர் காட்டும் உறவுச்சொற்கள் இறந்துபட்டிருப்பதால், அவற்றின் வேர் காண்டற்கு நாட்பலவன்றி ஆண்டு பலவும் ஆகலாம். ஆதலால் சொல்லாராய்ச்சிக்கு மிகுந்த பொறுமையும் வேண்டும்.

ஆண்டு பலவாகியும் வேர்காணவியலாது போகவும் நேரும். அதனால் உள்ளந்தளர்தல் கூடாது.

சொல் நெறியறிந்து ஆர அமர ஆராயின் இற்றைத் தமிழ்ச்சொற்களுள் நூற்றிற்கு எழுபத்தைந்திற்கு வேர் காணவியலும். எனினும் இறைவன் ஏற்பாட்டின்படியே ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொரு துறையில் ஆற்றலமையும் என்பதை நினைவில் இருத்துதல் வேண்டும்.

"வான்குருவி யின்கூடு வல்லரக்கு தொல்கறையான்
தேன்சிலம்பி யாவர்க்கும் செய்யரிதால் – யாம் பெரிதும்
வல்லோமே யென்று வலிமைசொல வேண்டாங்காண்
எல்லார்க்கும் ஒவ்வொன் றெளிது" – ஔவையார்.

('செந்தமிழ்ச் செல்வி' மார்ச்சு 1967)

## 11. பாவாணர் காட்டிய அடிச்சொல் காண் வழிகள்

பலமரங்கள் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து கொண்டிருப்பின், பார்த்த மட்டில் அவற்றின் அடிகளைக் காண்பது அரிதாகும். அவற்றின் நுனிக் கொழுந்திலிருந்து இணுக்கும் வளாரும், குச்சும் போத்தும், சினையும் கொம்பும் கிளையும் கவையுமாக ஒவ்வொன்றாய்க் கீழ்நோக்கிப் பிரித்துக் கொண்டேவரின் இறுதியில் நிலத்தில் மேல் முதற் கீழ்ப்பகுதியாகவுள்ள அடியைக் காணலாம். அதன்பின் அவற்றின் வேரைக் காண்பது தேற்றமாயினும், நிலத்தைத் தோண்டினாலன்றிக் காணமுடியாது. இப் பன்மரப்பிணையல் போன்றே, பல அடிகளினின்று கவைத்துக் கிளைத்துப் பல்கிப் பெருகியுள்ள சொற்றொகுதிகளும் பார்த்தமட்டில்

பிரித்துணரப்படாவாறு தம்முள் மயங்கிக் கிடக்கின்றன. அவற்றின் அடியைக் காண்பதற்கும் மேலிருந்து கீழ்நோக்கி வலம்வரல் வேண்டும். அடியைக் கண்டபின் ஆழ்ந்த ஆராய்ச்சியினாலன்றி வேரைக் காண முடியாது. இதைக் குறித்தற்கே

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" (தொல்.பெயர்:1) என்று கூறிய தொல்காப்பியர்

"மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்றா" (தொல்.உரி.96) என்று வரையிட்டார்.

சொல்லடி காண் வழியைக் காட்டுமுகமாகக், கோடு என்னும் சொல்லை எடுத்துக்கொண்டு அதன் அடியை ஈண்டு ஆய்கின்றேன்.

'கோடு என்னும் சொல், கோணுதல் அல்லது வளைதல் என்னும் பொருளைக்கொண்டு பெயராகவும் வினையாகவும் வழங்கும் சொல். இதன் வழியாகச் சில சொற்கள் பிறந்துள்ளன.

வளைதற் கருத்தினின்றும் வட்டக் கருத்தும் வட்டக் கருத்தினின்று சூழ்தற்கருத்தும் தோன்றும். ஒரே பொருள் வட்டமாக மேன்மேல் வளைந்து செல்வது திருகல் முறுகலான புரிதலாதலின், வளைவுக் கருத்திலிருந்து புரிதற் கருத்தும் தோன்றும்.

எ.டு. வளை – வளையம் (வட்டம்)
வளை – வளைசல் (சூழ்வு)
வளை – வளை (சங்கின் வல இடப்பிரிவு)

கோடுதல் = வளைதல், கோட்டம் = வளைவு, மதிலால் வளையப்பட்ட கோயில் அல்லது சிறைச்சாலை, வேலியால் வளையப்பட்ட மாட்டுக் கொட்டில்.

கோட்டை = வளைந்த மதில், வட்டமான நெற்கூடு, மதியைச் சூழ்ந்துள்ள ஊர்கோள்.
கோட்டகம் = வளைந்த குளக்கரை, கரை.
கோடு = வளைவு, வளைந்த வரி, வரி
கோடு = வளைந்த மரக்கிளை, கிளை.
கோடு = வளைந்த கொம்பு, கொம்பு
கோடு = வளைந்த கரை, கரை
கோடு = வளைந்த சங்கு, சங்கு

மலையைக் குறிக்கும் 'கோடு' என்னும் சொல் 'குவடு' என்னும் சொல்லின் திரிபாதலின் வேறாம்.

கோட்டம் என்னும் தென்சொல்லே வடமொழியில் கோஷ்ட என்றும் இலத்தீனில் Castrum என்னும் அதன் வழியாய் ஆங்கிலத்தில் 'Caster', 'chester' என்றும் திரியும், ஆங்கிலத் திரிவுகள் ஊர்ப் பெயராகவும் வழங்கும்.

எ.டு. Doncaster, Colchester, Exeter (Excester)

இப்பெயர்களை அருப்புக்கோட்டை, பட்டுக்கோட்டை முதலிய தமிழ்நாட்டு ஊர்ப்பெயர்களுடன் ஒப்பு நோக்குக.

கோடு என்பதன் நேர்மூலம் கோண்.
ஒ.நோ. பாண் – பாடு, பேண் – பேடு

கோண் என்னும் பகுதியிலிருந்து கோணு, கோணல், கோணம், கோணை முதலிய சொற்கள் பிறக்கும்.

கோணம் என்னும் தென் சொல்லே, கிரேக்கத்தில் Gonia (angle) என்றும் அதன் வழியாய் ஆங்கிலத் தொடர்ச்சொற்களில் gon என்றும் திரியும்.

எ.டு. Trignometry, (திரிகோண மாத்திரை)
Polygon (பலகோணம்)

கோண் என்பதன் நேர்மூலம் கோள்.

ஒ.நோ. பெள் – பெண்
வேள் – வேண்

கோள்= வளைவு, வட்டம், உருண்டை, உருண்டையான 'கிரகம்'.

ஊர்கோள் = மதியைச் சுற்றி ஊர்ந்துள்ள வட்டம், கோள் என்னும் பகுதியினின்று, கோளம், கோளா, கோளகை, முதலிய சொற்கள் பிறக்கும்.

வட்டக் கருத்தினின்றும் உருட்சிக் கருத்தும், உருட்சிக் கருத்திலிருந்து திரட்சிக் கருத்தும் தோன்றும். வளைவு முற்றியதே வட்டம். கனவடிவான வட்டமே உருண்டை.

கோள் + அம் = கோளம். கோளம் = உருண்டை. பூகோளம்,

குடகோளம், குணகோளம், அண்டகோளம் முதலிய தொடர்களில் கோளம் என்னும் சொல்லின் பொருளை நோக்குக.

கோள் + ஆ = கோளா. ஆ ஒரு தொழிற்பெயர் விகுதி.

எ.டு. உண் + ஆ = உணா. இரு + ஆ = இரா., இருத்தல் = கருத்தல்.

கோளா = உருண்டையான ஒருவகைச் சிற்றுண்டி

கோள் + அகை = கோளகை. கோளகை = உருண்டை 'அகை' ஓர் ஈறு . வாடகை, கொட்டகை என்பவற்றிற்போல

கோளம் முதலிய சொற்கள் தமிழில் வழக்கு அருகியமையாலும் வடமொழியில் வழக்குப் பெருகியமையாலும் வடசொற்கள் போலத் தோன்றுகின்றன. இங்ஙனமே வடமொழிச் சென்ற பிற தென் சொற்களில் பலவும் என்க.

ல,ள,ழ ஆகிய மூன்றும் முறையே பிஞ்சும் காயும் கனியும் போல, மெலிந்தும் திரண்டும் முதிர்ந்தும் உள்ள ஒரே ஒலியின் வேறுபாடுகளாதலின், சொற்களில் ஒன்றுக்கொன்று போலியாக வருவதுண்டு.

எடு. வேலை – வேளை, பவளம் – பவழம்

இம்முறையில் கோள் என்னும் சொல், கோல் என்னும் வடிவும் கொள்ளும். உண்மையில், கோல் என்பதே முந்தியதாகும்.

கோல் = வளைவு. உருட்சி, திரட்சி, திரண்டதடி, தடி, தண்டு, அடி.

காம்பு கோல் தொடி = திரண்ட வளையல்

கோல் + இ = கோலி. கோலி = உருண்டை. கல், மண், கண்ணாடி முதலியவற்றாலாகிய சிற்றுருண்டை

கொள் = (வி) வளை, சுற்று, சுழல்.

கொள் = (பெ) வளையு, வளைந்த காணக்காய், காணம்

"காயும் கோணக்காய் சொல்லடா மைத்துனா
கதையும் விடுவித்தேன் கொள்ளடா மைத்துனா"

என்பது ஒரு விடுகதை உரையாட்டு.

கொ–கோள் (முதனிலை திரிந்த தொழிற்பெயர்)
= கதிரவனைச் சுற்றிவரும் 'கிரகம்', எனினுமாம்
கொள் + பு = கொட்பு , கொட்பு = சுற்றுகை.

கொள் பகுதியினின்றும் கொக்கி, கொண்டி முதலிய சொற்களும், கொட்டு, கொடு முதுலிய வழியடிகளும் பிறக்கும்.

கொள் – கொட்கி– கொக்கி = வளைந்த கொளுவி

ஒ.நோ. A.S Loc, Horc, Do Hook, Ice, Haki Ger.halen ; OHG - haks , L G hake, E.hook

கொள் – கொட்கு – கொக்கு = கொக்கி போல் வளைந்த கழுத்துடைய பறவை.

கொள் – கொண்டி. ஒ.நோ. வள் – வண்டி. கொண்டி = கொக்கி அல்லது வளையமுள்ள நாதாங்கி. கொள் – கொம் – கொம்பு = வளைந்த கிளை, கிளை, வளைந்த மருப்பு அல்லது கோடு.

கொம்பு என்னும் சொல், தெலுங்கில் இன்றும் கொம்மு என்றே வழங்கும்.

ஒ.நோ. வள் – வம் – வம்பு
கொம்பு – கொப்பு, கொம்பு – கம்பு
கொள் – கொட்டு – கொட்டம், ஒ.நோ. வள் – வட்டு– வட்டம்.

கொட்டம் = வளைவு, வட்டமான மாட்டுத் தொழுவம் அல்லது பட்டி; நேர்மையில்லாத அஃதாவது நெறியினின்று கோணிய கொடிய ஆரவாரம்.

- முதற்காலத்தில் ஆட்டுப்பட்டிகளும், மாட்டுப்பட்டிகளும் வட்டவடிவமாகவே அமைக்கப்பட்டன. பிற்காலத்தில் மழைக்காப்பிற்குக் கூரையமைந்தபோது கூடமாகக் கட்டப்பட்டன.
- கொட்டு + இல் = கொட்டில் = மாட்டுத் தொழுவம், தொழுவம் போன்ற கூடம், பட்டறை, படைக்கலச்சாலை. கொட்டு + அகை = கொட்டகை. கொட்டகை=தொழுவம், கூடம்.
- இன்றும் வடார்க்காட்டார் மாட்டுத் தொழுவத்தைக் கொட்டகை என்பர்.
- கொட்டு + ஆரம் = கொட்டாரம். ஆரம் என்பது ஓர் ஈறு; கூடாரம், வட்டாரம், பணியாரம் என்பவற்றிற் போல.

கொட்டாரம் = வட்டமான களஞ்சியம்.

## 12. பாவாணர் சுட்டிய சொல்லாய்வுப் படிநிலைகள்

பாவாணர் சொற்களை ஆராய்ந்த முறை வியத்தற்குரியது. சொல்லாய்வுப் படிநிலைகளை ஐவகையாக ஆய்ந்திருப்பதை அறிய முடிகிறது.

1. வேர் மூலம் கண்டு பொருளறிதல்.

2. வடிவ மீட்டமைத்துப் பொருள் காண்டல்

3. சொல்லின் பொருட்பாட்டுப் படிநிலைகளின் வழிக் காலந்தோறும் புடை பெயர்ந்து வந்த பொருள்களை நிரற்படுத்துதல்.

4. உலக மொழிகளுக்குச் சென்ற சொற்களை வகைப்படுத்துதல்.

5. தமிழின் வேர் நிலையிலோ சொல்நிலை யிலோ வேற்று மொழிகளுக்குச் சென்று மீண்டும் தமிழில் புகுந்த சொற்களைத் தரப்படுத்துதல்.

## எது வேர்?

தனிச்சொல் தொடர்ச்சொல் ஆகிய இருவகைச் சொற்களுள் முன்னதற்கு வேர் காணவேண்டும். பின்னதற்கு மூலம் காண வேண்டும். தனிச்சொல்லுக்கு ஆணிவேர் வரை சென்று, 'பொருள் வளர்நிலைகளை நிரற்படுத்துவது வேரடிச் சொற்பிறப்பு என்பதாகும்.

## தனிச் சொல்லின் வேர்மூலம்

திரு என்னும் சொல் 'தில்' என்னும் வேரடியாகப் பிறந்தது.

தில் → திர் → திரள் → திரளை → திரணை.

தில் → திர் → திரு.

த. திரு > SKT. Sri. (Wealth, prosperity. happiness any virtue or exellence) வடமொழியில் இச்சொல்லுக்கு மூலமான வேர்ச்சொல் இல்லை.

தில் → திர் (திரள்) → திரு என்னும் மூன்று வேரடிப் படிநிலையில் வடமொழி இச்சொல்லைக் கடன் பெற்றுள்ளது. திர் (திரள்) என்னும் இரண்டாம் படி நிலையில் இலத்தீன மொழி, தமிழிலிருந்து கடன் பெற்றுள்ளது. ceres என்னும் இலத்தீனச் சொல் திரளுதல் (mature) பொருள் உள்ளது. பூப்படைந்த பெண்ணை, திரண்டாள் என்பது தமிழ்நாட்டில் இன்றும் பேச்சு வழக்காக உள்ளது. திரண்ட தவசக்கதிர் cereal எனப்படும்.

த. திர் → செர் > L. Cerealis. Corn (கதிர்)
(திரள்) ceres - goddess of corn

E. Ceremony - religious rite

L. cerebrum - Soft mass in the centre of plants, bones and skulls.

E. Cereal - Corn or edible grain.

திரவிடத் துளு மொழிகளில் 'திர்லெ' திரண்டு வளர்ந்த இளைஞனையும் 'திர்லு' – மரத்தின் உள்வயிரத்தையும் (அகக்காழ்)யும் குறிப்பிடுதலை ஒப்பிடுக.

திர் (திரள்) என்னும் இரண்டாம் படிநிலைக்கு மூலமான தில்[1] என்னும் மேற்படிநிலை ஆணிவேர் தமிழிலின்றி வேறு மொழிகளில் இல்லை.

தில் (வினையடி) – கூடுதல், சேர்தல், தக்ககாலம் கூடுதல்.

தில் (பெயரடி) – நண்பு – நட்பு, அன்பு, விழைவு

"பெறுகதில் அம்ம" (குறுந்.14)

"வருகதில் அம்ம எம்சேரி சேர" (அகம் 176)

"பெற்றாங்கு அறிகதில்" (தில் – உரியகாலம் சேர்தல்)

தில்லம் – மரச்செறிவு, காடு, "தில்லமும் பலதேசமும் கடந்து" (சேதுபு. மங்கல. 73)

தில்லகம் – திரண்டு உருண்ட விளாம்பழம், விளாமரம் (தைலவ. தைல. 74)

தில்லை – கிளை செறிந்த தில்லை மரம் "தில்லையன்ன புல்லென் சடையொடு"
(புறநா.252). க. தில்லக – திலக – தோழன், தோழி

தில் → திள் → திட்டு, திண்டு, திண்ணை என்பன திரட்சிப்பொருளில் பரக்க ஆளப்பட்டுள்ளன. 'தில்' என்னும் ஆணிவேர் தமிழிலும் திரவிட மொழிகளிலும் மட்டும் காணப்படுகிறது.

ஆணிவேர் வரை சொல்லின் மூலம் எந்த மொழியில் காணப்படுகிறதோ, அம்மொழியே ஏனைய மொழிகளுக்குத் தாயாகும். இத்தகு ஆயிரக்கணக்கான உலக மொழிச் சொற்களுக்கெல்லாம் தமிழில் ஆணிவேர் காணப்படுதலின் தமிழை ஞாலத்தாய்மொழி என்று திட்டமாகக் கூறினார் பாவாணர்.

ஆணிவேர் வரை வேர் மூலமும், அதனின்றும் கிளைத்த சொல்லாட்சிகளும் அறவே பயிலப் பெறாமல், தில் ஆணிவேரின் மூன்றாம் படிநிலை வினையடியின் (நான்காம் திரிபாக) பெயரடியாகிய திரு வடமொழியில் பெயர்ச் சொல்லாகக் கடன் கொள்ளப் பட்டிருக்கிறது. Sri என்னும் சொல்லுக்கு வினைவடிவம் வடமொழியில் இல்லை. ஆதலின் வடமொழியாளர் முறையான ஆய்வு அடிப்படை நெறிகளை வகுத்துக் கொள்ளாமல் கண்மூடித்தனமாக ஸ்ரீ என்பதிலிருந்து திரு வந்தது என்று கூறியபோது பாவாணர் திருவென்னும் சொல் தென்சொல்லே எனக் கட்டுரை வரைந்தார். (செந்தமிழ்ச் செல்வி 20 : 243)

அக்காலத்தில் அது திருப்போராட்டமாக அறிஞர்களிடையே பரபரப்பை உண்டாக்கியது.

திருவென்னும் சொல் தேவியல், மகவியல் என இருதிறத்திலும் வழக்கூன்றியிருப்பதைப் பாவாணர் எடுத்துக் காட்டினார்.

1. தேவியல் – திருமகன், திருமகள், திருமால், திருவருள், திருநீறு.

2 மகவியல் – வேத்தியல் : திருமறு, திருமுகம் பொதுவியல்: திருநிலைக்கால், திருமணம்.

தனிச்சொல்லுக்கு வேர் காண்பது அரிது என்றும் தொடர்ச் சொற்களுக்கு மூலம் காண்பது எளிது என்றும் பாவாணர் கூறினார். (செந்தமிழ்ச் செல்வி 20 : 108) பழைய பொருள்கள் மறைந்துள்ள தொடர்ச் சொற்களுக்கு மூலம் காண்பதும் அரிய செயலாகும்.

## மூலம் எது?

தொடர்ச்சொல் அல்லது கூட்டுச் சொல்லிற்கு வடிவ மீட்டமைப்பின் வாயிலாகச் சொன்மூலம், பொருள் மூலம் காண்பதைப் பொதுவாக மூலம் காண்பது என்று பாவாணர் குறிப்பிட்டார். அவருடைய நோக்கின் வண்ணம் தனிச் சொல்லுக்கு மூலம் காண்பதை 'வேர் காண்பது' என்றும், தொடர்ச் சொல்லுக்கு சொற்பகுப்பின் மூலம் அல்லது வடிவ மீட்டமைப்பின் மூலம் முந்து வடிவம் காண்பது மூலம் காண்பது என்றும் பொருள் படுகிறது.

தொடர்ச்சொல்லுக்கு மூலம் காணும் நோக்கில் அவர் விளக்கிய சொற்கள் சிலவற்றைப் பார்ப்போம்.

### ஏராளம்

ஏர் = கலப்பை. ஆள் + அம் = ஆளம் = ஆணின் தன்மை

ஏராளம் = உழவன் வருவாய்போல் மிகுதியாய் இருத்தல்.

### சிங்கியடித்தல்

சிங்கி = தாளம். அடித்தல் – தட்டுதல்

சிங்கியடித்தல் = இரப்போன் தாளம் தட்டி இரப்பது போலத் திண்டாடுதல்

தாளக்கருவியை உருவக (ரூபக) தாளத்தில் தட்டினால் 'சிங்சீயான்' என்ற ஒலியெழும். இதனால் தாளக் கருவிக்குச் 'சிங்கி' என்றும் 'சீயான்' என்றும் பெயருண்டு.

### தாயமாடல்

தாய் + அம் = தாயம் = தாயினின்று பெறும் உரிமை.

ஆடல் = விளையாடல்

தாயமாடல் = சீட்டுப் போடுவது போல் முத்தும் பலகறையும் போட்டு உடன்பிறந்தார் பாகம் பிரித்தல்; முத்தினாலும், பலகறையினாலும் விளையாடிப் பிறர் உரிமையைப் பெறுதல் அல்லது பறித்தல். தாயமாடிக் காலத்தை வீணடிப்பது போல் வேலை செய்யாமல் காலங்கழித்தல் அல்லது தாழ்த்தல். வேலை செய்யும்போது காலங்கழித்துச் சுணக்கம் செய்வதை 'வேலை தாயமாடுகிறது' என்று இடித்துரைப்பது உண்டு.

'திரு' என்ற சொல்லின் விளக்கம் வேர்மூலம் கண்டு பொருளறிவதற்குச் சான்று.

'அங்காடி' என்பது வடிவம் மீட்டமைத்துப் பொருளறிதற்குச் சான்று.

சிங்கியடித்தல், தாயமாடல் என்பவை சொல்லின் பொருட்பாட்டுப் படிநிலைகளின் வழி, காலந்தோறும் புடைபெயர்ந்து வந்த பொருள்களை நிரற்படுத்துவதற்குச் சான்று.

மூவிடப் பெயர்கள், உறுப்புப் பெயர்கள் அடிப்படைச் சொற்கள் என்பவை உலக மொழிகளுக்கு, சென்ற சொற்களாக வகைப்படுத்தற்குச் சான்று.

ஆதி, எச்சரிக்கை என்பவை தமிழின் வேர் நிலையில் அல்லது சொல்நிலையில் வேற்று மொழிகளுக்குச் சென்று மீண்டும் தமிழில் புகுந்த சொற்களுக்குச் சான்றாகும்.

## சொல்லின் பொருட்பாட்டுப் படிநிலைகள் (Semantic stares)

சொல்லும் திரிந்து, பொருளும் திரியும்போது எளிதில் விளங்கிக் கொள்ள முடிகிறது. சொல் திரியாமல் பொருள் மட்டும் மாறிச் செல்லும் நிலைகளைப் பொருட்பாட்டுப் படிநிலைகள் என்பர்.

வேர்ச்சொல் முன்மைக் கருத்திலிருந்து துருவல் கருத்துவரை எண்பெருங் கருத்துக்களில் நிரலே பொருட் புடைபெயர்ச்சி பெறுகிறது. ஒரு கருத்திலிருந்து ஒரு கருத்து தோன்றுகிறது என்று பாவாணர் கூறியதை, மேனாட்டார் பொருளின் புடைபெயர்ச்சி என்கின்றனர்.

வேர்ச்சொல்லுக்கு எட்டுப் படிநிலைகளை வகுத்து எண்பெருங்கருத்துகள் எனப் பெயரிட்டார். வினையடிகள் ஈறு பெற்றும், திரிபுற்றும், இயல்பாகியும் பெயராகும். பெயர்ச்சொற்கள் எவ்வகை மாற்றமும் பெறாமல் அப்படியே நின்று பொருளில் மட்டும் புடை பெயர்ந்து செல்வதுண்டு.

பள்ளி என்னும் சொல்லுக்குப் படுக்கை என்பது முதற்பொருள். அப்பொருளிலிருந்து இடம் என்னும் பொருளுக்கு அச்சொல் நாளடைவில் புடை பெயர்ந்தது. இடம் என்பது வழிநிலைப் பொருள். ஒரு சொல் பல வழிநிலைப் பொருள்களைப் பெறலாம். இதனையே பொருட்பாட்டுப் படிநிலை என்கிறோம்.

## பொருட்பாட்டுப் படிநிலை – 1.

பள்ளி – படுக்கை

'கழாக்கால் பள்ளியுள் வைத்தற்றால்'
(திருக்குறள், 840)

## பொருட்பாட்டுப் படிநிலை – 2

பள்ளி – இடம்

'சொல்லிய பள்ளி எழுதரு வளியின்'
(தொல். எழுத்.100)

இடத்தைக் குறித்த பள்ளி என்னும் சொல் தொல்காப்பியத்தில் இடம் பெற்றிருந்தாலும், இரண்டாம் படிநிலைப் பொருளிலேயே ஆட்சிபெற்றுள்ளது. திருக்குறளில் முதற் படிநிலைப் பொருளில் ஆளப்பட்டுள்ளது. பொருள் வளர்நிலைகளின் காலம் கணிப்பதற்குப் பொருட்பாட்டுப் படிநிலை வகுப்பது மிகவும் இன்றியமையாதது.

தொல்காப்பியர் உலகம் என்னும் சொல்லைக் குறிப்பிட்ட நிலப்பகுதியை அல்லது இடத்தைக் குறிக்கும் சொல்லாகவே ஆண்டுள்ளார். இருக்கு வேதத்திலும் உலகம் 'லோக' எனத்திரிந்து, இடம், இருக்கும் அறை எனச் சுருங்கிய இடப்பகுதியையே குறிக்கிறது. நாம் வாழும் ஞாலத்தை உலகம் எனக் குறித்தது, காலத்தால் பிற்பட்ட பொருளாட்சி. உலகம் என்னும் சொல் இடப்பகுதியைச் சுட்டிய காலத்தில், வேதமொழி இச்சொல்லைக் கடன் பெற்றிருக்கிறது என்று கண்டறிய முடிகிறது.

தமிழிலும் வடமொழியிலும் ஒத்து வழங்கும் வேரடி அளவிலான சொற்கள் தமிழிலிருந்து வட மொழிக்குச் சென்றனவா, வடமொழியிலிருந்து தமிழுக்கு வந்தனவா என்பதை நிறுவவும், பொருட்பாட்டுப் படிநிலைகளே உதவுகின்றன. சொல் வளராமல் வினையடி அல்லது வேரடி அளவிலேயே நிற்பதால், சொல்வளர் நிலைகளை மட்டும் ஆய்ந்து கண்டறிய முடியாது.

புரி – வடசொல்லா தென்சொல்லா?

புரி என்னும் நகரத்தைக் குறித்த சொல் தமிழிலும் வட மொழியிலும் ஒரே பொருளில் ஒரே சொல் வடிவில் வழங்குகிறது. எம் மொழியிலிருந்து எம் மொழிக்கு வந்தது என்னும் சிக்கல் எழும்போது இரு மொழியினரும் எண்ணிறந்த இலக்கியச் சான்றுகளை எடுத்துக் காட்டுகின்றனர். இந்நிலையில் பெயர்ச்சொல்லின் வினைவடிவமும் வேரடியும் எம்மொழிக்கு உரியதோ அம்மொழிக்கே அச்சொல் உரியது என்று முடிவுகட்ட வேண்டும். பொருட்பாட்டுப் படிநிலைகளைக் கொண்டே இச்சொல்லின் வினை வடிவத்தையும் வேரடியையும் மீட்டமைக்க வேண்டும்.

புல் – வளைதற் கருத்து வேர், இது வேரடி.

புரி → புரு → புரி (வளைதல், சுற்றுதல் – வினையடி)

புரி குழல் : கடை குழன்று சுருண்ட முடி, நெளி நெளியாய் வளைந்த அறற் கூந்தல்

"புரிகுழன் மாதர்" (சிலப். 14 : 37)

புரி (பிரி) – முறுக்கிய கயிறு

"மாற்புரி மரபின்" (பெரும்பாண். 181)

புரிதல் – 1. அசைதல். "தாற்புரிந்தன்ன" (பதிற்றுப் 69 : 13)

2. வளைதல். "மற்றையருகே புரியில்" (திவ். இயற். திருவிருத். 42. வ்யா. பக். 247)

புரி$^{2}$ முகம் – வட்டம், சங்கு, கோபுரம்

புரி$^{3}$ – கோட்டை மதில்

புரி$^{4}$ – கோட்டை

புரி$^{5}$ – கோட்டை மதிலமைந்த நகரம்

புரி$^{6}$ – நகரம்.

'புரி' என்னும் சொல்லின் ஆறுபொருள் வளர்ச்சிப் படிநிலைகள் மேலே காட்டப்பட்டன. வினைப்பொருளில் ஆளப்பட்டுள்ள (புரி$^{1}$) முதற்சொல்லும் பெயர்ப் பொருளில் ஆளப்பட்டுள்ள (புரி$^{2}$) இரண்டாம் சொல்லும் தமிழிலன்றி வடமொழிப் பரப்பில் யாண்டும் ஆளப்படவில்லை. ஆதலின் இச்சொல் தமிழ்ச் சொல்லே என்று நிறுவப்படுகிறது.

புரி$^{2}$ முதல் புரி$^{6}$ வரைப்பட்ட பொருள்களில் இச்சொல் வடமொழியில் கோட்டை மதில், கோட்டை,

கோட்டைக்குள்ளிருக்கும் நகரம், நகரம் ஆகியவற்றைக் குறித்து புரி, புரம், புர எனத் திரிந்து ஆட்சிப் பெற்றுள்ளது. (Pura - rampart. castle. town. a city extending to one kos-half of the length kheta- still less in length karvata still smaller. Grama)

சொல் வளர்ச்சிப் படிநிலையில் மூன்றாம் பொருள் வளர்ச்சிக் காலத்தில் வடமொழி தமிழிலிருந்து இச்சொல்லைக் கடன் பெற்றுள்ளது என்பதைப் பொருட்பாட்டுப் படிநிலைகள் தெற்றெனக் காட்டுகின்றன. மிகவும் சிக்கலான சொற்பிறப்புகளில் பொருள் வளர்நிலை வரிசை உண்மை காண உதவுகிறது. அதனால்தான் பாவாணர் சொல்லின் பொருட்பாடுகளை ஏரண நெறியில் ஆய்ந்தார். அதனை ஏரண நெறிப்பட்ட பொருட்பாட்டுப் படிநிலைகளாக நாம் வகைப்படுத்திக் கொள்ளவேண்டும்.

உலக மொழிகளுக்குச் சென்ற சொற்களை அடிப்படைச்சொற்கள், வணிகச் சொற்கள், ஊடாட்டக் கடன்சொற்கள் என்று மூவகைப்படுத்தலாம். வேர்ச்சொற்களும் வேரடிப்பெயரடிகளும் அடிப்படைச் சொற்களாம். இவற்றுள் பண்பாட்டுச் சொற்களும் அடங்கும். அம்மா, அப்பா, எல்லா, ஏலா (Hallo) போன்ற பண்பாட்டுச் சொற்கள் முழுமையாய் உலக மொழிகளுக்குச் சென்றவை. தோகை, இஞ்சிவேர், நாவாய், காசு போன்றவை வணிகச் சொற்கள். அந்தந்த நூற்றாண்டுச் சொற்களாகப் புதிதாகப் புகுவன ஊடாட்டச் சொற்கள், ஊடாட்டமும் வணிகத் தொடர்பும் இல்லாமல் அடிப்படைச் சொற்களால் மட்டும் நெட்டிடைப் பட்ட பெரிய கால இடைவெளியால் பிரிந்து நிற்கும் உலக மொழிகள் பல. ஆதலால் உலக மொழிகளுக்குச் சென்ற தமிழ்ச்சொற்களைக் கண்டறிய வேர்ச்சொல்லில் வளர்ந்த அடிப்படைச் சொற்களை முகாமையான அளவுகோலாகக் கொண்டார் பாவாணர்.

தமிழின் வேர்நிலையில் அல்லது சொல் நிலையில் வேற்று மொழிகளுக்குச் சென்று மீண்டும் தமிழுக்கு வந்த சொற்களைத் தரப்படுத்தும் வினா எழும்போது, அத்தகு சொற்களின் எண்ணிக்கை விரல்விட்டு எண்ணும் அளவுக்குக் குறைந்திருத்தலின் பெருஞ்சிக்கல் எதுவும் எழுவதில்லை.

இவற்றை இனங்கண்டு கொள்ளும் மகிழ்ச்சி என்பதைவிட உண்மை வெளிப்பட்ட செய்தியே ஆராய்ச்சி உலகத்திற்குப் பெரிய கொடையாகிறது.

எகுபது (எகிப்து) பாபிரசு ஓலைச் சுருள்களில் உள்ள சொற்களில் சாப்பிடுதலைக் குறிப்பதற்கு 'உண்ம்' என்னும் சொல் ஆளப்பட்டிருத்தலைக் கேள்விப்படும் போது இத்தகு உணர்வு எல்லோர்க்கும் மேலோங்குகிறது.

இனித் திரிபுற்றுவரினும் ஆராய்ச்சியாளர்க்கு மட்டும் அடையாளம் தெரிகிறது. பள்ளி மாணவர்கள் வகுப்புக்குப் புத்தகத்துடன் நோட்டுப் புத்தகமும் எடுத்துச் செல்கின்றனர். இதனைக் குறிப்பேடு எனத் தமிழாக்கியும் வழங்குகிறோம்.

ஆனால் பாவாணப் பெருந்தகையின் உள்ளம் அச்சொல்லை இனங்கண்டறிகிறது. நோட்டம் என்பதிலுள்ள 'நோடு' என்னும் வினையே மேலையாரிய மொழிகளில் 'note' என வழங்குவதை இனங்கண்டறிகிறார். பாடு – பாட்டு எனப் பெயர்ச்சொல் ஆவது போல், பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் நோடு – நோட்டு ஆகியிருக்கிறது. எனவே 'நோட்டு' என வழங்குவது பிழையில்லை. குறிப்பேடு எனப் புதிய சொல்லும் படைக்க வேண்டியதில்லை என்கிறார். காலத்தாலும் இடத்தாலும் வெகு தொலைவுக்கு ஓடிப்போன சொற்களையும் கட்டியணைத்துக் கொள்கிறார். மரபுவழிச் சொல் தூய்மையே பாவாணரின் சொல்லாய்வுக் குறிக்கோள் எனலாம்.

## பெயர்ச்சொல்லே பொதுப்பொருளில் முன்னொட்டாதல்

மொழிகளில் முன்னொட்டாக (Preposition) வருபவை பெயர்ச்சொற்களாக இருந்து பொதுப் பொருளில் பொது முன்னடையாக்கிக் காலப்போக்கில் ஒரே கருத்தை மட்டும் குறிக்கும் முன்னொட்டாகி விட்டன. தமிழில் வேர்க்கருத்து முன்னொட்டாகாமல் பொதுப்பொருள் குறித்த முன்னடையாக நின்றுவிட்டது. (எ.டு) ஊசி – முன்செல்லுதல், குத்துதல் கருத்தில் தோன்றி, தைக்க உதவும் மெல்லிய இழை வடிவ மாழையைக் குறித்தது.

இச்சிறப்புப் பொருள் ஊசியின் சிறிய வடிவம் என்னும் பொருளில் புடைபெயர்ந்து சிறுமை என்னும் பொது முன்னடை மொழியாகிவிட்டது.

எ.டு. ஊசி மல்லிகை, ஊசி மிளகாய், ஊசிச் சம்பா, ஊசிக்களா, ஊசிக்காய், ஊசித்தட்டான்.

'சிறப்புப் பொருளுள்ள பெயர்ச்சொற்கள் பொதுப்பொருளில் புடைபெயரும்போது' வேர்க்கருத்து, பொதுப்பொருளுக்குப் பயன்படாததால் வேர்ப்பொருள் மறைந்து போகிறது. வேர்ப்பொருள் மறக்கப்பட்ட

சொற்கள் எப்படியும் திரிபடையத் தொடங்குகின்றன. ஊசி – உ எனக்குறுகி உக்கோல் (சிறுகோல்) உக்கொடி (சிறியகொடி) எனப் புதுச்சொல்லாட்சிகள் தோன்றவும் இடம் தந்து விடும். முன்னடையாகிய பெயர்ச்சொற்கள் வேர்ப்பொருள் மறந்து பொதுப்பொருள் முன்னொட்டுகளாகத் திரிவது உட்பிணைப்பு மொழிகளில் மிகுதியாகக் காணப்படுகிறது.

ஆங்கிலத்தில் Pre-Pro- என வழங்கும் முன்னொட்டுகளும் வடமொழியில் வழங்கும் முன்னொட்டுகளும் இத்திறத்தனவே என்று பாவாணர் கூறுவதுண்டு. மரபார்ந்த வடிவ மீட்டமைப்பு வல்லுநரால் அன்றிப் பிறரால் இத்தகையவற்றை வடிவ மீட்டமைக்க முடியாது.

சொல்லாய்வுப் படிநிலைகளை வகுப்போர் இத்தகு சொற்சூழல்களையும் மனக் கொளல் வேண்டும். உட்பிணைப்புற்றிருந்தாலும் முன்னொட்டு, பின்னொட்டுகளைத் தனியாக பிரித்தே சொல்லாய்வு செய்தல் வேண்டும்.

## 13. பாவாணர் காட்டியுள்ள சொல்லியல் நெறிமுறைகளில் சில

'முதல் தாய்மொழி' என்னும் தம் நூலிற்குப் பாவாணர் 'தமிழாக்க விளக்கம்' என்னும் பெயரையும் இணைத்தே எழுதினார். அதன் சுட்டொலிக் காண்டத்துச் சுட்டொலி வளர்ச்சிப் படல இறுதியில்

"உலகியல் நிகழ்ச்சிகளையெல்லாம் ஊன்றிக் கவனித்து, சுட்டுக் கருத்துகளோடு அவற்றைத் தொடர்புப் படுத்தி, உள நூற்கு ஒப்பவும், ஏரண நூற்கு இசையவும், இயற்கையுண்மை, எள்ளளவும் தப்பாது, எல்லாக் கருத்துகளையும் குறிக்கும் சொற்களை ஆக்கிக் கொண்ட முன்னைத் தமிழரின் நுண்மாண் நுழைபுலம் என்னே!" என்று வியந்து எழுதுகிறார்.

ஊகாரச் சுட்டு வளர்ச்சியை அவர் காட்டும் முறை.

ஊகாரச் சுட்டு, முதலாவது முன்மையைக் குறிக்கும். முன்மை என்பது, காலமுன், இடமுன், முன்னிலை, முன்னுறுப்பு, முற்பகுதி, முனி (நுனி) முதலிய பல கருத்துக்களைத் தழுவும்.

### முன்மைக் கருத்தினின்று முன் வருதலாகிய தோன்றற் கருத்தும் பிறக்கும்

வித்தினின்று முளையும், மரத்தினின்று துளிரும், தாயினின்று சேயும் போல, எப்பொருளும் ஒன்றினின்றே தோன்றுதலானும், குட்டியும் குழவியும் முகமும் முன்னுங்காட்டியல்லது புறமும் பின்னும் காட்டித் தோன்றாமையானும் , எப்பொருட்டும் முற்பகுதி, முகம் எனப்படுதலாலும், முகத்திற்கு எதிர்ப்பட்ட பக்கம் முன்மையாதலானும், புதிதாய் ஒன்றினின்று ஒன்று தோன்றுதலெல்லாம் முன்வருதலேயாதல் அறிக.

### தோன்றற் கருத்திலிருந்து முற்படற் கருத்தும் பிறக்கும்

இடம் பெயரும் இருதிணையுயிரிகளும் ஓரிடத்தினின்று இன்னோரிடத்திற்குச் செல்வதெல்லாம் முற்செலவே. பிற்செலவு எல்லாம் பெரும்பாலும் உயிரிகள் சிறிது வளர்ச்சியுள்ள பின்பும் குறுந்தொலைவிற்கும் வேண்டுமென்றே நிகழ்த்தப் பெறுவதால் இயற்கையான செலவெல்லாம் பொதுவாக முற்செலவென்றேயறிக. கீழிருந்து மேற்செல்வதும் ஒருவகை முற்செலவாதலின் முற்செலவு என்பது எழுதல், அல்லது உயர்தலையும் தழுவும்.

### முற்செலவுக் கருத்தினின்று நெருங்கற் கருத்துப் பிறக்கும்

ஒரு மரக்கிளை நீண்டு வளர்ந்து இன்னொரு கிளையை அடுப்பதும், இருதிணை இயங்கு உயிரிகளும் முன்சென்று தாம் தாம் விரும்பும் இடத்தையும் பொருளையும் கிட்டுவதும் நெருங்கலாகும்.

### நெருங்குதற் கருத்தினின்று தொடுதற் கருத்துப் பிறக்கும்

ஒருபொருள் எத்திசையினும் மேன்மேல் சென்றுகொண்டே யிருப்பின் ஏதேனுமொரு பொருளைத் தொட்டே தீரல் வேண்டும். முன்னோக்கிச் செல்லும் உயிரிகளும் தாம் விரும்பிய பொருளையும் இடத்தையும் தொட்டடையும் தொடுதல் என்பது, மெலிதாய்த் தொடுதல், வலிதாய்த் தொடுதல் என இருபாற்பட்டு, தீண்டுதல், தழுவுதல், முட்டுதல், குத்துதல், உறைத்தல் முதலிய பல கருத்துக்களைத் தழுவும்.

### தொடுதற் கருத்தினின்று கூடற் கருத்துப் பிறக்கும்

கூடல் என்பது, ஒன்றிய கூடல், ஒன்றாக் கூடல் என இருவகை. மண்ணொடு மண்ணும், நீரொடு நீரும் கூடுவது ஒன்றிய கூடல். உடலொடு உடலும்

கூலத்தொடு கூலமும் கூடுவது ஒன்றாக் கூடல். ஒன்றாக் கூடல் மீண்டும் தொட்டுக் கூடல், தொடாது கூடல் என இரு திறத்தது.

## கூடற் கருத்தினின்று வளைதற் கருத்துப் பிறக்கும்

ஒன்றாக் கூடலில் சில பொருள்கள் வளைவதுண்டு. ஒன்றை ஒன்று முட்டிய இரு பொருள்கள் ஒன்றாதவையாயின் அவற்றுள் மெலியது கம்பி போல் நீண்டிருப்பின் வளையும். கல்லை முட்டிய வேரும், கடினமான பொருளை முட்டிய ஆணியும் வளைதல் காண்க. வழிச்செல்வோன் தெருவடைத்த சுவரைமுட்டித் திரும்புவதும் வேற்றிடம் சென்றவன் வினைமுற்றி மீள்வதும், அணிவகையில் வளைதலின் பாற்படும். வளைதல் என்பது சாய்தல், கோணல், திருகல், வட்டம்,சுற்றல், சூழ்தல், உருட்சி, சுழற்சி முதலிய பல கருத்துகளைத் தழுவும்.

## கூடற் கருத்தினின்று பிறக்கும் மற்றொரு கருத்து துளைத்தற் கருத்தாகும்

முட்டிய பின் வளையாத வலிய பொருள் தான் முட்டியதைத் துளைத்தும் செல்லும்.

ஆணி சட்டத்தையும், வண்டு மரத்தையும், பூச்சி பொத்தகத்தையும், மாந்தன் மலையையும் துளைக்கலாம்.

துளைத்தல் என்பது குழித்தல், தோண்டுதல், துளையிடுதல், புகுதல், துருவுதல், ஆகிய பல கருத்துகளைத் தழுவும். துளைத்துப் புகுதலும், துளைக்குட் புகுதலும் எனப் புகுதல் இருவகைத்து. உயிரிகள் தத்தம் உறைவிடத்தில் புகுதல் துளைக்குட் புகுதலாகும். ஒன்றைத் துருவிய பொருள் இறுதியில் வெளிப்படும். அது தோன்றல் அல்லது முன்வருதல் போன்றதாகும். அதன் பின் நிகழக்கூடியவை தோன்றல் முதல் துருவல் வரை கூறியுள்ள பல நிகழ்ச்சிகளே. இவை ஒரு பொருளின் காலமெல்லாம் மீண்டும் மீண்டும் நிகழ்ந்து கொண்டேயிருக்குமாதலின் ஊகாரச் சுட்டுக் கருத்து வளர்ச்சி முற்றுறும் எல்லை, துருவற் கருத்தே. ஆகவே தோன்றல் முதல் துருவல் வரையுள்ள கருத்துகளெல்லாம் ஒரு சுழல் சக்கரமாதல் காண்க.

ஒரு வேர், தோன்றல், முற்படல், முற்செலல், நெருங்கல், தொடுதல், கூடல், வளைதல், துளைத்தல் என்பவை இயற்கை இயல் நெறி வகையில், ஒத்துச் செல்லும் அருமையில் மொழிப்படைப்பும், அம்மொழிப்படைப்பு இம்முறைப்பட்டது எனக் கண்டுரைத்த காட்சியும் கவினும் வியந்து பாராட்ட வைத்தல் இயல்பாம். இப் படிமான வளர்நிலை, உயிரியற்கையாகலின் ஒரு மொழி என்றும் உயிரியக்கமாகத் திகழ வேண்டின், என்றும் இம்முறையைச் செம்முறையாகக் கொண்டு காத்து வரவேண்டும் என்பது வெளிப்படச் செய்வதுமாம்.

பாவாணர் வேர்ச்சொற் கட்டுரைகள் என்னும் தொடர்கட்டுரையைச் செந்தமிழ்ச் செல்வியில் எழுதி வந்தார். அத் தொடரின் இடையே அவர் வரைந்தகுறிப்புகள் நெறிமுறைகள் வகுப்பதற்குத் துணை செய்வனவாம்.

"ஒவ்வொரு சொல்லும் அசையும் எழுத்தும் தோன்றுதற்கும் திரிதற்கும் கெடுதற்கும் நெறிமுறைகள் உள்ளன".

"நான் 1938 இலேயே 'கீற்று' (Skeet) எழுதிய ஆங்கிலச் சொற்பிறப்பியல் நெறிமுறைகள் (Principiles of English etymology) இருமடலங்களைப் (2 Vol) படித்து அவற்றையொட்டிச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் நெறிமுறைகள் எழுதிவைத்தேன். ...........பல்லாண்டிற்கு முன் மென்றாளில் எழுதப் பட்டதாதலின் அதன் தாட்கள் பழுப்பேறியும் பூச்சியரித்தும் போய்விட்டன. ஆயினும் இன்று அதனினும் சிறந்ததொன்று தொகுக்க இயலும்.........

என் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலி வெளிவரும்போது, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் நெறிமுறைகளை விளக்கும் மடலமும் விரிவாக வெளிவரும்" என்றார்.

ஆயினும் வேறு வழி காட்ட விரும்பிய அவர், "அதற்கு முன் என் தமிழ் வரலாறு என்னும் நூலைப்படித்து ஓரளவு தெரிந்துகொள்க. மேலும் என் வேர்ச்சொற் கட்டுரைகளில் எடுத்துக்காட்டும் சொற்களினின்றே எழுத்தும் சொல்லும் திரியும் முறைகளைப் பொது அளவு மதியுள்ள எவரும் அறிந்து கொள்ள இயலும்" என்றும் பாவாணர் எழுதினார்.

ஆதலால் அவர் காட்டும் அறிமுகப்படி சொல்லியல் நெறிமுறைகளை வகுத்துக் கொள்ளலாம். எடுத்துக்காட்டாகச் சில நெறிமுறைகளை இங்கே காணலாம்.

மொழி வளர்ச்சியில் சொற்கள் பல்குதற் பொருட்டு, அறுவகைச் செய்யுள் திரிபுகளும், மூவகைப் புணர்ச்சி வேறுபாடுகளும், முக்குறைகளும்,

முற்சேர்க்கைகளும் முன்னோரால் கையாளப் பெற்றுள்ளன. முச்சேர்க்கையாவன முதற் சேர்க்கை, இடைச்சேர்க்கை, கடைச் சேர்க்கை என்பனவாகும்.

ஒரு பொருளின் சிறப்பியல்பு, அப்பொருள் முழுவதும் தழுவுதல், ஒரு மருங்கு தழுவுதல் என இருவகைப்படும். முழுவதும் தழுவுதல் (பரிதி) (வட்டமானது) ஒரு மருங்கு தழுவுதல் வாழை (வழவழப் பானது)

ஒரு வினைப்பகுதி பல ஈறுகளை ஏற்றுப் பல தொழிற்பெயர்களை ஆக்கல் இயல்பு.

'உவ' என்னும் பகுதி, தல், கை, பு, உ, மை, மம், மானம் என்னும் பல ஈறுகளை ஏற்று முறையே உவத்தல், உவகை, உவப்பு, உவவு, உவமை, உவமம், உவமானம் என்னும் பல தொழிற் பெயர்களைத் தோற்றுவிக்கும்.

ஓர் அடிச்சொல், பொருள் கருதிப் பல அடிகளாக விரியும்.

கர் – கரி, கரு, கறு
கார் – கால் – காய்
கல் – கன் – கள் – காள் – காழ்
கள் – களம் – களகம் – கழகம்
கள் – கண் – கணம்
குல் – குலம் – குலை – குலவு

'அம்' ஈறு ஒரு பெருமைப் பொருள் பின்னொட்டு.

எ.டு. மதி – மதியம் (முழுமதி)
நிலை – நிலையம்

'இல்' ஈறு ஒரு குறுமைப்பொருள் பின்னொட்டு

எ.டு. தொட்டி – தொட்டில்
குடி – குடில்

'கை' ஈறு குறுமைப் பொருள்தரல்
கன்னி – கன்னிகை

மணி – ஒரு குறுமைப்பொருள் முன்னொட்டு.

தக்காளி இனத்தில் சிறியது மணித்தக்காளி

மணி – முன்னொட்டு

'குட்டி' – ஒரு குறுமைப்பொருள் முன்னொட்டு
எ.டு, குட்டிப்பை (சிறுபை)
குட்டியப்பன் (சிற்றப்பன்)

மானம் என்னும் சொல் தொழிற்பெயர் ஈறாய் வரும்.

எ.டு. அடைமானம், கட்டுமானம், தீர்மானம், படிமானம், பிடிமானம், பெறுமானம், வருமானம்.

'மகன்' என்னும் சொல் வருமொழியாகவும் ஈறாகவும் வருங்கால் 'மான்' என்று மருவும்.

எ.டு. மருமகன் – மருமான்
பெருமகன் – பெருமான்

இரு குறில் ஒரு நெடிலாகத் திரியும் என்பது திரிவு முறை.

எ.டு. அகல் – ஆல் (விழுதூன்றிப் படரும் ஆலமரம்)
வணங்கு – வாங்கு (வளைவு)

நிலத்தினின்று மேலெழும் மரம், செடி, கொடிகட்கும், மண்ணினின்று விண்ணிற்கெழும் பறவையினங்கட்கும் முன்னேற்றம் மேற்செலவாய் இருத்தலால் உகரச் சுட்டு உயரக் கருத்தையும் தழுவலாயிற்று.

உக்கம் = தலை, உயரம்
உச்சி = முடி
உச்சாணி = உச்சாணிக் கிளை

உகரத்தை ஒலிக்குங்கால் இதழ் குவித்து முன்னோக்குவதால் உகாரச் சுட்டு முதற்கண் பேசுவோனின் முன்னிடத்தைக் குறித்தது.

உதுக்காண் = என்முன் பார்

உதா, உதோ, உந்த, உங்கு,

உகர வடித்திரிபு.

உகரம், ஊகார ஒகர ஒகாரங்களுள் ஒன்றாவது முன்னைத் திரிபு.

உகரம் அகரமாவது முன்னைத் திரிபு.
உகரம் இகரமாவது பின்னைத் திரிபு

எ.டு. புழை – பூழை , குட்டு – கொட்டு = முன்னைத்திரிபு
முடங்கு – மடங்கு = முன்னைத்திரிபு
புறள் – பிறழ் = பின்னைத் திரிபு

உகரம் அகரமாகத் திரியும் திரிவு முறை

எ.டு. குடும்பு – கடும்பு
நுரை – நரை (வெண்மை)
முடங்கு – மடங்கு

உகர, ஊகாரம் முறையே இகர ஈகாரமாகத் திரிதல்

எ.டு. புரண்டை – பிரண்டை
தூண்டு – தீண்டு

'உ'கர ஈறு சில சொற்களில் 'சு' கர ஈறாகத் திரியும்

எ–டு, பரவு – பரசு; விரவு – விரசு; துளவு → துளசு, துள.

உகரச்சொல் முன்மைக் கருத்திலும் உயர்ச்சிக் கருத்திலும் வகர மெய்ச் சேர்க்கை பெறுவது போன்றே ஒப்புமைக் கருத்திலும் வரப்பெறும்

உவ் – உவக்காண் = முன்மைச் சுட்டு.
உவ்வி – (தலை) – உவ– உவண் – உவணை
உயர்ச்சிக்கருத்து
இவர்தல் – ஒத்தல்
அகரம் சகரமாகத் திரியும்
அவை – சவை
இயை – இசை = இசைதல்
இயை – எய் → ஏய் = பொருந்துதல்
ஏய் – ஏ; இசைதல் பொருள் எண்ணுப்பொருளில் 'ஏ' ஆகக் கடைக்குறை ஆகும்.

அஃறிணைப் பெயர்களின் மகர இறுதி னகர இறுதியாவது பெரும்பான்மை,

பருமம் – பருமன், தடுமம் → தடுமன் (தொழிற்பெயர்)
திறம் – திறன் , கடம் – கடன்(பிறபெயர்)
அல் – அலை – அசை
அசை – அயை
அயை – அயா
அயை – ஆய்

'உல்' அடிவேரில் இருந்து தோன்றியவை.

அல் – அர் – அலத்தம் – அரத்தம்

இல் – இர் – இலந்தை – இரத்தை
எல் – எர் – எல்லி – எரி

ஒகர அடி பல மெய்களொடும் சேர்ந்து பல ஒப்புகை அல்லது பொருந்தற்கருத்துச் சொற்களை உண்டு பண்ணும்.

ஒக்கல், ஒச்சை, ஒட்டு, ஒண்டு, ஒண்ணு, ஒத்து, ஒப்பு, ஓம்பு, ஒல்லு, ஒற்று, ஒன்று, ஒன்னு ஆகிய சொற்களை நோக்குக.

லகரம் ஆய்தம் ஆதலும், றகரமாதலும்,

ஒல்கு – ஒஃகு – ஒஃகுதல் – பின்வாங்கல்
அல்கு – அஃகு –அஃகுதல் = சுருங்குதல் .
ஒல்கு – ஒற்கு – ஒற்குதல் = குறைதல்
கு – குறு = சிறு

எ–டு. குக்கிராமம்

குல் – குள் , குறை. குண்
குள் – குட்டு, குய், கூள்
கூள் – கூடு, கொள் , கொட்டு, கொக்கு
கொடு – கொடுக்கு – கொடி
கொள் – கோள் – கோணம்
குல் – குலா – குலவு – குலாவு – குலாவுதல் = வளைதல்
குல் – குர்– குர – குரம் = வட்டமான குதிரைக்குளம்பு
குரங்கு – குரங்குதல், குரவை = வளைதல்
குரங்கு → குறங்கு = கொக்கி
குறங்கு → கறங்கு = சுழலுதல்

குழு என்னும் வேரினின்றே குழாம், குழுமம் முதலிய தொகுதிப் பெயர்கள் தோன்றின.

குழு = சிறு கூட்டம்
குழூஉ = தொழிற் குலம் அல்லது கூட்டம்
குழாம் = குழுவிலும் சற்றுப்பெரிய கூட்டம்
குழுமம், குழுவல் = குழாத்திலும் பெரிய கூட்டம்
குழும்பு = தோழமைக் கூட்டம்

டகரம் ரகரமாகத் திரியும் திரியுமுறை

எ–டு. படவர் – பரவர்
விடிச்சி – விரிச்சி

தகரம் சகரமாகத் திரிதல்

அத்தன் – அச்சன்
நத்து – நச்சு
'மம்' – ஒரு தொழிற்பெயர் ஈறு
எ.டு. உருமம், பருமம்
உருத்தல் = வெப்பமாதல், உருமம் = வெப்பமான நண்பகல்

'உச்சி உருமம்' என்ற தஞ்சை வழக்கைக் காண்க.

4 'மம்' ஈறு மையீற்றுத் திரிபென்று கொள்ள இடமுண்டு. ஒ.நோ. செய்யாமை – செய்யாமல்.

ம் – வ் ஆகும்

அம்மை – அவ்வை
செம்மை – செவ்வை
அமை – அவை

ம் – ன் ஆகும்

அம்மை – அன்னை; நிலம் – நிலன்.

மு – மி ஆகும்

முழா – மிழா
முண்டு – மிண்டு
முறை – மிறை

ர் – ற் ஆகும்

ஒளிர் – ஒளிறு
முரி – முறி

ரகரத்தின் வல் வடிவம் றகரம்

முரிதல் – முறிதல்
பார் – பாறை

ல் – ர் ஆகும்

குடல் → குடர்
பந்தல் → பந்தர்

வ் – க் ஆகும்

சிவப்பு → சிகப்பு
ஆவா → ஆகா

வுகர ஈறு சுகர ஈறாதல்

பரவு → பரசு; விரவு → விரசு
அணம், இயம் – ஈறுகள்
கட்டணம், ஏரணம், கண்ணியம், பண்ணியம், மானியம்

ழகரம் டகரமாகத் திரியும்

புழல் – புடல்; குழல் – குடல்

ழ – ண ஆதல்

தழல் – தணல்; நிழல் – நிணல்

ளகர மெய் பல சொற்களில் யகர மெய் ஈறாகத் திரியும்

தொள் → தொய்
பொள் → பொய்
வள் → வய் → வை = கூர்மை
ழ – க = போலி
மழவு – மகவு
தொழுதி – தொகுதி

இவ்வாறு பல்வேறு நெறிமுறைகளைச் சுட்டிக்காட்டியும் கருத்தில் கொண்டும் வேர்ச்சொல் விளக்கங்களைக் கண்டு காட்டுகிறார் பாவாணர்.

இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல் என்பது பண்டு தொட்டுப் பயிலவரும் ஒரு மரபு. அதனால் தகுதியமைந்த எந்த இலக்கியமும் பின்னவர்களால் இலக்கண மரபாக ஏற்றுப் போற்றப்பட்டு வருதல் கண்கூடு. அவ்வகையில் பாவாணர் வேர்ச்சொல் ஆய்வு வழியே சொல்லியல் நெறி முறை யாதலை அவர் நூல்களை ஆழ்ந்து கற்பார் அமைத்துக் கொள்வர் என்று உறுதியாகக் கூறலாம்.

## 14. வேர்ச்சொல்லாய்வின் பயன்

பாவாணரின் வேர்ச்சொல்லாய்வுப் பயனை அறிய வேண்டும் எனின் அவர்தம் ஆய்வு அரும்ப வாய்;தத தூண்டலை அறிதல் வேண்டும். அவர் ஆய்வே பயன் நோக்கிய ஆய்வு என்பது வெள்ளிடை மலையாம். அதனை 'ஒப்பியன் மொழிநூல்' முகவுரையில் சுட்டுகின்றார்.

"பள்ளியிறுதி, இடை நடுவு, கலை இளைஞர் முதலிய பல்வகைத் தேர்வுகளுக்கும் உரிய தமிழ்ச் செய்யுட் பாடங்களுக்குத் தொடர்ந்து உரை அச்சிட்டுவரும் சில உரையாசிரியர்கள், தமது வரையிறந்த வடமொழிப் பற்றுக் காரணமாகத் தென்சொற்களை யெல்லாம் வடசொற்களாகக் காட்டவே இவ்வுரை எழுந்தனவோ என்று தனித் தமிழர் ஐயுறுமாறு

கலை – கலா , ஆவீறு ஐயான வடசொல்
கற்பு – கற்ப என்னும் வடசொல்
சேறு – ஸாரம் என்னும் வடமொழியின் சிதைவு
உலகு – லோகம் என்னும் வடசொல்லின் திரிவு
முனிவன் – மோனம் என்னும் வடசொல் அடியாய்ப் பிறந்தது
காகம் – காக என்னும் வடசொல்
முகம் – வடசொல்
விலங்கு – திரியக்ஸ் என்னும் வடசொல்லின் மொழி பெயர்ப்பு

எனப்பல தூய தென்சொற்களையும் வடசொற்களாகத் தமது உரைகளில் காட்டி வருவது பத்தாண்டுகட்கு முன்(1930) என் கவனத்தை இழுத்தது. உடனே அச்சொற்களை ஆராயத் தொடங்கினேன்." என்கிறார்.

தூய தென் சொற்களையெல்லாம் வடசொற்களால் தம் வரையிறந்த வடமொழிப் பற்றுக் காரணமாக உரையாசிரியர்கள் காட்டியதே பாவாணரை ஆய்வுக்குத் தூண்டியது எனலாம்.

பாவாணரின் ஆய்வு, 'எவ்வாய்வு' என்றும் 'அஃது ஆயப்பட்ட முறை என்ன என்றும், 'அதன் பயன்பாடு யாது' என்றும் அவரே தெளிவிக்கிறார்.

வடமொழி என உரையாசிரியர்களால் சொல்லப்பட்ட சொற்களின் வேர்களையும் வேர்ப்பொருள்களையும் ஆராய்ந்த போது அவையாவும் தென் சொல்லென்றே பட்டன. அவற்றை முதலாவது வடமொழிக்கும், தென்மொழிக்கும், பொதுச் சொற்களாகவும், போலிப் பொதுச்சொற்களாகவும் கொண்டு இவ்வுண்மையை வேறொரு மொழியினின்றும் ஒருபோகு முறையால் உணர்த்துமாறு ஆங்கிலத்திற்கும் தமிழிற்கும் உள்ள பொதுச் சொற்களை ஆராயத் தொடங்கினேன்"

"சேம்பர்சு, கீற்று என்பவர்களின் ஆங்கிலச் சொல்லகராதிகளைப் பார்த்தபோது, சில ஆங்கிலச் சொற்கள் அகப்பட்டதுடன் அவற்றின் மூலமாகவோ இனமாகவோ உள்ள சில இலத்தீன் கிரேக்குச் சொற்களும் அகப்பட்டன. பின்பு இலத்தீன், கிரேக்க அகராதிகளைத் துருவினேன். வேறு சில சொற்களும் எனக்குத் துணையாயின.

அவற்றுள் Navies (நாவாய்) Amar (அமர்–அன்புகூர்) முதலிய இலத்தீன் சொற்களும்,Telos (தொலை தூரம்) Palios (பழைய) முதலிய கிரேக்கச் சொற்களும் எனக்குப் பெரிதும் வியப்பூட்டின.

இவற்றுடன் தமிழ், இந்திய ஐரோப்பிய மூலமொழிக்கு மிக நெருங்கியது என்று கால்டுவெல் கூறியிருப்பதையும் அவரும் குண்டற்றும் வடமொழியிலுள்ள திராவிடச் சொற்கள் சிலவற்றை எடுத்துக்காட்டியிருப்பதையும், பண்டைய தமிழகம் தென்பெருங்கடலில் அமிழ்ந்துபோன குமரி நாடென்றும் அந்நாட்டிலேயே தமிழர் தலைசிறந்த நாகரிகத்தை அடைந்திருந்தனர் என்றும் தமிழ்த் தொன்னூல்கள் கூறுவதையும், மாந்தன் முதன்முதல் தோன்றினது இலெமூரிய (Lemuria) – குமரிநாடு என்று வியன்புலவர் எக்கேல் கூறியிருப்பதையும், தமிழ் உலகமொழிகள் எல்லாவற்றிலும் எளிய ஒலிகளைக் கொண்டு இயற்கைத் தன்மை உள்ளதாய் அதன் சிலபல சொற்கள் பலமொழிகளிலும் கலந்து கிடப்பதையும் சேர நோக்கினபோது, தமிழின் தொன்மை, முன்மை, தாய்மை முதலிய தனிப்பண்புகள் புலனாயின. பின்பு மொழிநூற்றுறையில் ஆழ இறங்கினேன் என்கிறார் பாவாணர்.

மாக்கசுமுல்லர் கால்டுவெல் ஆகியோர் கூற்றைத் தாம் மெய்ப்பித்ததையும் பாவாணர் குறிப்பிடுகின்றார்.

"மொழிநூல் என்பது உலகமொழிகள் எல்லாவற்றையம் தழுவும் பொதுக்கலை. உலகமொழிகள் எல்லாவற்றையும் ஆரியம் (Aryam) சேமியம் (Semitic) துரேனிய (Turanian) என்னும் முப்பெருங்குலங்களாகப் பிரித்துள்ளார் மாக்கசுமுல்லர். அம்மூன்றும் ஒரு மூலத்திலிருந்தும் கவைத்திருக்க வேண்டும் என்று அவரே திட்டவட்டமாய்க் கூறிவிட்டார். அம்மூலத்திற்குத் திராவிடம் மிக நெருங்கியதென்று கால்டுவெல் கூறியுள்ளார். இக்கூற்றை என்னால் இயன்றவரை முயன்று மெய்ப்பித்திருக்கிறேன்" என்கிறார்.

இம்மெய்ப்பிப்புத் தொடங்குதல் 1931 முதலே ஆகிவிட்டது என்பதைச் செந்தமிழ்ச் செல்வியில் அவர் எழுதிய 'மொழியாராய்ச்சி'என்னும் கட்டுரை வெளிப்படுத்துகின்றது. (9. 275–285)

'உலகத்தில் உள்ள மொழிகள் எல்லாம் துரேனியம், செமிட்டியம், ஆரியம் என முப்பெருங்கவைகளாய் அடங்கும். அவற்றுள் ஒவ்வொரு கவையும் பற்பல கிளைகளாயப் பிரியும். ஒவ்வொரு கிளையம் ஒவ்வொரு மொழித் தகுதியாகும். இவற்றுள் துரேனியக் கவையில் திராவிடக் கிளைக்குத் தலைமையாகக் கருதப்படுவது நம் அமிழ்தினும் இனிய தமிழ் மொழியே!

"ஒரு மரத்தில் சிறு கிளைக்கு நேர் இயைபு இன்றேனும் அவற்றைத் தாங்கும் பெருங்கவைகளுக்கு அடிமரத்துடன் நேர் இயைபு பெற்றிருந்தது போல உலகமொழித் தொகுதிகட்குள் சிறுபிரிவுகட்கு நேர் இயைபு இன்றேனும், அவற்றிற்கு மூலமான பெரும் பிரிவுகட்கு நேரியல்வு திட்டமாயுள்ளதாம் . எல்லாக் கிளைகளுக்கும் மூலமான ஓர் அடிமரம் இருப்பது போல் எல்லா மொழிகளுக்கும் மூலமான ஒருதாய் மொழியும் இருத்தல் வேண்டும். உலகத்திலுள்ள மக்கள் எல்லாம் ஒருதாய் வழியினராதலின் அவர் வழங்கும் மொழிகளும் ஒருதாய் வயிற்று வழியினவாதல் வேண்டும்."

"உலகத்தில் மக்கள் முதன்முதல் தோன்றின இடம் கி.மு.2000 ஆண்டுகட்கு முன் இந்துமாக்கடலில் அமிழ்ந்து போனதும், தலைச்சங்கம் இருத்ததுமான குமரிநாடே. ஆத்திரேலியா, தென்னிந்தியா, தென்னாப்பிரிக்கா என்ற மூன்றும் தொடக்கத்தில் நிலத்தால் இசைந்திருந்தன என்று மேனாட்டு

அறிஞர்கள் கண்ட உண்மையே இதற்குப் போதிய சான்றாம். ஆகவே, மக்கள் முதன்முதற் பேசிய மொழி தமிழேயாதல் வேண்டும்'' என்று அக்கட்டுரை முகப்பில் உரைக்கிறார் பாவாணர்.

இக்கட்டுரையில் ஆங்கிலம், இலத்தீனம் கிரேக்கம் என்பவற்றிலிருந்து தமிழ்வழிப்பட்ட சொற்களாக அறுநூற்றுக்கு மேல் எடுத்துக்காட்டுகிறார்.

1931 இல் தொடங்கிய அவ்வேர்ச்சொல் ஆய்வு 1981 இல் அவர் இயற்கை எய்தும்வரை தொடர்ந்து நடைபெற்றது.

''வடமொழி வரலாறும் தலைநாகரிகமும் புகழ் வேண்டி எழுதுபவை அல்ல. தமிழை வடமொழியினின்று மீட்டற்கு எழுதுபவை. இத்துணைக்காலமும் (20 ஆண்டுகளாக) இதே நோக்குடன் கற்றும் ஆய்ந்தும் இருக்கிறேன். ஆராய்ச்சி முடிந்தது. உண்மையும் கண்டு விட்டேன்'' என்று 28-3-49 இல் எழுதினார் பாவாணர்.(பாவாணர் கடிதங்கள் பக்.20)

வேர்ச்சொற் கட்டுரைகள் என்னும் தொடரைப் பாவாணர் எழுதிவந்த காலத்தில் 'செல்வி வாசகர்களுக்குத் தெரிவிப்பு' எனக் குறிப்பு வரைந்தார்.

''நான் 'செல்வி'யில் வெளியிட்டு வரும் வேர்ச்சொற் கட்டுரைகள் சொற்களின் திரிபையே காட்டிக்கொண்டுசெல்கின்றன என்றும், அவற்றையாளும் நெறிமுறைகளை எடுத்துக்கூறவில்லை என்றும், அதனால் அவை அறிவியலின் பாற்பட்டன அல்ல என்றும், சொல்லாராய்ச்சியும் மொழியாராய்ச்சியும் செய்யாத பலர் மறைமுகமாகக் குறை கூறுவதாகத் தெரிகிறது'' என்று தெரிவிக்கும் பாவாணர், தம் விரிந்த மறுப்பின் இடையே,

''ஐம்பான் ஆண்டாக மொழியாராய்ச்சி செய்தும், 'செல்வி'யில் வெளிவரும் வேர்ச்சொற்கட்டுரைகள் போன்றவற்றை எழுதியும் வரும் ஒருவனை நெறிமுறையறியாது குருட்டுத்தனமாக கரைபவன் என்பது அறியாமையோடு அழுக்காறுங் கலந்த இருட்டடிப்பேயன்றி வேறன்று'' என்று கூறுவதில், பாவாணரின் உழைப்புப் புலப்படும், பயனும் புலப்படும்.

''மேலும், ஓர் உண்மை ஆராய்ச்சியாளன் ஒரு நாளும் ஆராயாது இருக்க முடியாது. அவன் ஆராயாவிடினும் அவன் உள்ளம் ஆராயும். அதற்குக் கனவென்றும் நனவென்றும் ஊண் வேளை என்றும் உறக்க வேளை என்றும் இல்லை. சொல்லாராய்ச்சியும் மொழியாராய்ச்சியும் எனக்கு இயல்பான இன்பந்தரும் கலைகள்'' என்று 'என் அண்ணாமலை நகர் வாழ்க்கை'யில் எழுதினார்.(54)

மேலும் வேர்ச்சொல் நெறிமுறைகளை அறிந்து கொள்ளும் வகையை என் வேர்ச்சொற் கட்டுரைகளில் எடுத்துக்காட்டும் சொற்களினின்றே எழுத்தும் சொல்லும் திரியும் முறைகளைப் பொது மதியுள்ள எவரும் அறிந்து கொள்ளலாம் என்கிறார் (வேர்.கட்.203)

இங்குக் கூறப்பட்டவற்றால் பாவாணர் எழுத்துச் சான்றாலேயே அவர்தம் வேர்ச்சொல்லின் ஆய்வுப்பயன் விளக்கமுறுகின்றது. அப்பயன்:

1. உரையாசிரியர்கள் வடசொல் என்று கூறிய பலவும் தென்சொல் என்றே தெளிவாயது.

2. உலகமொழிகள் பலவற்றிலும் தமிழ்ச்சொற்கள் கலந்து கிடப்பது காணப்பட்டது.

3. தமிழின் தொன்மை, முன்மை, தாய்மை முதலிய தனிப்பண்புகள் புலனாயின.

4. மாக்கசுமுல்லர், கால்டுவெலார் கூறிய மொழியியற் கருத்துக்கள் மெய்ப்பிக்கப்பட்டன.

5. மக்கள் முதன்முதற் பேசிய மொழி தமிழேயாதல் வேண்டும் என்றும் உறுதி செய்யப்பட்டன.

6. வேர்ச்சொல் நெறிமுறைகளை, எடுத்துக் காட்டும் சொற்களினின்றே அறிந்து கொள்ளலாம் என்பனவாம்.

இங்குச்சுட்டிய குறிப்புகளையன்றிப் பாவாணர் இயற்றிய நூல்கள் அனைத்திலும் இக்கருத்துகள் மெய்ப்பிக்கப்படுதல் கண்கூடு.

அவற்றுள்ளும் 'ஒப்பியன் மொழி நூல்-திராவிடம்' என்பது திராவிடத்தின் தாய் தமிழே என்றும், உலக முதன்மொழி தமிழே என்றும், அது தோன்றிய இடம் குமரிக்கண்டமே என்றும் நிறுவுகின்றது.

'முதல் தாய்மொழி' என்பதோ, ''மூல மொழிகளுள் முதன்மையானது தமிழே என்றும். அது தோன்றிய இடம் மாந்தன் பிறந்தகமாகிய குமரிநாடே என்றும் பத்தாண்டிற்கு முன்னரே வெளியிட்டேன். அதை மெய்ப்பிக்கும் வகையில் முதலாவது இந்நூல் வெளிவருகின்றது'' என்று அதன் முகவுரையில் பாவாணர் வரைவதே அதன் பயனை வெளிப்படுத்தும்.

'திராவிடத்தாய்' என்னும் நூல் அதன் பெயராலேயே அதன் பொருட்பயனை

விளக்கிவிடுகின்றது. மலையாளம், கன்னடம், தெலுங்கு, துளு ஆகிய மொழிகளின் 'உயிரும் உடம்பும் போன்ற அடிப்படையும் முதன்மையுமான பகுதிகளெல்லாம் தமிழே என்றும், ஆடையும் அணியும் போன்ற மேற்புற அணியில் மட்டும் ஆரியந் தழுவின என்றும் அந்நூல் மெய்ப்பிக்கின்றது.

மொழிநூல் திறவுகோல் தமிழிலேயே உள்ளது என்பதையும் எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்பதையும் தமிழ் உயர் தனிச் செம்மொழி' என்பதையும் விளக்கும் நூல் தமிழ் வரலாறாகும்.

தமிழ் திராவிடத்திற்குத் தாயும், ஆரியத்திற்கு மூலமும் ஆகும் என்பதை மெய்ப்பிக்கும் நூல் வடமொழி வரலாறாகும். எத்தனையோ தென்சொற்கள் வடமொழிச் சென்று வாழ்வாங்கு வாழ்கின்றன. அவை நமவாகும் காலமும் நண்ணும் என்னும் அவர் கருத்தைத் (செந்தமிழ்ச் செல்வி.9.295) தெள்ளத் தெளிவாக நிலைநாட்டியது அது.

'தென்சொல் வடசொல்லுள் புகாது'என்னும் கருதுகோளுரைகளை மாற்றியவர் கால்டுவெலார் எனின், அதனைத் தவிடு பொடியாக்கிக் காற்றில் தூற்றியவர் பாவாணரே என்பதை விளக்கும் நூல் அது. அதனால் சில தென்சொற்கள் வடமொழியிலும் உண்டு என்று 'வடமொழி இலக்கிய வரலாறு' எழுதும் காலமும் கிளர்வதாயிற்று.

இனி, இவையும் வேர்ச்சொற் கட்டுரைகளும் இவ்வழிச் சொல்லாய்வு வழிமுறை ஒன்றைத் தோற்றுவித்துத் தொண்டாற்றி வருதலும் பாவாணர் கொடையேயாம்.

## 15. பாவாணர் சொற்பிறப்பியல் நோக்கில் எழுதிய நூல்கள்

### 1. இசைத்தமிழ்க் கலம்பகம்

மேடையில் பயன்படுத்தத் தக்க பல்வகை இசைத்தமிழ்ப் பாக்களையுடைய இந்நூல் வழக்கம்போல் பாவாணர் எழுதும் முன்னுரையை உடையதாய் இல்லை. பதிப்புரையும் இல்லை. பிழைதிருத்தப்பட்டு நான்கு பக்கங்கள் முகப்பில் உண்டு. நேசமணியம்மையார் நினைவு வெளியீடு–1 என மூன்று உரூபா விலையில் 248 பக்க அளவில் வெளிவந்துள்ளது. இதில் இடம் பெற்றுள்ள இசைப் பாடல்கள் 303 ஆகும். வெளிவந்த ஆண்டு 1966.

குறியீட்டு விளக்கம், பாட்டுறுப்புப் பெயர்கள், தாளப் பெயர்கள் பற்றிக் கூறுகின்றது.

பல்லவி, துணைப்பல்லவி, உருவடி (சரணம்) உரைப்பாட்டு (தொகையறா) என்பவை பாட்டுறுப்பு.

"ஒற்றை (ஏகம்), முன்னை (ஆதி), ஈரொற்று (ரூபகம்), மூவொற்று (சம்பை), முப்புடை (திரிபுடை), இணையொப்பு(சாப்பு) என்பன தாளப் பெயர்கள். இவற்றை முறையே மூன்றெண்தாளம், எட்டெண்தாளம், ஈரொற்றுவாரம், ஐந்தெண்சார்பு, ஏழெண்சார்பு எனக்குறிப்பார் இசையறிஞர் குடந்தை சுந்தரேசனார் என்னும் அழகவுடையார்" என்கிறார்.

ஒரு செயல் திட்டத்தைப் பாவாணர் பாயிரத்தில் கூறுகிறார். அது,

"பாடற்குழாம் ஒன்றேற்படுத்துக ஊர்தொறும், குறித்த நாட்களில் தெருவெலாம் பாடிப் பராவுக" என்பது.

ஆரிய ஞாட்பின் (போரின்) அருந்தமிழ் மீட்க ஒரு மீட்பன் எனக் காப்பும்,

இன்னிசை யாழ்வல்லான் மன்னார்குடி இராச கோபாலனுக்கு இசையாசிரிய வணக்கமும் பாடி, கடவுள் வணக்கம் முதலாக இசைப்பா இசைக்கிறார்.

நூல் தொடங்கியும், கடவுள் தொடர்பாக நான்கு பாடல்களை இசைக்கிறார். பின்னர் இசையின்பம், தமிழன் பள்ளி எழுச்சி, பழந்தமிழன் சிறப்பு முதலாகத் தொடர்கிறார்.

ஒவ்வொரு பாடற்கும் மெட்டு, பண், தாளம் என்பவற்றைப் பெரும்பாலும் சுட்டுகிறார். இசைந்த பண்ணில் பாடுக என்றும் கூறி வைக்கிறார்.

பொதுவகையாலும், சிறப்பு வகையாலும் இசைபாடுவார் அனைவர்க்கும் தருமாறு இவ்விசைப்பாக்கள் இருக்க வேண்டும் என்பதால் மொழி விலக்கின்றி,

"பசனை செய்வோம் கண்ணன் நாமம்"

"மாசில் வீணையும்"

"லம்போதரா லகுமிகரா"

"ரகுபதி ராகவ ராசாராம்" என்பன போல மெட்டுகளைச் சுட்டிக் காட்டுகிறார். பாவாணர் இசைப்புலமை விளக்கமாவதொடு, அவ்விசை பரப்புதல் வேட்கையையும் வெளிப்படுத்துகிறது இது.

பாவாணர் ஆய்வுத் திறத்தால் நூல்களாகவும், கட்டுரைகளாகவும் வடித்தவற்றையெல்லாம் இன்னிசையால் தெருத்தோறும் பரவச்செய்ய முயன்ற

முயற்சி இசைப்பாத் தலைப்புகளாலும் அவற்றின் பொருளாலும் தெள்ளிதின் விளங்கும்.

தமிழ் வரலாறு, முதல் தாய்மொழி, வடமொழி தமிழினின்று கடன்கொண்டமை, தமிழன் தானே கெட்டமை. தமிழ்த் திருமணம், பழந்தமிழே திராவிடத்தாய், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழகராதியின் சீர்கேடு, தமிழ் கடன் கொண்டு தழைக்குமா வண்ணனை மொழியியலின் வழுநிலை, என் அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பணி என்னும் தலைப்புகளைப் பார்த்த அளவிலேயே பாவாணர் படைத்த நூற்பெயர்கள் பளிச்சிடும். பிற தலைப்புகளோ பாவாணர் நூல்களில் தேங்கிக் கிடக்கும் ஆய்பொருள் வளம் எளிதில் கையில் கனிபோல் விளங்கிக் கிடக்கும் வகை புலப்படும்.

தென்சொல் வளம் (20) தமிழின் பதினாறு தன்மை (14) என்பன போல்வன அடைமொழி பயிலா அடுக்கின் அருமை வாய்ந்தவை.

யார் யார் எவ்வெப்பா வல்லார் என்பது (30) பழமையொடு புதுமை நலம் செறிந்த புகழ்மையது.

வடமொழியால் தமிழுக்கு வந்த கேடு (45) வடமொழியால் தமிழ் கெட்ட வகைகள் (46) என்பன, வடமொழி வரலாறு மட்டுமன்றிப் பாவாணர் தம் நூல்களையெல்லாம் ஒட்டுமொத்தமாகத் தழுவியுரைக்கும் பிழிவிசையாகும்.

தமிழ் அயன்மொழியால் கெடும் வகையை,

*"நோய் இருக்கையில் வியாதி வந்தது*
*வியாதி போனபின் சீக்கு வந்தது*
*சீக்கிருக்கவே பீமார் வந்திடும்*
*பீமார் வந்திட ஏமாறாதீர்"*

எனப் பளிச்சிடக் காட்டுகிறார் பாவாணர்.(55). இயல், இசை, நாடகத் தமிழின் இயற்கையமைதியைக் கிளி, குயில், மயில் இயலால் காட்டுதல் சிறந்து விளங்குகின்றது (69)

யானை தன்னைக் கட்டும் தொடரியை (சங்கிலியை)த் தானே எடுத்துத் தருதல் போல் மானங்கெட்ட தமிழன் தன்னைத் தானே தாழ்த்திக் கொண்டான் என்பது எள்ளல் அன்று; நோவு (95)

"ஆங்கிலம் தீயதேயன்று" என்பது உண்மை. ஆனால் தமிழ்த்தாயைக் கொல்லியாக ஆங்கிலவழிப் பள்ளிகளை உருவாக்கிய கொள்ளையர் உள்ளம் தீமையே உருவாயது தானே ! (97)

'அன்று வந்ததும் அதே நிலா' என்ற மெட்டில்

*"அன்றிருந்ததும் அயன்மொழி*
*இன்று வந்ததும் அயன்மொழி*
*என்றுதான் இங்குத் தமிழ்மொழி*
*ஏத்து நாட்டினை வாழ்த்துமொழி"*

என மொழிவிடுதலை இன்மையை எளிமையாய் எண்ணிப் பார்க்க வைக்கிறார்.

தொண்டர்படைச் செலவு நடைக்கு 'இடம் வலம், இடம் வலம்' என்று தடம் காட்டுகிறார். (207)

*"தமிழரென்றிருப்போர் எல்லோரும் – நல்ல*
*தமிழன்பரோ நெஞ்சைத் தடவியே பாரும்."*

நல்ல வினா இல்லையா? (248)

பிராமணர் தமிழராதல் (தமிழரன்பராதல்) நாட்டு நலம் என்பதை

*"தமிழரும் ஆரியரும் சமநிலையுணர்வோடு*
*தமிழையே தாங்க வேண்டும் – நல்ல தங்கமே*
*தமிழகம் ஓங்க வேண்டும்."*

என்கிறார் பாவாணர். பாவாணர் ஒப்புரவுள்ளமும் மாந்த நேயமும் இரு தாளாய் நடையிடும் மாட்சி இது (248, 251)

*"எளிதாகப் பேசுமொழி தமிழ்ப் பாப்பா– மூச்(சு)*
*சிழுக்கும் வல்லொலியதில் இல்லை பாப்பா"*
*"பேசு பாப்பா, தமிழ் பேசு பாப்பா"*

என்பது மழலைப் பாவாணர் மொழி (253)

"எல்லாரும் இன்பமுறவே இறைவனருளால் மங்களம்"

"பொல்லாப் பகையும் பசியும் பிணியும்
இல்லாமல் எங்கும் நன்கனம்" (305)

என உலக நேயராக இசைத் தமிழ்க் கலம்பகத்தை இனிக்க முடிக்கிறார் தேவநேயர்.

## 2. இசையரங்கு இன்னிசைக் கோவை

பாவாணரால் இயற்றப்பட்டதும் முகவை மாவட்டம் பறம்புக் குடியில் நிகழ்ந்த உலகத் தமிழ் மாநாட்டில் வேழத்திருமகள் என்னும் கசலட்சுமியாரால் பாடப்பட்டதும் ஆகிய இசைப்பாடல் சுவடியே இசையரங்கு இன்னிசைக் கோவை என்பதாம்.

31 பக்கங்களையுடைய இச்சுவடியில் 34 இசைப்பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அந்நாள் விலை 50 காசுகள்.

இருபது பாடல்களுக்கு இசைமெட்டுகள் கட்டப்பட்டுள்ளன. ஒரே ஒரு பாடலுக்கு (211) இசைந்த மெட்டில் பாடுக என்ற குறிப்புள்ளது. எஞ்சிய

பாடல்களுக்குப் பண்ணும், தாளமும் குறிக்கப்பட்டுள்ளன.

'ஆதி' முன்னை எனவும், 'மோகனம்' முல்லை எனவும் 'சாப்பு' இரட்டை எனவும் 'ரூபகம்' ஈரொற்று எனவும் பண்ணும் தாளமும் தமிழாக்கம் பெற்றுள்ளன.

தமிழே முதல் தாய்மொழி என்பதைப் பெற்றோர் பெயர் (அம்மா, அப்பா) உலக முழுவதும் தமிழ்வழிப்பட்டதாகவே இருப்பது கொண்டு நிறுவுதல் இணையற்ற சான்றாம். (2)

"தமிழா உன்றன் முன்னவனே
தலையாய் வாழ்ந்த தென்னவனே"

என்னும் பாடல் முற்றும் இயைபு நயம் சொட்டச் சொட்டப் பழந்தமிழன் பெருமை சொல்கின்றது. (4)

திருக்குறளின் சிறப்பு முப்பாடல்களில் முழங்குகின்றது (5–7) நக்கீரன், பரிதிமாற் கலைஞன், மறைமலை அடிகள் எனத் தமிழ்க் காவலர் புகழ் தொடர்கின்றது. (8–10)

தமிழ்ப் பெயர் தாங்காதவரைத் தமிழரெனவும் தகுமோ என்றும் (11) தமிழ் என்பதே தனித்தமிழ்தான், பால் தருபவர் தண்ணீரோடு கலந்ததால்தான் கலப்புப் பால் ஆயது என்றும் (12) குறிக்கின்றார்.

"சுரையாழ அம்மிமிதப்ப" என்னும் மொழி மாற்றுப் பொருள்கோள் எடுத்துக்காட்டைத் தமிழ்நாட்டின் நிலைமைக்கு எடுத்துக்காட்டாக்கி

"சிறிது கற்றோர் பெருகி வாழ
பெரிது கற்றோர் சிறுகி வீழலை" நிறுவுகிறார் (15)

அயலான் போலவே நம்மவனும் நமக்குக் கேடனாக இருத்தலை மூவகையர் ஏமாற்றலில் கூறுகிறார் (16)

இத்தமிழகத்தில் இருந்து கொண்டே இதற்குக் கேடு செய்யும் இழிமையரைத் தமிழ்ப் பகைவராகச் சுட்டுகிறார் (17)

இங்கே என்னென்ன வள வாய்ப்புகளைச் செய்தாலும் இந்தியொடு நாகரி எய்தின் நன்றோ என வினாப்பதிகமாக இசைப்பது தமிழ்கெட வரும் வளர்ச்சித் திட்டம் தீங்கு விளைவிப்பது என்பது.

தமிழனுக்கு இணையில்லை, உலகில் தாய்மொழி பேணாமைக்கு என்பது சுவையான முரண் (19)

தமிழன் உடைமை தமிழ் ஒன்றே (20)
செந்தமிழே தமிழன்செல்வம் (21)
எது தமிழ் (22)
தமிழன் குலம் 'தமிழன்' (23)
தமிழ்ப் பற்று (24)
தமிழ்த்தொண்டர் படைச்செலவு (27)
தமிழைக் காட்டிக் கொடாமை (25)
தமிழுக்கு நற்கால அண்மை (28)
தமிழ் வெற்றி முரசு (29)
தமிழ் வாழ்த்து (30)

என்பனவெல்லாம் தமிழ்நேயரின் தமிழுள்ள வீறாம்.

"கற்றவரே தமிழைக் காட்டிக் கொடுத்து நின்றார்
கல்லாத பேரே தமிழ்க் காவலராகி வென்றார்"

எத்தகைய வெப்பின் விளைவு என எண்ண வைக்கிறது (24)

பெரியார் வாழ்த்து (13)
சேலங்கல்லூரி முதல்வர் இராமசாமிக் கவுண்டர் (26)
இரா. முத்துக் கிருட்டிணன் (33)

என்பவை நன்றிப்பாக்கள்.

உலகத் தமிழ்க் கழகம் (31)
பறம்புக் குடி (32)

என்பவை அமைப்பும் விழாக்கோளும் பற்றியன.

தமிழன் உள்ளம் எத்தகையது என்பதை விளக்குவது மங்களம்.

"எல்லாரும் இன்பமுறவே இறைவனருளால் மங்களம்" என்பது குறைவிலா நிறைவின் முன் வேண்டத்தக்க குறைவிலா நிறைவு வெளிப்பாடுதானே!

பாடல்கள் மேடைக்கென்றே இயற்றப்பட்டவை. அவ்வாறே இசைக்கவும் பட்டவை. எளியவை! இனியவை! உணர்வு மிக்கவை! உயிரோட்டமாம் உயர்வில் கிளர்ந்தவை! அயற்சொல் விரவா அருமையும் பெருமையும் அமைந்தவை.

## 3. இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்?

காட்டுப்பாடி விரிவில் பாவாணர் இருந்த நாளில் வெளியிடப்பட்ட நூல் இது. ஆண்டு 1968.

முகவுரை நிறைவில்

"இமிழ்கடல் உலகமெல்லாம்
எதிரிலா தாள்வ தேனும்
அமிழ்தினும் இனிய பாவின்
அருமறை பலவும் சான்ற
தமிழினை இழந்து பெற்றால்
தமிழனுக் கென்கொல் நன்றாம்
குமிழியை யொத்த வாழ்வே

குலவிய மாநி லத்தே''

என்று பாடுதல் தமிழை இழந்து பெறும்பேறு எதுவாயினும் பேறாகாது என்னும் அவர் உட்கிடை காட்டும். தம்மை அடிமைப்படுத்துவாரினும் மிகுதீயர் தம்மொழி அடிமைக்கு ஒப்பி நிற்பார் என்பது வரலாற்றுண்மை.

முற்படை, இந்தி வரலாறு, இந்தியால் விளையும் கேடு, இந்திப்போராட்டம், பல்வேறு செய்திகள், முடிபு என்னும் ஆறு பகுதிகளும், முப்பின்னிணைப்புகளும் கொண்ட இச்சுவடி 90 பக்க அளவில் உரூபா 1 ல் புன்செய்ப் புளியம்பட்டி மறைமலையடிகள் மன்றப் பாவாணர் நூல் வெளியீட்டுக்குழு உதவியால் வெளியாயிற்று.

இந்தியின் தோற்றம், வளர்ச்சி, இந்திக்கிளைகள், பிரிவுகள், இந்தி இலக்கியம், இந்திப்பன்மை, இந்தி தமிழ்நாட்டில் புகுந்த வகை, இந்தி பொதுமொழி என்றான வகை, இந்தி பற்றிய ஏமாற்று என்பவை முற்படையை அடுத்து எழுதப்பட்டவை.

இந்தியால் தமிழ் கெடும் வகைகளைக் கவனக்குறைவும் புலமைக்குறைவும், கலப்படமிகையும் சொன்மறைவும், சொற்சிதைவு, ஒலி மாற்றம், அயற்சொல் சேர்ப்பு இந்தி மூலப் புணர்ப்பு, மதிப்புக் குறைவும் பற்றுக் குறைவும், பேச்சுக்குறைவு, எழுத்து மொழி வரலாற்றழிவு என எண்வகையால் தமிழ் கெடும் வகையை விளக்குகின்றார்.

இந்தியால் தமிழன் கெடும் வகையை, தமிழ் மாணவர்க்கு வீண் கடுஞ்சுமை, தமிழர் குடிமைத் தாழ்வு, தமிழர் பண்பாட்டுக்கேடு, தமிழ்ச் சான்றோர்க்கு வாழ்வின்மை, தமிழின மறைவு என ஐவகையால் விளக்குகிறார்.

இந்திப்போராட்டம் மூன்றனையும் (1937, 65, 67) உரைக்கிறார். அரசியல் வாணர் இந்தியால் தமிழுக்குக் கேடில்லை என்பதை ஓர் உணவுப்பொருள் உடலுக்குக் கேடானது என்று மருத்துவர் கூற, அதனை விற்கும் கடைக்காரன் அல்லது வேலைக்காரன் அவ்வுணவு உடலுக்கு நல்லது என்பது போல்வது என்கிறார்.

'பெற்றவருக்குத் தான் தெரியும் பிள்ளையின் அருமை
கற்றவருக்குத்தான் தெரியும் தமிழின் அருமை
பற்றும் புலமையும் அற்றமற்றவருக்குத் தெரியுமா
நற்றமிழ்ப்பெருமை'

என நடைநலம் பயிலக் கூறுகிறார் (43)

இந்தியப் பொதுமொழியாதற்கு இந்திக்குத் தகுதியின்மையை இருபது காரணங்கள் காட்டி நிறுவுகிறார் பாவாணர் (51 – 53)

இந்தியின் மொழிகளும் கிளைமொழிகளும் 1951 குடி மதிப்பின் (Census) படி 81 பிரிவு ஆதலைப் பட்டியிலிட்டுக் காட்டுகிறார். (60 –61)

இந்தியா இந்தியர் எல்லார்க்கும் பொதுவாம். இந்தியாக்கு மட்டுமே உரியதன்று என்னும் பாவாணர், உலகப் பொதுவரசே ஒற்றுமைக்கு வழி என முடிக்கிறார்.

பாவாணரால் 1937 இல் வெளியிடப்பட்டது கட்டாய இந்திக் கல்விக் கண்டனம் என்னும் இசைநூல். 35 பாடல்களைக் கொண்டது. விலை அணா 2. ஒவ்வொரு பாடல் முகப்பிலும் இன்ன மெட்டு என்ற குறிப்புடையது.

## 4. என் அண்ணாமலைநகர் வாழ்க்கை

இது தென்மொழி மாதிகையில் (2.6 முதல் 2.12 வரை) தொடர் கட்டுரையாக வெளியிடப்பட்டுப் பின்னர் 1988 இல் பாவாணர் பதிப்பகத்தால் வெளியிடப்பட்டது.

பாவாணர் தம் வரலாற்றின் ஒரு பகுதியாகிய அண்ணாமலை நகர் வாழ்க்கைப் பற்றி எழுதிய நூல் ஆதலால் அதனொடு அவர் வரலாற்றுக் குறிப்புகளும் இடம் பெறுதல் முறையெனக் கொண்டு நூன்முகப்பில் பாவாணர் வாழ்க்கைக் குறிப்பு என்னும் ஏழுபக்க அளவில் பதிப்பாளரால் சேர்க்கப்பட்டுள்ளது. முன்னும் பின்னுமாய அவர்தம் வரலாற்றை அறிந்து கொள்ள உதவியாவது இது. பாவாணர் நூற்பட்டியும் உண்டு. நூல் முயற்சிப்படலம், அமர்த்தப் படலம், பணி செயற்படலம், (முதற்பகுதி, இரண்டாம் பகுதி) துறைமாற்றுப் படலம், நிலைமை தெரிபடலம், நீக்கப்படலம் என ஆறுபடலங்களையுடையதாய் நூல் 60 பக்க அளவில் அமைகின்றது. விலை உருபா ஐந்து. தமிழின் உண்மைத் தன்மையை எடுத்துரைத்தற்கும், காத்ததற்கும், நுண்மதி, தமிழ் ஆங்கிலப்புலமை, ஆய்வுத்திறன், நடுநிலை, அஞ்சாமை, தன்னலமின்மை ஆகிய அறுதிறம் இன்றியமையாது வேண்டும் என்கிறார் பாவாணர் (16)

'தமிழ் வேர்ச்சொல் அகர முதலி என்னையன்றி வேறெவராலும் தொகுக்க முடியாது' என்னும் துணிவு பாவாணர்க்கு இருந்ததால் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறைக்கு வேண்டுகை விடுத்தார். அது தடையும் காலக் கடப்புமாகிப் பின் ஒருவாறு ஆணை எய்தியது. அதனைக் கண்ட பாவாணர் பசியடங்கினவன் பெற்ற உணவு போல் ஆணையைப் பெற்றுக்கொண்டதாக உரைக்கிறார். (22)

ஆணையை அடுத்தே பாவாணர் ஆய்வை மேற்பார்வையிடும் குழுவினர் ஒன்பதின்மர் பெயர்கள் எய்துகின்றன. அதனைக் கண்ட பாவாணர், தம்மளவு தமிழ் ஆராய்ந்தவரேனும் தம் பணியை மேற்பார்க்கத் தக்கவரேனும் ஒருவரும் அப்பட்டியலில் இலர் என்பதைக் கண்டுகொண்ட பாவாணர், தம்மை வெளியேற்ற அமைத்த தள்ளிவெட்டி இது என்பதை உடனே கண்டு கொள்கிறார்,.

கால்டுவெலும், மாக்கசுமுல்லரும், செசுப்பர்சனும் இத்தகைய கட்டுப்பாட்டிற்கும் முட்டுப்பாட்டிற்கும் ஆளாய் இருந்திருப்பின் அவர் மனநிலை எங்ஙனம் இருந்திருக்கும் என்று வினாவும் வினாவிலேயே அவர் மனநிலை புலப்படுகின்றது.

பாவாணர் தொகுத்தற்குரிய அகர முதலியின் போலிகையாக ஐம்பது சொற்களுக்கு வேரும் வரலாறும் பொருளும் விளக்கமும் எழுதத் தொடங்கினார் பாவாணர். அந்நிலையில் தேராதூனில் நிகழவிருந்த வண்ணனை மொழி நூல் பயிற்சிக்குத் தேர்ந்தெடுத்து அனுப்பப்பட்டார். அப்பயிற்சி பற்றிப் பாவாணர், "அஃது எனக்கும் உண்மையான மொழி நூற்கும் பயன்படுவதன்று. வடநாட்டு மக்களின் வாழ்க்கை முறையும் மொழி வழக்கும் ஆகிரா, தில்லிக் காட்சிகளும், கங்கையாறும் பனிமலையும் பற்றிய அறிவே இவ்வுலகில் எனக்கு என்றும் பயன் தரும். இதுபற்றி என் எதிரிகட்கும் நன்றி கூறும் கடப்பாடுடையேன்" (35) என்கிறார்.

பாவாணர் வரைந்து தந்த ஐம்பது சொற்களையும் ஏற்க மறுத்தார் சட்டர்சி. "ஆரியச் சார்பினர் கருங்காக்கையை வெண் காக்கை என்று எத்தனை துணிச்சலோடும், திடாரிக்கதோடும் கூறி வருகின்றனர்" என்கின்றார் பாவாணர் (48)

இதன் விளைவு மொழி நூல் துறையினின்று பொதுத் துறைக்கு மாற்றப்பட்டார் பாவாணர். "வடநாட்டுப் புகலிலி போன்ற அயன்மையுணர்ச்சி எனக்கு நீண்ட நாள் இருந்து வந்தது" என்கிறார் பாவாணர் (49) இந்நிலையில் ஐந்தாண்டாயிற்று, கண்காணகர் மாறினார். வேலைநீக்க ஒலை வந்தது. "ஆண்டி எப்பொழுது சாவான் மடம் எப்பொழுது ஒழியும் என்று என் பதவிக்கும் உறையுட்கும் நீண்ட நாள் காத்திருந்தவர்களும் உண்டு" என்னும் பாவாணர். "1961 ஆம் ஆண்டு செபுத்தெம்பர் மாதம் 23 ஆம் பக்கல் அண்ணாமலை நகரை விட்டு வெளியேறினேன். என்னோடு தமிழும் வெளியேறியது" என்கிறார் (56)

## 5. ஒப்பியன் மொழிநூல்

தமிழுலகில் பாவாணருக்குச் சிறந்தோர் இடத்தை முதற்கண் வழங்கியது இவ்வொப்பியன் மொழி நூலேயாகும்.

1940 இல் விலை உருபா 3 க்கு வெளிவந்த நூல் அது.

ஒப்பியன் மொழி நூல் முதன் மடலம் திராவிடம் முதற்பாகம் (தமிழ்) என்னும் முகப்புடனும்,

"பண்டித புலவ வித்துவ கீழ்க்கலைத் தேர்ச்சியாளன் ஞா. தேவநேசன் எழுதியது" என்னும் குறிப்புடனும் வெளிவந்தது.

பாவாணர் திருச்சி ஈபர் மேற் காணியார் பள்ளியில் பணி செய்த காலம் இஃதாகும். "டாக்டர் பி. சீனிவாச மல்லையா அவர்கள் எனக்கு உற்றிடத்துதவிய நன்றிக் குறியாகப் படைக்கப்பட்டுள்ளது" என்று நூலைப் படைக்கின்றார்.

மொழிநூற் பயிற்சி 1930 முதலே தமக்குப் பற்றாட்டாக இருந்துள்ளமையை முகவுரையில் சுட்டுகிறார்.

தாம் மொழிநூல் துறையில் ஈடுபட்டது, அதில் ஆழ இறங்கி ஆய்ந்தது, கால்டு வெலார் கூறியதை மெய்ப்பித்தது என்பவற்றை அம்முகவுரையில் தெளிவிக்கிறார்.

"பள்ளியிறுதி, இடைநடுவு, கலை இளைஞர் முதலிய பல்வகைத் தேர்வுகளுக்கும் உரிய தமிழ்ச் செய்யுள் பாடங்களுக்குத் தொடர்ந்து உரை அச்சிட்டு வரும் சில உரையாசிரியர்கள் தமது வரையிறந்த வடமொழிப் பற்றுக் காரணமாக, தென் சொற்களையெல்லாம் வடசொற்களாகக் காட்டவே இவ்வுரை எழுந்தனவோ என்று தனித்தமிழர் ஐயுறுமாறு, கலை - கலா; ஆவீறு ஐயான வடசொல்; கற்பு = கற்ப என்னும் வடசொல்; சேறு = ஸாரம் என்னும் வடசொலின் சிதைவு; உலகு–லோகம் என்னும் வடசொல்லின் திரிபு; முனிவன் –மோனம் என்னும் வடசொல்லடியாகப் பிறந்தது. முகம் = வடசொல்; காகம் = காக என்னும் வடசொல், விலங்கு – திரியக்ஸ் என்னும் வட சொல்லின் மொழி பெயர்ப்பு எனப் பல தூய தென் சொற்களையும் வடசொற்களாகத் தமது உரைகளில் காட்டி வருவது பத்தாண்டுகளுக்கு முன் என் கவனத்தை இழுத்தது. உடனே அச்சொற்களை ஆராயத் தொடங்கினேன். அவற்றின் வேர்களையும் வேர்ப்பொருள்களையும்

ஆராய்ந்த போது அவையாவும் தென் சொல்லென்றே பட்டன" என்று கூறிய அவர் ஆழமாக ஆய்வில் இறங்கியதை உரைக்கின்றார்.

இந்நூல் திராவிடம், துரேனியம், ஆரியம், சேமியம், ஆஸ்திரேலிய ஆப்பிரிக்க அமெரிக்க முதுமொழிகள் என ஐந்து மடலங்களாகத் தொடர்வது என்று தம் திட்டத்தையும் எழுதுகிறார்.

மொழிநூல், பண்டைத் தமிழகம், திராவிடம் தெற்கில் சிறத்தல், தமிழகத்தின் தொன்மைக் குறிப்புகள், பண்டைத் தமிழர் மலையாள நாட்டில் தெற்கு வழியாய்ப் புகுந்தமை, பண்டைத் தமிழ் நூல்களில் பிறநாட்டுப் பொருள்கள் கூறப்படாமை, தமிழ்த் தோற்றம், உலக முதன்மொழிக் கொள்கை என்பவை 476 பக்கங்களில் விளக்கமாகக் கூறப்படுகின்றன.

பாளையங்கோட்டையில் பாவாணர் பயின்றபோது ஆசிரியராக இருந்தவரும் யாழ்ப்பாணத்துநல்லூர் வாழ்வினருமாகிய துரைசாமிப்பிள்ளை என்பார் வழங்கிய மதிப்புரை எண்ணத்தக்கது.

"ஆசிரியர் திருவாளர் ஞா. தேவநேசன் அவர்கள் அன்புடன் உதவிய ஒப்பியன் மொழி நூல் கிடைத்து வாசித்து மகிழ்ந்தேன். இந்நூல் ஏடுதொறும் இன்பம் பயப்பது. தமிழின் தொல்சிறப்பு, தமிழ் மக்களின் பண்டை மேனிலை, தமிழ்மொழியின் வரலாறு முதலியவற்றைத் தெள்ளிதின் விளக்குவது, ஆசிரியரின் ஆராய்ச்சிவன்மை சொல்லிறந்து நிற்பது. இப்பேரறிவாளர் தமிழ்நாட்டுக்குச் செய்துள்ள பேருதவியைத் தமிழ் உரிமை மிக்குடைய தமிழ் மக்கள் யாவரும் பாராட்டும் கடப்பாடுடையர். தமது நலத்தைக் கருதாது உழைக்கும் இத்தகைய கலைவல்லாரைத் தமிழ்நாடு பொன்னே போல் போற்றுதல் வேண்டும். தமிழ்மொழிக்குத் தாழ்வு நேர்ந்து விடுமோ எனக் கலங்கி நின்ற இக்காலத்தினாற் செய்த நன்றியை ஞாலத்தின் மானப் பெரிதாகத் தமிழ் மக்கள் போற்றுவாராக. தமிழுரிமை மிக்குடையேம் எனக் கூறிக்கொள்ளும் தமிழ்மக்கள், சொல்லளவில் நின்று விடாது இந்நூலை வாங்கிக் கற்றுப் பயன்பெறுவாராக!" என்பது அது. தமிழின் தகவை நிலைநாட்டிய தனிப் பேராவணம் ஒப்பியன் மொழி நூல் என்பது எண்ணத்தக்கதாம்.

## 6. கட்டுரை இலக்கண நூல்கள்

உயர்தரக் கட்டுரை இலக்கணம் இரு பாகங்களைக் கொண்டது. முதற்பாகம் 1950 ஆம் ஆண்டிலும் இரண்டாம் பாகம் 1951 ஆம் ஆண்டிலும் வெளிவந்தன. இரண்டும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடுகளே.

முதற் பாகம் பக்கம் 284. இரண்டாம் பாகம் பக்கம் 251.

"ஆங்கில உரைநடையைப் பின்பற்றியே தமிழ் உரைநடை வளர்க்கப்பட்டு வருவதாலும், இரென்னும் மாரிட்டினும் (Wren & Marlin) இணைந்தியற்றிய ஆங்கில இலக்கண நூலைத் தழுவியே சென்னை அரசியலார் தமிழ்க் கட்டுரை இலக்கணப் பாடத்திட்டம் வகுத்திருத்தலானும், அந்நூலைத் தழுவியே இந்நூலும் வரையப்பட்டுள்ளது." என்று முகவுரையில் பாவாணர் நூலைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

"இந்நூல் தொடரியல், மரபியல், கட்டுரையியல் என மூவியல்களையுடையது. விரிவுபாடு கருதி இரு பாகமாக வெளியிடப்பட்டுள்ளது. முதற்பாகம் முதல் இயலையும் இரண்டாம் பாகம் ஏனை இயல்களையும் கொண்டவை" என்று நூலமைதி சுட்டுகிறார்.

சொற்றொடர், தொடர்மொழி (Phrase) கிளவியம் (Clause) வாக்கியம் (Sentence) எனப்பொருள் முடிவு பற்றி மூவகைப்படும் என்கிறார். இதனால் இலக்கணம் கற்பிப்பதோடு மொழியாக்கம் செய்வதையும் கற்பிக்கிறார் பாவாணர் என்பது விளங்கும்.

தமிழ் இலக்கணம் கற்கும்போதே ஆங்கில இலக்கணம் கற்றுக்கொள்ளச் செய்வதோடு மொழிபெயர்ப்புக்கு வேண்டும் திறத்தை உண்டாக்கவும், கலைச்சொல் உருவாக்கவும் வழி காட்டுகிறார். அவர்தம் எல்லா நூல்களிலும் இவ்வாய்ப்புகள் உண்டெனினும் உயர்தரக் கட்டுரை இலக்கணம், கட்டுரை வரைவியல்,கட்டுரைக் கசடறை ஆகிய நூல்களில் மிகுதியாம்.

இலக்கணத்தை விளக்குவதற்குத் தருவதே எடுத்துக்காட்டு. ஆனால் பாவாணர் காட்டும் எடுத்துக் காட்டுகள், வெவ்வேறு பயன்களை ஆக்குவன.

நான்காம் வேற்றுமையேற்ற பெயர்க்குப் பின்னும் வரும் எழுவாய்களின் பயனிலை தொகும் என்பதை எடுத்துக்காட்டி விளக்குகிறார்.

வில்லுக்கு ஓரி, சொல்லுக்கு மாவலி.
கொடைக்குக் குமணன், நடைக்கு நக்கீரன் (சிறந்தவர்).
வில், சொல், கொடை, நடை = எதுகை நயம்

தமிழ் இலக்கியச் சிறப்பு, தமிழ்ப் பெருமக்கள்

சிறப்பு என்பனவும் புலப்படச் செய்கிறார்.

ஒரு தன்மைப்பட்ட பல பொருள்களைச் சேர்த்துக் கூறும் பழமொழிகளில் பயனிலை தொகும் என்பதற்கு

"மாங்காயிற் பெரியதும், தேங்காயிற் சிறியதும்" (நல்லவை)

"பிரிட்டிசு நீதியும் பிரெஞ்சு வீதியும் நேர்மையானவை" என்னும் இவ்வெடுத்துக் காட்டுகளால் இலக்கணத்தொடு பொது அறிவும் உலகியலறிவும் வளர வழி செய்கிறார்.

எழுவாய், பயனிலை, செயப்படு பொருள்களைக் குறிப்பிட 25 வாக்கியங்களை எடுத்துக் காட்டுகிறார். அவற்றுள் திராவிட மொழிகள் மொத்தம் பதின்மூன்று.

"தனித்தமிழை வளர்த்த பெருமை பல்லவபுரம் பொதுநிலைக் கழகத் தலைவர் தெய்வத்திரு மறைமலையடிகட்குரியது.

தொல்காப்பியத்திற் சொல்லப்பட்ட எண்வகை வனப்புள் 'இயைபு' வகைப்பட்டவை சிலப்பதிகாரமும் மணிமேகலையும்.

பழந்தமிழ் நாட்டின் பெரும் பகுதியாகிய குமரிநாடு கடலுள் முழுகிக் கிடக்கின்றது.

தமிழ் இந்திய மொழிகளுக்குள் மிக முந்தியது.

இத்தகையவை, மாணவர் அறிவை விரிவு செய்வதுடன், ஆய்வாளர்க்குப் பாவாணர் 1950 இல் கொண்டிருந்த கொள்கையும் 1981 வரை அவை வளர்ந்தோங்கிய சீர்மையும் அறிந்திட உதவும்.

"வடமொழி தேவமொழி என்னும் கொள்கையினாலும் பிறப்பொடு தொடர்புடைய குலப்பிரிவினாலும் தமிழுக்கு நேர்ந்த தீங்கு கொஞ்ச நஞ்சமன்று."

"உலகிலேயே தமிழ் மொழியைப் பேணாத நாடு தமிழ்நாடு ஒன்றுதான்" (பக்.55)

பாவாணர் கொண்ட தெளிவும், உணர்வும் இளையர் நெஞ்சில் பதியும் அல்லவோ?

பின்னதன் விளக்கத்தைப் பின்னுமோர் இடத்தில் எடுத்துக்காட்டாகக் கூறுகிறார் (பக்.65) ஆற்றுநீர் நடைக்கு எடுத்துக்காட்டாவது அது.

"பிற நாடுகளில் எல்லாம் அரசியற்கட்சி பல இருப்பினும் நாட்டுமொழி அவை எல்லாவற்றிற்கும் பொதுவாகும். இப் பாழாய்ப்போன தமிழ்நாட்டிலோ, ஒவ்வொரு கட்சியொடும் ஒவ்வொரு மொழி தொடர்புறுத்தப்படுகிறது. அதிலும் கேடாக, நாட்டு மொழியே நாட்டவரால் வெறுக்கவும் படுகின்றது. மொழியல்லவா மக்கள் முன்னேறும் வழி? தாய்மொழியைப் பேணாத நாடு தமிழ்நாடு தவிர வேறு ஏதேனும் உண்டோ?" என்பது அது.

"தமிழ் நாகரிகம் எகிபதிய நாகரிகத்திற்கும் முந்தியதென்று நான் உண்மையைச் சொல்லும்போது தமிழரும் எள்ளி நகையாடுகின்றனர்" என்பது பட்ட புண்ணின் படுவெளிப்பாடு இல்லையா? (44)

"காஞ்சிபுரம் நாயனாப் பிள்ளையார் பாட்டுப் பாடினார். நெல்லை அழக நம்பியார் மதங்கம் (மிருதங்கம்) இசைத்தார். புதுக்கோட்டை தட்சிணாமூர்த்தியார் கஞ்சுரா அடித்தார். மதுரை வேணுச் செட்டியார் தோலக்குத் தட்டினார். தில்லைக் கோவிந்தசாமி பிள்ளையார் கின்னரி (Fiddle) எழுவினார். மன்னார்குடிப் பக்கிரிசாமிப் பிள்ளையார் குணக்குரல் ஒலித்தார். இன்னிசையரங்கு நள்ளிரவு வரை நடந்தது." (201) இது பாவாணரின் இசைக் காதல் வெளியீடுதானே?

இரண்டாம் பகுதி மரபியல் கட்டுரை இயல் பற்றியது.

மரபியலை வழக்கியல் வகை, பெயர்ச்சொல், வினைச்சொல் ஒரு பொருட் பல சொற்கள், இணை மொழிகள், மரபுத் தொடர் மொழிகள் என ஆறாகப் பகுத்து விளக்குகிறார் பாவாணர்.

வழக்கு என்பதை இயல்பு வழக்கு, தகுதி வழக்கு, என்பவற்றுடன் திசை வழக்கு, இழிவழக்கு, அயல் வழக்கு என விரிக்கிறார்.

பெயர்ச்சொற் பகுதியில் பண்புப் பெயர்கள் கருமை, செம்மை, நீலம், பசுமை, பொன்மை, வெண்மை என்பனவற்றின் அடியாக 152 சொற்களைக் காட்டுகிறார். மரபுப் பெயர்கள் என்னும் பகுதியில் ஆண்பாற்பெயர், பெண்பாற்பெயர், இளமைப் பெயர், என்னும் முப்பகுதியொடு சினைப்பெயர், ஆடையணிப்பெயர், மேய்ப்பன் பெயர் என்பவற்றையும் இணைக்கிறார். இவை தொல்காப்பியம் கற்றார்க்கும் அதிற் காணாப் பெருவரவாகத் திகழ்கிறது. மாணவர்க்காகச் செய்யும் நூல் என்பது கருதாமல், கூற வேண்டுவன வெல்லாம் கூறியாக வேண்டும் என்னும் வேட்கையில் கூறியுள்ளதை எவரும் உணர முடியும்.

சினைப்பெயர் என்பதில் இலைப்பெயர், பிஞ்சுப்பெயர், வித்துப் பெயர், உள்ளீட்டுப் பெயர், குலைப்பெயர் எனப் பகுத்து விரிப்பது பாவாணர்க்கே உரியதாம்.

மரபியலில் ஒரு பொருட் பலசொற்களைப் பற்றிக் கூறும்போது "அவை பருப்பொருளில் ஒத்தனவேயன்றி நுண்பொருளில் ஒத்தன அல்ல" என்கிறார்.

"கொசு என்பது, கட்டுக்கடைநீரிலும் இனிப்புப் பொருள்களிலும் மொய்த்துக் கொண்டிருந்து மக்களைக் கடிக்காத ஒரு சிற்றீ வகை"

"ஒலுங்கு என்பது, சாக்கடையிலும் சதுப்பு நிலங்களிலும் இருப்பதாய், கொசுவினும் நீண்டு பருத்ததாய் மக்களின் குருதியை உறிஞ்சிக் குடிக்கும் ஒரு சிற்றீவகை" என வேறுபாடு காட்டுகிறார்.

வௌவால், துரிஞ்சில் என்பவை வேறுபடும் வகையைக் காட்டுகிறார்.

"வாவல் (வௌவால்) என்பது மரங்களில் தொங்கிக் கொண்டிருந்து கனிகளையுண்டு வாழும் பெரு வௌவால். துரிஞ்சில் என்பது சந்து பொந்துகளில் புகுந்திருந்து, இரவில் ஊருக்குள் பறந்து திரிந்து சிறு பூச்சிகளைப் பிடித்துத் தின்னும் சிறு வௌவால்" என்கிறார்.

சொல்லுதல் குறிக்கும் 23 சொற்கள் காட்டி அவற்றின் நுண்ணிய வேறுபாடும் காட்டுகிறார். இணை மொழிகள் அக்கம் பக்கம் எனத் தொடங்கி வேலை வெட்டி ஈறாகத் தொடரமைப்பில் 403 சொற்றொடர்களை எடுத்துக் காட்டுகிறார். அவர்தம் உழைப்பின் அருமையும் நினைவின் பெருமையும் வெளிப்படுத்துவன இன்னன.

இவ்வாறே மரபுத்தொடர் மொழிகளையும் அகரப் படுத்துகிறார். எதனையும் அகர முதலி முறையில் நோக்கி வரைதல் பாவாணர் ஆழங்கால் பட்டுப்போன திறமாகும்.

கட்டுரை இயல் குற்றங்களும் குணங்களும் முதலாக செய்யுட்கதையை உரைநடையில் வரைதல், ஈறாகப் பதினொரு பகுப்புகளையுடையது.

கடிதவரைவு உறவாடற்கடிதங்கள், தொழின்முறைக் கடிதங்கள் என இருபாற்பட்டு விரிவாக எழுதப்படுகின்றது.

கதை வரைவு, தன் வரலாறு, உரையாடல் என்பனவும் இடம் பெறுகின்றன.

கட்டுரை வரைவு, எண்பது பக்க அளவு சிறக்கின்றது. தமிழன் பிறந்தகம் ஆய்வுக் கட்டுரைத் தலைப்பில் இடம் பெறுகின்றது. பாவாணருடைய நகைச்சுவை, நால்வர் செவிடர் கதையால் விளக்கமுறுகிறது.

பாவாணர் சால்பும் நன்றியுணர்வும் சாமிநாதையர் தமிழ்த்தொண்டு என்னும் 41 அடி அகவலால் புலப்படும். இசைப் பற்றுமை கருணாமிருத சாகரம் கண்ட ஆபிரகாம் பண்டிதர் வரலாற்றால் விளங்கும்.

பாவாணர் எடுத்துக் காட்டும் புலமையர் பெருமக்கள் நூற்றுவர்க்கு மேற்பட்டவர். தமிழகம் மறந்த பலரைஅவர் நினைவு கூர்கிறார்.

அவர் கையாளும் பழமொழிகள் பன்னூற்றுக் கணக்கின. பாவாணர் நூலுக்கு இவ்வளவு உழைப்பா எனக் கற்பார் கருதாதிரார்.

## 7. கிறித்தவக் கீர்த்தனம்

கிறித்தவக் கீர்த்தனம் 1932 இல் வெளியிடப்பட்டுள்ளது. பாவாணர் அதன் ஒரு படியை முனைவர் வீ. ஞானசிகாமணியிடம், பின்னாள் சந்திப்பு ஒன்றில் வழங்கியுள்ளார். சில பாடல்களைப் பாவாணர் பாடிக்காட்டியுள்ளார். கிறித்துப் பெருமானிடத்தில் பாவாணர்க்கு இருந்த பற்றுமையையும் திருப்பணி நாட்டத்தையும் அக்கால் தெரிவித்துள்ளார். அன்றியும் கிறித்தவர்கள் தமிழின் தூய்மையைப் போற்றுதல் பற்றியும், திருநூலை (விவிலியத்தை)த் தூய தமிழில் மொழியாக்கம் செய்தற்கு மேற்கொண்ட முயற்சிக்கு வரவேற்பே இல்லாமை பற்றியும் உரைத்திருக்கின்றார். பின்னர் முற்றாகத் தமிழாய்விலேயே பாவாணர் ஈடுபட்டதை உரைத்திருக்கிறார்.

கிறித்தவக் கீர்த்தனத்தில் ஞானசிகாமணியார் கொண்ட ஆர்வம் கண்டு அதனை வெளியிட்டுப் பயன்படுத்திக்கொள்ள இசைவும் தந்திருக்கிறார். எனினும் பாவாணர் வாழ்ந்த நாளில் மீள்பதிப்பு வந்திலது அவர் இயற்கை எய்தி முத்திங்கள் கழிந்த பின் மீள் பதிப்பு எய்தியது (ஏப்பிரல் 1981)

"கடவுள் வாழ்த்து முதல் ஆட்டுக்குட்டியானவரின் கலியாணம் ஈறாக 28 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன. கடவுள் வாழ்த்து நீங்கலாக 51 பத்திப் பாடல்கள் உள்ளன. இன்றைய திருச்சபை பெரிதும் தமிழிசையை மறந்திருக்கும்

நிலையில் இப்பாடல்களை விரும்பிப் போற்றுதல் வேண்டும்.'' என்கிறார் பதிப்பாசிரியர்.

முகவுரை வரைந்த பேராசிரியர் பொன்னு ஆ. சத்திய சாட்சி, ''இந்நூலினை மேற்போக்காகப் பார்த்தால்கூட பாவாணரின் இசையறிவும், அது பரந்து பரவிக்கொண்டிருந்த எல்லைகளின் விரிவும் நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றன'' என்கிறார். இந்நூலில் உள்ள எல்லாப் பாடல்களும் அராகம், தாளம், மெட்டு ஆகியவற்றைக் கொண்டுள்ளன. கருநாடக இசை தியாகராசக் கீர்த்தனை, தேவார திருவாசகப் பண், நாட்டுப்புற இசை நலம் ஆகிய எல்லாமும் அமைந்த தொகை இதுவாம்.

மரபுப் பாவாக அறுசீர்க்கழி நெடிலடி விருத்தம் எழுசீர்க் கழி நெடிலடி விருத்தம் கொச்சகக் கலி இன்னவற்றை இசைத்துள்ளார். இளங்கோவடிகள் இசைப்பா, அருணகிரியார் வண்ணப்பா, வள்ளலார் இசைப்பா, அண்ணாமலையார் காவடிச் சிந்துப்பா என்பனவற்றையும் இனிமை மிக யாத்துள்ளார்.

பழநாள் மரபில் பாட்டொடு உரையிடையிட்டு வரத் தகடூர் யாத்திரை, பெருந்தேவனார் பாரதம், சிலப்பதிகாரம் என்பவை அமைந்தாற்போல இந்நூலிடை உரைநடை அமைத்துள்ளார்.

அவ்வுரைநடையில் கிறித்துவின் பாடுகள் தனிச் சிறப்பாக எடுத்தோதப் படுகின்றன. ''பாடில்லாமல் பயனில்லை'' என்னும் பொதுமக்கள் மொழியைச் சிறப்பு மொழிச் சீர்த்தியாக்கிச் ''சிலுவைப்பாடு இல்லாமல் பிறப்பு இறப்பு உயிர்த்தெழுதல் என்பவற்றால் பயனில்லை'' என்பதை நயமாகத் தருக்க முறையுடன் விளக்குகிறார். ஒரு நுண்ணறிவாளி எதனை நோக்கினும் பிறரினும் தனியோங்கிய நுண்மைகளைக் காண்பார் என்பதை மெய்ப்பிக்கும் சான்றாகின்றது இது.

''அன்பு, ஊழியம், தியாகம் என்னும் மூன்றும் சிலுவைப் பாடுகளிலேயே திரண்டு கிடக்கின்றன'' என்று கூறும் தேவநேயர் 'கிறித்துமார்க்க சாரம்' இதுவே என்கிறார்.

''ஒவ்வொரு கிறித்தவனும் கிறித்தவர்களை அல்ல, கிறித்துவையே பின்பற்ற வேண்டும். இதுவே மீட்பின் வழி'' என்று ஒப்பிலாச் சிலுவைப் பாட்டை எடுத்துரைக்கும் போது அவர்தம் மெய்ம்ம மதிப்பீடு புலப்படும்.

பழந்தமிழ் ஆற்றுப்படை போல் ''கிறித்துவின் பாடுகளைப் பற்றி வேதநாயக சாத்திரியாரும், இரத்தினப் பரதேசியாரும் பண்டிதர் சத்தியவாசகம் பிள்ளை அவர்களும் இயற்றிய கீர்த்தனைகள் மிகவும் அருமையானவை. அவற்றையும் படிப்பின் ஆத்துமாவிற்கு ஆனந்தமுண்டாகும்.'' என்று கூறுவது பயனுடையார் பண்பு பாராட்டலாகும்.

அன்புறு பதிகம் என்பதைத் திருநேரிசைப் பண்ணில் இயற்றியுள்ளார் பாவாணர். அப்பதிகம் அறுசீர்க் கழி நெடிலடி யாசிரிய மண்டிலத்தத்தால் ஆயது. அதன் ஈற்றடிகள் எல்லாரும் ''அன்பெனக் கில்லாவிட்டால் ஆவதொன்றில்லை காணே'' என்னும் முடிநிலை கொள்ளவே அமைத்துள்ளார். அதனால் அன்பு மென்னடை எதுகையில் இயலுமாறே பதிகம் இயற்றியுள்ளார் என்பது வெளிப்பட்டுப் பொருட்சிறப்பும் ஒருங்கே விளக்கமுறல் தெளிவாம்.

''நண்பெனும் சிறப்புக் கொண்ட நவையறும் ஆர்வ மாந்தர்
புன்கணீர் பூசல் செய்யப் புதவுடை வெள்ளமாகி என்புயிர்
பொருள்களெல்லாம் ஏனையோர்க் குரிமை செய்யும்
அன்பெனக் கில்லாவிட்டால் ஆவதொன்றில்லை காணே!''

என்னும் பாடலில் அன்புடைமை வள்ளுவம் ததும்பி வழிகின்றமை 'அன்பேஇறைமை' யாகக் காணும் கனிவுறு காட்சியாம்.

''அன்பீனும் ஆர்வமுடைமை''

''அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்''

''அன்பிலார் எல்லாம் தமக்குரியர்''

என்னும் மூன்று குறள் மணிகளும் செறிந்தது இப்பாட்டு.

அன்றியும் 'புன்கணீர் பூசல்' என்பதைப் புதவுடை வெள்ளத்திற்கு, மதகினை உடைத்துத் தாவிச் செல்லும் வெள்ளத்திற்கு உவமை காட்டுதல் அருமை மிக்கது. புதவு–புதவுக்கதவம் எனப்படும். மடைநீரைக் காத்து நிறுத்தவும் வெளிப்படுத்தவும் அமைந்தது புதவம் என்பதாம். 'மடை திறந்த வெள்ளம் போல்' என்பது பழமொழி.

'மன்னுயிர்' என்பதை நிலைபேறாம் இறைமைக்கும் குமரனாக வந்த கிறித்துவுக்கும் இரட்டுறலாக்கி இறைமை எய்துதலே மாந்தப் பிறவி நோக்கு என்பதை எடுத்த எடுப்பிலேயே காட்டுதல் 'பாவாணர்' நுண்ணோக்கை வெளிப்படுத்தும். (2)

அவையடக்கம் தொன்று தொட்டது. பாவாணர் ''காட்டுறப் பிழைகள் தோன்றாக் கல்விநூல் உலகத்துண்டோ?' என்னும் முறையால் பிழை இருத்தல்

எந்நூற்கும் இயற்கை. இந்நூற்கும் தகும் அது" எனச் சொல்லுதல் புது வரவாகும்.

"உலகெலாம் ஆளும் ஒருவனேயெனினும் அவன் தன் ஆன்மாவை இழந்து விட்டால் அவனுக்கு ஆகும் ஆதாயம் யாது?" என்பது இழக்கக் கூடாதது இன்னது என்னும் அறிவுறுத்தலாகும்.

நான் சுத்தம் உயிர்மெய் என்பதால் "நானே வழியும் சீவனும் சத்தியமாயும் இருக்கிறேன்" என்பதைக் கூறுவது நூற்பா அமைவினதாம்.

"நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே
நசரேய நமவென்னா நாவென்ன நாவே"

முதலியவை ஐந்தும் சிலம்பின் நடைமட்டுமோ இம் மண்ணின் மணம் கமழும் சீர்மை அல்லவோ?

குமரவணக்கம் என்னும் தலைப்பிட்ட பாடல் 'கானடா–ஆதி' என்பது. "இப்பாட்டொன்றும் என் உடனாசிரியர் ஏ.வி. சீனிவாசையர் அவர்கள் தெரிவித்தது" என்னும் குறிப்பைப் பாவாணர் வரைந்திருப்பது நூல் நூலாகப் படியெடுத்துக் கொண்டு தாமே படைத்தாற் போலக் காட்டும் பொய்ம் முகங்களைக் கீறிக் கிழித்த தகைமையதாம்.

மீள்பதிப்பு இல்லையேல் முதல் பதிப்பு வாய்த்திராது. அதனை மீட்டளித்த வேதாகம மாணவர் பதிப்பகம் பாராட்டுக்குரியது.

## 8. சிறுவர் பாடல் திரட்டு

'சாங்சு ஆப் சில்ரன்' (Songs of Children) என ஆங்கிலத் தலைப்பிலும், சிறுவர் பாடல் திரட்டு எனத் தமிழிலும் தலைப்பிட்டு வெளிவந்த சுவடி இது. 1924 ல் வெளிவந்துள்ளது. ஞா. தேவநேசப் பாவாணன் என்று ஆசிரியர் பெயர் உள்ளது. சிறுவர் உள்ளங்களைப் பாட்டு, விளையாட்டு, கதை, கைவேலை என்பவற்றின் வழியாகக் கவர்ந்து கற்பித்தல் பயன் செய்யும் என முகவுரையில் கூறுகிறார். அந்நோக்கில் செய்யப்பட்டது இச்சுவடி என்பதையும் சுட்டுகிறார்.

ஒன்றாம் பாடம் என்பது முதலாக இருபத்தொன்பதாம் பாடம் ஈறாகக் குறிப்பிட்டுப் பாடல்களை அமைக்கிறார். ஒவ்வொரு பாடமும் ஒவ்வொரு பாடலாக இசை மெட்டுடன் உள்ளது.

கடவுள் வணக்கத்தில்

அன்னை தந்தை நீ அண்ணன் தம்பி நீ
முன்னும் பின்னும்
நீ மூவா மருந்து நீ"

என்பது ஒரு கண்ணி.

"கலகம் நீங்கியோர் கட்டாய் இருக்கவே
உலகம் யாவையும்
ஒருமைப்படுத்துவாய்"

என வேண்டுகிறார். 'வாசுதேவனே வந்தாளும்' என்ற மெட்டு.

"கப்பலைப்பார்! கப்பலைப் பார்!
கடலுள்ளே கப்பலைப்பார்!
தெப்பத்தேர் ஓட்டம் போல்
தெரிகின்ற கப்பலைப்பார்"

இக்கப்பல் பாட்டு, 'முத்திநெறி' அறியாத என்ற மெட்டு.

"அலைமேலே தொட்டில் போல்
ஆடியாடிப் போகிறதே
உலைமேலே புகை போலே
உயரத்தான் புகைகிறதே"

என்பது அதன் மற்றொரு கண்ணி.

வண்ணத்துப் பூச்சியைப் பற்ற, அதன் சிறகு ஒடிய, 'ஐயையோ நான் என்செய்வேன்' என வருந்தி

"பதைக்குதே என் உள்ளமும்
பாவம் பூச்சிகளை இனி
வதைக்க மாட்டேன் அன்னையும்
வந்தால் சொல்வேன் உண்மையே"

எனத் திருந்துவதாக முடிக்கிறார். இது 'யாரம்மா' என்ற மெட்டு,

கடைசிப்பாடம் 'வாசிக்கும் முறை' என்பது 'கரிவதனா ஈசன்' என்ற மெட்டு.

"எழுந்து நின்றதும் நூலை
இடக்கையில் பிடிப்பாய்
அழுந்த ஒலித்துப் பொருள்
அறியவே படிப்பாய்"

"நேராக நின்று கைகால்
நெகிழ விடாதே
மார்பு முன் நூலைப் பிடி
முகம் மறைக்காதே"

என்பவை முதலிரு கண்ணிகள்.

பாட்டி ஊட்டும் பாற்சோற்றுப்பதம் இப்பாடல்கள்.

## 9. சுட்டுவிளக்கம்

சுட்டுவிளக்கம் அல்லது அடிப்படை வேர்ச்சொல் ஐந்து என்பது இதன் பெயர்.

'ஒப்பியன் மொழிநூல் முதன் மடலம்' 2 ஆம் பாகம் முற்பகுதி என்னும் தலைப்புக் குறிப்பு இந்நூற்கு உண்டு.

1943 இல் வெளிவந்த இந்நூலின் முதல் நான்கு படிவங்கள் திருச்சி இம்பீரியல் அச்சகத்திலும் எஞ்சியவை செங்குந்த மித்திரன் அச்சகத்திலும் அச்சிடப்பட்டுள்ளன என்பது அறிய வருகின்றது.(104).

சுட்டு விளக்கம் அச்சிடும் காலத்தில் பாவாணர் சென்னை முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியராக இருந்துள்ளமையும் அப்பொழுதே பண்டித புலவ வித்துவ கீழ்க்கலைத் தேர்ச்சியாளராக இருந்தார் என்பதும் பெயர்க்குறிப்புகளால் புலப்படுகின்றன. இவ்வாசிரியர் எழுதிய நூல்கள் தி.தெ.சை.சி. கழகத்தில் கிடைக்குமென அறிவித்துள்ளார். முன்னுரை, சுட்டுத்தோற்றம், சுட்டுப்பெயர்ச்சொற்கள், மூவிடப்பெயர்கள், வினாப்பெயர் என்னும் ஐம்பகுப்பில் நூல் விளங்குகின்றது. பக்கங்கள் 104. பின்னிணைப்பு இப்பக்கங்களுள் ஆறுபக்கம் உள்ளது. விலை ரூ 1 1/4 என்றுள்ளது.

மொழிநூல், சொல்லியல்நூல் என்னும் இரண்டன் வேறுபாட்டை முகவுரையில் முன் வைக்கிறார்.

மொழிகள் தோன்றிய வகை, அவை வளர்ந்த முறை, அவற்றுள் ஒன்றோடொன்றுக்குள்ள தொடர்பு முதலியவற்றை விளக்கும் நூல் மொழி நூலாம்.(Philology)

ஒரே மொழியிலுள்ள சொற்களையெல்லாம் ஆராய்ந்து அவற்றின் பாகுபாடு, அமைப்பு, பிறப்பு, பொருளுணர்த்து முறை, திரிபு முதலியவற்றை ஆளும் நெறிமுறைகளை விளக்கும் நூல் சொல்லியல் நூலாம். (Etymology). ஆகவே சொல்லியல் நூல், மொழி நூலின் உட்கூறாம். இவற்றுள் முன்னது பின்னதனுள் அடங்கும். பின்னது முன்னதனுள் அடங்காது என்பது அது.

'இயல்பான மொழிகளும் சொற்களும் ஒரு நெறிப்பட்டே தோன்றி இயங்குகின்றமையின், முறைப்படி ஆராயின் அவற்றின் நெறிமுறைகளையெல்லாம் கண்டு கொள்ளலாம் என்பது இச்சுட்டு விளக்கத்தை நடுநிலையாய் நுணுகி நோக்குவார்க்கு இனிது புலனாம்' என நூலின் பயன்பாட்டை உரைக்கின்றார்.

தமிழ்தோன்றிய வகை, தமிழ் இயற்கைமொழியாதல், தமிழில் சொல் தோன்றிய வகைகள், தமிழ்ச் சொற்களின் காரணக் குறித்தன்மை, தமிழில் நெடில் முன்னர்த் தோன்றியமை என்பவற்றை விரித்து முன்னுரையாக வரையும் பாவாணர் சுட்டுத்தோற்றத்தில் ஐவகைச் சுட்டுகளை முன்வைக்கிறார்.

சேய்மைச்சுட்டாக வாயைப் படுக்கையில் அகலித்தபோது 'ஆ' என்னும் ஒலியும் அண்மைச் சுட்டாக வாயைக் கீழ்நோக்கி விரித்த போது 'ஈ' என்னும் ஒலியும், முன்மைச் சுட்டாக வாயை முன்னோக்கிக் குவித்தபோது 'ஊ' என்னும் ஒலியும் உயரச்சுட்டாக வாயை ஒடுக்கி நட்டுக்கு அகலித்தபோது 'ஓ' என்னும் ஒலியும் பிறந்தன. இவை வாய்ச்சைகை ஒலிகள்.

பின்னர் வயிறார உண்டபின் அடிவயிற்றினின்று மேனோக்கி யெழும் காற்று ஏகார வடிவாய் வெளிப்பட்டதினின்று 'ஏ' என்னும் ஒலி எழுகைச் சுட்டாகக் கொள்ளப்பட்டது எனத் தெரிவிக்கின்றார்.

பாவாணர் விளக்கும் சுட்டு மேலும் விரிவுற்றே 1953 இல் முதல் தாய்மொழி அல்லது தமிழாக்க விளக்கமாகியது எனலாம்.

கத்தொலிகளும் ஒலியடிச்சொற்களும் உம் என்னும் சொல், குறிப்பொலிகளும் குறிப்புச்சொற்களும் என்பவை பின் இணைப்பாக விரிக்கப்படுகின்றன.

## 10. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழகராதியின் சீர்கேடு

இப்பெயரிய சுவடி 1961 ஆம் ஆண்டில் வெளிவந்தது. பக்கங்கள் 56. விலை 75 புதுச்சல்லி.

சென்னை, அண்ணாமலைப் பல்கலைக் கழகங்களில் தூய தமிழ்ப் பணிக்கு இடமில்லாமையை உரைக்கும் பாவாணர்

> "புக்கில் அமைந்தின்று கொல்லோ சிலரிடைத்
> துச்சில் இருந்த தமிழ்க்கு"

என மாற்றுக் குறள் ஒன்று யாத்து முகவுரையை நிறைவு செய்கிறார்.

சொல்வழு, பொருள் வழு, வேர்வழு, இலக்கண வழு, மரபு வழு, அகராதி அமைப்பு வழு, அகராதி ஆசிரியர் குறை, சென்னைப் பல்கலைக்கழக அமைப்புக்குறை என எண்வகைபட்டவற்றை ஆய்வுப் பொருளாக்கி அறுதியிட்டுள்ளார்.

சென்னைப் பல்கலைக்கழக அகராதியின் நோக்கங்கள் சிறந்தவை என்பதை முகப்பிலேயே பாராட்டுகிறார். "அந்நோக்கங்கள் மேனாட்டறிஞர் களால் வகுக்கப்பட்டமையே காரணம்" என்கிறார்.

1. "இவ்வகராதி, சமயம், மருத்துவம் கணியம் முதலிய பல்துறை இலக்கியங்களில் வரும் கலையியற் சொற்கட்கும், அருகிய வழக்குச் சொற்கட்கும் கவனமாகப் பொருள் விளக்கியும் நெருடான சொற்களை விரிவாக ஆராய்ந்தும், மரபு நெறிப்பட்ட தமிழ்ப் புலவரின் கருத்திற்கு ஒத்ததாய் இருத்தல் வேண்டும்."

2. இது தமிழுக்கும் பிற மொழிகட்கும் இடைப்பட்ட மொழியியல் உறவை எடுத்துக்காட்டி மேலையறிஞரின் சிறந்த கருத்தை நிறைவேற்றுவதாய் இருத்தல் வேண்டும்.

3. "இது, உலக வழக்கிலும், இலக்கிய வழக்கிலும் வழங்கும் சொற்களை ஆங்கிலச் சொற்களையும் மரபையும் கொண்டு தெளிவாக விளக்கி, தமிழ் மக்களுள் பெரும் பாலார்க்கும், ஆங்கிலம் அறிந்தோர்க்கும் பயன்படுமாறு, துல்லியமும் நிறைவும் இக்காலத்திற்கு ஏற்றதுமான அகராதியாய் இருத்தல் வேண்டும்" என்பன.

சொல் வழுக்கள் என்னும் பகுதியில் 'சொல்லின்மை' என்பதைப் பெருங்குறையாகக் கூறி 1. தனிச் சொல், கூட்டுச்சொல், மரபிணைச்சொல், இணைமொழி ஆகியவை இன்மை. 2. சொல்லின் மறுவடிவின்மை, 3. சொல்லின் இலக்கண வடிவின்மை. 4. கூட்டுச்சொல்லின் உறுப்பைத் தனியாகக் கூறாமை 5. மிகைபடுசொற்கள், 6. விளக்க மேற்கோளில் வரும் சொல்லைக்குறியாமை. 7. சொல்லின் கொச்சை வடிவைச் சொல் வரிசையில் சேர்த்தல், 8. சொல்லின் வழுவடிவைக் குறித்தல், 9. குறிக்கவேண்டாத சொல்லைக் குறித்தல், 10. தமிழுக்கு வேண்டாத வேற்றுச் சொல்லைக் குறித்தல், 11. இனச்சொல் இன்மை, 12. திசைச் சொல் இன்மை, 13. எழுத்துக் கூட்டல் வழு, 14. ஆங்கிலத்தில் எழுத்துப் பெயர்ப்பு முறைத் தவறு என பதினான்கு வகைக் குறைகளையும் நூற்றுக்கணக்கான சொற்களைக் காட்டி நிறுவுகிறார்.

பொருள் வழுக்கள் என இயல் விளக்கம் அல்லது சொற்பொருள் தமிழிற் கூறப்பெறாமை, குன்றக் கூறல், மிகைபடக்கூறல், வழுவக்கூறல், சிலபொருள் கூறப்படாமை, பொருள் வரிசையின்மை, சொற்களின் வேறுபாடு காட்டாமை, எதிர்ச்சொற்களின் வேறுபாடு காட்டாமை, எடுத்துக் காட்டின்மை, கூறியது கூறல் எனப் பதினொரு வகை காட்டுகிறார்.

வேர் வழுக்கள் என்னும் பகுதியில் தென்சொல்லை வடசொல்லாகக் காட்டல், சொல்வேர் காட்டாமை, வழுவேர் காட்டல், ஐயுற்றுக் கூறல், தலைமாற்றிக் கூறல், கூட்டுச்சொல்லை வழுப்படப் பிரித்தல், ஒரு சொல்லைப் பலசொல்லாகக் காட்டல், பல சொல்லை ஒரு சொல்லாகக் காட்டல், தொழிற்பெயரின் திரிபே முதனிலை எனல் என்பவற்றை விளக்குகிறார். இவ்வாறு பிற வழுக்களையும் குறிப்பிடும் பாவாணர், "சென்னைப் பல்கலைக்கழகம், அது வெளியிட்ட அகராதியை உடனே திருத்தாவிடின், தமிழுக்கென்று தனிப்பல்கலைக் கழகமே நிறுவப் பெறுதல் வேண்டும்" என முடிக்கிறார். தமிழுக்கெனத் தனிப்பல்கலைக் கழகம் தோன்றினால் அது நிறைவேறும் என்னும் நம்பிக்கை 1961 இல் ஏற்பட்டுள்ளது.

## 11. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள்

சேலம் கல்லூரியில் பாவாணர் பணி செய்த நாளில் வெளிப்பட்ட நூல் சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் என்பது. ஆண்டு 1949.

"என்னைப் பல்லாற்றானும் ஊக்கி இந்நூல் விரைந்து இயல்வதற்குக் காரணமாயிருந்த சேலம் நகராண்மைக் கல்லூரித்தலைவர் திரு. இராமசாமிக் கவுண்டர், எம்.ஏ., எல்.டி. அவர்களுக்கு யான் என்றுங் கடப்பாடுடையன்" என முகவுரையில் வரைந்துள்ளார். தம் கையொப்பப் பெயரை 'ஞா.தே.' எனச் சுருக்கியுள்ளார்.

கழகத்தின் 484 ஆம் வெளியீடாக வந்தது இந்நூல். ஒரு பக்க அளவில் முகவுரை இருப்பினும் செறிவு மிக்கது. ஒரு மொழிக்கு உட்பட்ட சொற்களை ஆராய்வது சொல் ஆராய்ச்சி. பல மொழிகளை ஒப்பு நோக்கி ஆராய்வது மொழியாராய்ச்சி என வரம்பிட்டுக் காட்டுகிறார். "தொல்காப்பியர் காலத்திலேயே சொல்லாராய்ச்சியும் மொழியாராய்ச்சியும் ஓரளவு தமிழ்நாட்டில் இருந்ததேனும் விரிவான முறையிலும் நெறிப்பட்ட வகையிலும் சொன்னூலும் மொழிநூலும் தாம் பெற்றது மேலையரிடமிருந்தே" என்கிறார்.

சொன்னூலும் அதை அடிப்படையாகக் கொண்ட மொழிநூலும் மாந்த நூல், உளநூல், வரலாற்று நூல் ஆகிய மூன்றற்கும் உறுதுணையாதலின் பண்பட்ட மக்கள் யாவரும் அவற்றைக் கற்றல் வேண்டும் என்று கடமை சுட்டுகிறார்.

எந்நோக்கத்தோடு இந்நூல் வெளிவருகிறது என்பதைத் தெள்ளிதின் விளக்குகிறார் பாவாணர்.

''எல்லா மொழிகளும் இயற்கையாய் எழுந்தவை என்றும் கடவுளைப் போல் தொடக்கமற்றவை என்றும் ஒன்றோடொன்று தொடர்பற்றவை என்றும் சில மொழிகள் தேவ மொழி என்றும் தேவமொழியில் வழிபாட்டை நடத்துவது கடவுளர்க்கு உகந்தது என்றும் தமிழ் வடமொழியினின்று வந்தது அல்லது அதனால் வளம் பெற்றது என்றும் பல பேதைமைக் கருத்துக்கள் பல தமிழர் உள்ளத்தில் வேரூன்றியிருப்பதால் அவற்றைப் பெயர்த்து அவர்களை மொழிநூற் கல்விக்குப் பண்படுத்தும் வண்ணம் இச்சொல்லாராய்ச்சி நூல் வெளிவருகின்றது'' என்கிறார்.

இந்நூலின் அமைதிகள், ஆங்கிலத்தில் திரெஞ்சு கண்காணியார் (Trench) எழுதியுள்ள சொற்படிப்பு (On the study of words) என்னும் கட்டுரைத் தொகுதியின் போக்கைத் தழுவி எழுதப்பெற்றவை என்கிறார்.

சுருங்கிய வகையால் நூல், நூற்பொருள் அதன் தேவை, நூலாக்க வகை, ஆக்கவுதவி என்பவற்றைச் செய்நேர்த்திச் செம்மணி மாலையெனக் கொண்டது சொல்லாராய்ச்சிக் கட்டுரைகளின் முகவுரை.

முகவுரை இவ்வகைத்தெனின் நூல் தகவுரையும் இவ்வகைத்தேயாம். அணியியற் சொற்கள் என்பது தொடங்கிச் சொற்குடும்பமும் குலமும் என்னும் நிறைவுக் கட்டுரை ஈறாக அமைந்த நூற்றிருபது பக்கங்களின் ஒவ்வொரு பக்கமும் இத்தகைத்தேயாம்.

''எல்லாச்சொல்லும் பொருள் குறித்தனவே'' என்பது தொல்காப்பியம். அதன் துலக்கமும் விளக்கமும் அறிய மலைமேல் விளக்காக வாய்த்தவை பாவாணர் நூல்கள். அவற்றுள் ஒன்றே ஒன்றைக் கற்று உண்மை உணர வேண்டும் என்னின் சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் என்னும் இச்சுவடி சாலும். அத்தகைய எளிமையும் விளக்கமும் வெளிப்பாடும் அமைந்த நூல் அது.

செய்யுள்களுக்கு அழகும் பொருள் விளக்கமுமாம் அணி, உரைநடைக்கும் உரியதே என்றும் ஒரு தொடர்க்குரிய அணிநயம் ஒரு சொல்லளவிலும் ஆவதே என்றும் அணியியற் சொற்களில் நாட்டுகிறார்.

வித்தும் வேரும் அடியும் கிளையும் குச்சும் கொழுந்துமாகத் தொடர்ந்தோங்கும் மரம்போல மேன்மேல் தொடர்ந்து செல்லும் குலத்தொடர்ச்சி மரபு என்றும், தொடர்ந்து வரும் பழக்க வழக்கங்களும் சொல் வழக்காறும் மரபு என்றும், தொல்காப்பிய மரபியல் இப்பொருள்பற்றியதே என்றும் மரபு, பொருள்பொதி சொல்லாகிப் பண்டுதொட்டு இன்று வரை இயல் வகையை நிறுவும் மாண்புக்கு ஓர் எடுத்துக்காட்டு என்றும் கூறுகிறார்.

சொல்லிலே வரலாறு அமைந்து கிடத்தலைப் பல சான்றுகளால் நிறுவுகிறார் பாவாணர். அவற்றுள் ஒன்று சம்பளம். கூலம் தந்து வாங்கிய வேலை கூலி; கூலத்தில் சிறந்தது சம்பு ஆகிய சம்பாநெல். சுவையில் உயர்ந்தது அளம் ஆகிய உப்பு. சம்பும் அளமும் வழங்கி வேலை வாங்கிய வழக்கைக் காட்டும் வரலாற்றுச்சொல் சம்பளம் என்பது, நம்மை வியந்து பாராட்ட வைக்கும். அதற்கும் மேல் சாலரி (Salary) என்னும் ஆங்கிலச் சொல்லும் அப்பொருள் காட்டுதலைக் காட்டும்போது வியப்பே ஆகின்றது.

உயிர், மெய், உயிர்மெய் முதலிய இலக்கணக் குறியீடுகளைக் காட்டி மெய்ப்பொருட் சொற்கள் எனப் பெயர் சூட்டுச் செய்கிறார்.

ஒரு பொருட் பல சொற்களுக்கு அறுபது எடுத்துக்காட்டுகள் காட்டுகிறார். நுண் சிறு பொருள் வேறுபாடுகளை எளிதில் விளக்கிச் செல்கிறார்.

ஓர் எடுத்துக்காட்டைக் காணலாம்.

கண்ணி = இருவிரு பூவாக இடைவிட்டுத் தொடுத்த மாலை

தார் = கட்டியமாலை

தொங்கல் = தொங்கவிட்டுக் கட்டியமாலை

கதம்பம் அல்லது கத்திகை = பலவகைப் பூக்களால் தொடுத்த மாலை

படலை = பச்சிலையோடு மலர் விரவித் தொடுத்த மாலை

தெரியல் = தெரிந்தெடுத்த மலராலாய மாலை

அலங்கல் = சரிகை முதலியவற்றால் விளங்கும் மாலை

தொடலை = தொடுத்த மாலை

பிணையல் = பின்னிய மாலை

கோவை = கோத்த மாலை

கோதை = கொண்டை மாலை

சிகழிகை = தலை அல்லது உச்சிமாலை

சூட்டு = நெற்றிமாலை

ஆரம் = முத்துமாலை

தமிழ்ச்சொல் வளம் என்பது ஐந்தாம் கட்டுரை. வித்துவகை முதலாக காட்டுவகை ஈறாக 38 வகைகளைக்

காட்டுகிறார். அதன்மேல் பலபொருள் ஒரு சொற்கள், வழக்கற்ற சொற்கள், பொருள் திரிசொற்கள், ஒழுக்கவியற் சொற்கள் சொற் குடும்பமும் குலமும் எனத் தனித்தனி நூலாக விரிவனவற்றைக் கட்டுரையாய் வடிக்கிறார்.

"வழக்கற்ற சொற்களையெல்லாம் ஒரு தனிச்சுவடியாக வெளியிட இந்நூலாசிரியன் கருதுதலின் ஈண்டு மிக வேண்டிய சொற்களே காட்டப்பெறும்" என்பதால் இது புலப்படும்.

"இது காறுங் கூறியவற்றால், தமிழ் சொல்வளமுடையது என்றும், தமிழர் மதிவளமுடையவர் என்றும், தமிழ்நாடு பொருள்வளம் உடையது என்றும் தெள்ளிதின் விளங்கும்" என்று தமிழ்ச் சொல் வளத்தில் எழுதுவது நூல் வளத்தையெல்லாம் திரட்டி வைத்த முடிவினதாகும். (73)

## 12. தமிழ் இலக்கிய வரலாறு

நேசமணி பதிப்பக வெளியீடாக 1979 இல் வெளிவந்த இந்நூல், "என் தந்தையார் ஓர் அரசினர் அலுவலராயிருப்பதால் இதைத் தாமாக வெளியிட இயலவில்லை. ஆதலால் நான் இதை வெளியிடுகிறேன்" என்று பாவாணர் இளைய மகன் தே.மணியால் இந்நூல் பதிப்பிக்கப்பட்டது.

இதற்கு முழுவதாகப் பொருளுதவி புரிந்தவர் சிங்கபுரித் தமிழரும், சீரிய தனித்தமிழ் அன்பரும் ஆகிய கோவலங்கண்ணனார்.

பாவாணர் தம் ஆழிய நன்றியால் நன்றியுரை அன்றிக் கோவலங்கண்ணனார் மேல் 'பாடாண் பதிகம்' ஒன்றும் பாடி முற்படி இணைத்துள்ளார்.

நன்றியுரை அகவலில், மொழிநூல் மாணவன் முதுதேவ நேயன் எனத் தம்மைச் சுட்டுதல், எண்பான் அகவைகாறும் மெய்ப்பிக்கப்பட்ட வாழ்வு மெய்ம்மமாம்.

மற்றை எந்நூலிலும் இடம் பெறாவகையில் 'தமிழாரியப் போராட்டப் பட்டிமன்ற நடுவர் பெயர்ப்பட்டி' ஒன்று நூல் முகப்பில் இணைக்கப்பட்டுள்ளது.

முன்னுரை 64 பக்கங்களில் இயல்கின்றது. மறைந்த குமரிக்கண்டம், குமரிக்கண்டமே மாந்தன் பிறந்தகம், குமரிநாடே தமிழன் பிறந்தகம், குமரிக்கண்டப் பரப்பு, குமரிக்கண்டத் தமிழ், குமரிநாட்டுத் தமிழர், குமரிநாட்டு நாகரிகம், குமரிநாட்டு இலக்கியம், தமிழர் பரவல், ஆரியர் திரும்பல் எனப் பதின் தலைப்புகளில் முன்னுரை ஆய்வை நிகழ்த்தி நூலுள் புகுகிறார்.

நூல், பின்னிணைப்பொடு 327 பக்கங்களில் செல்கின்றது. அந்நாள்அதன் விலை உருபா பன்னிரண்டு. பாவாணர் மகனார் மணியின் தென்குமரி அச்சகத்தில் பதிக்கப்பட்ட நூல் இது.

நூல், தலைக்காலம், இடைக்காலம், இக்காலம், எதிர்காலம் என நாற்கால வைப்பில் பின் இணைப்பு என்னும் சேர்ப்பொடு ஐம்பகுதிகளாய் அமைந்துள்ளது.

பாவாணர் 'இலக்கிய வரலாறு எழுதத் தக்கார் எவர்' என வரைந்துள்ளது, அவர் வரைந்த இலக்கிய வரலாற்று அடிப்படையை வெளிப்படுத்தும். அது,

"தமிழ் வேர்ச்சொல் ஆராய்ச்சியும் பிராமணீயத்தையும் இந்தித் திணிப்பையும் எதிர்க்கும் நெஞ்சுரமும் உள்ளவரேயன்றி அவை இல்லாது தமிழைக் காட்டிக்கொடுக்கும் வையாபுரிகள், எத்துணை இலக்கியம் கற்றும், பண்டாரகர்ப் பட்டம் பெற்றும் பல்கலைக்கழகத் துணை வேந்தர் ஆகியும் தமிழ் வரலாறும், தமிழ் இலக்கிய வரலாறும் எழுத எட்டுணையும் தகுதியுள்ளவர் ஆகார் என்பது திண்ணம்" என்பது.

குமரிநாடே பழம் பாண்டி நாடு, பழம் பாண்டி நாடே செந்தமிழ் நாடு, முக்கழக வுண்மை, தலைக்கழகம், இடைக்கழகம் என ஐம்பகுப்பில் தலைக்காலத்தை வரைந்து "முதலிரு கழகமும் முற்றும் ஆரியத் தொடர்பு அற்றன என்று அறியல் வேண்டும்" என முடிக்கிறார்.

ஆரியர் குடியமர்வுக் காலம், இடைக்கால இலக்கியம், மூவேந்தர் குடியும் செய்த இனமொழிக்கேடு, சமற்கிருத இலக்கிய வளர்ச்சியும், தமிழிலக்கியத் தளர்ச்சியும், ஆரியத்தால் ஏற்பட்ட இலக்கண இலக்கிய மாற்றமும் கேடும், இறந்துபட்ட தமிழ்நூல்கள், ஆங்கிலச் சார்புக்காலம் என ஏழு பகுப்பில் இடைக்காலத்தை நிறைவு செய்கிறார்.

இடைக்கால இலக்கியங்களை மதவிலக்கியம், பொதுவிலக்கியம் என வகுக்கிறார். மதவிலக்கியங்களை சிவனிய இலக்கியம், மாலிய இலக்கியம், கடவுள் மத இலக்கியம், இரண்டன்மை அல்லது ஓராதன்மை இலக்கியம், சமண இலக்கியம், புத்த இலக்கியம், கிறித்தவ இலக்கியம், இசுலாமிய இலக்கியம், நம்பா மத இலக்கியம் என ஒன்பான் பகுப்புகளில் ஆய்ந்தெழுதுகிறார். இவற்றுள் கடவுள் மதம், ஓராதன்மை மதம், நம்பா மதம் என்னும் அமைப்புகள் பாவாணக் கொடையாகும்.

"காலம், இடம், பெயர், தோற்றம், தோற்றரவு, இயல் வரையறை முதலிய வரம்பீடின்றி ஒன்றாய்,

நிற்றமாய்த் திரிபின்றி எங்கும் நிறைந்திருக்கும் கருத்துப்பொருளாய் இயல்பாகவே எல்லா அறிவும் எல்லா வல்லமையும் கொண்டு மனம் மொழி மெய்யாகிய முக்கரணமும் கடந்து நிற்கும் முழுமுதல் இறைவனான, அறவாழி அந்தணனே கடவுள்; அம்மதத்தினர் பெற்றியர் என்னும் சித்தர்'' என்கிறார் பாவாணர்.

''அணிமா முதலாக எண்சித்திகளை வகுத்துக் கூறிய மட்டில் அவர் பெற்றியர் ஆகார். பிறப்பில் ஏற்றத்தாழ்வு வகுத்துப் பிறரை இகழ்வோர், உள்ளத் தூய்மையும் இல்லார்; உலகத் துறவும் கொள்ளார்; ஒருவகைப் பெற்றியும் ஒல்லார்'' என்று மெய்ப்பெற்றியர் இலக்கணம் வகுக்கிறார் (94–95).

இரண்டன்மை அல்லது ஓராதன் கொள்கையை, இருபொருளுக்கு இடைப்பட்ட உறவு ஒருமை, இருமை, சிறப்பொருமை என மூவகையாகத்தான் இருக்க முடியும். கதிரவனும், வெயிலும் போன்றது ஒருமை, கதிரவனும் கலங்கரை விளக்கமும் போன்றது இருமை, கதிரொளியும் நிலவொளியும் போன்றது சிறப்பொருமை.

இறைவனுக்கும் ஆதனுக்கும் (ஆன்மாவிற்கும்) இடைப்பட்ட உறவு சிறப்பொருமையாகத்தான் இருக்க முடியும். 'அதுவே இயற்கைக்கும் உத்திக்கும் ஒத்தது' என்று கூறும் பாவாணர் ஒவ்வாத் தன்மையையும் விளக்குகிறார்.

''இறைவனும் ஆதனும் ஒரே பொருளாயின் ஆதன் இறைவனால் இன்பம் நுகர இடமில்லை. மேலும் அமலனாகிய இறைவனும் மலனாகிய ஆதனும் ஒளியும் இருளும் போல வேறுபட்டிருப்பதால் ஒரே பொருளாய் இருத்தல் இயலாது. இறைவனும் ஆதனும் முற்றுந் தொடர்பற்ற இருவேறு பொருளாயின் இறைவனின் எங்கும் நிறைந்த தன்மைக்கும் எல்லாம் வன்மைக்கும் இழுக்காகும். ஆதலால், இருநிலைமைக்கும் இடைப்பட்டு ஒட்டியும் ஒட்டாமலும் இருக்கும் சிறப்பொருமையே இறை–ஆதன் உறவாம். இது இயற்கைக்கும் உத்திக்கும் முற்றும் ஒத்திருப்பதால் இதுவே தொன்று தொட்டுத் தமிழர் கொள்கையாயிற்று. இதிற் கருத்து வேறுபாடின்மையால் இதுபற்றிய ஆராய்ச்சியும் என்றேனும் எழுந்ததில்லை என உறுதி செய்கிறார்.(114)

''புத்தமதம் கடவுள் கொள்கை இன்மையால் நம்பா மதத்தின் பாற்படும்'' என்கிறார் (131)

பொது இலக்கியப் பகுதியில் பாட்டு, தொகை, கீழ்க்கணக்கு ஆகிய 36 நூல்களைப் பற்றியும் பன்னிரு பக்கங்களே வரைந்துள்ளார் பாவாணர் (150 – 162) நிகண்டு என்னும் நூல் வகையை 'உரிச்சொல் சுவடி' என்கிறார் (163).

''தொல்காப்பியர் ஆரிய இனத்தார்'' என்கிறார்.

புறத்திரட்டு, பாவாணர் பார்வைக்குக் கிட்டவில்லை போலும்; அதனால் அது இன்றில்லை என்கிறார். பல நூல்களுக்கு ஆசிரியர் பெயர் சுட்டிய அளவில் அமைகிறார்.

ஆரியப்பூசாரியரை முற்றிலும் நம்பி மூவேந்தரும் அடிமைப்பட்டுப் போனதை விரிவாக வரைந்துள்ளார். (175–223)

இக்காலம் மூன்றாம் பகுதியில் செய்யுள் உரைநடை இலக்கியம், ஆங்கிலராட்சியால் விளைந்த நன்மைகள், அல் பிராமணர் கட்சி, தமிழாரியப் போராட்டம், தனித்தமிழ் இயக்கம், பேராயக் கட்சியால் விளைந்த தீங்கு, பெரியார் தன்மான இயக்கம், தமிழர் ஆட்சித் தொடக்கம், இற்றைத் தமிழர் நிலைமை, தமிழுக்கு ஆகாத நூல்கள் என்பவற்றை விளக்குகிறார். (225–286).

எதிர்காலம் என்னும் நிறைவுப்பகுதியில் தமிழின் தலைமை, தமிழ் விடுதலையே தமிழின விடுதலை, தமிழரும் பிராமணரும் ஒத்து வாழ்தல், தமிழர் ஒற்றுமை, வரிசையறிதல், இந்து மதத்திலிருந்து தமிழ் மதத்தைப் பிரித்தல், வண்ணனை மொழிநூல் விலக்கு, இந்தி எதிர்ப்பு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி எனப் பதின் பிரிவுகளில் வரைகின்றார்.

பின்னிணைப்பை ஐந்தாம் பகுதியாக்கிப் புரட்சி இலக்கியப் பாகுபாடு, மொழி பற்றிய சில வுண்மைகள், தமிழ் எழுத்து மாற்றம், பகுத்தறிவு விளக்கம், தமிழ் திராவிட வேறுபாடு, உலகத் தமிழ் மாநாடுகள் என்பவற்றை உரைக்கின்றார்.

எழுத்து மாற்றத்தால் தமிழன் முன்னேற முடியாது. ''ஈகார வடிவை இகரத்தின் மேல் சுழித்தல், ஔகார வடிவின் உறுப்பான 'ள' என்னும் குறியைச் சிறிதாக எழுதுதல் என்னும் இரண்டே தமிழுக்கு வேண்டும். கூ என்பதற்குக் குகரத்தின் மேற் சுழிக்கலாம்'' என்று விலக்கு அளிக்கிறார்.

பகுத்தறிவின் பயன் குலப்பட்டங்களை விடுத்துப் பகுத்தறிவு ஒழுக்கம் பூண்டு பிறர்க்கு வழிகாட்டல் என்கிறார்.

பிற இலக்கிய வரலாறுகளில் காண இயலா விரிவில் குமரிக்கண்ட ஆய்வு கொண்டது இலக்கிய வரலாறே!

## 13. தமிழ் கடன் கொண்டு தழைக்குமா?

இச் சிறுசுவடி முடிக்கலம் (கிரௌன்) அளவில் 21 பக்க அமைவில் முதல் உ.த.க. மாநாட்டில் 1969 வெளியிடப்பட்டது. ஆனால் அது, தென்மொழி மாதிகையில் (1959) வெளிவந்த ஒரு கட்டுரையேயாகும்.

உ.த.க. உயிர்க்கொள்கை தமிழ் என்பதால் தொண்டர்கள் கைக்கொள்ளும் காப்பு நூலாக மாநாட்டில் 35 காசு விலையில் வெளியிடப்பட்டது. மாநாடு நிகழ்விடம் பறம்புக்குடி.

"பாவாணர் இந்த நூலில் கடன்கோடல் தன்மைகளையும் சொற்கடன் கொள்வது தமிழைப் பொறுத்தவரையில் எவ்வளவு பெரிய கேட்டினை விளைவிக்கும் என்பதையும் மிகப் பல எடுத்துக்காட்டுகளால் நிறுவியுள்ளார்" என்று முகவை மாவட்ட அமைப்பாளர் மு. தமிழ்க்குடிமகனார் தம் முன்னுரையில் குறிப்பிடல் நூற்சுருக்கமாம்.

"தமிழில் புகுந்த அல்லது புகுத்தப்பட்ட அயற் சொற்களெல்லாம் அதன் வளத்தைக் குறைத்து அதன் தூய்மையை குலைப்பதற்குக் காரணமாய் இருந்தவையே"

"தமிழ்ப் பகைவரால் தமிழைக் கெடுத்தற் கென்றே புகுத்தப்பட்டவையாம். இது ஒரு பேதையின் செல்வத்தைக் கவர்வதற்கு ஒரு சூதன் அவனுக்கு வலியக் கடன் கொடுத்து வட்டிமேல் வட்டிக் கணக்கு எழுதியதொத்ததே" இவை ஆழமான செய்திகள்.

சன்னல் என்பது போர்த்துகீசியச் சொல், இதன் வரவால் பலகணி, சாளரம், காலதர், காற்றுவாரி என்னும் நாற்பழந்தமிழ்ச் சொற்கள் வழக்கில் இருந்து ஒழிந்தன அல்லவா?

அடுக்களை, அட்டில், ஆக்குப்புரை, சமையலறை, மடைப்பள்ளி முதலிய சொற்கள் எப்படி வழக்கு வீழ்ந்தன? குசினி என்னும் பிரெஞ்சுச் சொல்லும், கிச்சன் என்னும் ஆங்கிலச் சொல்லும் புகுந்ததால் தானே?

"முன்னோர் ஈட்டிய செல்வத்தைப் பெருக்குதற்குப் பின்னோரும் ஈட்டுவது போல், முன்னோர் ஆக்கிய மொழியை வளப்படுத்துவதற்குப் பின்னோரும் புதுச்சொற்களை ஆக்குதல் வேண்டும். இங்ஙனம் செய்யாது பிறமொழிச் சொற்களையே வேண்டாது கடன் கொள்பவர், தாமும் தேடாது முன்னோர் தேட்டையும் கடனால் இழக்கும் முழுச் சோம்பேறியே யாவர்" என்கிறார் பாவாணர்.

பொதுச் சொற்களே அல்லாமல் ஊர்ப்பெயர் தெய்வப் பெயர் முதலியவற்றுக்கும் வடசொற்கள் புகுத்தப்பட்டதையும் எளிய சொற்களும் பெரு வழக்குச் சொற்களும் இருப்பவும் கடிய சொற்களும், வழங்கற்கரிய சொற்களும் புகுத்தப்பட்டதையும் எடுத்துக் காட்டுடன் விளக்குகிறார்.

உருதுச்சொல், ஆங்கிலச்சொல் கலப்பின் கேட்டையும் சான்று காட்டி நிறுவுகிறார். இச்சிறு சுவடியில் ஏறத்தாழ 300 வேற்றுச் சொற்களை எடுத்துக்காட்டி அவற்றுக்கேற்ற தமிழ்ச் சொற்கள்ளயும் சுட்டுகிறார். வேற்றுச் சொற்களின் வேண்டாத் தன்மையைப் புரிந்துகொள்ள வைக்கிறார்.

'புதுச்சொற் புனைந்து நேர்த் தென்சொல் அமைக்க இயலாத ஒரு சில அயற்சொற்களை அங்ஙனமே ஆளலாம். ஆயின் அவற்றை அயன்மொழி ஒலிப்படி வழங்காது தமிழ் ஒலிக்கேற்பத் திரித்தே வழங்குதல் வேண்டும். அல்லாக்கால் வேற்றொலி விரவித் தமிழ்த் தன்மை கெட்டுவிடும்' என மொழிக் காவல் கடனைக் குறிப்பிடுகிறார்.

உயர்ந்த புலவர் வழக்கு நோக்கியே ஒரு மொழியின் இயல்பை அறிதல் வேண்டும். "மொழி திருந்தாதார் வழங்கும் கார் பஸ் முதலிய சொற்களைத் தமிழ்ச் சொல்லாக ஏற்றுக் கொள்வது, கீழ் மக்களின் ஐம்பெருங்குற்றங்களை நல்லொழுக்கமாக ஒப்புக் கொள்வது போன்றதே" என்கிறார்.

இக்கட்டுரையின் தொகுப்பாக நிறைவுரை வரைந்துள்ளதும் நோக்கத்தக்கது.

"பிறரிடம் கடன் கொள்ள வேண்டாத இராக்பெல்லர் நப்பீல்டு, பிர்லா முதலிய பெருஞ் செல்வர்கள் போல், தமிழும் பிற மொழிகளினின்று சொல்லைக் கடன் கொள்ளாதென்றும் அயற் சொற்களையெல்லாம் இயன்ற வரை மொழி பெயர்த்தல் வேண்டும் என்றும், மொழி பெயர்க்க முடியாதவற்றிற்குப் புதுச்சொற்களைப் புனைந்து கோடல் வேண்டும் என்றும், அதுவும் இயலாத ஒரு சில இன்றியமையாத சொற்களைத் தமிழ் எழுத்திற்கேற்பத் திரித்து வழங்குதல் வேண்டும் என்றும், பிற மொழிகளிலுள்ள அரிய நூல்களை மொழிபெயர்ப்பதே தமிழை வளப் படுத்தத் தலைசிறந்த வழி என்றும், பிறமொழிச் சொற்களைக் கட்டுமட்டு இன்றித் தமிழில் கலப்பது அதன் கேட்டிற்கே வழி கோலுவதாகும் என்றும், இதுவரை தமிழிற் புகுத்தப் பட்டுள்ள எல்லாச் சொற்களும் தமிழதிகாரிகளால் ஒப்புக்

கொள்ளப்பட்டன அல்ல என்றும், அவற்றை இயன்றவரை விலக்கித் தமிழின் தூய்மையைக் காப்பது தமிழறிஞர்களின் தலையாய கடன் என்றும், நேர் நின்று காக்கை வெளிதென்பாரும் தாய்க்கொலை சால்புடைத்து என்பாரும் தமிழையொழிக்கத் தயங்காதார் ஆதலினால் அவர் தமிழுக்கு மாறாகக் கூறும் கூற்றையெல்லாம் கூற்றென்றே கொள்ளுதல் வேண்டும் என்றும், தெற்றெனத் தெரிந்து கொள்க" எனமுடிக்கிறார். 'இனிய தமிழ்க்காவல் நூல்' இது.

## 14. தமிழ்நாட்டு விளையாட்டுகள்

ஒரு நாட்டின் பண்பாடு, நாகரிகம், கலைத்திறம் என்பனவும் விளையாட்டால் புலப்படும். நம் மண்ணின் வளம் விளையாட்டுகளாலும் புலப்படும் என்பதால் அதனைக் காக்கக் கருதிய பாவாணர் 'தமிழ்நாட்டு விளையாட்டுகள்' என எழுதினார். செந்தமிழ்ச் செல்வியில் கட்டுரைகளாக வந்து 1962 ல் கழக வெளியீடாக நூலாக்கம் பெற்றது.

நூலின் பக்கங்கள் 144, ஆண்பாற்பகுதி, பெண்பாற்பகுதி, இருபாற்பகுதி என முப்பகுதிகளைக் கொண்டது நூல். பகலாட்டு, இரவாட்டு, இருபொழுதாட்டு என்பவற்றுடன் வழக்கற்ற விளையாட்டுகள், பள்ளிக்கூட விளையாட்டுக்கள், பண்டை விளையாட்டு விழாக்கள் என்னும் பின்னிணைப்பையும் கொண்டது.

விளையாட்டாவது, விரும்பியாடும் ஆட்டு. விளை = விருப்பு, ஆட்டு = ஆட்டம்.

விரும்பப்படுதல், செயற்கெளிமை, இன்பந்தரல் ஆகிய மூன்றும் விளையாட்டின் இயல்பாகும்.

விளையாட்டால் ஒருவர்க்கு உடலுரம், உள்ளக் கிளர்ச்சி, மறப்பண்பு, மதிவன்மை, கூட்டுறவுத் திறம், வாழ்நாள் நீட்டிப்பு முதலியன உண்டாகின்றன. இக்காலத்தில் சிலர்க்குக் 'கரும்பு தின்னக் கூலிபோல் விளையாட்டினால் பிழைப்பு வழியும் ஏற்படுகின்றது. இவை– பாவாணர் முகவுரையில் சில குறிப்புகள்.

இளைஞர் பக்கம் என்பது 5 அகவை முதல் 25 அகவை வரையுள்ளோர் ஆடும் ஆட்டம் என வரையறை செய்கிறார். அதில் பகலாட்டு எனக் கோலி, தெல், சில்லாங்குச்சு, பந்து, மரக்குரங்கு, 'காயா, பழமா'? பஞ்சு வெட்டுங் கம்படோ, குச்சு விளையாட்டு, பம்பரம், பட்டம் எனப் பத்தையும், இரவாட்டு எனக் குதிரைக்குக் காணங்காட்டல், வண்ணான் தாழி, சூ விளையாட்டு என மூன்றையும், இருபொழுதாட்டு எனக் கிளித்தட்டு, பாரிக்கோடு, அணிற்பிள்ளை, சடுகுடு, கால் தூக்குகிற கணக்கப்பிள்ளை, பூக்குதிரை, பச்சைக் குதிரை, குதிரைச் சில்லி என எட்டையும் எழுதுகிறார். இவை ஆண்பாற் பகுதி.

பெண்பாற்பகுதியில் பகலாட்டு, தட்டாங்கல், கிச்சுக் கிச்சுத் தாம்பலம், குறிஞ்சி (குஞ்சி) என்னும் மூன்றும் இரவாட்டு, பாக்கு வெட்டியைக் காணோமே, நிலாக்குப்பல், பன்னீர்க் குளத்தில் மூழ்குதல் என்னும் மூன்றும் இருபொழுதாட்டு, ஒரு குடம் தண்ணீர் ஊற்றி, என் உலக்கை குத்துக் குத்து , ஊதாமணி, பூப்பறித்து வருகிறோம், தண்ணீர் சேந்துகிறது என்னும் ஐந்தும் காட்டுகிறார்.

இருபாற்பகுதியில் பகலாட்டு, பண்ணாங்குழி, பாண்டி கம்ப விளையாட்டு, கச்சக் காய்ச்சில்லி, குஞ்சு என்பனவும், இரவாட்டு, கண்ணாம்பொத்தி, புகையிலைக் கட்டையுருட்டல், புகையிலைக் கட்டை எடுத்தல், பூச்சி, அரசனும் தோட்டமும், குலைகுலையாய் முந்திரிக்காய் என்பனவும் – இரு பொழுதாட்டு – நொண்டி, நின்றால் பிடித்துக்கொள், பருப்புச் சட்டி, மோதிரம் வைத்தல், புலியும் ஆடும், இதென்ன மூட்டை, கும்மி என்பனவும் கூறப்படுகின்றன.

இவ்வாறே குழந்தைப்பக்கம், பெரியயோர்ப் பக்கம் என்பனவும் சொல்லப்படுகின்றன.

விளையாட்டே எனினும் பருவம், நேரம், இடம் என்பன கொண்டு வகுத்துக் காட்டும் முறை சிறக்க அமைந்துள்ளது. ஒவ்வோராட்டமும் இன்ன நாட்டு அல்லது வட்டாரத்து முறை என்றும் ஒரே ஆட்டம் பல்வேறு வகையாய் ஆடப்படின் அவை ஆடும் வகையும் வட்டாரமும் இவை என்றும் சுட்டப்படுகின்றன.

ஆட்டத்தில் தாமே புகுந்து விளையாடும் ஆட்டக்காரராகத் தம்மைக் கண்டே இதனை எழுதினார் என்பது ஆடல் முறையைச் சொல்லும் வகையால் தெரிகின்றது.

ஆட்டின் பெயர், ஆடுவார் தொகை, ஆடுகருவி, ஆடிடம், ஆடுமுறை, ஆட்டுத் தோற்றம் என்னும் இவ்வுட்பகுப்பே பாவாணர் இவ்விளையாட்டுகளில் எவ்வாறு ஊன்றுதலுடன் எழுதினார் என்பதை விளக்கும்.

நூலின் முன்னுரையில் கட்சி பிரித்தல், தொடங்கும் கட்சியைத் துணிதல், இடை நிறுத்தல், தோல்வித் தண்டனை, ஆடைதொடல் கணக்கன்மை,

தவற்றால் ஆடகர் மாறல், வென்றவர்க்கு மறு ஆட்ட வசதி, இடத்திற்கு ஏற்ப வேறுபடல், ஆட்டைத் தொகை வரம்பின்மை, நடுநிலை என்னும் பதின்வகை விளக்கங்களை எழுதுதல், ஆடுமுறை பற்றிய ஐயம் அகற்றும் அருமையதாம்.

பாண்டி நாட்டுச் சில்லாங்குச்சும், சோழநாட்டுக் கில்லித்தண்டும், கிட்டிப்புள் என்பதொன்றும் மூன்றும் ஒன்றாதலையும் மட்டைப்பந்து (கிரிகெட்டு) ஆட்டத்தொடு உவமை காட்டுதலையும் படிக்கும்போது பாவாணர் இளந்தைப் பருவத்தில் இவற்றில் ஈடுபட்டிருக்கக் கூடும், என்பதே புலப்படுகின்றது. ஏனெனில் அவ்வரலாறு அவரால் கூறப்பட்டிலது. எழுதப்படவும் இல்லை.

'ஒருவன் ஆடினால் பட்டம், அது பொழுது போக்கு, இருவர் ஆடினால் அது விளையாட்டு' என வேறுபாடு காட்டுகிறார்.

'இடுக்கண் வருங்கால் நகுக' என்னும் குறளும் (14) "நாடு கண்டன்ன கணைதுஞ்சு விலங்கல்" என்னும் பதிற்றுப் பத்தும், "கிளிமரீஇய வியன்புனம்" என்னும் புறப்பாட்டும் (50) "நாயும் பலகையும்" என்னும் 'தொல்காப்பிய நூற்பாவும்' (136) இவ்விளையாட்டு நூலில் மேற்கோளாதல் பாவாணர் எழுதியதால் அமைந்த பேறாம்.

அறியப்படாதவை என்னும் வகையில் சாழல், தெள்ளேணம் என்பவற்றைச் சுட்டும் பாவாணர், அச்சுப்பூட்டி ஆடுதல் என இராட்டிலர் அகராதி குறித்தலையும் கூறுகிறார். இவற்றிற்கு விளக்கம் இல்லை.

இந்நூல் மூலம், தமிழ் என்பது ஆடல், பாடல், பண்பாடு ஆகிய எல்லாமும் தழுவிய பொருளது என்பதை அறியச் செய்கிறார் பாவாணர்.

## 15. தமிழ் வரலாறு

1967 இல் தமிழ் வரலாறு வெளிவந்தது. பாவாணர் காட்டுப்பாடியில் உறைந்த காலம், திருச்சி மாவட்டப் பாவாணர் நூல் வெளியீட்டுக் குழுவினர் உதவி கொண்டு வெளியிடப்பட்டது. தாம் இயற்றிய தமிழ் வரலாற்றின் தன்மையை முகவுரையில் பாவாணர் குறிப்பிடுகிறார்.

"தமிழ் வரலாறு என்னும் பெயரில் இதுவரை வெளிவந்தவையெல்லாம் பெரும்பாலும் தமிழிலக்கிய வரலாறும் மொழி பற்றிய பொதுவான செய்திகளை எடுத்துக் கூறுவனவுமாகவே உள்ளன. வரலாற்றையும் மொழிநூலையும் தழுவி முதன்முதலாக வெளிவரும் தமிழ்மொழி வரலாறு இதுவே" என்பது அது.

தமிழ் ஆர்வலர் இந்நூலைக் கற்றுச் செந்தமிழின் உயர் தனிச் செம்மையையும், குமரிக் கண்டத் தமிழரின் கூர்மதியையும் உணர்ந்து தம்மை உயர்த்துவதுடன் தமிழையும் உயர்த்த வேண்டுகிறார்.

விரிவான முன்னுரையுடைய நூல் இயனிலைப்படலம், திரிநிலைப்படலம், சிதைநிலைப்படலம், மறைநிலைப்படலம், கிளர்நிலைப்படலம், பெருநிலைப் படலம் என அறுபடலங்களைக் கொண்டுள்ளது.

தமிழ், குமரிக் கண்டத்தே தோன்றியது என்பதைப் பத்தொன்பது காரணம் காட்டி நிறுவும் பாவாணர் இன்னும் விளக்கமாக அறிய விரும்புவார் இவ்விந்நூல்களைக் கற்க எனவும் ஆங்கில நூல்கள் சிலவற்றைச் சுட்டிகாட்டுகிறார்.

தனிச் சொல்லாகவே மொழி தோற்றம் உற்றது என்றும், மாந்தன் அமைப்பே மொழியென்றும் தமிழ்த்தோற்றப் பகுதியில் குறிக்கிறார். (69) மொழி இன்றியும் கருத்து நிகழும் என்பதைத் தெரிவிக்கிறார்.

முன்மைச் சுட்டினின்றே தோன்றல், முன்மை, முற்செலவு, நெருங்கல், பொருந்தல், வரைதல், துளைத்தல், துருவல் ஆகிய எண்பெருங் கருத்துகளும் இவற்றுக்கு இடைப்பட்டனவும் இவற்றில் கிளைத்தனவுமாகிய எத்தனையோ நூற்றாண்டுகள் பிறக்கின்றன என்பதைக் கூறி, அதனை நிறுவுவதே விரிவாக வளர்கின்றது. திரிநிலை, சிதைநிலைகளை விளக்கிய பாவாணர், மறைநிலையைத் தமிழ் மறைப்பு, தமிழ்நாடு மறைப்பு, தமிழின மறைப்பு, தமிழ் நாகரிக மறைப்பு, தமிழ்க்கலை மறைப்பு, தமிழ்முதநூல் மறைப்பு, தமிழ்த்தெய்வ மறைப்பு, தமிழர் சமய மறைப்பு, தமிழ்த்தேவார மறைப்பு, பொருளிலக்கண மறைப்பு, தமிழ்ச்சொல் மறைப்பு, தமிழ்ச் சொற்பொருள் மறைப்பு, தமிழ் எழுத்து மறைப்பு, முக்கழக மறைப்பு, தமிழ் வரலாற்று மறைப்பு என்று பதினாறு வகை மறைப்புகளைக் கூறி விளக்குகிறார்.

திருவள்ளுவர் தொட்டுக் கிளர்நிலை தொடங்கியதைத் தக்க வகையில் உரைத்து, வருநிலைப்படலத்தில் உள்நாட்டில் அரசும் மக்களும் செய்ய வேண்டியவை இவை எனவும், வெளிநாட்டில் செய்ய வேண்டியன இவை எனவும் நாற்பத்து நான்கு கருத்துகளை வைத்து நிறைவு செய்கிறார்.

சொல்லாக்க நெறிமுறைகளை அமைத்துக் கொள்ள வழிகாட்டும் நூல்களுள் ஒன்று தம் தமிழ்

வரலாறு என்பது பாவாணர் உரை. அம்முறையைக் கொண்டே புதுச்சொல் படைத்துக் கொள்ள முடியும் என்பதை வெளிப்படுத்தியுள்ளார். ஊகாரச்சுட்டு, தோன்றுதல், முன்மை, முற்செலவு, முன் தள்ளல், நெருங்குதல், செறிதல், கூடுதல், பொருந்துதல், ஒத்தல், வளைதல், துளைத்தல், துருவுதல் ஆகிய இயல்புகளால் சொல்லாக்கம் பெறுதலை நூற்றுக் கணக்கான சொற்களை எடுத்துக் காட்டி நிறுவுதல், காட்டிக் காட்டிக் கற்பித்தல் போல்வதாம்.

## 16. தமிழர் சரித்திரச் சுருக்கம்

'தமிழக இளைஞர் மன்றம், திருச்சிராப்பள்ளி' பதிப்புரிமை கொண்டு அடக்கவிலை அணா ஒன்று என 1941 இல் வெளியிட்டுள்ளது.

"பண்டித புலவ வித்துவ ஞா. தேவநேசன் இயற்றியது" என முகப்பட்டையில் நூலாசிரியர் பெயர். நூல் 16 பக்கங்களையுடையது.

சைவப்புலவர் கு.சுப்பிரமணியம் தலைவர், தமிழக இளைஞர் மன்றம், 33 மல்லி சாகிப் தெரு, திரிசிரபுரம் 20–12–41 எனப் பதிப்புரையில் குறிக்கப்பட்டுள்ளது.

நூலாசிரியர் "ஆராய்ச்சித் திறன் வாய்த்தவரும் மொழிநூற் பண்புணர்ந்தாரும்" எனப் பாராட்டப்படுகிறார். பதிப்புரையில் 'கைம்மாறு கருதாது' இளைஞர் மன்றத்திற்காக எழுதித் தந்தமையையும் காட்டுகிறார். இதுவே மன்றத்தின் முதல் வெளியீடு.

நூற்பெயரில் 'சரித்திரம்' இருப்பினும் சங்கப்பெயர் 'கழகம்' என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. குமரிக் கண்டத்தில் இருந்தே தமிழர் வரலாற்றைத் தொடங்கி மீட்டெடுக்கிறார்.

கழகத்திற்கு முற்காலம், கழகக் காலம், இடைக்காலம், தற்காலம், தமிழரசர் மரபுகள், திராவிடப் பிரிவுகள், இந்திய மக்கள் நாகரிகப் பகுப்பு என்னும் பகுப்புகளைக் கொண்டது இச்சுவடி.

தமிழர், ஆரியர் துருக்கியரைப் போல் அயல்நாட்டிலிருந்து வந்தவர்கள் அல்லர்.

குமரிக்கண்டமே தமிழரின் பிறப்பிடம் என்று சொல்லி நூலைத் தொடங்குகிறார். இந்தியா, ஆத்திரேலியா, ஆப்பிரிக்கா என்னும் முக்கண்டங்களையும் ஒன்றாய் இணைத்துக் கொண்டு இந்துமாக்கடலில் இருந்த பெருநிலப்பரப்பே குமரிக்கண்டம் என்பதைச் சுட்டுகிறார்.

குறிஞ்சி முதலிய ஐவகை நிலங்களையும் ஐந்நாகரிக நிலைகளையும் இப்பகுதியில் விளக்குகிறார்.

கழகக் காலம் என்பதில் இலங்கை இந்தியாவோடு இணைந்திருந்ததையும் பொருநை, இந்தியா இலங்கை ஊடு சென்றது என்பதையும் கூறுகிறார்.

கடைக்கழகக் காலத்திலேயே ஆரியர் தமிழில் நூல் இயற்றவும், வடசொற்களைத் தமிழில் புகுத்தவும் தொடங்கிவிட்டனர் என்கிறார்.

இடைக்காலம் என்னும் மூன்றாந்தலைப்பில் தமிழர் ஆரியர்க்கு முற்றிலும் அடிமையாயினர் என்றும், கல்வியை இழந்தனர் என்றும், பல்லவர், தெலுங்கர், மராட்டியர் முதலியோர் தமிழ்நாட்டைக் கைப்பற்றினர் என்றும் குறிக்கிறார்.

தமிழர் வரலாற்றில் மிகமிக இருண்டகாலம் 15 ஆம் நூற்றாண்டென்று சொல்லலாம் என்கிறார்.

காலம் என்பதை கி.பி.1600 முதல் எனக் கொள்கிறார், பாவாணர். ஆங்கிலர் வரவால் புத்தூழி தோன்றியது என்று கூறும் அவர், அனைவர்க்கும் கல்வி, அலுவல், நயன்மை ஒப்ப வழங்கப் பெற்றதையும் தமிழ் தனிமொழி, தமிழ நாகரிகம் தனி நாகரிகம்; தமிழரிடமிருந்தே ஆரியர் நாகரிகம் பெற்றனர் என்பவை வெளிப்பட்டதையும் சுருக்கமாகச் சொல்கிறார்.

வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்டவர் பிற்பட்டவர் என மூவேந்தரையும் இறையனார் களவியல், அடியார்க்கு நல்லார் உரை என்பவற்றை மேற்கொண்டு எழுதுகிறார். திராவிடப் பிரிவு என்பது ஆறாம் பகுதி. அதில் தெலுங்கு, கன்னடம், மலையாளம், எனத் தமிழ் திரிந்த வகையையும், தமிழம் என்னும் பெயரே ஆரியரால் திரமிளம் → திரமிடம் → திரவிடம் எனத் திரிக்கப்பட்ட வகையையும் தெளிவிக்கிறார்.

இந்திய மக்கள் நாகரிகப் பகுப்பில் தமிழ்நாட்டில் மட்டும் எல்லா வகையிலும் ஆரிய திரவிடத்தை நீரும் நெய்யும் போலப் பகுக்கலாம் என்றும் பிராமணர் வருமுன் தமிழ்நாட்டில் முனிவர் அந்தணர் எனவும் நூல் தொழிலுள்ள இல்லறத்தார் பார்ப்பனர் எனவும் வழங்கப்பட்டனர் என்றும் சுட்டும் பாவாணர், "ஆரியரால் தமிழர்க்கு யாதொரு நன்மையுமில்லை. பிராமணர் தான் எல்லாவகையிலும் தமிழரிடம் நாகரிகமும் நன்மையும் பெற்றுக்கொண்டு இன்று தலைமாறாகக் காட்டுகின்றனர். இதன் விரிவை ஒப்பியன் மொழி நூலில்

கண்டு கொள்க என முடிக்கிறார். 'வாழிய செந்தமிழ் ! வாழ்க நற்றமிழர்! வாழ்க நிரந்தரம் வாழிய தமிழ்த் திருநாடு' என்பது வாழ்த்து. இச்சுவடியை நோக்கிப் பாவாணர், பின்னே இயற்றிய தமிழ் வரலாறு, தமிழர் வரலாறுகளைக் காணும்போதுதான் பாவாணர் அவர்களின் வளர்நிலை தெள்ளத் தெளிவாக விளங்கும்.

## 17. தமிழர் திருமணம்

சேலம் நகராண்மைக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராகப் பாவாணர் இருந்தபோது அவரால் வெளியிடப்பட்ட நூல் இது. ஆண்டு 1956. சேலம் கூட்டுறவு அச்சகத்தில் உருவாக்கம் பெற்றது இந்நூல். விலை உருபா 1. உரிமையைத் திருவாட்டியார் நேசமணி தேவநேயனுக்கு வழங்கியுள்ளார்.

வாழ்க்கை நோக்கம், வாழ்க்கை வகை, இல்லறச் சிறப்பு, திருமணமும் சரணமும், மணமக்கள் பெயர், அன்பும் காதலும் என்னும் ஆறு பொருள் பற்றிய முன்னுரையொடும் நூல் உள்ளது.

மணவகையை உலகியற் பாகுபாடு, இலக்கணப் பாகுபாடு என்னும் இருவகையால் விளக்குகிறார்.

மண நடைமுறை என்பதில் மணப்பேச்சு, மண உறுதி, மணவிழா, மனையறம் என்பவற்றைக் கூறும் பாவாணர் பழங்கால மணமுறையாக மகளிர் மணவினை நடத்தியதையும் ஓரிற் கூட்டியதையும், அகப்பாடல்களைக் கொண்டு நிறுவுகிறார். (அகம் 86, 136)

அடுத்த பகுதியில் இடைக்கால மாறுதலாக பிராமணப் புரோகிதமும் வடமொழிக் கரணமும் தோன்றிய தொடங்கிய வகையையுரைத்து அக்கரணத்தால் விளைந்த தீமைகள் இவையென அறுவகைக் குறைகளைக் குறிப்பிடுகிறார். தமிழுக்கும் தமிழனுக்கும் தாழ்வு, தமிழ்ப் பார்ப்பார்க்குப் பிழைப்பின்மை, சிறுதெய்வ வழிபாடு, கற்பிழுக்கக் கூற்று, வீண் சடங்கு, கரணம் விளங்காமை என்பவை அவை.

பொருந்தாமணம், வீண் சடங்கு என்பவற்றை விளக்கும் ஆசிரியர், திருமணச் சீர்த்திருத்தம் பற்றியும், வேண்டத்தக்க பொருத்தங்கள் இவை என்பதையும் விளக்குகிறார்.

மேலும் குலவெறி கொள்ளாமை, நாளும் வேளையும் பாராமை, பிறப்பியம் பாராமை, மணம் பற்றிய செய்திகளைத் திட்டமாக முடிவு செய்து கொள்ளுதல், தாய் மொழியில் கரணம் செய்வித்தல், வீண் சடங்கு விளக்கல், செல்வநிலைக்கேற்பச் செலவு செய்தல், மண நாளன்றே மணமக்களைக் கூட்டுதல், மணமக்களின் நல்வாழ்வை விரும்பல் என்பவற்றைத் தெரிவிக்கிறார்.

மணமக்கள் கவனிக்க வேண்டியவை, உற்றார் உறவினர் கவனிக்க வேண்டியவை, அரசியலார் கவனிக்க வேண்டியவை, புதியன புகுதல், போலிச் சீர்த்திருத்த மணங்கள், பெண்டிர் சமன்மை இன்னவற்றையும் எடுத்துரைக்கிறார்.

திருமண அழைப்பிதழ் (போலிகை) ஏழனைக் காட்டுகிறார். திருமண நிகழ்நிரல், தமிழ்க் கரணம், கரணத்தொடர்பான சில சீர்த்திருத்தங்கள், திருமண வாழ்த்திதழ் என்பவற்றையும் விளக்குகிறார்.

தமிழர்க்குத் தாலி கட்டும் வழக்கம் உண்மையைச் சான்றுகளுடன் விளக்குகிறார். மலையாள நாட்டு மணமுறை என்பதையும் சம்பந்தம், முன்னுகர்ச்சி என்பவற்றையும் குறிக்கிறார். 96 பக்கங்களையுடையது இந்நூல்.

## 18. தமிழர் மதம்

தமிழர் மதம் 1972 ல் வெளிவந்த நூல். இந்நூல் வெளியீட்டிற்குத் திருமுல்லைவாயில் முல்லைவாணன் பொருட்கொடை புரிந்துள்ளார். அதற்கு நன்றியாக வெண்பாக்கள் ஆறு பாடியுள்ளார்.

இதன் முகவுரையில் நூல் 'தொகை' ஒரு பத்தியில் உரைத்துள்ளார் பாவாணர். அது "பல்சிறு தெய்வக் கொலை வேள்வி வளர்ப்பையே மதமாகக் கடைப்பிடித்துக் கடவுள் இயல்பை அறியாத, ஆரியருள் ஒரு சிறு குழுவார் தென்னாடு வந்து பழங்குடிப்பேதைமை, கொடைமடம், மதப்பித்தம் ஆகிய குற்றங்களைக் கொண்ட முத்தமிழ் வேந்தர் குடிகளையும் தாம் நிலத்தேவர் என்றும் தம் இலக்கியமொழி தேவமொழி என்றும் சொல்லி ஏமாற்றி வயப்படுத்தி, அவர் வாயிலாகப் பொதுமக்களையும் அடிப்படுத்தி, தம் வேத மொழியைத் தமிழால் வளப்படுத்திச் சமற்கிருதம் என்னும் இலக்கிய நடைமொழியைத் தோற்றுவித்து, அதில் மறைநூலும் மந்திர நூலும் உட்படப் பழந்தமிழ் நூல்களையெல்லாம் மொழி பெயர்த்தபின் மூல நூல்களையெல்லாம் ஒருங்கே அழித்துவிட்டு, தமிழர் மதங்களில் ஆரியத் தெய்வங்களைப் புகுத்தி, இந்துமதம் என்னும் கலவை மதத்தை உண்டாக்கி, தமிழையும் தமிழரையும் மதத்துறையிலிருந்து விலக்கி, சமற்கிருதத்தையே மதவியல் மொழியாக்கி, அதிற் பிராமணரே இருவகை வழிபாடும் இருவகைச் சடங்கும் நடத்தி வைக்குமாறு ஏற்பாடு செய்து விட்டனர். இவ்வேற்பாடே இன்றும்

நடைபெற்று வருகிறது'' என்பது.

கில்பர்ட்டு சிலேட்டர் என்பார் ''ஆரியர் நாகரிகத் துறையில் திராவிடராக மாறியபோது, திராவிடர் மொழித் துறையில் ஆரியராகத் திரிந்து விட்டனர்'' என்று கூறுவதைப் பாவாணர் மேற்கோள் காட்டுகிறார். முன்னுரையில் மதம், சமயம் ஆகிய சொற்களின் வரலாற்றையும் மதம் தோன்றிய வகையையும் கூறி, மதங்கள் சிறு தெய்வ வணக்கம், பெருந்தேவமதம், கடவுள் சமயம் என மூவகையாதலையும், குமரிநாட்டு மதநிலையையும் பன்னிரு பக்க அளவில் வரைந்துள்ளார். நூலைக் குமரிநிலை இயல், இடைநிலை இயல், நிகழ்நிலை இயல், வருநிலை இயல், முடிபுரை இயல் என ஐந்தியலாகக் கூறுகிறார். (13-193)

பின்னிணைப்பாகத் தமிழ்நாட்டரசின் திருக்கோவில் வழிபாட்டுச் சீர்த்திருத்தம், மதச் சமநோக்கு என்பவற்றை வைக்கிறார்.(194-198)

தெய்வம் உண்டென்பது போன்றே இல்லை என்பதும் மதம் என்னும் பாவாணர் மதத்தை நம்புமதம், நம்பாமதம் என இரண்டாகப் பகுக்கின்றார்.

மதம், சமயம் என்பவற்றை ''இறைவனை மதித்து வழிபடுவது மதம்; இறைவனை இம்மையிலேனும், மறுமையிலேனும் அடைவதற்குச் சமைவது சமயம் என்னும் பாவாணர், ''மதத்தினும் சமயத்திற்கு ஒழுக்கமும் நோன்பும் மிக வேண்டுவனவாம்' என்று கூறுகிறார்.

அச்சம், முற்காப்பு, நன்றியறிவு, பாராட்டு, அன்பு, கருதுகோள், அறிவு வளர்ச்சி என்பவை மதம் தோன்றுவதற்கு அடிப்படை என விளக்குகிறார். (7-10)

கடவுள் மதமென மூவகை மதங்களுள் ஒன்றாகக் குறிப்பதன் இலக்கணத்தை 'எங்கும் நிறைந்திருக்கும் இறைவனை உருவ வணக்கமின்றி உள்ளத்திலேயே வழிபட்டு, தன்னையே படைத்து, முக்கரணமும் தூய்மையாகி, இல்லறத்திலேனும் துறவறத்திலேனும் நின்று, இயன்றவரை எல்லா உயிர்களுக்கும் நன்மையே செய்து இம்மையிலேனும் மறுமையிலேனும் வீடுபெற ஒழுகுவது' என்கிறார் (10-11).

குமரிநிலையிலேயே தமிழர் மூவகை மத வளர்ச்சியும், பெற்றமையையும், தமிழர் மதம் ஆகிய சிவமதம், திருமால் மதம் என்பவற்றையும் விளக்கிக் கடவுள் மதத்தையும் எடுத்துக்காட்டால் விரிக்கிறார். (13-53)

ஆரியத் தெய்வங்கள், ஆரியர் தமிழரை அடிமைப்படுத்திய வகைகள், ஆரியத்தால் விளைந்த கேடுகள், சிவனியர் ஆரியச் சார்பும், திருமாலியர் தமிழ்ச் சார்பும் என்னும் நான்கு உட்பிரிவில் இடைநிலை இயலை இயக்குகிறார் பாவாணர் (59-120).

ஆரியர் தமிழரை அடிமைப்படுத்திய வகையை ஆரியர் தமிழ்த் தெய்வ வணக்கத்தை மேற்கொள்ளல் முதலாகக் கடவுட் சமய மறைப்பு ஈறாகப் பதினெண் காரணங்களைக் காட்டி விளக்குகிறார்.

நிகழ்நிலை இயல் 18 பக்கங்களையுடையது. திருநான்மறையாராய்ச்சி, தமிழ்நாட்டுச் சிவமடங்கள், சைவ சித்தாந்த மகா சமாசத் தொண்டு, காஞ்சி காமகோடி பீடச் சங்கராச்சாரியாரின் கரைகடந்த தமிழ்வெறுப்பு, அகோபிலம் சீயர் ஆணவம், தவத்திரு குன்றக்குடி அடிகளின் சிவ, தமிழ்த் தொண்டு, தி.மு.க. அரசின் திருக்கோயில் தொண்டு என்பவை இதில் அடங்கியுள்ளன.

வருநிலையியல் ஏழே பக்கங்களில் நிறைகின்றது. (139-145) இதில், திருக்கோயில் தமிழ் வழிபாடு, பல்வகுப்புக்கோயில் பூசகர், வழிபாட்டில் வீண் செலவு நிறுத்தம், உருவிலா வழிபாடு, இந்து மதம் என்னாது தென்மதம் என்னல், எல்லா மதமும் தனித்தமிழ் போற்றல், தவத்திரு குன்றக்குடி அடிகள் கடமை என்பன ஆராயப்படுகின்றன.

முடிபுரை இயல் பதின் உட்பிரிவுகளையுடையது. எது தேவமொழி?, பிராமணன் நிலத்தேவனா?, பிராமணனுக்கு உரியது எவ்வறம்?, சிவமதமும் திருமால் மதமும் தமிழ் மதங்களே, தமிழ் ஆரிய மதவேறுபாடு, கொண்முடிபுக் குறியீடுகள், மக்கள் முன்னேற்றத்திற்கு மதம் முட்டுக் கட்டையா?, கடவுள் உண்டா?, மதத்தை அழிக்க முடியுமா?, நம்பா மதமும் ஒரு மதமே என்பவை அவை. இவற்றுள் ஆறு உட்பிரிவுத் தலைப்புகள் வினாக்களாய் அமைவன. அவற்றிற்குத் தக்க விடைகளைத் திறமாய்த் தருகிறார் பாவாணர்.

தமிழே தேவமொழி; பிராமணன் நிலத்தேவன் அல்லன்; பிராமணனுக்கு நாடும் பேச்சு மொழியும் போன்றே அற வாழ்க்கையும் இல்லை; மக்கள் முன்னேற்றத்திற்கு மதம் முட்டுக்கட்டை இல்லை. நம்பா மதத்தினரும் நம்பு மதத்தைக் கடைப்பிடிப்பதே சாலச் சிறந்தது. மனம் உள்ளவரை மதத்தை ஒருவராலும் அழிக்க முடியாது என்பவை பாவாணர் தரும் விடைகள்.

வழக்கம் போல் ஆங்காங்குச் சொல்லாய்வு வேர் விளக்கம் காட்டும் பாவாணர் பேராசிரியர் உ.வே. சாமிநாதையர் குறுந்தொகை நூலாராய்ச்சியில் 44

சொற்களை வடசொற்கள் எனக்காட்டி 'முதலியன' என்கிறார். இவற்றுள் 37 சொற்கள் தென்சொற்கள் என்று விளக்குகிறார். (154)

'பணிலம்' என்பது வடமொழி அகர முதலியிலும் இடம் பெறாத சொல். தமிழ்ச் சொற்களையெல்லாம் வடசொல்லெனக் காட்டும் பல்கலைக்கழக அகர முதலியிலும் வடசொல்லெனக் காட்டப்படாத சொல் எனச் சுட்டுகிறார் பாவாணர்.

"மதங்களெல்லாம் தேவியம் (அ) உள்ளியம் (ஆஸ்திகம்), தேவிலியம் (அ) இல்லியம் (நாஸ்திகம்) என இரு வகைப்பட்டிருப்பதால் மதவியல் வாயிலாக மக்களை ஒன்று படுத்தல் இயலாது. அதனாலேயே இந்திய ஒன்றியமும் மதவியலைத் தழுவாது உலகியலையே தழுவியுள்ளது." என்றும்

"பிறவியில் அமையும் தீய நிலைமைகட்கும் இயற்கையில் நேரும் துன்ப நேர்ச்சிகட்கும் இறைவனே கரணியம் ஆகான்" என்றும் இணைப்புப்பகுதியில் கூறுவன அரசும் மக்களும் ஆழமாக எண்ணிப் போற்றத்தக்கனவாகும்.

தமிழர் மதம் 1972ல் நேசமணி பதிப்பக வெளியீடாக ஆறேகால் உருவா விலையில் வெளிவந்ததாகும்.

## 19. தமிழர் வரலாறு

நேசமணி பதிப்பக வெளியீடாக 1972 ல் வெளி வந்த நூல் தமிழர் வரலாறு, அதன் விலை உருபா 12.50.

"இது மதுரை மணிவிழாக் குழுவார் 1967 இல் தொகுத்தளித்த நன்கொடைப் பயனாக வெளிவருகின்றது." என முகவுரையில் வரைகிறார் பாவாணர். 'பாவாணர்' மணி விழாக் குழுவைப்பற்றி 7 வெண்பாக்கள் இடம் பெற்றுள்ளன.

முன்னுரை, ஞால முந்திய நிலை, ஏழு தீவகம், நாவலந்தீவில் முந்நிலைகள், குமரிக்கண்டம், மாந்தன் பிறந்தகம், நாகரிக மாந்தன் பிறந்தகம், தமிழன் பிறந்தகம், தமிழ் வரலாற்றடிப்படை, தமிழர் வரலாறு அமையும் வகை என்னும் ஒன்பது உள் தலைப்புகளில் இயல்கின்றது.

தமிழர் தோன்றிய இடமும் தமிழ் தோன்றிய இடமும் குமரிக்கண்டம் என்பதாலும், அத்தமிழரே உலக முதன் மாந்தர் அத்தமிழே உலக முதன் மொழி என்பதாலும், தமிழாய்வின் அடிமணையாகக் குமரிக்கண்ட ஆய்வு இருப்பது கொண்டு பாவாணர் தம் பல நூல்களிலும் குமரிக்கண்டம் பற்றியே ஆய்கிறார் எனல் குறிப்பிடத்தக்கதாம்.

தனிநிலைக்காண்டம், கலவு நிலைக்காண்டம், தெளிநிலைக் காண்டம் என முக்காண்டங்களைக் கொண்டதாகின்றது தமிழர் வரலாறு. பின்னிணைப்பும் உண்டு. மொத்தப்பக்கம் 370. தனிநிலைக்காண்டத்தைக் கற்காலம், பொற்காலம், செம்புக்காலம், உறைக்காலம், இரும்புக்காலம் எனப் பகுத்தாய்கிறார். பின்னர்த் தலைக்கழகம், இடைக்கழகம், கடல்கோள் ஆகியன பற்றி விரிவாக ஆராய்கின்றார்.(27–156).

கலவுநிலைக் காண்டம் என்னும் இரண்டாம் பகுதியில் ஆரியர் இந்தியாவிற்குட் புகவு தொடங்கி, ஆரிய அட்டூழியத்தால் தமிழர்க்கு விளைந்த கேடுகள் ஈறாக இருபது குறுந்தலைப்புகளில் ஆய்வு நடத்துகின்றார் (159–305). தொல்காப்பியம் கடைக்கழகக் காவேந்தர், நால்வரணப் பகுப்பு, இற்றைப் பிறவிக் குலங்கள் என்பனவெல்லாம் இப்பகுதியில் ஆயப்படுகின்றன.

தெளிநிலைக்காண்டம் என்னும் இறுதிக் காண்டம் திருவள்ளுவர் தமிழரின் கண்திறப்பிப்பு, ஆங்கிலர் ஆட்சி, கால்டுவெல், பேராசிரியர் சுந்தரம்பிள்ளை, மறைமலையடிகள் முதலோர் தொண்டு, தமிழ்நாடு முன்னேறும் வழி, தமிழ்நாட்டெல்லை வரவரக் குறைதல் என்பன எண்ணப்படுகின்றன.

"குமரிக்கண்ட முதல் மாந்தன் மொழியின் அசைநிலைக் காலத்தில் சீனரின் முன்னோரும், கொளவு நிலைக் காலத்தில் சித்தியரின் முன்னோரும், பகுசொன்னிலைக் காலத்தில் சுமேரியரின் முன்னோரும் பிரிந்து போயிருத்தல் வேண்டும்". என்கிறார். (35) (பொற்காலம் என்ற ஒன்று தமிழகம் தவிர வேறு எந்நாட்டிற்கும் இருந்ததில்லை. அது மாழைப் (பொன்) பயன் கொண்ட காலம் என விரிவாக விளக்குகிறார் (3744).

இயற்கை வளம் நிறைந்த பொற்காலத்தில் கோடை மழை, காலமழை, அடைமழை, படைமழை, ஆகிய நால்வகை மழையும் காலம் தப்பாது பெய்தது எனச் சுட்டுகிறார். இவற்றுள் படைமழை பாவாணர் ஆக்கச் சொல்.

கற்கால மொழி இயற்கை அல்லது முழைத்தல் மொழி என்றும், பொற்கால மொழி, தொகுநிலை மொழி என்றும் சுட்டி விளக்குகிறார்.

'செம்பு' என்பதை எடுத்துக்கொண்டு வேர் விளக்கமாகப் பற்பல காட்டி, 'நூற்றுக்கணக்கான தென்சொற்கள் வடமொழியில் இனம் மறைந்து வழங்குகின்றன என்றும், தமிழ் உண்மையில் திராவிடத்தாயும் ஆரிய மூலமும் ஆகும் என்றும் அறிந்து கொள்க' என்பது தம் கோள் நிறுவுதலாய்ச் சிறக்கின்றது.

பாண்டியன், சாத்து, தீவு, மண்டலம், தேயு, தாமரை, வடவை, நரன் ஐந்திணை இன்ன பல சொற்கள் தனிநிலைக் காண்டத்தில் ஆய்ந்து தெளிவிக்கப்படுகின்றன.

கலவு நிலைக் காண்டத்தில் அகத்தியர் இராமாயணம், பாரதம் நால்வரணப் பகுப்பு, முத்திருமேனிப் புணர்ப்பு, தொல்காப்பியம், கடைக்கழகக் கால மன்னர்கள், மொழி, கலை, இலக்கியத் துறைகளில் ஆரியக் கலப்பு என்பவை விரிவாக ஆராயப்படுகின்றன.

''முகமண்டபமும் கூடகோபுரமும் கொண்ட மணிமாட மாளிகைகள் நிறைந்த 'ஒரு மாநகரம்' ஆழ்கடலில் மூழ்கிப் போனபின் அதன் கற்கள் சிலவற்றை எடுத்துக் கட்டிய ஒரு சிற்றில் போன்றதே தொல்காப்பியம்'' என்று பாவாணர் கூறுவதை நோக்க ''அதற்கு முற்பட்ட தமிழ்வளம் எத்தகையதாக இருந்திருக்கும்'' என்பது அவர் ஆராய்ந்து கண்ட வெளிப்பாடாம். (205)

சகர முதற் சொற்களாக நூற்றுக்கு மேல் காட்டி, அவற்றுள் தொல்காப்பியர்க்கு முன்னவை, பின்னவை என வகுப்பது தனிப் பேராய்வாகும் (208–210).

தமிழர்தம் கலவாணிகச் சிறப்பை, அரிசி, இஞ்சி முதலான சொற்களைக் கொண்டும் கலம் தொடர்பான பெயர்கள் உலக வழக்கில் உள்ளமை கொண்டும் உறுதி செய்கிறார்.

ஆரியர் பொருள் கவர்வு வகைகட்குத் தமிழக அரசர் ஏமாந்து நின்ற நிலை, குமுகாயக் கேடு, மொழிக்கேடு என்பவற்றை எடுத்துக்காட்டுடன் விளக்கி இந்நாளிலும் அவற்றைப் போக்கக் கருதாமல், தமிழர் தமக்குள்ளே கலாமும் கலகமும் செய்து வருதலை நொந்துரைக்கின்றார்.

''காட்டிக் கொடுக்கும் போலித்தமிழர் உதவியின்றிப் பிராமணர் தமிழுக்கும் தமிழர்க்கும் மாறாக எதுவும் செய்யமுடியாது'' என்று அழுத்தமாகக் கூறுகின்றார் பாவாணர். நம்மைத் திருத்தாமல், நாம் திருந்தாமல் பிறரைப் பழித்தலால் என்ன பயன் என்பதை எண்ணச் செய்கிறார் அவர் எனலாம்.

எதிர்காலத்திலேனும் பிராமணர் தமிழரோடு ஒன்றி வாழ்ந்து கழுவாய் தேடிக் கொள்ள வேண்டும் என்றும், படிப்படியே தமிழ்க்குடியினர் எவ்வெம் முறைகளை மேற்கொண்டு ஓரினமாதல் வேண்டும் என்றும் கூறுவன மறுப்பற்றப் பெருநலப்பார்வையாம். உலகத் தமிழ் மாநாடு பற்றிய பாவாணர் கருத்துகளை ஆளும் அரசு எண்ணிச் செயல்படின் மொழிக்கு ஆக்கமாம்.

## 20. தமிழன் எப்படிக் கெட்டான்?

''தமிழ்த் தடைகளையெல்லாம் சல்லிசல்லியாகத் தகர்த்தெறிய வேண்டும்' என்பதற்காகச் சில சிறு சுவடிகள் அச்சாவதாகத் திருச்சிப் புத்தூரில் இருந்து (23–10–41 இல்) கடிதம் எழுதியுள்ளார் பாவாணர். அச்சுவடிகள் 9. அவற்றுள் தலைச்சுவடி 'தமிழன் எப்படிக் கெட்டான்?' என்பது. அது 40 பக்கம் 2 அணா என்று குறிப்பிடுகிறார் பாவாணர்.

உள்ளடக்கம் என்னும் தலைப்பில் 'தமிழன் கெட்ட வழிகள் என்னும் குறிப்பில் மதப்பித்தம், கொடைமடம், இனநலம் பொறாமை அல்லது தன்னினப் பகைமை, குறிபார்த்தல், துறவியைப் பின்பற்றல், ஆரியம், அரசியல் கட்சிகள், என்னும் முறை வைப்பில் அமைக்கிறார். முறை முறையே விளக்கமும் புரிகிறார்.

முகவுரையில் 'வெள்ளைக்காரன் உடுத்திக் கெட்டான்; துலுக்கன் தின்று கெட்டான்; தமிழன் வைத்துக்கெட்டான்' என்னும் பழமொழியைச் சுட்டிக்காட்டி, கல்வி, செல்வம் என்னும் இருவகையையும் தமிழன் வைத்துக் கெட்டவனாய் இருக்கிறான் என்கிறார்.

''ஒருவன் கெடுவது மூவகை என்னும் பாவாணர், ஒன்று அறிவோ, பொருளோ அவையிரண்டுமோ இல்லாமை, அவை இருந்தும் பயன்படுத்தாமை, அவற்றைத் தவறாய் ஆளுதல் என்கிறார். முகவுரை நிறைவில், தமிழன் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னரே உலகத்தில் பல துறைகளிலும் தலைசிறந்தவனாயிருந்தும் பிற்காலத்தில் தன் பகுத்தறிவைப் பயன்படுத்தாது வைத்துக் கெட்டமை இச்சுவடியில் விரிவாய்க் கூறப்படும்'' என்று நுதலிப்புகுகிறார். தமிழர் மதம், தமிழர் வரலாறு முதலிய நூல்களில் பாவாணர் தமிழன் கெட்ட வகைகளை எழுதியுள்ளார். அவற்றினும் இது விரிவுடையதாகும். இந்நூலை எழுதிய பின்னரும் நாற்பான் ஆண்டுகள் பாவாணர் வாழ்ந்தார். அதன் பின்னரும் இருபான் ஆண்டுகள் கடந்து விட்டன. எனினும் பாவாணர் சுட்டிய குறைகள் ஏழும் மிகுதிப்பட்டுள்ளனவே அன்றிக் குறையும் பாடில்லை.

அறவே தீரும்பாடு அரும்பவும் இல்லை.

தமிழர் நலம் பேசி – புகழ்பேசி வந்தவர் தந்நலம் பெருக்குவாராய், கூட்டுக் கொள்ளைக்கும் அதிகாரக் களத்திற்கும் பயன்படுத்துவாராய்த் தமிழர் தலைவர் என்போர் ஆகிவிட்டமையால் குறைகளையும் குறிக்கோள் இல்லாராகி விட்டனர்.

சில திருப்பதிகளில் தேரோட்டக் காலத்தில் தேர்க்காலின் கீழ்த்தலையைக் கொடுத்திறப்பதும், கும்பகோணத்தில் மகாமகக் குளத்தில் மிதியுண்டு சாவதும், சில கோயில்களுக்குப் பிள்ளை வரத்திற்குச் சென்று தெரிந்தோ தெரியாமலோ தம் மனைவியரைக் கற்பழிவிப்பதும் அல்லது கற்பை இழப்பதும் கோயில் வழிபாட்டிற்குச் சென்றவிடத்தும் தம் அழகான அருமந்த மகளிரைத் தேவகணிகையராக விட்டுவிட்டு வருவதும் பண்டைத் தமிழருள் பகுத்தறிவற்று மானங்கெட்ட மதப்பித்தர் சிலரின் செயல்களாகும் என்றும், "தாய் மொழி கெட்டாலும் தமது மதம் கெடக்கூடாதென்று கருதி வேண்டாத வடசொற்களையும் புறம்பான ஆரியக் கொள்கைகளையும் தழுவுகின்றனர்" என்றும் மதப்பித்தர் நிலையைக் குறிப்பிடுகிறார்.

தமிழர் கொடை மடம் எத்தையது?

"இக்காலத்திலும் ஒருவன் பிறக்கும் முன்பே தொடங்கி அவன் இறந்த பின்பும் ஒரு குலத்தார்க்கே தானம் செய்வது தமிழரின் பேதைமையாம். இதனால் வடநாட்டிலிருந்து கையுங் காலுமாய் வந்த ஒரு சிறு கூட்டத்தினர் செல்வத்தால் சிறந்து வாழ, தமிழருட் பெரும்பாலார் வறியராய் வருந்துகின்றனர்.

"ஒரு பார்ப்பனர் ஒரு கொடையாளியொடு பழகப்பெறின் அவர் கொடையைப் பெரும்பாலும் பிறகுலத்தார் பெறாதபடி தங்குலத்தார்க்கே இயன்றவரை வரையறுத்துக் கொள்வது அவர் இயல்பு" என்னும் பாவாணர், ஆங்கிலக் கல்விக்கே கோடிக்கணக்கில் கொட்டிக் கொடுப்பவர் தமிழை இழிவுபடுத்துபவராக இருத்தலைச் சுட்டிக்காட்டுகிறார்.

தன்னின நலம் காணப் பெறாமல் அயலின நலம் நாடும் தமிழர், "நலங்கொள்ளும் நச்சுக் காய்ச்சல், வலிமையை அறுத்தெறியும் கூர்வாள்!" என்கிறார். வானியல், மருத்துவம் முதலான கலைகளை வெளிப்படுத்தாமலே இனக்கேடு செய்த வகையையும் விளக்குகிறார்.

குறிபார்க்கும் கேடுகளை எடுத்து உரைக்கும் பாவாணர், "ஒரு வினையைச் செய்வதற்குக் காலம் பற்றிக் கவனிக்கக் கூடியவையெல்லாம், தட்ப வெப்பநிலையும், செல்வ வறுமை நிலையும், தூக்க ஊக்க வேளையும், ஒளி இருள் காலமுமேயன்றி வேறன்று" என்கிறார்.

துறவியரைப் பின்பற்றல் என்னும் பகுதியில் 'இல்லறம் துறவறம் ஆகிய இரண்டிற்கும் தனித் தனிச் சிறப்பியல்புகள் உண்டு; அவற்றில் அவை ஒன்றையொன்று பின்பற்றுதல் தவறாம்' என்கிறார்.

தமிழன் கெட்ட வழிகளில் மிகக் கொடியது ஆரியமே என்னும் பாவாணர் ஆரியர் தம்மைத் தாங்கிய தமிழரைக் கெடுக்கின்ற நன்றிக் கேடு பொறுக்கும் தரத்ததன்று என்று வருந்துகின்றார்.

குலப்பிரிவுக்கேடு, கல்வியிழப்புக்கேடு என இருபகுப்பாய் ஆரியக் கேட்டை உரைக்கிறார் பாவாணர்.

பாணரின் இசை, வள்ளுவ இனக் கணியம், மருத்துவக் குடியினர் மருத்துவம் ஆகியவை ஆரியத்தால் அழிந்தமை முதலியவற்றைத் தெளிவிக்கிறார்.

மதியை விளைக்காதனவும் அடிமைத் தனத்தில் ஆழ்த்துவனவும் கலையிலக்கியங்களில் பொய்யும் புனைந்துரையுமானவுமான பல தீமைகள் தமிழர்க்குப் புகட்டப்பட்டன. இன்றும் ஆங்கிலேயரினின்று விடுதலையாவதினும் ஆரியரினின்று விடுதலை அடைவதே தமிழர்க்கு அரிதாகின்றது என்று முடிக்கிறார்.

அரசியல் கட்சிகள் என்னும் நிறைவுப் பகுதியில் 'நயன்மைக் கட்சித் தலைவர்கள் தெலுங்கரும், மலையாளியரும் தமிழறியாதவருமாக இருந்ததனால் தமிழ் வளர்ச்சிக்கோ தமிழ்ப் புலவர் முன்னேற்றத்திற்கோ ஒன்றும் செய்யவில்லை' என்கிறார்.

காங்கிரசாட்சியில் தமிழர்க்கு விளைந்த தீமைகளுள் முக்கியமானவை ஐந்து. அவை கட்டாய இந்தி, வகுப்புரிமையின்மை, பார்ப்பன வல்லாண்மை, பள்ளிகளை மூடல், பகுத்தறிவாளாமை என்பன என விளக்குகிறார்.

## 21. தமிழின் தலைமையை நாட்டும் சொற்கள்

செந்தமிழ்ச் செல்வியில் வேர்ச்சொற் கட்டுரைகள் வெளிவந்து நிறைந்த பின் தொடங்கப்பட்ட தொடர் கட்டுரை ஈதாகும். பாவாணர் வாழ்நாளில் நூலுருப் பெறாதது இது.

இக்கட்டுரைகளுள் 22 தனிச் சொற்கள் பற்றியவை. இரண்டே இரண்டு மட்டும் தொகுதிச்

சொற்கள் பற்றியவை. செந்தமிழ்ச் செல்வி 52 முதல் 55 வரை (1977 முதல் 1981 வரை) வெளிவந்தவை இவை.

மகன் என்னும் ஒரு கட்டுரை மட்டும் இரண்டாகப் பகுத்து வெளியிடப்பட்டது. மற்றவை எல்லாம் தனித்தனிக் கட்டுரைகளே.

உம்பர், உய், உருளை, அரத்தம், கண், காந்து, காலம், கும்மல், அந்தி, எல்லா, கலித்தல், மகன், மன், தெய்வம், புகா, பள்ளி, பாதம், புரி, பொது, பகு, பேசு, திரும்பு என்பவை தனிச்சொற்கள்.

பூனைப்பெயர்கள், சுள் என்பவை தொகுதிச்சொற்கள்.

உம்பர் என்னும் சொல்லை முதற்கண் கொண்டு சொல்வதால் அச்சொல் முகப்பு முன்னுரை போலவே அமைந்துள்ளது.

"சமற்கிருதத்தின் தனியுடைமையல்லாத நூற்றுக்கணக்கான அடிப்படைச் சொற்கள் அதற்கும் தமிழுக்கும் பொதுவாக உள்ளன. அவற்றுள் பெரும்பாலன தமிழ் என்பது அறிவியற் சொல்லியலால் இன்று வெட்ட வெளியாகின்றது" என்னும் பாவாணர் 'ஆரிய மொழிச் சுட்டுகட்கெல்லாம் தமிழ்ச் சுட்டுகளே அடிப்படை' என்கிறார். உம்பர் என்னும் சுட்டுச்சொல்லை முதற்கண் கொண்ட கரணியம் விளங்கச் செய்கிறார். ஊ முன்மைச் சுட்டு, மாந்தன் இயக்கம் அல்லது செலவு நிலத்தின் மேலும் மலையின் மேலும் நிகழ்வதால் முன்மைச் சுட்டு இடம் நோக்கி உயர்ச்சிச் சுட்டும் ஆகும் எனத் தெளிவிக்கிறார்.

உவன் : முன்னால் இருப்பவன்

உம்பர் : மேலிடம்

ஊப்பர் – உப்பரிகை, சூப்பர் என இந்தி வடமொழி கிரேக்கம் முதலியவற்றில் இடம் பெற்றிருத்தலைச் சுட்டுகிறார்.

உகர முன்மைச் சுட்டு, முற்செலுத்தும் வினைகளைக் குறிக்கும் என்பதை 'ஊய்' என்னும் அடிச்சொல்லால் காட்டுகிறார். உகைத்தல், உந்துதல், ஊக்குதல், ஊதுதல், உய்த்தல், இய், இயல், இயவுள் என விரிதலை விளக்குகிறார்.

உருளை என்ற சொல்மூலம் உல். அது உலம், உலவு, உலகு, உழல், உருள் முதலாக விரிவாக்கம் பெறுவதையும் தெளிவிக்கிறார்.

அரத்தம் என்பது சிவப்பு என்னும் பொருளது. செங்கதிர், நெருப்பு, உருமம், உருக்கு, ஒள், ஒளி, அழல், அரி, அனல், அலத்தகம், இலங்கு, எல் எனத்திரிபாக்கம் பெற்று வண்ணவியல் தொடர்ந்து அமைதலை நிறுவுகிறார்.

எடுத்துக்காட்டும் அடுத்த முதன்மைச் சொல் 'கண்' என்பது. அது கருமைப்பொருளது. கண் என்பது மலையாளம், கன்னடம், துளுவம், தெலுங்கு, துடவம், கோத்தம் கோலாமி, நாய்க்கி, பர்சி, கடபா, கொண்டி. கொண்டா, குய், குவி, குருக்கு, மாலத்தோ, பிராகுவி ஆகிய மொழிகளிலும் இப்பொருளில் விளங்குதலைப் பட்டியலிட்டுக் காட்டுதல் தனிச்சிறப்பாகும். மேலை மொழிகளிலும் வடமொழியிலும் இதன் திரிபு வடிவங்களே இருப்பதையும் விரிய எடுத்துக்காட்டி, காண் என்பது ஞான் ஆகி வடசொல் பெருக்கத்திற்கு உதவியதையும் விளக்கும் பாவாணர், "சமற்கிருதத்திற்கு ஞானத்தைத் தந்தது தமிழே என்னும் புகழ் நிலைத்து நிற்கும்" என்கிறார்.

காந்து கல், கள், கனல், கும் – கும்பு – கும்மாயம்; குள் → கொள் → கொள்ளி, குல் → குரு → குருதம்; கள் → கடு → கடுகம், கார் → கால் → காய் → காந்து எனப் பலவும் வெப்பப் பொருளாதலை விளக்குகிறார்.

காலம் தமிழுக்கு அடிப்படையானதும், இன்றியமையாததும் ஆன சொற்களுள் ஒன்றாய காலம் என்பதையும் வடசொல்லாகக் காட்டுதலை மறுத்துத் தென்சொல்லே அது என்பதை ஆட்சி முறையோடு அறிவியல் முறையில் காட்டுவதாக முன் வைத்து வேர் விளக்கம் காட்டுகிறார் பாவாணர். கால் என்பதற்கு 39 பொருள்களை வரிசைப்படுத்துகிறார். கால், தோன்றல், காலம் என்னும் பொருள் தருதலை விரிவாக விளக்குகிறார்.

கும்மல் என்பதில், கூடுதற் கருத்தினின்று குவிதற்கருத்தும், குவிதல் கருத்தினின்று கூம்புதல், மூடுதல், மறைதல், அடக்கமாதல், அமைதியாதல், குறைதல் முதலிய கருத்துகளும் பிறக்கும் என முறைவைப்புச் செய்து அம்முறையில் கட்டுரையை நிறைக்கிறார்.

'எல்லா' என்னும் விளிச்சொல் ஒத்த 'ஹல்லோ' என்னும் விளிச்சொல் ஆறாயிரம் கல்தொலைவிலுள்ள ஆங்கில நாட்டில் தொன்று தொட்டு வழங்குதல், நூற்றுக் கணக்கான தென்சொல்லும் தென்சொல் திரிசொல்லுமாதலை ஐயுறுதற்கு இடமின்றிக் காட்டுமென உறுதிப்படுத்துகிறார்.

கலித்தல் என்னும் பிறப்புக் கருத்துவேர் குழ → குழவு; குட்டு → குட்டி; குருத்து → குருளை; கரு → கருப்பம்; குன்னி → கன்னி; கன் → கன்று; சன், ஜந் என மேலையாரியம் கீழையாரியச் சொல்லாதலை ஒரு நூற்றுக்கும் மேற்பட்ட எடுத்துக்காட்டால் நிறுவுகிறார்.

உன் → முன் → மன் → மன்திரம் → மந்திரம் – என வரும் விரிவாக்கம் வியப்பு மிக்கது.

தேய்த்தல் → தேய் → தேயு → தீ. இயற்கை அறிவு கூர்ந்த எவரும் உணர்ந்து ஒப்பும் தகையது. இவ்வாறே பள்ளி, பாதம், புரி முதலிய சொற்களின் தனிப்பெரும் தன்மைகளும் விளக்கம் பெறுகின்றன.

தமிழின் தலைமையை நாட்டும் சொற்கள் தனிச்சொற்கள் என்றும் தொகுதிச் சொற்கள் என்றும் இருவகைய. இவை முறையே தனியடியாரும் தொகையடியாரும் போல்வன என்று பூனைப்பெயர்கள் என்னும் தொகைச்சொல் எழுதும் பாவாணர் முகப்பில் பொறிக்கிறார்.

"தனிச்சொற்கள் மொத்தம் ஐம்பது; தொகைச்சொற்கள் இருபது" என்று சுட்டும் பாவாணர் தனிச்சொற்களாக எழுதியவை 22. தொகைச் சொற்களாக எழுதியவை 2. ஆக எழுபது சொற்களில் 24 சொற்களே எழுதியமைந்தது. அவர் புகழுடல் எய்திய திங்கள் அளவும் (1981 சனவரி) வந்து குறையளவில் நின்றுவிட்ட தொகுதி ஈதாம்.

பூசை, பிள்ளை, விடரகன், கொத்தி என்னும் பூனைத் தொகுதிப் பெயர்களையும் நெருப்புப் பற்றிய 'சுள்' அடிச்சொற்களையும் (ஒள், அழல், உண்ணம், உருமம், சுள்ளம், சுண்டு, சூடு, சூர், சொல்) இணைத்துக்கொள்ளல் முறையாம்.

## 22. திரவிடத்தாய்

இந்நூல் 1944 இல் முதற்பதிப்பு, பாவாணர்தம் சொந்தப் பதிப்பாக வந்தது. 1956 இல் கழகப் பதிப்பாக மறுபதிப்புப் பெற்றது.

112 பக்கமுடைய இந்நூலின் முன்னுரை 32 பக்கங்களைக் கொண்டுள்ளது. முகவுரை நான்கு பக்கங்கள் உண்டு. ஆய்வாளர்கள் பிற நாட்டுச் செய்திகளாயின் மறைந்த உண்மையை வெளிப்படுத்துவதும், தமிழ்நாட்டுச் செய்திகளாயின் வெளிப்பட்ட உண்மையை மறைத்து வைப்பதையுமே தொழிலாகக் கொண்டுள்ளனர் என்று வருந்தும் பாவாணர், கார் காலத்தில் மறைக்கப்பட்ட கதிரவன் திடுமென ஒரு நாள் திகழ்ந்து தோன்றுவதுபோல் தமிழும் ஒரு நாள் உலகத்திற்கு வெளிப்படும் என்பதற்கு எட்டுணையும் ஐயமின்று என்கிறார்.

தமிழையும் பிற திராவிட மொழிகளையும் ஆராய்வதால் தமிழின் சிறப்பையும் பழந்தமிழரின் பெருமையையும் அறிவதுடன், உலக முழுவதும் தழுவிய குலநூல், வரலாற்று நூல், மொழிநூல் ஆகிய முக்கலைகளின் திறவு கோலையும் காணலாம் எனத் தெளிந்துரைக்கின்றார்.

முன்னுரையில் மொழி என்றால் என்ன, தமிழ் மொழி எது, தமிழ் என்னும் பெயர், குமரிநாடே தமிழ்த்தோன்றிய இடம், தமிழம் என்னும் பெயரே திரவிடம் எனத் திரிந்தது, தமிழே பிற திராவிட மொழிகளாகத் திரிந்தமை, தமிழினின்று பிற திராவிட மொழிகள் வேறுபடக் காரணங்கள், திராவிடத்திற்கு ஆரியக் கலப்பால் வந்த கேடு, திராவிட மொழிகளெல்லாம் சேர்ந்தே முழுத் திராவிடம் ஆகும் என்பது, தமிழ்ப் பண்படுத்தம், கால்டுவெல் தமிழைச் சிறப்பித்துக் கூறுவன, கால்டுவெல் கண்ட மொழிநூல் முடிவுகள் என்பவை விளக்கப்படுகின்றன.

மலையாளம், கன்னடம், தெலுங்கு, துளு, ஆகிய திராவிட மொழிகளின் வரலாறு, திரிபுற்றவகை, ஒப்பீடு என்பவற்றைத் தனித் தனிப் பகுதியாக ஆய்கிறார்.

ஒவ்வொரு மொழியிலும் வழங்கும் சொற்கள், பழமொழிகள், கதைகள் என்பவற்றையும் இலக்கண மரபையும் இனிதாக விளக்குகின்றார்.

முடிவாக, "இதுகாறுங் கூறியவற்றால் தமிழல் – திரவிட மொழிகள் உயிரும் உடம்பும் போன்று அடிப்படையும் முக்கியமுமான பகுதிகள் எல்லாம் தமிழே என்றும், ஆடையும் அணியும் போன்ற மேற்பு அணியில் மட்டும் ஆரியந் தழுவின என்றும் அவ்வாரியமும் (அவை) தமிழைத் தழுவுங்கால் வேண்டாததே என்றும் வடமொழியைத் தமிழல் – திரவிடத்தின் தாயெனக் கூறுவது பெரிதோர் ஏமாற்றமென்றும் தெரிந்து கொள்க" என்கிறார்.

ஆன, ஆடு, எரும, ஒட்டகம், கழுத, வெருகு, கரடி, கன்னு, காள, குதிர, குரங்கு, நரி, நாய், பன்னி, புலி, பூச், மான், முயலு, மூரி, குறுக்கன் (நரி) இவை மலையாளத்தில் வழங்கும் விலங்குப் பெயர்களுள் சில.

தந்த்த, அப்ப, அய்ய, தந்தெ, அண்ண, நம்ம, மாவ, அச்ச, அம்ம, அவ்வெ, தாயி, அக்க, தங்கி, அத்தெ, இவை கன்னடத்தில் வழங்கும் முறைப்பெயர்களுள் சில.

தல, நுதரு, கன்னு, கண்ணீரு, முக்கு, பல்லு, நாலுக, செவி, தாடி, தவட, முகமு, மீசமு, மெட, சேயி, உல்லமு, தொட, குதிகாலு, தோலு, ரத்தமு, நரமு இவை தெலுங்கில் வழங்கும் உறுப்புப் பெயர்களுள் சில. அப்ப, அரி, உப்பு, எண்ணெ, கஞ்சி, களி, கூளு, சாறு, தீனி, மந்து இவை துளுவில் வழங்கும் உணவுப்பொருள்களுள் சில.

விளக்கச்சொல் இல்லாமலே காணத்தக்கவை இச்சொற்கள். பாவாணர் விளக்கக் கையேடு ஒன்றினை வரைந்துள்ளார் எனலாம்.

## 23. திருக்குறள் தமிழ்மரபுரை

திருக்குறளுக்கு உரை கண்ட பாவாணர் அவ்வுரை தமிழ்மரபு காக்கும் உரையென்பதை நூற்பெயர் அறிந்த அளவால் அறியுமாறு இப்பெயர் சூட்டினார். அதற்குக் கரணியம் திருக்குறளின் முந்து நூல்கள் எனப்பட்டனவும் அதற்கு எழுதப்பட்ட உரைகளும் வடமொழி வழிப்பட்டனவாகக் காட்டப்பட்ட முரணை அகற்றி அரண் சேர்த்தற்கே ஆகும்.

'பெறுதற்கரிய அறுசுவை அரச உண்டியில் ஆங்காங்குக் கடுநஞ்சு கலந்து படைத்துள்ள தொப்ப உண்மைக்கு மாறானதும் தமிழுக்கும் தமிழர்க்கும் கேடு பயப்பதுமான ஆரிய நச்சுக் கருத்துக்களை முதலும் இடையும் முடிவுமான நெடுகலும் குறிக்கோளாகக் கொண்டு பரிமேலழகர் புகுத்தியிருப்பதை விலக்கவே, இவ்வுரை எழுதியதாகப் பாவாணர் கட்டுவது நூல்வரு நோக்கத்தைப் புலப்படுத்தும்.

நேசமணி பதிப்பக வெளியீடு 1969 இல் உரூ15 விலையில் வெளிவந்துள்ளது. முகவுரை நன்றியுரை, உள்ளடக்கம், முன்னுரை ஆகியவை முற்பகுதியாக நூல் தொடர்ந்து 24 பின்னிணைப்புகள், அருஞ்சொல் அகர முதலி, பாட்டு முதற்குறிப்பு அகர முதலி என்பவற்றொடு நிறைகின்றது.

இவற்றுள், திருக்குறளிலுள்ள வடமொழிச் சென்ற தென்சொற்கள் என்னும் பகுதி, 'அங்கணம்' தொடங்கி 'வேலை' முடிய சொற்களின் வேர் விளக்கம், பொருள் விளக்கம், எடுத்துக்காட்டு என்பவற்றை யுடையதாகும். இவற்றை அகர நிரலில் அமைத்துள்ளமை மேலும் சிறப்பாம்.

திருக்குறள் சிறப்புச்சொற்கள் என அதிநுட்பம், அளறு, அறன்கடை, கஃசு, குறியெதிர்ப்பை, கோட்டி கொளல், சோகா, தீயுழி, தோல், நெடுநீர், வரன் என்பவற்றைச் சுட்டுவதும்,

'திருவள்ளுவர் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு தமிழகத்துப் பிறந்து வாழ்ந்தவரேயாயினும், இவ்வுலகம் எங்குமுள்ள அறுவகையுயிரிகளும் எக்காலத்தும் இன்புற்று நீடு வாழவேண்டும் என்பதே அவர் திருவுள்ளமாகும்' என்பதும் அரிய இனிய தொகைச் செய்திகள் (இணைப்பு 6 : 23).

தமிழ ஆரியக்கருத்து வேறுபாடுகள் என இருபத்தொன்றனைப் பட்டியலிட்டுக் காட்டுவது பாவாணர் தம் கூர்ந்தாய்வு முத்திரையாகும் (இணைப்பு 18).

தமிழ நாகரிகம் ஆரியர் வருகைக்கு முற்பட்டமை, தமிழர் வாழ்க்கைக் குறிக்கோள், தமிழிலக்கியப் பொருட்பாகுபாடு, திருவள்ளுவர் வரலாறு, திருவள்ளுவர் காலக் குமுகாய நிலை, திருவள்ளுவர் காலச் சமயநிலை, திருவள்ளுவர் திருக்குறளியற்றிய நோக்கம், திருக்குறள் சிறப்பு, பாயிர விளக்கம், பரிமேலழகர் நச்சுக் கருத்துக்கள் என்னும் பன்னிரு தலைப்புகளில் முன்னுரை வழங்கியுள்ளார். (1–34)

திருவள்ளுவரின் பெற்றோர் உடன் பிறந்தோர் பற்றியவற்றைக் கட்டுக்கதை என்னும் பாவாணர், வாசுகியார் மனைவி என்பதில் நம்பத்தகாதது ஒன்றுமில்லை என்கிறார். இவர் பெயரால் வழங்கும் சில நூல்கள் இவர் பெயரைத் திருட்டுத் தனமாகக் கொண்டனவே என்கிறார்.

"தெள்ளிய மனமும் ஒள்ளிய அறிவும் திண்ணிய நெஞ்சும் நுண்ணிய மதியும் கொண்ட திருவள்ளுவர்" என்பதும்,

"இருமைக்கும் உதவும் விழுமிய பொருளை அணிமிக்க குறள் வெண்பாவால் பாடியிருப்பது, பன்மணி பதிந்த ஓவிய வேலைப்பாட்டுப் பொற்கலத்தில் அரசர்க்குரிய அறுசுவையுண்டியைப் படைத்தாற்போலும்" என்று திருக்குறளை நயப்பதும் பாவாணர் உள்ளச் சுரப்பாம்.

நூலில் கடவுள் வாழ்த்து என்பதை முதற்பகவன் வழுத்து என்கிறார். அதிகாரப் பெயரை விளக்கி அடுத்துவரும் அதிகார இயைபு காட்டி முகப்பு, அதிகாரம் தோறும் அமைக்கிறார்.

இதன் தொடருரை (இ–ரை) என்றே சொல்லுரை (பதவுரை) வரைகின்றார். பெரும்பாலும் சொல்விளக்கம், பொருள் விளக்கம், இலக்கணக் குறிப்பு, பிறருரை மறுப்பு, ஏற்பன ஏற்பு, மேற்கோள் ஒப்புமை என்பனவெல்லாம் விரிவாகவே வழங்குகிறார்.

"கடவுளை வணங்காவிடில் கல்வியால் பயனில்லை என்பது இக்குறட்கருத்து" எனக் கருத்துரையும் கருதுமாறு உரைக்கிறார்.(2)

இந்நான்கு குறளாலும் இம்மூன்று குறளாலும் எனத் தொடர்புரை வழங்கிச் செல்கிறார்.

வடநூற்சார்பு, வேத வழக்கு எனப் பரிமேலழகர் கூறுவனவற்றை முற்றாக மறுத்து தென்னூற்சார்பு, தென்வழக்கு என்பவற்றின் வழிப்பட்டது திருக்குறள் என்பதை நிலைநாட்டுதற்கே, திருக்குறள் தமிழ்மரபுரை பாவாணர் வரைந்தார் என்பது நுனித்து நோக்குவார்க்கு எளிதில் விளங்கும். மேலும் நம்பாமதத்தார் உரை வழியில் பாவாணர் செல்லாமையும் புலப்படும். பெரும்பாலும் வழிமாறும் இடங்களிலன்றிப் பரிமேலழகர் உரை, விளக்கம் ஆகியவற்றைப் பாவாணர் ஏற்றுக்கொண்டே நடையிடுகிறார்.

வடசொல் என்றோ, வடநூல் வழக்கு என்றோ அவர் கூறும் இடங்களில் திட்டவட்டமாக மறுக்காமல் பாவாணர் சென்றாரல்லர். அவர் கூறும் பொருளைப் பொருளாகக் கொண்டாலும் விளக்கவகையாலேயே பாவாணர் அவர்க்குப் பெரிதும் முரண்பட்டுச் செல்கிறார். 'பரிமேலழகர் நச்சுக் கருத்துக்கள்' என்று முன்னுரையில் (32–34) குறிப்பிடுவனவற்றை நோக்கிய அளவால் இவ்வுண்மை புலப்படும்.

பாவாணர் உரைவரைந்து அதன்மேலும் கொள்ளத்தக்க வகையில் ஒரு பொருள் கிட்டுமாயின் அதனைச் சுட்டிக்காட்டி இவ்வாறு உரைக்கினும் பொருந்தும் என்கிறார். எ.டு. 24.

'செயற்கரிய செய்வார்' என்னும் குறளில் பெரியர், சிறியர் என்னும் இருவகுப்பார்க்கும் இடையே வேறொரு வகுப்பாரை (உரியர்) உரைத்தல் சிறப்பன்று எனப் பாட வேறுபாடு காட்டுவாரை மறுப்பார்.

'சுவை ஒளி' என்னும் குறளில் மெய்யியல் கருத்துகள் மிகப்பல உரைக்கிறார்.

'பூசனை' என்பதற்கு மரபு விளக்கமும் 'பொருட் பெண்டிர்' என்னும் குறளில் வரும் 'பொய்ம்மை முயக்கம்' என்பதற்கு நாட்டு வழக்கமும் கூறிக் கருத்து விளக்கம் செய்கிறார்.

'அறத்தாறிதுவென வேண்டா' என்னும் குறளில் (38) 'பல்லக்கைச் சுமப்பாரையும் அதில் ஏறிச் செல்வானையும் காட்டி இதுதான் அறத்தின் பயன் என்று கூறாதே என்பதை இக்குறளுரையாகக் கூறுவது இக்காலத்திற்கு ஆகுமேயன்றி ஆசிரியர் கருத்தாகாது' என்கிறார்.

'தெய்வம் தொழாஅள்' என்னும் குறளில் ஒரு கால் வள்ளுவர் குறள் பண்டைக் காலத்து ஒரு பத்தினிப்பெண் செய்த இறும்பூதை (அற்புதத்தை) அடிப்படையாகக் கொண்டதாகவும் இருக்கலாம் என்னும் பாவாணர், உயர்வு நவிற்சியாகக் கொள்ளின் ஒரு குற்றத்திற்கும் இடமில்லை என்பார். மேலும் "புரட்சிப்பாவலர் பாரதிதாசனார் பெய்யெனப் பெய்யும் மழை போல்வாள் என்று பொருள் கூறிப் பொருத்தமாக்குவர்" என்றும் குறிப்பிடுகிறார்.

'அடியளந்தான் தாயது' என்பதற்குக் கதிரவன் மூவெட்டால் கடந்த மாநிலம் முழுவதையும் எனப் புதுப்பொருள் காண்கிறார். வேத ஆரியர் கதிரவனை விண்டு (விஷ்ணு) என அழைத்ததைக் காட்டுகிறார்.

மருந்து என்னும் அதிகாரப் பத்துப் பாட்டுக்கும் பதினைந்து பக்கம் உரை வரைகிறார் பாவாணர். அத்தகு விரிவுரை அனைத்திற்கும் எழுதியிருப்பின் ஈராயிரம் பக்கங்களுக்கு மேலும் உரை வளர்ந்திருக்கும். நாட்டு மருத்துவத்தோய்வு நன்கு வெளிப்பட விளக்கும் உரை அது (அதி. 95)

இன்பத்துப்பால், களவியல் முகப்பு விரிவுமிக்கது. இன்பத்துப்பால் குறள்களுக்கு நிகழ்ச்சி விளக்கம் (கிளவி விளக்கம்) காட்டி நாடக நடைப்படுத்துகிறார்.

உற்றுழி உதவினோர் உறுபொருள் கொடுத்தோர் பற்றிய செய்திகள் கட்டளைக் கலித்துறைப் பாவாகக் கிளர்ந்தன.

உலகத் தமிழ்க் கழக முதல் மாநாடு பறம்புக் குடியில் (1969) நிகழ்ந்தபோது அம்மாநாட்டில் வெளியிடப்பட்டது திருக்குறள் தமிழ் மரபுரை. உரிமை ஞானமுத்து தேவநேயன் (1902) என்பது.

## 24. துவாரகை மன்னன் அல்லது பூபாரந்தீர்த்த புண்ணியன்

இச்சுவடி பாவாணர் மன்னார்குடியில் பணியாற்றிய காலத்தில் வெளியிடப்பட்டது. ஆண்டு 1945. கா.சு. பிள்ளை முன்னுரை வழங்கியுள்ளார்.

"செவ்விதிற் சுருக்கி வரையப்பட்ட நூல்" என்றும், 'இனிய உரைநடையும் இடை இடை அழகிய பாடல்களும் கொண்டநூல்' என்றும், 'மாணவர் செந்தமிழ் உரைநடைபயில வழிகாட்டி' என்றும்

கூறுகிறார், கா.சு. பிள்ளை.

மாணவர் பயன்பாடு பற்றி எழுதப்பட்டது இது என்னும் பாவாணர், இதில் பாகவதப் பகுதியும், பாரதப் பகுதியும் கலந்துள்ளன; இதுவே இந்நூற்குச் சிறப்பாகும்; வேண்டாப்பகுதிகள் விலக்கப்பட்டன.

திருவவதாரம் தொடங்கி வைகுந்த வைபவம் இறுதியாக 29 குறுந்தலைப்பில் கதை வரையப்பட்டுள்ளது. முதற்கண் தோற்றுவாயுடன் (50) பகுதி நிறைவில் தசாவதார நோக்கம் என்பதொன்றும் உண்டு. பதின் திருப்பிறப்புகளைப் பற்றியும் சுருங்கக் கூறி வில்லியார் பாடலொன்றை எடுத்துக் காட்டுகிறார். தசாவதார நோக்கம் 'கொடியவரை நீக்கி அடியவரைக் காத்தல்' (துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனம்) என்கிறார். அன்றே மொழியாக்க நோக்கு அரும்பியமை இப்பெயர்ப்பாலே புலப்படும்.

'ஒருவனுக்குத் தன்உயிரே மிகவும் அருமையானது ஆயினும் அறிவுள்ளவன் எப்போதும் மன்னுயிரையே மதிப்பான்' (4)

'கல்வியினால் அறிவும், அறிவினால் ஒழுக்கமும், ஒழுக்கத்தினால் உயர்வும் உண்டாகும்' (28)

'உலகத்தில் ஒருவர்க்கு உடன்பிறப்பு மிகவும் அருமையாம். அதிலும் உடன்பிறந்தார் ஒற்றுமையால் உடன் வாழ்தல் மிகவும் பெருமையாம். கண்ணிருந்தால் கைபடும்; நாவிருந்தால் பல்படும். அது போல உடன்பிறந்தார்க்குள்ளும் தவறுண்டாதல் உலக வழக்கம். அதுபற்றி ஒருவரை ஒருவர் பகைத்தல் ஒவ்வாது. குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை'. (58)

சூது, தாயம், சீட்டு, கவறு, கட்டம், சொக்கட்டான் எனப்பல. இது பாவாணர் இளமையிலேயே கொண்ட தொகுப்புநிலை. 'குறையறை' என்பது குறை நீக்குதல், (74) 'அறிவறை' என்பது சிலம்பு. 'கட்டுரைக் கசடறை' என்பது பாவாணர் நூல்களுள் ஒன்று.

'குடிப்பது கூழ், உடுப்பது கந்தை'

'ஆட்டத்தைக் காட்டி நாட்டத்தைக் கவர்ந்தான்'

'கண்ணபிரான் ஒருவரே திருக்குழந்தை, மற்றவை கருக்குழந்தை'

'பற்றறுத்தார்க் கெல்லாம் பரமபதப்பேறு திண்ணம்' (87) - இன்னவை பாவாணர்க்கு அந்நாளே கைவந்த எதுகை, மோனை, இயைபு நடைவனப்புகள்.

'உழவர் பயிரை வளர்ப்பதற்குக் களைகளைக் களைவார்; களைகள் இல்லாதவிடத்துப் பயிர் அடர்த்தியாயிருப்பின் பயிரையும் களைவார்' (81) இன்னவை இடையிடையே வரும் அருமை உரைகள்.

## 25. 'பண்டைத் தமிழ நாகரிகமும் பண்பாடும்'

'தமிழர் நாகரிகம் மேலை நாட்டார்க்குத் தெரிந்த அளவுகூடத் தமிழர்க்குத் தெரியாது மறையுண்டு கிடக்கிறது. இவ்விரங்கத்தக்க நிலைமை தமிழரின் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாயிருத்தலால் இதை நீக்குதற்பொருட்டு இந்நூலை எழுதத் துணிந்தேன்' என்கிறார் பாவாணர்.

1966 இல் நேசமணி பதிப்பக வாயிலாக இந்நூல் வெளிவந்துள்ளது. நாகரிகம் என்னும் சொல் விளக்கம், பண்பாடு என்னும் சொல்விளக்கம், இரண்டற்கும் உள்ளவேறுபாடு, இந்திய நாகரிகம் தமிழரதேயாதல், இந்திய நாகரிகம் ஆரியரதெனக் காட்டக் கையாளப்படும் வழிகள், குமரிக்கண்ட இடப்பெயரும் மூவேந்தர் குடிப்பெயரும் என்பவை முன்னுரையாய் 23 பக்கங்களில் அமைகின்றன.

நாகரிகம் என்பது நகர மக்களின் திருந்திய வாழ்க்கை. நாகரிகம் என்னும் சொல் நகரகம் என்னும் சொல்லின் திரிபாகும். ஆங்கிலத்திலும் நாகரிகத்தை குறிக்கும் இலத்தீனச் சொல் நகரப் பெயரினின்று தோன்றியதே என்று விளக்குகிறார் பாவாணர்.

'பண்படுவது பண்பாடு, பண்பாடு சீர்ப்படுதல் அல்லது திருந்துதல். திருந்திய நிலத்தைப் பண்பட்ட அல்லது பண்படுத்தப்பட்ட நிலமென்றும் திருந்திய தமிழைப் பண்பட்ட செந்தமிழ் (தனிப்பாடல்) என்றும், திருந்திய உள்ளத்தைப் பண்பட்ட உள்ளமென்றும் சொல்வது வழக்கம்' என்கிறார் பாவாணர். (6)

இரண்டற்கும் உள்ள வேறுபாட்டை, 'நாகரிகம் என்பது திருந்திய வாழ்க்கை. அது எல்லாப் பொருள்களையும் தமக்கே பயன்படுத்துவது. பண்பாடு என்பது திருந்திய ஒழுக்கம். அது எல்லாப் பொருள்களையும் தமக்கும் பிறர்க்கும் பயன்படுத்துவது' என்று தெளிவாக்குகிறார்.

நாகரிகத்தினும் உயர்ந்த நிலையே பண்பாடு, நாகரிகம் இன்றியும் பண்பாடு உண்டு. அஃறிணையாயினும் பண்பாட்டில் மக்களினும் விஞ்சியவை உண்டு என்று காக்கை, புறா முதலியவற்றைக் காட்டிக் கூறுகிறார். (9)

தமிழ் நாகரிகப் பகுதியை மொழி, துப்புரவு, ஊண், உடை, அணி, உறையுள், ஊர்தி, வாழ்க்கை, சமயம், தொழில், வாணிகம், அரசியல், கல்வி, கலை, அறிவியல், பொழுதுபோக்கு எனப் பகுத்துக்கொண்டு வரைகிறார். கலைகள் இருபத்து மூன்றும் அறிவியல்கள் இருபத்து நான்கும் இடம் பெற்றுள.

இந்நூலுள் நாகரிகப் பகுதியே மிகுதி. (24-195)

பண்பாடு என்னும் பகுதியில் மாவலி தனக்கு இறுதி நேரும் என்று அறிந்தும் வாய்ச்சொல் தப்பாமையும் அந்தணர் பண்பாடு அருள் என்றும், மூலன் என்னும் ஆயன் இறக்க, அவன் ஆக்களின் கவலையைத் தீர்த்த திருமூலர் அருண்மையையும் சுட்டுகிறார்.

புலவர், ஆசிரியர், பூசாரியர், கணியர், ஓதுவார், கணக்கர், எனப் பலபெயர் பெற்றுக் கல்வித்தொழில் புரியும் இல்லறத்தார் பார்ப்பார் எனத் தெளிவிக்கிறார். (204)

அறத்திற்காகக் காசிலா ஓடம் விடுவாரையும், எளியரிடம் களவு செய்யாக் கள்வர் பண்பாட்டையும் எடுத்துரைக்கிறார்.

மந்திரம் என்னும் சொல் வரலாற்றை இணைப்பாகக் கூறும். பாவாணர் மன்திரம் என்னும் கூட்டுச்சொல் மந்திரம் எனத் திரிந்தமையை விளக்குகிறார். வாய்மொழியே மந்திரம் என்றும்

'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப'

என்பது தொல்காப்பியர் உரை எனினும் அவர்க்கு முற்பட்ட பழமையது என்றும் தெளிவிப்பார்.

## 26. பழந்தமிழாட்சி

1952 இல் வெளிவந்தது இந்நூல். பழந்தமிழாட்சி பற்றித் தமிழில் போதிய விரிவான நூல் இல்லாமையால், தாம் இலக்கியம், கல்வெட்டு, உலக வழக்கு ஆகிய முந்நிலைக் களத்தினின்றும் தொகுத்து எழுதியதாகக் கூறுகிறார் பாவாணர்.

அரசியலுறுப்புகள் முதலாக அரசர் முடிபு ஈறாக 26 தலைப்புகளில் நூல் இயல்கின்றது. பின்னிணைப்பாக மக்கள் நிலைமை, மொழி நிலைமை, சீமையரசாட்சி வகைகள், வேத்தியல் எழுத்தும் நூல்களும், சிறப்புப் பெயர்களின் அகரவரிசை என்பவை இடம் பெற்றுள்ளன.

படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என உறுப்புகளை எண்ணும் நாம், ஒரு நாடு அல்லது சீமை (State) 1. ஆள் நிலம் (Teritory) 2. குடிகள் (Population) 3. அரசியல் (Government) 4. கோன்மை (Sovereignty) என நாலுறுப்புகளையுடையது." எனப் பாவாணர் தொடங்குவதை நோக்க உலக அரசியலோடு ஒப்பு நோக்கிய பார்வை பாவாணர்க்கு உளதாதல் தெளிவாம்.

அரசியல் என்பது சட்டம் அமைப்போர், கருமம் ஆற்றுவோர், நடுத்தீர்ப்பாளர் என்னும் முத்திற - முத்துறை அதிகார வகுப்புகளை உறுப்பாகக் கொண்டது என்பதும் மேல் விளக்கம் தரும்.

சிற்றரசர் மன்னர், தலைமையரசர் வேந்தர், கோ எனவும் வழங்கப்பட்டதைத் தெரிவிக்கிறார்.

அரசர் அமரும் அரியணைகளுக்கும் பெயருண்டு என்கிறார்.

அரசச் சின்னங்கள் பதினைந்தை வரிசைப்படுத்தி விளக்குகிறார். அரசியல் வினைஞர், பெயர், செயல் ஆகியவற்றை விரிவாகக் கூறுகிறார்.

வாரியத்திற்குத் தேர்ந்தெடுக்கப் பெறுவார் தகுதி எனவும் தகாதார் எவர் எனவும் கூறுவன கொண்டு அந்நாளின் அரசு அறத்தை எத்தகு சிறப்பாகப் போற்றியது என்பதை அறிவதுடன் முடியாட்சியில் போற்றிய குடியாட்சி முறைச் சிறப்பும் புலப்படும்.

பாதுகாப்பு என்பதை விளக்கும் பாவாணர் வளைவிற் பொறி முதலாக அரிநூற் பொறி ஈறாக முப்பத்தைந்து பொறிகள் அரணத் திருந்தமையைச் சிலம்பு வழியாகக் காட்டுகிறார்.

ஆவணத்திற்கு ஏடு, ஓலை, கரணம், கலம், சீட்டு, செய்கை, தீட்டு, நறுக்கு, பட்டிகை, பட்டயம், முறி முதலிய பிற சொற்களும் அவ்வவ்வினைக்கும் எழுதப்பட்ட கருவிக்கும் ஏற்ப வழங்கியமை தெரிவிக்கிறார். (78)

வாங்கப்பட்ட வரிகள் அங்காடிப் பட்டம் முதலாக மடக்கு வரி ஈறாகக் குறிப்பிடுகிறார். வரிகளின் எண்ணிக்கை 225. பாவாணர் செய்த அடைவு முயற்சிக்குச் சான்றாகும் இது!

இக்காலத்தில் இல்லாத ஆள்வரி, மணவரி, துலாபார வரி முதலிய சிறுவரிகள் அக்காலத்திருந்தமையைச் சுட்டுகிறார். (86)

அளவைகள் கூறும்போது கீழ்வாய்ச் சிற்றிலக்கத்தில் அடிமட்ட எண் கீழ் முந்திரி 1/102400 என்கிறார். அரசர்க்கு அடங்காது வாழ்ந்த ஊர் 'அடங்காப் பற்று' எனப்பட்டது. 'ஆசுகவிகள் காசு' என்பது பிற்காலத்து வழங்கப்பட்ட வரி. அது அரச ஒப்பம்

பெற்றுப் புலவர் வாழ்க்கைச் செலவுக்கு வாங்கப்பட்டது போலும் என்கிறார்.

'வேத்தியல் எழுத்தும் நூல்களும்' என்னும் இணைப்பு, அரசு சார்ந்த 'இலக்கிய வரலாறு' ஆகும். 'சில அரசியல் கருத்துக்கள்' எனப்படும் தொகுப்பு அரிய தொகுப்பாகும். சுருங்கக் கூறினால் பாவாணரின் வரலாற்றுப் புலமையை வெளிப்படுத்தும் நூல் இதுவாகும்.

## 27. மண்ணில் விண்

பாவாணரின் பன்முக அறிவாற்றல் திறங்களைப் பளிச்சிட்டுக் காட்டும் நூல் இதுவாகும். இதற்கு வள்ளுவர் கூட்டுடமை என்பதும் மற்றொரு பெயர்.

'தக்க அரசிருந்து செங்கோலாட்சி செய்யின் விண்ணுலகின்பம் மண்ணுலகத்திலும் நுகர்தல் கூடும்' என்பது நூலாசிரியரின் முகவுரை.

"எல்லாத் தொழிலார்க்கும் எக்காலத்திற்கும் ஏற்றதும் வகுப்பு வேற்றுமையைத் தோற்றுவிக்காததும், உடம்பியற் பண்பாட்டையும் உளவியற் பண்பாட்டையும் ஒருங்கே வளர்ப்பதும், இறைவழிபாட்டை மறுக்காததும், தனியுடைமையை விலக்காததும் பகுத்தறிவிற்கு முற்றும் ஒத்ததும், உயரியதுமான கூட்டுடைமையாட்சி அல்லது வாழ்க்கை கி.மு. அல்லது கி.பி. முதல் நூற்றாண்டிலேயே திருக்குறள் வாயிலாகத் திருவள்ளுவரால் தெரிவிக்கப்பட்டது. அதுவே இப்பொத்தகத்தில் விளக்கப்பட்டுள்ளது." என்று முகவுரையிலேயே நூற்பிழிவைத் தருகிறார் பாவாணர்.

வள்ளுவர் கூட்டுடைமை என்பதை ஒன்பது உள் தலைப்புகளாக வகுத்து வரைந்துள்ளார் பாவாணர். அவை வள்ளுவர் கூட்டுடைமை இயல்பு, வறுமையடையும் வகைகள், மக்கள் பண்பாடு, வள்ளுவர் கூட்டுடமையின் தனிச்சிறப்பு, கூட்டுடமையின் நன்மைகள், கூட்டுடமைப் பண்பாடு, மக்கட் பெருக்கம், மக்கட் பெருக்கத் தீமைகள், மக்கட் பெருக்க மட்டுப்படுத்தம் என்பவை.

எந்நாட்டு நலத்திற்கும் பொதுவாக அமையும் திட்டங்களைத் தமிழ் நாட்டரசின் கடமை என்னும் தலைப்பிலும் தமிழ்நாட்டு அரசுக்கென உள்ள வடமொழி இந்தி வல்லாண்மைகளை ஒழித்தல், தமிழைப் பேணி வளர்த்தல் இருமொழிக்கொள்கை ஏற்றல் என்பவற்றைத் தமிழ் நாட்டரசின் தனிக்கடமை என்னும் தலைப்பிலும் பகுத்துக் கொள்கிறார்.

உலகக் கூட்டரசின் இன்றியமையாமையை உரைக்கும் பாவாணர் அதன் நன்மைகளைப் பட்டியலிட்டுப் பதினாறு காட்டுகிறார். நிறைவில் இத்தகைய விண்ணக இன்ப வாழ்வை மண்ணகத்தில் நிறுவுவதற்கு உலக முதுநாடாகிய இந்தியாவே உலக முதுமொழியாகிய செந்தமிழைக் கொண்டு விரைந்து அடிகோல வேண்டும் என்று கூறி நூலை முடிவுரை, மக்கள் வாழ்த்து என்பவற்றுடன் முடிக்கிறார்.(248). சாதி ஒழிப்பு, குடும்பக் கட்டுப்பாடு, மது ஒழிப்பு, தீயோரைத் திருத்துதல், பல்வேறு நாட்டு அரசமைப்பு இன்னன இந்நூலில் ஆழமாகவும் அழுத்தமாகவும் கூறப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாம்.

## 28. முதல் தாய்மொழி

முதல் தாய்மொழி அல்லது தமிழாக்க விளக்கம் என்னும் நூல் கழக வெளியீடு 631 ஆக வெளிவந்தது. முதல் பதிப்பு 1953.

"என் முதல் தாய்மொழியை அச்சிட வேண்டும். அதன் பிறகுதான் எங்கள் முதல்வருக்கு (பிரின்ஸ்பாலுக்கு) என் அறிவு வெளியாகும் என்று பாவாணர் கழக ஆட்சியாளர்க்கு எழுதிய அஞ்சலால் (14.8.1931) இந்நூல் மேல் பாவாணர் கொண்டிருந்த மதிப்பீடும் அப்பொழுதே எழுதியிருந்த அல்லது எழுதத்திட்டமிட்டிருந்த குறிப்பும் வெளிப்படும்.

"இதனை ஆக்கித் தந்த மெய்ப்பொருள் காணும் பேரறிவு படைத்த புலவர் திரு.தேவநேயனார்" என்பது பதிப்புரையில் பாவாணர் பற்றிய குறிப்பு.

"கணிதமும் அறிவியலும் எங்ஙனம் திட்டமும் துல்லியமுமான நூற்கலையோ, அங்ஙனமே மொழி நூலும்" என முகவுரையிற் குறிப்பிடுகிறார் பாவாணர்.

மேலும், "மொழியானது இந்நாட்டில் பொதுவாய்க் கருதுகிறபடி இறைவனாற் படைக்கப்பட்டதுமன்று; இயற்கையாய் உள்ளதுமன்று; மாந்தனால் ஆக்கப்பட்டதே. ஆயின் ஒருவனால் மட்டுமன்று; கழிபல ஊழிகளாகக் கணக்கற்ற தலைமுறையாளரால் சிறிது சிறிதாய் ஆக்கப் பெற்றதாகும்" என்று மொழி தோன்றிய வகையை எடுத்துரைக்கிறார்.

"தமிழ் எங்ஙனம் ஒன்றன் சார்பின்றித் தானே தோன்றி வளர்ந்துள்ளது என்பது இந்நூலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது" என்று நூல் இயங்கும் வகையையும் தெரிவிக்கின்றார்.

குமரிக்கண்டமே மாந்தன் பிறந்தகம், மக்கள் ஞாலத்தில் பரவிய வகை, மொழி தோன்றி வகை, தமிழ்

முதல் தாய்மொழி என்பதற்குக் காரணங்கள், பெரும்பான் மொழிகள் தமிழை ஒவ்வாதிருத்தற்குக் காரணங்கள், மொழிகள் மாந்தன் அமைப்பே, மொழிவளர்ச்சி ஒரு திரிந்தமைவு, தமிழ் அல்லது தமிழன் பிறந்தகம் குமரிக்கண்டமே என்பதற்குக் காரணங்கள் என எண் வகையில் பகுத்து விரித்து எழுதுகிறார். ஒவ்வொன்றன் காரணங்களையும் எண்ணிட்டு வரிசைப்படுத்துகிறார்.

நூலைக் காண்டம், படலம், இயல், துறை என ஒன்றனுள் ஒன்றாகப் பகுத்துத் திட்டமுள்ள யாப்புறவில் அமைத்துள்ளார்.

காண்டங்கள் குறிப்பொலிக் காண்டம், சுட்டொலிக் காண்டம் எனஇரண்டே முன்னது ஐம்படலங்களையும் பின்னதும் ஐம்படலங்களையும் உடையனவே. பின்னதில் உள்ள ஆகார, ஈகாரச் சுட்டுப் படலங்களினும் ஊகாரச் சுட்டுப்படலம் ஒன்றே, 95 விழுக்காடு விளக்கம் பெறுகிறது.

குறிப்பொலிக் காண்டத்தில் உணர்வொலிப்படலம், ஒப்பொலிப் படலம், குறியொலிப் படலம், வாய்ச்செய்கையொலிப் படலம், குழவி வளர்ப்பொலிப் படலம் என்பவை உள.

இவ்வகை ஒலிகளுள் வாய்ச்செய்கை யொலியும் அதனினும் ஒப்பொலிகளும் மொழிவளர்ச்சிக்குத் துணையாவதை அக்காண்ட நிறைவில் சுட்டுகிறார்.

"சேய்மை, அண்மை, முன்மை ஆகிய மூவிடங்களையும் முறையே சுட்டக்கூடிய ஒலிகள் ஆ, ஈ, ஊ என்னும் மூன்றாய்த்தான் இருக்க முடியும்."

"வாயை ஆவென்று விரிவாகத் திறந்து சேய்மையைச் சுட்டும்போது ஆகார ஒலியும், ஈயென்று பின்னோக்கி இழுத்துச் சேய்மைக்குப் பின்மையாகிய அண்மையைச் சுட்டும்போது ஊகார ஒலியும் பிறத்தல் காண்க" முச்சுட்டும் மூவிடங்களையும் குறிக்கும் பாவாணர்.

"நெடிலின் குறுக்கம் குறிலும் குறிலின் நீட்டம் நெடிலும் ஆதலின் ஆ, ஈ, ஊ எனினும் அ, இ, உ எனினும் ஒன்றே! குறிலினும் நெடில் ஒலித்தற்கெளிதாதலானும் குழந்தைகள் குறில்களைப் பெரும்பாலும் நெடிலாகவே யொலித்தலானும் குழந்தை நிலையில் இருந்த முந்தியல் மாந்தன் வாயில் நெடில்களே முந்திப் பிறந்திருத்தல் வேண்டும்" என்று அறுதியிடுகிறார்.

முன்மைக் கருத்தினின்று முன் வருதலாகிய தோன்றற் கருத்தும், தோன்றற் கருத்தினின்று முற்படற் கருத்தும், முற்படற் கருத்தினின்றும் முற்செலவுக் கருத்தும் முற்செலவுக் கருத்தினின்று நெருங்குதற் கருத்தும், தொடுதற் கருத்தினின்று கூடற் கருத்தும், கூடற் கருத்தினின்று வளைதற் கருத்தும் பிறக்கும் என்பதை இருதிணை உயிரிகளைக் கொண்டே தெளிவிக்கிறார்.

கூடற்கருத்தினின்று பிறக்கும் வளைதற் கருத்தொடு துளைத்தற் கருத்துத் தோன்றுவதையும் காட்டுகிறார். துளைத்தல் என்பது குழித்தல், தோண்டுதல், துளையிடுதல், புகுதல், துருவுதல் ஆகிய ஐவகைக் கருத்துக்களைத் தழுவும் என்னும் பாவாணர், "தோன்றல் முதல் துருவல் வரையுள்ள கருத்துக்கள் எல்லாம் ஒரு சுழல் சக்கரமாதல் காண்க" என வரையறை செய்கிறார்.

ஊகாரச் சுட்டு வழியே தமிழமைப்புற்ற வகையைத் தெள்ளத் தெளியக் காட்டுதலாலும் அம்மொழியே உலகெலாம் பரவியது ஆதலாலும் நூற்பெயரை 'முதற்றாய்மொழி அல்லது தமிழாக்க விளக்கம்' என்கிறார்.

ஈகாரச்சுட்டு அண்மை, பின்மை, இழுத்தல் வழிப்பட்டதையும் ஆகாரச் சுட்டு சேய்மை ஒன்றே குறித்து நிற்றலையும் மட்டிட்டுக் காட்டுகிறார்.

நூற்பொருளைத் திரட்டாக்கி, "தமிழ் குமரி நாட்டில் பிறமொழிச் சார்பின்றித் தானே தோன்றி வளர்ந்த தொன்முது மொழி என்றும், அது உணர்வொலி, ஒப்பொலி, குறியொலி, வாய்ச்செய்கை ஒலி, குழவி வளர்ப்பொலி, சுட்டொலி என்னும் அறுவகை நிலைக் களத்தினின்றும் எழுந்த சொற்களின் தொகுதி என்றும், அந்நிலைக் களங்களுள் சுட்டொலி, அதனுள்ளும் முன்மைச் சுட்டு - மிகச் சிறந்ததென்றும் தமிழ்ச் சொற்களுள் நூற்றுக்குத் தொண்ணூறு விழுக்காடு ஊகாரச் சுட்டினின்றே தோன்றியவையென்றும் அறிந்து கொள்க" என முடிவுரை கூறுகிறார்.

## 29. வடமொழி வரலாறு

நூல் 350 பக்கங்களையுடையது, மொழியதிகாரம், இலக்கண அதிகாரம், இலக்கிய அதிகாரம், தமிழ் மறைப்பதிகாரம், முடிபதிகாரம் என ஐந்ததிகாரங்களைக் கொண்டது.

முன்னுரையில், "இவ்வுலகில் இதுவரை நிகழ்ந்துள்ள பெரிய ஏமாற்றுக்களுள் தலைமையானது வடமொழி 'தேவமொழி' என்பதே", என்று முகவுரையில்

சுட்டும் பாவாணர், 'தமிழை வடமொழியினின்று மீட்டு மீண்டும் அதை அரியணையில் அமர்த்தினாலன்றித் தமிழும் தமிழனும் வாழ வழியில்லை. ஆகவே இந்நூலை எழுதத் துணிந்தேன்'' என்கிறார்.

தமிழின் தென்மை, தமிழின் திரிபு வளர்ச்சி, ஆரிய மொழிக் குடும்பம், வடமொழிப் பெயர்கள், ஆரியர்க்குப் பிறந்தகமின்மை, வடமொழியின் ஐந்நிலை, இந்தியாவிற்கு ஆரியர் வருகை, வேதமும் வேதமொழியும், வேத ஆரியர் தென்னாடு வருகை, சமற்கிருதவாக்கம், தொல்காப்பியமும் பாணிணீயமும், ஆரிய ஏமாற்று, மூவகை வடசொற்கள், முக்கால வடமொழித் தமிழ்ச்சொற்கள், மேலையர் திரிபுணர்ச்சி, தென்மொழி வடமொழி வேறுபாடு, தென்மொழி வடமொழிப் போராட்டம் என்னும் பதினேழு தலைப்புகளில் முறையே முன்னுரையை வரைகின்றார்.

''இந்திய ஐரோப்பிய மொழித் தொகுதியின் தொடக்க நிலை தமிழாயும், முடிவு நிலை சமற்கிருதமாயும் இருப்பதால் வடமொழியின் வரலாற்றை அல்லது இயல்பைத் தெளிவாய் அறிதற்குத் தமிழின் பிறந்தகம் எதுவென்று முதற்கண் காணல் இன்றியமையாதது'' என்று தமிழின் தென்மை தொடங்கி முன்னுரையில் ஆய்வது நல்ல நுழைவாயில் ஆகின்றது.

இந்தியாவிற்குள் பிராமணர்க்குத் தனிநாடில் லாமை போல், விரிநீர் வியனுலகிலும் ஆரியத்திற்குப் பிறந்தகம் இல்லாமையைக் குறிப்பிடும் பாவாணர், ''திரவிடம் வடமேற்காகத் தொடர்ந்து சென்று காண்டிநேவியத்தை முட்டித் திரும்பி, ஐரோப்பாவில் ஆரியமாக மாறிய பின், மீண்டும் தென்கிழக்காக வந்து வட இந்தியாவில் வேத ஆரியத்தையும் தென்னிந்தியத் தொடர்பினாற் சமற்கிருதத்தையும் பிறப்பித்திருப்பதால், இந்தியாவும் ஐரோப்பாவும் ஆகிய இருகோடிகளும் இவற்றிற்கு இடைப்பட்ட பல இடங்களும் ஒவ்வொரு வகையில் ஒவ்வோரளவு ஆரியப் பிறந்தகமாக, வெவ்வேறுகோணத்தில் நோக்குவார்க்குத் தனித்தனிக் காட்சியளிக்கின்றன'' என்கிறார்.

தென்திரவிடம், வட திரவிடம் எனப் பகுத்து ஆய்வது ஆழமிக்க செய்தியாம். பிராகிருதம் என்னும் வடதிரவிடத்திற்கும் தமிழுக்கும் உள்ள தொடர்பை ஐம்பான் சொற்களை எடுத்துக்காட்டி நிறுவுகிறார்.

ஐந்ததிகாரங்களைக் கொண்ட இந்நூலுள் மொழியதிகாரம் 241 பக்கங்கள், மற்றை அதிகாரங்கள் நான்கும் 52 பக்கங்கள், முடிபதிகாரம் வெண்பா 16 மட்டுமே கொண்டது.

மொழியதிகாரச் சிறப்பு அகராதி அமைப்பாகும். தமிழில் மேலையாரிய இனச்சொற்கள் பிராகிருதச் சொற்கள் உள்ளமையை முகப்பாகக் காட்டி வடமொழிப்புகுந்த தென் சொற்கள் என 'ஆக்கம்' முதல் 'வைகை' வரை அகர நிரலில் விரியக் கூறுகிறார்.

தமிழ் மறைப்பதிகாரம் பன்னிரு பக்கங்களையுடையது. எனினும் சொல் மறைப்பு, சொற்பொருள் மறைப்பு, முதனூல் மறைப்பு, கழகக் கலைப்பு, முன்னூலழிப்பு, கலை மறைப்பு, அறிவியல் மறைப்பு, தெய்வ மறைப்பு, சமய மறைப்பு, கொள்கை மறைப்பு, கருத்து மறைப்பு, ஒழுக்கமறைப்பு, நாகரிக மறைப்பு, பண்பாட்டு மறைப்பு, கருப்பொருள் மறைப்பு, அறிவு மறைப்பு, மொழி மறைப்பு, எழுத்து மறைப்பு, கழக மறைப்பு, வரலாறு மறைப்பு, தமிழன் பிறந்தக மறைப்பு, தமிழ்நாடு மறைப்பு, தமிழ் இன மறைப்பு, வனப்புக்கதை மறைப்பு, பொருளிலக்கண மறைப்பு, புலவரை மறைப்பு, மொழியாக்க முயற்சித் தடுப்பு, தனித்தமிழ் வழக்குத் தடுப்பு, தமிழ்ப் பற்றுத் தடுப்பு, தமிழ்விழாத் தடுப்பு, தமிழ்ப்புலவர் பதவிப்பேறு தடுப்பு, தமிழ்த்தொண்டர் வாழ்வுத் தடுப்பு முதலியன என்று தொகுத்துச் சுட்டி இயன்ற அளவில் விரித்துரைக்கின்றார். சென்னைப் பல்கலைக் கழக அகர முதலி வழியாக, இம்மறைப்புச் சான்றுகளை விரிய எடுத்துக் காட்டுகிறார்.

நீலகண்ட சாத்திரியார், சுப்பிரமணிய சாத்திரியார் சட்டர்சி ஆகியோர் ஆய்வுரைகளை – ஆய்வுரைக் கேடுகளைச் சுட்டிக் காட்டுவதுடன் ''இன்று தமிழைக் கெடுப்பவர் தலைமைத் தமிழ்ப் பேராசிரியரும் அரசியற் கட்சித் தலைவருமாகிய இருசாராரே'' என்கிறார். தமிழ்மறைப்பதிகாரத்தில் விடுபட்ட இருசொற்கள் என அம்மணம், மடம் என்பவற்றை இணைத்து விளக்குகிறார். முடிபதிகாரம் 16 வெண்பாக்களையுடையது.

''மொழியே இனமக்கள் முன்னேற நல்ல
வழியாம் அதனை வளர்க்க – பழியாய்த்
தமிழயரத் தாழ்ந்தான் தமிழன்காண், முன்போல்
தமிழுயரத் தானுயர்வான் தான்''

என்பது அவற்றுள் ஒன்று.

## 30. வண்ணனை மொழிநூலின் வழுவியல்

1968 இல் நேசமணிப் பதிப்பக வெளியீடு. முகவுரை 2 பக்கம் நூல் 122 பக்கம். உரூ.2.

'ஆரிய விளம்பரத்தின் விளைவாக மறைந்து கிடக்கும் தமிழைப் பற்றிய உண்மைகளை அறிதற்குத்

தடையாகவுள்ள வண்ணனை மொழிநூலின் வழுவியலை மொழிநூல் வல்லாரும் கண்டறிந்து கொள்ளுமாறு இச்சிறு நூலை எழுதத் துணிந்தேன்' என்பதால் நூல் நோக்கத்தைக் குறிக்கிறார் பாவாணர்.

ஆங்கிலேயர்கள் கண்டதால் உயர்ந்தது வண்ணனை மொழி நூல் எனல் ஆகாது என்பதை 'வெள்ளை என்னும் சொல் வெண்ணிறக் கருத்தடிப்படையில் தூய்மையை மட்டுமின்றி வெறுமையையும் குறிக்கும்' என்கிறார். ஆங்கிலவரை வெள்ளையர் என்று சுட்டுவது வழக்கம் அன்றோ?

முதன்முதல் இலக்கணம் இயற்றப் பெற்ற தமிழில்தான் மொழிநூல் தோன்றியது. ஒரு பொருளின் உண்மையை ஒப்புக் கொள்ளுவதற்கு நடுநிலைமையும் வேண்டும் என இம் முகவுரையில் சுட்டுகிறார் பாவாணர்.

"சமற்கிருதத்தைப் பரப்புவதற்கென்றே ஏற்படுத்தப்பட்ட பூனா தெக்காணக் கல்லூரியின் சார்பாக ஆண்டுதோறும் நடத்தப்படும் வேனிற் பள்ளியில் அறுகிழமையும், இலையுதிர்காலப் பள்ளியில் முக்கிழமையும் பயிற்சி பெற்ற அளவிலேயே வண்ணனை மொழிநூல் அறிஞராகக் கிளம்பும் ஆங்கிலப் பட்டந்தாங்கியரான மாணவர், தமிழிலக்கியப் பரப்பையும் பொருளிலக்கணச் சிறப்பையும் குமரிநாட்டுத் தமிழ்ப் பிறப்பையும் எங்ஙனம் அறியவல்லார்" என வினாவுகிறார்.

மொழிநூல், வண்ணனை மொழிநூல், உலகத் தமிழ்ப் பேரவைகள் என்னும் முப்பெரும்பகுப்பும் பதினாறு உட்பகுப்பும் உடையது இந்நூல்.

"மொழிநூல் என்பது ஒரு மொழியின் அல்லது மொழிக் குடும்பத்தின் தோற்றம், வளர்ச்சி, அமைப்புச் சிறப்பியல், இனமொழி அல்லது இனமொழிக்குடும்பம் முதலிய வரலாற்றுக் கூறுகளையெல்லாம் விளக்கிக் கூறும் அறிவியல்" என மொழிநூல் இயல் வரையறையில் வகுத்துக்கொண்டு நூலைத் தொடங்குகின்றார்.

மொழிநூல், ஒரு நூற்பாவின் உண்மைப் பாடத்தையும் வழுவையும் அறிந்து கொள்ள உதவுகின்றது என்பதைச் சகரம் மொழி முதலாக நூற்றுக்கணக்கான சொற்களில் இடம் பெற்றுள்ளமையைக் காட்டி நிலைப்படுத்துகிறார்.

தமிழை வடமொழி வழிப்பட்டதாகக் காட்டுவாரையெல்லாம் பட்டியலிட்டுக் காட்டி அவர்தம் கருத்துகள் ஒவ்வொன்றையும் விரிவாக எடுத்துரைக்கும் பாங்கு பாவாணர் ஏரணமுறைத் தெளிவை அருமையாய் வெளிப்படுத்துகிறது.

இப்பகுதியில் கிரேக்கத்தில் தமிழ்ச்சொற்கள் நூற்றுக்கணக்கில் உள்ளமையைச் சுட்டும் பாவாணர் அவற்றுள் 172 சொற்களை எடுத்துக் காட்டுகிறார்.

ஒரு மொழியில் ஓர் அகர முதலி தொகுத்தற்கோ திருத்திற்கோ இலக்கண அறிவு, சொல்லாராய்ச்சி, மொழியாராய்ச்சி, சொற்றொகுப்பு ஆகிய நாற்றிறம் வேண்டும் என்பது அழுந்தும் பயிற்சி வெளிப்பாடு.

வண்ணனை மொழி நூலின் வழுக்களை அடிப்படைத் தவறு,நெறிமுறைத் தவறு என இருபாற்படுத்தி விரியக் கூறுகிறார் பாவாணர்.

"வயிரக் கற்களின் உயர்வு தாழ்வை மணி நோட்டகன் கண்ணே காண்பதுபோல், சொற்களின் வேரையும் பொருட்கரணியத்தையும் மொழி நூல் வல்லான் அகக் கண்ணே காணும் என்றும், அறிவொடு உயிரும் அற்ற அஃறிணைக் கருவிகள் காணாவென்றும் அறியல் வேண்டும்" என்கிறார்.

"குமரிநாட்டுத் தமிழரின் வரலாற்றிற்கு எட்டாத் தொன்மையையும், அக்கால மக்களின் எஃகுச் செவியையும், நுண்ணுணர்வினையும் நோக்கின் எழுத்துக்களின் தன்மையையும் வகைகளையும் மாத்திரை அளவையும் அவை தோன்றும் இடங்களையும் அவற்றின் பிறப்போடு தொடர்புடைய உறுப்புக்களையும் பற்றி, தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ள அளவே பண்டையர்க்குப் போதுமென்றும், அதிலிருந்து வண்ணனை மொழிநூலார் இக்காலத்தில் கூறும் நுட்பங்களையும் அவர்கள் அறிந்து கொள்ளக் கூடுமென்றும் உய்த்துணரலாம்" என அப்பகுதியை முடிக்கிறார். உலகத் தமிழ்ப் பேரவைகள் என்னும் மூன்றாம் பகுதி உலகத் தமிழ் மாநாட்டு நடைமுறை பற்றியது.

தமிழ் மாநாடு தமிழ் மாநாடாகவும் தமிழர் மாநாடாகவும் விளங்க வேண்டும் என்னும் வேட்கையில் விளைந்தது அது என்பதை உணர்தல் வேண்டும்.

## 31. வேர்ச்சொற் கட்டுரைகள்

செந்தமிழ்ச் செல்வியில் தொடர் கட்டுரைகளாக வெளிவந்து நூலுருப் பெற்றது 'வேர்ச்சொற் கட்டுரைகள்' என்னும் நூலாகும்.

இதில் உயிர் முதல் வேர்ச்சொற்கள் 15 கட்டுரைகளும் உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள் 16 கட்டுரைகளும் ஆக 31 கட்டுரைகள் உள.

வேரின் வளர்ச்சி அடியும், அடியின் வளர்ச்சியே முதனிலையும் ஆகும் என்பதைக் "குல், குழு, குழுவு" என எடுத்துக்காட்டி விளக்குகிறார்.

வேருக்கு மூலமான முளையும், முளைக்கு மூலமான வித்தும் உண்டு என்பதை உல் (முளை), குல் (வேர்) என்றும், உ (விதை), உல் (முளை) என்றும் தெளிவு செய்கிறார்.

வேரும், ஆணி வேர், பக்கவேர், கிளைவேர், சிறுகிளை வேர் எனப் பலதிறப்படும் என்றும் காட்டுகிறார்.

ஒரு கருத்தில் இருந்து மற்றொரு கருத்துத் தோன்றும்போது ஒரு சொல்லில் இருந்து மற்றொரு சொல் பிறக்க இடமுண்டாகின்றது.

'மக்களைப் போன்றே சொற்களும் குடும்பம் குடும்பமாகவும் குலம் குலமாகவும் இனம் இனமாகவும் கொடிவழி முறையில் இயங்குகின்றன'.

'மலையா, சிங்கபுரம், தென்னாப்பிரிக்கா முதலிய வெளிநாடுகளுக்குத் தனித்தனியாகவும், குடும்பம் குடும்பமாகவும் தமிழர் சென்று அங்கு நிலையாக வாழினும், அவர்களின் முன்னோர்களாலும், தமிழ்நாட்டு உறவினராலும் அவர்கள் தமிழர் என்றே அறியப்படுதல் போல், தமிழ்ச் சொற்களும் அண்மையிலும், சேய்மையிலும் உள்ள அயன் மொழிகளில் சென்று வழங்கினும் அவற்றின் மூலத்தாலும், தொடர்புடைய தமிழ்ச் சொற்களாலும் அவை தமிழ் என்றே அறியப்படும்' என்பவை ஆசிரியன் முகவுரையில் சுட்டும் குறிப்புகள்.

உயிர்முதல் வேர்ச்சொற்கள் அம், அர், இல், இள், உ,உம், உய், உல், உள், ஊது, ஏ, ஒல், ஓ என்பவை. இவற்றுள் ஊது, ஓ என்பவை ஒலிக்குறிப்பு வேர்ச்சொற்கள். 'உல்' என்பது எரிதல், வளைதல், உள்ளொடுங்கல் ஆகிய முக்கருத்து வேர்.

அம் – பொருந்துதல் அடிப்படை

அமல், அமைதல், அவை, அமர்தல், அமையம், அம் முதல் என்னும் சொற்கள் இவ்வடிப்படையில் தோன்றியவை.

அர் – என்பது அறுத்தல் கருத்துவேர்.

அரம், அரங்கு, அரிதல், அரிவாள், அருகுதல், அரை, அறை, அறுகு என்ற சொற்கள் இதனைத் தெளிவாக்கும்.

'இல்' – இளமைக் கருத்துவேர்.

இளமை, இலவு, இலம்பாடு, இலை, இளகு, இளத்தல், எள், எள்கு, எஃகு, எய்ப்பு, ஏள், ஏழை என்பவற்றால் இதைத் தெளியலாம்.

'இள்' – என்பது இணைதற் கருத்துவேர்.

இதனை இழை, இழைதல், இணங்கு, இணைதல், இயை, இசைவு, ஏய் என்பவற்றால் உணரலாம்.

'உ' என்பது சுட்டு, அது முன்னைக் கருத்தையும், உயரத்தையும் குறிக்கும். உது, உங்கு, உவன், ஊங்கு, உக்கம், உச்சம், உம்பர், உயர், ஊர்தல், ஓங்கல் முதலியவற்றைக் கருத இப்பொருள் புலப்படும். உகரம் பக்கத்திரிபு, பின்னைத்திரிவு, மெய்ம்முதற் சேர்க்கை பெறுதலையும் எடுத்துக் காட்டுகிறார் பாவாணர்.

இவ்வாறே 'உம்' கூடுதற் கருத்தையும், 'உய்' செல்லுதல் கருத்தையும், 'உள்' என்பது துளைத்தற் கருத்தையும், 'ஒல்' என்பது பொருந்ததற் கருத்தையும் குறித்தலை விரித்து எழுதுகிறார் பாவாணர். 'உல்' என்பது முக்கருத்துகள் பெறுதலையும், ஊதுவும் ஓவும் ஒலிக்குறிப்பு ஆதலையும் பாவாணர் சுட்டினார்.

'ஏ' என்னும் வேர் தன்மைப் பெயரடியாகவும் வினாச்சொல் அடியாகவும் வருதலை விளக்கித் தெளிவாக்குகிறார்.

இரண்டாம் பகுதியாகிய உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள் கல், குல், சுல், துல் என நான்கு காட்டுகிறார். இவற்றுள் கல் என்பது கருமைக் கருத்து என்பதை – கஃறு, கல், கால், கள், களங்கம், காள், காளி, கர், கரி, கழு, கருப்பு, கார் முதலிய சொற்கள் வழிக் காட்டுகிறார்.

'குல்' என்பது குலம், குலை, கலம், களம் முதலாம் கூடற்கருத்து வேராகவும், குளகு, குழ, குரு முதலிய தோன்றற் கருத்து வேராகவும், குலவு, குளம், குரங்கு, கோல் முதலிய வளைதற் கருத்து வேராகவும், குளவி, குகண்டு, குட்டு, குத்து, குதிர் முதலாம் குத்தற் கருத்து வேராகவும், குரு, குருதி, குதம், கதம், கனல் முதலியன எரிதற் கருத்து வேராகவும், குதல், கல், கன்னம், குளி, குழிவு முதலாம் துளைத்தற் கருத்து வேராகவும் இருத்தலை ஆறு கட்டுரைகளில் விரித்துக் காட்டுகிறார்.

'சுல்' என்பது குத்தற் கருத்து (சூல், சூலம், சுள், சுணை) சுடுதற் கருத்து (சுள்ளாம்பு, சுள்ளை, சுடலை, சூடு, சுண்ணம்) சிவத்தற் கருத்து (சுல்லம், சேல், சென், செய், செம்மை)

வளைதற் கருத்து – (சுலவு, சிலந்தி, சூல், சுளி, சுழல்)

துளைத்தற் கருத்து (சுனை, சோனை, சுரப்பு, சுரங்கம், சொள்ளை) ஆகியவற்றில் வருதலை விளக்குகிறார்.

மொழியாராய்ச்சியும் சொல்லாராய்ச்சியும் செய்யாத பலர், இக்கட்டுரைகள் சொற்களின் திரிபையே காட்டுகின்றன என்றும், அவற்றையாளும் நெறிமுறைகளைக் காட்டவில்லை என்றும் குறை கூறுபவர்களைப் பார்த்துப் பாவாணர், "ஒவ்வொரு கலைக்கும் அறிவியற்கும் தெரிவியல் புரிவியல் என இரு கூறுகள் உள. தெரிவியலை விரிவாகக் கற்பிக்கும்போது புரிவியலைக் காட்டுவதும் புரிவியலை விளக்கமாகக் காட்டுமிடத்துத் தெரிவியலைக் கற்பிப்பதும் வழக்கமன்று" என்று மறுக்கிறார். மேலும், ஐம்பான் ஆண்டாக மொழியாராய்ச்சி செய்யும் ஒருவனை நெறிமுறையறியாது குருட்டுத்தனமாக வரைபவன் என்பது அறியாமையொடு அழுக்காறும் கலந்த இருட்டடிப்பு என்று வெறுத்தொறுக்கும் பாவாணர், "என் வேர்ச்சொற்கட்டுரைகளில் எடுத்துக் காட்டும் சொற்களினின்றே எழுத்தும் சொல்லும் திரியும் முறைகளைப் பொது அளவு மதியுள்ள எவரும் அறிந்து கொள்ளலாம்." என்கிறார் (202 –203)

நிறைவாக உள்ள துல் என்பது பொருந்தற் கருத்து, வளைதற் கருத்து, துளைத்தற்கருத்து, தெளிவுக் கருத்து என நாற் கருத்துக்களின் அமைதலை நிறுவுகிறார்.

## 32. வேர்ச்சொற் சுவடி

தமிழில் வேர்ச்சொல்லாய்வு மூலவராகத் திகழ்ந்தவர் பாவாணர். தமிழில் வல்ல அறிஞராலும் வேர்ச்சொல்லாய்வு என்பது அறியப்படாத கால நிலையில் அத்துறையில் இறங்கி வாழ்நாள் அளவும் நிகரற்ற வேர்ச்சொல் ஆய்வாளியாகவே திகழ்ந்தவர் பாவாணர்.

1940 இல் ஒப்பியன் மொழிநூல் எழுதித் தாமே வெளியிட்ட பாவாணர், 'வேர்ச்சொல் சுவடி' என ஒன்று எழுத இருப்பதைக் கழக ஆட்சியாளர்க்கு எழுதினார். அவரோ, வேர்ச்சொல்லுக்கு மாதிரி எழுதிட வேண்டுகிறார்.

"வேர்ச்சொல் வரிசையைப் பற்றி நீங்கள் மாதிரி கேட்பது வியப்பாயிருக்கிறது. உங்கள் ஐயத்தையும் குறிக்கிறது. அறிஞரை நம்பி அவர் வயின் நல் வினையை ஒப்புவிக்கும் திறன் இன்னும் நம்மவர்க்கு ஏற்படவில்லை. ஒரே ஒரு சொல்லுக்கு மட்டும் மாதிரி தருகிறேன்." என்று பாவாணர் கழக ஆட்சியாளர்க்கு எழுதுகிறார்.(31–7–40). 14–9–40 இல் வேர்ச்சொல் சுவடியை முடித்து விடுகிறார். கழகத்திற்கு விடுக்கிறார்.

ஆயின் அந்நூல், பாவாணரும் ஆட்சியாளரும் வாழ்ந்தவரை அச்சிடப்படாமலே நின்றுவிட்டது. பாவாணர் மூலக்கைப்படியாக 73 சொற்களுக்கு வேர் விளக்கம் கிடைத்துள்ளது. அவை 'அர்' முதல் 'வேள்' வரை என இளங்குமரனார் குறிப்பிடுகிறார்.

பின்னர்க் கழகத்தின்வழி வேர்ச்சொற்சுவடி வெளிவந்தது. பாவாணர் மாதிரியாக அனுப்பிய 'இறு' என்னும் சொல், இறை, இறால், இறாட்டி, இறுத்தல், இறையன், இறப்பு, இறவாணம், இறகு, இறங்கு என்பவற்றையெல்லாம் விரிவாக விளக்குகின்றது.

வேள் என்னும் சொல் வேணவா, வேண்டு, வேள்வி, வேட்டை, வேட்டம், வேட்டை, வேளாண், வேளாண்மை, வேளான், வேளாளன், வேட்கோ, வேடுவன், வேடன் என விரிதலை விளகுக்குகின்றது.

வேர்ச்சொற் சுவடியில் இடம் பெற்றுள் 73 சொற்களுள் ஓரெழுத்து வேர்கள், 18. ஈரெழுத்து வேர்கள், 55.

ஒரு வேர் பொருள் வேறுபடுதல் வகையில் தனிச்சொல்லாக எண்ணப்படுதலால் 'ஏ' என்பது நான்கு விளக்கங்களையும் 'அர்' என்பது மூன்று விளக்கங்களையும் பெற்றுள்ளது.

'ஏ' உயர்வுக் குறிப்பு வகையில் ஏண், ஏணி, ஏணை, ஏத்து, ஏங்கு, ஏய், ஏர், ஏல், ஏழ், ஏறு, ஏற்றம் என்னும் பொருள்களிலும்

மேற்செலல் குறிப்பு வகையில் ஏவு, ஏகு, எண், எண்ணம் என்னும் பொருள்களிலும்

மேலெழற் குறிப்பு வகையில் ஏழ், எக்கு, எக்கர், எடு, எம்பு, எவ்வு என்னும் பொருள்களிலும்

வினாவுதற் குறிப்பு வகையல் எது, எங்கு, என்று என்பவற்றிலும் வருதலை எடுத்துக் காட்டுகிறார். இவ்வாறே பிறவுமாம்.

அருமருந்தன்ன என்பது அருமந்த என்றாயிற்று என்பது நூல்வழக்கு. ஆனால் 'அருமை வந்த' என்பது 'அருமந்த' என்றாயிற்று என்கிறது இச்சுவடி,

'புறா' என்பதன் பொருள் 'புறவப்பறவை' (முல்லைநிலப் பறவை புறா) என்பது இச்சுவடியால் அறியப்படும்.

மெத்து என்பது மாடிக்கு – உயர்வுக்கு ஒரு பெயர். மெத்தை என்பதும் உயரப்பொருள் தருவதே.

அதனால் தான் மாடி வீட்டை 'மெத்தை வீடு' என்னும் வழக்கம் தஞ்சை மாவட்டத்தில் வழங்குகிறது.

மெச்சுதல் என்பது உயர்த்திக் கூறல் பாராட்டல் எனப் பொருள் அறிகிறோம்.

வேர்ச்சொல் மாதிரியாகப் பாவாணர் காட்டிய 'வேள்' என்பதன் விரிவு பாவாணர் மடலால் அறியப்பட்டு புலவர்இளங்குமரன் பதிப்புப் பணியில் மிளிர்கிறது.

வேள் – வேண் (வேண் + அவா = வேணவா)
வேள் + து = வேண்டு,
வேள் + வி = வேள்வி
வேள் + கை = வேட்கை
வேள் + தம் = வேட்டம்
வேள் + தை = வேட்டை
வேள் (பெ)
வேள் + ஆண்= வேளாண்
வேள் + ஆண்மை = வேளாண்மை
வேள் + ஆளன் = வேளாளன்
வேள் + கோ = வேட்கோ
வேட்டம் + அன் = வேட்டுவன், வேடுவன், வேடன்

'வேர்ச்சொற் கட்டுரை' பாவாணர் வேர்ச்சொல் ஆய்வின் "வெள்ளப் பெருக்கு" என்றால், இச்சுவடி மலையில் 'கசிந்தூறும் சுனை' போன்றது என அறியச் செய்கிறது. ஒருவர் வளர்நிலை ஆய்விற்குக் கால அடைவில் நூல்களை முறையே காணல் தெளிவும் திறமும் நம்பிக்கையும் ஊட்டும். வேர்ச்சொற் சுவடி 31 பக்கங்களையுடையது. வெளிவந்த ஆண்டு 1986.

## 16. பாவாணரின் நூல்கள் வழி அறியலாகும் மொழியியல் கருத்துகள்

உலக மொழிகளின் தோற்றத்தையும், தோன்றி மலர்ந்துள்ள நிலையையும் ஆராய்ந்திடச் சரியான அளவுகோல் கிடைக்காததால், கடவுளைப் போன்றே மொழியும் அடிமுடி காண முடியாதது என்று பலரும் முடிவு கட்டிய காலத்தில் – காலகட்டத்தில் உலக மொழிகளுக்கு அடியும் முடியும் கண்டு அறிவித்த நுண்மாண் நுழைபுலம் மிக்கப் பன்மாண் சிறப்புக்குரிய பெருந்தகையாளரான பாவாணர் மொழியாராய்ச்சி உலகில் விடிவெள்ளியாக விளங்கினார்.

அரை நூற்றாண்டுக்கால ஆராய்ச்சியில் அவர் கண்டறிந்த பல்வேறு உண்மைகள் ஞால முதன்மொழி தமிழே எனவும், உலக மொழிகள் அத்துணையும் தமிழ்த் தாயின் சேய்கள் எனவும் அவருக்குத் தெளிவு படுத்தின.

பாவாணர் தம் ஆய்வு நெறிகளை அடைவு படுத்திக் கொள்ள அவை பெரிதும் உதவின. அவர் கண்ட உண்மைகள் மொழியுலகில் கண்டுபிடிப்புகளாகவே கொள்ளத்தக்கன. அவர் கண்டறிந்த உண்மைகளே அவர்க்கு ஆய்வு நெறிகள் ஆயின. ஞால முதன்மொழி என்னும் பனிமலை முகட்டை எட்டிப் பிடித்த அறிவு நுட்பத்திற்கு அடிமணையாயின. அவை வருமாறு:–

1. மொழியாராய்ச்சி செய்வோர் சொல்லையும் பொருளையும் இயைத்தே ஆய்ந்து செல்ல வேண்டும். மேனாட்டாரைப் போன்று சொல்லமைப்பு, தொடரமைப்புகளைத் தனியாகவும் பொருள் நிலை (Semantics) களைத் தனியாகவும் ஆராய்ச்சி செய்யலாகாது.

2. கருத்து வளர் நிலைகளை அடிமணையாகக் கொண்டு சொல்வளர் நிலைகளை ஆராய்வதே முறையான ஆராய்ச்சி.

3. எல்லாக் கிளைகளுக்கும் மூலமான ஓர் அடிமரம் இருப்பது போல எல்லா மொழிகளுக்கும் மூலமான ஒரு தாய்மொழியும் இருத்தல் வேண்டும்.

4. எல்லாச் சொற்களும் பொருள் குறித்தனவே, தமிழில் இடுகுறிப் பெயர்கள் இல்லை.

5. மொழியின்றியும் கருத்து நிகழும். ஆயின் கருத்தின்றி மொழி நிகழாது.

6. மொழியின் தொடக்க நிலையில் முதனிலையே இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்குரிய எல்லா வினை வடிவிற்கும் பொதுவாயிருந்தது. (வ.மொ.வ.105)

7. மக்களைப் போன்றே சொற்களும் குடும்பம் குடும்பமாகவும், குலம் குலமாகவும், இனம் இனமாகவும் கொடிவழி முறையில் இயங்குகின்றன.

8. உலக மொழிகளில் ஊடாடியுள்ள தமிழ்ச் சொற்கள் தமக்கேயுரிய பொருளை விடாமல் பற்றிக் கொண்டு பல்லாயிரம் ஆண்டுகளாகச் சொல்லளவில் மட்டும் திரிந்துள்ளன.

9. பொருள் மாறும் போது சொல் மாறவேண்டும். அதற்காக உரிய ஈறுகள் சேரும்.

எ–டு, மண் – மணல்; கம்பு – கம்பி; மருங்கு – மருங்குல். (தமிழ்.வர.70)

10. சொற்றிரிமுறையே மொழி வளர்ச்சிக்கு இடமாவது. வேர்ச் சொல்லும் அடிச்சொல்லும் பல்வேறு திரிபு கொண்டாலொழிய மொழிவளர்ச்சிக்கு இடமில்லை.

நுள் என்பது நெருங்கற் பொருளில் நள் என்று திரியாவிடின் கிள்ளுதலைக் குறிக்கும் சொல்லோடு அதை மயக்க நேரும். சுள் என்னும் அடி பொருத்தற் பொருளில் 'செள்' என்று திரியாவிடின் சுடுதலையும் உறைத்தலையும் குறிக்கும் சொல்லொடு அதை மயக்க நேரும்.

சொற்களின் போலித்திரிபும் புதுச் சொற்பயன் தருகிறது. இடம் – இடன்.

நாளி – நாழி, நாடி
தருக்கு – செருக்கு
பகு – வகு
மீறு – வீறு
குழல் – குடல்
பழம் – பயம் – பயன் (தமிழ். வர. 84)

11. ஒரு பொறியியல் அறிஞன் ஒரு பொறியில் இல்லாத உறுப்பைக் கண்டு கொள்வதைப் போன்றே, ஒரு மொழியறிஞனும் அம்மொழியில் இறந்துபட்ட சொற்களில் சிலவற்றை அவற்றோடு தொடர்புள்ள பிற சொற்களின் துணைகொண்டு அறிய இயலும். (தமிழ். வர. 64–65)

12. ஒரு கருத்தினின்று மற்றொரு கருத்து தோன்றும் போது ஒரு சொல்லிலிருந்து மற்றொரு சொல் பிறக்க இடமுண்டாகின்றது. கருத்து வேறுபடும் போது சொல்லும் வேறுபடல் வேண்டும். அன்றேல் பொருள் மயக்கம் உண்டாவதோடு மொழியும் வளர்ச்சியுறாது. இதுவே சொல்லாக்க அடிப்படை நெறிமுறை. (வேர்.க.முக.9)

13. தொடர்புற்ற கருத்துகளிலேயே சொற்களும் தொடர்புற்று வளர்கின்றன.

கூடுதல், பொருந்துதல், ஒத்தல், கலத்தல், போரிடுதல் என்பன தொடர்புடைய கருத்துகள். (ஒ.நோ.) பொருதல் – பொருந்துதல், ஒத்தல், போர் செய்தல்.

14. காட்சிப் பொருள்களிலிருந்தே கருத்துப் பொருள்கள் உருவாகின்றன.

எ–டு. குழம்புதல் – கலத்தல், மயங்குதல்,
குழப்பம் – கலக்கம்.

15. ஒரு பொருளுக்கு வெவ்வேறு காரணம் கருதி இட்ட பெயர்கள், ஒரு பொருட் பல சொற்களாகின்றன.

எ–டு. மகவு, பிள்ளை, குழந்தை, சேய்.

16. பொருள் மாறும்போது சொல்லும் உடன் சேர்ந்து மாறா விட்டால் ஒரு சொல் பல பொருள்களைச் சுட்டவேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாகின்றது.

எ–டு. உரி – உரிதல், தோல், உரிமையாதல், எரிதல் – நெருப்பு.

சொல்லும் உடன் சேர்ந்து திரியாததற்குக் காரணம் வேறுபட்ட பொருள்கள் வேறுபட்ட வேர்க் கருத்துகளில் முகிழ்த்து, ஒரு வடிவம் கொண்ட சொல்வழி வெளிப்பட நேர்ந்ததாகும்.

17. முன்னொட்டியல்பு தமிழுக்கும் இருந்தது.

18. ஒரு சொல்லே அதன் பின்னணியில் மறைந்த வரலாற்றுச் செய்திகளை உணர்த்தும்.

எ–டு. தென்னை – தென் பகுதியில் (குமரிக் கண்டத்தின் தென் பகுதி) இயல்பாக வளர்ந்த மரம்.

19. உயிர்களில் இகர ஈகாரத்தின் மோனையாக எகர ஏகாரமும் உகர ஊகாரத்தின் மோனையாக ஒகர ஓகாரமும் தோன்றியிருத்தல் வேண்டும்.

20. ஆகுபெயர் போன்றே வெவ்வேறு வினைகளை அல்லது கருத்துகளைக் குறிக்கும் ஆகு வினைகளும் உண்டு.

21. ஒலியும் பொருளும் ஒத்துள்ள சொற்கள் உலகில் எந்த மொழியில் இருந்தாலும் அவற்றை ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளலாம்.

22. வேர்ச்சொற்கள் உயிர் முதலாகவும் உயிர்மெய்ம் முதலாகவும் அமைந்துள்ளன. அவற்றைக் கருத்துகளின் அடிப்படையில் வகைப்படுத்த வேண்டும்.

23. ஒரு மரத்திற்கு ஆணிவேர், பக்கவேர், கிளைவேர், சல்லிவேர் இருப்பது போல் சொல்லுக்கும் உண்டு. நெல், கம்பு, கேழ்வரகு போன்றவற்றிற்கு ஆணிவேர் என்பதில்லை. சல்லி வேர் மட்டுந்தான் உண்டு. அது போன்ற சொற்களும் உண்டு.

24. தமிழ்த் தொடர்பான பதினோர் உண்மைகள்

1. தமிழ் தென்னாட்டுப் பழங்குடி மொழி
2. தமிழ் குமரிநாட்டு மொழி
3. தமிழ் திரவிடத் தாய்மொழி
4. தமிழ் ஆரியத்திற்கு முந்திய மொழி
5. தமிழ் ஆரியத்திற்கு மூலமொழி
6. தமிழ் சொல்வளமிக்க தற்சார்பு மொழி
7. தமிழ் உலக முதன் மொழி

8. தமிழ் வேர்ப்பொருள் காட்டும் மொழி
9. தமிழ் உயர்தனிச் செம்மொழி
10. தமிழ் தூய மரபு மொழி
11. தமிழ் ஒப்புயர்வில்லாத தனிமொழி.

25. வேர்களை ஆராயும்போது கருத்து வளர்ச்சிகளைச் சுட்டடிக் கருத்திலிருந்து நிரலே வகைப்படுத்த வேண்டும். சொற்களை ஆராயும் போது, ஏரண நெறிப்பட்ட பொருள் வளர்ச்சிகளொடு பொருத்தி ஆராய்ந்து, வேர்க் கருத்தொடு கொண்ட தொடர்பையும் உறுதிப் படுத்திக் கொள்ளவேண்டும். வேர் காண்பது என்பது தனிச்சொல்லை ஆணி வேர் வரை காண்பது. மூலம் காண்பது என்பது கூட்டுச் சொல்லை வடிவ மீட்டமைத்துப் பொருட்பாங்கை நெறிப்படப் புலப்படுத்துவது. முன்னது origin என்றும் பின்னது derivation என்றும் மேலைநாட்டாரால் குறிப்பிடப் பெறும்.

## 17. மொழிநூற் கலை

மொழிநூலாவது சொற்கள், சொல்லாக்க முறைகள், இலக்கண அமைதி முதலியன பற்றிப் பல மொழிகளுக்கு இடையிலுள்ள தொடர்பை ஆராயும் கலை.

மொழிநூல் முதலாவது கிரேக்கு, இலத்தீன் என்னும் மொழிகளைக் கற்குங் கல்வியாக 18 ஆம் நூற்றாண்டில் மேனாடுகளில் தோன்றிற்று. பின்பு ஆங்கிலேயரும் விடையூழியரும் (Missionaries) இந்தியாவிற்கு வந்து, சமற்கிருதத்திற்கும் கிரேக்க இலத்தீன் மொழிகட்குமுள்ள நெருக்கத்தைக் கண்டுபிடித்தபின், ஐரோப்பாவில் ஆரிய மொழிகளைப் பற்றிச் சிறப்பாராய்ச்சி எழுந்தது. ஆரிய மொழிகளை ஆராய்ந்தவர்களுள் கிரிம் (Grimm), வெர்ணெர் (Verner) என்ற இருவர் தலைசிறந்தவர். உலகத்தின் பலவிடங்களுக்கும் சென்ற விடையூழியரும் வழிப்போக்கரும் அவ்வவ்விடத்து மொழிகளைக் கற்று, மேலை மொழிகளில் அவற்றின் இலக்கணங்களை வரைந்து வெளியிட்டதுமன்றி, இனமொழிகளை யெல்லாம் ஒப்பிட்டுப் பல குடும்பங்களாகவும் வகுத்துக் காட்டினர். ஒப்பியன் மொழிநூற்கலையே விடையூழியராலும் வழிப்போக்கராலும்தான் உருவாயிற்று என்று கூறினும் மிகையாகாது. பிறகலை ஆராய்ச்சியாளரும் மொழிநூலுக்கு உதவியிருக்கின்றனர்.

பலநாட்டு மொழிகள் மேனாட்டு மொழிகளில் வரையப்பட்டபின், மாக்கசுமுல்லர் என்ற மாபெரும் புலவர் சென்ற நூற்றாண்டில் தம் வாழ்நாளை யெல்லாம் மொழிநூற் கல்விக்கே ஒப்புக்கொடுத்து, உலக மொழிகளில் பெரும்பாலானவற்றை ஆராய்ந்து, தம் நுண்மாண் நுழைபுலத்தால் ஒப்பியன் மொழிநூலை உருவாக்கினார்.

மாக்கசுமுல்லர் திராவிட மொழிகளைச் சரியாய் ஆராயாததாலும், அவற்றை வடமொழியின் கிளைகள் என்று தவறாக எண்ணியதாலும், திராவிடத்தின் உண்மையான இயல்புகளைக் கூற முடியவில்லை. திராவிடம் வடமொழிச் சார்பற்றதெனவும், உலக முதன்மொழிக்கு மிக நெருங்கிய தென்றும், வட சொல்லென மயங்கும் பல சொற்கள் தென் சொற்களேயென்றும், வடமொழியில் பல தமிழ்ச்சொற்கள் கலந்துள்ளனவென்றும் முதன்முதல் எடுத்துக்காட்டி, மொழிநூற்சான்றுகளால் நிறுவியவர் கால்டுவெல் (Caldwell) கண்காணியரே. திராவிட மொழிகள் மொத்தம் பன்னிரண்டென்பதும், அவற்றுள் ஆறு திருந்தினவும் ஆறு திருந்தாதனவுமாகும் என்பதும், பெலுச்சித்தானத்திலுள்ள பிராகூயீ திராவிட மொழியேயென்பதும் இவருடைய கண்டுபிடிப்புகளே. திராவிடம் வடமொழிச் சார்பற்றது, வடமொழியில் பல திராவிடச் சொற்களுள்ளன என்னும் கொள்கைகளில் இவருடன் ஒன்றுபட்டவர். இவர் தமிழைச் சிறப்பாய் ஆராய்ந்தது போன்றே மலையாள மொழியைச் சிறப்பாயாராய்ந்தவர் அறிஞர் குண்டாட் (Gundert) ஆவர். இவ்விருவர்க்கும் திராவிடவுலகம், விதப்பாய்த் தமிழுலகம் பட்டுள்ள கடன் மாரிக்குப்பட்டுள்ளதே யெனினும் பொருந்தும்.

கால்டுவெல், மாக்கசுமுல்லர் என்ற இருவர் ஆராய்ச்சிகளே இந்நூலுக்கு முதற்காரணமாகும்.

மொழிநூற்கணக்கு ஆங்கிலத்தில் முதலிலிருந்து வழங்கிவரும் பெயர்கள் (Philology) Gk.L Philos, desire., logos, discourse) Glottology (Gk.L.Glotta, tongue., logos, discourse) என்பன இவற்றுள் முன்னையதே பெருவழக்கு. ஆனால் மாக்கசுமுல்லர் 'Science of Language' என்று தாம் இட்ட பெயரையே சிறப்பாகக் கொண்டார்.

மொழிநூலுக்கு ஆங்கிலத்தில் Linguistics, Linguistic Science என்றும் பெயருண்டு.

'Philology' என்னும் பெயர் விரும்பிக் கற்கப்படுவது என்னும் பொருளது. கிரேக்கும் இலத்தீனும் மேனாட்டாரால் இலக்கிய மொழிகளென விரும்பிக் கற்கப்பட்டதால் இப்பெயர் தோன்றிற்று.

தமிழில் முதன்முதல் தோன்றிய மொழிநூற் பனுவல் மாகறல் கார்த்திகேய முதலியார் 1913 ஆம் ஆண்டு வெளியிட்ட 'மொழிநூல்' ஆகும். 'மொழிநூல்' என்னும் குறியீடும் அவருடையதே. அதன் பின்னது அறிஞர் சுப்பிரமணியசாத்திரியார் அவர்கள் எழுதி 1936 இல் வெளியிட்ட 'தமிழ் மொழிநூல்' ஆகும்.

அதன் பின்னது, கலைத்திறவோரும் (M.A) சட்டத்திறவோருமான (M.L.) கா. சுப்பிரமணியப்பிள்ளை அவர்கள் எழுதி 1939 ஆம் ஆண்டில் வெளிவந்த 'மொழிநூற் கொள்கையும் தமிழ்மொழி அமைப்பும்' என்பதாகும்.

## 18. மொழிநூல் நிலை

உலகில் ஒவ்வொரு கலையும்

1. ஆய்வு நிலை (Embrical stage)
2. பாகுபாட்டு நிலை (Vlassificatory stage)
3. கொண்முடிபு நிலை (Theoretical stage)

என முந்நிலைப்படும். அங்ஙனமே மொழிநூற்கலையும். மொழிநூற்கலையில் ஆய்வு நிலையாவது, மொழிகளைத் தனித்தனி ஆராய்தல்; பாகுபாட்டு நிலையாவது, தனித்தனி ஆராய்ந்த மொழிகளைச் சொற்களிலும் இலக்கணத்திலும் உள்ள ஒப்புமை பற்றி, பல குடும்பங்களாகவும், அக்குடும்பங்களைப் பல குலங்களாகவும் வகுத்தல்; கொண்முடிபு நிலையாவது ஒரு குடும்ப மொழிகட்குள்ளும், பல குடும்பங்கட்குள்ளும் பல குலங்கட்குள்ளும் உள்ள தொடர்பையும், அவற்றின் நிலைகளையும் ஒலிநூல் (Phonology), உளநூல் (Psychology) முதலிய கலைகளையும் துணைக்கொண்டு, எல்லா மொழிகளுக்கும் பொதுவும் அடிப்படையுமான ஒரு மூலமொழியைக் கண்டு பிடித்தற்கான நெறிகளை யறிந்து, அதைக் கண்டுபிடித்தல். இக்கொண்முடிபு நிலையும் 1. ஆராய்ச்சி. 2. முடிவு என இருநிலைப்படும்.

உலகில் மொழிநூற்கலை முதலிரு நிலைகளையும் கடந்து, இப்போது மூன்றாம் நிலையில் ஆராய்ச்சி நிலைமையிலுள்ளது.

## 19. பாவாணர் காட்டிய மொழிநூல் நெறிமுறைகள்

(Principles of Comparative Philology)

மொழிநூலானது ஒரு சிறந்த தனிக்கலையானாலும் அதன் நெறிமுறை அறியாத சிலருடைய வழூஉக் கூற்றுகளால், பொதுவாய் மிகவும் பழிக்கப்படுகின்றது.

### மொழிநூல் நெறிமுறைகளாவன

### 1. மொழிநூல் ஒரு தனிக்கலை

பலர் மொழிநூல் ஒரு தனிக்கலையென்பதை இன்னும் அறிந்திலர். பண்டிதர்கள் பொதுவாய்த் தங்களிடம் யாரேனும் ஒரு சொல்லுக்கு மூலங்கேட்டால், அதற்கு ஏதாவது சொல்லாதிருப்பின் இழிவென்றெண்ணி, 'பொருந்தப் புளுகல்' என்னும் உத்தி பற்றி ஏதேனுமொன்றைச் சொல்லி விடுகின்றனர். பாண்டித்தியம் வேறு; மொழிநூற் புலமை வேறு என்பதை அவர் அறிந்திலர்.

காலஞ்சென்ற ஒரு தமிழ்ப் பண்டிதர் திருச்சிராப் பள்ளியில் ஒருமுறை 'வடை' என்னும் திண்பண்டப்பெயர் 'வடு' என்னும் மூலத்திலிருந்து பிறந்தது என்றும், அப்பண்டத்தின் நடுவில் துளையிருப்பது அதற்கொரு 'வடு' (குற்றம்) என்றும் கூறியுள்ளனர். 'வடை' என்பது 'வள்' என்னும் வேரிலிருந்து பிறந்தது என்பதையும், வட்டமானது என்னும் பொருளுடையது என்பதையும், உழுந்து மாவிற்குள் எண்ணெய் எளிதாய்ச் செல்லும்படி துளையிடுவதென்பதையும் துளையினால் சுவையாவது மணமாவது கெடாது என்பதையும் அவர் அறிந்திலர்.

ஒத்துப்பார்க்க : பெள் + தை = பெட்டை – பெடை
வள் + தை = வட்டை – வடை
பெள் = விரும்பு; வள் = வளை

### 2. மொழிநூல் என்றும் ஒப்பியல் தன்மையுள்ளது.

'அட்டையாடல்' என்பதன் பொருள் உணர்தற்குத் தெலுங்கறிவும், கன்னட அறிவும் வேண்டியதாய் இருக்கின்றது. அட்ட அல்லது அட்டெ = முண்டம் (தெ., க.)

அம்பு (வளையல்), அம்பி (படகு, காளான்) ஆம்பி (காளான்) என்னும் சொற்களின் வேர்க்கருத்தை இலத்தீனிலுள்ள drupi என்னும் சொல்லும், கிரேக்கிலுள்ள ambhi என்னுஞ் சொல்லும் உணர்த்துகின்றன.

ambhi = round, amphitheatre என்னும் தொகைச் சொல்லை நோக்குக.

**3. மொழிநூல் பிறகலைச் சார்புள்ளது**

மொழிநூல், கணிதத்தைப் போலப் பிறகலை சாராத கலையன்று. மொழிநூலின் ஒவ்வொரு கூற்றும் அவ்வக்கலைக்குப் பொருந்தியதாயிருத்தல் வேண்டும்.

ஆங்கிலத்திலுள்ள teak என்னும் சொல் தேக்கு என்னும் தமிழ்ச்சொல்லே என்பதற்குத் திணை நூல் (Geography) சான்றாகும். இந்தியாவில் விந்திய மலைக்கு வடக்கே, தேக்கு வளர்வதில்லை என்று, இராகொசின் (Ragozin) தமது 'வேதகால இந்தியா' (Vedic India) என்னும் நூலில் குறிப்பிடுகின்றார்.

எழுத்தொலிகளை ஒலிப்பதில் வயிறு, நுரையீரல், மூச்சுக்குழாய், தொண்டை, நா, அண்ணம், பல், உதடு, மூக்கு ஆகிய பலவுறுப்புகள் தொடர்புறுவதால், உடல் நூலும் (Physiology); உள்ளக்கருத்துகளின் வெளிப்பாடே மொழியாதலின் உளநூலும் (Psychology).,

மொழிகளைப் பேசும் மக்களின் இடமாற்றத்தையும், நாகரிக வளர்ச்சியையும் அறிந்திருக்க வேண்டியதால் வரலாறும் (History).,

தட்ப வெப்ப நிலைக்கும் அவ்வந்நாட்டுப் பொருள்களுக்கும் தக்கபடி, ஒலியும் சொல்லும் மாறுபடுவதால் திணை நூலும் (Geography).,

நாகரிக மக்களின் மொழிகள், மதவியலைப் பெரிதும் தழுவியிருப்பதால், மதநூல் (Theology), பழமை நூல் (Mythology), பட்டாங்குநூல் (Philosophy) முதலிய கலைகளும்; இன்னும் சுருங்கக் கூறின் பல கலைகளும் மொழிநூற் பயிற்சிக்குத் தெரிந்திருத்தல் வேண்டும்.

4. மொழிகளெல்லாம் ஓரளவில் தொடர்புடையன.

சில சொற்களும், அவற்றையாளும் நெறிமுறைகளும் பல மொழிகளுக்குப் பொதுவாயிருக்கின்றன.

காட்டு : தமிழ் – மன், E - man, A S - mann, Skt - மனு.

தமிழ் – தா, இலத் – do, Skt - da

தமிழ் – நாவாய் L. - navis Skt – நௌ

தனிக்குறிலையடுத்த மெய் உயிர்வரின் இரட்டுவது பல மொழிகளுக்குப் பொதுவாயிருக்கிறது.

காட்டு : தமிழ் – மண் + உலகம் = மண்ணுலகம்.
வெள் + ஆடு = வெள்ளாடு

ஆங்கிலம் – thin + er = thinner, sit + ing = sitting.

**5. மொழிகளுக்குள் இன அளவிற்குத் தக்கபடி ஒப்புகையிருக்கும்.**

**6. மொழிகளை ஆராயும்போது முன்னை மொழியை முன்வைத்தும் பின்னை மொழியைப் பின்வைத்தும் ஆராய வேண்டும்.**

சிலர் தமிழுக்கு மிகப் பிற்பட்டனவும், தமிழினின்றே தோன்றினவும், மிகத் திரிந்துள்ளனவும், ஆரியக் கலப்பு மிக்குள்ளனவுமான மலையாளம், கன்னடம் முதலிய மொழிகளுக்குப் பிற்காலத்தில் வடமொழியைப் பின்பற்றி எழுதியுள்ள 'கேரள பாணினீயம்' 'கர்னாடக சப்தமணி தர்ப்பணம் போன்ற நூல்களைத் துணைக் கொண்டு தமிழியல்பை ஆராய்வது, நரிவாலைக் கொண்டு கடலாழம் பார்ப்பதும், தந்தையை மகன் பெற்றதாகக் கொள்வதும் போன்றதே. அந்நூல்களைக் கற்பதால் உண்டாகும் பயன், மலைகல்லி எலி பிடித்தல்போல் மிகச் சிறியதாகும்; மேலும் உண்மை காணாதபடி மயக்கத்தையும் ஊட்டும். மொழிநூல் ஆராய்ச்சிக்கு வேண்டிய மனவிரிவை அடைவதற்கு, ஆங்கிலத்தில் மாரிஸ் (morries) ஆங்கசு (Aungus), கீற்று (Skeat), சுவீற்று (Sweet) உவிட்டினி (Whitney) முதலியோர் எழுதியுள்ள இலக்கணங்களைப் படித்தல் வேண்டும். (ஒ.மொ.நூல்.78–91.)

## பகுதி – ஆ

## 1. தமிழில் சொற்பிறப்பியல் அகரமுதலியும் அதற்கான முன் முயற்சிகளும்

தமிழ் உள்ளிட்ட திரவிட மொழிகளுக்கு ஒரு சொற்பிறப்பியல் அகரமுதலி வேண்டும் என்று 1856 ஆம் ஆண்டிலேயே கால்டுவெல் வலியுறுத்தினார். யாழ்ப்பாணத்துப் பெருந்தகை தவத்திரு ஞானப்பிரகாசர் 1938 இல் தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் ஆறு சிறு பகுதிகளை ('அ' முதல் 'உருள்' வரை 364 பக்கங்கள்) வெளியிட்டார். ஒவ்வொன்றும் 1000 பக்கம் கொண்ட இரண்டு மடலங்களாக (20 உட்பகுதிகள்) வெளியிடத் திட்டமிட்டிருந்தார். அது "A Comparative and Etymological lexicon of the Tamil Language" என்றழைக்கப்பட்டது. இவர் தம் நுண்மாண் நுழைபுலத்தாலும், பல்லாண்டு செய்த ஆராய்ச்சியின்

விளைவாகவும் இந்தைரோப்பிய மொழிகளுக்குத் தமிழே மூலம் என்பதைக் கண்டறிந்தார், செருமானிய மொழிக்குக் கிரீம் என்பவரும், ஆங்கிலத்திற்குக் கீற்றும் சொற்பிறப்பியல் நெறியீடுகளை அமைத்தது போல இவரும் திரவிடச் சொற்பிறப்பியல் நெறியீடுகளை (Law of Dravidian Etymology) அமைத்தார். ஒலிப்பு நெறிமுறைகளும் (Phonetic Sound laws) வகுத்தார். மொழியாராய்ச்சிக்கு வழக்கிலுள்ள சொல்லாட்சிகளை விடுத்து இலக்கியச் சொல்லாட்சிகளை மட்டும் கொள்ளலாகாது என்றும் இந்தைரோப்பிய மொழியினர் ஒலிப்பொப்புமை மட்டும் கருதாமல், சொல்லின் வேரும், வரலாறுமாக விரிந்த அடிப்படை உண்மைகளை ஆராய வேண்டும் என்றும் வற்புறுத்தினார்.

Father, mother என்னும் ஆங்கிலச் சொற்களை அதே ஒலிப்பு ஒப்புமையுடைய இலத்தீன கிரேக்க சமற்கிருதச் சொற்களோடு ஒப்பிடும் சொல்லாராய்ச்சியாளர், மேனாட்டுக் குழந்தைகள் அப்பாவைப் பப்பா என்றும் அம்மாவை 'மம்மி' என்றும் அழைக்கும் சொல்வடிவங்கள் தமிழோடு நெருங்கியிருப்பதை ஏன் காண மறந்துவிட்டனர் என்று வினவுகிறார்.

மாக்கசுமில்லரின் பொன்மொழியை "Sound Etymology has nothing to do with sounds" எடுத்துக்காட்டி, ஒலிப்பு மற்றும் பொருளமைப்பு மட்டும் கருதாது வேர்ச்சொல் இயைபு எம்மொழியில் அமைந்துள்ளது என்று காணவேண்டும் என்று தெளிவு படுத்துகிறார், சமற்கிருதவாணர் (மாத்ரு) தாய் என்பது (ம–அளத்தல், மேற்பார்வை செய்தல்) 'மா' என்னும் சொல்லிலிருந்து பிறந்ததாகக் கூறுவதும் 'பித்ரு' (தந்தை) பாதுகாப்பவன் என்று பொருள்படுவதாகவும் கூறுவது பொருத்தமற்றவை என்கிறார். அம்மா, அப்பா என்பவை அவற்றுக்கு மூலம் என்று காட்டுகிறார். அவருடைய முயற்சி முற்றும் நிறைவுறு முன்பே அவர் இயற்கை எய்தியது தமிழின் தவக்குறைவே எனலாம்.

இங்கிலாந்தில் சமற்கிருதப் பேராசிரியராக உள்ள பரோவும், அமெரிக்கக் கலிபோர்னியாவில் சமற்கிருதப் பேராசிரியராகவுள்ள எமனோவும் ஐம்பதாண்டுகளாகத் திரவிட மொழிகளை ஆராய்ந்து சொற்றொகுத்து 1960 ஆம் ஆண்டில் திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலி (Dravidian Etymological Dictionary) வெளியிட்டனர். இதில் ஏறத்தாழ 5000 சொற்களுள்ளன. இது இன்றைய திராவிட மொழி யாய்வாளருக்குக் கருவி நூலாகப் பயன்பட்டு வருகிறது.

1959 இல் சென்னைப் பல்கலைக் கழகம் திராவிடமொழிச் சொற்களை ஒப்பீட்டு முறையில் தொகுத்து திரவிட மொழிகளின் ஒப்பீட்டுச் சொல் அகர வரிசை (The Dravidian ComParative vocabulary) வெளியிட்டுள்ளது. இது சொற்பிறப்பியல் அகரமுதலி யன்று எனினும் இனச்சொல் ஒப்பீடு, சொற்பிறப்பியல் அகரமுதலியின் ஒரு கூறாதலின் இதையும் இங்கு குறிப்பிட்டாதல் வேண்டும்.

தமிழில் இதுவரை நிகண்டுகளும் அகராதிகளும் வெளிவந்தனவும் வெளிவராதனவுமாக 300 க்கு மேல் இருப்பினும், தரமான சொற்பிறப்பியல் அகரமுதலி தமிழுக்கு இல்லாமலிருப்பது ஒரு பெருங் குறையாக இருந்தது. இக்குறையை நிறைவாக்கும் வகையில் 1974 ஆம் ஆண்டு மேத் திங்களில் தமிழக அரசு 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம்' (Tamil Etymological Dictionary Project) ஒன்றை உருவாக்கி மொழிநூல் மூதறிஞர் ஞா. தேவநேயப் பாவாணரை இயக்குநராக அமர்த்தியது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி பல்வேறு மடலங்களாக வெளிவந்துள்ளவை போக எஞ்சியவையும் விரைவில் வெளிவரும். இதில் தமிழின் இனமொழிகளில் மட்டுமின்றி இந்தைரோப்பிய மொழிகளிலிருந்தும் இனச் சொற்கள் காட்டப்படு கின்றன. சொல்லின் வேரும் வரலாறும் விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

சொற்பிறப்பியல் அகரமுதலி ஒரு சிறப்பு வகை அகரமுதலியாகும். இதன் தொகுப்பாளர், தலைவர் ஆகியோர் தாய்மொழியில் நிகரற்ற புலமையாளராக இருத்தல் வேண்டும். ஆங்கிலம் உள்ளிட்ட பன்மொழி யறிவும், மொழிநூற் புலமையும், நடுநிலையோடு ஆயும் நோக்கும் நிரம்பியவராய் இருத்தல் வேண்டும்.

"சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுப்பவர் எத்துணைப் பெரும்புலவரேனும், மொழியாராய்ச்சித் துறையில் நடுவு நிலைமை, அஞ்சாமை, தன்னலமின்மை, மெய்யறியவா என்னும் நாற்பண்பும் இல்லாதவர் வேர்ச் சொற்களைத் தொகுப்பது, குருடன் கண்மருத்துவமும், செவிடன் இசையாராய்ச்சியும், சப்பாணி தாண்டவப் பயிற்சியும் செய்வது ஒத்ததே. கல்வி வேறு; ஆராய்ச்சி வேறு" என்று மொழிநூல் மூதறிஞர் பாவாணர் கூறுகிறார். (வேர்ச்சொற் கட்டுரைகள் முன்னுரை)

எனவே சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுப்புக்கு இன்றியமையாத முதல் தேவை

அத்துறையில் ஆர்வமும் புலமையும் நெடுங்கால ஆராய்ச்சிப் பட்டறிவும் மிகமிகத் தேவை. அத்துடன் மட்டுமல்லாது களப்பணியும் இன்றியமையாதது.

சங்க அகரமுதலியில் 'தசகூலி' என்னும் சொல்லிற்குப் பயிரிடும் தொழிலிற் கொடுக்கும் பத்து வகைக் கூலி என்று பொருள் உள்ளதை நோக்கிச் சென்னைப் பல்கலைக் கழக அகரமுதலித் தொகுப்பாளரும் அச்சொல்லுக்கு அதே பொருளைக் கொடுத்தனர். அச்சொல் எந்த வட்டாரத்தில் வழங்கும் வழக்கு என்பது குறிப்பிடப்படவில்லை. நெல்லையில் வழங்கும் அச்சொல் தச்சக்கூலி என்பதன் இடைக்குறை என்று பாவாணர் தெளிவுபடுத்துகிறார். 'இந்த ஆண்டு விளைச்சல் தசக்கூலிக்கும் கூடவில்லை' என்னும் உழவர் வழக்கை எடுத்துக்காட்டுகிறார். நேரிற் சென்று களப்பணி செய்தாலொழியச் சொற்களின் செவ்விய பொருளுணர முடியாது என்பதற்கு இது ஒரு சான்று.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் அனைத்து மடலங்களும் வெளிவரின் தமிழ்மொழியின் பல்துறை வளர்ச்சியும் விரைவு படுவதுடன் அனைத்துலக மொழியியல் ஆய்வாளர்க்குச் சொற்பிறப்பியல் துறையில் சிறந்த அகரமுதலி கிடைத்திருப்பதாக அகமகிழ்வர்.

இவ்வகரமுதலி ஆங்கிலத்திலும் சொற்பொருள் விளக்கும் இருமொழியகரமுதலியாக இருப்பதால் அனைத்துலகப் பல்கலைக் கழக ஆய்வாளர்களுக்கும் எளிதில் பயன்கொள்ளத் தக்க வகையில் அமையும் என்பதில் மிகையில்லை.

## 2. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி உருவாக்கக் குழு

பாவாணர் 'ஒப்பியன் மொழிநூல்' முதல் தமிழிலக்கிய வரலாறு ஈறாக மொழியியல், இலக்கியம், இலக்கண வரலாறு, மக்கள் நாகரிகம் – பண்பாடு முதலிய பல்வேறு துறைகள் தழுவிய அரிய ஆராய்ச்சி நூல்கள் கட்டுரைகள் பலவற்றைத் தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதி வெளியிட்டிருப்பினும் அவர்தம் வாழ்நாட் பெரும்பணியாகவும் அரும்பணியாகவும் உருவாக்குவதற்குப் பெரிதும் விழைந்தது "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியே யாகும்" அவ்வாய்ப்பை அவர் பணியாற்றிய அண்ணாமலைப் பல்கலைக் கழகம் இழந்தது.

ஆயினும் அற்றைப் பேராயக் கட்சி அரசோ, வேறு கல்வி நிறுவனங்களோ, பொதுநல அமைப்புகளோ பெருஞ்செல்வர்களோ பாவாணரின் பெரும்பணிக்கு உதவ முன்வரவில்லை.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தைப் பற்றிக் கழக அரசு நடந்தபோது 1971 ஆம் ஆண்டு பேராசிரியர் தி.வை.சொக்கப்பனார் தலைமையில் பெருஞ்சித்திரனார், செந்தமிழ்க்கிழார், சின்னாண்டார், தமிழ்க்குடிமகன் ஆகிய ஐவர் குழு, தமிழகச் சட்டத் துறை அமைச்சராக இருந்த திரு. மாதவனைச் சந்தித்து, விளக்கமாக எடுத்துக் கூறி அதற்கு அரசு உதவி செய்ய வேண்டுமென்றது. அம் முயற்சியால் உடனடி வாய்ப்பு ஏதும் ஏற்படவில்லை.

"இக் காலக் கட்டத்தில் 'பாவலரேறு' பெருஞ்சித்திரனார் 'தென்மொழி' வாயிலாகத் திட்டம் ஒன்றை வகுத்தார். இத்திட்டம் 'வல்லான் வகுத்த வழி' என்றும், 'இறைவன் ஏற்பாடு' என்றுங் கூறி, 'தென்மொழித் திட்டச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி' என்று பெயர்சூட்டி அறிவித்துப் பாவாணர் பணிகளைத் தொடங்கினார். இத்திட்டத்தின் கீழ்க் கிடைத்த பணத்தைக் கொண்டு பாவாணர் அகரமுதலி உருவாக்கத்திற்குத் தேவையான நூல்களை வாங்கினார். இத்திட்டத்தை ஏற்று 200 பேர் உறுப்பினராகிப் பணமும் அனுப்பலாயினர். இத்திட்டம் பாவாணர் வாழ்வில் புத்துணர்வையும் நல்ல திருப்பு முனையையும் ஏற்படுத்தியது எனலாம். ஆயினும் இத்திட்டம் முழுமையாக நிறைவேறவில்லை. ஈராண்டிற்குப் பின் பலர் பணம் அனுப்புவதை நிறுத்திக் கொண்டனர். இறுதியில் முப்பதின்மர் மட்டுமே பணம் அனுப்பி வந்தனர். அவர்களும் தமிழக அரசு அகரமுதலித் திட்டத்தை உருவாக்க முற்பட்டவுடன் பணம் அனுப்புவதை நிறுத்திக் கொண்டனர்". இச்செய்தி "பாவாணர் நினைவலைகள்" நூலில் குறிப்பிடப்பட்டதாகும்.

மேலும் அதே நூலில் கீழ்வரும் செய்திகளும் இடம் பெற்றுள்ளன.

"இந்நிலையில் பாவாணர்பால் பேரன்பு பூண்டவரும் தமிழ்ப்புலமை மிக்கவரும் தமிழ்வளர்ச்சி, திருக்குறள் தொண்டுகளில் தலைநின்றவருமான தவத்திரு. குன்றக்குடி அடிகளார், பாவாணரின் தமிழ்ப்பெரும்பணிகளுக்கு அரசு தக்காங்கு உதவ வேண்டும் என விழைந்தார். தி.மு.கழக அரசால் சட்டமன்ற மேலவை உறுப்பினராக அமர்த்தப் பெற்றிருந்த

அடிகளார், வாய்ப்பு நேரும் போதெல்லாம் அன்றைய முதலமைச்சர் கலைஞரிடம் பாவாணரின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிப் பணியை அரசே ஏற்க வேண்டும் என்று கூறி வந்தார். மேலவை உறுப்பினராகையால் அங்கே பேசும்போதும் குறிப்பிட்டார். 02-12-1973 அன்று திருவாரூரில் திரு.வி.க. படிமை திறப்பு விழாவிற்கு இயற்றமிழ்ப் பயிற்றகச் சார்பாகப் புலவர் சரவணத் தமிழன் ஏற்பாடு செய்திருந்தார். தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமை தாங்கினார். பாவாணர் சிறப்புரையாற்றினார். அவ்விழாவில் அன்றைய முதலமைச்சர் கலைஞர் அருட்செல்வர் (கருணாநிதியார்) கலந்து கொண்டார். அவரிடம் பாவாணர் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியைப் பற்றி எடுத்துக் கூறப்பட்டது. பின்னர் முதலமைச்சர் உரையாற்றும் போது "இந்த அரசு 'தமிழாய்ந்த தமிழன்தான் தமிழ்நாட்டின் முதலமைச்சாய் வருதல் வேண்டும்' என்று பாவேந்தர் கூறியதற்கேற்ப அமைந்துள்ள அரசு. பாவாணர் அருந்தமிழ்ப் பணிக்கு உதவும்" என்று அறிவித்தார். இன்னோரன்ன முயற்சிகளால் பாவாணர் 08-05-1974 அன்று செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்கக இயக்குநராகப் பணியமர்த்தம் செய்யப்பட்டார்".

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் அமைப்பொழுங்கு :

| மடலம் | பகுதிகள் | மொத்தம் |
|---|---|---|
| 1 | அ<br>ஆ, இ, ஈ –<br>உ முதல் ஔ வரை | 3 |
| 2 | க<br>கா முதல் கூ வரை<br>கெ முதல் கௌ வரை | 3 |
| 3 | ச, சா<br>சி முதல் சூ வரை<br>செ முதல் சௌ வரை | 3 |
| 4 | த, தா<br>தி முதல் தூ வரை<br>தெ முதல் தௌ வரை | 3 |
| 5 | ந, நா<br>நி, நீ<br>நு முதல் நௌ வரை | 3 |
| 6 | ப, பா<br>பி முதல் பூ வரை<br>பெ முதல் பௌ வரை | 3 |
| 7 | ம, மா<br>மி முதல் மூ வரை<br>மெ முதல் மௌ வரை | 3 |
| 8 | ய, வ<br>வா, வி, வீ<br>வெ முதல் வௌ வரை | 3 |
| 9 | இணைப்பு மடலம் | 2 |
| 10 | அயற் சொல் மடலம் | 3 |
| 11 | தமிழ் அகரமுதலி வரலாறு | 1 |
| 12 | சொற்பிறப்பியல் நெறிமுறைகள் | 1 |

## 3. மொழி வளர்ச்சிக்குச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் பங்கு

போர் வீரனுக்குச் செவ்விய படைக்கலங்கள் வெற்றிக்குத் துணை புரிவது போல, பல்வேறு துறைகளில் அறிவை வளர்த்துக் கொள்ள விழையும் மொழியினர்க்கு, அம்மொழியில் அவ்வத்துறை தொடர்பான கலைச்சொற்கள் பெரிதும் துணை நிற்கும். தக்க சொல்வளம், தாய்மொழியில் கிட்டாதவிடத்து வேற்று மொழியையே தம் அறிவு வளர்ச்சிக்குத் துணை கொள்ள நேரும். தாய்மொழியின்பால் பற்றுக்குறைபடும். நல்ல அகரமுதலி மக்களைச் செவ்விய மொழிப்பாங்கு உடையவராக மாற்றும்.

தாய்மொழியே கல்வி வாயிலாக அமையும் நிலையில் தாய்மொழியின் வெற்றிக்கும் பற்றுக்கும் தாய்மொழியில் ஊற்றாய்ப் பெருகும் சொல்வளம் மிகவும் இன்றியமையாதது. அத்தகு சொல்வளக் களஞ்சியமாக அகரமுதலிகள் விளங்கும். மேலும் புதிய சொற்கள் வேண்டுமிடத்து வேரும் மூலமும் காட்டிப் பல்லாயிரம் புத்தம் புதிய படைப்புச் சொற்களை உருவாக்கச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி வழிகாட்டும். ஆதலால் மொழிவளர்ச்சிக்கு ஏனைய அகராதிகளை விடச் சொற்பிறப்பியல் அகரமுதலி ஆணிவேராக அமைகின்றது.

செருமானிய மொழிக்குக் கிரிம் என்பவர் சொற்பிறப்பியல் அகரமுதலி உருவாக்கித் தந்ததின் விளைவாகச் செருமானிய மொழியின் இலக்கிய வரலாறு எழுத அது மிகவும் பயன்பட்டதாகக் கூறுகின்றனர்.

சொற்பிறப்பியல் அகரமுதலி உருவாக்குவதன் வாயிலாக அம்மொழியின் சொற்பிறப்பியல் நெறியீடுகளை

அறியலாம். ஒரு மொழியின் முன்மை, தொன்மை, தாய்மை, தலைமை ஆகியவற்றை அறியலாம். 'எவ்வெம் மொழியிலிருந்து சொற்கள் எவ்வெம் மொழிக்குச் சென்றுள்ளன என்னும் உண்மை களையும், எக்காலகட்டத்தில் இம் மாறுதல்கள் தோன்றின, ஏன் தோன்றின என்னும் வரலாற்றுப் பின்னணிகளையும் அறியலாம். சோவியத்து நாட்டு வரலாற்றாசிரியர் கோந்தரதோவ்' என்பார் 'மொழியாய்வாளர்தான் வரலாற் றாசிரியர்க்கு நிறைந்த செய்திகளைச் சொல்ல முடியும்' என்கிறார்.

அகரமுதலியைச் சொல்லின் பொருளறிய மட்டும் பயன்படுத்துகிறோம். அச்சொல்லின் மூலமென்ன என்று அறிவது மொழியின் பயன்பாட்டு நிலையில் நோக்குவார்க்குத் தேவையற்றது எனச் சிலர் கூறலாம். சொல்லின் மூலமறிந்து பேசுவோர் பொருளாழத்துடன் பேசவும் எழுதவும் இயலும் என்பதை அவர் அறியாதவரே எனலாம்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி உலக மொழிகளில் வெளிவந்துள்ள ஏனைய அகரமுதலிகளிலும் வேறுபட்டது. இனச் சொல்லும் அடிப்படைச் சொல்லின் மொழி மூலமும் மட்டும் ஏனைய சொற்பிறப்பியல் அகரமுதலிகள் காட்டுகின்றன. ஆனால் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இனச்சொல், மூலச்சொல் காட்டுவதோடு அச்சொல்லின் வேர்மூலத்தையும் காலப்போக்கில் சொற்பிறப்பியல் நெறிமுறைகளுக் கிணங்கக் கொள்ளும் சொற்றிரிபுகளையும் காட்டும்.

ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் Glad, Glitter, Gleam என்னும் சொற்களுக்கு 'Gl' என்பது வேர்ச்சொல்லாகலாம் என உன்னிப்பாக உய்த்துணர்ந்தாலும் இலக்கண வகையில் அதைத் தனித்த வேராகக் காட்ட அம்மொழியில் சான்றில்லை. ஆதலால் அவர்கள் வேர் மூலம் காட்டத் தயங்குகிறார்கள். ஆனால் தமிழில் ஒளிர், ஒளி போன்ற வினைகளுக்கு 'ஒள்' என்னும் வேர் மூலம் காட்ட முடிகிறது. அதனால்தான் உலக மொழிகளுள் தமிழில் செவ்விய முழுமையான சொற்பிறப்பியல் அகரமுதலி வெளிவரத் தலைப்பட்டது. ஒரு நாட்டின் வரலாற்றைப் போல் சொல்லின் வரலாறும் மிகவும் இன்றியமையாத ஒன்றாகும்.

## 4. பாவாணர் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் தனித்தன்மைகள்

1. இந்நாள் வரை வெளிவந்துள்ள தமிழகரமுதலிகளிலெல்லாம் இல்லாத எல்லாச் சொற்களையும் இயன்றவரை எடுத்துக் காட்டிப் பொருள் கூறுதல்.

2. ஏனை அகரமுதலிகளிலுள்ள தவறான சொல் வடிவங்களைத் திருத்துதல்.

3. ஏனை அகரமுதலிகளில் உள்ள சொற்களுக்கு விடுபாடுள்ள பொருள்களையெல்லாம் இயன்றவரை எடுத்துக் கூறுதல்.

4. ஏனை அகரமுதலிகளில் உள்ள தவறான பொருள்களைத் திருத்துதல்.

5. எல்லாப் பொருள்களையும் ஏரண முறைப்படி (தருக்க முறைப்படி) வரிசைப் படுத்திக் கூறுதல்.

6. எல்லாச் சொற்களுக்கும் இயன்றவரை திரவிட ஆரிய இனச்சொற்களைக் காட்டுதல்.

7. எல்லாச் சொற்களுக்கும் இயன்றவரை வேருடன் கூடிய வரலாறு வரைதல்.

8. ஏனை அகரமுதலிகளில் குறிக்கப்பெற்றுள்ள தவறான மூலங்களைத் திருத்துதல்.

இவ்வெட்டுவகைத் தனித்தன்மையும் போற்றிக் கொள்ளப்பெறும் சொற்பிறப்பியல் அகரமுதலியால் பெறும் பயன் பெரிதாம்.

செந்தமிழ்ச் சொற்களுக்கு சொல்மூலம் மட்டுமின்றிச் சொல்மூலத்திற்கு மூலமான ஆணிவேர், பக்கவேர், சல்லிவேர் மூலங்களும் காணலாம். தமிழ்மொழியில் இருந்து உலக மொழிகளுக்குக் கிளைத்துச் சென்ற இன மொழி மூலங்களும் காணலாம். அவற்றுக்குச் சொற்பிறப்பியல் நெறியீடுகளை (Principles of Etymology) வகுத்துக்காட்டுதலை அறியலாம். சமஸ்கிருதம் உள்ளிட்ட இந்து ஐரோப்பிய மொழிகள், சீனம், சப்பானியம், மங்கோலியம் ஆப்பிரிக்கம் ஆத்திரேலியம் முதலிய மொழிகளின் அடிப்படைச் சொல் வளத்தில் 'தமிழ்ச் சொற்களின் வேர்' அமைந்துள்ளமையைத் தெரியலாம். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் நெறிமுறைகள் ஒரு தனி மடலமாகவே வருதலால் அந்நெறிமுறைகளைத் தெளியலாம். இந்திய

அகர முதலிகளுக்கு வழிகாட்டியாகவும் உலக மொழிகளின் தாய் தமிழ்மொழியே என்பதை அறிவியல் முறையில் நிறுவிக் காட்டுவதாகவும் இருத்தலால் மகிழலாம்.

## 5. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலியின் சிறப்பியல்புகள்

## (The Special Features of the Tamil Etymological Dictionary)

**1. அகரமுதலி வகை** செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி எல்லார்க்கும் பயன்படும் பொதுவகையான சொற்பொருளகரமுதலியும் (General Purpose Dictionary), ஆராய்ச்சியாளர்க்கே பயன்படும் சொற்பிறப்பியல் அகரமுதலியும் (Etymological Dictionary) இணைந்த பேரகரமுதலி (Comprehensive Dictionary) ஆகும்.

**2. அமைப்பு** செந்தமிழ்ச் சொல்வளத்தை அறிதற் பொருட்டும் தனித்தமிழாளர்க்குப் பயன்படும் பொருட்டும், தமிழ்ச் சொற்களும் அயற்சொற்களும் முதன்முறையாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் கூட்டுச் சொல்லின் நிலைச்சொல் தமிழாயின் தமிழ்ச்சொல் மடலங்களிலும் அயற்சொல்லாயின் அயற்சொல் மடலத்திலும் இடம்பெறும்.

அகத்தியம் என்பது போன்ற தமிழுக்கு இன்றியமையாத சொல்லாயின் தமிழ்ச் சொல் மடலத்திலேயே இடம்பெறும். இது விலக்கென அறிக என்பது பாவாணர் கூற்று.

### எழுத்துப் பெயர்ப்பு

தமிழொலியை யொட்டியே எழுத்துப் பெயர்ப்பு அமைந்துள்ளது.

எ-டு: சங்கு – šaṅgu, பாம்பு – Pāmbu

**3. சொல்** சொற்களெல்லாம் திருந்திய வடிவிலேயே காட்டப்பட்டுள்ளன.

எ-டு

| திருந்தா வடிவம் | திருந்திய வடிவம் |
|---|---|
| அரிவாள் மணைப்பூண்டு | – அரிவாள் முனைப் பூண்டு |
| சாயங்காலம் | – சாயுங்காலம் |
| மணத்தக்காளி | – மணித்தக்காளி |
| வெட்டரிவாள் | – வெட்டறுவாள் |

இதுவரை, பிற அகரமுதலிகளில் இடம்பெறாத பல உலக வழக்குச் சொற்கள் இதில் இடம் பெற்றுள்ளன.

எ-டு. அரணை (எகிர்), அரைத்தவளை, அறுவாள், ஒடியல், கவைமகன், காம்பு-தல், குடட்டி, சூவை, தக்கட்டி, நக்களி-த்தல், நரிகுளிப்பாட்டி, நனையாநரி, பொண்டான், மோள், வெங்கழி.

நா. கதிரைவேற் பிள்ளை அகரமுதலியிலுள்ள ஆகண கைக்கிளை (சாதாரண காந்தாரம்), ஆகண தாரம் (கைசிகி நிஷாதம்) என்னுந் சொற்கள் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகராதியில் இடம்பெறவில்லை.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் விடுபட்ட சொற்களெல்லாம் விடுபட்ட மடலத்தில் சேர்க்கப்பெறும்.

**4. பொருள்**

எத்துறையிலும் பிற்கால வினைகள் பேரறிஞரால் செய்யப்படின், முற்கால வினைகளினும் சிறந்தனவாகவே இருக்கும். இப்பொதுவியற்கைப்படி அகரமுதலிகளும் பிற்காலத்தன, முற்காலத்தனவற்றினும் பொருள்களை மிகுதியாகவும் சிறப்பாகவும் விளக்கிக் காட்டும். இதனால் முற்காலத்தனவற்றிற்கு ஓர் இழுக்குமில்லை.

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகராதி (Lexicon) அதற்கு முந்தைய சொற்களஞ்சியங்களினும் அகரமுதலிகளிலும் மிக விரிவானதென்று காட்டுதற்கு அதன் பதிப்பாசிரியர் தாரம், வரி என்னும் இரு சொற்பொருள்களை, திவாகரம், பிங்கலந்தை, சூடாமணி நிகண்டு, அகராதி நிகண்டு, உரிச்சொல் நிகண்டு, கயாதரம், பல்பொருட் சூடாமணி, பொதிகை நிகண்டு, அரும்பொருள் விளக்க நிகண்டு, நாமதீப நிகண்டு, வேதகிரியார் நிகண்டு, நாநார்த்த தீபிகை என்னும் சொற்களஞ்சியங்களினின்றும், அகராதி மோனைக் ககராதி யெதுகை, சதுரகராதி, பெபிரிசியசு அகராதி, இராட்டிலர் அகராதி, தமிழாங்கில அகராதி, வின்சிலோ அகராதி, ஓர் இலக்கியத் தமிழாங்கில அகராதி, தமிழ்ப் பையடக்க அகராதி, தரங்கம் பாடி அகராதி நா.கதிரைவேற்பிள்ளை அகராதி, சங்க அகராதி, இலக்கியச் சொல்லகராதி தமிழகராதி என்னும்

அகரமுதலிகளினின்றும் காலவரிசைப்படி எடுத்துக் காட்டியுள்ளார்.

சென்னைப் பல்கலைக் கழக அகராதியிலும் 'வரி' என்னும் சொல்லிற்குரிய பொருள்களுள் வளைவு, வளைகோடு, சுற்று என்பன விடப்பட்டுள்ளன.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியில் பொருள் பற்றியேற்பட்டுள்ள திருத்தங்கள் பின்வருமாறு பலவகைப்படும்.

க. முன்குறிக்கப்படாத பொருள்கள் குறிக்கப்படுதல்

எ–டு: சுவரொட்டி

1. எறிந்தாற் சுவரில் சில நொடி நேரம் ஒட்டிக் கொள்ளும் ஒருவகைப் புறா.
2. சுவரில் ஒட்டும் விளம்பரத் தாள். (Wall - Poster)

## 2. தவறான பொருள் திருத்தப்படுதல்

எ–டு.

| சொல் | தவற்றுப்பொருள் | திருத்தப்பொருள் |
|---|---|---|
| குறவை – | வரால் | – வரால் வடிவான சிறுமீன் |
| கேருதல்– | கோழி கத்துதல் | – கோழி முட்டையிடக் கத்துதல் |
| கசகரணம் போடுதல் | – யானை காதாட்டுதல் | – யானை மல்லாப் பாண்டியடித்தல் |
| அளைமறி பாப்பு | – பாட்டின் ஈற்றில் நின்ற சொல் இடையிலும் முதலிலும் சென்று பொருள் கொள்ளப்படும் முறை | – நாலாமடி முதலடியாகவும், மூன்றாமடி இரண்டாமடியாகவும், இரண்டாமடி மூன்றாமடியாகவும், முதலாமடி நாலாமடியாகவும் இங்ஙனம் பாட்டின் அடிகள் தலைகீழாக மாறிப் பொருள்படுதல் |

## 3. பொருள்களெல்லாம் இயற்கையொட்டிய ஏரண முறைப்படி குறிக்கப்படுதல்.

பள்ளி என்னும் சொல்லின் முதற்பொருள் 'படுக்கை', இறுதிப்பொருள் 'இடம்' தொல்காப்பியத்தில் பள்ளியென்னுஞ் சொல் இடப்பொருளில் ஆளப்பட்டுள்ளமையால் அதுவே முதற் பொருளென்று கொண்டனர் சென்னை யகராதி தொகுத்தோர். இது சொல்லாராய்ச்சி இன்மையால் நேர்ந்த விளைவு.

## 4. பொருள்களெல்லாம் தமிழ்ச் சொல்லாலேயே குறிக்கப்படுதல்

தமிழ்ச் சொல் வழக்கற்றதாயின், வழக்கிலுள்ள நேர் ஆங்கிலச் சொல் அடுத்துப் பிறைக்கோட்டுள் (bracket) குறிக்கப்பட்டிருக்கும்.

## 5. இனப்பொருட் பெயர்களும் வகைப்பொருட் பெயர்களும் ஒருங்கே குறிக்கப்படுதல்

எல்லாச் சொற்களும் முதலெழுத்தின் நெடுங்கணக்கு வரிசைப்படி அமைக்கப்பட்டிருப்பினும், பிறந்தையின் (genus) இனங்களும் (species), இனத்தின் வகைகளும் (varieties) இவை போன்ற பிற பொருட் பிரிவுகளும், கிளைகளும் வேறுபாடுகளும் பகுப்புகளும் அவ்வவற்றின் பொதுப்பொருள் அல்லது தலைமைப் பொருளின் கீழேயே ஒருங்கே ஏதேனும் ஒரு வரிசையாகக் குறிக்கப்பட்டுப் பொருள் கூறப்பட்டுள்ளன அல்லது விளக்கப்பட்டுள்ளன.

அவரை என்னும் சொல்லின் கீழ், ஆட்டுக் கொம்பவரை, ஆரால் மீனவரை, ஆனைக் காதவரை முதலிய வகைப் பெயர்களும்., கொத்தவரை, சுடலையவரை, தம்பட்டவரை முதலிய இனப்பெயர்களும் குறிக்கப்பட்டுள்ளன.

இவ்வமைப்பு, ஒரு பொருளின் வகைகளையெல்லாம் ஒருங்கே எளிதாய்க் கண்டு கொள்வதற்கு ஏற்றதாகும். அல்லாக்கால், ஒன்றன் வகைகளையெல்லாம் அறிதற்கு எல்லா மடலங்களையும் புரட்டவேண்டிருக்கும். இது எளிதில் ஆவதன்று.

இம்முறை ஏற்கெனவே வின்சுலோ தமிழ் – ஆங்கிலம் – தமிழ் அகரமுதலியில் கையாளப்பட்டது. ஆயினும் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகராதி அதைப் பின்பற்றவில்லை.

ஒரு பொருளின் வகைகளையெல்லாம் ஓரிடத்திற்குறித்துப் பொருள் கூறியிருப்பினும், அகரமுதலியின் பயன்பாட்டைப் பெருக்குதற்பொருட்டு, அவ்வகைகள் வண்ணமாலை வரிசைப்படி ஆங்காங்கே தனித்தனியாகவும் குறிக்கப்பட்டு அவற்றின் பொதுப் பொருட்கு மாட்டெறியப்பட்டுள்ளன.

எடுத்துக்காட்டாக 'அவரை' என்னும் உருப்படியில் அதன் வகைகளெல்லாம் ஒருங்கே கூறப்பெற்று, அவற்றுள் ஒன்றான ஆட்டுப் கொம்பவரை என்பது, வண்ணமாலை வரிசைப்படி அதற்குரிய இடத்திலும் குறிக்கப்பட்டு 'அவரை' பார்க்க என்று மாட்டெறியப் பட்டுள்ளமையையும் காண்க.

## 6. மூலம்

தென் சொல்லெல்லாம் தென்சொல்லென்றே இவ்வகர முதலியிற் காட்டப்படுகின்றன. வடசொல்லென்று மயங்கியவையெல்லாம் வேரும் விரிவும் வரலாறும் காட்டி விளக்கப்பட்டுள்ளன.

உலகில் முதன்முறையாக வரலாற்றடிப்படையிலும் மொழிநூலடிப்படையிலும் வெளிவரும் அகரமுதலி இதுவே. தமிழ் திரவிடத்திற்குத் தாயும் ஆரியத்திற்கு மூலமும் ஆதலால் இனச் சொற்கள் (cognates) திரவிட மொழிகளிலிருந்தும், ஆரிய மொழிகளிலிருந்தும் காட்டப்பட்டு வருகின்றன.

தென்சொல்லை வடசொல்லென்று காட்டுதற்கு கட்டப்பட்டுள்ள கட்டுக்கதைகளும் அறிவியல் முறையில் மறுக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக 'உருத்திராக்கம்' என்னும் சொல்லைக் காணலாம்.

தென்சொல் திரிந்து வடசொல்லாவதற்கும் அதன்பின் அதை வடசொல்லேயென்று வலித்தற்கும், அதை இயற்கைக்கு மாறாகப் பகுத்துப் பொருந்தப் பொய்த்தலாகவும் பொருந்தாப் பொய்த்தலாகவும், வேர்ப்பொருள் வேறுபடுத்திக் கூறுவதற்கும் ஐஞ்சொற்களை இங்குக் காணலாம்.

### 1. இடைகழி.

இடை + கழி = இடைகழி = வீட்டிடையிற் கழிந்து செல்லும் இடம்.
இடைகழி → இடேழி → இரேழி + ரேழி.
இடைகழி → டேகழி → தேகளி > வ. தேகலீ.

தேகலீதீபநியாயம் = இடைகழியில் வைத்த விளக்கு இருபுறமும் ஒளிவீசுவது போல, ஒரு பொருள் இடையில் நின்று ஈரிடத்தும் பயின்றுவரும் நெறி.

### 2. உவணம்

'உ' உயரத்தைக் குறிக்கும் சுட்டெழுத்து. உகப்பு (உயர்வு), உச்சி, உத்தரம், உம்பர் (மேல், மேலுலகம், தேவர்), உயர், ஊர்தல் (ஏறுதல்), உறி, உன்னு முதலிய சொற்களை நோக்குக.

உம் – உவ் → உவண் = மேலிடம். உவண் → உவனை = தேவருலகம். உவண் → உவணம் = உயர்ச்சி; உயரப் பறக்கும் பருந்து, கலுழன், கருடன், கழுகு. 'உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகுமா?' (கருடனாகுமா?) என்பது பழமொழி. உவணம் → உவணன் = கருடன் (திவா.).

உவணம் → சுவணம் = கருடன், கழுகு. உ → சு.
ஒ.நோ. உலவு → சுலவு, உருள் → சுருள், உழல் → சுழல்.
உதை → சுதை (உதைக்குங் கறவை)
சுவணம் > Skt. ஸு பர்ண.

வடசொல் வடிவிற்கு வடமொழியாளர் கூறும் பொருட் கரணியம் :– ஸு = நல்ல, அழகிய. பர்ண = இலைபோன்ற சிறகு. ஸுபர்ண = அழகிய சிறகுடைய பறவை, கருடன், கழுகு.

### 3. செவந்தி

செம் → செவ் + அந்தி → செவ்வந்தி = செவ்வான மாலை. அவ்வேளையில் மலரும் பூ செவ்வந்தி → செவந்தி.

க. சேவந்தி; தெ. சேமந்தி → சாமந்தி → ஜாமந்தி.
சேவந்தி > வ. ஸேவதீ.

### 4. பள்ளி

பள் → பள்ளம். பள் → பள்ளை = குள்ளம். பள்ளையன் = குள்ளன். பள்ளையாடு = குள்ளமான ஆட்டு வகை. பள்ளையம் = தட்டையான உண்கலம். பள் → பள்ளி = நிற்பதினும் இருப்பதினும் தாழ்மட்டமான படுக்கைநிலை, படுக்கை, படுக்கை விரிப்பு. படுக்கும் இடம், படுக்கும் அறை, படுக்கும் வீடு, வீடு, தெய்வ வீடாகிய கோயில், தெய்வத்தன்மையுள்ள துறவியர் மடம், பல வீடுகள் சேர்ந்த ஊர், கோயிலுள்ள ஊர், மடத்தில் அல்லது கோயிலில் நடைபெறும் கல்விச்சாலை.

க. பள்ளி > வ. பல்லீ = சிற்றூர், காடுவாழ் குலத்தார் குடியிருப்பு. குடிசை, வீடு.

வடமொழியில் இச்சொல்லிற்கு வேரில்லை. 'பல்லீ' என்பதில் 'பல்' என்னும் முன்னசையைப் பிரித்து 'செல்' < (to go) என்று பொருள் கூறுவர்.

### 5. வடவை

வடவலை = வடதிசை நெருப்பு.

ஒ.நோ. aurora borealis = northern light.

வடம் → வடந்தை = வடதிசையிலுள்ளது,

வடகாற்று, வடவனல், வடம் → வடவை = வடவனல்.

ஊழியிறுதியில் உலகையழிப்பது வடவைத் தீயென்று கருதினதினால், அதை 'உத்தர மடங்கல்' என்றனர் முன்னோர். உத்தரம் = வடக்கு. மடங்கல் = கூற்றுவன்.

வடவை என்பது வடமொழியில் வடவா என்று திரியும். அவ்வடிவுச் சொல்லிற்கு அம்மொழியிற் பெண்குதிரை என்பது பொருள். அதனால் அச்சொல்லிற்குப் பெண்குதிரை வடிவான தீயென்று பொருள் கூறி, அதை வடசொல்லாகக் காட்டுவர். தென்முக வடிவினின்று வேறுபடுத்தற்கு முகம், அக்கினி என்னும் சொற்களைச் சேர்த்து, வடவாமுக, வடவாமுகாக்கினி என்றும் வழங்கும். இனி வகரத்தைப் பகரமாக்கி, படபா (baḍaba), படபாமுக, படபாமுகாக்கினி என்றும் வழங்குவர்.

இத்தகைய மாற்றங்களும் ஏமாற்றங்களும் வெள்ளிடை மலைபோல் விளங்கினும், தமிழின் தொன்மை, முன்மை, தாய்மை தலைமைகளை அறியாமையால், மேலையரும் இன்றும் உண்மையறியாதவராய் உள்ளனர் என்பது அறிஞர் முடிபு.

## 6. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் அடிப்படைகள் (Sources of the Tamil Etymological Dictionary)

இதனை இருவகையாகப் பிரித்துக் கொள்ளலாம். அவை I சொல்லியல் II சொற்பிறப்பியல்.

### I. சொல்லியல்

1. அகராதிகள்.

இன்றுள்ள ஏறத்தாழ இருபது தமிழ் அகரமுதலிகளுள், இச்சொற்பிறப்பியல் பேரகர முதலிக்குப் பெரிதும் பயன்படுவது சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகராதியே (Lexicon). அது பல்வேறு வகையில் குறைபாடுள்ளதாயினும் மூவர் முதற் பதினைவர்வரை பல்வேறு தொகையினர் பல்வேறு காலப்பகுதிகளில் அமர்ந்து, இருவகை வழக்கினின்றும் இருபத்தாறாண்டாக இடைவிடாது தொகுத்த பல்லாயிரக்கணக்கான சொற்களும் அவற்றின் பெரும்பாற் பொருள்களும், அவற்றிற்குரிய மேற்கோள்களும் அம்மேற்கோள்களின் இடங்களும் ஏற்கெனவே குறிக்கப்பட்டிருப்பது, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலிக்குக் காலவகையிலும், உழைப்பு வகையிலும் மறக்கொணா மாபேருதியமாகும்.

அதற்கு அடுத்தபடியாகப் பயன்படுவது சாம்பசிவம் பிள்ளை தமிழ் – ஆங்கில அகரமுதலியாகும். மருத்துவத் துறையில் அது நல்கும் அறிவு மதிப்பிடுந்தரத்ததன்று. அடுத்தது மதுரைத் தமிழ்ச் சங்க அகரமுதலியாகும்.

2. புதிய ஆராய்ச்சிக் கட்டுரைகளும் நூல்களும்

இவை பல்துறைப்பட்டன. அவற்றுள் உரைவேந்தர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை எழுதிய 'சேரமன்னர் வரலாறு', பேரா.கோ.தங்கவேலனார் எழுதிய 'இந்திய – தமிழ்நில வரலாறுகள்', பேரா.ம.வி.இராசேந்திரனார் எழுதிய 'நம் நாட்டுப் பாம்புகள்', நுண்கலைச் செல்வர் அ.இராகவனார் எழுதிய 'கப்பற்கலை', 'நம்நாட்டு அணிகலன்கள்', தமிழறிஞர் மு.அருணாசலனார் எழுதிய 9 முதல் 16 ஆம் நூற்றாண்டு வரையுள்ள 'தமிழிலக்கிய வரலாறுகள்', திரு.பி.எல்.சாமி எழுதிய 'சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்', 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்', 'சங்க இலக்கியத்தில் பறவையின விளக்கம்', சங்க இலக்கியத்தில் மணிகள், ஆடையணிகலன்கள், 'சிற்பக் கலைமணி வை.கணபதிக் கம்மியர் (ஸ்தபதி) எழுதிய சிற்பச் செந்நூல் என்பன சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன.

3. உலக வடிவச் சொற்கள்

### ii - சொற்பிறப்பியல்

1. மொழிநூல் : கால்டுவெலார், 'திரவிட மொழிகளின் ஒப்பியல் இலக்கணம்' (ஆங்கிலம்)

2. திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலி : பரோ, எமனோவர் (Burrow and Emenean) தொகுத்த திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலி (ஆங்கிலம்)

ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலிகள்

Chamber's Etymological Dictionary of the English Language.

Skeat's Etymological Dictionary of the English Language.

Klain's Comprehensive Etymological Dictionary of the English Language, weekley's Etymologi-

cal Dictionary modern language, The oxford Dictionary of English Etymology ஆகியவை.

குறிப்பு : யாழ்ப்பாண ஞானப்பிரகாச அடிகளின் சொற்பிறப்பு ஒப்பியல் தமிழ் – அகராதி முதன்மடலத்தில் ஒரு சில பகுதிகளோடு நின்று விட்டமையாலும் அதிற் கையாளப்பட்ட நெறிமுறைகள் பெரிதும் வேறுபட்டுள்ளமையாலும் அது 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி'க்குப் பயன்படவில்லை.

ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலிகள் அயன்மொழிக்குரியனவாயினும் அதிற் கையாளப்பட்டுள்ள நெறிமுறைகள் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலிக்குப் பெரிதும் உதவின. இங்ஙனமே, யோசேப்பு ஆங்கசு (Joseph Angus) எழுதிய Hand book of the English Tongue, ரிச்சர்டு மாரிசு (Richard morris) எழுதிய Historical outlines of English Accidance' முதலிய ஆங்கில இலக்கண நூல்களும் ஓரளவு பயன்பட்டன. பரோ எமனோவர் சொற்பிறப்பியல் அகரமுதலியும் (1961) திரவிட மொழிகள் பற்றியதேனும், 4572 சொற்களே கொண்டுள்ளமையாலும், வேருந் திரிவும் காட்டாது, பெரும்பாலும் ஒப்பியல் அகரமுதலியாகவே (Comparative Dictionary) இருப்பதனாலும், பல சொற்கட்கு இனச்சொல் (cognates) காட்டற்கன்றி வேறெதற்கும் பயன்படவில்லை.

ஒருசில கூட்டுச் சொற்களைத் தவறாகவும் அவ்வகரமுதலி பிரித்துள்ளது.

எ.டு. தகப்பன் = தகு + அப்பன்.

தம் + அப்பன் – தமப்பன் → தகப்பன் என்பதே உண்மையான வரலாறு.

வரலாற்றிற் கெட்டாத தொல் பழங்காலத்துத் தோன்றிய உலக முதன்மொழியாகிய குமரிநிலத் தமிழின் சொற்பிறப்பியலை, உழைப்பொடும் பொறுமையொடும் தறுகண்மையொடும் மெய்யறிவாவொடும் கூடி நீண்டு ஆழ்ந்து நுணுகிய ஆராய்ச்சியாலன்றிப் பெருந்தமிழ்ப் புலவரும் அறியவொண்ணா நிலையில், வரலாறு அறியாது சமற்கிருத அடிப்படையில் தமிழாய்ந்த மேலையரிடம் எதிர்பார்ப்பது இயற்கைக்கு முற்றிலும் மாறானதே. ஆதலால் பரோ எமனோவர் அகரமுதலிக் குறைபாட்டினால் அவர்க்கு எள்ளளவும் இழுக்கின்று.

### பிற கருவிநூல்கள்

1. குண்டர்ட்டு மலையாள – ஆங்கில அகரமுதலி. (A malayalam and English Dictionary by It. Gudeet)

2. மலையாளப் பழஞ்சொல் (2000)

3. கிற்றல். கன்னட – ஆங்கில அகரமுதலி (kittel's Kannada - English Dictionary (in 4 volumes) - Revised and enlarged edition.

4. A Telugu verbal bases by Bhadriraju Krishnamurthy.

5. A sanskrit English Dictionary by M. Monier Williams.

6. Grierson's Linguistic survey of India.

வரலாறு : I. P.T. சீனிவாச ஐயங்கார்.

1. Stone age in India.
2. History of the Tamils.

II. V.R. இராமச்சந்திர தீட்சிதர்

1. Origin and spread of the Tamils
2. Pre - Historic South India.

## 7. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் அடிப்படைக் கொள்கைகள்

## (The Fundamental principles governing the Tamil Etymological Dictionary)

### I தமிழ் தென்னாட்டுப் பழங்குடிமொழி

பண்டையிலக்கியத்திற் சொல்லப்பட்டுள்ள காலவேறுபாடுகளும், நில வேறுபாடுகளும், விளைபொருள் வகைகளும் தொழிற் பாகுபாடும் தென்னாட்டிற்குரியனவா யிருப்பதும், தமிழ் தென்மொழியென்று பெயர் பெற்றிருப்பதும் இதற்குச் சான்றாம்.

### II தமிழ் குமரிநாட்டு மொழி

'பஃறுளி யாற்றுடன் பன்மலை அக்கத்துக்
குமரிக்கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி'

என்னுஞ் சிலப்பதிகார அடிகள் (11 : 19 – 27) இதற்குச் சான்றாம்.

## III தமிழ் திரவிடத் தாய்மொழி

திரவிடச் சொற்கள் எல்லாம் தமிழ்ச் சொற்களின் திரிபாயிருப்பதே இதற்குப் போதிய சான்றாம்.

## IV தமிழ் ஆரியத்திற்கு முந்தைய மொழி

"Does there not seem to be reason for regarding the Dravidian family of languages, not only as a link of connection between the Indo - European and Scythian groups, but - in some particulars, especially in relation to the pronouns - as the best surviving representative of a period in the history of human speech older than the Indo - European stage, older than the Scythian and older than the separation of the one from the other.[1]"

"Nevertheless, I regard the comparison of words, when carefully and cautiously conducted, as an important help to the determination of lingual affinities; and it will be found I think, that the following vocabularies bear independent testimony, in their own degree, to the same result at which we arrived by grammatical comparison - viz., that the Dravidian idioms exhibit traces of an ancient, deep - seated connection with Pre - Sanskrit, - the assumed archaic mother - tongue of the Indo - European family :[2]"

## V தமிழ் ஆரியத்திற்கு மூலமொழி

"I need not call attention to the beautiful and philosophical regularity of this quadruple set of remote, proximate and intermediate demonstratives and interrogatives. In no other language or family of languages in the world shall we find its equal or even its second. In addition to which, the circumstance that the demonstrative vowels are not only used in these languages with an invariable and exact discrinination of meaning which is not found in the Indo - European tongues (with the solitary and partial exception of the New Persian), but are also associated with a corresponding interrogative vowel of which the Indo - Europian tonges are totally ignorant, tends to confirm the supposition which I have already expressed. that the Dravidian family has retained some Pre-Sanskrit elements of immense antiquity; and in particular, that its demonstratives, instead of being borrowed from Sanskrit, represent those old Japhetic bases from which the demonstratives of Sanskrit itself, as well as of various other members of the Indo - European family, were derived [1]"

" I subjoin here a few illustrations of what I mean by primitive underived Indo - Europeanisms discoverable in the Dravidian languages.

1. The use of *n*, as in Greek, to prevent *hiatus*.

2. The existance of gender in the pronouns of the third person and in verbs, and in particular the existance of a neuter gender.

3. The use of *d* or *t* as the sign of the neuter singular of demonstrative pronouns or pronouns of the third person.

4. The existence of a neuter plural, as in Latin, in short *a*.

5 The formation of the remote demonstrative from a base in *a*, the approximate from the base in *i*.

6. The formation of most preterites, as in Persian, by the addition of *d*.

7. The formation of some preterites, by the reduplication of a portion of the root.

8 The formation of a considerable number of verbal nouns by lengthening the vowel of the verbal root.[2]"

## VI தமிழ் சொல்வளம் மிக்க தற்சார்பு மொழி

"The orientalists who supposed the Dravidian languages to be derived from Sanskrit were not aware of the existence of uncultivated languages of the Dravidian family, in which Sanskrit words are not at all or but very rarely, employed; and they were also not aware that some of the Dravidian languages which make use of Sanskrit derivatives, are able to dispense with those derivatives altogether, such derivatives being considered rather as luxuries or articles of finery than as necessaries. It is true it would now be difficult for Telugu to dispense with its Sanskrit: more so for Canarese; and most of all for Malayalam:- those languages having borrowed from Sanskrit so largely and being of all habituated to look up to it for help, that it would be scarely possible for them now to assert their independence Tamil, however, the most highly cultivated *ab intra* of all Dravidian idioms, can dispense with its Sanskrit altogether, if need be, and not only stand alone, but flourish without its aid.[1]"

"Another evidence consists in the extraordinary copiousness of the Tamil vocabulary and the number and variety of the grammatical forms of Shen-Tamil. The Shen-Tamil grammar is a crowded museum of obsolete forms, cast-off inflexions and curious anomalies........... Nothing strikes a tamil scholar more, on examining the dictionaries of the other Dravidian dialects, than the paucity of their lists of synonyms in

comparison with those of Tamil. The Tamil vocabulary contains not only those words which may be regarded as appropriate to the language, in as much as they are used by Tamil alone, but also those whch may be considered as the property of Telugu, Canarese, etc. Thus, the word used for 'house' in ordinary Tamil is *viḍu*; but the vocabulary contains also and occassionally uses, the word appropriate to Telugu, il (Tel. illu), and the distinctive Canarese word, manai (Can. mane); besides another synonym, *kuḍi*, which it has in common with Sanskrit and the whole of the Finnish languages.[2]"

## VII தமிழ் உலக முதன்மொழி

"It is a different question whether some of the Dravidian forms and roots may not have formed a portion of the linguistic inheritance, which appears to have descended to the earliest Dravidians from the fathers of the human race.[3]"

பி.தி. (P.T) சீநிவாசையங்கார் எழுதிய 'Stone Age in India' என்னும் நூலும், வி.ஆர். (V.R.) இராமச்சந்திர தீட்சிதர் எழுதிய 'Origin and Spread of the Tamils', 'Pre-Historic South India' என்னும் நூல்களும், தமிழ் உலக முதன்மொழி என்பதற்குச் சான்று பகரும்

தமிழின் ஒலிச்சின்மையெளிமையும் இயற்கையான சொல்லமைதி சொற்றொடரமைதிகளும், அதன் உலக முதன்மைக்குப் போதிய சான்றாம்.

## VIII தமிழ் வேர்ப்பொருள் காட்டும் மொழி

சமற்கிருதத்தைப் போல் தமிழில் இடுகுறிச்சொல் என்பதில்லை. திரவிடமொழிச் சொற்கட்கெல்லாம் தமிழ்த் துணைகொண்டே வேர்காணல் இயலும்.

"எல்லாச் சொல்லும் பொருள்குறித்தனவே"
(தொல்.சொல். பெய. 1)

"மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா"
(தொல். சொல். உரி. 96)

"பொருட்குத் திரிபிலை யுணர்த்த வல்லின்"
(தொல். சொல். உரி. 94)

"பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்தம் மரபிற் சென்றுநிலை மருங்கின்
எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்"
(தொல். சொல். உரி. 1)

## IX தமிழ் உயர்தனிச் செம்மொழி

தமிழ் வரலாற்றிற்கெட்டாத தொன்மையில் தோன்றிய உலக முதன்மொழியாயினும், கொடுமையையும் கொச்சையையும் நீக்கி, நெடுகலுஞ் செம்மையை உயிர்நாடியாகப் போற்றி வந்ததினாலேயே, இயற்கையாகவும் செயற்கையாகவும் நேர்ந்த எத்தனையோ பெருங்கேடுகட்கெல்லாந் தப்பி "என்றுமுள தென்றமிழ்" என்று கம்பர் பாடியவண்ணம் இன்றுவரை முந்துநிலை தாங்கி வந்திருக்கின்றது. இதனாலேயே அதன் சொற்கட்கெல்லாம் இன்றும் வேர்காண இயல்கின்றது.

"செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்"

என்று தொல்காப்பியச் சிறப்புப் பாயிரமுங் கூறுதல் காண்க.

ஆயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட ஆங்கிலம், இன்று ஆங்கிலர்க்கும் விளங்குவதில்லை. ஈராயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்"

என்னுங் குறளும், ஈறாயிரத்தறுநூறு ஆண்டுகட்கு முற்பட்ட

"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே"

என்னும் தொல்காப்பிய நூற்பாவும், இன்றும் கல்லாருட்பட எல்லார்க்கும் பொருள் விளங்க நிற்கின்றன.

தமிழ் வாழவேண்டுமெனில், இந் நிலைமையே இனியும் தொடர்தல் வேண்டும்.

தமிழியல்பை யுணராத சில போலித் தமிழ்ப் புலவர், ஆராய்ச்சியின் பெயரால், கழிபொருள் போன்ற இழிவழக்கையும் தொகுத்து நூலாக்கிக் காலத்தை வீணாகக் கழிப்பர்.

"வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி யவர்கட் டாகலான"

என்று தொல்காப்பியம் (மர. 93) கூறுவதை நோக்குதல் வேண்டும்.

## X தமிழ் தூய மரபுமொழி

செம்மை போன்றே தூய்மையும் தமிழின் இன்றியமையாப் பண்பாம்.

"எப்பொருள் எச்சொலின் எவ்வா றுயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே"
(நன். 388)

சிலர்,

"குரங்கின் ஏற்றினைக் கடுவன் என்றலும்
மரம்பயில் கூகையைக் கோட்டான் என்றலும்
செவ்வாய்க் கிள்ளையைத் தத்தை யென்றலும்
வெவ்வாய் வெருகினைப் பூசை யென்றலும்
குதிரையுள் ஆணினைச் சேவல் என்றலும்
இருள்நிறப் பன்றியை ஏனம் என்றலும்
எருமையுள் ஆணினைக் கண்டி யென்றலும்
முடிய வந்த அவ்வழக் குண்மையின்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே"

என்னும் தொல்காப்பிய மரபியல் (69) நூற்பாவைப் பிறழவுணர்ந்து,

"பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே"
(நன். 462)

என்று எல்லா அயற்சொற்களையும் அமைப்பர். கடுவன், கோட்டான், தத்தை, பூசை, சேவல், ஏனம், கண்டி என்னும் எழு சொல்லுந் தூய தென்சொல் என்பதை அவர் அறிந்திலர்.

தமிழில் ஏதேனும் ஒரு பொருள்பற்றி ஒரு புதுச்சொல் தோன்றின், அது தமிழ் மரபிற்கு ஒத்ததாகவே இருத்தல் வேண்டும்.

"மரபுநிலை திரியின் பிறிதுபிறி தாகும்"
(தொல். சொல். மர. 92)

"நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்
இருதிணை ஐம்பால் இயல்நெறி வழாஅமைத்
திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும்"
(தொல். சொல். மர. 90)

## XI தமிழ் ஒப்புயர்வில்லாத் தனிமொழி

உலக முதன்மை, செம்மை, தூய்மை, தாய்மை, பகுத்தறி வடிப்படையிற் பொருள்களைப் பகுத்து மெய்ப்பொருளியல்பில் இலக்கணக் குறியீடுகள் கொண்டமை, செய்யுள் வடிவில் இலக்கியம் அமைந்தமை, பொருளிலக்கண முடைமை, இசை நாடகத்தொடு சேர்ந்து மும்மைப்பட்டமை, உலகில் தலைசிறந்த இன்னிசைக் கருவிகளைத் தோற்றி, நளிகடல் செல்லும் நாவாய் புனைந்து நானிலஞ் சுற்றி வடவை கண்டு, எழுகோட் பெயரால் எழுநாட்கிழமை வகுத்து ஏனைநாடெல்லாம் வழங்க வைத்து, முக்கரணமுங் கடந்த முதல்வனைக் கடவுள் என்னும் பெயராற் குறித்து, நாகரிகத்தினும் பண்பாட்டைச் சிறப்பாகப் போற்றி, அறம் பொருள்இன்பம் வீடென்னும் நாற்பொருட் பேற்றை வாழ்க்கைக் குறிக்கோளாக்கிய மக்கள் மொழியாயிருத்தல் முதலிய சிறப்புகளால், தமிழை ஈடிணையில்லாத் தனிமொழியெனல் உண்மை நவிற்சியே யன்றி உயர்வுநவிற்சியன்று. தமிழ் என்னும் பெயரும் அதன் தனிச்சிறப்புப் பற்றியதே. தமி = தனி, 'ழ்' ஈறு.

"ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும் – ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்"

என்னும் பழம்பாட்டையுங் காண்க.

## 8. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தில் பணியாற்றியோரும் பணியாற்றுவோரும்

8-5-1974 ல் மொழிஞாயிறு ஞா.தேவநேயப் பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்டு அமைக்கப்பட்ட இவ்வியக்ககத்தில் அவர் காலத்திலிருந்து இன்றுவரை பணியாற்றிய, பணியாற்றிக் கொண்டிருக்கின்ற பணியாளர்களின் விளத்தம் இங்கே அகரமுதலி வரலாற்றின் ஒரு பகுதியாகத் தரப்படுகின்றது.

பாவாணர் பணியமர்த்தத்தின் பின், அலுவலகப் படியெடுப்பாளராகத் திரு து.மூர்த்தியும், அலுவலக உதவியாளராகத் திரு. ஆர். சண்முகமும், தமிழ்ச் சுருக்கெழுத்துத் தட்டச்சராக செல்வி ஆர்.விசயலட்சுமியும், உதவியாளராக திரு நா.வெள்ளைச்சாமியும் 1974 ஆம் ஆண்டிலேயே அமர்த்தம் பெற்றனர்.

**1975 இல்** சேலம் கல்லூரியில் உதவிப் பேராசிரியராக இருந்த திரு. இரா. மதிவாணன் அவர்கள் 'செந்தமிழ்ச் செல்வி'யில் பாவாணர் விடுத்த

